# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## ஆறாம் மடலம் -பாகம் 2-

## பி – பூ

## Vol. VI-Part -II


முனைவர் பு.ஏ.இராமையா, இ.ஆ.ப.

அரசு செயலாளர்,

தமிழ் வளர்ச்சி – பண்பாடு மற்றும் அறநிலையத் துறை

மற்றும்

இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட

இயக்கக வெளியீடு

2005

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## ஆறாம் மடலம் - இரண்டாம் பாகம்

## பி - பூ

## Vol. VI- Part - II


முனைவர் பு.ஏ.இராமையா, இ.ஆ.ப.

அரசு செயலாளர்,

தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத் துறை

மற்றும்

இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட
இயக்கக வெளியீடு

2005

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக வெளியீடு – 17

முதற் பதிப்பு : 2005

A Comprehensive Etymological Dictionary of the Tamil Language, Vol. VI, Part - II



விலை : உருபா 400/–

குறியீட்டெண் : Colon No. P.J1-J, 314"K.M4

வெளியிட்டோர் : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை – 600 040.

அச்சீடு : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை 600 113.

நூல் கிடைக்குமிடம் : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை – 600 040.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை – 600 113.

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி
## A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE
### VOL. VI- PART II

ஆறாம் மடலம் - இரண்டாம் பாகம்

(பி - பூ)


பதிப்புக் குழு

முனைவர் பு.ஏ.இராமையா, இ.ஆ.ப.

*அரசு செயலாளர், தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும்*

*அறநிலையத் துறை*

மற்றும்

இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

*செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்*

கூர்ந்தாய்வாளர்

புலவர் இறைக்குருவனார்

தொகுப்பாளர்கள்

திரு.முத்து.பிச்சை

முனைவர் மு.கண்ணன்

முனைவர் பா.வெற்றிச்செல்வன்

முனைவர் ச.செந்திலாண்டவன்

முனைவர் இரா.கு.ஆல்துரை (பகுதிப் பொறுப்பாளர்)

திரு.கா.இளமுருகு

திரு.ச.கி.கணேசன் (ஓவியர்)

*செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்*

# ஜெ ஜெயலலிதா

முதலமைச்சர்

தலைமைச் செயலகம்
சென்னை–600 009.

நாள் 26.12.2005

## அணிந்துரை

'வானம் அளந்தது அனைத்தும் அளந்திடும் வண்மொழி தமிழ்!' அந்த வண்டமிழ், 'ஏழ்கடல் வைப்பினும் தன்மணம் வீசி இசை கொண்டு வாழ' ஏற்ற பணிகளை ஆற்றி வருகிறது எனது அரசு.

தமிழ்நாடு அரசு, தமிழ் நாடும் அரசாக விளங்குகின்றது. இந்திய அரசின் ஆட்சி மொழியாகத் தமிழை ஆக்கவும், இணையற்ற தமிழ் மறையாம் திருக்குறளை இந்தியாவின் தேசிய இலக்கியமாக ஆக்கவும், ஒல்லும் வகையான் ஓயாது முயன்று வருகிறது தமிழ்நாடு அரசு. 'முன்னைப் பழமைக்கும் முன்னைப் பழமையதாய் விளங்கும் நம் தமிழ், பின்னைப் புதுமைக்கும் போர்த்தும் அப்பெற்றியதாய்' விளங்க வேண்டும் என்ற விழைவோடு, முத்தமிழோடு நான்காம் தமிழாக அறிவியல் தமிழை அறிமுகப்படுத்தி, அதனை மழலையர் வகுப்பு முதல் பன்னிரண்டாம் வகுப்பு வரை, மாணவ மாணவியர் கற்க ஏற்பாடு செய்தேன்.

உயர்தனிச் செம்மொழியாம் தமிழின் வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதுடன் நில்லாது, தமிழ் வளர்த்த சான்றோர்கள் நினைவைப் போற்றும் வகையில் விழாக்கள் எடுத்தும், நினைவிடங்கள் அமைத்தும், அவர்தம் நூல்களைப் பொது உடைமையாக்கியும் சிறப்பித்து வருகிறது எனது அரசு. அந்த வகையிலே, மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரின் நூற்றாண்டு பிறந்த நாள் விழாவைக் கொண்டாடி மகிழ்ந்ததுடன், அவரது நினைவை என்றென்றும் போற்றிப் பாராட்டிடும் வகையில் மதுரை மாநகரில் மணி மண்டபம் உருவாக்கிடவும் முனைந்துள்ளது.

தமிழ் மொழியின் தனிப் பெரும் வளர்ச்சி குறித்த கவிஞர்களின் கனவுகள் நனவாக்கப்பட வேண்டும் என்பது என் விருப்பம்

"வெளியுலகில், சிந்தனையில் புதிது புதிதாக
விளைந்துள்ள எவற்றினுக்கும் பெயர்களெலாம் கண்டு
தெளி உறுத்தும் படங்களோடு சுவடியெலாம் செய்து
செந்தமிழைச் செழுந்தமிழாய்ச் செய்வதுவும் வேண்டும்"

என்ற பாவேந்தர் பாரதிதாசன் அவர்களின் கனவு மெய்ப்படும் விதத்தில், தமிழ் மொழியின் சொல் வளத்தைப் பெருக்க 'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி' (A Comprehensive Etymological Dictionary of Tamil Language) நூல்களை உருவாக்கும் திட்டம் தோற்றுவிக்கப்பட்டது.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டத்தின் சார்பாக கடந்த 2002–ஆம் ஆண்டு வரை ஆறு பகுதிகள் மட்டுமே வெளியிடப்பட்டிருந்தன. 2002–2003–ஆம் ஆண்டில், சட்டமன்றப் பேரவையில், எஞ்சிய 25 பகுதிகள் நான்காண்டுகளில் தொகுத்து முடிக்கப் பெறும் என்ற அரசின் அறிவிப்பினைத் தொடர்ந்து, தொய்வுற்றிருந்த அகரமுதலித் திட்டத்திற்குப் புத்துயிர் ஊட்டி, போதுமான நிதியுதவியும் வழங்கி, பணிகள் முடுக்கிவிடப்பட்டதன் விளைவாய், ஆண்டுக்கு ஆறு பகுதிகள் என்ற முறையில், முதற்கட்டமாகத் தொகுத்து அச்சிட்டு முடிக்கப்பட்ட 'ச' மற்றும் 'த' வரிசைச் சொற்களின் 6 பகுதிகள் அண்மையில் 9.8.2005 அன்று என்னால் வெளியிடப்பெற்றன. அதனைத் தொடர்ந்து இரண்டாவது கட்டமாக 'ந' மற்றும் 'ப' வரிசை சொற்களில், 6 பகுதிகள் தொகுத்து முடிக்கப்பட்டு அச்சிடப்பட்டு அவை தற்போது வெளியிடப்படுவதை அறிந்து பெரு மகிழ்வு அடைகிறேன்.

'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலிப்' பணி சீரிய பணி. அந்தச் சீரிய பணியில் ஈடுபட்டு செந்தமிழைச் செழுந்தமிழாய் ஆக்கிவரும் அனைவருக்கும் என்னுடைய வாழ்த்துகள்.

தமிழ் வாழ்க ! தமிழ்ப் பணி வளர்க !

ஜெ ஜெயலலிதா
தமிழக முதலமைச்சர்



மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர்
டாக்டர் செல்வி ஜெ ஜெயலலிதா

# தமிழ்நாடு அரசு

சி.வி.சண்முகம்
கல்வி மற்றும் வணிகவரித் துறை அமைச்சர்

தலைமைச் செயலகம்
சென்னை – 600 009.

## அணிந்துரை

"தமிழுண்டு தமிழ் மக்களுண்டு – இன்பத்
தமிழுக்கு நாளும் செய்வோம் நல்ல தொண்டு"
– (பாவேந்தர்)

மிகப் பழங் காலந்தொட்டு மொழி பற்றிய ஆய்வு இருந்து வந்துள்ளது என்பதற்குச் சான்றுகள் உள்ளன என்பர் மொழியாராய்ச்சியாளர்கள். தொல்காப்பியம் போன்ற இலக்கண நூல்கள் பண்டைக் காலத்தில் கொண்டிருந்த மொழி பற்றிய தெளிவான அறிவினைத் தெற்றெனத் தெரிவிப்பனவாக இருப்பதைக் காணலாம். மொழியானது மாறும் தன்மை கொண்டது; பழமையான மொழிக் கூறுகளில் சில அழிவதும் புதியதாக சில தோன்றுவதும் மொழி வழக்கில் இயல்பு என்பர் அறிஞர் பெருமக்கள்.

தமிழ் மொழியைப் பொறுத்தவரை, இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலான இடைவெளியில் சிற்சில மாற்றங்கள் ஏற்பட்டுள்ளதை மறுக்கவியலாது. பழைய சொற்கள் சில வழக்கொழிந்துள்ளன. புதிய சொற்கள் பல உருவாகியுள்ளன. புதிய கண்டுபிடிப்புகளையும், புதுப்புனைவுகளையும் வெளிப்படுத்த புதுச் சொற்கள் தேவை. இது மொழி வளர்ச்சிக்கு உறுதுணையாய் அமையும் என்பதில் ஐயமில்லை.

ஞாலத் தொன்மொழிகளுள் தாய்மையும், தலைமையும், தகைமையும் கொண்டது நம் தமிழ்மொழியாகும். தமிழின் தூய்மையையும், மாண்பையும், தனித்தியங்கும் ஆற்றலையும், இயற்கைச் சிறப்பையும் இனிமையையும், எளிமையையும் விரிவாக எடுத்துக்காட்டி நிலைநாட்டிய பெருமை 'மொழிஞாயிறு' தேவநேயப் பாவாணர் அவர்களுக்கு உண்டு. சொற்களை அகழ்வாய்வு செய்வதன்வழி மொழிக்கு அகழ்வாய்வு என்ற துறையைத் தமிழுக்கு அறிமுகப்படுத்திய பெருமை அவரைச் சாரும்.

அத்தகைய மாபெரும் அறிஞர் காட்டியுள்ள நெறிமுறைகளை அடியொற்றி செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி பகுதிகள் வெளிவந்த வண்ணம் உள்ளன. அண்மையில் 'ச'கரம் மற்றும் 'த'கரம் வரிசையில் 6 பகுதிகள் மாண்புமிகு முதலமைச்சர் அம்மா அவர்களின்

திருக்கரங்களினால் வெளியிடப்பெற்றுள்ளன. அதனைத் தொடர்ந்து தற்போது 'ந'கரம் மற்றும் 'ப'கரம் வரிசையில் 6 பகுதிகள் வெளியிடப் பெறுகின்றன என்பதையறிந்து மகிழ்கிறேன். இந்த சீரியத் திட்டத்திற்கு அனைத்து வகையிலும் பேராக்கமும், பேராதரவும் நல்கி வரும் நம் தமிழக முதலமைச்சர் மாண்புமிகு புரட்சித் தலைவி 'அம்மா' அவர்களுக்கு மனமார்ந்த நன்றியினை முதற்கண் தெரிவித்துக் கொள்கிறேன். இந்தியாவிலேயே, ஏன் ஆசியக் கண்டத்திலேயே தலைசிறந்து விளங்கும், தன்னிகரில்லாத் தங்கத் தலைவி மாண்புமிகு முதலமைச்சர் அம்மா அவர்களின் ஆட்சிக் காலம் பொற்காலம் என்று மேனாட்டரும் புகழ்பாடுகின்றனர். சோதனைகளை முறியடித்து, சாதனைக்கு மேல் சாதனைப் படைத்து, வெற்றிக் கொடி நாட்டி வரும் மாண்புமிகு முதலமைச்சர் 'அம்மா' அவர்களின் சாதனைகள் நீண்டு தொடரும் என்பதில் அணுவளவும் ஐயமில்லை.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி வெளியீடுகள் வருவதில் அரும்பங்காற்றிய செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டத்தின் பொறுப்பு இயக்குநராகப் பதவி வகிக்கும் தமிழ் வளர்ச்சிப் பண்பாடு மற்றும் அறநிலையத் துறை அரசு செயலாளர் முனைவர் பு.ஏ.இராமையா, இ.ஆ.ப., அவர்களுக்கும், நூல்களை உருவாக்குவதற்கு அயராதுழைத்த அகரமுதலித் திட்ட இயக்ககப் பணியாளர்களுக்கும் என் மனமுவந்த பாராட்டுக்கள்.

சி.வி.சண்முகம் 8.11.13

சி.வி.சண்முகம்

சென்னை.

*முனைவர் பு.ஏ.இராமையா, இ.ஆ.ப.,*
அரசு செயலாளர், தமிழ் வளர்ச்சி–பண்பாடு (ம)
அறநிலையத் துறை மற்றும்
இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகரமுதலித் திட்ட இயக்ககம்.

# பதிப்புரை

சொல்லின் பொருளை மிகத் தெளிவாகப் புரிந்து கொள்வதற்கும் புதிய படைப்புச் சொற்களை உருவாக்குவதற்கும், மொழியாராய்ச்சியாளர்களுக்கும், பிறமொழியாளர்களுக்கு மொழியைக் கற்பித்தலுக்கும் உலகில் உள்ள அனைத்து மொழிகளுக்கும் சொற்பிறப்பியல் அகரமுதலிகள் உருவாக்கப்பட்டுள்ளன. ஞாலத் தொன்மொழிகளுள் தாய்மையும், தலைமையும் கொண்டது நம் தமிழ்மொழியாகும். திராவிட மொழிகளுக்குத் தாயாகவும், வடமொழிக்கு மூலமாகவும் தொன்றுதொட்டே பாங்குடன் சிறந்தமொழி நம் நற்றமிழ் மொழியாகும். காலத்தால் முந்தியதும், இலக்கிய இலக்கணங்கள் நிரம்பப் பெற்றதுமான உயர்தனிச் செம்மொழிக்குச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இல்லாத குறையைப் போக்குதற் பொருட்டு, 1974–ஆம் ஆண்டு தமிழ்நாடு அரசால் மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரை இயக்குநராகக் கொண்டு செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டம் உருவாக்கப்பட்டது. மேலை நாட்டார் தங்கள் மொழியின் சொற்பிறப்பியல் அகர முதலியில் சொல்லின் பிறப்பை மட்டும் உணர்த்துவதே எல்லை என்று கருதி வந்தனர். ஆனால், பாவாணரின் சொல்லாய்வுப் பணியோ முற்றிலும் மாறுபட்டுச் சொல்லுக்குப் பொருள் என்ற நிலைமாறி, சொல்லுக்கு வேர் மூலம் காட்டுவதோடு மட்டுமின்றி எந்த வேரிலிருந்து எந்தச் சொல் பிறந்தது என்பதையும், பிறமொழியிலிருந்து கடன்பெற்ற சொல்லாக இருந்தால் எம்மொழிச் சொல், எவ்வாறு திரிந்தது என்பதையும், அச்சொல் அம்மொழியின் இனமொழிகளில் எவ்வாறு வழங்குகிறது என்பதையும், அச்சொல்லின் மறுவடிவங்கள் எவை என்பதையும், சொல்வடிவிலும், பொருள் வடிவிலும் எவ்வகைத் திரிபுகளையும், மாற்றங்களையும் அச்சொல் அடைந்துள்ளது என்பதையும் விரிவாக ஆராய்வதாகும்.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியின் ஆறாம் மடல இரண்டாம் பகுதியாக வெளிவரும் இந்நூல் பேரகரமுதலி வெளியீடுகள் வரிசையில் பதினேழாவதாகும்.

தமிழ் மொழி வளர்ச்சியில் அதன் தொடக்க நிலையிலிருந்து இன்றைய வழக்குவரை அது கொண்டுள்ள பொருள் மாற்றப் படிநிலைகளை முறையாகச் சொல்வதற்கு முயல்கிறது இந்த அகரமுதலி. பொருள்மாற்றம் அல்லது சார்புப் பொருள் வளர்ச்சி கொள்ளல் ஆகியன சில முறையொழுங்கைத் தழுவி வந்துள்ளதைக் காணலாம். குறிப்பாக, கருத்தடிப்படையில் உருவான வேரிலிருந்து சொல் வளர்ந்து வரும் நிலையைக் காட்டி விளக்குவது இவ்வகரமுதலியின் சிறப்பியல்பாகும்.

எ–டு: 'புல்' பொருந்தற் கருத்துவேர். புல்லுதல் = பொருந்துதல், புணர்தல், கழுவுதல், வரவேற்றல், ஒத்தல், ஒட்டுதல், நட்புச் செய்தல். புல்→புல்லி→புலி = முன்னங் கால்களால் தழுவிப் பற்றும் வேங்கை அல்லது சிறுத்தை. புல் புருவம் = ஐம்பொறிகள் பொருள்களோடு பொருந்தி யறியும் அறிவு, பொறியுணர்வு, இலக்கணம், நூல், மறை நூல், தப்பு, பொருந்தியிருக்கும் நிலம், விளைநிலம். புலம் →புலவன் = அறிஞன், அறிவுள்ள பாவலன், தேவன், அறிவன் (புதன்) (வே.க.3, 62, 63).

ஒரு மொழியின் வளர்ச்சியையும் அதன் தனித்தன்மையையும் தெரிவிக்கும் துல்லிய அளவுகோலாக அகரமுதலி அமைகிறது. தமிழ், சொல்வளமிக்க மொழி. மொழி வளத்தைச் சொல்காட்டும். சொல்வளத்தால் மொழி வளரும். கருத்து வளர்ச்சியையும் பண்பாட்டு வளர்ச்சியையும் இவை காட்டி நிற்கின்றன. சொல்வளர்ச்சி சொற்பெருக்கத்தைக் குறிப்பதோடு, சொற்பொருளில் ஏற்படும் வளர்ச்சியையும் குறிக்கும். புதுப்பொருள், புதுக்கருத்து ஆகியவற்றை வெளிப்படுத்துவதன் மூலம் சொற்பெருக்கம் ஏற்படும். சொற்கள் பயன்பாட்டுச் சூழலுக்கேற்பப் புதுப்பொருளைப் பெறுகின்றன.

வித்தினின்று முளையும், மரத்தினின்று துளிரும், தாயினின்று சேயும் பிறத்தல் போல அடிப்படை வேரினின்று சொற்கள் பிறக்கின்றன. சொல்லாய்வு மிக நுட்பமான ஒன்று. சொல்லாய்வு மொழி வளத்தையும் சமுதாயப் பண்பாட்டு வரலாற்றையும் விளக்கும். சொல்லாய்வு சொல்லுக்குரிய மூலப் பொருளையும் அறியச் செய்யும். வேர்ச்சொல்லினின்று சொல்லின் அடிப்படைப் பொருள் பெறப்படுகிறது. சொற்கள் அடையும் பொருள் விரிவை அறியவும் சொல்லாய்வு துணைபுரிகிறது.

ஒரு சொல் புதியதாக ஒரு பொருளை ஏற்கும் போது, சில நேரங்களில் பழைய பொருளை இழந்து விடுகிறது. ஆனால், சொல்லின் பழைய பொருளுக்கும் புதுப்பொருளுக்கும் பெரிய முரண் ஒன்றும் இருக்காது. இவ்விரு பொருள்களும் வெவ்வேறு சூழலில் பயன்படுத்துவனவாக இருக்கும். இதுவுமில்லாமல், இவ்விரு பொருள்களினின்றும் மேலும் பல பொருள்கள் வளர்வதுமுண்டு.

எ–டு : புல்லுதல் = துளைத்தல், இவ்வினைச் சொல் வழக்கிறந்தது. புல், உட்டுளையுள்ள நிலத்திணை வகை, ஊனுண்ணா விலங்குணவான தாளுள்ள நிலைத்திணை வகை, உட்டுளையுள்ள பனை, பனைவடிவான நாள் (அனுடம்), உட்டுளையுள்ள தென்னை, உட்டுளையுள்ள மூங்கில் புல் போன்ற கம்பம் பயிர், புல்லரிசி (வே.க.3, 101).

முன்னோர் விட்டுச் சென்ற அறிவுக் கருவூலமாய் மொழி விளங்குகிறது. இன்றைய அறிவுச் செல்வத்தை வழித் தோன்றல்களுக்கு விட்டுச் செல்ல உதவிபுரிவதும் மொழி. இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே தனக்கென தனியான வாழ்வையும் வரலாற்றையும் வகுத்துக் கொண்டது. தமிழ் நீண்ட வரலாற்றையும் நெடிய இலக்கண வளமையும் கொண்டு உயர்தனிச் செம்மொழியாய் இறுமாந்து நிற்கிறது.

பேரகரமுதலி வெளியீடுகள் வெளிவருவதில் மிகுந்த அக்கறை கொண்டு பேரூக்கம் அளித்துவரும் மாண்புமிகு முதலமைச்சர் அவர்களுக்கு எனது நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். அகரமுதலித் திட்டத்திற்கு அனைத்து வகையிலும், விழுமிய வண்ணம், எல்லா உதவிகளையும் செய்துவரும் மாண்புமிகு கல்வியமைச்சர் அவர்களுக்கும், நெஞ்சார்ந்த எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் வெளிவர அரும்பாடுபட்டு உழைத்த தொகுப்பாளர் (பகுதிப் பொறுப்பாளர்), பதிப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர்கள் மற்றும் திட்டப் பணியாளர்கள் ஆகியோருக்கு என் வாழ்த்துகளையும், நன்முறையில் அச்சிட்டுத் தந்துள்ள உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திற்கு நன்றிகளையும் உரித்தாக்குகிறேன்.

16/8/2005

(பு.ஏ.இராமையா)

சென்னை

.07.2005

# பி

**பி**[1] *pi,* மெய் '*ப்*' என்ற மெய்யெழுத்தும் 'இ'என்ற உயிரெழுத்தும் இணைந்த உயிர் மெய்(அசை)எழுத்து; the syllable formed by adding the short vowel 'i' to the consonant 'p'

*[ப் + இ ]*

**பி**[2] *pi,* இடை. (part.) பிறவினை ஈறு(விகுதி) (வீரசோ. தாதுப்.6); a suffix of causative verbs.

எ-டு: காண்-காண்பி, உண்-உண்பி

**பிக்கம்**[1] *pikkam,* பெ. (n.) யானைக்கன்று, (யாழ்.அக); young of elephant.

*[பிள் → பிள்ளை = குழந்தை. பிள் → பிள்கு → பிக்கு → பிக்கம் 'அம்' பெருமைப் பொருள் பின் னொட்டா தலால், இலக்கண நெறிப்படிப் பிக்கம் என்பது பெரிய விலங்கான யானைக் கன்றைக் குறித்தது]*

pill-ai Tam. child; Tel. pilla, Kan. piḷḷe; Latin puell-us, puell-a. a boy, a girl; compare with pullus, the young of an animal (CGDFL.599)

த. பிக்கம் > Skt. pikka



**பிக்கம்**[2] *pikkam,* பெ. (n.) இருவேலி (சங்.அக.); cuscus grass.

**பிக்கம்**[3] *pikkam,* பெ. (n.) பின்காலின் சதைப்பகுதி (ஆந்.); the calf of the leg.

தெ. பிக்க.

*[பின் → பிற்கு → பிக்கு → பிக்கம்]*



**பிக்கல்பிடுங்கல்** *pikkal-piḍuṅgal,* பெ. (n.) தொல்லை, தொந்தரை (இ.வ.); trouble, worry.

அவளுக்குப் புகுந்த வீட்டில் பிக்கல் பிடுங்கல் இல்லை (உ.வ.).

க. பீகலாட (சண்டை, தொல்லை); தெ. பிக்கு (சூழ்ச்சி, வஞ்சகச்செயல்), பிகபிதலு (குழப்பம்)

*[பிய் → பிக்கல். பிள் → பிடு → பிடுங்கல். 'பிக்கல் பிடுங்கல்' மீமிசைப்பொருள் மரபிணைமொழி. தொடர்ந்து தரும் நச்சரிப்பையே இவ்வாட்சி குறிக்கிறது]*

**பிக்கலி** *pikkali,* பெ. (n) அறுகு; a species of grass.

**பிக்காகம்** *pikkāgam,* பெ. (n) மாமரம்; mango tree.

**பிக்கி** *pikki,* பெ. (n) பழவகை; a kind of fruit.

*கல்பிக்கி நாறிப்பிக்கி என பிக்கிப்பழத்தில் இருவகையுண்டு.*

**பிக்கிலி** *pikkili,* பெ. (n) அறுகு; a species of grass.

**பிக்கு[1]-தல்** *pikku-,* 8 செ.குன்றாவி. (v.t.) சிறுதுண்டுகளாக்குதல் (சேரநா.); to break in to pieces.

ம. பிக்குக; தெ.பிகுலு, பிவுலு; கூ. பிஞ்ச.

*[பிள் → பிள்கு → பிக்கு-,]*

**பிக்கு[2]** *pikku,* பெ. (n.) 1. தொல்லை, சிக்கல், தடை (வின்.); trouble, intricacy, perplexity, hindrance. 2. பிசகு; fault, wrong. '*முனிவரு மேற்றுக் கொண்டாரிதைப் பிக்குச் சொல்லாமலே*' (குற்றா. குற.93,3). 3. குழப்பம் (வின்.); embrassment. 4. ஒவ்வாமை (யாழ்.அக.); unsuitability.

க.பிகலாட; தெ.பிக்கு

*[பிள் → பிணை(கூட்டம்). பிள் → பிக்கு]*

**பிக்கு[3]** *pikku,* பெ. (n.) புத்தத்துறவி; Buddha monk.

க. பிக்கு, பிச்சு

Pkt. bhikku, bhikṣu

*[பிழா → பிடா → பிடவு → பிடகு → பிடகம் = வாய்விரிந்த பூந்தட்டு. பூக்கூடை. பூந்தட்டுப் போன்ற புத்தமறைப் பகுதி முப்(திரி)பிடகத்துள் ஒன்று. பிடகம் → பிடகன் = திரிபிடக ஆசிரியரான புத்தன் (பிங்). பிடகு → பிடக்கு = புத்தர் பிடக நூல் (வே.க.3.11.0) பிடக்கு → பிட்கு → பிக்கு = புத்த மறை நூலில் தேர்ச்சி பெற்ற துறவி.]*

மா.வி.அக. (புத்தத்துறவி) இரந்துண்டு வாழும் தன்மையைக் கொண்டவர் என்னும் பொருளில் பிச்சையென்னும் சொல்லுடன் பொருத்திக் காட்டுகிறது. அவ்வாறாயினும் அது தமிழ்ப் பிச்சையடிப்படையில் அமைகிறது.

**பிக்குணி** *pikkuṇi,* பெ. (n.) புத்தப்பெண் துறவி; Buddha monk (female). '*பிக்குணிக் கோலத்துப் பெருந்தெரு வடைந்ததும்*' (மணிமே. 15, 58.).

Pkt. bhikkuni; Skt. bhikṣuni

*[பிக்கு (ஆ.பா) - பிக்குணி(பெ.பா.)]*

**பிக்குப்பிசகு** *pikku-p-piśagu,* பெ. (n.) *பிக்கல் பிடுங்கல்* பார்க்க (இ.வ.); see *pikkal piḍuṅgal.* மகளை மணம் செய்துகொடுப்பது பெற்றோர்க்குப் பிக்குப்பிசகாக இருக்கிறது. (உ.வ.)

*[பிக்கு + பிசகு. பிக்கு = குற்றம், சிக்கல். பிசகு = தவறு, பிழை. 'பிக்குப் பிசகு' இனப்பொருள் மரபிணைமொழி.]*

**பிகபந்து** *piga-pandu,* பெ. (n.) பிகவிருப்பம் பார்க்க; see *pigavirupparn.*

*[பிகம் + பந்து.]*

Skt. bandhu > **த.** பந்து

**பிகம்** *pigam,* பெ. (n.) குயில்; koel, cuckoo. '*சுகமும் பிகமும் மறை யோதும்*' (அழகர் கலம். 100).

**ம.** பிகம்; **க.** பிகலக்கி, பிக்குளிகெ (ஒருவகைப் பறவை); **தெ.** பிகிலி, பிகிலி (இனிமையாகப் பாடும் பறவைவகை)

*[பிள் = இளமை, பசுமை, இனிமை. பிள் → பிக → பிகம் = இனிமையான ஓசையுடையது]*

**த.**பிகம் > Skt. pika

**பிகராகம்** *piga-rāgam,* பெ. (n.) பிகவிருப்பம் (மலை.) பார்க்க; see pigaviruppam.

*[பிக + ராகம். பிக = இனிய ஓசை. அராகம் → ராகம்]*

*த.அராகம்* > Skt. *rāga*

**பிகலி** *pigali,* பெ. (n.) முள்ளி; a thorny shrub.

**பிகவல்லபம்** *piga-vallabam,* பெ. (n.) பிகவிருப்பம் பார்க்க; see piga-viruppam.

*[பிகம் + வல்லபம்]*

Skt. vallabha > **த.**வல்லபம்.

**பிகவிருப்பம்** *piga-viruppam,* பெ. (n.) குயிலின் விருப்பமான மாமரம் (மலை.); mango, the beloved of koel.

*[பிகம் + விருப்பம்]*

**பிகன்** *pigan,* பெ. (n.) படர்கொடிப் பசலை; a creeper.

**பிகி¹-தல்** *pigi -,* 4 செ.கு.வி. (v.i.) இறுகுதல்; to be hard knit. '*சரீரம் பிகிந்திருக்கும்*' (பைஷஜ. 235.).

**க., பட.** பிகி; **தெ.** பிகின்சு; **து.** பிகியுனி.

*[பிள் → பிணை = இணைதல், கூடுதல். பிணைத்தல் = இறுகக்கட்டுதல். பிள் → பிகி-,]*

**பிகி²** *pigi,* பெ. (n.) பெண்குயில்; the female of the bird - Indian cuckoo.

*[பிகம் (குயில், ஆண்குயில்) - பிகி (பெண்குயில்). 'இ' பெ.பா.ஈறு.]*

**பிகு¹-த்தல்** *pigu-,* 4 செ.கு.வி. (v.i.) ஊதை நோயின் இறுக்கத்தினால் உடம்பில் மாற்றம் ஏற்படுதல்; to feel tightness of the limbs of the body due to rheumatism.

*[புல்லுதல் = இணைதல், பொருந்துதல். பில் → (பில்) → பிள் → பிகி. பிகிதல்= இறுகுதல். பிகி → பிகு. பிகுதல் = (உடலுறுப்பு) இறுக்கமடைதல்.]*

**பிகு²** *pigu,* பெ. (n.) **1.** இறுக்கம்; tightness, hardness, rigidity. **2.** வலிமை (வின்.); force, strength. **3.** செருக்கு; arrogance, severity. '*அவன் வெகு பிகுவாயிருக்கிறான்*'.

4. எடுத்த குரல் (வின்.); strong voice, high pitch.

க., து. பிகி

*[பிகி → பிகு.]*

**பிகுப்பட்டை** *pigu-p-paṭṭai,* பெ. (n.) சேணக்கச்சு (வின்.); girth of a horse.

*[பிகு + பட்டை. பிகுபட்டை = இறுகக் கட்டப்படுவது]*

**பிகுபண்ணு—தல்** *pigu-paṇṇu-,* 12 செ.குன்றாவி. (v.t.) தன்னையருமைப்படுத்திக் கொள்ளுதல் (கொ.வ.); to make oneself too dear.

ம. பிகயுக

*[பிகு + பண்ணு. 'பண்ணு' து.வி. பிகு = இறுக்கம், உறுதி, செருக்கு]*

**பிகுபந்து** *pigupandu,* பெ. (n.) மாமரம்; mango tree.

*[பிகம் + பந்து - பிகபந்து → பிகுபந்து = குயிலுக்கு இருப்பிடமளிக்கும் மரம்]*

Skt. bandhu > த. பந்து.

**பிகுவாயிரு—த்தல்** *piguvāyiru-,* 3 செ.கு.வி. (v.i.) (முறுக்குண்ட கயிறு) விறைப்பாயிருத்தல்; to stiffen as of twisted twin.

*[பிகுவாய் + இரு. 'இரு' து.வி.]*

**பிகுவு** *piguvu,* பெ. (n.) 1. பிகு, 1, 2. பார்க்க. (வின்.); see pigu 1, 2. 2. ஓரளவு கொண்ட அவுரிக்கட்டு; bundle containing a definite quantity of indigo plants cut from the field. (C.G.)

தெ.பிகுவு; க. பிகுகு; து. பிகிபு

*[பிகு → பிகுவு]*

**பிகுவேற்று—தல்** *pigu-v-ēṟṟu-,* 8 செ.குன்றாவி. (v.t.) 1. இறுகச் செய்தல்; to make tight, tighten. 2. வளைத்தல். to bend, as a bow.

*[பிகு + ஏற்று. ஏறு → ஏற்று–,]*

**பிங்கடமார்கட்டு—தல்** *piṅgaḍa-mārkaṭṭu -,* 5 செ.குன்றாவி. (v.t.) *பின்கட்டு மாறுகட்டு* — தல் பார்க்க; see *piṉkaṭṭu māṟu kaṭṭu-.*

க. பிங்கடெ(பின்கடை)

*[பின்கட்டுமாறுகட்டு → பிங்கடமார்கட்டு. (கொ.வ.)]*

**பிங்கதிருட்டி** *piṅga-tiruṭṭi,* பெ. (n.) அரிமா (சிங்கம்), பிங்க நிறமான கண்ணுடையது; lion, as being tawny-eyed.

*[பிங்கம் + திருட்டி.புகர் → பிகர் → பிங்கர் → பிங்கம்]*

த. பிங்கம் > Skt.piṅga

Skt. drṣṭi > த. திருட்டி

**பிங்கநிறம்** *piṅga-niṟam,* பெ. (n.) பழுப்பு மஞ்சள் நிறம்; tawny colour.

*[பிங்கம் + நிறம்]*

**பிங்கம்¹** *piṅgam,* பெ. (n.) பொன்மை கலந்த சிவப்பு (வின்.); tawny colour.

Skt.pinga; L.ping.

*[புகர் → பிகர் → பிங்கர் → பிங்கம்]*

**பிங்கம்²** *pingam,* பெ. (n.) பழுபாகற் கொடி வகை; a climber.

*[பிங்கம் = பழுப்பு மஞ்சள் நிறம். பிங்கம்¹ → பிங்கம் = பழுப்புநிறப் பாகற்கொடி]*

**பிங்கம்³** *pingam,* பெ. (n.) இளங்கன்று; young calf.

*[பிஞ்சு = இளமையானது. பிஞ்சு → பிங்கு → பிங்கம்.]*

pinga, a young animal. c.f.D.pinju, pillē (KKED.XXI)



**பிங்கலகேசி** *pingalakēśi,* பெ. (n.) இறந்து பட்ட ஓர் ஏரணநூல் (யாப்.வி.பக். 487,540); a polemic poem, not extant.

**பிங்கலந்தை** *pingalandai,* பெ. (n.) பிங்கல நிகண்டு பார்க்க (சூடா. சிறப்புப்.7.); see pingala nigaṇḍu.

*[பிங்கலம் → பிங்கலந்தை.]*

**பிங்கலநிகண்டு** *pingala-nigaṇḍu,* பெ. (n.) பிங்கல முனிவர் இயற்றிய நிகண்டு; a ancient Tamil Lexicon, named after the author.

*[பிங்கலம் + நிகண்டு]*

Skt.nighaṇṭu > த. நிகண்டு

**பிங்கலம்¹** *pingalam,* பெ. (n.) 1. பொன்னிறம் (திவா); gold colour, yellow. 2. அரிதார நிறம்; tawny, reddish brown. 3. பொன் (சூடா.); gold. 4. வடக்கு (பிங்.); north. 5. பிங்கல முனிவர் இயற்றிய நிகண்டு; an ancient Tamil lexicon named after the author. *'பிங்கல முதலா நல்லோருரிச் சொலின்'* (நன்.460).

க., து. *பிங்கல, பிங்கள*

*[பிங்கம் → பிங்கலம்]*

த. *பிங்கலம்* > Skt. *pingala.*

**பிங்கலம்²** *pingalam,* பெ. (n.) 1. கீரி; mongoose. 2. குரங்கு; monkey. 3. பிங்கல மாலை பார்க்க; see pingala mālai.

*[பிங்கம் = பழுப்பு மஞ்சள் நிறம். பிங்கம் → பிங்கலம் = பழுப்பு வண்ணத்திலிருக்கும் கீரி, குரங்கு]*



**பிங்கலமாலை** *pingalamālai,* பெ. (n.) குடவம் (பித்தளை); brass.

*[பிங்கலம் + மாலை. மால் → மாலை]*

**பிங்கலமுனிவர்** pingala-munivar, பெ. (n.) பிங்கல நிகண்டு என்னும் நூலின் ஆசிரியர் (பிங். பாயி.); the author of a nikaṇḍu named after him.

*[பிங்கல(ம்) + முனிவர்]*

**பிங்கலன்**[1] *pingalan*, பெ. (n.) **1.** செல்வக் கடவுள் (குபேரன்) (திவா.); Kubēra, the god of wealth. "*பிங்கலற்கும் கருகூலம் போலிருப்பா*" (குற்றா. தல. நகரச்.35). **2.** *பிங்கல முனிவர்* பார்க்க; see *pingalamunivar*.

*[பிங்கலம் → பிங்கலன்]*

**பிங்கலன்**[2] *pingalan*, பெ. (n.) **1.** நெருப்பு; fire. **2.** ஞாயிறு; the sun. **3.** சிவபெருமான்; god Sivan.

**து.** *பிங்களெ.*

*[பிங்கம் = பழுப்புமஞ்சள் நிறம். பிங்கம் → பிங்கலம் → பிங்கலன் = மஞ்சள் சுடரொளியைக் கொண்ட நெருப்பு, நெருப்பைப் போன்ற ஞாயிறு, ஞாயிற்றைப் போன்று எரிக்கும் நெற்றிக் கண்ணை யுடைய சிவன். 'அன்' உடைமை குறித்த ஈறு]*

**பிங்கலாதனம்** *pingalādanam*, பெ. (n.) ஒக இருக்கை (யோகாசன) வகை (தத்துவப். 107.); a kind of yogic posture.

*[பிங்கலம் + ஆதனம்]*

Skt. āsana > **த.** ஆதனம்

**பிங்கலை**[1] *pingalai*, பெ. (n.) **1.** பத்து (தச) நாடியுள் ஒன்று (சிலப்.3,26,உரை); a principal tubular vessel of the human body, one of tasa - nāḍi q-v. **2.** வலது மூக்கு வழியாய் வரும் மூச்சு (யாழ்.அக.); breath through the right nostril. **3.** ஆந்தை வகை (சூடா.); a kind of owl. **4.** எண்திசை யானைகளுள் (அட்டதிக்கசங்களுள்) தென்றிசையிலுள்ள வலப்புறத்துக்குரிய பெண்யானை; the female elephant, mate of Vāmanam guarding the southern point of the compass. **5.** மலைமகள் (பார்வதி) (யாழ்.அக.); Pārvadi.

**க.** *பிங்கள*

*[பிங்கலை = மூச்சுவிடும் முந்நாடிகளுள் வலத்ததாகச் சொல்லப்பெறுவது (வ.வ.35)]*

**த.** பிங்கலை > Skt. pinglā

**பிங்கலை**[2] *pingalai*, பெ.(n.) ஆந்தை; owl.

**க.** *பிங்கலெ;* Skt., Mar. pingalā

*[பிங்கம் → பிங்கலம் → பிங்கலை]*

**பிங்கள்** *pingaḷ*, பெ. (n.) குழந்தை; child.

*[புள் → (பிள்) → பீள் = இளங்கதிர், இளமை. புள் → (பிள்) → பில் → பின் → பின்சு → பிஞ்சு = இளமையானது. பிஞ்சு → பிங்கு → பிங்கள் = இளையது, குழந்தை.]*

**பிங்களம்** *pingaḷam*, பெ. (n.) **1.** *பிங்கலம்,* பார்க்க; see *pingalam*, **2.** களிம்பு (யாழ்.அக.); verdigris. **3.** ஏய்ப்பு(வஞ்சகம்) (வின்.); guile, deception, insincerity. **4.** பிரிவு (பேதம்) (யாழ்.அக.); separation.

*[பிங்கலம் → பிங்களம்]*

*ஒ.நோ. மங்கலம் → மங்களம்*

**த.** பிங்களம் > Skt. pingala.

**பிங்களி**[1]**–த்தல்** *pingaḷi-*, 14 செ.குன்றாவி (v.t) அருவருத்தல் (யாழ்.அக.); to loathe.

*[பின்கழி → பிங்களி–,]*

**பிங்களி²—த்தல்** *pingaḷi-,* 4 செ.கு.வி (v.i) பின்வாங்குதல்: to retreat.

*[பின்கழி → பிங்களி–,]*

**பிங்களை** *pingaḷai,* பெ. (n.) *பிங்கலை, 4.* பார்க்க (சது.); see *pingalai 4.*

**பிங்காசம்** *pingāšam,* பெ. (n.) பொன்வகை; a kind of gold.

*[பிங்கம் → பிங்காசம்]*

**பிங்காசி** *pingāši,* பெ. (n.) அவுரி (சங்.அக.); indigo.

**பிங்காளம்** *pingāḷam,* பெ. (n.) ஒருவகைக் கலம்; a kind of metallic vessel. *'பிங்காளமொன்று நூற்று ஐம்பத்து ஐங்கழஞ்சு'* (S.I.I. ii,422.)

**பிங்கி¹** *pingi,* பெ. (n.). வன்னி (சங்.அக.); Indian mesquit.

**பிங்கு—தல்** *pingu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. பின்னால் செல்லுதல், அகலுதல், விலகுதல்; to go back, to retreat, to go away. 2. தோல்வியுறுதல்; to fail, to be backing. (கருநா.)

மறுவ. பிந்துதல்

க. பிங்கு,பிஞ்கு; பட. கிங்கு (அழுந்துதல்)

*[பின் → பின்கு → பிங்கு–,]*

**பிங்குசம்** *pingušam,* பெ. (n.). தலைக் கோலம்(பிங்.);a head ornament. *'மணிக்கருங்கதுப்பிற் காந்தட் பிங்குசம்'* (இரகு. நாட்டுப்.50.)

*[ பின்னு(தல்) + குயம் – பின்(னு)குயம் → பிங்குசம் ]*



**பிச்சத்தேவர்** *picca-t-tēvar,* பெ. (n.) சிவ பெருமான்; Lord Sivaṉ. *'பிச்சத்தேவர் திருமேனியொன்று'* (S.I.I.ii. 142, 17)

*[பிச்சை² + தேவர்]*

**பிச்சப்பழம்** *picca-p-paḻam,* பெ. (n.) சருக்கரைக் கொம்மட்டிப் பழம் (வின்.); sweet water melon.

*[பிச்சம் + பழம். பள் → பழு → பழம்]*

**பிச்சப்பூ** *piccappū,* பெ. (n.) பிச்சி¹ பார்க்க; see picci¹.

*[பிச்சி → பிச்ச + பூ. பொல் → பொலி → பொலிவு. பொல் → பூல் → பூ.]*

**பிச்சம்** *piccam,* பெ. (n.) 1. இறகு (அக.நி.); feather. 2. ஆண்பால் மயிர்(பிங்.); man's hair-tuft. 3. பீலிக்குஞ்சம்; bunch of peacock's feathers, used as a fan. *'கவரியுங் குடையும் பிச்சமும்'* (தேவா. 1134, 8.) 4. பீலிக்குஞ்சக் குடை (பிங்.); umbrella with crest of peacock's feathers. 5. எஞ்சி நிற்பது; remnant. *'பிச்ச அமாவாசை'* (இ.வ.) 6. நெற்றிக்குறி இடும் (தரிக்கும்) போது

தவறிவிழும் சிதைவு; the deviations in the drawing of sacred marks on the forehead. **7.** எட்டி (மலை.); strychnine tree.**8.** இருவேரி (மலை.); cascus grass.

**தெ.** பிஞ்ச

*[புள் → பிள் → பீள் = இளங்கதிர், இளமை. புள் → பூள் → பூட்டை= இளங்கதிர். புள் → பிள் → பிய் → பிச்சு → பிச்சம் = மென்மையானது.]*

**த.** *பிச்சம்* > Skt. piccha.

**பிச்சமாவாசை** *piccamāvāšai,* **பெ.** (n.). படையல் நாள் (தர்ப்பண தினம்) அல்லது காருவா(அமாவாசை)வின் இறுதிப் பாகத்தைக் கொண்ட நாள்; day having the unexpired portion of the new moon, when oblations are not offered to manes. Brāh.

*[பிச்சம் +அமாவாசை]*

Skt. amā -vāsyā > **த.** *அமாவாசை*

**பிச்சரிசி** *piccariši,* **பெ.** (n.). பிச்சையரிசி பார்க்க; see piccai-y-ariši.

*[பிச்சை +அரிசி – பிச்சையரிசி → பிச்சரிசி. அரி → அரிசி.]*

**பிச்சன்** *piccaṉ,* **பெ.** (n.) **1.** மனநலம் குன்றியவன் (பைத்தியக்காரன்); maniac, madman. '*பிச்சரங்கவரெனப் பிறருந் தூற்றவே*' (பிரபோத. **26. 70**)**. 2.** மருண்டவன்; one who is captivated, enamoured or fascinated. **3.** சிவன்; Šivaṉ. '*ஊர்ச்சுடுகாட்டெரிப் பிச்சன்*' (திருவாச. **6,49**).

**ம.** பிச்சன்; **க.** பெச்ச; **தெ.** பிச்சி; **பட.** புச்ச

*[பே → பேம் = அச்சம். .பேதல் = அஞ்சுதல். பேய் → பேயன் = பேய்பிடித்தவன். பே → பேது = பேய்பிடித்தாற் போன்ற மருள், மயக்கம், அறியாமை. பேது → பேத்து. பேத்துதல் = அஞ்சி உளறுதல், உளறுதல். பேத்து → பீத்து ஒ.நோ. தேஞ்சுவை → தீஞ்சுவை. பீத்துதல் = உளறுதல், தன்புகழ்ச்சியாய் உளறுதல். பீத்து → பித்து. ஒ.நோ. தீம் → தித்தி. பித்து = மயக்கம், மதிமயக்கம், மூளைக்கோளாறு, தலைக்கிறுக்கு, தலைச்சுற்றை உண்டாக்கும் நீர், அந்நீரைக்கொண்டவுறுப்பு, மயக்க நிலைப்பட்ட காதல் அல்லது அவா. பித்து → பித்தன் = கிறுக்கன், கழிபெருங் காதலன் அல்லது பற்றினன். பித்து → பிச்சு → பிச்சன் (மு.தா.9)]*

**பிச்சன்கோட்டகம்** *piccaṉ - kōṭṭagam,* **பெ.** (n.) நாகப்பட்டினம் மாவட்டத்திலுள்ள ஓர் ஊர்; a village in Nāgapaṭṭiṉam dt.

*[பிச்சன்+கோட்டகம்]*

**பிச்சாடனம்** *piccāḍaṉam,* **பெ.** (n.). இரப்பு; begging, mendicancy.

*[பிச்சை + ஆடனம்]*

**பிச்சாடி** *piccāḍi,* **பெ.** (n.). குதிரையின் பின்னங்காற் கயிறு (வின்.); tether for the hind feet of a horse, opp. to akāḍi.

*[பின் → பின்பு. பின் → பின்று → பிந்து. பின்சு → பிச்சு → பிச்சாடி = பின், பின்னங்காற் கயிறு. ஒ.நோ. அகாடி = முன், குதிரையின் முன்னங்காற் கயிறு.]*

**பிச்சாவரக்கழி** *piccāvara-k-kaḻi,* **பெ.** (n.). பரந்த நீர்ப்பரப்புடைய கழிமுகம்; a broad river mouth.

*[பிச்சாவரம் + கழி]*

**பிச்சாவரம்** *piccāvaram,* பெ. (n.). அடர்ந்த மரங்களுள்ள கடற்றுறை ; a harbour.

*[பிச்சன்புரம்→ பிச்சாபுரம் → பிச்சாவரம். 'பிச்சன்' சிவபெருமானைக் குறித்ததாக இருக்கலாம்.]*

**பிச்சி**[1] *picci,* பெ. (n.) **1.** சாதிமல்லிகைப்பூ (கொ.வ.); large flowered jasmine. ; **2.** முல்லைப்பூ (பிங்.); trichotomous-flowering smooth jasmine. **3.** சிறுசெண்பகம் (மலை.); canaga flower tree.

**மறுவ.** பித்தி, பித்திகம், பித்திகை
**ம.** பிச்சி, பிச்சிகம்

*[பித்திகை → பித்தி → பிச்சி ]*

**பிச்சி**[2] *picci,* பெ. (n.) **1.** பித்துப்பிடித்தவள்; crazy woman. *'பெயர்த்து மவனுக்கே பிச்சியானாள்'* (தேவா. 714, 7.). **2.** பிச்சியார், **1.** பார்க்க; see picciyār. **1. 3.** ஒரு பெண் பேய்(யாழ்ப்.); a female devil.

**ம.** பிச்சு(மனநலம் குன்றிய தன்மை); **க.** பெச்சு, பச்சு, புச்சு (மனநலம் குன்றிய தன்மை.) **தெ.** பிச்சி; **பட.** புச்சி

*[பேத்து → பீத்து. பீத்து → பித்து → பித்தன் = கிறுக்கன், கழிபெருங்காதலன் அல்லது பற்றினன். பித்து → பிச்சு → பிச்சன்.(ஆ.பா) –பிச்சி (பெ.பா.)]*

**பிச்சி**[3] *picci,* பெ. (n.) மனநலம் குன்றியவ–ன்–ள்.(பித்துப் பிடித்தவ–ன்–ள்) (இ.வ.); crazy person.

**தெ.** பிச்சி.

*[பிச்சு → பிச்சி]*

**பிச்சி**[4] *picci,* பெ. (n.) சருக்கரைக் கொம்மட்டி; sweet water-melon. (M.M. 372)

**பிச்சி**[5] *picci,* பெ. (n.) **1.** இறகு; feather. **2.** இந்தியா, தென்னமெரிக்கா, சிலி முதலான நிலப்பகுதிகளிற் பயிராகும் இலை; the leaf of a plant growing in South America, Chili and in parts of India.

*[புள் → பிள் → பிய் → பிச்சு → பிச்சி ]*

**பிச்சிகம்** *piccigam,* பெ. (n.) குருவி (ஆந்.); a sparrow.

**தெ.** பிச்சிக, பிச்சுக

*[பிள் → பிட்டு = சிறியது. பிள் → பிசு பிசுக்கு = சிறுதுண்டு. பிசு → பிச்சு → பிச்சுகம் → பிச்சிகம் = சிறு பறவை]*



**பிச்சிதைப்பீறிஇலை** *piccidaippīṟi-ilai,* பெ. (n.) இதளிய(பாதரச)த்தைக் கட்டியாக்கும் இலை; the leaf of a plant to consolidate mercury.

*[பிச்சிதைப்பீறி + இலை]*

**பிச்சிப்பயறு** *picci-p-payaṟu,* பெ. (n.) நச்சு (குலுக்க)ப் பயறு; aconite leaved kidney bean.

*[பிச்சி + பயறு]*

**பிச்சியார்** *picciyār,* பெ. (n.) 1. சிவனிய (சைவ)த்தவப்பெண்; mendicant woman devotee of Šivaṉ. பிச்சியாரெனும் பேருமக்கிட்டதே' (குமர. பிர. மதுரைக்கலம்.32.). 2. சிவனிய (சைவ)த்தவப் பெண்ணாய் இரந்துண்ணும் ஒருத்தியைக் காமுகனொருவன் கண்டு விரும்புவதாகப் பாடும் கலம்பக வுறுப்பு; a characteristic theme of kalampagam where in a lewd person is described as wooing a mendicant woman - devotee of Šivaṉ.

*[பித்து → பித்தன் = கிறுக்கன். பித்து → பிச்சு → பிச்சன் = பித்துப்பிடித்தவன். பிச்சன் (ஆ.பா.) – பிச்சி (பெ.பா.). பிச்சி → பிச்சியார். 'ஆர்' உயர்வுப்பன்மையீறு]*

**பிச்சில்வாரி** *piccilvāri,* பெ. (n.) வள்ளத்தில் கட்டப்பட்டிருக்கும் சிறிய பாய்மரத்தைத் தாங்கிநிற்கும் பலகை; supporting plank of a mast.

*[பிச்சில் + வாரி. வார் → வாரி ]*

**பிச்சிலபம்** *piccilabam,* பெ. (n.) *பிச்சிலம்* பார்க்க; see *piccilam.*

*[பிச்சிலம் → பிச்சிலபம்]*

**பிச்சிலம்** *piccilam,* பெ. (n.) 1. குழம்பு; curry-broth. 2. ஈரம்; moisture, dampness. 3. கஞ்சி; conjee.

*[பிசுபிசுத்தல் = பசைத்தன்மையாதல், ஈரத்தன்மையடைதல். பிசு → பிச்சு → பிச்சிலம்]*

**பிச்சிலா** *piccilā,* பெ. (n.) இலவுமரம்; a tree.



**பிச்சிலாபம்** *piccilābam,* பெ. (n) காமாலையைப் போக்கும் இருள்விடுசெடி மூலிகை; a plant capable of curing jaundice.

**பிச்சிலை** *piccilai,* பெ. (n) 1. சாதி மல்லிகையிலை;leaf of jasminum gran diflorum. 2. பிச்சிப் பழக் கொடியின் இலை; leaf of water melon creeper.

*[பிச்சி + இலை]*

**பிச்சிவேர்** *picci vēr,* பெ. (n) சாதிமல்லிகை வேர்; root of jasminum grandiflorum.

*[பிச்சி + வேர்]*

**பிச்சிற்கண்டா** *piccirkaṇḍā,* பெ. (n.). சிறு பாய்மரம் நிற்குமிடம்; orifice in the rib of a doney through which the mast passes.

*[பிச்சில் + கண்டா. குல் → குள் → கள் = முள். கள் → கண் → கண்டு → கண்டா = குத்தி உருவாக்கப்பட்ட துளை.]*

**பிச்சிற்பாய்** *piccir pāy,* பெ. (n.). மரக் கலத்திற்குரிய சிறியபாய்; sail of boat.

*[பிச்சில் + பாய்].*

**பிச்சீரல்** *piccīral,* பெ. (n) பித்தீரல் (இ.வ.); liver.

*[பிச்சு + ஈரல். பித்து → பிச்சு]*

**பிச்சு¹** *piccu,* பெ. (n) 1. பித்தநீர்; bile. '*புறாவின் பிச்சும்*' (கொக்கோ. 1,27.). 2. மனநலமின்மை (பைத்தியம்); madness, infatuation.'*பிச்செமை யேற்றிய பெரியோன்*' (திருவாச. 3, 107.).

**ம.** பிச்சு; **க.** பெச்சு, பச்சு, புச்சு; **தெ.** பிச்சி, பிச்ச; **பட.** புச்சு; **கோத.** புச்; **துட.** பூச்(சினம்).

*[பீத்து→ பித்து = மயக்கம் மூளைக் கோளாறு, தலைக்கிறுக்கு, தலைச் சுற்றையுண்டாக்கும் நீர். பித்து → பித்தன் = கிறுக்கன். பித்து → பிச்சு.]*

**த.** பித்தம் > Skt. pitta

**பிச்சு²** *piccu,* பெ. (n) 1. மூளை; brain. 2. எட்டி; nuxvomica.

**பிச்சு³** *piccu,* பெ. (n) 1. கண் அழுக்கு, பீளை (கருநா.); slimy impurities of the eye, rheum.

**க.** பிச்சு; **தெ.** புசி; **து.** புர்கு

Skt. piñjata, peñjūsa, peiñjūṣa

*[பித்து → பிச்சு]*

**பிச்சுக்கொடி** *piccu-k-koḍi,* பெ. (n) கொடிவகை; heptapleuram venulosum.

*[பிச்சு + கொடி]*

**பிச்சுநெட்டி** *piccu-neṭṭi,* பெ. (n) காய்ச்சல் (சுர)வகை; a kind of fever. (C.E.M.)

*[பிச்சு + நெட்டி. பித்து → பிச்சு = தலைக் கிறுக்கு உண்டாக்கும் நோய். பிச்சு நெட்டி = தலைச்சுற்றை, மயக்கத்தை உண்டாக்கும் காய்ச்சல்.]*

**பிச்சுப்பிடுங்கல்** *piccu-p-piḍuṅgal,* பெ. (n) பிக்கல் பிடுங்கல் (இ.வ.) பார்க்க; see *pikkal piḍuṅgal.*

*[பிக்கல்பிடுங்கல் → பிச்சல்பிடுங்கல் → பிச்சுப்பிடுங்கல்]*

**பிச்சுப்பேய்** *piccu -p-pēy,* பெ. (n) ஒரு சிறுதேவதை (வின்.); a minor devil.

*[பிச்சு + பேய். பித்து → பிச்சு. பே → பேம். பே → பேய் = அஞ்சப்படும் ஆவி அல்லது தோற்றம்.]*

**பிச்சுப்பை** *piccu-p-pai,* பெ. (n) பித்தப்பை (இ.வ.) பார்க்க; see *pitta-p-pai.*

*[பித்தப்பை → பித்துப்பை → பிச்சுப்பை. புள் → பொள் → பொய் → (பய்) → பை ]*

**பிச்சுலங்கல்** *picculaṅgal,* பெ. (n) பித்து வழிதல்; over flowing of the gall.

*[பித்து → பிச்சு + உலங்கல்]*

**பிச்சை¹** *piccai,* பெ. (n) ***பிச்சி⁴*** (வின்.)பார்க்க; see ***piccí⁴.***

*[பிச்சி → பிச்சை]*

**பிச்சை²** *piccai,* பெ. (n) 1. வாழை (மலை.); plantain. 2. நூக்கம்; sissoo wood. (M.M. 821.)

**பிச்சை³** *piccai,* பெ. (n) குறைவானது, அளவில் குறைபாடுடையது(கருநா.); shortness or deficiency in measure or weight.

ம. பிச்சை (சிறியது, குள்ளமானது,

முதிராதது); க. பிச்செ

*[புல் → (பில்) → பின் → பின்னி = மிகச் சிறியது. புல் → பில் → பிள் → பிட்டு = சிறியது. பிள் → பில் → பிசுக்கு = சிறுதுண்டு(மு.தா.130). பிசு → பிச்சை = சிறியது, குறைவானது]*

**பிச்சை⁴** *piccai,* பெ. (n) **1.** இரப்போர்க்கிடும் உணவு; alms, food or raw rice given as alms. '*ஐயமும் பிச்சையும்*' (திவ். திருப்பா.2.).2. கொடை (தருமம்) (வின்.); charity. பிச்சைச் சோற்றிலும் எச்சிற் சோறா? (பழ.).

**மறுவ.** ஐயம்

**க.** பிக்கெ; பிச்செ; **து.** பிக்ச், பிக், பிச்ச்; **பட.** பிச்செ.

*[பிசு → பிச்சு → பிச்சை = சிறுமையுற இடுவது, கொடுப்பது]*

**த.** பிச்சை > Skt. bhiksā,

பிச்சை³ பார்க்க

bhiksh என்னும் வடசொல் பங்கிட்டுக் கொள்ள விருப்பம், அல்லது பகுத்து எடுத்துக் கொள்ளுதல் என்னும் பொருளுடைய bhaj என்னும் அடியிலிருந்து பிறந்ததாக மா.வி. அகரமுதலி குறிக்கிறது. bhaj என்னும் அடியும் தமிழ் பகு என்னும் சொல்லின் திரிபாய் இருப்பதைக் காண்க.

பகுத்துக்கொள்ளுதல் உரிமை அல்லது நட்புப்பற்றிக் கொள்ளுதற்குப் பொருத்தமாய் இருக்கலாம் அல்லாமல் பிறரிடமிருந்து இரப்பதற்குப் பொருந்தி வராமையைக் கண்டுகொள்க.

இனி வெஃகு → bhiṢh (வ.வ.2.94) என்றுமாம்.

**பிச்சை⁵** *piccai,* பெ. (n) **1.** கிலுகிலுப்பை; a plant whose fruit rattle. **2.** புண்ணீர்; fluid oozing from sores. **3.** பாக்கு; areca-nut.

**பிச்சைக்காசு** *piccai-k-kāšu,* பெ. (n) மிகச் சிறிய அளவு; a pittance, கொடுக்கிறது பத்து உருபாப் பிச்சைக்காசுக்கு நாள் முழுக்க வேலை வாங்கிவிடுகிறார் (உ.வ.).

*[பிச்சை + காசு]*

**பிச்சைக்காய்** *piccaikkāy,* பெ. (n) தட்பூசணி (குருப்பூசணி); water melon.

**மறுவ.** தண்ணீர்ப்பழம்

*[பச்சைக்காய் → பிச்சைக்காய்]*

தட்பூசணி உள்ளே செந்நிறமாய் இருப்பினும் அதன் புறத்தோற்றம் பச்சையாய் இருத்தலின் அது பச்சைக்காய் எனப்பட்டது.

ஒ.நோ: பச்சைவாழைப்பழம்.



**பிச்சைக்காரன்** *piccai-k-kāran,* பெ. (n) இரப்போன்; beggar, mendicant.

*[பிச்சை + காரன்]*

**பிச்சைக்காரி** *piccai-k-kāri,* பெ. (n) இரந்து பிழைப்பவள்; feminine of beggar.

*[பிச்சை + காரி. காரன் (ஆ.பா) – காரி (பெ.பா.)]*



**பிச்சைச்சட்டி** *piccai-c-caṭṭi,* பெ. (n) இரப்போர் கலம்; begging bowl. '*பிச்சைசட்டியில் சனியன் புகுந்தாற்போல்.*'

*[பிச்சை + சட்டி.]*

**பிச்சைச்சோறு** *piccai-c-cōṟu,* பெ. (n) கைப்பிடி அளவான உணவு(பிடியன்னம்) (இ.வ.); handful of food.

*[புல் → பில் → பிள் → பிட்டு = சிறியது. பிள் → பிசு → பிசுக்கு = சிறுதுண்டு (மு.தா.130). பிசு → பிச்சை = சிறியது, கைப்பிடியளவு. சொல் = பொன்போற் பொலிவும் கூலமாகிய நெல். சொல் → சொன்றி → சோறு.]*

**பிச்சைத்தனம்** *piccai-t-taṉam,* பெ. (n.) 1. இரக்குங்குணம் (வின்.); mendicancy. 2. இழிகுணம் (வின்.); meanness, beggarliness. 3. வறுமை(வின்.); poverty,indigence.

*[பிச்சை + தனம்]*

**பிச்சைத்தேவன்** *piccai-t-tēvaṉ,* பெ. (n.) சிவபெருமான் (இ.வ.); Sivaṉ as mendicant.

*[பிச்சை + தேவன்]*

**பிச்சைநோவு** *piccai-nōvu,* பெ. (n.) கால்நடை நோய் (வியாதி) வகை (கால்.வி.); rinder - pest, cattle plague.

**பிச்சைப்படி** *piccai-p-paḍi,* பெ. (n.) சிறு படிவகை (வின்.); a small - sized measure.

*[பிச்சை + படி. புல் → (பில்) → பின் → பின்னி = மிகச்சிறியது. நன்னி பின்னி என்பது தஞ்சை வழக்கு. புல் → பில் → பிள் → பிட்டு = சிறியது. பிள் → பிசு → பிசுக்கு = சிறுதுண்டு (மு.தா.130) பிசு → பிச்சை = சிறியது. புள் → (பள்) → படு . படுதல் = தொடுதல், பொருந்துதல், ஒத்தல். படு → படி = ஒத்த அளவு, அளவு, முகத்தலளவு கருவி. (மு.தா. 202)]*

**பிச்சைப்பாத்திரம்** *piccai-p-pāttiram,* பெ. (n.) *பிச்சைச் சட்டி* பார்க்க; see *piccai-c-caṭṭi.*

*[பிச்சை + பாத்திரம்]*

Skt. *pātra* > த. *பாத்திரம்.*

**பிச்சையரிசி** *piccai-y-ariśi,* பெ. (n.) பூணூல் திருமணத்தில் பூணூல் அணிந்ததும் மாணி (பிரமசாரி)க்கு நன்மங்கலி பிச்சையாக அளிக்கும் அரிசி; rice offered by a married woman to a Brahmin bachelor just after the investiture of the sacred thread.

*[பிச்சை + அரிசி.]*

**பிச்சையெடு-த்தல்** *piccai-y-eḍu,* 4 செ.கு.வி. (v.i.) இரந்து பெறுதல்; to beg. குழந்தைகளையும் பிச்சை யெடுக்க பயன்படுத்தும் கூட்டம் நாட்டில் இருக்கிறது.

க. பிக்கெ பேடு; பட. பிச்செ எத்து.

*[பிச்சை + எடு-,]*

**பிச்சையோடு** *piccai-y-ōḍu,* பெ. (n.) இரப்போர் கலம்; begging bowl.

*[பிச்சை + ஒடு]*

**பிச்சைவாரி** *piccai-vāri,* பெ. (n) நெல்வகை(செங்கை.); a kind of paddy.

**பிசக்கு¹–தல்** *pišakku-,* 5 செ. குன்றாவி. (v.t.) **1.** அழுக்காக்குதல்(யாழ்ப்.); to soil. **2.** கசக்குதல்; to press between the fingers, squeeze, crush. '*பிசக்கி மோந்த தித்தனை யொழிய*' (திவ். திருநெடுந். 21, வ்யா. 163.).

க.பிசுகு, பிசுங்கு, கிதுகு, கிசகு, கிசிகு, கிசுகு; **தெ.** பிதுகு, பிசுகு; **பட.** பிசுகு

*[பிசங்கு → பிசக்கு–,]*

**பிசக்கு²** *pišakku,* பெ. (n.) *பிசகு 1, 2* (வின்.) பார்க்க; see *pišagu 1, 2.*

*[பிசகு → பிசக்கு–,]*

**பிசகடி** *pišagaḍi,* பெ. (n.) *பிசகு 4* (சங்.அக.) பார்க்க; see *pišagu.4*

*[பிசகு + அடி]*

**பிசகு¹ – தல்** *pišagu-,* 5 செ.கு.வி. (v.i.) **1.** தவறுதல்; to fail, err, blunder. '*கணை பிசகாத படி தொடுக்கிறேன்*' (இராமநா. கிஷ்கிந்'.5.). **2.** உறுப்புப் பிறழ்தல்; to be dislocated as a joint; to sprain. '*மூட்டையை வண்டியில் ஏற்றியபோது தோள்பட்டை பிசகிவிட்டது*' (உ.வ.). **3.** வழுக்கி விழுதல் (வின்.); to make a false step, trip. **4.** தடைப்படுதல் (வின்.); to be hindered.

**கோத.** பெச்க் (தவறு); **கொலா.** பெக் (தவறு)

*[புள் → பிள். பிள்ளுதல் = பிளத்தல், துண்டுபடுதல், வேறுபடுதல். புள் → பிள் → பிய் → பியகு → பிசகு.]*

**பிசகு²–தல்** *pišagu-,* **5.** செ.கு.வி. (v.i.) (பாட்டில்) ஓசைஒழுங்கு விலகி மாற்றம் அடைதல்; to miss a note or beat.

*[பிய → பியகு → பிசகு]*

**பிசகு³** *pišagu,* பெ. (n.) **1.** தவறு; failure, mistake, error, blunder, slip. 'ஏது கழிவு பிசகேதென்ன' (பணவிடு. 169.). **2.** ஒவ்வாமை (வின்.); variance, deviation. **3.** இடையூறு (வின்.); hindrance embarrassment. **4.** தடை (வின்.); objection.

*[பிய → பியகு → பிசகு]*

**பிசகு⁴** *pišagu,* பெ. (n.) ஒழுங்கைக் குலைக்கும் மாற்றம்; alteration; deviation. தாளப்பிசகு.

*[பிய → பியகு → பிசகு]*

**பிசகுசொல்(லு)–தல்** *pišagu-šol(lu)-,* 8 செ.குன்றாவி. (v.t.) **1.** தடைநிகழ்த்துதல் (வின்.); to take objection; to challenge. **2.** குற்றங்கூறுதல்; to find fault with, point out defects.

*[பிசகு + சொல்–,]*

**பிசகுநாறு–தல்** *pišagu-nāṟu-,* 5 செ.கு.வி. (v.i.) கேடுறுதல்; to be spoiled, damaged. '*கைதொட்டால் பிசகு நாறாதே இருக்கும்*' (திவ். திருமாலை. 17, வ்யா. பக்.66.).

*[பிசகு + நாறு–,]*

**பிசங்கதை** *piśaṅgadai,* பெ. (n.) வெண்மை; whiteness.

*[புல் → பல் → பால் → வெண்மை. புல் → பில் → பியல் → பிசல் → பிசம் = வெண்மை. பிசம் → பிசங்கதை]*

**பிசங்கம்** *piśaṅgam,* பெ. (n.) பொன்மை கலந்த சிவப்பு; yellowish red or tawny colour.

*[பிசம் → பிசங்கம் ]*

**பிசங்கல்** *piśaṅgal ,* பெ. (n.) *பிசங்கற்சீலை* (யாழ்ப்.) பார்க்க; see *piśaṅgaṟcilai.*

*[பிசங்கு → பிசங்கல். 'அல்'. தொ.பெ.ஈறு]*

**பிசங்கற்சீலை** *piśaṅgaṟ-cilai,* பெ. (n.). அழுக்கடைந்த ஆடை (யாழ்ப்.); soiled, dirty cloth.

*[பிசங்கல் + சீலை. பிசங்கு + அல். 'அல்' தொ.பெ.ஈறு. சீரை → சீலை]*

**பிசங்கு–தல்** *piśaṅgu-,* 9 செ.குன்றாவி. (v.t.) அழுக்காதல் (யாழ்ப்.); to become dirty; to be soiled.

மறுவ. பண்டியாதல்

*[பிசகு → பிசங்கு–, ]*

**பிசண்டம்** *piśaṇḍam,* பெ. (n.) **1.** விலங்கின் முதுகு; the back of a beast. **2.** வயிறு(வின்.); stomach.

*[ பின் → (பில்) → பிள் → பியல் =பிடர். பியல் → பிசல் =பின்புறம், திமில். பிசல்→ பிசள் → பிசண்டம் ]*

**பிசண்டிலன்** *piśaṇḍilaṉ,* பெ. (n.) பெருவயிறு படைத்தவன் (சங்.அக.); pot-bellied person.

*[பிசண்டம் → பிசண்டிலன்]*

**பிசம்**[1] *piśam,* பெ. (n.) தாமரைத் தண்டு (பிங்.); fiber of the lotus, lotus-stalk.

**பிசம்**[2] *piśam,* பெ. (n.) வெண்மை; whiteness.

*[ உல் → எல் → எலும்பு → என்பு. புல் → பல் → பால் =வெண்மை. புல் → பில் → பியல் → பிசல் → பிசம் ]*

**பிசம்**[3] *piśam,* பெ. (n.) இறகு (சது.); feather, wing.

*[புள் → பிள் → பிய் → பியம் → பிசம்]*

**பிசல்** *piśal,* பெ. (n.) **1.** பிடர் (வின்.); nape of the neck. **2.** எருது முதலியவற்றின் திமில் (வின்.); hump as of an ox. **3.** தோள்; shoulder. '*மயிரெழுந்த பிசல்களும்*' (ஈடு. 3, 4, 5.) .

*[பின் → (பில்) → பிள் → பியல் = பிடர். பியல் → பிசல் = தலையின் பின்புறம், திமில், தோள்]*

**பிசவருத்தம்** *piśavaruttam,* பெ. (n.) அழற்சியினால், கண்ணினது மேல் பட்டையில் வீக்கமேற்பட்டு, நீர் வடிந்துகொண்டிருக்குமோர் கண்ணோய்; an inflammatory swelling of the eye lid dotted with minute punctures which fluid oozes out.

*[ பிசம் + வருத்தம். பீளை → பீளம்→ பிளம் → பியம் → பிசம் ]*

**பிசறிவை—த்தல்** *pišari-vai-,* 4 செ.கு.வி. (v.i.) ஒரு பொருளுடன் மற்றொரு பொருளைக் கிளறி வைத்தல்; to mix. மாட்டுக்குத் தவிடும் பிண்ணாக்கும் போட்டுப் பிசறி வைத்திருக் கிறேன் (உ.வ.).

*[புல் → (பில்) → பிள் → பிய் → பியர் → பிசறு. பிள் → பியை → பிசை. பிசறு → பிசறி + வை. 'வை' து.வி.]*

**பிசறு—தல்** *pišaru -,* 5 செ.குன்றாவி. (v.t.) கலத்தல்; to mingle, mix with the hand.

*[புல் → (பொல்) → பொரு → பொருந் → பொருந்து. புள் → பிள் → விள். விள்ளுதல் = கலத்தல், விரும்புதல் (மு.தா.166, 167). புள் → பிள் → பிய → பிச → பிசறு—,]*

**பிசனம்** *pišanam,* பெ. (n.) செஞ்சந்தனம் (மலை.); red sanders.

**பிசனமம்** *pišanamam,* பெ. (n.) காட்டுப் பழுபாகல்; wild bitter gourd.

**பிசாகம்** *pišāgam,* பெ. (n.) மலைநெல்; mountain paddy.

**பிசாசக்கை** *pišāša-k-kai,* பெ. (n.) இணையாவினைக்கை வகை (சிலப். 3, 18, உரை); (nātya.) a hand-pose.

*[பிசாசம் + கை]*

**பிசாசடித்தல்** *pišāšaḍittal,* பெ. (n.) பேயால் தாக்கப் படுகை; being attacked by a devil.

**மறுவ.** பேயடித்தல், ஆவியடித்தல்

*[பிசாசு + அடித்தல்]*

**பிசாசப்பிரியம்** *pišāsappiriyam,* பெ. (n.) வேம்பு (மலை.); margosa.

**மறுவ.** கடிப்பகை

*[பிசாசம் + பிரியம். புரியம் → பிரியம். பேய் விரும்பிக்குடிகொண்டிருப்பதாகக் கருதப்படும் வேப்ப மரம்]*

**பிசாசம்** *pišāšam,* பெ. (n.) 1. *பிசாசு* (சூடா.) பார்க்க; see *pišāšu.* 2. பேய்க்கரும்பு (மலை.); kaus. 3. *பிசாசக்கை* (சிலப். 3, 18, உரை) பார்க்க; see *pišāša-k-kai.*

**தெ.** பிசாசமு.

*[பிசாசு → பிசாசம் = பேய், கரும்பு போல் சாயல் கொண்ட செடி.]*

**பிசாசர்** *pišāšar,* பெ. (n.) பதினெண்கணத்துள் ஒரு சாரார்; a class of supernatural beings, one of padinen-kaṇam. q.v. '*இயக்கர் விச்சாதரர் பிசாசர்*' (திருவாலவா. 6, 2.).

*[பிசாசு → பிசாசர்; 'அர்' ப.பா.ஈறு]*

**பிசாசன்** *pišāšan,* பெ. (n.) 1. பேய் பிடித்தவன்; one possessed by an evil spirit. 2. தீக்குணமுள்ளவன்; person of an evil disposition.

*[பிசாசு → பிசாசன்.]*

**பிசாசாடு—தல்** *pišāšāḍu-,* 5 செ.கு.வி. (v.i.) பேய்பிடித்தாடுதல்; to be possessed by a devil.

*[பிசாசு + ஆடு—,]*

**பிசாசி¹** *piśāśi,* பெ. (n.) சடாமாஞ்சி (மலை.); spikenard.

**பிசாசி²** *piśāśi,* பெ. (n.) பெண்பேய்; a she - demon. **2.** ஆண் பெண்வேறுபாடு இல்லாத ஆவி.; a male, female or neuter spirit.

**தெ.** பிசாசி

*[ பிசாசு → பிசாசி. ]*

**பிசாசு** *piśāśu,* பெ. (n.) பேய் (பிங்.); devil, goblin, spirit of malevolent character.

*[ பிள் → பிண் → பிணம் = கட்டுவிட்ட (decomposed) சவம் ( வே.க.3,113 ) பிள் → பியம் → பிசம் → பிசசு → பிசாசு = பிணத்தினின்று உருவாவதாகக் கருதப்படுவது, பேய். ]*

வேதத்தில் அசுரர், அரக்கர் ஆகியோருடன் ஒருங்குவைத்து குறிக்கப்பட்ட ஒரு பிரிவினர் என்றும் புலாலை விரும்பியுண்பவர்கள் அல்லது மஞ்சள் நிறமானவர்கள் என்னும் அடிப்படையில் பெயர் பெற்றிருக்கலாம் என்றும் சதுப்புநிலத்தில் எரியும் ஒளியை உருவகஞ் செய்யும் அடிப்படையில் தோன்றியிருக்கலாம் என்றும் மா.வி. அகரமுதலி குறிக்கிறது. புலால் உண்ணுதல் என்பது ஒரு வகுப்பாரை இப்பிரிவினராகக் கருதியபின் அவர்களது பழக்கமான புலால் உண்ணுதலை அப்பிரிவினர்க்குரிய பெயர்க்காரணமாகக் கொள்ளப்பட்டுள்ளதும் அதேபோல் அப்பிரிவினரின் நிறம் பெயர்க் கரணியத்திற்குக் கொள்ளப்பட்டுள்ளதும் வழிப்பொருள்களே அன்றி மூலக் கரணியங்களாக அமையா. சில மொழிகளை இழிந்தன எனக்குறிக்க பைசாசபாஷா எனக்குறிக்கப்படுவது இதனுடன் பொருத்திக்காணத்தக்கது. இறந்தவரின் ஆவியே பிசாசாகிறது எனக் கொள்வதே இச்சொல்லின் வேர்ப் பொருளாக அமைவதன் பொருத்தத்தைக் காணலாம்.

piśāci, pēshi, a she-demon, D.piṇa, pēne, pēy, pēyi, pē, pētu and hēde. For Sk. piyu, injurious as an Asura and phi, anger, passion;a wicked man, (KKED. xxlx)

**பிசாசுபிடித்தல்** *piśāśu-piḍittal,* பெ. (n.) **1.** பேய்க்கோட்படுகை; being possessed by a devil. **2.** பேய்க்கு இருப்பிடமாகை; being haunted. '*பிசாசு பிடித்த நிலம்*' (G, Madu. D.I, 87.).

*[ பிசாசு + பிடித்தல் ]*

**பிசாடி** *piśāḍi,* பெ. (n.) *பிச்சாடி* பார்க்க (வின்.) see *piccāḍi.*

*[பிச்சாடி → பிசாடி]*

**பிசாரம்** *piśāram,* பெ. (n.) *பிசாசப் பிரியம்* (சங். அக.) பார்க்க; see *piśāśa-p-piriyam.*

*[பிசாசப்பிரியம் → பிசாரம்]*

**பிசாவப்பிரியம்** *piśāvappiriyam,* பெ. (n.) *பிசாசப் பிரியம்* (சங்.அக.) பார்க்க; see *piśāśa-p-piriyam.*

*[பிசாசப்பிரியம் → பிசாவப்பிரியம்]*

**பிசான்** *piśāṉ,* பெ. (n.) பிசுபிசுப்பு (யாழ்ப்.); matted condition, stickiness, as of hair.

*[பிசு → பிசுபிசுத்தல் = பசைத் தன்மையாதல். பிசு → பிசான்]*

**பிசானம்** *piśāṉam,* பெ. (n.) **1.** பசான் (இ.வ.); a kind of paddy. **2.** சுறவம்(தை), கும்பம் (மாசி) மாதங்களாகிய அறுவடைக் காலம்; a season of harvest about the period between February and March.

**தெ.** பிசானமு

*[பசான் → பசானம் → பிசானம்]*

**பிசி**¹ *piśi,* பெ. (n.) **1.** பொய்; falsehood. **2.** உவமேயத்தை உவமானப் பொருளால் குறிப்பித்துக் கூறுவது (தொல். பொ. 488.); a kind of enigma in which an object is indicated by description of something resembling it. **3.** கேட்போர் அல்லது படிப்போர் விடையிறுக்கும் வகையில் மறைச் செய்தியை, விளக்கும் குறிப்புகளடங்கிய சொற்றொடர் அல்லது சிறுசெய்யுள், விடுகதை, பிதிர்; riddle, enigma, puzzle. '*பிசியு நொடியும் பிறர்வாய்க் கேட்டு*' (மணிமே. 22, 62.).

**க.** புசி

*[புள் → பிள் → பிய் → (பியி) → பிசி = பிய்ப்பது போல் விடுக்கும் விடுகதை, வினாவை விடுவித்ததற்காக, ஒன்றை பெற மற்றொன்றை விடுவிப்பது, ஒன்றுக்காக மற்றொன்றைச் சொல்வது (பொய்). பிள் → பிடு → பிது → பிதிர் = விடுகதை (மு.தா. 262) 'பிதிர்' பார்க்க.]*

*எ-டு: அப்பன் சொறியன், ஆத்தாள் சடைச்சி, பிள்ளைகள் சருக்கரைக் கட்டிகள்.- விடை: பலாப்பழம்.*

**பிசி**² *piśi,* பெ. (n.) சோறு (பிங்.); boiled rice.

*[புள் → புழு → புகு → புகா = சோறு. புகா → புகவு = உணவு. புள் → புசி → பொசி. பொசித்தல் = உண்ணுதல். (மு.தொ. 289) புள் → புசி → பிசி]*

**த.** பிசி > Skt. bhissā

*மா.வி. அகரமுதலி இச் சொற்கு வேர் மூலம் எதுவும் காட்டவில்லை.*

**பிசி**³ *piśi,* பெ. (n.) பொன்; gold.

*[புல் → (பூல்) → பூ = பொலிவு, அழகு, மலர். புல் → பில் → பிள் → பியி → பிசி.]*

**பிசிண்டம்** *piśiṇḍam,* பெ. (n.) *பிசண்டம்* பார்க்க; see *piśaṇḍam.*

*[பிசண்டம் → பிசிண்டம்]*

**பிசிதத்துளிர்** *piśida-t-tuḷir,* பெ. (n.) வேப்பங்கொழுந்து; the tender leaves of neem tree.

*[பிசதம் + துளிர்]*

**பிசிதம்**¹ *piśidam,* பெ. (n.) சதகுப்பை; a drug, the dillor sowa.

**பிசிதம்**² *piśidam,* பெ. (n.) இறைச்சி; flesh, meat. '*பிசிதமுண்டுழலும்*' (கம்பரா. நாகபா. 97.).

**தெ.** பிச்சு (கொழுப்பு, பசை)

*[பிசாசம் → பிசாதம் → பிசிதம்]*

**பிசிதம்**³ *piśidam,* பெ. (n.) **1.** வேம்பு(பிங்.); margosa. **2.** மலைவேம்பு (வின்.); Persian lilac.

*[பிசு → பிசுதம் → பிசிதம்]*

**பிசிதம்**⁴ *piśidam,* பெ. (n.) **1.** நீறு (சாம்பல்) (பிங்.); ashes. **2.** திருநீறு (விபூதி); sacred ashes.

**பிசிதவூணர்** *pišida-v-ūṇar*, பெ. (n.) ஊன்தின்போர், அரக்கர் (சூடா.); Rāksasas believed to live on flesh.

*[ பிசிதம் + ஊணர் . ஊண் → ஊணர். ]*

**பிசிதாசனார்** *pišidāšaṉār*, பெ. (n.) *பிசதவூணர்* (திவா.) பார்க்க; see *pišida-v-ūṇar*.

**மறுவ.** அரக்கன்

*[ பிசிதவூணர் → பிசதாணர் → பிசிதாசனர் ]*

**பிசிதாசி** *pišidāši*, பெ. (n.) ஊனுண்ணி(புதுவை.); flesh eater.

*[ பிசிதவூணர் → பிசிதாணர் → பிசிதாசனர் → பிசிதாசி ]*

**பிசிபடுமொழி** *piši-paḍu-moḻi*, பெ. (n.) செய்யுட்குற்றங்களுளொன்று (யாப்.வி. 523,525); (poet.) a defect in versification.

*[பிசி + படு + மொழி ]*

**பிசிர்[1]–தல்** *pišir-*, 3 செ.கு.வி. (v.i.) சிதறுதல்; to drizzle, sprinkle, as rain. *'அவ்வில் பிசிர'* (பதிற்றுப். 50,6)

**ம.** பிதர் (மழை); **து.** பிசுனி (ஒழுகுதல்)

*[ புள் → புரு → பிரு → பிருக்கு = சிறியது, சிறுதுண்டு. பிஞ்சும் பிருக்கும் என்பது வழக்கு. பிள் → பிட்டு = சிறியது. பிள் → பிசு → பிசுக்கு = சிறுதுண்டு (மு.தா.130) பிள் → பிசு → பிசுர் → பிசிர். பிசிர்தல் = துண்டு துண்டாக, துளிதுளியாகச் சிதறுதல் ]*

**பிசிர்[2]** *pišir-*, பெ. (n.) 1. நீர்த்துளி; rain drop, spray. *"வான் பிசிர்க்கருவியின்"* (ஐங்குறு. 461) 2. ஊற்றுநீர்; spring water. *'மலிரும் பிசிர்போல'* (பரிபா.6,83)

**ம.** பிதர்(மழை); து.பிசிபிசி (ஊறுதல்), பிசுனி (ஊறுதல், வடிதல்), பிசுனி (ஊறுதல்)

*[பிது → பிதுங்கு. பிதுங்குதல் = உள்ளீடு வெளிப்படுதல், பிதுங்குதல். பிது → பிசு → பிசி → பிசிர் → பிசிர்தல் = துளியாகச்சிதறுதல் (வே.க.3.112) ]*

**பிசிர்[3]** *pišir-*, பெ. (n.) 1. சிம்பு; fibre. *'பிசிரொடு சுடு கிழங்கு நுகர்'* (புறநா. 225) 2. ஆடை முதலியவற்றிலெழும் சிம்பு(இ.வ.); frayed end of clothes.

**தெ.** பீசு (செடிகளின் நார்ப்பகுதி)

*[ பிள் → பிசு → பிசுர் → பிசிர் ]*

**பிசிர்தட்டு–தல்** *pišir-taṭṭu-*, 5 செ.கு.வி (v.i) 1. அடிப்படை (பண்ணோடு) இசையோடு இணையாமல், வாய்ப்பாட்டு அல்லது இசைக்கருவியிலே படும் ஏற்ற இறக்கம்; discordant note. பாடகரின் குரலில் பிசிர் தட்டியது, 2. மாழை அல்லது மர வேலைப் பாட்டில் போதிய மென்மை வராதபோது காணப்படும் சிறு சொரசொரப்பு அல்லது சிறாம்பு; frayed end,rough end.

*[ பிசிர் + தட்டு–. துள் → தள் → தட்டு .]*

**பிசிராந்தையார்** *piširāndaiyār*, பெ. (n.) குமரி முனைக்கு அருகிலிருந்த பிசிரென்னும் ஊரில் வாழ்ந்த பெருஞ்செல்வர்; a wealthy man who lived in Pišir village, near Capekumari.

*[ பிசிர் +ஆந்தையார். கோப்பெருஞ் சோழனின் ஆருயிர் நண்பராய்த் திகழ்ந்து,*

*அவனுடன் வடக்கிருந்து உயிர் துறந்தவர். அகம்.308, புறம்.67,184,191,212, நற்றிணை 91 ஆம் எண்ணுள்ள பாக்களைப்பாடியவர். ஆதன் + தந்தை – ஆந்தை. 'ஆர்' உயர்வுப் பன்மையீறு.]*

**பிசில்** *pišil,* பெ. (n.) *பிசி²* (அக.நி.) பார்க்க; see *piši².*

*[பிசி → பிசில் ]*

**பிசிறு–தல்** *pišiṟu-,* 5 செ.குன்றாவி. (v.t) *பிசறு–தல்* (இ.வ.) பார்க்க; see *pišaṟu-,*

*[பிசறு → பிசிறு]*

**பிசிறுலாடு** *pišiṟu-lāḍu,* பெ. (n.) பயற்றுமாவும் சருக்கரையும் கலந்து செய்யும்இனிப்புருண்டை(இவ); a ball of sweetmeat, made of sugar and greengram flour.

*[பயறு + லாடு – பயறுலாடு → பசறுலாடு → பிசிறுலாடு]*

U.lāḍu > த. லாடு

**பிசின்** *pišiṉ,* பெ. (n.) 1. வெட்டுக் குருத்து; (திவா.); saplings of a lopped tree. 2. பிரம்பு. (பிங்.); rattan palm. 3. மரத்திலிருந்து வடிந்து உறைந்த பால் (கொ.வ.); gum, exudation from certain trees. 4. சுறாலை (சாம்பிராணி) (யாழ். அக.); benzoin. 5. ஒட்டுகை (வின்.); stickiness, viscousness. 6. பஞ்சி நூல்(வின்.); cotton thread.

*['பிசுபிசு' பசைத்தன்மையாதலை உணர்த்தும் ஒலிக் குறிப்புச் சொல். பிசு → பிசின் = பசைத்தன்மை, பசைத்தன்மையுள்ள மரப்பால்]*

**பிசின்காபிகம்** *pišiṉ-kābigam,* பெ. (n.) விளாம்பிசின்; resin of wood apple tree.

**பிசின்தூள்** *pišiṉtūḷ,* பெ. (n.) வேலம்பிசின்; gum acacia.

*[ பிசின் + தூள் ]*

**பிசின்பட்டை** *pišiṉ-paṭṭai,* பெ. (n.) 1. மரவகை;common tallow laurel. 2. மரவகை (பதார்த்த. 998.); common grey mango laurel.

*[பிசின் + பட்டை]*

**பிசின்போலரை–த்தல்** *pišiṉpōlarai-,* 4 செ.குன்றாவி. (v.t.) நன்றாக மசித்து அரைத்தல்; to grind well.

மறுவ. மைபோலரைத்தல்.

*[பிசின் + போல் + அரை –. அர் → அரை]*

**பிசினம்** *pišiṉam* பெ. (n.) 1. *பிசுனம்* (பிங்.)1 பார்க்க; see *pišuṉam*1,2. *பிசுனம்* 2. (வின்.) பார்க்க; see *pišuṉam.* 2

*[ பிசுனம் → பிசினம் ]*

**பிசினரக்கு** *pišiṉ-arakku,* பெ. (n.) செவ்வரக்கு; red lac.

*[பிசின் + அரக்கு. அல் → அர் → அரம் = சிவப்பு. அரம் → அரன் = சிவன். அர் → அர → அரகு → அரக்கு = சிவப்பு, சிவந்த பொருள்]*

**பிசினரிசி** *pišiṉ-arisi,* பெ. (n.) 1. அசாம் நாட்டிலிருந்து வரும் பசையுள்ள செந்நிறவரிசி (வின்.); a kind of glutinous reddish rice, said

to be imported from Assam. **2.** சவ்வரிசி (வின்.); sago.

*[பிசின் + அரிசி. அரி = சிறியது. அரி → அரிசி]*

**பிசினன்** *piśiṉaṉ,* பெ. (n.) *பிசினாரி* (இட.வ.) பார்க்க; see *piśiṉāri.*

**த.** பிசினன் > Skt. piśuna

*[ பிசுனன் → பிசினன் ]*

**பிசினாறி** *piśiṉāṟi,* பெ. (n.) இவறன் (உலோபி) (வின்.); miser.

**தெ.** பிசினாரி.

*[ பிசு → பிசுகு. பிசுகுதல் = கஞ்சத்தனம் பண்ணுதல். பிசுனாரி → பிசுனாறி → பிசினாறி ]*

**பிசினி**[1] *piśiṉi,* பெ. (n.) இவறன் (உலோபி) (வின்.); niggard. **2.** இவறற்றன்மை (உலோபம்) (வின்.); miserliness, niggardliness. **3.** கோட் சொல்லுவோன் (யாழ்.அக.); tale - bearer.

**தெ.** பிசினி

*[ பிசு → பிசுனன் → பிசுனி ]*

**பிசினி**[2] *piśiṉi,* பெ. (n.) **1.** ஈரப்பற்றுள்ள மேட்டு நன்செய், புன்செய் நிலங்களில் விதைக்கப் படுவதும் நாலுமாதங்களில் விளைவதுமான நெல்வகை; a kind of paddy raised with seed sown dry on high level naṉcey lands and on puṉcey lands having some moisture and maturing in four months. **2.** *பிசின்* **1** (யாழ்.அக.) பார்க்க; see *piśiṉ-1*

*[ பிது → பிசு → பிசிர் = நீர்த்துளி, ஊற்றுநீர். பிசிர்தல் = துளியாகச் சிதறுதல் (வே.க.3,112) பிசிர் → பிசின் → பிசினி = ஈரப்பற்றுள்ள நிலத்தில் வளர்வது ]*

**பிசினேறி**[1] *piśiṉēṟi,* பெ. (n.) *பிசினாறி* (யாழ்.அக.) பார்க்க; see *piśiṉāṟi.*

*[பிசினாறி → பிசினேறி.]*

**பிசினேறி**[2] *piśiṉēṟi,* பெ. (n.) மரவகை. (சங்.அக.); a kind of tree.

*[பிசின் + ஏறி. ஏறு → ஏறி.]*

**பிசு** *piśu,* பெ. (n.) **1.** பருத்தி (மலை.); Indian cotton plant. **2.** குட்ட நோய் வகை (சாரங்க. 228); a kind of leprosy. **3.** 400 பலங்கொண்ட எடுத்தலளவை (வின்.); a measure of weight = 400 palam.

**த.** பிசு > Skt. picu

*[ பிது → பிசு → பிசிர் = நீர்த்துளி, ஊற்றுநீர். பிசிர்தல் = துளியாகச் சிதறுதல் (வே.க.3,112) பிது → பிசு = பிசிர் போன்றது, மென்மையானது. மா.வி. அகரமுதலி 'picu' வுக்கு வேர் காட்டவில்லை ]*

**பிசுக்கர்** *piśukkar,* பெ. (n.) தாழ்ந்த குணமுடையார் (அற்பர்.); meanminded persons. "*பேதவாதப் பிசுக்கரை*" (திருவிசைப். திருமாளி. 4, 5.).

**மறுவ.** புல்லர்.

*[பிசுக்கு → பிசுக்கர்.]*

**பிசுக்காரம்** *piśukkāram,* பெ. (n.) பெருமிதம்; (இ.வ.); assumption of superior airs.

*[பிசுக்கு → பிசுக்காரம்.]*

**பிசுக்கி** *pišukki,* பெ. (n.) சிறியோன்; mean minded person. போடா பிசுக்கி (உ.வ.).

**மறுவ.** புல்லன், சிறுமகன்.

*[பிசு → பிசுகு → பிசுக்கு → பிசுக்கி. (வே.க. 3, 112, 113)]*

**பிசுக்கு**[1] *pišikku,* பெ. (n.) இவறன்மை (உலோபம்); miserliness, niggardliness. 2. பொருள் வாங்கிய பின் சிறிது கூடுதலாகப் போடும் பொருள் (குசர்); extra quantity on a purchase, allowed by a merchant to his customers. 3. பசையுறு பொருள் (இ.வ.); sticky substance.

**மறுவ.** கொசுறு.

*[பிசு → பிசுகு, பிசுகுதல் கடையிற் பண்டம் வாங்கிய பின், மேலும் ஒரு சிறிது விலையின்றிக் கேட்டல், கஞ்சத்தனம் பண்ணுதல். அவர் கால்துட்டுக்குப் பிசுகுகிறான் (உ.வ.) பிசு → பிசுகு → பிசுக்கு (வே.க. 3, 112)]*

**பிசுக்கு**[2] *pišukku,* பெ. (n.) *பீர்க்கு* (யாழ்ப்.) பார்க்க; sponge - gourd.

**பிசுக்கு**[3] *pišukku,* பெ. (n.) பெருமிதம்; superior airs.

*[பிசுகு → பிசுக்கு]*

**பிசுக்குப்பிசுக்கெனல்** *pišukku-p-pišukkenal,* பெ. (n.) *பிசுக்கெனல்* பார்க்க; see *pišukkenal*

*[பிசுக்கு + பிசுக்கு + எனல்]*

**பிசுக்குவியர்வை** *pišukku-viyarvai,* பெ. (n.) ஒட்டுந்தன்மையுள்ள வியர்வை; clammy, perspiration.

*[பிசு → பிசுக்கு + வியர்வை 'கு'. சொ.ஆ.ஈறு. வெய் → வெயர் → வெயர்வை → வியர்வை]*

**பிசுக்கெனல்** *pišukkenal,* பெ. (n.) பசைத் தன்மையாதற் குறிப்பு; expr. signifying stickiness or viscosity.

*[பிசுக்கு + எனல்]*

**பிசுக்கேறு-தல்** *pišukkēru-,* 6 செ.கு.வி. (v.i.) 1. *பிசுக்கொட்டு-தல்* பார்க்க; see *pišukkottu-,* 2. வியர்த்தல்; to perspire.

*[பிசு → பிசுக்கு + ஏறு-]*

**பிசுக்கொட்டல்** *pišukkottal,* பெ. (n.) ஈரப்பசையாதல்; becoming viscous.

*[பிசு → பிசுக்கு + ஒட்டல். ஒட்டு → ஒட்டல். 'அல்' தொ.பெ.ஈறு]*

**பிசுக்கொட்டு-தல்** *pišukkottu-,* 5 செ.கு.வி. (v.i.) ஒட்டுந்தன்மையாதல் (யாழ்.அக.); to be sticky.

*[பிசுக்கு + ஒட்டு-, அள் → அண் → அண்டு → ஒண்டு → ஒட்டு]*

**பிசுக்கொடி** *pišukkodi,* பெ. (n.) கொடிவகை; a kind of hepta pleuram venulosum.

**பிசுகம்** *pišugam,* பெ. (n.) வேலிப்பருத்தி பார்க்க (தைலவ. தைல.); stinking swallow wart.

*[பிசு → பிசுகம்]*

**பிசுகு[1]–தல்** *piśugu-,* 5 செ.கு.வி. (v.t.) தடுமாறுதல்; to sway from side to side, as a must elephant. '**மத்தகஜம்போலே பிசுகிப் பிற்காலித்து வருகிறபடி**' (திவ். திருமாலை 37, வ்யா. 121)

*[பிது → பிசு → பிசிர்.பிசு → பிசுகு (வே.க. 3.112)]*

**பிசுகு[2]–தல்** *piśugu-,* 5 செ.கு.வி. (v.t.) பண்டம் வாங்கிய பின் மேலும் கொஞ்சம் கொடுக்கும்படி கேட்டல். (இக்.வ.); to ask for gratuitous extra on a purchase 2. இவறன்மையாயிருத்தல் (உலோபஞ் செய்தல்); to be niggardly. அவன் தம்பிடிக்குப் பிசுகுகிறான்.

*[பிது → பிசு → பிசிர்.பிசு → பிசுகு (வே.க. 3.112)]*

**பிசுகு[3]–தல்** *piśugu-,* 5 செ.கு.வி. (v.i.) மந்தமாதல்; to be slow; as in gait '**போகாதே பிசுகிச் சுழியா நிற்குறே**' (ஈடு, 1, 4, 6)

*[பிசுபிசு = ஈரப்பசை. பிசு → பிசுகு–,]*

**பிசுணம்** *piśuṇam,* பெ. (n.), செங்கழுநீர்க் கொடி; purple Indian water-lily.

*[பிசுபிசு = ஈரப்பசைக் காட்டும் ஒலி. பிசு → பிசுணம் = நீரில் வளரும் கொடி]*

**பிசுதாலம்** *piśutālam,* பெ. (n.) பிசுதூலம் பார்க்க; see piśutūlam.

*[பிசுதூலம் → பிசுதாலம்]*

**பிசுதூலம்** *piśutūlam,* பெ. (n.), பருத்திச் செடி; cotton plant.

*[பிசு + தூலம்]*

**பிசுதேரிகம்** *piśutērigam,* பெ. (n.), சுனைப்புல்; a kind of grass with numerous hairs.

**பிசுபிசு[1]–த்தல்** *piśupiśu-,* 11 செ.கு.வி. (v.i.), 1. பசைத்தன்மையாதல் (வின்.); to be moist, sticky; to be glutinous, viscous adhesive or oily. 2. மழை தூறிக் கொண்டிருத்தல்(இ.வ.); to drizzle, sprinde

தெ. பிசபிசலாடு, பிசுனு (பசை); து. பிசிபிசி (சகதி), பிசிபிசி (பசைத் தன்மை); பட. பிசிபிசி (அழுகற்குறிப்பு)

*[பிசு + பிசு– பிசுபிசு என்பது பசையுள்ள பொருளைத்தொடும்பொழுது தோன்றும் ஒலி. பிசுபிசு → பிசுபிசுத்தல்]*

**பிசுபிசு[2]–த்தல்** *piśu-piśu-,* 4 செ.கு.வி. (v.i.) போராட்டம், கதவடைப்பு முதலியன எதிர்பார்த்த விளைவினை ஏற்படுத்தாமல் போதல்; to fizzle out. போராட்டம் பிசுபிசுத்தது.

*[பிசு பிசு– ஒலிக்குறிப்புச் சொல் பிசுபிசுத்தல் = பசைத் தன்மை யாதல், விறைப்புக் குன்றிபோதல், எதிர்பார்த்த பயன் விளையாமல் போதல்]*

**பிசுபிசுத்தவன்** *piśupiśuttavaṉ,* பெ. (n.) 1. இவறன்(உலோபி)(வின்.); niggard. 2. மந்தன்; dull, stupid person.

*[பிசு பிசு → பிசுபிசுத்தவன்]*

**பிசுபிசுப்பாதல்** *piśupiśu-p-pādal,* பெ. (n.) ஒட்டுந்தன்மையாதல்; viscid-viscous.

*[பிசுபிசுப்பு + ஆதல்]*

**பிசுபிசுப்பு** *piśupiśuppu,* பெ. (n.) தொட்டால் ஒட்டிக் கொள்ளும் பசைத்தன்மை; stickiness

greasiness. பலாப்பழம் அரிந்ததனால் கையில் ஒரே பிசுபிசுப்பு(உ.வ.).

*[பிசுபிசுத்தல் → பிசுபிசுப்பு. 'பு' தொ.பெ.ஈறு]*

**பிசுபிசெனல்** *pišupišeṉal,* பெ. (n.) 1. ஈரப்பற்றாதற் குறிப்பு; expr: signifying moistness as of a cloth. ஆடை காயாமல் பிசுபிசென்றிருக்கிறது. 2. பசையாதற்குறிப்பு; expr: signifying stickiness. 3. மழை தூறுதற் குறிப்பு; expr: signifying drizzling slightly.

*[பிசுபிசு + எனல்]*

**பிசுமத்தம்** *pišumattam,* பெ. (n.) *பிசுமந்தம் 1* (யாழ்.அக.) பார்க்க; see *pišumandam.1.*

*[பிசுமந்தம் → பிசுமத்தம்]*

**பிசுமந்தச்சூரணம்** *pišumanda-c-cūraṇam,* பெ. (n.) வேப்பிலைக்கட்டி (இ.வ.); a kind of condiment prepared from citran leaves, neem, etc.

*[பிசுமந்தம் + சூரணம்]*

Skt. srūraṇa > த.சூரணம்

**பிசுமந்தம்** *pišumandam,* பெ. (n.) 1. வேம்பு (மலை); margosa. 2. செங்கழுநீர் (மலை.); purple water-lily.

*[பிசு + மந்தம்]*

**பிசுமர்த்தம்** *pišumarttam,* பெ. (n.), *பிசுமந்தம்,1* (சூடா.) பார்க்க; see *pišumandam.* 1

**பிசுலம்** *pišulam,* பெ. (n.), 1. பிஞ்சு; tender fruit. 2. காட்டுப்புன்கு; wild pongamia.

*[பிசு → பிசு → பிசுலம்]*

**பிசுணம்** *pišuṇam,* பெ. (n.) 1, கோட்சொல்லுகை (பிங்.); talkbearing, slander. 2. இவறன்மை (உலோபம்) (வின்.); niggardliness. 3. காக்கை (யாழ்.அக.); crow. 4. குங்குமம் (நானார்த்த. 123.); saffron. 5. மஞ்சள் (யாழ்.அக.); turmeric. 6. பருத்தி (யாழ்.அக.); indian cotton plant.

*த. பிசுணம்* > Skt. pišuna.

*[பிசு → பிசுணம்]*

**பிசுனன்[1]** *pišuṉaṉ,* பெ. (n.), 1. பிசினாறி (சூடா.) பார்க்க; see pišiṉari. 2. இவறன்மை (உலோபம்) (வின்.); niggardliness. 3. பொய்யன். liar.

*[பிசு → பிசுனன்]*

**பிசுனன்[2]** *pišuṉaṉ,* பெ. (n.) 1. குங்குமம் (நாநார்த்த. 123.); saffron. 2. மஞ்சள் (யாழ்.அக.); turmeric. 3. பருத்தி (யாழ்.அக.); Indian cotton plant.

**பிசுனாரி** *pišuṉāri,* பெ. (n.) செல்வம் சேர்க்கும் பொருட்டுத் தேவைகளையும் குறைத்து வாழ்பவன்; miser. அந்தப் பிசுனாரி பகல் உணவு உண்ணமாட்டான் (உ.வ.).

மறுவ. இவறன்மாலையன், கஞ்சன்.

*[பிசு → பிசுகு → பிசுக்கு. பிசு → பிசுனன் → பிசுனாரி. 'ஆரி' ஓர் ஈறு. ஒ.நோ. தலையாரி, பூசாரி. கஞ்சப் பிசுனாரி என்று மேலும் ஒரு அடை கொடுத்து வழங்குவதும் உண்டு]*

**பிசுணாறி** *pišuṇāṟi,* பெ. (n.) *பிசுனாரி* பார்க்க; see *pišuṉāri.*

*[பிசுனாரி → பிசுணாறி]*

**பிசுனி** *piśuṇi,* பெ. (n.), இவறன் (உலோபி) (வின்.); niggard.

*[பிசு → பிசுனன் → பிசுனி]*

**பிசூகம்** *piśūgam,* பெ. (n.) ***பிசுகம்*** (மலை.) பார்க்க; see *piśugam.*

**பிசை–தல்** *piśai-,* 4 செ.குன்றாவி. (v.t.) மா முதலியவற்றைச் சிறிதாக நீர்விட்டுக் கையால் நன்றாகத் துழாவுதல்; to work with the thumb and fingers in mixing, to knead. "***கல்லைப் பிசைந்து கனியாக்கி***" (திருவாச. 8,5) களிமண்ணால் இன்னும் சிறிது நீர் ஊற்றிப் பிசை (உ.வ.). பருப்புச் சோறு பிசைந்து குழந்தைக்கு ஊட்டினாள் (உ.வ.). 2. கையாற் பிசைதல்; to squeeze or mash between the palms; to crush and separate as kernels of grain from the ear. தினையைப் பிசைந்து கூலத்தைப் பிரி (உ.வ.). 3. கசக்குதல்; to rub, as the eyes. "***கண் பிசைந் தொருசே யின்னுங் கலுழினும்***" (பிரபுலிங். கைலாச.). கண்ணோய் சமயத்தில் கண்ணைப் பிசையாதே (உ.வ.). 4. தேய்த்தல்; to rub or apply on the skin, as soap. "***இழைதுகள் பிசைவார்***" (பரிபா. 10, 91). 5. உரசுதல்; to strike against one another, as two bamboo branches moving in the wind. "***ஒலிகழை பிசைந்த***" (அகநா. 39).

**க., தெ.** பிசுகு; **து.** பிசுகுனி, பீசுனி; **பர்.** பீச்; **கட.** பிசுகோல்ப்; **கோண்.** பிசுகானா; **குரு.** பிக்கானா; **கோத.** பிச்க் ; **பட.** பிசகு, பிசுகு.

*[புள் → பொள் → பொளபொள. பொளபொளத்தல் = நெகிழ்தல், ஒழுகுதல். புள் → பிள் → பியை → பிசை. பிசைதல் = நெகிழச் செய்தல், குழைவாக்குதல், அழுத்தித் தேய்த்தல், தேய்த்தல்]*

**பிஞ்சடம்** *piñjaḍam,* பெ. (n.) 1. பீளை; secretion from the eye. 2. பூளைப் பூ; slower of woolly caper.

*[பிஞ்சு → பிஞ்சடம்]*

**பிஞ்சம்**[1] *piñjam,* பெ. (n.) 1. இறகு (சூடா.); feather. 2. மயிற்றோகை; peacock's tail. "***தோகையதன் பிஞ்சம் போற் கூடுவதும்***" (தெய்வீகவுலா, 194). 3. சத்திக் கொடி (மலை.); a kind of creeper.

**க.** பிஞ்சிய, பிஞ்சு, பின்செ, பெஞ்செ, பெஞ்செய.

**த.** பிஞ்சம் > Skt. piñccha.

*[புள் → பிள் → பீள் = இளங்கதிர், இளமை (மு.தா. 39) புள் → (பிள்) → பின் → பின்சு → பிஞ்சு = இளமை யானது, மெலிவானது.]*

**பிஞ்சம்**[2] *piñjam,* பெ. (n.) 1. மூக்கிரட்டை; boerhaavia repens or B. diffusa 2. சத்திசாரணை; a medical herb.

**பிஞ்சாய்ப்பழு–த்தல்** *piñjāy-p-paḻu-,* 4செ.கு.வி. (v.i.) பிஞ்சிற்பழுத்தல் பார்க்க; see piñjiṟpaḻu "***பிஞ்சாய்ப்பழுத்தாளை யாண்டாளை***" (உபதேசரத். 24).

*[பிஞ்சிற்பழுத்தல் → பிஞ்சாய்ப்பழுத்தல்]*

**பிஞ்சிற்பழு–த்தல்** *piñjiṟpaḻu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. இளமையிலேயே முதிர்வடைதல்; to become prematurely mature or old. 2. இளமையில் அறிவு பெருகுதல்; to be precocious.

*[பிஞ்சில் + பழு–. பிஞ்சிற் பழுத்தலை வெம்பல் என்பது உலக வழக்கு]*

**பிஞ்சு** *piñju,* பெ. (n.) **1.** இளங்காய், காயின்தொடக்கநிலை (சூடா.); young, tender fruit. ஆகுங்காய் பிஞ்சிலே தெரியும் (பழ.); **2.** இளமையானது; that which is young and tender. "*மதியின் பிஞ்சைப் புரைநுதலாய்*" (தஞ்சைவா. 420) **3.** அணியின் அரும்புக் கட்டடம்; small bud-shapped work in an ornament. பிஞ்சும் அரக்கும் உட்பட நிறை (S.I.I. ii, 162, 169). **4.** கால்; quarter, one fourth. இணங்கற்பிஞ்சு.

**மா.** பிஞ்சு; **க.** பிஞ்சு, பிஞ்செ; **தெ.** பிந்திய, பிந்தெ.

*[புள் → (பிள்) → பீள் = இளங்கதிர். இளமைப்பூட்டை = இளங்கதிர். பூட்டை → பீட்டை (மு.தா. 39) புள் → (பிள்) → பின் → (பின்சு) → பிஞ்சு]*

காய்நிலைகள் நான்கு: தோன்றிய நிலை பிஞ்சு; சற்றுப்பருத்த நிலை பிருக்கு; முற்றும் பருத்த நிலை காய்; பழுத்த நிலை பழம்.

**பிஞ்சுக்கட்டை** *piñju-k-kaṭṭai,* பெ. (n.) தலையகன்ற தூண் (கட்டட. நாமா.); pilaster.

*[பிஞ்சு + கட்டை. பிஞ்சு = இளமையானது, மெலிவானது, ஒல்லியானது. பிஞ்சுக் கட்டை = தண்டுப்பகுதி சிறுத்துக் காணப்படும் தூண்]*

**பிஞ்சுக்கடுக்கன்** *piñju-k-kaḍukkaṉ,* பெ. (n.) அரும்பு வைத்த கடுக்கன்; a kind of ear ornament.

*[பிஞ்சு + கடுக்கன்]*

**பிஞ்சுக்கடுக்காய்** *piñju-k-kaḍu-k-kāy,* பெ. (n.) இளங்கடுக்காய்; the tender gallnut.

*[பிஞ்சு + கடுக்காய். கடு + காய் – கடுக்காய்]*

**பிஞ்சுக்காட்டுமண்** *piñju-k-kāṭṭumaṇ,* பெ. (n.) மேல்மட்டத்தில் மணற்பாங்காகவும், கீழ்ப்பகுதி களியாகவும் இருக்கும் நிலம்; the soil of sandy layer at top and clay layer at bottom.

*[பிஞ்சு + காட்டு + மண். காடு → காட்டு]*

**பிஞ்சுகம்** *piñjugam,* பெ. (n.) **1.** இறகு; feather. **2.** நாய்பாலைக்கொடி; a creeper.

*[புள் → பிள் → பின் → பின்சு → பிஞ்சு → பிஞ்சுகம்]*

**பிஞ்சுநெல்** *piñjunel,* பெ. (n.) கருக்காய்(வின்.); paddy-husk.

*[பிஞ்சு + நெல். நில் → நெல் = பொன்போல் விளங்கும் கூலம்]*

**பிஞ்சுப்பிறை** *piñju-p-piṟai,* பெ. (n.) இளம்பிறை (வின்.); crescent of the moon.

*[பிஞ்சு + பிறை. புரு → புரி. புரிதல் = வளைதல். புரு → (புறு) → புறை → பிறை = வளைந்த நிலா]*

**பிஞ்சுப்பூ** *piñjuppū,* பெ. (n.) இளஞ்சிறு காயோடு கூடிய மலர்; flower with very tender fruit.

*[பிஞ்சு + பூ. பொல் → பொலி → பொலிவு. பொல் → பூல் → பூ]*

**பிஞ்சுவெள்ளரி** *piñju-veḷḷari,* பெ. (n.) இளம் வெள்ளரிக்காய்; tender cucumber.

*[பிஞ்சு + வெள்ளரி]*

**பிஞ்சுவெள்ளி** *piñjuveḷḷi,* பெ. (n.) கால் உருபா; quarter of a rupee.

*[பிஞ்சு + வெள்ளி]*

**பிஞ்செழுத்து** *piñjeḻuttu,* பெ. (n.) ஐந்தெழுத்தில் (பஞ்சாக்கரத்தில்) ஆற்றலை (சக்தியை)க் குறிக்கும் 'வ' என்னும் எழுத்து; letter 'va' in pañcākkaram denoting Sakti. பிஞ்செழுத்தும் மேலைப் பெருவெழுத்தும் (கொடிக். 4).

*[பிஞ்சு + எழுத்து]*

**பிஞ்சேடம்** *piñjēḍam,* பெ. (n.) *பிஞ்சடம்* பார்க்க; see *piñjaḍam.*

*[பிஞ்சடம் → பிஞ்சேடம்]*

**பிஞ்சை[1]** *piñjai,* பெ. (n.) மஞ்சள் (சங்.அக.); turmeric.

*[பிங்கம் → பிஞ்சம் → பிஞ்சை]*

**பிஞ்சை[2]** *piñjai,* பெ. (n.) *பிஞ்சு 1* (சங்.அக.) பார்க்க; see *piñju 1.*

*[பிஞ்சு → பிஞ்சை]*

**பிஞ்சை[3]** *piñjai,* பெ. (n.) பஞ்சு; cotton.

*[பிஞ்சு → பிஞ்சை]*

**பிஞ்சைக்காடு** *piñjai-k-kāḍu,* பெ. (n.) கரிசற்காடு; black soil tract.

மறுவ. கரிசல்நிலம்

*[பிஞ்சை + காடு. கடு → காடு]*

**பிஞ்ஞகம்** *piññagam,* பெ. (n.) மகளிர் தலைக்கோலம் (பிங்.); ornament worn by women.

*[பிங்குசம் → பிஞ்சுகம் → பிஞ்ஞகம்]*

**பிஞ்ஞகன்** *piññagaṉ,* பெ. (n.) சடையுடைய சிவன்: Sivaṉ with ornamental tuft. பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க (திருவாச.1,7).

*[பிங்குசம் → பிஞ்சுகம் → பிஞ்ஞகம் → பிஞ்ஞகன்]*

**பிட்கு—தல்** *piṭku-,* 5 செ.கு.வி. (v.i.) கத்துதல்; to make noise. "*ஓரி கதித்தெங்கும் பிட்க*" (பதினொ.திருவால. மூத்த. 3).

*[உயிரிகளின் வாயொலிகளல்லாத மற்ற வொலிகளெல்லாம் பொருள்கள் ஒன்றை யொன்று தொடுவதினாலேயே அல்லது தாக்கு வதனாலேயே உண்டாகின்றன. (மு.தா.89). புல் = பொருந்தற்கருத்து வேர் (வேக.க.3,62) புல் → பில் → பிள் → பிட்கு]*

**பிட்சி** *piṭci,* பெ. (n.) இருவாட்சி; a kind of jasmine.

*[பிச்சி → பிட்சி]*

**பிட்டகம்[1]** *piṭṭagam,* பெ. (n.) சிற்றுண்டிவகை (அக.நி.); a kind of pastry.

*[புள் → பொள் → பொட்டு = சிறியது. பிள் → பிட்டு = பிண்டு, உதிரியான சிற்றுண்டி வகை. பிள் → பிட்டு → பிட்டகம்]*

**பிட்டகம்²** *piṭṭagam,* பெ. (n.) 1. பல்லழுக்கு; tooth dirt. 2. வெள்விழியில் வெண் புள்ளிகள் தோன்றும் கண்ணோய் வகை; an eye is covered with white specks or dots.

*[புள் → புழுக்கை → பிழுக்கை. (புள்) → பிள் → (பிய்) → பீ. பிள் → பீள் → பீளை = கண்மலம் (மு.தொ. 262). பிள் → பிட்டு → பிட்டகம்]*

**பிட்டடி-த்தல்** *piṭṭaḍi-,* 4 செ.கு.வி. (v.i.) கால்கள் பிட்டத்திற்படக் குதித்தல்; to jump, kicking heels against posteriors. "*பேய்கள் குறுநரி சென்றணங்காடு கட்டிற் பிட்டடித்து*" (பதினொ. காரைக். மூத்ததிருப். 6).

*[பிட்ட(ம்) + அடி -,]*

**பிட்டநடு** *piṭṭa-naḍu,* பெ. (n.) உடம்பினிடை யிலமைந்த மலவாய்ப் பகுதி; between the buttocks-inter gluteal.

*[பிள் → பிட்டு → பிட்டம் + நடு]*

**பிட்டநோய்** *piṭṭanōy,* பெ. (n.) கண்ணோய் வகை; an eye disease.

*[பிள் → (பீள்) → பீளை. பிள் → பிட்டு → பிட்ட + நோய். கண்மலம் வரும் நோய்]*

**பிட்டம்¹** *piṭṭam,* பெ. (n.) 1. பின்பக்கம். (யாழ்.அக.); hinder part. 2. இடுப்பின் பூட்டு(சீவரட்.4); hip-joint. 3. எருவாயை ஒட்டியிருக்கும் திரண்ட சதைப் பகுதி குண்டி(இ.வ.); buttocks, posteriors. பிட்டத்தில் போடும் ஊசி அதிகமாக வலிக்காது (உ.வ.). 4. முதுகு (யாழ்.அக.); back. 5. பரப்பு (யாழ்.அக.); surface.

*[புள் → புட்டி = குடுவை, குப்பி, குடுவை போன்ற பறவையுடம்பின் பிற்பகுதி. புட்டி → பிட்டி = பிட்டம். புட்டி → புட்டம் = குடுவை போற்புடைத்த மாந்தன் உடம்பின் பின்பக்கம். ஒ.நோ:குண்டு → குண்டி. புட்டம் → பிட்டம். (வ.வ.38)]*

**பிட்டம்²** *piṭṭam,* பெ. (n.) அரைத்தமா (சூடா.); flour.

*[பிள் → பிள → பிட்டு = சிறியது. பிட்டு → பிட்டம் = சிறியதாக, மெல்லியதாக, அரைத்தமா]*

**பிட்டமேகம்** *piṭṭa-mēgam,* பெ. (n.) பால் அல்லது தயிர் போல் சிறுநீர் இறங்கும் மேக நோய்; a disease where in the urine passed is white milky or curdy.

*[பிள் → பிட்டு → பிட்டம் + மேகம்]*

**பிட்டர்** *piṭṭar,* பெ. (n.) ஆடுதின்னாப்பாளை; a bitter creeper.



**பிட்டலை** *piṭṭalai,* பெ. (n.) குழம்புவகை; (கொ.வ.); a kind of curry or sauce. இன்று எங்கள் வீட்டில் பாகக்காய் பிட்டலை.

*[பிட்டு → பிட்டலை]*

**பிட்டவத்தி** *pittavatti*, பெ. (n.) *பிட்டவியல்* (யாழ்.அக.) பார்க்க; see *pittaviyal*.

*[பிட்டு + அவி– பிட்டவி → பிட்டவத்தி]*

**பிட்டவி–த்தல்** *pittavi-*, 4 செ.குன்றாவி. (v.t.) வாயகன்ற சட்டியில் விட்டு, வாய்க்குச் சீலை கட்டி, அதன்மேல் மருந்துச் சரக்கை வைத்துப் பிட்டைப் போல் வேக வைத்தல்; to heat substances in the steam in a special apparatus.

*[பிட்டு + அவி–]*

**பிட்டவித்துப்பிழி–தல்** *pittavittuppili-*, 2 செ.குன்றாவி. (v.t.) பிட்டவி–த்தல் பார்க்க; see pittavi-.

*[பிட்டவித்து + பிழி–,]*

**பிட்டவியல்** *pittaviyal*, பெ. (n.) 1. பிட்டைப் போல் நீராவியால் வேகவைத்தல்; heating substances by steam. 2. நீராவியில் வெந்த பணியார வகை (வின்.); meal-cake, cooked in steam.

*[பிட்டு + அவியல். அவி → அவியல். 'அல்' தொ.பெ.ஈறு]*

**பிட்டாப்பூ** *pittāppū*, பெ. (n.) *பிட்டவியல்* பார்க்க; see *pittaviyal*.

*[பிட்டு + பூ – பிட்டுப்பூ → பிட்டாப்பூ]*

**பிட்டார்முகி** *pittār-mugi*, பெ. (n.) செந்நாயுருவி; red variety of achyranthes aspera.

**பிட்டாவிசெய்–தல்** *pittāvi-šey-*, 1 செ.குன்றாவி. (v.t.) *பிட்டு செய்–தல்* பார்க்க; see *pittu-šey-*.

*[பிட்டு + ஆவி + செய்–,]*

**பிட்டி**[1] *pitti*, பெ. (n.) பருத்திருக்கை (நாமதீப. 79.); plumpness.

*[பிட்டம்= எருவாயைச் சுற்றியிருக்கும் திரண்ட தசைப்பகுதி. பிட்டம் → பிட்டி]*

**பிட்டி**[2] *pitti*, பெ. (n.) 1. சிறு கூடை(வின்.); small basket. 2. குழந்தை நோய்வகை (இ.வ.); croup, a disease of children.

ம. வட்டி; க., தெ., து. புட்டி; கட. புட்டு

*[புள் → புட்டி = உட்டுளையுள்ளது, ஒரு வகைக் கலம், சிறுபடி, குடுவை, குப்பி. (வ.வ.37) புட்டி → பிட்டி = சிறுகூடை]*

**பிட்டி**[3] *pitti*, பெ. (n.) *பிட்டம்*[1] (நெல்லை.) பார்க்க; see *pittam*.

பட. பிட்டி

*[புள் → புட்டி = உட்டுளையுள்ளது, ஒருவகைக் கலம், சிறுபடி, குடுவை, குப்பி, குடுவை போன்ற பறவையுடம்பின் பிற்பகுதி. புட்டி → பிட்டி கொழுத்த கோழிப்புட்டியை நெய்க்குடம் என்று கூறும் வழக்கை நோக்குக (வ.வ. 37, 38)]*

**பிட்டி**[4] *pitti*, பெ. (n.) *பீடு*[2] (இ.வ.) பார்க்க; see *pidu*[2].

**பிட்டிகை** *pittigai*, பெ. (n.) இருவாட்சி மலர்; tuscan jasmine.

*[பித்திகை → பிட்டிகை]*

**பிட்டு** *piṭṭu*, பெ. (n.) **1.** சிற்றுண்டி வகை; a kind of confectionery. *'மதுரையிற் பிட்டமுது செய்தருளி'* (திருவாச. 13,16). **2.** தினைமா (வின்.); millet flour.

**க.** கிட்டு, பிட்டு, இட்டு; **தெ.** பிட்டு; பட.கிட்டு (மாவு, உணவு)

*[புள் → புரு → பிரு → பிருக்கு = சிறியது, சிறுதுண்டு. பிஞ்சும் பிருக்கும் என்பது வழக்கு. புள் → பொள் → பொட்டு = சிறியது, சிற்றளவு. பொள் → பொடி. புள் → பிள் → பிட்டு = சிறியது (மு.தா.130) பிள் → பிட்டு = பிண்டு, உதிரியான சிற்றுண்டி வகை (வே.க.3,113)]*

**பிட்டுக்கருப்பட்டி** *piṭṭu-k-karuppaṭṭi*, பெ. (n.) *பிட்டுக்கருப்புக்கட்டி* பார்க்க; see *piṭṭu-k-karuppu-k-kaṭṭi*

*[பிட்டு + கருப்பட்டி. பிள் → பிட்டு = பிளந்தது, சிறியது. கருப்புக்கட்டி → கருப்பட்டி]*

**பிட்டுக்கருப்புக்கட்டி** *piṭṭu-k-karuppu-k-kaṭṭi*, பெ. (n.) நாட்டிற் காய்ச்சும் பனஞ் சருக்கரைக் கட்டி; home made palm-sugar.

*[பிட்டு + கருப்புக்கட்டி. பிள் → பிட்டு = சிறியது. பிட்டுக்கருப்புக்கட்டி = சிறு கருப்புக்கட்டி (மு.தா.130)]*

**பிட்டுக்காட்டு—தல்** *piṭṭu-k-kāṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) **1.** கூறுபடுத்தி விளக்கிச் சொல்லுதல்;. to explain analytically. **2.** மறை வெளிப்படுத்துதல்; to reveal, disclose.

*[பிள் → பிட்டு = சிறியது. காண் (த.வி.)— காட்டு (பி.வி.). பிட்டுக்காட்டுதல் = சிறிது சிறிதாகக்கூறுபடுத்திச்சொல்லுதல், விளக்கிச் சொல்லுதல்]*

**பிட்டுக்கொடு—த்தல்** *piṭṭu-k-koḍu-*, 4 செ.குன்றாவி. (v.t.) பிரித்துக் கொடுத்தல்; to divide and distribute. இட்டிலியைப் பிட்டுக் குழந்தைக்குக் கொடுத்தாள் (உ.வ.).

*[பிட்டு + கொடு —, பிள் → பிடு. பிடுதல் = இரண்டாக அல்லது துண்டு துண்டாகப் பிளத்தல். பிள் → பிடு → பிட்டு + கொடு. பிட்டுக்கொடுத்தல் = பிரித்துக் கொடுத்தல்]*

**பிட்டுசெய்—தல்** *piṭṭu-šey-*, செ. குன்றாவி. (v.t.) மருந்தை வேதுகட்டி அவித்தல்; to heat medicine by steam.

*[பிட்டு + செய் —,]*

**பிட்டுத்திருப்பி** *piṭṭu-t-tiruppi*, பெ. (n.) வட்டத் திருப்பி; velvet leaf.

*[வட்டத்திருப்பி → பிட்டுத்திருப்பி]*

**பிட்டுத்திருவிழா** *piṭṭu-t-tiru-viḻā*, பெ. (n.) வந்தி என்ற கிழவிக்காகக் கூலியாளாக வேலை செய்து சிவபெருமான் பிட்டுப் பெற்ற திருவிளையாடலைக் குறித்தற்கு மதுரையில் நடத்தப்படுந் திருவிழா; a festival in Madurai which commemorates Siva's receiving piṭṭu from an old lady named Vandi in lieu of labour rendered by him in disguise.

*[பிட்டு + திருவிழா]*

**பிட்டுத்தோப்பு** *piṭṭu-t-tōppu*, பெ. (n.) மதுரைக்கு வட மேற்கில் வையையாற்றின் தென்கரையிலுள்ள ஓரூர்; a village in Madurai Dt.

*[பிட்டு + தோப்பு. பிட்டுக்கு மண் சுமந்த திருவிளையாடல் விழா நடக்குமிடம்]*

**பிட்டுமார்க்கம்** *piṭṭu-mārkkam,* பெ. (n.) பிட்டு செய்தல்; heating medicine by steam.

*[பிட்டு +மார்க்கம்]*

Skt. mārga > **த.** *மார்க்கம்.*

**பிட்டுவம்** *piṭṭuvam,* பெ. (n.) அரைக்கை (நாமதீப. 743); grinding.

*[பிள் + பிட்டு = சிறியது. புள் → பொள் → பொட்டு = சிறியது, சிற்றளவு. பொள் → பொடி. பிட்டு → பிட்டுவம் = சிறியதாக்குதல், பொடியாக்குதல், அரைத்தல்]*

**பிட்டுவை-த்தல்** *piṭṭu-vai-,* 4 செ. குன்றாவி. (v.t.). மறைக்கப் பட்டதை வெளிப்படையாக அல்லது விளக்கமாகச் சொல்லுதல்; to expose. முதலாளி செய்யும் அட்டூழியங்களைத் தொழிற்கழகக் தலைவர் மேடையில் பிட்டு வைத்தார்.

*[புள் → பிள் → பிடு. = கையால் பிளத்தல். பிடு → பிட்டு + வை. பிட்டுவைத்தல் = சிறிது சிறிதாகப்பிளந்து வைத்தல், ஒவ்வொன்றாக வெளிப்படையாக்கல்.]*

**பிட்டை**[1] *piṭṭai,* பெ. (n.) வீங்கின விதை (அண்டம்); enlarged testicles. (R)

*[புட்டை → பிட்டை]*

**பிட்டை**[2] *piṭṭai,* பெ. (n.) விலங்குகளின் மலம்; dung of animals.

**து.** பிட்ட், பிட்டெ (ஆடு, எலி முதலியவற்றின் மலம்)

*[புள் → பில் → பேல். புள் → புழுக்கை → பிழுக்கை. புள் → பிள் → (பிய்) → பீ. பிள் → பீள் → பீளை → பூளை = கண் மலம். பிள் → (விள்) → விட்டு → விட்டை. பிள் → பிட்டு → பிட்டை (மு.தா.102). இனி விட்டை → பிட்டை என்றுமாம்.]*

**பிடக்கர்** *piḍakkar,* பெ. (n.) ஒரு சார் குலத்தினர் (சாதியினர்); a tribe. *'பிடக்கர், குருக்கர் துருக்கர்களே'* (கலிங். 319.)

**பிடக்கு**[1] *piḍakku,* பெ. (n.) பிடகன்[2] பார்க்க (தைலவ. தைல.); see piḍagaṉ[2]

*[பிடா → பிடகு → பிடகம். பிடகு → பிடக்கு]*

**பிடக்கு**[2] *piḍakku,* பெ. (n.) புத்தரது பிடகநூல்; Buddhist scripture. *'பிடக்கே யுரை செய்வார்'* (தேவா. 245, 10)

**து.** பிடாரி, பிடரி, பிடார் (பிரம்புக்கூடை, மரப்பெட்டி)

*[பிழா → பிழவு → பிடவு. பிடகு → பிடக்கு = பூந்தட்டுப் போன்ற புத்த மறைநூல், புத்த மறை (திரிபிடகம்) (வ.வ.41)]*

**த.** பிழா. > Skt. piṭa.

**பிடகசுரம்** *piḍagašaram,* பெ. (n.) கட்டிச்சுரம்; tumour cause by fever.

*[பிடகம்+சரம். பிடகம் = கொப்புளம். சுரம் → சரம்]*

**பிடகநெறி** *piḍaganeṟi,* பெ. (n.) புத்தன் அருளிய முப்(திரி)பிடகம் காட்டும் வழி; path shown by Tiripiḍagam; a Buddhist scripture. பின்னர் பெரியோன் பிடகநெறி கடவாய் (மணிமே.26.66)

*[பிடகம் + நெறி]*

**பிடகநோய்** *piḍaganōy*, பெ. (n.) ஆண்குறியில் கொப்புளங்களை யுருவாக்கும் பாலியல் நோய்; a venereal disease marked by small eruptions in the penis.

*[பிடகம் + நோய். நுள் → நொள் → நோள் → நோய்]*

**பிடகம்** *piḍagam*, பெ. (n.) **1.** கூடை; basket. **2.** முப்பிடகம்; Buddhist scripture. '*பெரியோன் பிடகநெறி*' (மணிமே. 26,66) **3.** நூல் (திவா.); treatise-**4.** கொப்புளம்; boil. '*வெம்பிடகப் பிணியால் மேனி வெடிப்புண்டு*' (திருக்காளத். பு.17,31.). **5.** இரவல் (பிச்சை) (சது.); alms, charity.

**து.** பிடாரி, பிடரி, பிடார் (பிரம்புக்கூடை, மரப்பெட்டி)

*[பிள் → பிளா → பிழா = வாயகன்ற ஓலைக் கொட்டான். பிழா → பிடா = வாயகன்ற நார்ப்பெட்டி. (மு. தா. 261). பிடா → பிடகு → பிடகம் = தட்டு, பெட்டி, பூந்தட்டுப்போன்ற புத்த மறைநூல், புத்தமறை (திரிபிடகம்)]*

*த. பிடகம்* → Skt. piṭaka

piṭa, piṭaka, pēṭa, pētā, pēṭi, pēṭaka, pētika, a basket, a box. Gt. (p.520) derives pēṭa from Te.peṭṭu (i.e.T.pōḍu), to put, place, lay, and piṭa, piṭaka from D.piḍi, to hold. in Sk: the terms are derived from piṭ, to put together, to bring together, to accumulate (see s. puṭa no. *292*). The so-called Tbhs. are peṭṭi, peṭṭige, peṭṭiya, pēḍage, pēḷige, etc.,If.D.piḍi be the root, it is to be taken for all the Sk, terms, Te. peṭṭu being quite unnecessary. The Te. terms, however, s.D. peṇe, might be compared. (KKED, xxxiv)

**பிடகன்[1]** *piḍagaṉ*, பெ. (n.) புத்த (பிங்.); Buddha, author of tripiḍaka

*[பிழா → பிழவு → பிடவு → பிடகு → பிடகம் = தட்டுக்கூடை, புத்தமறை (வ.வ.41) பிடகம் → பிடகன் = திரிபிடக ஆசிரியரான புத்தன் (வே.க.110) (திரி)பிடம்=முக்கூடை, புத்தமறைநூல்]*

**பிடகன்[2]** *piḍagaṉ*, பெ. (n.) மருத்துவன் (பிங்.); doctor, physician. '*பிடகர் தம்மாற்றேன் வெங்கடுத்தீர் மருந்துதவி*' (சேதுபு. அனுமகு. 15.).

*[பிடகம் → பிடகன்]*

**பிடகாரகம்** *piḍagāragam*, பெ. (n.) *பிடகம்[2]* பார்க்க; see *piḍagam[2]*

*[பிடகன் → பிடகாரகம்]*

**பிடகாரி** *piḍakāri*, பெ. (n.) நச்சு மருத்துவர் (வின்.); doctor who cures the effect of poison, toxicologist.

*[பிடகம் → பிடகாரி.]*

**பிடகை** *piḍagai*, பெ. (n.) பூந்தட்டு; plate for holding flower. '*பிடகைப் பெய்த கமழ் நறும்பூவினர்*' (மதுரைக். 397).

*[பிடகு → பிடகை (வ.வ.41)]*

**பிடங்கம்** *piḍaṅgam*, பெ. (n.) பெருவெள்ளரி; a big variety of cucumber.

**பிடங்கு** *piḍaṅgu*, பெ. (n.) **1.** கத்தியின் முதுகுப் புறம் (வின்.); back of a blade or knife. **2.** வேட்டெஃகம் (துப்பாக்கி) முதலியவற்றின் அடிப்பாகம்; butt end, as of a musket; bottom, as of a basket

*[பின் → பின்பு. பின் → பிற்பாடு (பின் + பாடு). பின் → பிணம் → பிறம் → பிறம்பு. பிறம் → பிடம் → பிடர் → பிடரி = தலையின் பின்புறம். பிடம் → பிடங்கு.]*

**பிடங்குநாறி** *piḍaṅgu-nāṟi,* பெ. (n.) மரவகை; a kind of tree.

*[பிடங்கு + நாறி. நாறு → நாறி]*

**பிடதி** *piḍadi,* பெ. (n.) மல்லிகை வகை; jasminum humile.

**பிடம்¹** *piḍam,* பெ. (n.) நீற்றுதல், புடமிடல்; calcination.

*[புடம் → பிடம்]*

**பிடம்²** *piḍam,* பெ. (n.) மரக்கால்; two measure.

*[பிடு + அம்.]*

**பிடமூலிமூலம்** *piḍamūli-mūlam,* பெ. (n.) இளமைப் பொலிவூட்டும் மருந்து; a rejuvenating herb.

*[பிடம் + மூலி + மூலம்]*

**பிடயூதி** *piḍa-y-ūdi,* பெ. (n.) *பிடதி* பார்க்க; see *piḍadi.*

*[பிடதி → பிடயூதி]*

**பிடர்** *piḍar,* பெ. (n.) **1.** பின்கழுத்து; nape of the neck. *'யானை யிரும்பிடர்த் தலையிருந்து'* (புறநா. 3.). **2.** *பிடார்* **1.** பார்க்க; see *piḍār* - **1** *'ஈசுவரத்வப் பிடராலன்றியே'* (ஈடு, 7,4,4.).

*[பின் → பிணம் → பிறம் → பிறம்பு → பிறம்பத்தங்கால் = பின்னங்கால். பிறம் → பிடம் → பிடர் = தலையின் பின்புறம் (மு.தா.253)]*

**பிடர்த்தலை** *piḍar-t-talai,* பெ. (n.) *பிடர் 1* (பிங்.) பார்க்க; see *piḍar 1.*

க. பெடதலெ; பட. தெடதலெ

*[பிடர் + தலை]*

**பிடர்த்தலைமண்டை** *piḍar-t-talai - maṇḍai,* பெ. (n.) தலையின் பின்புறம் உள்ள புறங்கழுத்துப்பகுதி; the portion of the skull which forms the hind part of the head.

*[பிடர் + தலை + மண்டை. பிறம் → பிடம் → பிடர் = தலையின் பின்புறம். மொள் → மொண்டை → மண்டை = நீர் முகக்குங்கலம், இரப்போர் கலம், அது போன்ற தலையோடு, தலையின் மேற்பகுதி]*

**பிடர்ப்பிளவை** *piḍar-p-piḷavai,* பெ. (n.) பின் கழுத்திலேற்படும் சிலந்திவகை; a kind of ulcer or carpuncle on the nape.

*[பிடர் + பிளவை. பிள் → பிளவு = துண்டு பிள் → பிளவை. 'ஐ' பெ.ஆ.ஈ.று]*

**பிடரம்¹** *piḍaram,* பெ. (n.) கோரை வகை; a kind of sedge.

*[பிள் → பிடர் + அம்]*

**பிடரம்²** *piḍaram,* பெ. (n.) முகப்பரு; pimple of the face.

*[பிள் → (பிள்) → பிண்டு → பிண்டம் = திரட்சி. பிள் → பிடர் → பிடரம் = திரண்டு காணப்படும் முகப்பரு]*

**பிடரி** *piḍari,* பெ. (n.) பிடர் 1. (சது.) பார்க்க; see piḍar 1.

*[பின் → பிற → பிறவு → பிறகு → பிறக்கு → பிறக்கிடுதல் = பின்னுக்குச் செல்லுதல். பின் → பினம் → பிறம் → பிறம்பு. பிறம் → பிடம் → பிடர் → பிடரி = தலையின் பின்புறம் (மு.தா. 293)]*

**பிடரிக்காம்பு** *piḍari-k-kāmbu,* பெ. (n.), பூடு வகை (மலை.); a shrub.

*[பிடரி + காம்பு]*

**பிடரிக்குழி** *piḍarikkuḻi,* பெ. (n.) சுழிமுனை நாடியின் நெறி; path of the cuḻimuṉai nāḍi

*[பிடரி + குழி. பிறம் → பிடம் → பிடர் → பிடரி. குள் → குழி]*

**பிடரிசன்னி** *piḍari-šaṉṉi,* பெ. (n.), இசிவு நோய்; wryneck, torticollis. (M.L.)

*[பிடரி + சன்னி]*

**பிடரிசிவு** *piḍar-išivu,* பெ. (n.), நோய் வகை; neuralgia (M.L.)

*[பிடரி + இசிவு]*

**பிடரிநாளம்** *piḍarināḷam,* பெ. (n.) பின் கழுத்துப் பகுதி செல்லும் அரத்தக் குழாய்; jugular vein.

*[பிடரி + நாளம். நுள் → நள் → நாள் → நாளம் = உட்டுளை, உட்டுளைப் பொருள்.]*

**பிடரிமுனைமுறித்தல்** *piḍarimūṉai - muṟittal,* பெ. (n.) புறங்கழுத்து வலி; pain on the nape.

*[பிடரி + முனை + முறித்தல்]*

**பிடரியஞ்சு** *piḍariyañju,* பெ. (n.) கறி வேம்பு; curry leaf free.

**பிடரியிசிவு** *piḍari-y-išivu,* பெ. (n.) பின் கழுத்து வலியுடன் கூடிய தலைவலி; a disease of the head in which a violent pain is felt at the two nerves on the back side of the neck.

*[பிடரி + இசிவு]*

**பிடரியிழுப்பு** *piḍari-y-iḻuppu,* பெ. (n.) பிடரி வாங்கல் பார்க்க; see piḍarivāṅgal.

*[பிடரி + இழுப்பு. இழு → இழுப்பு. 'பு' தொ.பெ.ஈ.று]*

**பிடரியூதை** *piḍariyūdai,* பெ. (n.) பிடரியில் இசிவை ஏற்படுத்தி உயிரை மாய்க்கும் ஊதை நோய்; a fatal disease cause of by wind humour which remaining in the head causes immense pain and convulsion of the nape.

*[பிடரி + ஊதை]*

**பிடரிவாங்கல்** *piḍarivāṅgal,* பெ. (n.) புறக்கழுத்து நரம்பிலுண்டாகும் இசிவு; convulsive pain in the back of the neck.

*[பிடரி + வாங்கல். வங்கு → வாங்கு → வாங்கல். 'அல்' தொ. பெ. ஈறு]*

**பிடருரோமம்** *piḍar-u-rōmam,* பெ. (n.), பின் கழுத்து மயிர்; mane.

*[பிடர் + உரோமம்]*

Skt. rōma > **த.** *உரோமம்.*

**பிடரென்பு** *pidar-enbu,* பெ. (n.) தலையின் பின்புறத்தெலும்பு; occipital bone.

*[பிடர் + என்பு. எலும்பு → என்பு]*

**பிடல்** *pidal,* பெ. (n.) கதவு; door. *'உருள்பிட லொற்றி'* (பெருங். உஞ்சைக். 49,3.).

*[படல் → பிடல்]*

**பிடலிகை** *pidaligai,* பெ. (n.) **1.** பீடம்; raised seat. **2.** காவு(பலி)பீடம்; altar.

*[புள் → (பிள்) → பிண்டு → பிண்டம் = திரட்சி. பிள் → பிடு → பிடல் → பிடலிகை = திரண்ட மேடு]*

**பிடவம்** *pidavam,* பெ. (n.) **1.** *பிடவு* பார்க்க; see *pidavu. 'நுரை யெனப் பொருவுவ பிடவம்'* (கம்பரா. கார்கால. 47.). **2.** மரக்கோடு (அக. நி.); branch of a tree.

*[பிடவு → பிடவம்]*

**பிடவு[1]** *pidavu,* பெ. (n.) *பிடா* பார்க்க; see *pidā. 'கிடத்திடைப் பிடவின்'* (பதிற்றுப். 66,17.).

*[பிடா → பிடவு]*

**பிடவு[2]** *pidavu,* பெ. (n.) முள்பட்டை; a plant bearing white flowers.

*[புறம் = மேற்பக்கம், பக்கம். புறம் → புறன் → (புறண்) → புறணி = மேற்புறம். புறம் → பிறம் → பிடம் → பிடவு]*

**பிடவு[3]** *pidavu,* பெ. (n.) முதுகு; back.

*[பின் → பிறம் → பிடம் → பிடவு]*

**பிடவை** *pidavai,* பெ. (n.) சேலை; saree. *'போர்த்த பிடவையுமாய்'* (பணவிடு. 311.).

மறுவ. புட்டகம்

*[புடை → புடைவை = சுற்றிக்கட்டும் ஆடை. புடைவை → புடவை = துணி, சேலை. புடவை → பிடவை]*

**பிடா[1]** *pidā,* பெ. (n.) குட்டிப்பிடவம் (தொல். எழுத். 229.); bedaly emetic-nut.

*[பிழா → பிடா]*

**பிடா[2]** *pidā,* பெ. (n.) நார்ப்பெட்டி; wicker basket.

**து.** பிடாரி, பிடரி, பிடார்

*[பிள் → பிளா → பிழா = வாயகன்ற ஓலைக்கொட்டான். பிழா → பிடா = வாயகன்ற நார்ப்பெட்டி (மு.தா.261)]*

**பிடாகை** *pidāgai,* பெ. (n.) உட்கிடையூர்; suburban hamlet. *'எங்களூர்க்குப் பிடாகை யாகப் பெற்ற ஊர்களில்'* (S.I.I. iii, 25).

**பிடாகைநட-த்தல்** *pidāgai - nada-,* 5 செ.குன்றாவி. (v.t.) அரசனால் கொடையாகக் கொடுக்கப்பட்ட உட்கிடை நிலங்களை, ஊர் நிலக்கணக்குப்படி அளந்து பிடி யானையினை எல்லைகள் வழியே நடக்கச் செய்து, எல்லைகளை வரையறுத்தல்; to take procession through village boundry keeping the documents of donated lands given by king on female elephant. *"இவ்வானை மங்கலம் பிடிசூழ்ந்து பிடாகை நடக்கிற போது"* (ஆனைமங்கலச் செப்பேடு).

*[பிடாகை + நட-,]*

**பிடாகைவலஞ்செய்—தல்** *piḍāgaivalañcey-,* செ. குன்றாவி. (v.t.) கொடைபற்றிய கல்வெட்டு, செப்பேடு முதலானவற்றைப் பெண்யானையின் மீது வைத்துக், கொடைக்குரிய ஊர் அல்லது ஊரின் எல்லைகளை வலமாகச் சூழ்ந்து அறுதியிடுதல்; to take procession at village streets keeping the documents of donation on female elephant.

*[பிடாகை + வலஞ்செய்–,]*

**பிடாங்கு** *piḍāṅgu,* பெ. (n.) வெடி, வேட்டு; report of a gun.

*[பிடு → பிடுகு → பிடுங்கு → பிடாங்கு = குழாய்வெடி (வேட்டு) (வே.க.3,111)]*

**பிடாச்செடி** *piḍā-c-ceḍi,* பெ. (n.) *பிடா* பார்க்க; see *piḍā.*

*[பிடா + செடி]*

**பிடாந்திரம்** *piḍāndiram,* பெ. (n.) படாந்தரம் (யாழ்.அக.); gross falsehood.

*[படாந்திரம் → பிடாந்திரம்]*

**பிடாபகம்** *piḍābagam,* பெ. (n.) கண்களைச் சுற்றி இமையில் படாதவாறு பூசப் பெறுங் களிம்பு; an ointment which is applied round the eyes.

**பிடாம்** *piḍām,* பெ. (n.) போர்வை; cloth for wear; mantle. *"பிடாத்தை விழவிட்டு வடிவழகைக் காட்டியாயிற்று"* (ஈடு, 4,9,4).

*[படாம் → பிடாம்]*

**பிடார்** *piḍār,* பெ. (n.) **1.** செருக்கு, இறுமாப்பு (கருவம்); pride, arrogance. *'கங்கையைச் ஜடைமேலே அடக்கினே னென்றும் பிடாரைக் கொண்டு' (திவ். திருமாலை. 44, வ்யா. 142)* **2.** பெருமை; greatness,'ஈசுவரத்துவப் பிடாராலே' (ஈடு, 3,7,3).

*[புல் → பொல் → பொலி. பொலிதல் = பெருகுதல். புல் → பல் → பரு → பெரு → பெருமை. புல் → புள் → பிள் பிடு → பிடர் → பிடார்]*

**பிடாரச்சொல்** *piḍāra-c-col,* பெ. (n.) **1.** மருத்துவக் குறியீட்டுச் சொல்; medical term. **2.**புதுமையாய் உண்டாக்கிய சொல்; newly-coined word.

*[பிடாரம் + சொல்]*

**பிடாரம்** *piḍāram,* பெ. (n.) மருத்துவ நிகண்டு (யாழ். அக.); medical dictionary.

*[பிடகம் → பிடாகம் → பிடாரம்]*

**பிடாரமுக்கி** *piḍāramukki,* பெ. (n.) மருந்துச் செடி; a medicinal herb.

**பிடாரர்** *piḍārar,* பெ. (n.) தமிழிசையிற் சிறந்து விளங்குபவர், திருப்பதியம் முறையீடு (விண்ணப்பஞ்) செய்பவர்; well versed men in Tamil music and engaged in reciting eulogical song of a deity. *"உடையார் ஸ்ரீராஜராஜீஸ்வரம் உடையார்க்குத் திருப்பதியம் விண்ணப்பஞ் செய்ய உடையார் ஸ்ரீராஜராஜ தேவர் குடுத்த பிடாரர்கள் நாற்பத்தெண்மரும்"* (தெ. கல். தொ. 2:3, கல், 65).

*[பிடாரன் → பிடாரர்]*

**பிடாரவைத்தியன்** *piḍāra-vaittiyaṉ*, பெ. (n.) பாம்பு நச்சு மருத்துவன்; snake doctor, one who cures snake-bites.

*[பிடார + வைத்தியன்]*

Skt. vaidya > த. வைத்தியன்

**பிடாரன்**[1] *piḍāraṉ*, பெ. (n.) 1. பாம்பு பிடிப்போன்; snake-catcher. 2. மருத்துவன் (யாழ்.அக.); doctor. 3. குறவன் (யாழ். அக.); man of the Kuṟava caste.

ம. பிடாரன்

*[பிடகம் → பிடகன் = மருத்துவன். பிடகம் → பிடாகம் → பிடாரம் → பிடாரன்]*

**பிடாரன்**[2] *piḍāraṉ*, பெ. (n.) இசைகாரன்; a musician. *'பிடாரன் நாராயணன்'* (S.I.I. ii, 488).

*[பிள் → பிடு → பிடர் → பிடார் → பிடாரன்]*

**பிடாரன்**[3] *piḍāraṉ*, பெ. (n.) ஆசிரியன் (குரு); spiritual preceptor. *'திருக்கோடிகா சதாசிவப் பிடாரர்'* (M.E.R. 30 of 1930–31)

*[புல் → பல் → பெரு → பெருமை. புல் → பில் → பிடு → பிடர் → பிடாரன்]*

**பிடாரி**[1] *piḍāri*, பெ. (n.) ஒரு சிற்றூர்த் தேவதை; a village goddess. *'காளி பிடாரி'* (திருப்பு. 1184).

ம. பிடாரி

*[படம் + அரி → படாரி → பிடாரி = பாம்பையுடைவள்]*

**பிடாரி**[2] *piḍāri*, பெ. (n.) ஊர்க்காவல் தெய்வத்தின் பெயரைப் பெற்றிருந்த பெண்டிர்; women christened the name of village guard deity. *1. "பிடாரி பொதுவகை ஊருடையாள்" (தெ.கல். தொ.17, கல்.32.). 2. "திருநலக் குன்றத்து திருமேற்றளி மாதேவர்க்கும் சீவிகத்துக்கும் சாலையூட்டாக சாத்தும் பிடாரி வைத்த பொன்–"* (தெ. கல். தொ.17 கல். 356.).

*[பிடாரன் (ஆ.பா.) – பிடாரி (பெ.பா.)]*

**பிடாரிச்சி** *piḍāricci*, பெ. (n.) குறத்தி (யாழ். அக.); woman of the Kuṟava caste.

*[பிடாரன் (ஆ.பா) – பிடாரிச்சி (பெ.பா).]*

**பிடாரிபட்டி**[1] *piḍāri-paṭṭi*, பெ. (n.) *பிடாரி விளாகம்* பார்க்க; see *piḍāri viḷāgam* (S.I.I. i, 90)

*[பிடாரி + பட்டி]*

**பிடாரிபட்டி**[2] *piḍāripaṭṭi*, பெ. (n.) *பிடாரி பாத்தி* பார்க்க; see *piḍāri-pātti*.

*[பிடாரி + பட்டி]*

**பிடாரிபாத்தி** *piḍāri-pātti*, பெ. (n.) சிற்றூர்ப் பெண் தெய்வமான காளி கோயில் நாள் வழிபாடு, திருவிழா முதலான செலவினங் கட்குரிய வருவாயாக, ஊரவையாரின் நிருவாகத்தின் கீழ் விடப்படும் இறையிலி நிலம்; tax free land offered for maintaing the expenditure on daily worship at Kāḷi temple. *"இவ்வூரில் முன்பு உண்டான தேவதானம் திருவிடையாட்டம் அய்யன் போகம் பிடாரி பாத்தி நீங்கலாக"* (தென். கல். தொ. 8. க. 210).

*[பிடாரி + பாத்தி]*

**பிடாரிவிளாகம்** *piḍārivilāgam,* பெ. (n.) பிடாரி கோயிலுக்கு விடப்பட்ட இறையிலிநிலம் (மானியம்); inam land granted to Piḍāri temple. (Pudu. insc. **333**)

*[பிடாரி + விளாகம். வளாகம் → விளாகம்]*

**பிடாரிவெளி** *piḍāri-veḷi,* பெ. (n.) கொல்லை வெளி (இ.வ.); open space.

*[பிடாரி + வெளி]*

**பிடாலகம்** *piḍālagam,* பெ. (n.) மஞ்சள் நிறமுள்ள தாளக வைப்பு நஞ்சு; orpiment.

**பிடாலம்** *piḍālam,* பெ. (n.) காட்டுப்பூனை; wild cat.



**பிடாலவணம்** *piḍā-lavaṇam,* பெ. (n.) ஐவகையுப்பு(பஞ்சலவணம்)ளொன்று; (பதார்த்த. **1102.**), bitnoben, a kind of salt, one pañca-lava-ṇam. q.v

**பிடாவுப்பு** *piḍā-v-uppu,* பெ. (n.) நீரிழிவு; நாவறட்சி, சிறுநீர்ப்போக்கு போன்றவற்றைப் போக்கும் வளையல் உப்பு; a kind of mineral salt capable of calcining zinc.

**பிடி¹—த்தல்** *piḍi-,* **4.** செ. குன்றாவி. (v.t.) **1.** கைப்பற்றுதல்; to catch, grasp, seize, clutch. அஞ்செழுத்தின் புணை பிடித்துக் கிடக்கின் றேனை (திருவாச.5,27). **2.** வயப்படுத்துதல்; to secure. அவனைப் பிடித்தால் இக்காரியம் கைகூடும். **3.** அகப்படுத்துதல்; to capture, ensnare, entrap, catch. **4.** கட்டுதல் (வின்.); to tie fasten. **5.** புகலடைதல்; to take refuge in, depend on, cling to. உன்னை நான் பிடித்தேன் கொள் (திவ். திருவாய். 2,6,1). **6.** அடைதல்; to obtain, take possession. 'பெருகிய செல்வநீ பிடி' (கம்பரா, கிளைகண்.23) **7.** உட்கொள்ளுதல்; to contain, hold. *'அந்தப் பெட்டி இவ்வளவையும் பிடிக்கும்'.* **8.** மேற் கொள்ளுதல்; to assume, as a form. *'விசுவரூபம் பிடித்தானே' (இராமநா. சுந்தர.19).* **9.** தாங்குதல், to bear, carry, support. *'முட்டுக்கட்டை சுவரைப் பிடித்துக் கொண்டிருக்கிறது'.* **10.** நிறுத்திக் கொள்ளுதல்; to keep back, deduct, detain with hold. *'வட்டியைப் பிடித்துக் கொள்'* **11.** நிழற்படமெடுத்தல்; to take a photograph. **12.** மெய்ப்பாடு (அபிநயம்) முதலியன செய்து காட்டுதல்; to expound, as by gesture, song, etc., **13.** பற்றிக்கொள்ளுதல்; to take on, as a colour. சாயம் பிடிக்கவில்லை. **14.** தெரிதல்; to grasp,understand, comprehend. ஆசிரியர் கற்பித்ததை மாணவர் பிடித்துக் கொள்வ தில்லை. **15.** விலைக்கு மொத்தமாகக் கொள்ளுதல்; to buy, purchase wholesale, as at a market. *'சந்தையில் தவசம் (தானியம்) பிடித்து வந்தான்'* (இ.வ.). **16.** பொருத்துதல் (வின்.); to join in a continued row or series; to nail on; to line with; to face agarment.**17.** உறுதியாகக் கொள்ளுதல்; to hold fast, adhere to. *'பெருமானுரை பிடித்தேம்' (கம்பரா. நிகும். 143).* **18.** குறிக்கொள்ளுதல்; to undertake. *'பிடித்தது முடிக்கவல்ல விச்சையர்'* (பிரபோத, 24, 52.). **19.** விதை வாங்குதல்;

to geld. *'விதை பிடித்த மாடு.* **20.** அழுத்தித் தடவுதல்; to massage, rub. *'சற்று உடம்பைப் பிடி'.* **21.** பிடித்துக் கொள் பார்க்க; see piḍi-t-tu-k-koḷ. **22.** மூடிய கையளவு கொள்ளுதல். to make a handful. *'பிடித்தெருவும் வேண்டாது'* (குறள், 1037)

*[பிள் + பிண்டு → பிண்டி → பிடி (வே.க. 3,81–83)]*

**பிடி²–த்தல்** *piḍi-,* 2 செ.கு.வி. (v.i.) **1.** ஒட்டிக் கொள்ளுதல்; to stick, adhere, cling. **2.** விரும்புதல்; to be agreeable, attractive pleasing to the senses or mind. *'எனக்கு அவனைப் பிடிக்கவில்லை'.* **3.** ஏற்றதாதல்; to be suitable, adapted, conformable. *'அந்த ஊர் உடம்புக்குப் பிடிக்க வில்லை'.* **4.** செலவாதல்; to be required for expense. *'அந்த நகைக்கு நூறு ரூபா பிடிக்கும்'.* **5.** நிகழ்தல்; to take place, occur. *'மழை பிடிக்கும்'.* **6.** அடங்குதல்; to find room, go in. கூடையில் எத்தனை பழம் பிடிக்கும்.

*[புள் → (பிள்) → பிண்டி → பிடி]*

**பிடி³–த்தல்** *piḍi-,* 11செ. குன்றாவி. (v.t.) **1.** கையால் இறுக்கித் திரட்டுதல் அல்லது திரளை யாக்குதல்; to make ball with the hand. பொரிவிளங்காய் பிடிக்க வேண்டும். **2.** கையால் இறுக்கித் திரட்டிப் படிமையமைத்தல்; to make immage by pressing things with the hand. பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்தது. (பழ). **3.** கையால் இறுக்கித் திரட்டுதல் போல் ஒன்றை இறுகப் பற்றுதல்; to hold, as of umbrella. 'குடை பிடித்தான்'. **4.** ஒன்று இன்னொன்றைப் பற்றுதல்; to catch, as of a cat a rat. பூனை எலியைப் பிடிக்கும், இன்றைக்கும் குளத்தில் மீன்பிடிக்கிறார்கள், ஓடுகிற மாட்டைப் பிடித்துக் கொண்டு வந்தான், ஊர்காவலர் குற்றவாளியைப் பிடித்துக் கொண்டார்கள், இந்தப் பிள்ளையைக் கொஞ்சநேரம் பிடி. **5.** கோணியைப் பிடித்து வாங்குதல், to buy, purchase thing to a gunny bag. திருநெல் வேலிக்கு அரிசி பிடிக்கப் போயிருக்கிறார்கள். **6.** விலைக்கு மொத்தமாகக் கொள்ளுதல்; to buy, purchase whole sale, as at market. சந்தையில் தவசம் பிடித்து வந்தான் (இ.வ.). **7.** கயிற்றைப்பிடித்து வாங்குதல்; to get animal by holding a rope which tied with it, as of cattle, dogs, etc., காங்கேயத்திலிருந்து ஒரு சோடி மாடு பிடித்து வந்திருக்கிறான். **8.** கலத்தில் நீர் கொள்ளுதல்; to fetch water in a vessel. குழாயில் நீர் பிடித்து வா. **9.** கழங்கு விளையாடுதல்; to play with molucca-beans in a girls game. தட்டாங்கல் பிடித்து விளையாடுகிறார்கள். ஒற்றையா இரட்டையா பிடிக்கலாமா?. **10.** பொருத்துதல் (வின்.); to join in a continued row or series, to nail on, to line with, to face a garment. நாற்காலிக் காலுக்கு வாங்கு பிடிக்க வேண்டும். **11.** சுளுக்குவிழுதல்; to contract, as a nerve or muscle by rheumatism or cramp. காலில் நரம்பு பிடித்துக் கொண்டிருக் கிறது. **12.** இறுக்க மாயிருத்தல்; to tight, as a dress, சட்டை முதுகிற் பிடிக்கிறது.

*[பிள் → பிண்டு → பிண்டி → பிடி (வே.க. 3,81,83)]*

**பிடி⁴–த்தல்** *piḍi-,* 7 செ.குன்றாவி (v.t.) மனத்திற்கிசைந்ததாதல்; to agreeable to mind.

*[புல் → (புற்று) → பற்று. புள் → (பிள்) பிண்டி → பிண்டம் = திரட்சி. பிண்டித்தல் = கைக்குள் சோற்றை அல்லது மாவைத் திரட்டுதல். பிண்டி → பிடி. பிடித்தல் = கையால் பற்றுதல், மனத்தாற் பற்றுதல், மனத்திற்கு உகந்தது மனத்தாற் பற்றுதலாகும்]*

**பிடி**[5] *pidi,* பெ. (n.) 1. பற்றுகை; hold, clutch, pinch, seizure by the hand. 2. மனத்திற் பதிகை; comprehension. 3. நம்பிக்கை (வின்.); confidence, reliance, trust. 4. மதக் கொள்கை (வின்.); religious belief opinion or tenet. 5. கைமுட்டி; fist, closed-hand. 6. மற்பிடி; catch, grip in wrestling. 7. படைக்கலப் பிடி; handle, haft, hilt. *'தோல் கழியொடு பிடி செறிப்பவும்'* (புறநா. 98.). 8. குதிரையின் வாய்க்கருவியிற் கோக்கும் குசை; rein. மத்தாட் பிடியொடு (நெடுநல்.178). 9. வழிவகை (உபாயம்); means, device. *'பிடியாதொன்றுங் கண்டிலன்'* (விநாயகபு. 9,7.). 10. உறுதி; firmness; stubbornness. *'ஓர் பிடியா நான் தொடர்ந்ததற்கு'* (இராமநா. உயுத்.). 11. உதவி (இ.வ.); help, refuge, support. 12. உள்ளங்கைப் பிடி அளவு; handful, small, quantity, *'தன் கேளைப் பிடி கடொறும் வேறாஞ் சுவை பெற வூட்டி'* (வெங்கைக்கோ. 377). 13. பணியாரவகை (வின்.); a kind of cake. *'பிடிசுட்டுப் படைத்தல்'* 14. நால்விரல் கொண்ட ஓர் அளவு; measure of length being the width of the hand. 15. பேய்; devil. *'பெண்டிர் பிடிபோல'* (திருவுந்தி. 35.). 16. மெய்ப்பாடு முதலியவற்றின் எடுப்பு; exposition, as by gesture, song,etc.,

ம., தெ., து. பிடி; க., பட. கிடி; கொலா பிடியா (சிறுகட்டு); குட. புடி; கோத. பிரெ.

*[பிண்டி → பிடி]*

கைபிடித்தல் (கைக்கொள்ளுதல்), கைபிடி (கையிற் பெற்றுக் கொண்ட பொருள்), கைபிடிசுவர் முதலிய கூட்டுச் சொற்களும், அரிவாட்பிடி, அறுவாட் பிடி, உளிப்பிடி, கத்திப்பிடி, குடைப்பிடி, கொட்டுப்பிடி முதலிய பிடிவகைப் பெயர்களும், உடும்புப்பிடி, கடைப்பிடி, குரங்குப்பிடி, குருட்டுப்பிடி, விடாப்பிடி முதலிய பிடிப்புப் பெயர்களும் தொன்று தொட்டனவே (வே.க.3,85).

பிடிகல், பிடிகாசு, பிடிகாரன், பிடித்தாராவி, பிடித் தாட்டிக் கழி, பிடிகொடு, பிடித்தபிடி, பிடிசீலை, பிடிதண்டம், பிடிநெல், பிடிபடு, பிடியரிசி, பிடிமண், பிடியாள், பிடிவிடு, முதலிய எத்துணையோ கூட்டுச் சொற்கள் தொன்று தொட்டு வழங்கிவரும் உலக வழக்காம் (வ.வ.2.36)

**பிடி**[6] *pidi,* பெ. (n.) பெண்யானை (தொல். பொ.606); female of elephant.

ம. பிடி, (பெண்ஒட்டகம், பெண்பன்றி); க. பிடி; தெ. பிடி (பெண்பால்விலங்கு) கோத; பிழிமாவ் (பெண்மான்)

*[புள் → (பிள்) + (பிண்) → பிண → பிணா பிணவு→ பிணவல் = விரும்பப்படும் பெண், விலங்கின் பெண். பிண் → பிணை = விருப்பம். பிள் → பிடி = பெண்யானை. (மு. தா. 168)]*

Skt. pillakā, a female elephant

cf. D.piḍi (KKED. xxi)



**பிடி**[7] *pidi,* பெ. (n.) பெண் கவரி; female yak.

*[புள் → பிள் → விள். விள்ளுதல் = கலத்தல், விரும்புதல். இவ்வினை இன்று வழக்கற்றது. புள் → (பிள்) → (பிண்) → பிண → பிணா → பிணவு→ பிணவல்= விரும்பப்படும் பெண். விலங்கின்பெண். பிண் → பிணை = விருப்பம். பிள் = பிடி பெண் யானை (மு.தா. 168), பெண் கவரி]*

**பிடி**[8] *piḍi,* பெ. (n.) ஒட்டகம்; camel.

*[புள் → (பொண்டு) → போண்டா = உருண்டைப்பலகாரம். புள் → பிள் → பிடி = உருண்டுதிரண்ட விலங்கு]*

**பிடி**[9] *piḍi,* பெ. (n.) உலர்ந்தது (இ.வ.); dryness. *'பிடி விரை'*

**தெ.** படி

*[புல் → புலர். புல் → பொல் → பொலு. பொலுபொலுத்தல் = நன்றாகக் காய்தல். புல் → புள் → பிள் → பிடி.]*

**பிடி**[10] *piḍi,* பெ. (n.) ஏலம் (மலை.); cardamom.

*[புல் → புள் → பிள் → பிழம்பு = திரட்சி, வடிவு. பிள் → பிண்டு = திரட்சி. பிள் → பிடி = திரண்டது, திரண்ட ஏலம்]*

**பிடி**[11] *piḍi,* பெ. (n.) பிடிசீட்டாட்டத்தில் ஒரு முறை எடுக்கப்படுஞ் சீட்டு (கொ. வ.); a trick of cards, in card-playing.

*[பிள் → பிண்டி → பிடி = ஒரு முறை கையால் (பற்றி) எடுக்கப்படுவது]*

**பிடிக்கட்டு** *piḍi-k-kaṭṭu,* பெ. (n.) பனையோலையின் சிறுகட்டு (வின்.); small bundle of palm leaves.

*[பிடி + கட்டு. கள் → கட்டு]*

**பிடிக்கொம்பன்** *piḍi-k-kombaṉ,* பெ. (n.) சிறு கொம்புள்ள விலங்கு; short-horned beast.

*[பிடி + கொம்பன். கொம்பு → கொம்பன். 'அன்' உடைமைக்குறித்த ஈறு]*

**பிடிக்கொழுக்கட்டை** *piḍi-k-kolu-k-kaṭṭai,* பெ. (n.) பணியார வகை; a kind of pastry.

*[பிடி + கொழுக்கட்டை. உள்ளீடுவைத்துச் செய்யும் முழு (பூரண)க் கொழுக்கட்டை போலன்றி வெல்லம், அரிசிமாவு கலந்து கையால் பிடித்துவைத்து வேவுவிக்கும் கொழுக்கட்டை.]*

**பிடிகடா** *piḍikaḍā,* பெ. (n.) காயடிக்கப்பட்ட கடா; castrated bull.

*[பிடி + கடா]*

**பிடிகம்** *piḍigam,* பெ. (n.) பிள்ளைக் கைவளை (திவா.); child's bracelet.

*[பிடி → பிடிகம்]*

**பிடிகயிறு** *piḍi-kayiṟu,* பெ. (n.) மாடு கட்டுங் கழுத்துக் கயிறு (இ. வ.); rope used in tethering cattle.

*[பிடி + கயிறு]*



**பிடிகருத்தொழில்** *piḍikaru-t-tolil,* பெ. (n.). அகத்தியர் நிகண்டில் கூறப்பட்ட மாயக்கல்வி (வித்தை)யுள்ளொன்றான கருவேலை; a black art mentioned in jāla nigaṇḍu complied by Agattiyar.

*[பிடி + கரும் + தொழில். கள் → கர் → கரிது → கரிசு = இருமையானது, குற்றம். கள் → கர் → கரும் = கரிய, குற்றமுடைய, தீங்கு விளைவிக்கக்கூடியது]*

**பிடிகருமா** *piḍikarumā,* பெ. (n.) *பிடிகருத் தொழில்* பார்க்க; see *piḍi karu-t-tolil*

*[பிடி + கருமா. கள் → கர் → கருமம். கருமம் → கருமா]*

**பிடிகல்** *piḍi-kal,* பெ. (n.) குயவன் களரிக்கல் (இ. வ.); potter's stone.

*[பிடி + கல்]*

**பிடிகாசு** *piḍi-kāšu,* பெ. (n.) செலுத்தும் விலைப்பணத்தில் நற்(சுப)குறியாகக் கொடாமல் நிறுத்தி வைக்கும் சிறுதொகை (யாழ்ப்.); insignificant sum of money withheld on a purchase by the purchaser, considered auspicious.

*[பிடி → காசு. குல் → குள் → கள் → காள் → காளம் = சுடுகை. காள் → காழ் → காசு.]*

**பிடிகாரன்** *piḍi-kāraṉ,* பெ. (n.) 1. மீன் பிடிப்பவன்; fisherman. 2. வேட்டையாடுவோன், (யாழ். அக.); hunter

*[பிடி + காரன்]*

**பிடிகிழங்கு** *piḍi-kilaṅgu,* பெ. (n.) கிழங்கு வகை (மூ. அ.); a kind of yam.

*[பிடி + கிழங்கு]*

**பிடிகுருவி** *piḍi-kuruvi,* பெ. (n.), வெற்றிலை; betel leaf.

*[பிடி + குருவி. கையில் வைத்த சுண்ணாம்பு தடவும் போது குருவியின் முடியரும்பிய முதுகை வருடுவது போன்றதால் வந்த பெயர்]*

**பிடிகூலி** *piḍi-kūli,* பெ. (n.) தவசம் அளக்கும் போது மூட்டை பிடிப்பதற்குரிய கூலி (இ.வ.); wages in measuring grain.

*[பிடி + கூலி. கூல் → கூலம். கூல் → கூலி]*

**பிடிகை¹** *piḍigai,* பெ. (n.) ஓர் இருக்கையுள்ள ஊர்தி வகை; a single seated conveyance *'கண்ணார் பிடிகையும்'* (பெருங். உஞ்சைக். 37,270.)

*[பிள் → பிண்டு = திரட்சி. பிள் → பிடி → பிடிகை]*

**பிடிகை²** *piḍigai,* பெ. (n.) 1. நோவில்லாச் சிறுகட்டி; a small abscess without pain. 2. மல்லிகை வகை; a kind of jasmine.

*[புள் → (பிள்) → பிண்டு → பிண்டம் = திரட்சி. பிள் → பிடி → பிடிகை = திரண்டு காணப்படும் கட்டி, திரண்ட மலர்]*

**பிடிகொடு¹-த்தல்** *piḍi-koḍu-,* 4 செ. கு. வி. (v.i.) 1. தான் பிடிபடும்படி நிற்றல் (வின்.); to allow oneself to be caught. 2. பேச்சு முதலியவற்றில் அகப்படுதல். to commit oneself, as in speaking.

*[பிடி + கொடு-,]*

**பிடிகொடு²–த்தல்** *pidi-kodu-,* 4 செ.குன்றாவி. (v.t.) இழத்தல்; to lose, to be deprived of. *'களத்திரம் பிடி கொடுத்தான்'* (குத்துவப். 179, உரை.).

*[பிடி + கொடு–.]*

**பிடிச்சராவி** *pidiccarāvi,* பெ. (n.) *பிடிச்சுராவி* பார்க்க; see *pidiccurāvi.*

*[பிடி → பிடிச்சு → பிடிச்சு + அராவி]*

**பிடிச்சவேர்ப்பங்கு** *pidicca-vēr-p-pangu,* பெ. (n.) *பிடித்தவேர்ப்பங்கு* பார்க்க; see *piditta-vēr-p-pangu.* (C.G)

*[பிடித்த + வேர் + பங்கு – பிடித்தவேர்ப்பங்கு → பிடிச்ச வேர்ப்பங்கு]*

**பிடிச்சாட்டிக்கழி** *pidiccātti-k-kali,* பெ. (n.), துலாவில் ஏறுவோர் கைப்பற்றாகப் பிடிக்கும் கழி (இ. வ.); hand-rail of a picotta serving as support.

*[பிடி → பிடிச்ச + ஆட்டு + கழி]*

**பிடிச்சிற்றுளி** *pidi-c-cirruli,* பெ. (n.) சிற்றுளி வகை; mortise chisel. (C.E.M.)

*[பிடி + சிற்றுளி]*



**பிடிச்சீலை** *pidi-c-cīlai,* பெ. (n.) சூடான ஏன(பாத்திர)ங்களையெடுக்கப் பயன்படுத்தும் கைப்பிடிதுணி (தைலவ. தைல.); piece of cloth used in handling hot vessels.

*[பிடி + சீலை. சீரை → சீலை.]*

**பிடிச்சுராவி** *pidiccurāvi,* பெ. (n.) தச்சுக் கருவிகளுள் ஒன்று; bench-vice. (C.E.M.)

*[பிடி → பிடிச்சு + அராவி. அராவு → அராவி]*

**பிடிச்சேரிப்பங்கு** *pidiccēri-p-pangu,* பெ. (n.) *பிடித்த வேர்ப்பங்கு* பார்க்க; see *piditta vēr-p-pangu.* (C.G)

*[பிடித்தவேர்ப்பங்கு → பிடிச்சேரிப்பங்கு]*

**பிடிசாவல்** *pidi-šāval,* பெ. (n.) விதை நீக்கப்பட்ட சேவல்; capon. (Pond.)

*[பிடி + சாவல். சேவல் → சாவல்]*

**பிடிசுட்டுப்படைத்தல்** *pidi-šuttu-p-padaittal,* பெ.(n.) வீட்டுத் தெய்வத்திற்குப் பிடிப்பணியாரம் சுட்டுப் படைக்கும் (நிவேதிக்கும்) சடங்கு (வின்.); the ceremony of offering cakes to the household deity.

*[பிடி + சுட்டு + படைத்தல்]*

**பிடிசுவர்** *pidi-šuvar,* பெ. (n.) கைப்பிடிச்சுவர் (இ. வ.); parapet wall.

*[பிடி + சுவர்]*

**பிடிசுற்று–தல்** *pidi-šurru-,* 6 செ. கு. வி. (v.i.) வண்ணமூட்டிய வகை உணவு (சித்திரான்னங்)களைச் சுற்றி யெறிந்து மணமக்கட்குக் கண்ணேறு (திருட்டி)

கழித்தல்; to wave coloured boiled rice around the bride and bridegroom for averting the evil eye.

*[பிடி + சுற்று–]*

**பிடிசூழ்தல்** *piḍi-šūḻdal*, பெ. (n.), தானங் கொடுக்கும் நிலத்தின் எல்லையைக் காட்டப் பெண்யானையோடு செல்லுஞ் சடங்கு; the ceremony of indicating the boundary of a gift land by walking round it with a female elephant. (S.I.I.iii, **305.**)

*[பிடி + சூழ்தல்]*

**பிடிசூழ்ந்துகல்நாட்டு–தல்** *piḍi-šūḻndu-kal-nāṭṭu-*, 5 செ. குன்றாவி. (v.t.) *பிடாகை நடத்–தல்* பார்க்க; see *piḍāgai - naḍa-.*, *"மேல் வேம்ப நாட்டு நாட்டாரும் பிரம்ம தேயக் கிழவரும் நாலாபுரத்து ஊராரும் உடனின்று நிலம் அளந்து பிடிசூழ்ந்து கல்நாட்டி"* (சிவகாசிச் செப்பேடுகள்.)

*[பிடி + சூழ்ந்து + கல் + நாட்டு–,]*

**பிடிசெம்பு** *piḍi-šembu*, பெ. (n.) கைப்பிடி யோடு கூடிய செப்பு ஏனம் (பாத்திரம்); a kind of metallic vessel with a handle.

*[பிடி + செம்பு. சுல் → செல் → சேல் = செந்நிறக்கொண்டை மீன். செல் → செய் → செய் → செய்ம்மை → செம்மை = சிவப்பு. செம்மை → செம் → செம்பு = தாம்பரம், செம்பினாற் செய்த குடிநீர்க்கலம்.]*

**பிடிசோறு** *piḍišōṟu*, பெ. (n.) கைப்பிடி யளவுள்ள சோறு; a handful of cooked rice.

*[பிடி + சோறு. சுல் → (சொல்) → சொலி= சொலித்தல் = விளங்குதல். சுல் → சொல். சொல் = பொன்போற் பொலியும் கூலமாகிய நெல். சொல் → சொன்றி → சோறு]*

**பிடித்தபிடி** *piḍitta-piḍi*, பெ. (n.) **1.** கையினாற் கொண்டபிடி; grasp, hold. **2.** விடாப்பிடியான கொள்கை (வின்.); opinion firmly hold. **3.** விடாப்பிடியான குணம் (வின்.); obstinacy, stubbornness.

*[பிடி → பிடித்த + பிடி]*

**பிடித்தம்** *piḍittam*, பெ. (n.) **1.** கழிவு; with holding a part of payment deduction. *'சம்பளப் பிடித்தம்'.* **2.** சிக்கனம்; frugality, thrift. *'பிடித்த மாய்ச் செலவு செய்கிறான்'.* **3.** மனப் பொருத்தம்; amicableness, agreement. *'எனக்கும் அவனுக்கும் பிடித்தமில்லை'.* **4.** விருப்பம்; liking, relish. *'இனிப்புப் பண்டத்தில் எனக்குப் பிடித்தம் அதிகம்'*

**க.** கிடித; **து.** பிடித, பிட்த

*[பிடி → பிடித்தம்]*

**பிடித்தம்செய்–தல்** *piḍittam-šey-*, 1 செ. குன்றாவி. (v.t.) ஒன்றிற்கு ஏற்படுத்தப்பட்ட விலையில் குறிப்பிட்ட காரணங்களுக்காகச் சிறிய தொகையைக் கழித்தல்; to deduct effected in a sum at the time of payment. *"இந்த முறை தரமான அரிசியாக இல்லாததால் மூட்டை ஒன்றுக்குப் பத்து உரூபா பிடித்தம் செய்கிறார்கள்.*

*[பிடி → பிடித்தம் + செய்–, 'செய்' து.வி.]*

**பிடித்தவேர்ப்பங்கு** *piḍitta-vēr-p-paṅgu*, பெ. (n.) பண்ணை வேலையாளுக்குரிய விளைச்சல் பங்கு; share of the produce

given to farm labourer who contributes labour only, the owner supplying agricultural inplements, plough-cattle and seeds. (C.G).

*[பிடி → பிடித்த + ஏர் + பங்கு]*

**பிடித்தாட்டு—தல்** *pidittāṭṭu-*, 5 செ. குன்றாவி. (v.t.) ஒன்றின்மேல் அதிகாரம் செலுத்துதல்; to obsess. அப்பழக்கம் அவனைப் பிடித்தாட்டிக் கொண்டிருக்கிறது (உ.வ.)

*[பிடித்து + ஆட்டு—. ஆடு - ஆட்டு]*

**பிடித்தாடி** *piḍittāḍi*, பெ. (n.) பலகறை; cowry shell. *'பிடித்தாடியன்ன பிறழ்பற் பேயார'* (பு. வெ. 8,6)

*[பிடி → பிடித்து + ஆடி. ஆடு → ஆடி]*

**பிடித்து[1]** *piḍittu*, பெ. (n.) கைப்பிடிப் பொருள்; handful. *'பிடித்தெருவும் வேண்டாது'* (குறள், 1037.)

*[பிடி → பிடித்து]*

**பிடித்து[2]** *piḍittu*, வி.எ. (adv.) தொடங்கி; from, beginning with. *'என் பிறப்பே பிடித்து'* (ஈடு, 2, 1, 1.)

*[பிடி → பிடித்து]*

**பிடித்துக்கொள்(ளு)—தல்** *piḍittu-k-koḷ(ḷu)-*, 10 செ. குன்றாவி. (v.t.) சுளுக்குதல் (கொ.வ.); to contract, as a nerve or muscle by rheumatism or cramp.

*[பிடி → பிடித்து + கொள்—]*

**பிடித்துணி** *piḍi-t-tuṇi*, பெ. (n.) *பிடிச்சீலை* பார்க்க; see *piḍi-c-cilai.*

*[பிடி + துணி]*

**பிடித்துராவி** *piḍitturāvi*, பெ. (n.) *பிடிச்சுராவி* பார்க்க; see *piḍiccurāvi.* (C.G.)

*[பிடி → பிடித்து + அராவி]*

**பிடித்துவைத்தபிள்ளையார்** *piḍittu-vaitta piḷḷaiyār*, பெ. (n.) இருக்கும் நிலையிலேயே அசைவற்று இருத்தல்; staying put. 'பிடித்து வைத்த பிள்ளையார் போல உட்கார்ந் திருக்கிறாயே! கொஞ்சம் கடைக்குப் போய் வரக்கூடாதா?'

*[பிடித்துவைத்த + பிள்ளையார்]*

**பிடித்தைலம்** *piḍi-t-tailam*, பெ. (n.) பிடிப்பு நோவுள்ள விடத்துத் தோலின் மீது தடவும் எண்ணெய் (தைலம்) (பைஷஜ.3.); liniment.

*[பிடி + தைகலம்]*

*Skt. taila > த. தைலம்*

**பிடிதண்டம்** *piḍi-taṇḍam*, பெ. (n.) காரண மில்லாமல் ஒருவனைப் பிடித்துத் துன்புறுத்துகை (வின்.); unjust seizure of an innocent person.

*[பிடி + தண்டம். தள் → தண்டு → தண்டி. தண்டித்தல் = தடியாலடித்தல், தண்டனை செய்தல். தண்டி → தண்டம் = தண்டனம், தண்டனை.]*

**பிடிதம்** *piḍidam*, பெ. (n.) இரவல் (பிச்சை) (திவா.); alms.

*[பிடி → பிடிதம்]*

**பிடிதுணி** *piḍi-tuṇi*, பெ. (n.) *பிடிச்சீலை* பார்க்க; see *piḍi-c-cilai.*

*[பிடி + துணி]*

**பிடிநாள்** *piḍi-nāḷ,* பெ. (n.) நல்ல நாள்; auspicious day. *'பிடிநாள் பண்ணவிழ்தம்'* (இராசவைத். 71.).

*[பிடி + நாள்]*

**பிடிநிலை** *piḍi-nilai,* பெ. (n.) உறுதி (இ. வ.); firmness; resolve.

*[பிடி + நிலை. நில் → நிலை]*

**பிடிநூக்கர்** *piḍi-nūkkar,* பெ. (n.) *பிண்ணாக்கர்* பார்க்க; see *piṇṇākkar.*

**பிடிநெல்** *piḍi-nel,* பெ. (n.) அளக்கும் போது அளவு ஒன்றுக்கு ஒரு பிடியளவாக அளப்போர் எடுக்கும் உரிமை நெல் (வின்.); handful of paddy, taken by a person from each measure as his perquisite for measuring.

*[பிடி + நெல். நுல் → நெல் = பொன்போல் விளங்கும் தவசம் (கூலம்)]*

**பிடிப்பி–த்தல்** *piḍippi-,* 4. செ. குன்றாவி. (v.t.) விதையடித்தல்(வின்.); to geld. *'பிடிப்பித்த மாடு'.*

*[பிடி → பிடிப்பி. 'பி' பி.வி.ஈ.று]*

**பிடிப்பிச்சை** *piḍi-p-piccai,* பெ. (n.) பிடியளவிடும் பிச்சை (வின்.); handful of rice given as alms.

*[பிடி + பிச்சை]*

**பிடிப்பிட்டு** *piḍi-p-piṭṭu,* பெ. (n.), சிற்றுண்டி வகை (வின்.); a kind of confectionary.

*[பிடி + பிட்டு]*

**பிடிப்பு¹** *piḍippu,* பெ. (n.) 1. ஒரு நிலையில் நிலைக்க பிடிபாடாக அமைவது, பற்றுகை; grasping, holding, seizure, catching. எவ்வகைப் பிடிப்பும் இல்லாமல் கம்பத்தின் மேல் நின்று சுழன்று ஆடினான் (உ.வ.). 2. ஒட்டுகை; adhesion, sticking, glutinousness, cohesiveness. 3. ஈடுபாடு, பற்று; attachment, involvement. குடும்பத்தின்மேல் பிடிப்பே இல்லாதவன் போல் நடந்து கொண்டான் (உ.வ.). 4. பிடித்தம் பார்க்க; see piḍittam. 5. கருத்து; idea. *'பிறர் செல்வமும் நம்பேறெனப் பிடிப்புள்ள வெம்மிடத்து'* (பிரபோத. 27,62). 6. சேர்க்கப்பட்ட பொருள் (வின்.); money amassed, accumulation, encroachment. 7. உறுதி; rigidness, pertinacity. 8. பிணைப்பு; bond, tie. 9. கைப்பிடி (இ.வ.); handle. 10. உதவி, பயன்பாடு (வின்.); favour. ஒருவனுக்கு பிடிப்பாய்ப் பேசு. 11. பிடிபாடு(ஆதாரம்); support.

ம. பிடிப்பு; க. பிடிபு

*[புள் → (பிள்) → பிண் → பிடி → பிடிப்பு. 'பு' தொ.பெ.ஈ.று]*

**பிடிப்பு²** *piḍippu,* பெ. (n.) ஊதை நோயி னாலுண்டாகும் மூட்டு அல்லது கைகாற் பிடிப்பு; rigidity of the joints from the effects of rheumatism, gonorrhocal, rheumatism, muscular cramps, contraction of nerves.

*[புள் → (பிள்) → பிண் → பிடி. பிடித்தல் = பற்றுதல், அகப்படுத்துதல். பிடி → பிடிப்பு = மூட்டு உறுப்புகள் ஒன்றோ டொன்று பற்றியிருப்பதைபோல் இயக்கம் குன்றிக் காணப்படும் நிலை, தசைகள் தம் இயல்புத்தன்மையில்லாமல் விறைப்பாய் இருக்கும் நிலை. 'பு' தொ. பெ. ஈறு]*

**பிடிப்புக்கேற்று–தல்** *piḍippu-k-kēṟṟu-,* 5செ.குன்றாவி. (v.t.) சுற்றப்பட்ட பாவின் இழைகளைப் பன்னையிலுள்ள இழைகளுடனும் பின் அச்சிலும் ஏற்றுதல்; to load the thread of a warp to heddles as the reed.

*[பிடிப்புக்கு + ஏற்று–,]*

**பிடிப்புவாதம்** *piḍippu-vādam,* பெ. (n.) பிடிப்பூதை பார்க்க; see *piḍi-p-pūḍai.*

*[பிடி → பிடிப்பு + வாதம்]*

Skt. vāta › த. வாதம்.

**பிடிப்பூதை** *piḍippūdai,* பெ. (n.) ஊதை நோய் வகையு ளொன்று; rheumatism.

*[பிடிப்பு + ஊதை]*

**பிடிபடு[1]–தல்** *piḍi-paḍu,* 20 செ. குன்றாவி. (v.t.) **1.** பிடிக்கப் படுதல்; to be caught, taken, seized. **2.** புலப்படுதல்; to be grasped, understood, comprehended. *'நான் சொன்னது அவனுக்குப் பிடிபட வில்லை'* **3.** அடைதல்; to attain, get. *'மருவினோர் குணம் பிடிபடல் வையகத் தியல்பே'* (காஞ்சிப்பு. நகரப். 74) **4.** இணங்குதல்; to suit, to be suitable, to agree with.

*[பிடி + படு. 'படு' து.வி]*

**பிடிபடு[2]–தல்** *piḍi-paḍu-,* 20 செ. கு. வி (v.i.) அளவுக்கு அடங்குதல், கட்டுப்படுதல்; to be within bounds. தேர்வில் வெற்றி பெற்றுவிட்டோம் என்ற செய்தி கிடைத்ததும், அவனுக்கு மகிழ்ச்சி பிடிபடவில்லை (உ.வ.)

*[பிடி + படு–.]*

**பிடிபந்தம்** *piḍi-pandam,* பெ. (n.) தீப்பந்த வகை; a kind of flambeau (Pudu. Insc. 300)

*[பிடி + பந்தம். பந்து → பந்தம். 'அம்' பெ.பொ.பி.]*



**பிடிபாடாகக்கொள்(ளு)–தல்** *piḍipāḍāga-k-koḷ(ḷu)-,* 10 செ.குன்றாவி. (v.i.) உடைமை கட்குரிய ஆவணக்களரியில் சான்றாகக் கொள்ளுதல்; to document the weath. *'இவ்வோலை பிடிபாடாகக் கொண்டு கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொள்ளுதல்'* (தெ. கல். தொ. 17. 202.)

*[பிடிபாடு + ஆக + கொள்–.]*

**பிடிபாடு** *piḍi-pāḍu,* பெ. (n.) **1.** பிடிக்கப்பட்டது; draught, that which is caught. **2.** சேர்க்கப் பட்டது; that which is amassed, as money. **3.** சான்று; authority, official sanction. *'இவ்வோலை பிடிபாடாகக் கொண்டு'* (S.I.I: iii.475) **4.** பற்று; affection, attachment.

*[பிடி + பாடு. படு → பாடு. ஒ.நோ. கடு → காடு. இடிபடு → இடிபாடு]*

**பிடிபாடுதீட்டு** *piḍipāḍu-tiṭṭu,* பெ. (n.) அடிப்படைச் சான்றாக எழுதித்தரும் உறுதிச் சீட்டு; contimation document. *"இம்மூவோம் பிடியாடு தீட்டுக் குடுத்த பாபிவது"* (தெ. கல். தொ. 5. கல். 475).

*[பிடிபாடு + தீட்டு. தீற்று → தீட்டு]*

**பிடிபிடியெனல்** *piḍi-piḍi-y-eṉal,* பெ. (n.) விரைவுக் குறிப்பு; expr. signifying haste. நேற்று என்னைப் பிடிபிடியென பிடித்து விட்டாள் (உ.வ.).

*[பிடி + பிடி + எனல்]*

**பிடிபோடு—தல்** *piḍi-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) கைப்பிடி பொருத்துதல்; to fix up handle. பட்டறைக்குப் போய் இந்த அறுவாளுக்குப் பிடிபோட்டுக் கொண்டு வரவேண்டும் (உ.வ.)

து. புடிகுத்துணி

*[பிடி + போடு—,]*

**பிடிமானம்** *piḍi-māṉam,* பெ. (n.) 1. *பிடித்தம்* (யாழ். அக.) பார்க்க; see *piḍittam.* 2. *பிடிப்பு–* 6,7. (வின்.) பார்க்க; see *piḍippu* 6,7. 3. கைப்பிடி (இ. வ.); hilt, handle.

ம. பிடிமானம்

*[பிடி + மானம். 'மானம்' தொழிற்பெயர் விகுதி, மானம் என்னுஞ்சொல் அளவு என்னும் பொருளை அடிப்படையாகக் கொண்டு ஒரு தொழிற்பெயர் ஈறாகவும் (விகுதியாகவும்) வரும். எ.டு: கட்டுமானம் = கட்டும் அளவு, கட்டடம். படிமானம் = படியும் அளவு, படிவு. அடைமானம், செரிமானம், சேர்மானம், தீர்மானம் முதலிய தொழிற்பெயர்களில், மானம் என்பது ஈறு (விகுதி) அளவாக நின்றது. (மு.தா. 203)]*

**பிடிமீசை** *piḍi-mīšai,* பெ. (n.) கைப்பிடி யளவுள்ள மீசை வகை; moustache of seizable growth.

*[பிடி + மீசை]*

**பிடிமொந்தை** *piḍi-mondai,* பெ. (n.) ஏன (பாத்திர)வகை, கைப்பிடியுள்ள மண்சாடி; a kind of vessel.

*[பிடி + மொந்தை. முள் → மொள் → மொண்டை → மொந்தை = கள் முகக்குங் கலம்.]*

**பிடியரிசி** *piḍi-y-arišі,* பெ. (n.) இரப்பதற்காக இரப்பவருக்குக் கொடுப்பதற்காக எடுத்து வைக்கும் கைப்பிடியரிசி (வின்.); handful of rice set apart for alms.

க. ஹிடியக்கி

*[பிடி + அரிசி. அரி → அரிசி]*

**பிடியரிசிக்கலயம்** *piḍi-y-arišі-k-kalayam,* பெ. (n.) இரப்போர்க்குக் கொடுப்பதற்காகப் பிடியரிசியிடும் கலயம்; earther pot in which piḍiyarišі is deposited daily to be used as alms.

*[பிடி + அரிசி + கலயம். குல் → கல் → கலம் → கலயம்]*

**பிடியரிசிக்குட்டான்** *piḍi-arišі-kuṭṭāṉ,* பெ. (n.) நாள்தோறும் பிடியரிசியிடும் ஓலைக் குட்டான் வகை (வின்.); ola basket for piḍiyarišі.

*[பிடி+அரிசி + குட்டான். குள் → குட்டு → குட்டம் = குறுமை, செய்யுளடிக் குறுமை. குட்டு → குட்டான் = சிறுபடப்பு, சிறிய ஓலைப் பெட்டி.]*

**பிடியல்** *piḍiyal,* பெ. (n.) 1. சிறு துகில் (பிங்.); small garment. 2. நல்லாடை (யாழ். அக.); fine garment.

*[பிடி → பிடியல்]*

**பிடியன்[1]** *piḍiyaṉ,* பெ. (n.) குறித்த அளவாகப் பண்டங் கொள்ளத்தக்க பானை (வின்.); pot that will hold a given quantity.

*[பிடி → பிடியன்]*

**பிடியன்[2]** *piḍiyaṉ,* பெ. (n.) பெண் யானை; female elephant.

*[பிள் → பிடி = பெண்யானை (மு.தா.168) பிடி→ பிடியன்]*

**பிடியாட்டம்** *piḍi-y-āṭṭam,* பெ. (n.), ஒரு வகைச் சீட்டாட்டம் (இ. வ.); cards.

**து.** பிடி (சீட்டு), பிடிகொப்புனி (சீட்டாடு)

*[பிடி + ஆட்டம்]*

**பிடியாணை** *piḍi-y-āṇai,* பெ. (n.) குற்றஞ் சாட்டப்பட்டவரை அல்லது வழக்கு (விசாரணை)க்கு முறை (நீதி)மன்றம் வர மறுப்பவரைச் சிறை (கைது)செய்ய அழைத்து வருமாறு காவல் துறைக்கு முறைமன்றம் பிறப்பிக்கும் ஆணை; warrant of arrest. கொலைக்குற்றம் செய்தவனை முறைமன்றம் பிடிக்கும்படி பிடியாணை பிறப்பித்தது.

*[பிடி +ஆணை]*

**பிடியாப்பு** *piḍiyāppu,* பெ. (n.) மேழியிலுள்ள கைப்பிடி; handle of the hoe.

*[பிடி → பிடியாப்பு]*

**பிடியாள்** *piḍi-y-āḷ,* பெ. (n.) **1.** பிடித்தடைக்கப் பட்டவன் (வின்.); person seized or taken into custody. **2.** அமஞ்சி (இலவச) வேலைக்காரன் (வின்.); workman pressed into service. **3.** கூலிக்காக அமர்த்தப்பட்டவன்; day labourer.

*[பிடி + ஆள்]*

**பிடியானை** *piḍiyāṉai,* பெ. (n.), *பிடி[6]* பார்க்க; see *piḍi[6]*.

**க.** பிடியானெ.

*[பிடி + யானை.]*

**பிடியெழுத்தாணி** *piḍi-y-eluttāṇi,* பெ. (n.) மடக்கெழுத்தாணி (வின்.); a kind of iron style.

*[பிடி + எழுத்தாணி]*

**பிடிலம்மை** *piḍilammai,* பெ. (n.) பொன்னுக்குவீங்கி; mumps.

*[பிடி → பிடில்+ அம்மை]*

**பிடிலிகைவாரி** *piḍiligai-vāri,* பெ. (n.) பீடத்தின் மீது பெறப்படும் காணிக்கை; offering at pedestal of a deity. *"இப்பிடிலிகை வாரி கொண்டு மாணியிரண்டு கட்டுப் பணி செய்யக் கடவேனாகவும்"* (தெ. கல். தொ.19. கல். 357.).

**பிடிவாதக்காரன்** *piḍivāda-k-kāraṉ,* பெ. (n.) தான் கொண்டதை விடாது வலியுறுத்துபவன்; obstinate, self willed person.

*[பிடிவாதம் + காரன்]*

**பிடிவாதம்** *piḍi-vādam,* பெ. (n.) **1.** கொண்டது விடாமை, தன் முரண்டு; obstinacy, pertinacity, stubbornness, perverseness. **2.** உறுதியுள்ள நிலை; firm determination.

**தெ.** பிடிவாதமு

*[பிடி+ வாதம்]*

**பிடிவாதம்பிடி–த்தல்** *piḍivadam piḍi-,* **4.** செ.குன்றாவி. (v.i.) தன்முரண்டு பிடித்தல்; to be obstinacy.

மறுவ. அடம்பிடித்தல், அடம் பண்ணுதல்

*[பிடிவாதம் + பிடி –.'பிடி'.து.வி.]*

**பிடிவாதி** *piḍivādi,* பெ. (n.) **பிடிவாதக்காரன்** (வின்.) பார்க்க; see *piḍivādakkāraṉ.*

*[பிடிவாதம் → பிடிவாதி]*

**பிடிவாள்** *piḍivāḷ,* பெ. (n.) கைப்பிடியுள்ளவாள்; a kind of saw which consists handle.

**து.** பிடிபாள்

*[பிடி + வாள். வள் → வாள் = வளைந்த வெட்டுக்கருவி]*



**பிடிவிடு–தல்** *piḍi-viḍu-,* 20 செ. கு. வி. (v.i.) 1. கைப்பிடிப்பு விடுதல்; to let go one's hold or grasp. 2. பற்று (அபிமானம்) நீங்குதல்; to give up attachement of one's religious opinion or faith.

*[பிடி + விடு–.]*

**பிடிவிளக்கு** *piḍi-viḷakku,* பெ. (n.) விளக்கு வகை; a kind of lamp. *'ஸ்ரீபலிக்கு பிடி விளக்கு இரண்டும்'* (S.I.I.vii, **311.)**

*[பிடி + விளக்கு. கோயிற்பூசையில் பயன் படுத்தும் கைப்பிடியோடு கூடிய விளக்கு]*



**பிடு–தல்** *piḍu-,* 18 செ. குன்றாவி. (v.t.) இரண்டாக அல்லது துண்டு துண்டாகப் பிளத்தல்; to break into two or many pieces.

*[புள் → பிள். பிள்ளுதல் = இரண்டாகவோ பலவாகவோ பிளந்து விடுதல், துண்டு படுதல். பிள் → பிள. பிளத்தல் = வெடித்தல், திறத்தல். பிள் → பிடு–, (வே. க.109–111)]*

**பிடுக்கு** *piḍukku,* பெ. (n.) ஆணின் இனப்பெருக்கச் சுரப்பி உறுப்பு (பீசம்); testicle.

மறுவ. விதை.

**ம.** பிடுக்கு; **து.** பிட்டு

*[புல் → புள் → பிள் → பிழம்பு = திரட்சி. பிள் → பிண்டு = திரட்சி (வே.க.3.81). புள் → பிள் → பிடு → பிடுகு = திரண்ட உறுப்பு. திரண்டு விதையைப் போன்றிருப்பதால் விதை எனப்பட்டது.]*

**பிடுகு** *piḍugu,* பெ. (n.) இடி; thunderbolt. பெரும்பிடுகு. (S.I.I. ii,341)

**ம., தெ.** பிடுகு, பிட்கு; **பட.** குடுகு.

*[பிள் → பிடு → பிடுகு = வானம் வெடிப்பது போன்ற இடி (வே. க. 311)]*

**பிடுங்கல்** *piḍuṅgal,* பெ. (n.) **1.** வலிந்து எடுக்கை; pulling out. **2.** பொருள்பறித்தல்; extortion. **3.** தொந்தரவு; annoyance, vexation. **4.** இடையூறு செய்பவ–ன்–ள், தொந்தரவு செய்பவ–ன்–ள்; troublesome person.

*[பிடுங்கு → பிடுங்கல். 'அல்' தொ. பெ. ஈறு]*

**பிடுங்கி** *piḍuṅgi* பெ. (n.) வலிந்து பிடுங்குபவன்; extractor.

*[பிடு → பிடுங்கி. 'இ' வினைமுதலீறு]*

**பிடுங்கித்தின்னு–தல்** *piḍiuṅgi-t-tiṉṉu-.* 14 செ. குன்றாவி. (v.t.) **1.** கொத்தித் தின்னுதல்; to peck at. **2.** பறித்து (அபகரித்து) உண்ணுதல்; to live by extortion **3.** வருந்துதல்; to vex, annoy.

*[பிள் → பிடு → பிடுங்கு → பிடுங்கி + தின்னு–,]*

**பிடுங்கியுண்ணி** *piḍuṅgi-y-uṇṇi,* பெ. (n.) **1.** கவர்ந்து உண்பவன் (அபகரித்துண்பவன்); one who live by extortion. **2.** வருத்தி வாங்குபவன்; extortioner

**மறுவ.** ஒட்டுண்ணி.

*[பிடுங்கி + உண்ணி. உண் → உண்ணி. 'இ' வினைமுதலீறு]*

**பிடுங்கிவிடு¹–தல்** *piḍuṅgi-viḍu-,* 20 செ.கு.வி. (v.i.) ஓடிப்போதல்; to run away. *'அவன் எங்கே பிடுங்கி விட்டான்?'*

*[பிடுங்கி + விடு–]*

**பிடுங்கிவிடு²–தல்** *piḍuṅgi-viḍu-,* 18 செ. குன்றாவி. (v.t.) *பிடுங்கிதின்(னு)–தல்* (இ. வ.) 3 பார்க்க; see *piḍuṅgi-t-tiṉ(ṉu)-.*3

*[பிள் → பிடு → பிடுங்கி. பிடுங்கி + விடு]*

**பிடுங்கீரை** *piḍuṅgīrai,* பெ. (n.) *பிடுங்குகீரை,* (வின்.) பார்க்க; see *piḍuṅgukīrai.*

*[பிடுங்குகீரை → பிடுங்கீரை]*

**பிடுங்கு¹–தல்** *piḍuṅgu-,* 5 செ. குன்றாவி. (v.t.) **1.** பறித்தல். to pull out, pull off, pluck up, extract. *'மலை பிடுங்கினர்'* (கம்பரா. அகலி.23.) **2.** கவர்தல்(அபகரித்தல்); to extort, wrest. **3.** தடையை உடைத்துக் கொண்டு விரைந்து செல்லுதல்; to break through any obstruction and rush through with force, as a flood. *'ஆறு பிடுங்கிக் கொண்டு போகிறது'* **4.** கொத்துதல், to bite, peck, strike. **5.** கொட்டுதல்; to sting. **6.** வருத்துதல், to vex, annoy. *'ஏன் என்னைப் பிடுங்குகிறாய்?'*

**ம.** பிடுங்குக

*[பிள் → பிடு → பிடுகு = வானம் வெடிப்பது போன்ற இடி. பிடு → பிடுகு → பிடுங்கு. ஒ.நோ.* OE.brecan; OS.brekan; OHG.brethan; Goth.brikan; E.break; L.frag, frang, fract. *(வே.க.3.111)]*

**பிடுங்கு²–தல்** *piḍuṅgu-,* 5 செ. குன்றாவி. (v.t.) **1.** மிகுதியாதல்; to be rife. *'நோய் பிடுங்குகிறது'.* **2.** தொந்தரவு கொடுத்தல்; to give trouble. *'கொசு பிடுங்குகிறது.'*

*[பிள் → பிடு → பிடுங்கு]*

**பிடுங்குகீரை** *piḍuṅgu-kīrai,* பெ. (n.) முளைக்கீரை (வின்.); young, edible greens.

*[பிடுங்கு + கீரை]*

**பிடுங்குண்ணி** *piḍuṅguṇṇi,* பெ. (n.) 1. பிடுங்கப்பட்டவ–ன்–ள் (வின்.); one deprived of his means of livelihood by an extortioner. 2. பிடுங்கியுண்ணி பார்க்க; see piḍuṅgiyuṇṇi. 3. துன்புறுத்துவோன்; a teasing person, one who causes annoyance.

*[பிடுங்கு + உண்ணி]*

**பிடை** *piḍai.* பெ. (n.) மாழைகளை உருக்கும் கலம் (குகை) (வின்.); melting pot, crucible.

**பிடையன்** *piḍaiyaṉ,* பெ. (n.) *புடையன் பார்க்க,* see *puḍaiyaṉ.*

*[புடையன் → பிடையன்]*

**பிண்டஅரிதளம்** *piṇḍa - aridaḷam,* பெ. (n.) தாளக வைப்பு நஞ்சு; a form of yellow orpiment.

*[பிண்டம் + அரிதளம். அரிதாரம் அரிதாலம் → அரிதாளம்→ அரிதளம்.]*

**பிண்டக்கரு** *piṇḍa-k-karu,* பெ. (n.) உருவற்ற கரு(வின்.); embryo, foetus

*[பிண்டம் + கரு. குரு → கரு = சூல், முட்டை, குழவி, குட்டி]*

**பிண்டக்கருமம்** *piṇḍa-k-karumam,* பெ. (n.) தென்புலத்தார்க்குப்பிண்டம் படைக்கும் சடங்கு; ceremony of offering balls of cooked rice to the manes.

*[பிண்டம்+கருமம். புல் → புள் → பிள → பிழம்பு = திரட்சி, வடிவு, உடல். பிள் → பிண்டு = திரட்சி, உடம்பு. பிண்டு → பிண்டம் = திரளை, சோற்றுத் திரளை, உண்டை, தென்புலத்தார்க்குப் படைக்கும் சோற்றுண்டை.]*

**பிண்டக்கல்** *piṇḍa-k-kal,* பெ. (n.) தொண்ணூறுநாள்முதல்150 நாள்களுக்குரிய கருவளர்ச்சி; foetus aged ninty to one hundred and fifty days.

*[பிண்டம் + கல்]*

**பிண்டக்காப்பு** *piṇḍa-k-kāppu,* பெ. (n.) சோறு (இ.வ.); food, boiled rice, used in contempt. *'பிண்டக் காப்புக்குத் தாளம் போடுகிறான்'.*

*[பிண்டம் + காப்பு. கா → காப்பு]*

**பிண்டக்கிரியை** *piṇḍa-k-kiriyai,* பெ. (n.) *பிண்டக் கருமம்* பார்க்க; see *piḍṇa-k-karumam.*

*[பிண்டம் + கிரியை]*

Skt. *kriyā* > *த. கிரியை*

**பிண்டக்கோரை** *piṇḍa-k-kōrai,* பெ. (n.) முதிராச் சூலின் தலை மயிர்; hairs on the head of the foetus.

*[பிண்டம் + கோரை.]*

**பிண்டகம்** *piṇḍagam,* பெ. (n.) நறும்புகை; fragrant smoke.

*[புள் → (பிள்) → பிண்டு → பிண்டம்= திரட்சி (மு.தா.209). பிண்டம் → பிண்டகம் = திரண்ட சுறாலைக் கட்டி, அதனின்று வரும் நறும் புகை.]*

**பிண்டகருமம்** *piṇḍa-karumam,* பெ. (n.) *பிண்டக் கருமம்* (வின்.) பார்க்க; see *piṇḍa-k-karumam.*

*[பிண்டம் + கருமம்]*

**பிண்டகலை** —*piṇḍa - kalai,* பெ. (n.) கதிர்க்கலை; the vital air passing through the right nostril which is essential for existence.

**பிண்டகன்** *piṇḍagaṉ,* பெ. (n.) முன்னோர்க்கு (பிதிரர்க்கு)ப் பிண்டமிட்டுச் சடங்கு செய்வோன் (வின்.); one who offers an oblation of cooked rice to the manes.

*[பிண்டம் → பிண்டகன் = பிண்டம் படைப்போன் வே.க.3,82]*

**பிண்டகை** *piṇḍagai,* பெ. (n.) ஐவகை மணத்தியுள் (கஸ்தூரி) ஒன்று (பார்த்த. 1081.) hard musk, one of five kinds of kastūri, q.v.

*[பிண்டம் → பிண்டகை]*

**பிண்டகோசம்** *piṇḍa-kōšam,* பெ. (n.) நறுமணப் பிசின்; fragrant resin.

*[பிண்டம் + கோசம்]*

**பிண்டச்சரக்கு** *piṇḍa-c-carakku,* பெ. (n.) மருந்துச் சரக்கு; a medicinal drug.

*[பிண்டம் + சரக்கு. சர் → சரகு → சரக்கு = காய்ந்தபண்டம், காய்ந்த வணிகப்பண்டம், வணிகப்பண்டம், மருந்துப்பண்டம்]*

**பிண்டச்சவுக்காரம்** *piṇḍa-c-cavukkāram,* பெ. (n.) ஐந்து வகைச் சுண்ணம், மூன்று வகை யுப்புச் சேர்த்துச் செய்யப்பட்ட சித்தர் குளிகை; a medicated pill prepared by five kinds of calcined powders and three kinds of salts by a process enumerated in Tamil Siddhar's medical science.

*[பிண்டம் + சவர்க்காரம். சவர்க்காரம் → சவுக்காரம்]*

**பிண்டச்சாறு** *piṇḍā-c-cāṟu,* பெ. (n.) கடைச் சரக்குகளைக் கொண்டு சித்தர்களால் காய்ச்சப் பெறும் மருந்துச்சாறு; an essence prepared from the foetus and other medicines by Siddhars.

*[பிண்டம் + சாறு]*

**பிண்டச்சிதைவு** *piṇḍa-c-cidaivu,* பெ. (n.) கருப்ப வழிவு; abortion.

*[பிண்டம் + சிதைவு]*

**பிண்டச்சூம்பல்** *piṇḍa-c-cūmbal,* பெ. (n.), கருவளர்ச்சியடையாது மெலிந்து, நாளடைவில் மறைந்து போதல்; a trophy of a foetus in the womb, is one to the action of the deranged vāyu.

*[பிண்டம் + சூம்பல். சும் → சும்பு → சூம்பு. சூம்புதல் = மெலிந்து வாடுதல். சூம்பு → சூம்பல். 'அல்' தொ. பெ. ஈறு]*

**பிண்டச்செயநீர்** *piṇḍa-c-ceyanīr,* பெ. (n.) கருவுப்பினின்று வடிக்கும் நீர்ம மருந்து; a medicinal liquid or acid obtained by a process from the foetus salt.

*[பிண்டம் + செயநீர்]*

**பிண்டசம்** *piṇḍašam,* பெ. (n.) செவ்வந்தி; camonicle.

**பிண்டசலனம்** *pinḍaśalaṉam,* பெ. (n.) கருவுற்றக் காலத்தில் வயிற்றில் காணும் கருவின் அசைவு; the recognisable movements of the foetus in the uterus.

*[பிண்டம் + சலனம்.]*

Skt. calana > **த.** சலனம்

**பிண்டசூத்திரம்** *pinḍa-śūttiram,* பெ. (n.) தலைமைப்பொருளைப் பொதுப்படக் கூறும் நூற்பா (சூத்திரம்) (நன்.20); śūtram mentioning a major topic in a general way.

*[பிண்டம் + சூத்திரம்]*

Skt. sūtra > **த.** சூத்திரம்

**பிண்டத்தலை** *pinḍa-t-talai,* பெ. (n.) கருவின் தலை; foetus head.

*[பிண்டம் + தலை]*

**பிண்டத்தைலம்** *pinḍa-t-tailam,* பெ. (n.) கடைச்சரக்குகளைச் சேர்த்துக் காய்ச்சும் மருந்து எண்ணெய் (தைலம்); a medicated oil prepared from the medicinal drugs.

*[பிண்டம் + தைலம்]*

Skt. taila > **த.** தைலம்

**பிண்டத்தோற்றம்** *pinḍa-t-tōṟṟam,* பெ. (n.) கருக்கொள்ளுகை (கருவுற்பத்தி); conception.

*[பிண்டம் + தோற்றம்.தோன்று → தோற்றம்]*

**பிண்டதன்** *pinḍadaṉ,* பெ. (n.) **1.** பங்காளி (தாயாதி.) (யாழ். அக.); agnate. **2.** உதவி செய்பவன்; benevolent person. **3.** சுற்றம்; kinsman.

*[பிண்டம் → பிண்டதன்]*

**பிண்டதானம்** *pinḍa-tāṉam,* பெ. (n.) பிண்டப்படைப்பு; offering balls of cooked rice to the manes.

**க.** பிண்டாதான.

*[பிண்டம் + தானம். தள் → (தர்) → தரு தா → தானம்]*

**பிண்டநீர்** *pinḍa-nīr,* பெ. (n.) வெண்ணீர் (சுக்கிலம்) (சித். அக.); semon.

*[பிண்டம் + நீர். நீள் → நீர்]*

**பிண்டப்படைப்பு** *pinḍa-p-paḍaippu,* பெ. (n.) *பிண்டதானம்* பார்க்க; see *pinḍa tāṉam.*

*[பிண்டம் + படைப்பு. படை → படைப்பு. 'பு' தொ. பெ. ஈறு.]*

**பிண்டப்பிரதானம்** *pidṇa-p-piradāṉam,* பெ. (n.) *பிண்டதானம்* பார்க்க; see *pinḍatāṉam.*

*[பிண்டம் + பிரதானம்]*

Skt. pra > **த.** பிர

**பிண்டப்பூநீறு** *pinḍa-p-pūnīṟu,* பெ. (n.) கருவின் மீது படிந்துள்ள மாவைப் போன்ற பொருள்; white coating found deposited on the body of the foetus.

*[பிண்டம் + பூ + நீறு. நீற்று → நீறு]*

**பிண்டப்பை** *pidṇa-p-pai,* பெ. (n.) சூலுற்றப்பின் கரு வளர்வதற்கும் பிறப்பு வரை இருப்பதற்குமான பெண்பால் உயிரிகளில் இருக்கும் உடலுறுப்பு. uterus, womb.

**மறுவ.** கருப்பை, சூற்பை.

*[பிண்டம் + பை. புள் → பொள் → பொய் → பை.]*

**பிண்டப்பொருள்** *piṇḍa-p-poruḷ*, பெ. (n.) கருத்து (வின்.); gist of a verse or passage.

*[பிண்டம் + பொருள்]*

**பிண்டப்பொழிப்பு** *piṇḍa-p-poḻippu*, பெ. (n.) *பிண்டவுரை* (சி. போ. பா. 1. பக், 26, சுவாமி நா.) பார்க்க; see *piṇḍavurai*.

*[பிண்டம் + பொழிப்பு. பொழி → பொழிப்பு = திரட்டு.]*

**பிண்டபாகம்** *piṇḍa-bāgam*, பெ. (n.) ஏழைக்கு அளிக்கும் நன்கொடை (பிச்சை) (அக. நி.); alms.

மறுவ. ஐயம். இரவல்

*[பிண்டம் + பாகம். பகு → பாகு பாகம் = பகுக்கை, கூறு, பாதி, பிச்சை.]*

**பிண்டபாதம்** *piṇḍa-pādam*, பெ. (n.) யானை; elephant.

*[பிண்டம் + பாதம். திரண்டபாதத்தை யுடையது. பதி → பாதம்]*

**பிண்டபுட்பம்** *piṇḍa-puṭpam*, பெ. (n.) 1. பிண்டி (மலை.); mast-tree. 2. செவ்வந்தி; gardechrysanthemum.

*[பிண்டம் + புட்பம்]*

Skt. puṣpa > த. புட்பம்.

**பிண்டபுறக்கவசம்** *piṇḍapuṟa-k-kavašam*, பெ. (n.) கருப்பையைச் சுற்றியுள்ள புறத்தோல்; outer membraneous covering of foetus chorion.

*[பிண்டம் + புறம் + கவசம்]*

**பிண்டம்**[1] *piṇḍam*, பெ. (n.) 1. உண்டை (பிங்.); anything globular or round, lump or mass, ball, globe. 2. உருவற்ற கரு; embryo, foetus. *'உறுப்பில் பிண்டமும்'* (புறநா. 28). 3. உடல்; body. *'உண்டி முதற்றே உணவின் பிண்டம்'* (புறநா. 18.) 4. சோற்றுத்திரள்; ball of boiled rice. *'பிண்டமேய பெருஞ்சோற்று நிலையும்'* (தொல். பொ. 63.) 5. மூதாதையர் (பிதிரர்) பொருட்டுக் கொடுக்கப்படும் சோற்றுண்டை; ball of cooked rice, offered to the manes at a funeral ceremony or šrāddha. 6. பல பொருள்களின் தொகுதி; collection, multitude, aggregate. *'பரிவு தபவெடுக்கும் பிண்ட நச்சின்'* (புறநா. 184.) 7. *பிண்டநூற்பா* (சூத்திரம்) (நன். 20) பார்க்க; see *piṇḍasūttiram*. 8. நூற்பா (சூத்திரம்), இயல், ஒத்து என்ற மூன்றுறுப்புக் கொண்ட நூல்; treatise with subdivisions of šūttiram, iyal, and ōttu. *'மூன்றுறுப்படக்கிய பிண்டத் தானும்'* (தொல். பொ. 480.)

க., து. பிண்ட; தெ. பிடெ, பிடெமு

*[பொள் → பொழி. பொழிதல் → நிறைதல். பொழிதல் = திரட்டுதல். பொழிப்புரை = திரட்டுரை. பொழி = கணு. பொழி → பொழில் = பெருமை, சோலை, நாடு,ஞாலம், பொள் → பிள் → பிண்டு → பிண்டி → பிண்டம் (வ. வ. 236) புல் → பொல்லு = தடி. புள் → (பிள்) → பிண்டு → பிண்டம் = திரட்சி (மு.தா. 209)]*

த, பிண்டம் > Skt. piṇḍa

பிண்டம் என்னும் தென்சொல், வடமொழி மரபின்படி ஈறுகெட்டுப் *'பிண்ட'* என இருக்கு வேதத்தில் நின்று, திரளை, உண்டை என்னும் பொருள்களைக் குறிக்கின்றது. அதனின்று, பிண்டத்வ, பிண்டக், பிண்டன முதலிய தனிச் சொற்களையும்; பிண்டகத்த, பிண்டகரண, பிண்டதர்க்க முதலிய கூட்டுச் சொற்களையும் ஏறத்தாழ எழுபது வரை திரித்துள்ளனர்.

ஆரியத்திற்குத் தமிழொடு அல்லது திரவிடத்தொடு தொடர்பில்லை யென்றும், சமஸ்கிருதம் ஏறத்தாழ ஐந்நூறு சொற்களை மட்டும் திரவிடத்தினின்று கடன் கொண்ட தென்றும், கூறும் பரோ என்னும் சமஸ்கிருதப் பேராசிரியர் கூட பிண்டம் என்னும் சொல் தென் சொல்லே யென்று தம் '*சமஸ்கிருதமொழி*' (Sanskrit language) என்னும் நூலிற் பின்வருமாறு குறித்திருத்தல் காண்க.

piṇḍa, lump, clod: Ka petta, pette, pente,hente hende, clod, lump of earth; Te pedda, pell a id, pendali 'a lump or mass'; Ka., Te. pindu to squeeze together.

ஒ. நோ. பிழி. பிழிதல் = உள்ளிருக்கும் நீர்ப்பொருள் வடியுமாறு, ஒன்றை இறுக்கிப்பிடித்தல்.

பிண்டம் அல்லது பிண்டி என்பது வடசொல்லாயின், பிடி என்னும் வினைச் சொல்லும், அதன் நூற்றுக்கணக்கான திரி சொற்களும் கூட்டுச் சொற்களும் வடசொல்லாம். பிடி என்பது, குமரி நாட்டில் தோன்றிய அடிப்படைத் தமிழ்ச் சொற்களுள் ஒன்றாதலாலும், இருக்குவேதம் மிகப் பிற்காலத்ததாதலாலும், பிண்டம் அல்லது பிண்டி என்பது தென் சொல்லே யென்பது தெரிதரு தேற்றமாம். (வே. க. 3,85–86)

நூற்பா, ஒத்து, படலம் என்னும் மூன்று உறுப்புகளையும் பெற்றதால் பிண்டம்.

நூற்பா (சூத்திரம்) பலவுண்டாகி ஒத்தும் படலமும் இன்றாகி வரினும், ஒத்துப் பலவுண்டாகிப் படலமின்றிவரினும், படலம் பலவாகிவரினும் அதற்குப் பிண்டமென்றும் பெயராம். அவற்றுள் நூற்பாவாற் (சூத்திரத்தாற்) பிண்டமாயிற்று இறையனார் களவியல். ஒத்தினாற் பிண்டமாயிற்று பன்னிரு படலம். அதிகாரத்தாற்பிண்டமாயிற்று இந்நூலென்று (தொல்காப்பியம்) கொள்க. (இளம். தொல். செய்.165.) ''அண்டத்தில் உள்ளதை... பிண்டத்தில்கண்டாரடி · குதம்பாய் பிண்டத்தில் கண்டாரடி (குதம்பைச் சித்தர்)''

**பிண்டம்**[2] *piṇḍam,* பெ. (n.) **1.** கற்கண்டு; sugar candy. **2.** விலா; rib. **3.** வெண்ணெய்; butter. **4.** இறைச்சி; meat.

*[புள் → (பிள்) → பிண்டு → பிண்டம் = திரட்சி. திரண்ட கற்கண்டு, திரண்டு வரும் வெண்ணெய், திரண்டிருக்கும் இறைச்சி, திரண்ட விலாப்புறம்]*

**பிண்டம்பிடி**[1]**–த்தல்** *piṇḍam-piḍi-,* 4 செ. குன்றாவி. (v.t.) **1.** உண்டை யாக்குதல், உண்டை திரட்டுதல்; to ball, make in to a ball. **2.** படைத்தல் (வின்.); to create. **3.** உருச்சிதைத்து உருண்டையாக்குதல்; (இ. வ.); to crush, smash out of shape.

*[பிண்டம் + பிடி –,]*

**பிண்டம்பிடி**[2]**–த்தல்** *piṇḍam-piḍi-,* 4 செ. கு. வி. (v.i.) கரு உண்டாதல் (இ. வ.); to get into shape; to be conceived.

*[பிண்டம் + பிடி –,]*

**பிண்டம்விழுதல்** *piṇḍam-viḻudal,* பெ. (n.) காய்விழுதல், கருச்சிதைதல்; abortion.

*[பிண்டம் + விழுதல்.* 'தல்' தொ. பெ. ஈறு.*]*

**பிண்டமளிக்கை** *piṇḍam-aḷikkai,* பெ. (n.) *பிண்டதானம்* பார்க்க; see *piṇḍatāṉam.*

*[பிண்டம் + அளிக்கை. அளி → அளிக்கை]*

**பிண்டமா** *piṇḍamā,* பெ. (n.) *பிண்டப்பூநீறு* பார்க்க; see *piṇḍa-p-pūṉīṟu.*

*[பிண்டம் + மா]*

**பிண்டமாக்கரு** *pinda-mā-k-karu,* பெ. (n.) *பிண்டப்பூநீறு* பார்க்க; see *pinda-p-.pūnīru.*

*[பிண்ட + மாக்கரு. மிக → மகம் → மா. குரு → கரு.]*

**பிண்டமாக்கு-தல்** *pindam-ākku-,* 5 செ. குன்றாவி. (v.t.) ஒன்றாகச் சேர்த்தல்; to gather together.

க. பிண்டங்கெய்

*[பிண்டம் + ஆக்கு. புள் → (பிள்) → பிண்டு → பிண்டம் = திரட்சி. ஆகு(த.வி.) –ஆக்கு(பி.வி.). பிண்டமாக்குதல் = திரளச்செய்தல், ஒன்றாகச் சேர்த்தல்]*

**பிண்டரோபணம்** *pinda-rōbanam,* பெ. (n.) நாரத்தை; a tree citron.

**பிண்டல்** *pindal* பெ. (n.) கட்டி; clod. சோற்றை நண்டல் பிண்டலாக்கி விட்டான் (உ.வ).

*[பிண்டம் = திரட்சி. பிண்டம் → பிண்டல் = திரண்ட கட்டி. நண்டல் பிண்டல் = கூழும்கட்டியுமாய் ஆக்கிய சோறு]*

**பிண்டவண்டரசம்** *pinda-v-anda-rašam,* பெ. (n.) தூய்மையாக்கிய மருந்துச் சாறு; a medicinal liquid extract.

*[பிண்டம் + அண்டம் + ரசம்]*

Skt.rasa > த. ரசம்.

**பிண்டவமைப்பு** *pinda-v-amaippu,* பெ. (n.) கருவின் அமைப்பு; foetal structure.

*[பிண்ட(ம்) + அமைப்பு. அமை → அமைப்பு. 'பு' தொ. பெ. ஈறு]*

**பிண்டவரத்தச்சுழற்சி** *pinda-v-aratta-c-cularci,* பெ. (n.) கருவிலுள்ள அரத்தவோட்டம். foetal circulation.

*[பிண்டம் + அரத்தம் + சுழற்சி. உல் → அல் → அல. அலத்தம் = சிவப்பு, சிவந்த பொருள். அலத்தம் → அரத்தம். சுள் → சுழி = வட்டம். சுள் → சுழ → சுழல். சுழலுதல் = வட்டமாகச் சுற்றுதல். சுழல் → சுழற்சி. 'சி' தொ. பெ. ஈறு]*

**பிண்டவாடை** *pindavādai,* பெ. (n.) பெண்ணின் தலைக்கருவினாற் செய்யப்படும் மருந்து; a preparation from the first foetus of a woman.

*[பிண்டம் + வாடை]*

**பிண்டவாயு** *pindavāyu,* பெ. (n.) குழந்தைகட்குப் பிறவியிலேயே ஏற்படும் முடக்கு ஊதை நோய்; a paralytic affection to the child at birth due to injury-birth palsy.

*[பிண்டம் + வாயு]*

**பிண்டவிருத்தி** *pinda-virutti,* பெ. (n.) பதினாறாவது தூய்மை சடங்கினுள் குழந்தையின் உடல் வளர்ச்சிக்காகச் செய்யும் சடங்கு (திரவானைக். கோச் செங்.14); ceremony performed for the growth of a child's body, one of cōtaca-samskāram.

*[பிண்டம் + விருத்தி]*

Skt. vriddhi > த. விருத்தி.

**பிண்டவுட்பவசம்** *pinda-v-utpavašam,* பெ. (n.) கருவின் உள்பகுதியில் மூடியிருக்கும் மெல்லியதோல்; the inner membraneous covering of the foetus.

**பிண்டவுப்பு** *pinda-v-uppu,* பெ. (n.) கருவினின்று எடுக்கும் உப்புவகை; a salt extracted from the foetus of a woman.

*[பிண்ட(ம்) + உப்பு]*

**பிண்டவுருவாதல்** *pinda-v-uruvādal,* பெ. (n.) கருவுண்டாகை; conception,. formation of foetus.

*[பிண்டம் + உருவாதல்]*

**பிண்டவுருவாதி** *pindav-uruvādi,* பெ. (n.) கும்பகம்; suppression of breath.

இடது மூக்கு வழியாக இழுக்கும் காற்று இடங்கலை. வலது மூக்கு வழியாகஇழுக்கும் காற்று பிங்கலை. இரண்டுமூக்குகளும் இணையும் இடமான கும்பகத்திலிருந்து இழுக்கும் காற்று கும்பகம் எனப்படும்.

**பிண்டவுரை** *pinda-v-urai,* பெ. (n.) பொழிப்புரை (வின்.); paraphrase.

**மறுவ.** திரட்டுரை

*[பிண்டம் + உரை]*

**பிண்டவெரு** *pinda-v-eru,* பெ. (n.) அனைத்து மருந்துகட்குப் பயன்படுத்தும் சித்த மருத்துவ உப்பு; universal salt described in the Tamil Siddhar's medical science for use in medicine.

*[பிண்ட + எரு]*

**பிண்டாகமூலம்** *pindāga-mūlam,* பெ. (n.) தாமரை வளையம்; the coil of the lotus stalk.

**பிண்டாண்டம்** *pindāndam,* பெ. (n.) பிண்டமும் அண்டமும் (வின்.); the body and the universe.

*[பிண்டம் + அண்டம்]*

Skt. anda > **த.** அண்டம்

**பிண்டாப்பிரம்** *pindāppiram,* பெ. (n.) ஆலங்கட்டி; hail stone.

**பிண்டாயசம்** *pindāyašam,* பெ. (n.) உருக்கு; steel.

*[பிண்டம் + அயசம்]*

Skt. ayas > த அயசம்

**பிண்டாரம்** *pindāram,* பெ. (n.) ஆற்றுப்பூவரசு; river portia tree.

**பிண்டாரி** *pindāri,* பெ. (n.) கொள்ளையடிப்போன் (வின்.); plunderer, marauder.

**ம.** பிண்டாரி

*[பிண்டம் + ஆரி]*

**பிண்டாரிலிகம்** *pindāriligam,* பெ. (n.) உடம்பிலுள்ள, அறுவகை இறையுணர் நிலைகளுள் ஒன்றான, மூலநிலை (மூலாதாரம்); one of the six mystic centres of the human body.

**பிண்டாலு** *pindālu,* பெ. (n.) உண்ணு வதற்குரிய கிழங்குவகையு ளொன்று, species of yam, cultivated for eating.

**பிண்டி[1]–த்தல்** *pindi-,* 4 செ.குன்றாவி. (v.t.) **1.** திரளையாக்குதல்; to make into a ball. *'பிண்டித்து வைத்த உண்டியை'* (**தொல். பெ.** 63, உரை.) **2.** தொகுத்தல்; to sum up.

**து.** பிண்டிகட்டுனி (சிப்பம்கட்டு)

*[புள் → (பிள்) → பிண்டி = கூட்டம் (மு. தா. 157). பிண்டு → பிண்டி. ஒ.நோ.கண்டு → கண்டி, துண்டு → துண்டி. பிண்டி → பிண்டித்தல் (வே.க.3,82,83]*

த. பிண்டி > Skt. piṇḍ.

**பிண்டி²—த்தல்** *pinḍi-*, 4 செ. கு. வி. (v.i.) திரளுதல்; to gather into shape. *'பிண்டித்துப் பெருகிற் றென்பார்'* (சீவக. 1276)

*[புல் → புள் → பிள் → பிழம்பு = திரட்சி, வடிவு, உடல், பிள் பிண்டு ஒ. நோ. கள் → கண்டு; நள்→ நண்டு சுள் → சுண்டு; வள் → வண்டு; பிண்டு → பிண்டி (வே. க. 3. 81. 82]*

**பிண்டி³** *pinḍi*, பெ. (n.) 1. நுண் பொடி; flour, meal, powder. *'செந்தினையின் வெண்பிண்டி'* (பதினோ. திருவீங். 44.) 2. *பிண்ணாக்கு* (பிங்.) பார்க்க; see *pinnākku*.

தெ. பிண்டி; து. புண்டி.

*[பிள் → பிண்டு → பிண்டி]*

**பிண்டி⁴** *pinḍi*, பெ. (n.) 1. வடிவம். (சிலப். 3,26, உரை); form. 2. கூட்டம்; collection, multitude, class, quantity. 3. கழை (புனர்பூசம்) (சூடா.); the seventh naksatra. 4. இணையா வினைக்கை வகை (சிலப். 3,18, உரை); (nāṭya) a gesture with one hand.

து. பிண்டி

*[பிள் → பிண்டு → பிண்டி. ஒ. நோ; கண்டு → கண்டி; துண்டு → துண்டி (வே.க.3.82) பிண்டி என்னும் தென்சொல் வடிவினின்று, பிண்டிக, பிண்டின், பிண்ட முதலிய தனிச் சொற்களையும் 'பிண்டிதமூல்ய, பிண்டிதார்த்த, பிண்டீகரண, ஸபிண்டீகரண, பிண்டீபாவ (bh) முதலிய கூட்டுச் சொற்களையும் ஏறத்தாழ முப்பது வரை திரித்துள்ளனர். (வே.க.3.85)]*

**பிண்டி⁵** *pinḍi*, பெ. (n.) செயலை (அசோகு) (பிங்.); Asoka tree.

*[பிள் → பிண் → பிண்டி = கற்றையாக இலைகள் அடர்ந்து திரண்டிருக்கும் மரம்.]*

**பிண்டி⁶** *pinḍi*, பெ. (n.) 1. குந்திரிக்கம்; gum olibanum. 2. கண்ணோய்க்குச் செய்யப்பெறும் மருத்துவமுறை; a treatment where by the medicine is ground into a paste and applied to the eyes in a lint.

**பிண்டிக்கை** *pinḍi-k-kai*, பெ. (n.) பிண்டி⁴, (சிலப். 3, 18,20) பார்க்க; (nāṭya); see pinḍi⁴.

*[பிண்டி + கை]*

**பிண்டிகை** *pinḍgai*, பெ. (n.) 1. இருக்கை, (ஆசனம்) (வின்.); seat, altar. 2. வாய்க்குட் செலுத்தும் கடிவாளப்பகுதி; bit of a bridle. *'கண்டிரள் கலினமொரு பிண்டிகைக் கவ்வி'* (பெருங். உஞ்சைக். 48.11)

*[பிண்டி → பிண்டிகை]*

**பிண்டித்துருவம்** *pinḍ-t-turuvam*, பெ. (n.) 1. குங்கிலியமரம் (பதார்த்த.1120.); tripterocarp dammar. 2. சால மரம்; bastard sal.

**பிண்டிதகம்** *pinḍidagam*, பெ. (n.) 1. தாளிக் கொடி; a climber. 2. மருக்கொழுந்து; fragrant plant.

**பிண்டிதம்** *pindidam,* பெ. (n.) மருக்காரை (மலை.); emetic-nut.

**பிண்டிப்பகவன்** *pindi-p-pagavan,* பெ. (n.) அருகன் (சீவக. 957.); Arhat.

*[பிண்டி + பகவன். பகு → பகல் → பகவு → பகவன் = பகுத்தளித்துக் காப்பவன், பலர்க்கும் படியளப்பவன், ஆண்டவன்]*

**பிண்டிபாலம்** *pindipālam,* பெ. (n.) எறிபடைவகை; a missile. *'பிண்டி பாலத்தை யேந்தி'* (சீவக. 2269.)

*[பிண்டி + பாலம். பிள் → பிண்டு → பிண்டி = தலையில் (கற்றையாகப்) பீலிகட்டப் பட்ட எறிபடை.]*

**பிண்டியார்** *pindiyār,* பெ. (n.) அருகர் (சைனர்); Jains. போதியார் *'பிண்டியார்'* (திவ். பெரியதி. 9,7,9.)

*[பிண்டி + ஆர்]*

**பிண்டியான்** *pindiyān,* பெ. (n.) அருகக்கடவுள் (திருவிளை. மாயப்பசு. 5); Arhat.

*[பிண்டி + ஆன். 'ஆன்' ஆ.பா.ஈறு]*

**பிண்டிவாகனம்** *pindi-vāganam,* பெ. (n.) குந்துருக்க மரம்; salai tree.

**பிண்டிவாமன்** *pindivāman,* பெ. (n.) *பிண்டியான்* பார்க்க; see *pindiyān.*

*[பிண்டியான் → பிண்டிவாமன்]*

**பிண்டிவாலம்** *pindivālam,* பெ. (n.) *பிண்டிபாலம்* பார்க்க; see *pindipālam.*

*[பிண்டிபாலம் → பிண்டிவாலம்]*

**பிண்டிவாளகம்** *pindivālagam,* பெ. (n.) *பிண்டி வாளம்* (மலை.) பார்க்க; see *pindivālagam.*

*[பிண்டிவாளம் → பிண்டிவாளகம்]*

**பிண்டிவாளம்** *pindivālam,* பெ. (n.) பறங்கிச் சுறாலை (சாம்பிராணி); Indian olibanum.

*[பிண்டி → பிண்டிவாளம்]*

**பிண்டீகரகவர்ச்சி** *pindigarakavarcci,* பெ. (n.) அணுத்திரள் கவர்ச்சி; attraction of cohesion.

*[பிண்டீகரம் + கவர்ச்சி. கவர் → கவர்ச்சி]*

**பிண்டீகரணம்** *pindikaranam,* பெ. (n.) 1. உண்டையாகத் திரட்டுகை (வேதா. சூ. 77); ;making into a lump or ball. 2. திரட்டப்பட்டது (வின்.); collection. lump, ball, mass.

*[பிண்டி → பிண்டீகரணம்]*

**பிண்டீகரம்** *pindigaram,* பெ. (n.) 1. ஒட்டிணைவாற்றல்; cohesion. 2. ஒன்று படுகை; cohere.

*[பிள் → பிண்டி + ஆகரம்.]*

Skt. ākara > த. ஆகரம்.

**பிண்டீதகம்** *pindidagam,* பெ. (n.) *பிண்டிதகம் 2.* பார்க்க; see *pindidagam. 2.*

*[பிண்டிதகம் → பிண்டீதகம்.]*

**பிண்டீரகம்** *pindiragam,* பெ. (n.) மாதுளை; pomegranate.



பிண்ணாக்குக்கீரை



பிரமிய வழுக்கை



பிராயன்மரம்



பீச்சங்கு



புன்கு

**பிண்டீரம்** *piṇḍīram,* பெ. (n.) 1. சாரமின்மை; juiceless. 2. ***பிண்டீரகம்*** பார்க்க; see *piṇḍīragam.*

*[பிண்டி → பிண்டீரம்]*

**பிண்டீரி** *piṇḍīri,* பெ. (n.) வல்லாரை (நாம. தீப. 330); Indian pennywort.

**பிண்டு** *piṇḍu,* பெ. (n.) பிண்டம் .3. பார்க்க; see piṇḍam. 3. *'பிண்டாலம் வித்தின்'* (திருமந். 3025).

*[பில் → பொல்லு = தடி. பிள் → பிண்டி = நுண்பொடி, மா. புள் → (பிள்) → பிண்டு → பிண்டம் = திரட்சி]*

**பிண்டோதகம்** *piṇḍōdagam,* பெ. (n.) முன்னோர்க்கு(பிதிரர்க்கு)ப் பிண்டகாவு (பலி)உடன் எள்ளுக் கலந்த நீர்விடுசடங்கு. (புறநா. 9, உரை); ceremony of offering to the manes balls of cooked rice with water and sesame.

*[பிண்டம் + உதகம்.]*

Skt. udaka > த. உதகம்.

**பிண்டோற்பத்தி** *piṇḍōṟpatti,* பெ. (n.) *பிண்டவுருவாதல்* பார்க்க; see *piṇḍa-v-uruvādal.*

*[பிண்டம் + உற்பத்தி]*

Skt. utpatti > த. உற்பத்தி.

**பிண்ணாக்கு** *piṇṇākku,* பெ. (n.) 1. இலுப்பை எள் முதலியவற்றின் எண்ணெய் நீங்கிய சக்கை; oil cake made of the residue of oil seeds. மாட்டுக்குப் பிண்ணாக்கு வைத்தால் அல்லவா நிறையப் பால்கறக்கும். நிலத்துக்கு அடியுரமாக வேப்பம் பிண்ணாக்குப் போடவேண்டும்(உ.வ.). 2. எள்ளுப் பிண்ணாக்கு (இ. வ.); oil cake of pressed sesame.

ம. பிண்ணாக்கு

*[பிள் + நாக்கு - பிண்ணாக்கு = ஆட்டிய எட் பிண்டத்தின் நாக்குப் போன்ற பிளவு (வ. வ. 237)]*

எள், இலுப்பை, வேம்பு முதலியவற்றின் விதைகளை எண்ணெயாட்டிய பின் எஞ்சிய சக்கை பிளவுபட்ட நாக்குப் போலிருப்பதால் பிண்ணாக்கு எனப்பட்டது (வே. க. 3,113)

த. பிண்ணாக்கு > Skt. piṇyākā.

**பிண்ணாக்குக்கீரை** *piṇṇākku-k-kīrai,* பெ. (n.) பிண்ணாக்குப்பூண்டு பார்க்க (பதார்த்த. 606.); see piṇṇākku-p-pūṇḍu.

*[பிண்ணாக்கு + கீரை]*

சிறுநீர்,மலம் சரிவரப் போவதற்கும், மேகத்தையும், வெட்டைச் சூட்டையும் தணிப்பதற்கும் பயன்படும் கீரை வகை;

**பிண்ணாக்குச்சித்தர்** *piṇṇākku-c-cittar,* பெ. (n.) மச்சமுனியின் குரு; a Šiddhar guru of Maccamuṉi.

*[பிண்ணாக்கு + சித்தர். செ → செத்து சித்து → சித்தம் → சித்தர்]*

**பிண்ணாக்குச்செடி** *piṇṇākku-c-ceḍi,* பெ. (n.) 1. *பிண்ணாக்குப் பூண்டு* பார்க்க; see *piṇṇākku-p-pūṇḍu.* 2. பெரும் பிண்ணாக்குக் கீரை; wild jute. (M.M.).

*[பிண்ணாக்கு + செடி. செள் → செழி → செடி]*

**பிண்ணாக்குப்பூண்டு** *piṇṇākku-p-pūṇḍu,* பெ. (n.) 1. ஒருவகைச் செடி; a herb. 2. தவசுமுருங்கை; tranquebar gendarussa.

*[பிண்ணாக்கு + பூண்டு. புள் → பூள் → பூண்டு]*



**பிண்ணாக்குமடையன்** *piṇṇākku maḍaiyaṉ,* பெ. (n.) *பிண்ணாக்கு மூடன்* (வின்.) பார்க்க; see *piṇṇākku mūḍaṉ.*

*[பிண்ணாக்கு + மடையன். மடம் → மடையன்]*

**பிண்ணாக்குமாடன்** *piṇṇākku-māḍaṉ* பெ.(n.) *பிண்ணாக்கு மூடன்* (இ.வ.) பார்க்க; see *piṇṇākku mūḍaṉ.*

*[பிண்ணாக்கு + மாடன். மூடன் → மாடன்]*

**பிண்ணாக்குமூடன்** *piṇṇākku-mūḍaṉ,* பெ. (n.) முழுமூடன் (வின்.); idiot, stupid man, dolt.

*[பிண்ணாக்கு + மூடன். எண்ணெய் ஆட்டியபின் பயனற்றுக் கிடக்கும் பிண்ணாக்குச் சக்கைபோல் ஒன்றுக்கும் உதவாதவன் என்னும் குறிப்புப்பட அறிவிலிக்குப் பிண்ணாக்கு ஒப்புப் பொருளாயிற்று.]*

**பிண்ணியாக்கம்** *piṇṇiyākkam,* பெ. (n.) குந்துருக்க மரம்; salai tree.

**பிணக்கட்டில்** *piṇa-k-kaṭṭil,* பெ. (n.) பிணத்தைச் சுடுகாட்டிற்கு எடுத்துச் செல்லப் பயன்படுத்தும் பச்சைமரத்தால் கட்டப்பட்ட கட்டில் (நானார்த்த. 257.); bier.

மறுவ. பாடை, கால்கழிகட்டில்

*[பிணம் + கட்டில். கட்டு → கட்டில்]*

**பிணக்கம்** *piṇakkam,* பெ. (n.) 1. மாறுபாடு; disagreement, பாம்பு கங்கை பிணக்கந் தீர்த்து' (தேவா. 29,2) 2. ஊடல் (கொ.வ.); sulks, bouderie. 3. நெருக்கடி (வின்.); press of a crowd, pressure. 4. பின்னுகை (வின்.); twisting, interlacing, plaiting.

*[பிணங்கு → பிணக்கு → பிணக்கம். பிணங்குதல் பார்க்க]*

**பிணக்காடு** *piṇa-k-kāḍu,* பெ. (n.) 1. பிணத்தை எரிக்குமிடம் (திவா.); cremation-ground. 2. போர்க்களம் (வின்.); battle field.

மறுவ. சுடுகாடு, சுடலை, பாழ்க்கோட்டம் இடுகாடு.

*[பிணம் + காடு. கடு → காடு]*

**பிணக்கு[1]–தல்** *piṇakku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. கட்டுதல் (வின்.); to fasten. 2. பின்னச் செய்தல்; to intertwine. *'தார்தார் பிணக்குவார்'* (பரிபா. 9, 45).

**பிணக்கு²** *piṇakku,* பெ. (n.) 1. பிணக்கம் பார்க்க; see piṇakkam *'பிணக்கிலாத பெருந்துறைப் பெருமான்'* (திருவாச. 30, 1.). 2. தூறு, புதர்க்காடு; thicket. *'திரண்ட பிணக்குச் சுற்றின காவற்காடு'* (பு.வெ. 5, 4 உரை.).

*[பிணங்கு → பிணக்கு]*

**பிணக்கொழுப்பு** *piṇa-k-koḻuppu,* பெ. (n.) பிணத்தினின்று எடுக்கப்பெறுங் கொழுப்பு; adipose tissue obtained from the corpses.

*[பிணம் + கொழுப்பு. கொழு → கொழுப்பு]*

**பிணக்கோலம்** *piṇa-k-kōlam,* பெ. (n.) 1. பிணத்தை அழகுபடுத்துகை (அணிசெய்தல்) (தேவா. 937, 7.); decoration of a corpse. 2. பிணம் போல் தோற்றுகை; haggard or cadaverous appearance, as of a corpse.

*[பிணம் + கோலம்]*

**பிணங்கி** *piṇaṅgi,* பெ. (n.) பூடுவகை. (குருகூர்ப். 45); a plant.

**பிணங்கு-தல்** *piṇaṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. மாறுபடுதல்; to be at variance. *'பிணங்கோ மெவரொடும்'* (திருநூற். 66). 2. ஊடுதல்; to be in the sulks. 3. செறிதல்; to be close, dense; *'பிணங்கு நேரைம்பால்'* (சிலப். 7,13). 4. பின்னுதல்; to be linked together, intertwined. *'பிணங்குநூன்மார்பன்'* (மணிமே. 6, 151.).

க. கெணகு

*[பிள் → பிண் → பிணம் = கட்டுவிட்ட சவம். பிள் → பிணகு → பிணங்கு. இணங்கு என்னும் சொல்லிற்கு எதிராக, அதன் எதுகையாக அமைந்த சொல் பிணங்கு. (வே.க.3.113, 114) ]*

**பிணச்சாயல்** *piṇa-c-cāyal,* பெ. (n.) பிணத்தோற்றம்(வின்.); cadaverous appearance.

மறுவ. செத்தகளை, சவக்களை

*[பிணம் + சாயல். சால் → சாய் → சாயல்]*

**பிணஞ்சுடல்** *piṇañ-cuḍal,* பெ. (n.) சவத்தைக் கொளுத்தல்; burning the dead body.

*[பிணம் + சுடல். சுள் → சுடு → சுடல்]*

**பிணஞ்சுடுகாளவாய்** *piṇañ-cuḍu-kāḷavāy,* பெ. (n.) பிணத்தை எரித்தற்குச் சுண்ணாம்புக் காளவாய்போற் கட்டப்பட்ட கட்டடம் (இக்.வ.); incinerator.

*[பிணம் + சுடு + காளவாய். குள் → (கள்) → காள் → காய். காய்தல் = எரிதல். காள் → காளம் → காளவாய் = சுண்ணாம்புக்கல் சுடுமிடம்.]*

**பிணத்தீனி** *piṇattīṉi,* பெ. (n.) அளவுக்கதிகமான உணவு; enormous food stuff.

*[பிணம் + தீனி. துல் → துன் → துற்று = உணவு. துற்றுதல் = உண்ணுதல். துற்று → துற்றி = உணவு. துன் → தின் → தீனி.]*

**பிணத்தீனிதின்னு-தல்** *piṇattīṉi-tiṉṉu-,* 14.செ.குன்றாவி. (v.t.) குறிப்பிட்ட காலவளவின்றி, கண்ணில்கண்ட உணவை யெல்லாம், அளவின்றி உண்ணுதல்; to consume enormous food - stuff.

*[ பிணந்தீனி + தின்னு -, துல் → துன் → தின் → தின்னு. ]*

**பிணத்தூக்கம்** *pina-t-tūkkam,* பெ. (n.) நீண்ட உறக்கம், கடுந்துயில் (கொ.வ.); dead sleep.

மறுவ. ஆழ்துயில்

*[ பிணம் + தூக்கம். தூங்கு → (தூக்கு) → தூக்கம் ]*

**பிணத்தைலம்** *pina-t-tailam,* பெ. (n.) பிணக்கொழுப்பையுருக்கி யெடுத்த நெய்; the oil obtained by melting the adipose tissue of the corpse.

*[ பிணம் + தைலம் ]*

Skt. taila > த. தைலம்.

**பிணத்தோற்றம்** *pina-t-tōrram,* பெ. (n.) *பிணச்சாயல்* பார்க்க; see *pina - c - cāyal.*

*[பிணம் + தோற்றம்]*

**பிணந்தின்னி**[1] *pinan-tinni,* பெ. (n.) 1. பிணத்தைத் தின்போன்; one who feeds on corpses. 2. *பிணந்தின்னிப்பயல்* பார்க்க; see *pinantinni-p-payal.*

மறுவ. நரவுண்ணி, அரக்கன்.

*[பிணம் + தின்னி. தின்(னு) → தின்னி]*

**பிணந்தின்னி**[2] *pinan-tinni,* பெ. (n.) இறைச்சியைக் கரைக்கும் கனிமம்; a mineral capable of rendering flesh watery.

*[பிணம் + தின்னி ]*

**பிணந்தின்னிக்கழுகு** *pinantinni-k-kalugu,* பெ. (n.) பிணத்தையுணவாகக் கொள்ளும் கழுகு; vulture.

*[பிணம் + தின்னி + கழுகு. குழு → கழு → கழுகு = பெரும்பறவை]*



**பிணந்தின்னிப்பயல்** *pinan-tinni-p-payal,* பெ. (n.) பிறரைத் துன்புறுத்துவோன்; rapacious person.

*[பிணந்தின்னி + பயல்]*

**பிணந்தின்னிப்பிச்சி** *pinan-tinni-p-picci,* பெ. (n.) *பிணந்தின்னிப்பேய்* (வின்.) பார்க்க; see *pinantinni-p-pēy.*

*[பிணந்தின்னி + பிச்சி]*

**பிணந்தின்னிப்பூச்சி** *pinan-tinni-p-pūcci,* பெ. (n.) *பிணந்தின்னிப்பேய்* பார்க்க (தஞ்சை.); see *pinan-tinni-p-pēy.*

*[பிணந்தின்னிப்பேய் → பிணந்தின்னிப்பூச்சி]*

**பிணந்தின்னிப்பேய்** *pinan-tinni-p-pēy,* பெ. (n.) பிணந்தின்று வாழும் பேய்வகை (வின்.); devil that lives on corpses.

*[ பிணந்தின்னி + பேய். பே → பேம் = அச்சம். பேதல் = அஞ்சுதல். பே → பேய் = அஞ்சப்படும் ஆவி அல்லது தோற்றம் ]*

**பிணந்தின்னிவெளவால்** *pinan-tinni-vauvāl,* பெ. (n.) பிணத்தைத் தின்னும் வெளவால்; vampire.

*[ பிணம் + தின்னி + வெளவால். வாவல் → வெளவால் ]*

**பிணநாற்றம்** *pina-nāṟṟām,* பெ. (n.) கொடிய வீச்சம் (பிணத்தின் முடைநாற்றம்); stench, as of a corpse.

க. கெணநாத

*[ பிணம் + நாற்றம் ]*

**பிணநெஞ்சு** *pina-neñju,* பெ. (n.) உணர்ச்சியற்ற மனம்; heart dead to all feeling. ***'துணையிலி பிணநெஞ்சே'*** (திருவாச. 5, 31.).

*[பிணம் + நெஞ்சு. நெய் → நெய்ஞ்சு → நெஞ்சு]*

**பிணநெய்** *pina-ney,* பெ. (n.) பிணத்தினின்று கருவேலைக்கு எடுக்கப்படும் கொழுப்பு (வின்.); fat extracted from corpses, used in magic.

*[ பிணம் + நெய். நுள் → நொள் → நொள → நொளநொள. நொளநொளத்தல் = நெகிழ்தல். நொள் → நெள் → நெளு. நெளுத்தல் = நெகிழ்தல், குழைதல். நெள் → நெய் ]*

**பிணம்** *pinam,* பெ. (n.) உயிரற்ற மனித உடல்; corpse, carcass. ***'ஏதில் பிணந் தழீஇயற்று'*** (குறள், 913.) 2. பேய் (பிங்.); devil, disembodied soul spirit.

மறுவ. சவம்

ம. பிணம்; க. பெண, கெண; தெ. பீனுகு, பீங்கு; து. புண; கோத. பெண்ம்; துட. ஈண்; கட. பீனிகை; குவி. பீலிங்கு; பட. கெண.

*புள் → புய். புய்த்தல் = பிரித்தல். புள் → பிள் → (பிண்) → பிணி. பிணிதல் = இறத்தல். பிள் → பிண் → பிணம் = கட்டுவிட்ட (decomposed) சவம். (சா → சாவு → சாவம் → சவம்) செத்த சவம், நாற்றப்பிணம் அல்லது பிணநாற்றம் என்னும் வழக்குகளை நோக்குக. (வே.க.3. 113)]*

pišāci, pēshi, a she-demon. cf.D.piṇa, pēne, pēy, pēyi, s.pē, pētu, and hēdē. For Sk. piyu, injurious as an Asura, and phi, anger, passion; a wicked man, too see D. pē. (KKED xxix)

**பிணம்பிடுங்கன்** *pinam-pidungan,* பெ. (n.) கருங்கூளி; black vulture.

மறுவ. பிணந்தின்னிக்கழுகு

*[பிணம் + பிடுங்கன்.]*

**பிணம்வீழ்களம்** *pinam-vil-kalam,* பெ. (n.) சுடுகாடு; burning ghat.

*[பிணம்வீழ் + களம். கள் → களம்]*

**பிணமனை** *pinamanai,* பெ. (n.) சிறிதுகாலம் பிணங்கள் வைத்திருக்கும் கட்டடம்; mortuary. நேர்ச்சியில் இறந்தவன் உடலை மருத்துவ மனையிலிருந்து வாங்கப் பிணமனையில் நாள் முழுக்கக் காக்கவேண்டியிருந்தது. (உ.வ.)

*[பிணம் + மனை]*

**பிணமூஞ்சி** *pina-mūñji,* பெ. (n.) ***பிணச் சாயல்*** (பிரேதச் சாயல்) (கொ.வ.) பார்க்க; see *pina-c-cāyal.*

மறுவ. சாவுக்களை

*[பிணம் + மூஞ்சி]*

**பிணர்[1]** *pinar,* பெ. (n.) 1. சருச்சரை; roughness, unevenness, coarsences. ***'இரும்பிணர்த்துறுகல்'*** (குறுந். 13)

*[பிள் → பிள. பிளத்தல் = வெடித்தல். பிள பிளவு. பிள் → பிண் → பிணர் = மேற்பரப்பு மேடு பள்ளமாய் இருக்கும் நிலை]*

**பிணர்**[2] *piṇar*, பெ. (n.) கோங்கிலவு (பிங்.); false tragacanth.

**பிணரம்** *piṇaram*, பெ. (n.) முரட்டுத்தன்மை; roughness.

*[பிணர்[1] → பிணரம்]*

**பிணரா** *piṇarā*, பெ. (n.) *பிணரம்* பார்க்க; see *piṇaram*.

*[பிணரம் → பிணரா]*

**பிணவல்** *piṇaval*, பெ. (n.) 1. பெண்; female. 2. பன்றி, மான், நாய் முதலியவற்றின் பெண் (தொல்.பொ. 614.); female of the dog, pig, deer or yak.

*[புள் → (பிள்) → (பிண்) → பிண → பிணா → பிணவு → பிணவல் = விரும்பப்படும் பெண்; விலங்கின் பெண். (மு.தா. 164)]*

**பிணவறை** *piṇa-v-aṟai*, பெ. (n.) *பிணமனை* பார்க்க; see *piṇamaṉai*.

**மறுவ.** சவக்கிடங்கு

*[பிணம் + அறை. அறு → அறை. ]*

**பிணவறையன்**[1] *piṇa-vaṟaiyaṉ*, பெ. (n.) அறிவில்லாச் சோம்பேறி (யாழ்ப்.); dull-headed, lazy person.

*[பிணம் + அறையன்.* உயிரற்ற உடல்போல் சோம்பியிருத்தலைப்பற்றிச் சோம்பேறி பிணவறையன் எனப்பட்டான்.*]*

**பிணவறையன்**[2] *piṇa-v-aṟaiyaṉ*, பெ. (n.) பருத்தவுடம்புள்ளவ–ன்–ள்; a man with stout body.

**மறுவ.** குண்டடன், குண்டச்சி.

*[பிணம் + அறையன். 'ன்' உடைமை குறித்த ஈறு]*

**பிணவிறைப்பு** *piṇa-v-iṟaippu*, பெ. (n.) இறந்த சிலமணிநேரத்தில், உடலில் ஏற்படும் கட்டிறுக்கம்; rigidity after death.

*[பிணம் + விறைப்பு]*

*குருதியற்றுப் போவதால் பிணத்தை இருவரோ, நால்வரோ சுமக்கும் படியாகும். 'செத்தஆடு காற்பணம் சுமைகூலி முக்காற்பணம்' என்பது பழமொழி*

**பிணவு** *piṇavu*, பெ. (n.) 1. *பிணா 1*, பார்க்க; see *piṇā 1* *'சூரரிப் பிணவுகாக்க'* (குமர. பிர. மீனாட். பிள்ளை. காப். 9.) 2. பிணவல் (தொல். பொ. 613.) பார்க்க; see piṇaval.

*[புள் → பிள் → பிண் → பிணி → பிடி = பெண்யானை. பிண் → பிணா = பெண், பெண்டு. பிணா → பிணவு = பன்றி, புல்வாய், நாய், கரடி என்பவற்றின் பெண். (வே.க. 3,88)]*

**பிணவெடில்** *piṇa-veḍil*, பெ. (n.) *பிணநாற்றம்* (யாழ்ப்.) பார்க்க; see *piṇanāṟṟam*.

**மறுவ.** செத்தவாடை, சவநாற்றம்

*[பிணம் + வெடில்]*

**பிணன்** *piṇaṉ*, பெ. (n.) *பிணம்* பார்க்க; see *piṇam*. *'பிணனார்ந்து பேய் வழங்கும்'* (பு. வெ. 10, 11).

*[பிணம் → பிணன்]*

**பிணா** *piṇā*, பெ. (n.). **1.** பெண்; woman. (தொல். பொ. 616). **2.** *பிணவல்* (திவா.) பார்க்க; see *piṇaval.*

*[புள் → (பிள்) → (பிண்) → பிண → பிணா = பெண், விலங்கின் பெண்]*

**பிணாரம்** *piṇāram*, பெ. (n.) **1.** விலங்கின் பருமன் (யாழ்ப்.); bulkiness of beasts. **2.** பருமனுள்ளது (யாழ்.அக.); anything huge.

*[புடை → புணை → பணை. பணைத்தல் = பருத்தல், செழித்தல். புணை → பிணை → (பிணரம்) → பிணாரம்.]*

**பிணி¹ – தல்** *piṇi-*, 4 செ.கு.வி. (v.i.) வாழ்வு முடிதல்; to die. *'பிணிந்தார் பொடிகொண்டு மெய்பூச'* (தேவா. 946, 3.).

மறுவ. சாதல், இறத்தல், மரித்தல், மாண்டுபோதல்.

*[புள் → பிள் → பிரி → பிரிவு. புள் → பிள் → பிண் → பிணி. பிணிதல் = உயிர்பிரிதல், இறத்தல்]*

**பிணி²–த்தல்** *piṇi-*, 11 செ.குன்றாவி. (v.t.) **1.** சேர்த்துக் கட்டுதல்; to tie, fasten with ropes, fetter, link. *'பெரு வெளிற் பிணிமார்'* (மலைபடு. 326). **2.** வசப்படுத்துதல்; to win over, keep one spell-bound. *'கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்'* (குறள், 643.).

*[புள் → (புண்) → புணர் → புணர்ச்சி. புணை → பிணை. பிணைதல் = புணர்ச்சி. புணித்தல் = சேர்த்துக் கட்டுதல். புள் → புண் → புணி → பிணி]*

**பிணி³** *piṇi,* பெ. (n.) **1.** கட்டுகை; fastening, binding. *'பிணியுறு முரசம்'* (புறநா. 25). **2.** கட்டு; bond, link, tie. *'பிணி நெகிழ்பு'* (பரிபா. 3, 55). **3.** பற்று; attachment. *'பொருட்பிணிச் சென்று'* (அகநா. 27). **4.** பின்னல்; plait, twist. *'பிணிகொள் வார்க்குழல்'* (தேவா. 469, 3.). **5.** கட்டுநெகிழாமொட்டு, அரும்பு; bud. *'பிணிநிவந்த பாசடைத் தாமரை'* (கலித். 59). **6.** நெசவுத் தறியின் நூற்படை (யாழ்ப்.); higher or lower row of threads in a weaver's loom, raised or lowered to admit the shuttle.

*[புள் → புணி → பிணி]*

**பிணி⁴** *piṇi-*, பெ. (n.) **1.** நோய் அறிகுறியுடன் கூடிய உடல் நலிவு, உடல் நலக்கேடு, உடல் நலம் குன்றிய நிலை; an unhealthy state of body, a disorder, illness or ailment with distinctive symptoms, disease, malady, sickness. பிணிக்கு மருந்து பிறமன் (குறள், 1102). **2.** நோவு, இடர், துன்பம்; suffering, affliction. **3.** பசிப்பிணி; hunger.

மறுவ. நோய்சடவு.

*[ புள் → புண் → புணி. புணித்தல் = சேர்த்துக் கட்டுதல். புணி → பிணி = கட்டுகை, கட்டு, கட்டி நெருக்குவது போன்ற நோய் 'பிணித்தலையுடையது பிணியாயிற்று' (நச்.சீவ.2752 பசிப்பிணி மருத்துவன் பண்ணன் (புறம் – கிள்ளிவளவன்) ]*

**பிணி⁵** *piṇi,* பெ. (n.) **1.** சிறுதுயில் (பதிற்றுப். 50); nap. **2.** ஊதை, பித்தம், கோழை (பிங்.); the three humours of the body.

மறுவ. குட்டித்தூக்கம்

*[பிள் → பிண்டி = நுண்பொடி. பிள் → பிண் → பிணி]*

**பிணிக்கி** *piṇikki,* பெ. (n.) சூடம்; camphor.

**பிணிக்குறை[1]** *piṇi-k-kuṟai,* பெ. (n.) குழந்தைகட்கு நோயையுண்டாக்கும் பேய்க் கோள் (வின்.); attack of an evil spirit on a child, causing disease.

*[பிணி + குறை]*

**பிணிக்குறை[2]** *piṇi-k-kuṟai,* பெ. (n.) நோயின் குற்றம்; defects in sickness.

*[பிணி + குறை]*

**பிணிகை** *piṇigai,* பெ. (n.) கச்சு (சிந்தாமணி நிகண்டு); corset.

*[ பிணி = கட்டுகை, கட்டு. பிணி → பிணிகை = இறுக்கிக்கட்டும் கச்சு]*

**பிணித்தோர்** *piṇittōr,* பெ. (n.) நோயுற்றவர்; diseased persons. *'பிணித்தோர் படிவ நோன்பியர் பசி நோயுற்றோர்'* (மணிமே. 28, 223.).

**மறுவ.** நலமில்லாதவர்

*[பிணி → பிணித்தோர்.*
*நோயில் பிணிக்கப்பட்டார். ஈண்டு செயப்பாட்டுவினை செய்வினை வடிவில் வந்துள்ளது.]*

**பிணிதெறித்தல்** *piṇi-teṟittal,* பெ. (n.) நோய் குணமாகத் தொடங்குகை (வின்.); remedial stage of a disease.

*[பிணி + தெறித்தல்.]*

**பிணிநீக்கம்** *piṇi-nīkkam,* பெ. (n.) நோயகற்றும் மருத்துவத் தன்மை; cure.

*[பிணி + நீக்கம். நீங்கு (த.வி.)– நீக்கு (பி.வி.) → நீக்கம்]*

**பிணிநீங்கு–தல்** *piṇi-nīṅgu-,* 7 செ.கு.வி. (v.i.) நோயகலுதல்; to get cure as from disease.

*[பிணி + நீங்கு–]*

**பிணிநீர்ப்பை** *piṇinīr-p-pai,* பெ. (n.) விலங்குகள் அல்லது செடிகளில் சுரக்கும் நீர்மம் கொண்டுள்ள உட்குழிவான பை; cyst.

*[பிணிநீர் + பை. புள் → பொள் → பொய் → (பய்) → பை.]*

**பிணிப்பு** *piṇippu,* பெ. (n.) **1.** கட்டுகை; binding, linking. பிணிப்புறு பிறவியின் (மணிமே. 25,26). **2.** கட்டு; tie, bondage. **3.** பற்று (அகநா. 27,உரை); attachment, affection.

*[பிணி → பிணிப்பு. 'பு' தொ. பெ. ஈறு]*

**பிணிப்பேய்** *piṇippēy,* பெ. (n.) குழந்தை களைப் பிணிக்கும் பேய் (யாழ்ப்.); a devil which attacks children.

**மறுவ.** இருளடித்தல்

*[பிணி + பேய்]*

*தனிமையிலோ, இருண்மையிலோ இருக்கும் குழந்தைகளுக்கு ஏற்படும் உளவியல் நோய்*

**பிணிமிதி–த்தல்** *piṇi-midi-,* 4 செ. கு. வி. (v.i.) நெசவுப் பாவை மிதித்தல் (வின்.); to tread the loom, a weaver's technical word.

*[ புணிமிதி–த்தல் → பிணிமிதி–த்தல் ]*

**பிணிமுகத்திரை** *piṇi-mugattirai,* பெ. (n.) கலுழன்; kite.

மறுவ. கருடன்

*[பிணி + முகம் + திரை. திரம் → திரை]*

**பிணிமுகம்[1]** *piṇimugam,* பெ. (n.) 1. மயில் (திருமுரு. 247,உரை)(பிங்.); peacock. 2. அன்னம் (உரி. நி.); swan. 3. பறவை (பிங்.); bird.

*[பிணி + முகம்.பிணித்தல் = சேர்த்துக் கட்டுதல், வயப்படுத்துதல். பிணிமுகம் = வயப்படுத்தும் தன்மை கொண்ட அழகான முகத்தை யுடைய பறவை, விலங்கு. மூ → மூக்கு → முகம் = தலையின் முன்புறமான பகுதி. பிணி முகம், பணிமுக (phaṇimukha) என்னும் சொல்லிலிருந்து வந்ததாகக் காட்டி யுள்ளது செ.ப. அகரமுதலி. பணி, பாம்பு என்னும் பொருளுடையது என்றும் பாம்பை உண்ணக் கூடிய பறவை மயில் என்றும் மா.வி. அகரமுதலி பொருள் கூறுகிறது. எனினும் யானை என்னும் பொருளில் பிணிமுகம் அங்கு இருப்பதாகக் காட்டவில்லை. பிணிமுகம் அன்னம், பறவை ஆகிய பொருள் களையும் கொண்டிருப்பது அச்சொல் வயப்படுத்தும் பொருளடிப்படையிலேயே உருவாயிருத்தலைக் காட்டுகிறது.]*

**பிணிமுகம்[2]** *piṇimugam,* பெ. (n.) முருகக் கடவுள் யானை; Murugan's elephant. "சேயுர் பிணிமுக மூர்ந்து" (பரிபா. 52).

மறுவ. ஆம்பல், உம்பல், உவா, ஓங்கல், கடமா, கம்பமா, கரி, கவலிமா, களிறு, கறையடி, குஞ்சரம், கும்பி, கைம்மலை, கைம்மா, சிந்துரம், தும்பி, நால்வாய், பகடு, புகர்முகம், புனழக்கை, பூட்கை, மதமா, வழுகை, வாரணம், வேழம். (த. வ. 285)

*[ பிணி + முகம். வயப்படுத்தும் வகையில் அழகான முகங் கொண்ட யானை ].*

**பிணியகம்** *piṇi-y-agam,* பெ. (n.) காவலிடம்; well-guarded place. 'பிறர் பிணியகத்திருந்து' (பட்டினப். 222).

*[பிணி + அகம்]*

**பிணியன்** *piṇiyaṉ,* பெ. (n.) *பிணியாளி* பார்க்க; see *piṇi-y-āḷi.* பிணியனேழை (நன். 39).

மறுவ. நோயாளி

*[ பிணி + அன். 'அன்' ஆ.பா.ஈறு. ]*

**பிணியாளன்** *piṇi-y-āḷaṉ,* பெ. (n.) *பிணியாளி* பார்க்க; *see piṇi-y-āḷi*

*[பிணி + ஆளன்]*

**பிணியாளி** *piṇi-y-āḷi,* பெ. (n.) நோய் வாய்ப்பட்டவன், நோயர், மருத்துவம் பார்த்துக்கொண்டிருப்பவர், மருத்துவரின் வாடிக்கையாளர் (வின்.); diseased man, patient.

மறுவ. நோயாளி, நோவுக்காரன்

*[பிணி + ஆளி. ஆள் + இ – ஆளி. 'இ' உடைமைப் பொருளீறு]*

**பிணியுண்டா–தல்** *piṇi-y-uṇḍā-,* 6 செ. கு. வி. (v.i.) நோய் ஏற்படுதல்; to get disease.

*[பிணி + உண்டா–,]*

**பிணியுறு–தல்** *piṇi-y-uṟu-,* 20 செ.கு.வி. (v.i.) நோயால் அழுந்துதல்; to get sick.

*[பிணி + உறு–,]*

**பிணியுறுகை** *piṇi-y-uṟugai,* பெ. (n.) நோயால் பிணிக்கப்படுகை; becoming ill.

மறுவ. நோயுறுதல்

*[பிணி + உறுகை. உறு → உறுகை]*

**பிணியோலை** *piṇi-y-ōlai,* பெ. (n.) பிள்ளைகளிடுப்பில் எழுதிக்கட்டும் காப்பு ஓலை (யாழ். அக.); ōla amulet tied to the waists of children.

*[பிணி + ஓலை. பிணிவராமல் காக்கும் என்னும் நம்பிக்கையில் கட்டும் ஓலை]*

**பிணிவந்தடு-த்தல்** *piṇivandaḍu-,* 4 செ.கு.வி. (v.i.) நோயினால் தாக்குறுதல்; to be attacked by disease.

*[ பிணி + வந்து + அடு-, ]*

**பிணிவந்தெய்து-தல்** *piṇivand-eydu-,* 15 செ. கு. வி. (n.) *பிணிவந்தடு-த்தல்* பார்க்க; see *piṇivandaḍu-,.*

*[பிணி + வந்து + எய்து-,]*

**பிணிவீடு** *piṇi-vīḍu,* பெ. (n.) இடையூறு நீங்குகை; escape from difficulties and distress. "பிணிவீடு பெறு மன்னவன் றொழிலே" (ஐங்குறு. 447).

*[பிணி + வீடு. விடு → வீடு]*

**பிணுக்கன்** *piṇukkaṉ,* பெ. (n.) மாறுபட்ட கொள்கையினன்; heretic. ஊதைப் பிணுக்கரை (திருவிசை. திருமாளி. 4,4).

*[பிணங்கு → பிணக்கு → (பிணக்கன்) → பிணுக்கு → பிணுக்கன்]*

**பிணை¹-தல்** *piṇai-,* 3 செ.கு.வி. (v.i.) 1. சேர்தல் ஒன்றுபடுதல், இணைதல்; to entwine, conjoin, unite. கழுநீர் பிணைந்தன்னவாகி (சீவக. 491). 2. செறிதல், நெருக்கமாதல்; to be crowded, together, dense. பிணையூப மெழுந்தாட (மதுரைக்.27). 3. புணர்தல்; to copulate. 'மங்கையர் தம்மொடும் பிணைந்து' (திருவாச. 41,6).

*[புல் → புள் → புண் → புணர். புண் புணி → புணித்தல் = சேர்த்துக்கட்டுதல். புண் → புணை. புணைத்தல் = கட்டுதல் புணை → பிணை. (வே.க. 3,64,65)]*

**பிணை²-தல்** *piṇai-,* 2 செ. குன்றாவி. (v.t.) *பிணை³-த்தல் 3* பார்க்க; see *piṇi³-, 3* "குரவை பிணைந்த வெங்கோவலன்" (திவ். பெரியதி. 1,8,4).

*[புணை → பிணை-,]*

**பிணை³-த்தல்** *piṇai-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. இணைத்தல்; to join together, link, unite, couple, as rafters. "மின் பிணைத்தாலன கடையும்" (பதினொ. பட்டின. திருவேக. 35) 2. கட்டுதல், இணைத்துக் கட்டுதல்; to tie, bind, fasten. 3. கைகோத்தல்; to clasp each other's hands, as in dancing. "தழூஉப் பிணையூஉ" (மதுரைக். 614).

*[ புள் → புண் → புணை. புணையல் = மாட்டுப்பிணைப்பு. புணையலடித்தல் = பிணைத்த கடாவிட்டுக் கதிரைப் புழக்குதல். புணை → பிணை-, (வே.க. 3,65) ]*

**பிணை⁴** *piṇai,* பெ. (n.) 1. புறந்தருகை (தொல். சொல். 338); protecting with loving care. 2. விருப்பம் (தொல். சொல். 338, சேனா.); love, desire.

*[பிணா → பிண → பிணை.(வே.க.3,88)]*

**பிணை[5]** *piṇai,* பெ. (n.) **1.** பொருத்து; joint in planks. இதையுங் கயிறும் பிணையுமிரிய (பரிபா. 10, 54). **2.** கட்டு; tie, ligature, bandage. **3.** இணைக்கப் படுகை; being knit together. 'பிணையார மார்பம்' (பு. வெ. 12, 6). **4.** பூ மாலை; flower garland. 'வெறி கொண்ட முல்லை பிணைமீது' (பெரியபு. கண்ணப். 57). **5.** பொறுப்பாண்மை (உத்தரவாதம்); bail, security, guarantee, pledge. 'பிணைக் கொடுக்கிலும் போகவொட்டாரே' (திவ். பெரியாழ். 4,5,2). **6.** உடன்பாடு (யாழ்.அக.); consent, agreement. **7.** களைகண் பேணுகை: relieving distress. 'பெட்டாங் கொழுகும் பிணையிலி' (நாள்மணி. 91).

*[புல் → புள் → புணை = கட்டு, விலங்கு, தெப்பம். புணை → பிணை. வே.க.3,65]*

**பிணை[6]** *piṇai,* பெ. (n.) **1.** விலங்கின் பெண் (பிங்.); female of animals. **2.** பெண்மான்; doe, hind, female deer. "பிணையேர் மடநோக்கும்" (குறள், 1089).

*[புள் → பிள் → பிண் → பிணி → பிடி = பெண்யானை. பிண் → பிணா = பெண், பெண்டு. பிணா → பிணவு = பன்றி, புல்வாய், நாய், கரடி என்பவற்றின் பெண். பிணா → பிண → பிணை = விருப்பம், விலங்கின் பெண், பெண்மான். (வே. க. 3, 88)]*

**பிணை[7]** *piṇai,* பெ. (n.) தெப்பம்; raft, boat. 'துயர்க் கடலை நீந்தும் பிணையே' (மான்விடு. 52.).

*[புல் → புள் → புண் → புணி. புணித்தல் = சேர்த்துக்கட்டுதல். புண் → புணை. புணைத்தல் = கட்டுதல். புணை → பிணை = பிணைத்துக் கட்டி உருவாக்கப்பட்ட தெப்பம்.]*

**பிணைக்கட்டை[1]** *piṇai-k-kaṭṭai,* பெ. (n.) பதம் படுத்தும்போது பாவு தரைமட்டத்திற்கு மேலிருக்குமாறு தாங்கும் தாங்கி; weaver's instrument *which stands to keep the warp up.*

*[பிணை + கட்டை. நான்கு கட்டைகள் குறுக்காக வைத்தும் மேல் நுனியில் அவற்றை இணைக்கும் வகையில் மற்றொன்று வைத்தும் பிணைக்கப் படுவது]*

**பிணைக்கட்டை[2]** *piṇai-k-kaṭṭai,* பெ. (n.) முன்னங்காலில் படும்படி கொண்டி மாட்டின் கழுத்தில் கட்டப்படும் கட்டை; log tied to the neck of stray cattle.

*[பிணை + கட்டை. கழுத்தோடு பிணைக்கப்படும் கட்டை.]*

**பிணைக்கடுதாசி** *piṇai-k-kaḍudāśi,* பெ. (n.) *பிணைச் சீட்டு* பார்க்க; see *piṇai-c-ciṭṭu.*

*[பிணை + கடுதாசி]*

**பிணைக்கி** *piṇaikki,* பெ. (n.) ஒன்றோடொன்று இணைக்கும் பொருள்; that which joins corresponding parts to each other.

*[ பிள் → பிண் → பிணை → பிணைக்கு ]*

**பிணைகாரன்** *piṇaikāraṉ,* பெ. (n.) பொறுப்பாண்மை (உத்தரவாதந்) தருவோன் (யாழ். அக.); surety.

*[பிணை + காரன்]*

**பிணைகைதி** *piṇaikaidi,* பெ. (n.) பணத்திற்காகவோ வேறு கட்டாயத்திலோ பிடித்து வைக்கப்பட்டிருப்பவர்; person one who is forcibly taken as captive.

*[பிணை + கைதி]*

U. gaidi > **த.** கைதி.

**பிணைச்சமாதிரி** *piṇaiccamādiri,* பெ. (n.) இணைக்கப் பட்ட உத்தரம்; scarfed beam. (C.E.M.).

*[பிணை → பிணைச்ச + மாதிரி]*

**பிணைச்சல்** *piṇai-c-cal* பெ. (n.) கதவை நிலையோடு பொருத்தவுதவும் இரும்புப் பட்டை (யாழ்ப்.); hinge.

*[பிணை → பிணைச்சல். 'சல்' தொ.பெ.ஈறு]*

**பிணைச்சீட்டு** piṇaic-c-cīṭṭu, பெ. (n.) பொறுப்பாண்மை(உத்தரவாத)ஆவணம் (வின்.); bail bond, bond of recognisance.

*[பிணை + சீட்டு. சுள் → (சுட்டு) → சிட்டு = சிறியது, சிறுகுருவி. சிட்டு → சீட்டு = ஓலை நறுக்கு, ஓலையில் எழுதப்பட்ட ஆவணம், ஆவணம்.]*

**பிணைச்சு** piṇaiccu, பெ. (n.) புணர்ச்சி (பிங்.); copulation.

*[பிணை → பிணைச்சு]*

**பிணைசொல்(லு)–தல்** *piṇaišol(lu)-,* 5செ.கு.வி. (v.i.) பொருப்பாண்மை (உத்தரவாதம்) ஏற்றல் (வின்.); to stand surety, go bail.

*[பிணை + சொல்–,]*

**பிணைத்தடி**[1] *piṇai-t-taḍi,* பெ. (n.) பிணைக்கட்டை பார்க்க; piṇai-k-kaṭṭai.

[பிணை + தடி]

**பிணைத்தடி**[2] *piṇai-t-taḍi,* பெ. (n.) *பிணை கட்டை*[2] பார்க்க; see *piṇai-kaṭṭai*[2].

[பிணை + தடி]

**பிணைத்தொகை** *piṇai-t-togai,* பெ. (n.) பணய ஆளை (பணயக்கைதியை) விடுவிப்பதற்குக் கேட்கும் தொகை; ransom. வெளிநாட்டவரைக் கடத்திய கொடு முனைப்பாளிகள் பிணைத் தொகையாகக் கோடி உருவா கேட்டனர்.

*[பிணை + தொகை]*

**பிணைப்படு–தல்** *piṇai-p-paḍu-,* 20 செ. கு. வி. (v.i.) *பிணைபோ–தல்* பார்க்க; see *piṇaipō-,*

*[பிணை + படு–, 'படு' து.வி.]*

**பிணைப்பணம்** *piṇai-p-paṇam,* பெ. (n.) பிணைக்கான தொகை; money given as security, bail. குற்றவாளியை விடுவிப்பதற்குப் பிணைப்பணமாக உருவா 10,000 செலுத்துமாறு முறைமன்றம் பணித்தது (உ.வ.).

[பிணை + பணம். படம் → பணம்]

**பிணைப்பு** *piṇaippu,* பெ. (n.) நட்பு, உறவு, அன்பு முதலியவற்றால் ஏற்படும் நெருக்கம்; closeness; ties or bond (of affection) ஒருநாள்கூடப் பிரிந்திருக்க முடியாதபடி அவனோடு ஒரு பிணைப்பு ஏற்பட்டுவிட்டது (உ.வ.).

[பிணை → பிணைப்பு. 'பு' தொ.பெ.ஈறு]

**பிணைப்பொருள்** *piṇai-p-poruḷ,* பெ. (n.) பிணையப்பொருள் பார்க்க, see piṇaiya-p-poruḷ

[பிணை + பொருள்]

**பிணைபடு–தல்** *piṇai-paḍu-,* 20 செ. கு. வி. (v.i.) *பிணைபோ–தல்* (வின்.) பார்க்க; see *piṇaipō-,*

*[பிணை + படு. 'படு' து.வி.]*

**பிணைபோ—தல்** *piṇai-pō-,* 8, செ. கு. வி. (v.i.) பொறுப்பேற்றுக் கொள்ளுதல் (வின்.); to give securtiy, to go bail.

*[பிணை + போ—, 'போ' து. வி.]*

**பிணைமாடு** *piṇai-māḍu,* பெ. (n.) இணைக்கப்பட்ட எருதுகள்; a pair of oxen yoked together.

*[பிணை + மாடு. புல் → புள் → புண் → புணை. புணைத்தல் = கட்டுதல். புணை → புணையல் = மாட்டுப்பிணைப்பு. புணை → பிணை]*

**பிணைமுறி** *piṇaimuṟi,* பெ. (n.) *பிணைச் சீட்டு* பார்க்க; see piṇai-c-ciṭṭu.

*[பிணை + முறி]*

**பிணையடி—த்தல்** *piṇai-y-aḍi-,* 4. செ.குன்றாவி. (v.t.) சூட்டடிற்காக எருதுகளைப் பிணைத் தோட்டுதல்; to yoke oxen in a row and drive them for threshing corn.

**மறுவ.** புணைசல்விடுதல், கடாவிடுதல்

*[பிணை + அடி: 'அடி' து. வி.]*



**பிணையத்தொகை** *piṇaiya-t-togai,* பெ. (n.) ஒன்றுக்கு உறுதி கூறிக் கையெழுத்திட்டு, உறுதி கூறியவாறு நடக்காது போனால் தான் பொறுப்பேற்றுக் கட்டுவதாக ஒப்புக்கொண்ட தொகை; amount named in a bond of surety or security.

*[பிணையம் + தொகை]*

**பிணையப்பொருள்** *piṇaiya-p-poruḷ,* பெ. (n.) பிணையமாக வைக்கப்பட்ட பொருள்; pledged article

*[பிணையம்+ பொருள்]*

**பிணையம்** *piṇaiyam* பெ. (n.) பொறுப் பாண்மை (உத்தரவாதம்); bail, security, guarantee, pledge.

*[பிணை → பிணையம்]*

**பிணையல்** *piṇaiyal,* பெ. (n.) ஒன்று சேர்க்கை; joining together. "தாமரை யலரிணைப் பிணையல்" (பரிபா. 2,53). **2.** மலர்மாலை; flower garland. **3.** *பிணைமாடு* பார்க்க; see *piṇaimāḍu.* **4.** கதவின் இணைப்புக்குடுமி (வின்.); hinge. **5.** புணர்ச்சி; copulation. **6.** இணைக்கை; (nāṭya) gesture with both hands. "பிண்டியும் பிணையலும்" (சிலப், 3,18). **7.** *பிணைக்கட்டை*[1] பார்க்க; see *piṇai-k-kaṭṭai*[1]. **8.** *பிணைக்கட்டை*[2] பார்க்க; see *piṇai-k-kaṭṭai*[2].

*[பிணை → பிணையல். 'அல்' தொ. பெ. ஈறு]*

**பிணையற்கை** *piṇaiyaṟ-kai,* பெ. (n.) *பிணையல், 6* (சிலப். பக். 710) பார்க்க; see *piṇaiyal 6.*

*[பிணையல் + கை. பிணையல் = இரட்டைக்கை, இணைக்கை, பிணை யற்கை பதினைந்து வகைப்படும். (சிலம்பு அடி. 3:18)]*

**பிணையன்மாலை** *piṇaiyaṉ-mālai,* பெ. (n.) *பிணையல் 2* பார்க்க; see *piṇaiyal,2.* 'பித்திகைப் பிணையன் மாலை' (சீவக. 2177).

*[பிணையல் + மாலை. முய → முயல்→ மயல் = மயக்கம். மயல் → மால் → மாலை = பல மலர்கள் கலக்குந் தொடை ]*

**பிணையாள்** *piṇai-y-āḷ,* பெ. (n.) *பிணைகாரன்* பார்க்க; see *piṇaikāraṉ.*

*[ பிணை + ஆள். ]*

**பிணையாளன்** *piṇai-y-āḷaṉ,* பெ. (n.) *பிணைகாரன்* (யாழ்.அக.) பார்க்க; see *piṇaikāraṉ.*

*[ பிணை + ஆளன் ]*

**பிணையாளி** *piṇai-y-āḷi,* பெ. (n.) *பிணை காரன்* (யாழ். அக.) பார்க்க; see *piṇaikāraṉ.*

*[பிணை + ஆளி]*

**பிணையிலி** *piṇai-y-ili,* பெ. (n.) தக்கோராற் பேணப்படாதவ–ன்–ள்; uncared-for person. 'பெட்டாங் கொழுகும் பிணையிலி' (நான்மணி. 91)

மறுவ. ஏதிலி.

*[பிணை + இலி. இல்லி → இலி]*

**பிணையெலி** *piṇai-y-eli,* பெ. (n.) ஒருவகை எலி; a kind of rat.

*[ ஒருகா. பெண்எலி → பிணைஎலி ஒ.நோ. பிணைமான் (பெண்மான்) ]*

**பிணையெலிக்கடி** *piṇai-y-eli-k-kaḍi,* பெ. (n.) பிணையெலியின் நச்சுக்கடி; poisonous bite of the rat.

*[பிணையெலி + கடி]*

**பிணையோட்டு–தல்** *piṇi-y-ōṭṭu,* 5 செ. குன்றாவி (v.t.) *பிணையடி–த்தல்* பார்க்க; see *piṇai-y-aḍi-.*

மறுவ. புணைசல்விடுதல்

*[பிணை + ஓட்டு–. ஓடு → ஓட்டு]*

**பிணைவு** *piṇaivu,* பெ. (n.) புணர்ச்சி; coition.

*[பிள் → பிண் → பிணை → பிணைவு. 'வு' பெ.ஆ.ஈறு]*

**பிணைவை–த்தல்** *piṇai-vai-,* 18 செ. குன்றாவி. (v.t.) பிணையமாக வைத்தல்; to pledge.

*[பிணை+ வை–,]*

**பித்தக்கக்கல்** *pitta-k-kakkal,* பெ. (n.) பித்த மிகுதியினாலுண்டாகும் கக்கல் (வாந்தி); vomitting due to biliousnes.

*[பித்தம் + கக்கல். கக்கு → கக்கல். 'அல்' தொ.பெ.ஈறு]*

**பித்தக்கட்டி** *pitta-k-kaṭṭi,* பெ. (n.) ஈரற்குலை நோய் வகை (இ. வ.); a disease of the liver.

*[பித்தம் + கட்டி. கள் → கட்டி]*

**பித்தக்கரடு** *pitta-k-karaḍu,* பெ. (n.) உடலின் உள்ளுறுப்புக்களில் பித்தம் உறைவதாலேற் படும் கல் போன்ற தடிப்பு; biliary calculus.

*[பித்தம் + கரடு. கர → கரண் → கரடு. ஒ.நோ: முர → முரண் → முரடு]*

**பித்தக்கரப்பன்** *pitta-k-karappaṉ,* பெ. (n.) குழவிகட்கு, உடல் முழுவதிலும் அரிப்பை யுண்டாக்கி, அதன் விளைவாகத் தலைவலி, கக்கல்(வாந்தி) போன்றவற்றை யுண்டாக்கும் நோய்; a skin disease of the children characterised by excesssive itching of the skin, headache and vomiting.

*[பித்தம் + கரப்பான். கர → கரப்பு → கரப்பான்]*

**பித்தக்கரப்பான்** *pitta-k-karappāṉ,* பெ. (n.) மிகுவெப்பத்தின் விளைவாக நடுவயிற்றைக் கரைத்து உடலை வெம்பச் செய்து, இரு தொடைகளிலும் உளைச்சலையுண்டாக்கும் நோய்; a disease marked by bloating of the abdomen excessive heat in the body, heaviness and pain in the thighs.

*[பித்தம் + கரப்பான்]*

**பித்தக்கல்** *pitta-k-kal,* பெ. (n.), பித்தநீர் உறைவதனா லுண்டாகுங் கல்; gall stone.

க. பித்தகல்லு

*[பித்தம் + கல். குல் → கல். பித்தப்பையில் உருவாகும் கல்லைப் போன்ற ஒருவகைப் பொருள்.]*

**பித்தக்கழிச்சல்** *pitta-k-kaḻiccal,* பெ. (n.) உட்சுரங்காய்ந்து, உமிழ்நீர் சுரந்து உட்கொண்ட மருந்தின் விளைவால் வயிறு பொருமி, பலவாறாக மலங்கழியும் நோய்வகை; a disease characterised by different kinds of motion with bloated abdomen, salivation, thirst and fever.

*[பித்தம் + கழிச்சல். கழி → கழிச்சல்]*

**பித்தக்கனல்** *pitta-k-kaṉal,* பெ. (n.) மிகுதியான பித்தத்தினால் உடம்பிலேற்படும் எரிச்சல் அல்லது வெப்பம்; excessive warmth of the body caused by the aggravated condition of the bile humour.

**மறுவ.** பித்தக்காய்ச்சல், பித்தக்காங்கை, பித்தச்சுரம்; பித்தக்கொதி, பித்தச்சூடு.

*[பித்தம் + கனல். குல் → குன் → கன் → கனல்.]*

**பித்தக்காங்கை** *pitta-k-kāṅgai,* பெ. (n.) 1. பித்தத்தால் உண்டாகுஞ் சூடு (கொ. வ.); heat caused by the over-secretion of bile. 2. *பித்தக் கொதி* பார்க்க; see *pitta-k-kodi.*

*[பித்தம் + காங்கை. காய் → காய்ங்கு → காங்கு → காங்கை]*

**பித்தக்காமாலை** *pitta-k-kāmālai,* பெ. (n.) அரத்தத்தில், பித்தநீர் கலப்பதால், நாவறண்டும் உடம்புகொதித்தும், விழிநீர் மஞ்சளித்து மேற்படும் காமாலை நோய்; a disease marked by fever, yellow coloured tears, dryness of the skin fatigue etc.

க. பித்தகாமாலெ; து. பித்தகாமால், பித்தகாமாலெ

*[ பித்தம் + காமாலை ]*

**பித்தக்காய்ச்சல்** *pitta-k-kāyccal,* பெ. (n.) பித்தசுரம்; bilious fever.

*[பித்தம் + காய்ச்சல். காய் → காய்ச்சல். 'அல்'. தொ. பெ. ஈறு]*

**பித்தக்காலம்** *pitta-k-kālam,* பெ. (n.) மிகுதியான பித்தநீர் சுரப்பதற்கு ஆகுங் காலம்; the time when bile humour predominates.

*[பித்தம் + காலம்]*

**பித்தக்கிராணி** *pitta-k-kirāṇi,* பெ. (n.) அறுவகைக்கிரகணியுள் பித்தத்தாலுண்டாவது (யாழ். அக.); diarrhoea caused by bile, one of six 'kirakaṇi'.

*[பித்தம் + கிராணி]*

**பித்தக்கினி** *pittakkiṉi,* பெ. (n.) செங்கோள்; helleborus niger.

**பித்தக்கிறுகிறுப்பு** *pitta-k-kiṟukiṟuppu,* பெ. (n.) பித்தாதிக்கத்தில் வருந் தலைச்சுழற்சி; dizziness arising from biliousness. (M.L.)

*[பித்தம் + கிறுகிறுப்பு]*

**பித்தக்கிறுப்பு** *pitta-k-kiṟuppu,* பெ. (n.), பேருழைப்பு, தளர்ச்சி, மிகுபுணர்ச்சி போன்றவற்றால் மூளையிற் செல்லும் அரத்தவோட்டம், நிலைதடுமாறுவதாலேற்படும் மயக்கம்; giddiness caused by bilious affections due to diseases, weakness, sexual intercourse and other cause.

*[பித்தம் + கிறுப்பு]*

**பித்தக்குடல்வாதம்** *pitta-k-kuḍalvādam,* பெ. (n.) குடலிறக்கம்; hernia.

*[பித்தம் + குடல் + வாதம்]*

Skt. vāta > த. வாதம்

**பித்தக்குழல்** *pitta-k-kuḻal,* பெ. (n.) பித்தநீர் செல்லுங் குழாய்; bile duct.

*[பித்தம் + குழல். குள் → குழை → குழல்]*

**பித்தக்குழலழற்சி** *pitta-k-kuḻalaḻaṟci,* பெ. (n.) பித்தக் குழாயிலேற்படும் வீக்கம்; inflammation of the bile duct.

*[பித்தம் + குழல் + அழற்சி. அழல் → அழற்சி]*

**பித்தக்குழற்றாபிதம்** *pitta-k-kuḻaṟṟābidam,* பெ. (n.) *பித்தக்குழலழற்சி* பார்க்க; see *pittakkuḻalaḻaṟci.*

*[பித்தம் + குழல் + தாபிதம்]*

Skt. sthāpita > த. தாபிதம்

**பித்தக்குற்றம்** *pitta-k-kuṟṟam,* பெ. (n.) பித்த நீரின் மிகுதியால் உடம்பிலேற்படும் ஊறுபாடு; defects caused by biliousness in the system.

*[ பித்தம் + குற்றம் ]*

**பித்தக்குறைவு** *pitta-k-kuṟaivu,* பெ. (n.) பித்தநீர்க் குறைவாகச் சுரப்பதாலுண்டாகும் நோய்; lack of deficiency of bile.

*[ பித்தம் + குறைவு. குறை → குறைவு ]*

**பித்தக்குன்மம்** *pittak-kuṉmam,* பெ.(n.) வயிறு மந்தித்து, அதன் விளைவாக, நெஞ்செரிச்சல், வாய் நீரூறல், கக்கல் (வாந்தி) உண்டாக்கும் குன்ம நோய்; an ailment called pithaguṉmam(dyspepsia) marked by excessive perspiration, bitter taste, reeling of the head, nausea, excessive salyvation burning of the chest and dullness of appetite.

*[ பித்தம் + குன்மம் ]*

**பித்தக்கொதி** *pitta-k-kodi,* பெ. (n.) பித்தாதிக்கத்தால் உண்டாகும் காய்ச்சல் நிலை (யாழ்ப்.); feverish state of body arising from derangement of the bilious humour.

*[பித்தம் + கொதி]*

**பித்தக்கோழை** *pitta-k-kōḻai,* பெ. (n.) பித்தத்தோடு கலந்த கோழை (சிலேட்டுமம்) நோய்; disease due to irregularities in phlegmatic and bilious humours.

*[ பித்தம் + கோழை ]*

**பித்தக்கோழைச்சுரம்** *pitta-k-kōḻai-c-curam,* பெ. (n.) பித்தந்தருஞ்சளியும் உடம்பில் மிகுதியாகச் சேர்வதாலேற்படும் காய்ச்சல்; fever caused by the combination of bile as phlegm.

*[பித்தம் + கோழை + சுரம்]*

**பித்தக்கோளாறு** *pitta-k-kōḷāṟu,* பெ. (n.) பித்தநீரின் மிகுதியால் உடம்பிலேற்படுஞ் சீர்குலைவு; bilious trouble due to body's disorder.

*[பித்தம் + கோளாறு]*

**பித்தகண்டகம்** *pitta-kaṇḍagam,* பெ. (n.) பித்தநீரினால் மூக்கிலேற்படுங் கொப்புள நோய்; ulcorative stomatitis.

*[பித்தம் + கண்டகம்]*

**பித்தகணம்** *pittakaṇam,* பெ. (n.) வெப்ப மிகுதியால், குழந்தைகட்கு ஏற்படும் கணநோய் வகையுளொன்று; a children's disease characterised by excessive heat in the body.

**மறுவ.** ஆமகணம், கணை

*[பித்தம் + கணம்]*

**பித்தகதிப்பு** *pittakadippu,* பெ. (n.) பித்த மிகுதி; cholorrhea.

*[பித்தம் + கதிப்பு]*

**பித்தகபதொந்தம்** *pitta kabatondam,* பெ. (n.) இருபங்குச் பித்தநீரும், ஒரு பங்குச் சளியும் சேர்வதாலேற்படும் நோய்; bile humour and phlegm humour joining together in the proportion of **2:1** and creating disease.

*[பித்தம் + கபம் + தொந்தம்]*

**பித்தகபம்** *pittakabam,* பெ. (n.) நெஞ்செல்லாம் புகைந்து, இருமலேற்பட்டு, சளிமிகுந்து, இளைப்பும் ஈளையுமுருவாகி அதன் விளைவாக நாவறட்சியைத் தோற்றுவிக்கும் கோழை நோய்; a disease marked by slight irrigation of the throat, cough nausea, dryness of the tongue and throat, fatigue and excess of phlegm.

*[ பித்தம் + கபம். கவம் → கபம் ]*

**பித்தகாங்கை** *pitta-kāṅgai,* பெ. (n.) பித்தக்காங்கை (வின்.) பார்க்க; see pitta-k-kāṅgai.

*[ பித்தம் + காங்கை ]*

**பித்தகாசம்**[1] *pitta-kāšam,* பெ. (n.) எலும்புருக்கி நோய் வகை (வின்.); a kind of asthma.

*[பித்தம் + காசம்]*

மிகுதியான பித்தநீரின் விளைவால் இந்நோய் ஏற்படுகிறது என சா.அக. குறிப்பிடுகிறது.

**பித்தகாசம்**[2] *pitta-kāšam,* பெ. (n.) வெள்ளை விழியில் நீர் படர்ந்து, விண் போன்ற நீலவண்ணத்தை யுண்டாக்கிக், கருவிழியில் உளுந்தளவு வெண்படலத்தை யுருவாக்கிக் கருமணியில் மஞ்சணிற நீர் சுரக்க வைக்கும் கண்ணோய்; an eye disease marked by

exudation of yellow fluid and white opaqueness of the pupil-cataract.

*[பித்தம் + காசம்]*

**பித்தகாமாலை** *pittakāmālai,* பெ. (n.) *பித்தக் காமாலை* (யாழ். அக.) பார்க்க; see *pitta-k-kāmālai.*

*[பித்தம் + காமாலை]*

**பித்தகாரகம்** *pitta-kāragam,* பெ. (n.) *பித்தக்காங்கை* (வின்.) பார்க்க; see *pitta-k-kāngai;*

*[பித்தம் + காரகம்]*

**பித்தகாரி** *pittakāri,* பெ. (n.) பித்தநீரை சுரக்கச் செய்யும் மருந்து; drug promoting the secretion or excretion of the bile.

மறுவ. பித்தநீர்பெருக்கி

*[பித்தம் + காரி]*

**பித்தகாலம்** *pittakālam,* பெ. (n.) **1.** உடலில் பித்தம் மிகுதியால் உண்டாகும் வாணாளின் நடுப்பருவம் (வின்.); middle stage of life when the bilious humour is predominant. **2.** காலை யிலும் மாலையிலும் பித்தமதிகப்படும் 7 மணி முதல் 9 மணி வரையிலுள்ள காலம் (வின்.); the 2nd and 3rd hour of day at night while bilious humour is predominant.

*[பித்தம் + காலம். கோல் → கால் → காலம்]*

**பித்தகுன்மம்** *pitta-kunmam,* பெ. (n.), *பித்தக்குன்மம்* பார்க்க; see *pitta-k-kunmam.*

*[ பித்தம் + குன்மம் ]*

**பித்தகோடாரித்தைலம்** *pittakōdāri-t-tailam,* பெ. (n.), கண்ணோய், வாந்தி, மயக்கம் நெஞ்செரிவு போன்றவற்றைப் போக்கும் மருந்தெண்ணெய்; a medicated oil cures eye diseases vomiting, giddiness, burning in the chest and dryness of the body.

*[ பித்த கேடாரி + தைலம் ]*

Skt. tāila > *த.தைலம்.*

**பித்தகோபம்** *pitta-kōbam,* பெ. (n.), புளி, மிளகாய் முதலியவற்றை மிகுதியும் உண்பதால் உடலில் உண்டாம் பித்தாதிக்கம்; over-secretion or vitiation of bile on account of excessive use of tamarind, chillies etc, in food.

*[பித்தம் + கோபம்]*

**பித்தகோரி** *pittakōri,* பெ. (n.) புகையிலை; tobacco.

*[ புத்கம் + கோரி. கோரு → கோரி ]*

**பித்தங்கழட்டி** *pittaṅkalatti,* பெ. (n.), மிகுதியான பித்தத்தை வெளிப்படுத்தும் மருந்து; drug promoting the secretion or excretion of bile.

மறுவ. பித்தநீர் பெருக்கி, பித்தகாரி

*[ பித்தம் + கழட்டி. கழற்றி → கழட்டி ]*

**பித்தச்சுவரி** *pittaccuvari,* பெ. (n.), *பித்தசோகைக் காமாலை* பார்க்க; see *pittašōgai-k-kāmālai.*

*[பித்தம் + சுவரி]*

**பித்தச்சுழற்சி** *pitta-c-cularci,* பெ. (n.), *பித்தக் கிறுகிறுப்பு* (பைஷஜ. உந.) பார்க்க; see *pitta kirukiruppu.*

*[ பித்தம் + சுழற்சி ]*

**பித்தச்சூடு** *pitta-c-cūḍu,* பெ. (n.), *பித்தக்காங்கை* (வின்.) பார்க்க; see *pitta-k-kāṅgai.*

*[ பித்தம் + சூடு ]*

**பித்தசத்தி** *pitta-šatti,* பெ. (n.), பித்த நீரைக்கக்கல் (வாந்தி) செய்கை. (இராசவைத். பக். 124.); vomitting of bile.

*[பித்தம் + சத்தி]*

**பித்தசத்து** *pitta-šattu,* பெ. (n.), அழிஞ்சில் மரவகை; a kind of tree.

**பித்தசம்**[1] *pittašam,* பெ. (n.), மிகுபித்த நீரா லேற்படுஞ் சீர்குலைவு; that which is due to deranged bile humour.

*[பித்தம் → பித்தசம்]*

**பித்தசம்**[2] *pittašam,* பெ. (n.), நவமணிக் குற்றத் தொன்று; a flaw in the nine gems.

**பித்தசமனாக்கி** *pittašamanākki,* பெ. (n.), சிற்றிஞ்சு; a small species of palm.

**பித்தசமனி** *pittašamani,* பெ. (n.), மாஞ்ச ரோகணி; pimperual.

**பித்தசயம்** *pittašayam,* பெ. (n.), அளவிற்கதிகமான பித்தநீரின் விளைவால் உடம்பிற் சூடேறி, கைகால் எரிச்சலுற்றுக் கடுத்து, கோழையும் இருமலையு முண்டாக்கும் ஈளை நோய்; bilious consumption marked by temperature, burning of hands and feet buring during micturation, nausea, fatigue cough with expectoration.

*[பித்தம் + சயம்]*

**பித்தசரீரம்** *pitta-šarīram,* பெ. (n.), பித்தாதிக்கமுள்ள உடம்பு; state of the body in which the bilious humour prepondrates.

*[ பித்தம் + சரீரம். ]*

Skt. šarīa > த. சரீரம்

**பித்தசாந்தி** *pitta-šānti,* பெ. (n.), 1. பித்தந்தணிக்கு மருந்து; medicine for biliousness. 2. பொன்னாங் காணி (மலை.); plant growing in damp places.

*[ பித்த + சாந்தி ]*

**பித்தசிலேட்டுமசுரம்** *pittašilēṭṭumašuram,* பெ. (n.) பித்தநீருஞ் சளியும் உடம்பில் மிகுதியாகச் சேர்வதாலேற்படுங் காய்ச்சல்; fever caused by the combinafion of bile and phlegm.

*[பித்தம் + சிலேட்டுமம் + சுரம்]*

**பித்தசிலேட்டுமம்** *pitta-šilēṭṭumam,* பெ. (n.), *பித்தசிலேற்பனம்* (யாழ்.அக.); see *pittašilērpanam.*

*[ பித்தம் + சீலேட்டுமம் ]*

**பித்தசிலேட்டுமவக்கினி** *pittašilēṭṭuma-v-akkini,* பெ. (n.), ஆடா தோடை; a plant Malabar winter cherry.

**பித்தசிலேட்டுமாதிசாரம்** *pittašilēţţumādišāram,* பெ. (n.), பித்தத்தினால் தோன்றும் வயிற்றுப் போக்கு; diarrhoea caused by vitiated by combination of bile. and phlegm humours

*[ பித்தம் + சிலேட்டுமம் + ஆதிசாரம் ]*

**பித்தசிலேட்டுவிசர்ப்பி** *pitta-šilēţţu-višarppi,* பெ. (n.), நுணாக்காய் வடிவில் தோலிலேற்படும் புண்; a skin disease.

**மறுவ.** பங்கவிசர்ப்பி.

*[பித்தம் + சிலேட்டுமம் + விசர்ப்பி]*

**பித்தசிலேற்பனம்** *pitta-šilērpanam,* பெ. (n.) பித்தத்தோடு கலந்த கோழை (சிலேட்டுமநோய்.) (யாழ். அக.); disease due to irregularities in phlegmatic and bilious humours.

*[பித்தம் + சிலேற்பனம்]*

**பித்தசீதளம்** *pittašīdaļam,* பெ. (n.), பித்தநீரின் மிகுதியால் கோழையுடன் கூடிய ஈளையையுருவாக்கும் நோய்; disease due to irregularities in phlegmatic cough nausea and bilious humours.

**மறுவ.** பித்தகபம்

*[ பித்தம் + சீதளம் ]*

**பித்தசுரசமனி** *pittašurašamani,* பெ. (n.), பித்தசுரத்தை நீக்கும் பெருங்காஞ் சொறி; a twiner large climbing nettle-alleviates the pitta fever.

*[ பித்தசுரம் + சமனி ]*

**பித்தசுரநாசினி** *pitta-šuranāšini,* பெ. (n.), பித்தக்காய்ச்சலைப் போக்கும் கோரைக்கிழங்கு; root of coray, destroyer of the pittafever.

*[ பித்தசுரம் + நாசினி ]*

**பித்தசுரம்** *pitta-šuram,* பெ. (n.), *பித்தக் காய்ச்சல்* (கொ. வ.) பார்க்க; see *pitta-k-kāyccal.*

**க.** பித்தவர

*[பித்தம் + சுரம்]*

**பித்தசூலை** *pitta-šūlai,* பெ. (n.), அளவிற் கதிகமாக வளி தங்குவதால், உடம்பில் வெப்பம் மிகுதியாகி தலைவலித்து வெப்பம் மிகுதியாகி, நாக்குவறண்டு நீர் மஞ்சளித்து, பொருத்துகள் மோது கட்டிகள் அசையவொட்டாதபடி துன்புறுத்துஞ் சூலை நோய் வகை; thirst and burning sensation in the body attended with an excruciating pain-colic.

*[ பித்தம் + சூலை ]*

**பித்தசூலைக்கட்டு** *pittašūlai-k-kaţţu,* பெ. (n.) *பித்தசூலை* பார்க்க; see *pittašūlai.*

*[ பித்தம் + சூலை + கட்டு ]*

**பித்தசோகை** *pilta-šōgai,* பெ. (n.), உடம்பு, வெளுத்து, கடித்து முகம், கண் முதலானவை வெளுத்து, நெஞ்சு பதைத்து அடிவயிறு விம்மிப் புடைத்து, இதன் விளைவால் நாக்கு சுவை (உருசி) யற்று உதடு மஞ்சளித்துக் கைகால் ஓய்ந்து, சிறுநீர் மிக வெளுத்திறங்கும் (ஒருவகை சோகை) நோய்வகை; a disease-a kind of anaemia in which the body and the eyes are rendered pale, abdomen body swollen tongue tasteless, lips yellow and limbs weak.

*[ பித்தம் + சோகை ]* .

**பித்தசோகைக்காமாலை** *pittašōgai-k-kāmālai,* பெ. (n.), குழந்தைகளைத் துன்புறுத்துங் காமாலை நோய் வகை; a kind of jaundice due to excess of bilious secretions in the system mixing up in the circulation of blood.

*[ பித்தம் + சோகை + காமாலை ]*

**பித்தட்சயம்** *pittaṭšayam,* பெ. (n.) *பித்தசயம்* பார்க்க; see *pittašayam.*

*[ பித்தம் + சயம் ]*

**பித்தத்தடிப்பு** *pitta-t-taḍippu,* பெ. (n.) பித்தத் தழும்பு (இ.வ.) பார்க்க; see pitta-t-taḻumbu.

*[ பித்தம் + தடிப்பு ]*

**பித்தத்தடைநோய்** *pitta-t-taḍainōy,* பெ. (n.) பித்தந் தடை படுவதினா லேற்படும் ஈரல் நோய்; a disease of the liver due to retention of the bile duct from obstruction.

*[ பித்தம் + தடை + நோய் ]*

**பித்தத்தத்து** *pitta-t-tattu,* பெ. (n.), பித்தத்தழுப்பு பார்க்க; see pitta-t-taḻumbu.

*[ பித்தம் + தத்து ]*

**பித்தத்தலைவலி** *pitta-t-talaivali,* பெ. (n.), கடுஞ் சினம், அளவிறந்த பித்தமி வற்றாலேற்படும் தலைநோவு; a violent and aching pain in the head, accompanied by a sense of scorching vapour being emitted from the nostrills.

*[ பித்தம் + தலைவலி ]*

**பித்தத்தழும்பு** *pitta-t-taḻumbu,* பெ. (n.), சொறிவகை. (இ.வ); nettle rash, urticaria.

*[ பித்தம் + தழும்பு ]*

**பித்தத்தாரைத்தாபிதம்** *pittattārai-t-tābidam,* பெ. (n.) *பித்தக்குழலற்சி* பார்க்க; see *pittakkuḻalaṟci.*

*[ பித்தத்தாரை + தாபிதம் ]*

**பித்தத்தாரைப்புற்று** *pittattārai-p-puṟṟu,* பெ. (n.) பித்தக் குழாயி லுண்டாகும் புரையோடிய புண்; cancer of bile duct.

*[ பித்தத்தாரை + புற்று. புல் → புற்று ]*

**பித்தத்தானம்** *pittattāṉam,* பெ. (n.) கொப்பூழுக்கும் கழுத்துக்கும் இடைப்பட்ட பகுதி; the region of bilious humour in the body from navel to neck.

*[ பித்தம் + தானம் ]*

**பித்ததாகம்** *pittatāgam,* பெ. (n.) பித்த மிகுதியினால் உண்டாகும் நீர்வேட்கை; thirst due to bilious affections.

*[ பித்தம் + தாகம் ]*

**பித்ததாகைவிரணம்** *pitta-tāgai-viraṇam,* பெ. (n.), சீழ்ஒழுகை, மிகுவலி, தூக்கமின்மை போன்றவற்றை யுண்டாக்கும் அறையாப்புக் கட்டி நோய்; bubo marked by exudation of blood and pus, pain, nausea loss of sleep ect.

*[ பித்தம் + தாகை + விரணம் ]*

**பித்ததாரை** *pittatārai,* பெ. (n.) *பித்தக் குழல்* பார்க்க; see *pitta-k-kulal.*

*[ பித்தம் + தாரை ]*

**பித்ததிஞ்சம்** *pittatiñjam,* பெ. (n.) சுண்டைக்காய்; fruit of solanum torvum.

**பித்ததிமிரம்** *pittatimiram,* பெ. (n.) கண்ணோய் வகையு ளொன்று; an eye discase.

**பித்ததேகக்கூறு** *pittadēgakkūṟu,* பெ. (n.) பித்தஞ்செறிந்த உடம்பின் மெய்ந்நிலைக்கூறு; bilious temperament.

*[ பித்தம் + தேகம் + கூறு. ]*

**பித்ததேகம்** *pitta-tēgam,* பெ. (n.) பித்தவுடம்பு; bilious body.

*[ பித்தம் + தேகம் ]*

Skt. dēha > த.தேகம்

**பித்ததோசம்** *pitta-tōšam,* பெ. (n.) *பித்தக் குற்றம்* பார்க்க; see *pitta-k-kuṟṟam,*

*[ பித்தம் + தோஷம் ]*

Skt. dōṣa > த.தோசம்

**பித்தநரை** *pittanarai,* பெ. (n.) வெப்பமிகுதி, அளவிறந்த பித்தம், இவற்றின் விளைவால் இளம்பருவத்திற்றோன்றும் வெளுத்த முடி; premature greyness of the hair, caused by excess of heat.

*[ பித்தம் + நரை ]*

**பித்தநாசம்** *pittanāšam,* பெ. (n.) முள்வெள்ளரி; a fruit, a variety of cucumber.

**மறுவ.** பித்தமகம்

**பித்தநாசினி** *pittanāšiṉi,* பெ. (n.) **1.** சீரகம்; cumin seed. **2.** ஆன் மணத்தி; bezoar.

*[ பித்தம் + நாசினி ]*

**பித்தநாடி** *pitta-nāḍi,* பெ. (n.) நாடிமூன்றனுள் பித்தநிலையைக் குறிப்பது; pulse indicating bilious humour, one of three nāṭi.

**க., தெ.** பித்த நாடி

*[ பித்தம் + நாடி ]*

**பித்தநிவாரணி** *pittanivāraṇi,* பெ. (n.) பித்தத்தை வெளிப்படுத்தும் மருந்து; medicine or drug which increases the flow of bile.

*[ பித்தம் + நிவாரணி ]*

Skt.ni-vāraṇa > த. நிவாரணம் → நிவாரணி

**பித்தநிறம்** *pittaniṟam,* பெ. (n.) பித்தநீரின் இயற்கை வண்ணம்; biliary pigment.

*[ பித்தம் + நிறம் ]*

**பித்தநீர்¹** *pitta nīr,* பெ. (n.) பித்தத்தினா லேற்பட்ட நீர்; fluid secreted owing to bilious affections.

*[ பித்தம் + நீர் ]*

**பித்தநீர்²** *pitta-nīr,* பெ. (n.) பித்தநீரிலுள்ள வளி நீர்மத்திரள்; gastric juice.

*[ பித்தம் + நீர் ]*

**பித்தநீர்வாந்தி** *pittanīrvāndi,* பெ. (n.) பித்தக்கக்கல் பார்க்க; see pitta-k-kakkal.

*[ பித்தநீர் + வாந்தி ]*

Skt.vānti > த.வாந்தி.

**பித்தநோய்** *pitta-nōy,* பெ. (n.) *பித்தக்காமாலை* பார்க்க; see *pitta-k-kāmālai.* (M.L.)

*[ பித்தம் + நோய் ]*

**பித்தப்பிரமியமேகம்** *pittappiramiyamēgam,* பெ. (n.) கற்றாழைச் சாற்றின் நிறத்தை யொத்த மணத்துடன், அளவிற்கதிகமாகச் சிறுநீர் வெளிப்படும் சருக்கரை நோய்வகை; a kind of diabetes with copious discharge of urine.

**பித்தப்பிரமேகம்** *pittappiramēgam,* பெ. (n.) உடம்பு, கை, கால், மூட்டுகளில் குத்தலுடன் வலியை யேற்படுத்தும் நோய்வகை; a disease pricking pain in the joints, arms and legs while the body slowly turn black.

*[ பித்தம் + பிரமேகம் ]*

**பித்தப்பிளப்பு** *pitta-p-piḷappu,* பெ. (n.), பித்தவெடி பார்க்க; see pittāveḍi. அவர் ஸ்ரீபாதம் பித்தப் பிளப்பா யிருக்கையாலே (ஈடு, 2, 6, 2, ஜீ.).

*[ பித்தம் + பிளப்பு ]*

**பித்தப்பீனிசம்** *pittappīṇisam,* பெ. (n.) புலால் நாற்றத்துடன் கூடிய மஞ்சட் கோழையை மூக்கினின்று ஒழுகச்செய்யும் மூக்கடைப்பு; a type of catarrh marked by a hot, yellowish secretion with rotten smell from the nostrils.

*[ பித்தம் + பீனசம் ]*

**பித்தப்புடல்** *pitta-p-puḍal,* பெ. (n.) 1. புடல்வகை; a species of snake-gourd, tric hosanthes colubrina. 2. தும்பை வகை; a species of toombay, trichosdesma zeylanicum.

*[ பித்தம் + புடல் ]*

**பித்தப்பை** *pitta-p-pai,* பெ. (n.) பித்தநீர் தங்கும் உடலுறுப்பு; gall bladder.

தெ. பித்தகோசமு.

*[பித்தம் + பை. பொள் → பொய் → (பய்) → பை]*

**பித்தப்பைக்கல்** *pilta-p-paikkal,* பெ. (n.) பித்தப்பையில் விளையுங் கல்போன்ற கடும் பொருள்; gall stone.

*[ பித்தப்பை + கல் ]*

**பித்தப்பைத்தியம்** *pitta-p-paittiyam,* பெ. (n.) மிகுதியான பித்தத்தினா லேற்பட்ட மனக்கோட்டம்; lunacy or (Insanity) caused by excitement of bilious humour.

*[ பித்தம் + பைத்தியம் ]*

**பித்தப்பையழற்சி** *pittappai-y-alarci,* பெ. (n.) பித்தப்பையிலேற்பட்டுள்ள வீக்கம்; in flammation of gall bladder.

*[ பித்தப்பை + அழற்சி ]*

**பித்தபத்திரம்** *piltapattiram,* பெ. (n.) சீரகம்; cumin seed.

*[ பித்தம் + பத்திரம் ]*

**பித்தபாண்டு** *pitta-pāṇḍu,* பெ. (n.) *பித்தபாண்டுரு[1]* (வின்.) பார்க்க; see *pittapāṇḍuru[1]*.

*[ பித்தம் + பாண்டு ]*

**பித்தபாண்டுசூலை** *pittapāṇḍuśūlai,* பெ. (n.) வயிறும், தொடையும் வீங்கி, பொருத்துகளில் ஊதை வலியை யுண்டாக்குஞ் சூலை நோய்; a kind of rheumatic pain due to bilious affection.

*[ பித்தபாண்டு + சூலை ]*

**பித்தபாண்டுரம்** *pitta-pāṇḍuram,* பெ. (n.) *பித்தபாண்டுரு[1]* பார்க்க; see *pitta pāṇḍuru[1]*.

*[ பித்தம் + பாண்டுரம் ]*

**பித்தபாண்டுரு[1]** *pitta-pāṇḍuru,* பெ. (n.) இளைப்பை யுண்டாக்கும் காமாலை வகை (வின்.); sallow kind of jaundice, inducing langour.

*[ பித்தம் + பாண்டுரு ]*

**பித்தபாண்டுரு[2]** *pittapāṇḍuru,* பெ. (n.) செவ்வள்ளிக் கிழங்கு; red sweet potato.

**பித்தபாணி** *pittapāṇi,* பெ. (n.). பனை, மாமரங்களின் பிசின்; gum of the mango or palmyra tree.

**பித்தம்[1]** *pittam,* பெ. (n.) **1.** ஈரலினின்று தோன்றும் நீர்வகை; bile, gall. பித்தம் பத்துவிதம் (பழ.). **2.** பித்தமென்னும் பிணிக்கூறு; bilious humour. *'வாத பித்தகபமென... வலித்தனர்'* (உத்தரரா. அரக்கர்பிற. 31.). **3.** மயக்கம் (சூடா.); bewilderment, delirium. **4.** மனக்கோளாறு (பைத்தியம்); lunacy, madness. *'பெருந்துறையான் பித்தவடிவு கொண்டு'* (திருவாச. 13, 19.).

ம. பித்தம்: க., பட. பித்த: தெ. பித்தமு.

*[ பே → பேம் = அச்சம்.பேதல் = அஞ்சுதல். பே → பேய் = அஞ்சப்படும் ஆவி அல்லது தோற்றம். பேய்தல் = அஞ்சுதல். பேயப்பேய விழிக்கிறான் என்பது உலகவழக்கு. பேய் → பேயன் = பேய்பிடித்தவன், பேயாடி, பேய் பிடித்தவனைப் போன்ற பித்தன், பித்தனைப் போன்ற மூடன்.*

*பே → பேக்கு = பேதை, மூடன். பேக்கு → பேக்கன். பேக்கு → பேக்கல். பேக்கல் + ஆண்டி. பேக்கலாண்டி.*

*பே → பேது = பேய்பிடித்தாற் போன்றமருள், மயக்கம், அறியாமை. பேது + உறு = பேதுறு.*

*பேதுறுதல் = மயங்குதல். பேது → பேதை = மூடன், அறிவிலி, வெள்ளை (கள்ளமிலி). பேதை → ஏதை.*

*பேது → பேத்து. பேத்துதல் = அஞ்சி உளறுதல், உளறுதல்.*

*பேத்து → பேந்து. பேந்துதல் = அஞ்சுதல், பேந்தப் பேந்த விழிக்கிறான் என்பது உலக வழக்கு.*

*பேந்து= பேய்.பேந்து → பேந்தான் = பேய்ப்பந்து என்னும் விளையாட்டு.*

*பேத்து → பீத்து. ஒ.நோ. தேஞ்சுவை → தீஞ்சுவை. பீத்துதல் = உளறுதல், தற்புகழ்ச்சியாய் உளறுதல்.*

*பீத்து → பித்து ஒ.நோ. தீம் → தித்தி.*

*பித்து = மயக்கம், மதிமயக்கம், மூளைக் கோளாறு, தலைக்கிறுக்கு, தலைச்சுற்றை*

*யுண்டாக்கும் நீர் (bile) அந்நீரைக் கொண்டவுறுப்பு (gall-bladder)மயக்க நிலைப்பட்ட காதல் அல்லது அவா.*

*பித்த → பித்தன் = கிறுக்கன், கழிபெருங்காதலன் அல்லது பற்றினன். பித்து - பிச்சு - பிச்சன்.*

*பித்து → பித்தம் = பித்து நீர், பித்த நாடி, பித்த நீர்மிக்கநோய் அந்நோயால் உண்டாகும் தலைச்சுற்று, மூளைக் கோளாறு, மயக்கம், மயக்கக்காதல் (மு.தா.8,9)*

*பித்து → பித்தம். பிதற்று → பேத்து → பித்து = பிதற்றுநிலை. அந்நிலைநாடி, அறிவுமயக்கம்,மயக்கிற்குக் காரணமான கைப்புநீர், அந் நீர் சுரக்கும் உறுப்பு*

*மா. வி. அ.*"etym. unknown" *என்று கூறுதல் காண்க. பித்த என்னுஞ் சொல்லினின்று பைத்ய என்னுஞ் சொல்லைத் திரித்துள்ளனர் வடவர் (வ.வ.2,37)]*

**பித்தம்²** *pittam*, பெ. (n.) மிளகு (பதார்த்த/1309.); pepper.

**பித்தம்³** *pittam*, பெ. (n.) பித்தல் (தஞ்சை.)1 பார்க்க; see pittal-1

**பித்தம்கட்டியம்சம்** *pittam-kaṭṭi-y-amšam*, பெ. (n.) உடம்பிலுள்ள அரத்தத்திலும், பித்தநீரிலுங் கலந்துள்ள கட்டியான கொழுப்புச் சத்து; cholestrol.

*[பித்தம் + கட்டி + அம்சம்]*

**பித்தம்பிடி-த்தல்** *pittam-piḍi-*, 5. செ. கு. வி. (v.i.), மனக்கோட்டங் கொள்ளல்; to become mad.

*[பித்தம் + பிடி -,]*

**பித்தம்போக்கி** *pittam pōkki*, பெ. (n.) பித்தத்தை வெளியேற்றிச் சமப்படுத்தும் மருந்து; medicine or drug that expels bile.

*[பித்தம் + போக்கி. போக்கு→ போக்கி. 'இ' வினை முதலீறு]*

**பித்தம்வெடுவெடு-த்தல்** *pittamveḍuveḍu*, 5. செ.கு.வி (v.i.) பித்தம் பிடி-த்தல் பார்க்க; see pittam piḍi-,.

*[பித்தம் + வெடுவெடு-, ]*

**பித்தமகம்** *pittamagam*, பெ. (n.) முள்வெள்ளரிக் கொடி (சூடா.); kakri-melon.

**பித்தமதநோய்** *pittamada-nōy*, பெ. (n.) கடுஞ்சினத்தையுருவாக்கும் நோய்; a disease marked by excessive anger.

*[பித்தமதம் + நோய்]*

**பித்தமயக்கம்** *pitta-mayakkam*, பெ. (n.) 1. தலைக்கிறுகிறுப்பு; giddiness, dizziness, vertigo. 2. மயக்க நோய்; delirium.

*[பித்தம் + மயக்கம்]*

**பித்தமருந்து** *pitta-marundu*, பெ. (n.) பித்த நோய்க் கெதிரான மருந்து; medicine for bile.

*[பித்தம் + மருந்து]*

**பித்தமலமிளக்கி** *pittamalam-iḷakki*, பெ. (n.) மலத்தை இளகச் செய்து பித்தத்தையுமுடன் சேர்த்து வெளி யேற்றும் மருந்து; cholagogue purgative.

மறுவ. பித்தக் கருக்கம்.

*[பித்தம் + மலம் + இளக்கி. இளக்கு → இளக்கி]*

**பித்தமாந்தம்** *pitta-māndam,* பெ. (n.) பித்தமிகுதியினா லேற்படும் செரியாமை யெனும் மந்த நோய்; a kind of indigestion due to excess of bile.

*[ பித்தம் + மாந்தம் ]*

**பித்தமாலை** *pittamālai,* பெ. (n.) குழந்தைகட் கேற்படும் பித்த நோய் வகை; infantile disease.

*[ பித்தம் + மாலை ]*

**பித்தமிகுதி** *pittamigudi,* பெ. (n.) பித்த மேலீடு பார்க்க; see pittamēlīḍu.

*[பித்தம் + மிகுதி. மிகு → மிகுதி]*

**பித்தமிகப்பு** *pittamigappu,* பெ. (n.) பித்தம் அதிகமாக உண்டாகை; excessive secretion of bile.(M.L.)

*[பித்தம் + மிகப்பு]*

**பித்தமுறிமாதர்** *pittamuṟimādar,* பெ. (n.) எலுமிச்சம் பழம்; lime fruit.

**பித்தமூத்திரம்** *pittamūttiram,* பெ. (n.) உடம்பில் வெப்ப மிகுதியாலுண்டாகும் வண்ணச் சிறுநீர்; dark yellow or reddish urine indicating the excitement of bilious humour and heat in the system.

*[பித்தம் + மூத்திரம். முள் → (மொள்) → மோள். மோளுதல் = சிறுநீர் விடுதல். மோள் + திரம் → (மோட்டிரம்) → மோத்திரம் → மூத்திரம்]*

**பித்தமூர்ச்சை** *pittamūrccai,* பெ. (n.) மிகுதியான பித்தத்தினால் ஏற்படும் மயக்கம்; swooning arising from bilious causes.

*[பித்தம் + மூர்ச்சை.]*

Skt. mūrch > த. மூர்ச்சை

**பித்தமேலீடு** *pittamēlīḍu,* பெ. (n.) *பித்த மிகப்பு* பார்க்க; see *pittamigappu.* (M. L.)

*[பித்தம் + மேலீடு. மேல் + இடு - மேலிடு → மேலீடு]*

**பித்தமேறு—தல்** *pittam-ēṟu,* செ.குவி. (v.i.)
1. பித்தம் மிகுதியாதல்; to be bilious.
2. மிகு சினம் கொள்ளுதல்; to be enraged. அவன் பித்தமேறிப் பேசுகிறான் (உ.வ.)

க.பித்தவேறு; து.பித்தஏறுனி, பித்தகெதருனி

*[பித்தம் + ஏறு—,]*

**பித்தயனாசி** *pittayaṉāśi,* பெ. (n.) இதிரக் கிழங்கு; wild elepheant yam.

மறுவ. காட்டுக்கருணை, சேனைக் கிழங்கு

**பித்தர்வாசம்** *pittarvāšam,* பெ. (n.) பித்தர் காப்பகம், மனப்பிறழச்சியோர் மருத்துவ மனை; bedlam, lunatic asylum.

*[பித்தர் + வாசம். பித்து → பித்தர். வசி → வாசம்]*

**பித்தரசரோகணி** *pittaraša-rōgaṇi,* பெ. (n.) *பித்தரோகணி* பார்க்க; see *pittarōgaṇi.*

*[பித்தம் + ரச + ரோகணி]*

**பித்தரூட்சை** *pittarūṭcai,* பெ. (n.) பித்த நோய் வகையுளொன்று; a kind of pitta disease.

**பித்தரோகணி** *pittarōgaṇi,* பெ. (n.) குடலைத்தூய்மைப் படுத்தும் கடுகு ரோகணி; a purgative drug.

*[பித்தம் + ரோகணி]*

Skt. rōhiṇi > **த.** ரோகிணி

**பித்தரோகம்**[1] *pittarōgam,* பெ. (n.) மயக்கம்; giddiness.

**க.** பித்தரோக

*[பித்தம் + ரோகம்.]*

Skt. rōha > **த.** ரோகம்

**பித்தரோகம்**[2] *pittarōgam,* பெ. (n.) *பித்த நோய்* (பைஷஜ.) பார்க்க; see *pittanōy.*

*[பித்தம் + ரோகம்]*

Skt. rōga > **த.** ரோகம்

**பித்தரோசணம்** *pitta-rōśaṇam,* பெ. (n.) பூவரசு (சங்.அக.); portia tree.

*[பித்தம் + ரோசனம்]*

**பித்தல்**[1] *pittal,* பெ. (n.), **1.** மண்வெட்டிக்கழுத்து (வின்.); neck of a hoe. **2.** கரை (இ. வ.); bund of a tank.

*[பொருத்துதல் = பொருந்தச் செய்தல். பொருத்து = இணைப்பு. பொருத்து → பொத்து → பொத்தான். பொத்து → பொத்தல் → பித்தல்]*

**பித்தல்**[2] *pittal,* பெ. (n.) நினைவு மாறுபட்டுக் குழறுகை (சங். அக.); babbling incoherently in delirium.

*[பித்து → பித்தம் = பித்துநீர், பித்தநாடி, பித்தநீர் மிக்க நோய், அந்நோயால் உண்டாகும் தலைச்சுற்று. மூளைக் கோளாறு. பித்தம் → பித்தல் (மு. தா. 9,10)]*

**பித்தல்மண்வெட்டி** *pittal maṇveṭṭi,* பெ. (n.) மண்வெட்டி வகை (வின்.); hoe with a neck.

*[பித்தல் + மண்வெட்டி]*

**பித்தலம்** *pittalam,* பெ. (n.) அரசமரம்; ficus religiosa.

**பித்தலாட்டக்காரன்** *pittalāṭṭa-k-kāraṉ,* பெ. (n.) ஏமாற்றுபவன்; humbug.

*[பித்தலாட்டம் + காரன்]*

**பித்தலாட்டம்** *pittal-āṭṭam,* பெ. (n.) வஞ்சனை, குறும்புச்செயல் ஏமாற்றுகை; deception, fraud, trickery, lying, defrauding.

**மறுவ.** ஏய்ப்பு

**ம.** பித்தலாட்டம்; **க.** பித்தலாட, பிதலாட; **தெ.** பிதலாடமு, பித்தலாடகமு; **து.** பிகிலாட

*[பித்து → பித்தன் = கிறுக்கன். பித்து → பித்தம், = பித்து நீர். பித்தம் → பித்தல். பித்தல் + ஆட்டம்–பித்தலாட்டம் = மாறாட்டம், ஏமாற்றம். (மு.தா. 9,10)]*

பித்தளையை ஆடகம் (பொன்) ஆகக் காட்டி ஏமாற்றுதல் என்னும் அடிப்படையில் பிறந்த சொல் பித்தலாட்டம் என்று செ.ப. அகர முதலி வலிந்து பொருள் கூறுகிறது. பித்தமேறி ஒன்றை வெறொன்றாகக் கருதுதல், அதுபோல் பிறரை ஏமாற்றுதல் என்று பொருள் கொள்வது இயல்பாய் அமைதலைக் காண்க.

**பித்தலாடகம்** *pittalāḍagam,* பெ. (n.) *பித்தலாட்டம்* பார்க்க; see *pittalāṭṭam.* (C.G.)

*[பித்தலாட்டம் → பித்தலாடகம்]*

**பித்தலை** *pittalai,* பெ. (n.) பெண்நோய் வகையுளொன்று; a kind of vaginal disease.

**பித்தவயிற்றுவலி** *pittavayiṟṟuvali,* பெ. (n.) மிகையான பித்தத்தினால் வயிற்றில் வீக்கமுண்டாகியதனாலேற்படுங் கடும் வயிற்று நோவு; biliary colic.

*[பித்தம் + வயிற்று + வலி]* .

**பித்தவரத்தம்** *pitta-v-arattam,* பெ. (n.) பித்த நிறஞ் செறிந்த அரத்த நோய்; a disease brought about by the excited bile pigments in the blood.

*[பித்தம் + அரத்தம்]*

**பித்தவரம்** *pittavaram,* பெ. (n.) பலா வீழி மருந்துச் செடி; a straggling medicinal shrub.

**பித்தவருசி** *pitta-v-aruši,* பெ. (n.) *பித்தவரோசகம்* பார்க்க; see *pitta-v-arōšagam.*

**பித்தவரோசகம்** *pitta-v-arōšagam,* பெ. (n.) பித்தத்தினல் நா சுவையறியாமை (பைஷஜ.); nausea.

*[பித்தம் + அரோசகம்]*

**பித்தவறட்சி** *pittavaraṭci,* பெ. (n.) தலை கனத்து தாது கெட்டு உடம்பைத் தீப்போல் எரிக்கும் பித்த நோய் வகை; a bilious disease marked by heaviness of the head, burning of sensation of the whole body.

*[பித்தம் + வறட்சி. வறள் → வறட்சி]*

**பித்தவறட்சிகரப்பான்** *pittavaraṭcikarppāṉ,* பெ. (n.) உடம்பு முழுவதும் அரிப்புண்டாக்கிக், கொப்புளங்களையேற்படுத்துந் தோல் நோய்; a skin disease with itching eruptions and marked by swimming of the head.

*[பித்தவறட்சி + கரப்பான். கர → கரப்பான்]*

**பித்தவாதசுரம்** *pitta-vāda-šuram,* பெ. (n.) பித்தக் கூறும் ஊதை(வாத)க் கூறும் கலந்துவரும் முறைச்சுரம் (கொ. வ.); enteric fever, intermittent fever, pyrexia of uncertain origin, enterites.

*[பித்தம் + வாதம் + சுரம். சுள் → சுர் → சுரம்.]*

Skt. vāta > **த.** வாதம்.

**பித்தவாந்தி** *pittavāndi,* பெ. (n.) *பித்தக்கக்கல்* பார்க்க; see *pitta-k-kakkal.*

*[பித்தம் + வாந்தி.]*

Skt. vānti > **த.** வாந்தி

**பித்தவாயு** *pitta-vāyu,* பெ. (n.) **1.** வயிற்று (குன்ம)நோய் வகை; chronic dyspepsia. (M.L.) **2.** கிறுகிறுப்பு; நோய்வகை (இ. வ.); giddiness. **3.** ஈரல் நோய் வகை (இ. வ.); inflammation of the liver, hepatitis.

*[பித்தம் + வாயு]*

**பித்தவிக்கல்** *pittavikkal,* பெ. (n.) பித்த மிகுதியால் நாவறட்சியுண்டாகி, அதனாலேற்படும் விக்கல்; hiccup due the dryness.

*[பித்த(ம்) + விக்கல். விக்கு → விக்கல்]*

**பித்தவிசிவு** *pitta-v-iśivu,* பெ. (n.) உடம்பு வெந்து, புருவம் நெளிந்து கண்ணும் வாயுங் கோணுந் தன்மையை யுண்டாகும் இசிவு நோய்; a kind of delirium attended with nervous affections and marked by pain in the body, paralysis of the face.

*[பித்தம் + இசிவு]*

**பித்தவித்திருதி** *pittavittirudi,* பெ. (n.) மிகுதியான பித்தத்தினாலேற்படுஞ் சீழ்ப் பிடிப்புடன் கூடிய கழலைக்கட்டி; abscess due to bile humour.

*[பித்தம் + வித்திருதி]*

**பித்தவியல்பு** *pitta-v-iyalbu,* பெ. (n.) பித்தநீரின் இயற்கைத் தன்மைகள்; the character of bile phlegm.

*[பித்தம் + இயல்பு]*

மஞ்சள் அல்லது பச்சை நிறமாகவும் எரித்தபின் கசப்புடன் கூடிய நெடியுடனும், சிலநேரங்களில் புளிப்புச் சுவையுடனும் இருக்கும். பித்தம் உந்தி முதல் கழுத்துவரைப் பரவி உடலைக் காக்கும் தன்மையது. பித்தம் குடலில் செரிமானம் ஆன உணவுக்கூழை அரத்தமாக்கி நுண் அரத்தக் குழாய்களிலும் செல்லும் வகையில் நீர்மையுடையதாக்கும். கண்களுக்குப் பார்வையையும் மூளைக்கு அறிவையும் தரும். உணவின் இறுதி நிலையான உணவுக்கூழை உருமாற்றி ஆண்களுக்கு விந்துவையும் ,பெண்களுக்குக் கரு முட்டையையும் உருவாக்கும். உயிர்ப் பொருளாக மாற்றும், உடல் வளர்ச்சிக்கு உதவி வலிமை கொடுக்கும். தசை நார்களில் (tissue) ஊன்மை (metabolism) ஆக்கத்தையும் ஊன்மச் சிதைவையும் ஏற்படுத்தும். இச்செயல் பாட்டால் ஏற்படும் வெப்பம் பித்தத்தினால் உண்டாவதே என்பது பெரும்பாலோர் கருத்து. செரிமானத் திற்குப் பெரிதும் உதவும் முதன்மையான இயக்கியான இந்நீர் கல்லீரலிலுள்ள பித்தப்பையில் சுரக்கிறது. இது ஆற்றல் வாய்ந்தது. வெது வெதுப்பான நீர்மமான இது இயல்பு நிலையில் செந்நீல நிறமாகவும் நோயுற்ற காலத்தில் மஞ்சள் நிறமாகவும் இருக்கும். இது உணவுப் பாதையிலுள்ள கொழுப்புப் பொருட் களைக் கொழுப்பு புளிம (அமில)ங்களாக மாற்றும். பித்தம் கண்புரை, மூட்டுவலி, நீர்க்கட்டு, சிறுநீர் நோய் ஆகியவற்றைக் குணப் படுத்தும் என்று சா.அக. குறிப்பிடுகிறது.

**பித்தவிரி** *pittaviri,* பெ. (n.) *பித்தவெடி* (இ. வ.) பார்க்க; see *pittavedi.*

*[பித்தம் + விரி]*

**பித்தவிரிவு** *pitta-virivu,* பெ. (n.) *பித்தவெடி* (இ. வ.) பார்க்க; see *pittavedi.*

*[பித்தம் + விரிவு. விரி → விரிவு]*

**பித்தவீடு** *pittavīḍu.* பெ. (n.) பித்தம் உடலில் தங்கியிருக்கும் இடம்; bilious duct in body.

*[பித்தம் + வீடு]*

**பித்தவுக்கிலிட்டம்** *pitta-v-ukkiliṭṭam,* பெ. (n.) மிகுதியான பித்தத்தின் விளைவாக வயிற்றிலேற்படும் அழற்சி; inflammation of the stomach due to excessive bile humour.

*[பித்தம் + உக்கிலிட்டம்]*

**பித்தவுடம்பு** *pitta-v-uḍambu,* பெ. (n.) அளவிறந்த பித்தநீர் சுரக்கும் உடம்பு; a body in which bile humour in the system supervenes..

*[பித்தம் + உடம்பு]*

**பித்தவுபரி** *pitta-v-ubari,* பெ. (n.) பித்தநீரினால் நெஞ்சாங்குலையி லேற்படும் எரிச்சல்; a disease marked by excessive, burning sensation in the heart.

*[பித்தம் + உபரி]*

**பித்தவூதை** *pitta-v-ūdai,* பெ. (n.) மலம், சிறுநீர் போன்றவை, நிறங்கெட்டு, மனந்தடுமாறி, வயிறு வீங்கி கால் ஓய்ச்சல் காணும் நோய்; a disease marked by swelling of the abdomen loss of intelligence and change in the colour of feaces and urine.

*[பித்தம் + ஊதை]*

**பித்தவூறல்** *pittavūṟal,* பெ. (n.) பித்தநீரின் மிகுதியால் உடம்பிலேற்படும் அரிப்பு; itching caused by bile.

*[பித்தம் + ஊறல். ஊறு + ஊறல்]*

**பித்தவெட்டை** *pitta-veṭṭai,* பெ. (n.) பித்த மிகுதியால் உண்டாம் நோய்வகை (கொ. வ.); a kind of disease due to excess of bile.

*[பித்தம் + வெட்டை. முள் → முளி. முளிதல் = எரிதல். முள் → வெள் → வெட்டை = உடம்பிலுள்ள சூட்டுவகை]*

**பித்தவெடி** *pitta-veḍi,* பெ. (n.) பித்தத்தினால் காலில் உண்டாகும் பிளப்பு (கொ. வ.); cracks in the skin of the feet, fissures.

*[பித்தம் + வெடி.]*

**பித்தவெடிப்பு** *pitta-veḍippu,* பெ. (n.) பித்தவெடி (வின்.) பார்க்க; see *pitta-veḍi.*

*[பித்தம் + வெடிப்பு. வெடி + வெடிப்பு. 'பு' சொ. ஆ. ஈறு]*

**பித்தவெண்குட்டம்** *pittaveṇ-kuṭṭam.* பெ. (n.) செந்தாமரைப் பூவிதழ்போற் சிவந்த, வெளுப்பாகப்பரவி, எரிச்சலையுண்டாக்கி, மயிர்களையுதிரச் செய்யும் ஒருநோய் வகை; a skin disease marked by rosy white patches accompanied by burning sensation and hairs fall out.

*[பித்தம் + வெண்குட்டம்]*

**பித்தவெயில்** *pitta-veyil,* பெ. (n.) காலைவெயில்; morning sun., believed to induce biliousness.

*[பித்தம் + வெயில். முள் → வெள் → வெய் வெய்யில் → வெயில்]*

**பித்தவெரிச்சல்** *pitta-v-ericcal,* பெ. (n.) பித்தநீரின் மிகுதியால், உடம்பின் பல்வேறு பகுதிகளிலேற்படும் எரியுணர்வு; burning sensation caused in several parts of the body due to excess of bile in the system.

மறுவ. பித்தமேலீடு, பித்தாதிக்கம், பித்தெறிவு.

*[பித்தம் + எரிச்சல். எரி → எரிச்சல்]*

**பித்தவெரிவு** *pitta-v-erivu,* பெ. (n.) பித்தத்தால் எரிச்சலுண்டாக்கும் நோய்வகை; chronic gastritis. (M.L.)

*[பித்தம் + எரிவு. எரி → எரிவு. 'வு' சொ. ஆ. ஈறு. உல் → எல் → எரி]*

**பித்தவெள்ளம்** *pittaveḷḷam,* பெ. (n.) பித்தாதிக்கம் பார்க்க; see *pittādikkam.*

மறுவ. பித்தமேலீடு.

*[பித்தம் + வெள்ளம்]*

**பித்தவெறி** *pittaveṟi,* பெ. (n.) **1.** மனப்பிறழ்ச்சி; madness. **2.** மயக்கம்; delirium.

*[பித்தம் + வெறி]*

**பித்தவேகம்** *pittavēgam,* பெ. (n.) *பித்தவொழுக்கு;* flow of bile.

*[பித்தம் + வேகம்]*

**பித்தளம்** *pittaḷam,* பெ. (n.) சுண்டைக்காய்; a shrub turkey berry.

**பித்தளைக்காசுமீன்** *pittaḷai-k-kāšumīṉ,* பெ. (n.) நன்னீரில் வாழும் சிறுமீன் வகை; a small freshwater-fish, etroplus maculatus.

**பித்தளைமலை** *pittaḷai-malai,* பெ. (n.) செம்புத்தாதுள்ள மலை (வின்.); mountain containing copper ore.

**பித்தளையளகம்** *pittaḷai-y-aḷagam,* பெ. (n.) *பித்தலாட்டம்* (வின்.) பார்க்க; see *pittalāṭṭam.*

*[பித்தலாட்டம் → பித்தலாடகம் → பித்தளையளகம்]*

**பித்தன்** *pittaṉ,* பெ. (n.) **1.** மனக்கோளாறு டையவன் (பைத்தியக்காரன்); crazy man, mad man. *'மருந்திற்றணியாத பித்தனென்று'* (நாலடி, 340.) **2.** மூடன்; fool, idiot. *'இவை பிதற்றும் பித்தரிற் பேதையாரில்'* (நாலடி. 2) **3.** சிவபெருமான்; Šivaṉ. *'பித்தா பிறைசூடி'* **4.** திருடன் (அக. நி.); thief, robber.

**து.** பித்தப்பெ

*[பேது → பேத்து. பேத்துதல் = அஞ்சி உளறுதல், உளறுதல். பேத்து → பீத்து → பித்து. பித்து = மயக்கம், மதிமயக்கம், மூளைக்கோளாறு, தலைக் கிறுக்கு. பித்து → பித்தன் = கிறுக்கன். (மு. தா. 9)அறிவிலி, கிறுக்கன் போல் இயங்கிய சிவன்]*

**பித்தனாசனி** *pittaṉāšaṉi,* பெ. (n.) முசுமுசுக்கைக் கொடி; a climber bristly bryouia.

**பித்தாக்கினி** *pittākkiṉi,* பெ. (n.) சருக்கரை; sugar.

*[பித்தம் + அக்கினி]*

**பித்தாசயப்பை** *pittāšayappai,* பெ. (n.) *பித்தப்பை* பார்க்க; see *pitta-p-pai.*

**மறுவ.** பித்தாசயம், பித்துப்பை.

*[பித்தம் + ஆசயப்பை]*

**பித்தாசயம்** *pittāšayam,* பெ. (n.) *பித்தப்பை* பார்க்க; see *pitta-p-pai.* (C.G.)

*[பித்தம் + ஆசயம்]*

Skt. ā-šaya > **த.** ஆசயம்

**பித்தாசயவரத்தப்பெருக்கு** *pittāsaya-v-arattapperukku,* பெ. (n.) ஈரற்குலையி லேற்படும் அளவுமீறிய அரத்தப் பெருக்கு; congestion of liver.

*[பித்தாசயம் + அரத்தப் பெருக்கு]*

**பித்தாசயவலி** *pittāšayavali,* பெ. (n.) பித்தப்பையிலுண்டாகும் நோவு; hepatic colic.

*[பித்தசயம் + வலி]*

**பித்தாசயவழற்சி** *pittāšaya-v-alarci,* பெ. (n.) பித்தப் பையிலேற்படும் வீக்கம்; hepatitis.

*[பித்தசயம் + வழற்சி]*

**பித்தாதிக்கம்** *pittādikkam,* பெ. (n.) பித்தம் மிகுதியாக உண்டாகை (வின்.); excessive secretion of bile.

*[பித்தம் + ஆதிக்கம். ஆதி → ஆதிக்கம்]*

த. ஆதிக்கம் > Skt. ādhikya.

**பித்தாதிகநோய்** *pittādiganōy,* பெ. (n.) *பித்தாதிகம்* பார்க்க; see *pittādigam.*

*[பித்தாதிகம் + நோய்]*

**பித்தாதிகம்** *pittādigam,* பெ. (n.) 1. பித்த மிகுதியினாலேற்படும் மயக்கம்; biliousness. 2. தலை இருப்பு; vertigo.

*[பித்தம் + அதிகம்.]*

**பித்தாதிகாசம்** *pittādikāšam,* பெ. (n.) பித்த மிகுதி; excess of secretion of bile in the system.

*[பித்தம் + ஆதிகாசம்]*

**பித்தாதிகாரம்** *pittādikāram,* பெ. (n.) *பித்தாதிகம்* (யாழ். அக.) பார்க்க; see *pittādikam.*

*[பித்தம் + அதிகாரம். அதிகாரம் → ஆதிகாரம்]*

**பித்தாதிசாரம்** *pittādišāram,* பெ. (n.) மயக்கம், வயிற்றெரிவு, வலி, கக்கல், (வாந்தி), நாவறட்சி, போன்றவற்றையுண்டாக்கும் பித்தாதிக்கநோய்; a disease caused by excited bile, thirst pain and burning sensation in the stomach, vomiting, giddiness etc.,

*[பித்தம் + ஆதிசாரம்]*

**பித்தாதிமந்தம்** *pittādimandam,* பெ. (n.) கண்களைக் காய்ச்சிய இருப்புச் சட்டியைப் போற் சிவக்கச் செய்யுங் கண்ணோய் வகை; an eye disease in which the blood streaked eye is attended with secretion and a sensation there in of being burnt with fire.

*[பித்தாதி + மந்தம்]*

**பித்தாந்தம்** *pittāndam,* பெ. (n.) பெரும் பித்தம்; too much of bile.

*[பித்தம் + அந்தம்]*

**பித்தாந்தலைக்கொட்டி** *pittāntalaikkoṭṭi,* பெ. (n.) கிலுகிலுப்பை (வின்.); a shrub.

**பித்தாரி** *pittāri,* பெ. (n.) இதிரக் கிழங்கு; the wild yam root.

மறுவ. காட்டுக் கரணை.

**பித்தாவரணம்** *pittāvaraṇam,* பெ. (n.) *பித்தாரி* பார்க்க; see *pittāri.*

*[பித்தம் + ஆவரணம்]*

**பித்தான்** *pittāṉ,* பெ. (n.) சட்டை முதலியவற்றை மாட்டிக்கொள்ளுதற்குரிய குமிழ் (கொ. வ.); button.

*[புல் → பொல் → பொரு → பொருந் → பொருந்து → பொருத்து. புல் → (பூள்) → பூண் → பூட்டு. புள் → பொள் → பொட்டு = நெற்றியெலும்புப்பொருத்து. பொத்துதல் = மூட்டுதல், பொல்லம்*

*பொத்துதல் என்னும் வழக்கைக் காண்க. (மு. தா. 188, 189) பொத்து → பொத்தான் = மூட்டுவதற்குப் பயன்படும் பொருள். பொத்தான் → பித்தான். பொத்தான் → Fr. bouton: E. button]*

**பித்தி¹** *pitti,* பெ. (n.) **1.** சுவர்; wall. *'பித்தி தன்னிடை..... பொறித்த சத்தபோடி மந்திரம்'* (விநாயகபு, 79, 35) **2.** பங்கு (சங். அக.); part.

*[பின் → பின்பு. பின் → பிற்கு. பின் → பிறவு → பிறகு → பிறவு → பிறகு→ பிறகு. புறம் →பிறவு→பிறகு = முதுகு. பிறகு → பிறக்கு = முதுகு. பின் → பிந்தி → பித்தி = முதுகு, முதுகுபோல் நேராக இருக்கும் சுவர். ஒ.நோ.சுவல் =பிடர், தோட்கட்டு, முதுகு. சுவல் → சுவர்]*

**த.** பித்தி › Skt. bhitti.

**பித்தி²** *pitti,* பெ. (n.) *பித்தம்,1* (வின்.) பார்க்க; see *pittam,* 1

*[பித்தம் + பித்தி]*

**பித்தி³** *pitti,* பெ. (n.) பின்பக்கம் (வின்.); back, hind part.

*[இன் → இனி = இனிமேல், பின்பு. இன் → இன்னும் = இதற்கு மேலும். பின் → பின்னும் → பின்னர். பின் → பின்னே. பின் → பின்பு. பின் → பின்று → பிந்து (மு.தா.293) பிந்து → பிந்தி → பித்தி]*

**பித்தி⁴** *pitti,* பெ. (n.) *பித்திகம் 1,* பார்க்க; *see pittigam* 1. *'பல்லிதழ்ப்பத்தி பித்தி'* (மேருமந். 1059).

*[பின் → பிணம் → பிறம் → பிறம்பு. பிறம்பத் தங்கால் = பின்னங்கால். பிறம் → பிடம் → பிடர் = பின்கழுத்து. பிடர் → பிடரி = தலையின் பின்புறம். பிடர் → பிடர்த்தி → பித்தி = தலையில் வளரும் முடி, முடியைப் போன்று கொத்தாக இருக்கும் சாதிமல்லிகை, சிறுசெண்பகம்]*

**பித்தி⁵** *pitti* பெ. (n.) கிறுக்கி (பைத்தியக்காரி); crazy woman. *'பித்தியாய் முழுக்கேடு பேசினாயகாயோ'* (நீலகேசி, 2 ,3)

**மறுவ.** கோட்டிக்காரி (நெல்லை.)

*[பித்தன் (ஆ. பா) – பித்தி (பெ. பா.) ]*

**பித்தி⁶** *pitti,* பெ. (n.) **1.** உடம்பிலுள்ள குழாய்ப்பகுதி யல்லது உறுப்பிற் கருகிலுள்ள பகுதி; wall of the tube or other organs of the body. **2.** அறுகு; a grass.

**பித்திக்காயம்** *pittikkāyam,* பெ. (n.) மண்டையோட்டின் உச்சிப்பகுதியெலும்பி லேற்பட்ட காயம்; wound of parietes.

*[பித்தி + காயம்]*

**பித்திகம்** *pittigam,* பெ. (n.) **1.** *பித்திகை,* 3 (குறிஞ்சிப் 89.) பார்க்க; see *pittigai.* 3 **2.** *பித்திகை,* 4 (திவா.) பார்க்க; see *pittigai.* 4 *'மாரிப் பித்திகத் தீரிதழலரி* (நற். 314.)

*[பித்தி → பித்திகம்]*

**பித்திகாமார்ச்சாலநியாயம்** *pittikā-mārccāla-niyāyam,* பெ. (n.) மதின்மேற்பூனை எப்பக்கத்துக் குதிக்குமென்பது அறியப்படாமை போல ஒரு செய்தி எவ்வாறு முடிவெடுக்கப் படும் என்பதை அறியலாகா நெறி (வின்.); the nyāya of cat on a wall illustrating the uncer-

tainty of mind of a person just before making a decision.

*[பித்தி → பித்திகை + மார்ச்சாலநியாயம்]*

Skt. mārjāla > **த.** மார்ச்சாலம்

Skt. nyāya > **த.** நியாயம்

**பித்திகை**[1] *pittigai*, பெ. (n.) **1.** சுவர்(பிங்.); wall. *'பித்திகை மாடப் பெருந்தெரு'* (திருவிளை. நகரங். 39.) **2.** அண்டச்சுவர் (பிங்.); wall of the universe. **3.** சாதிமல்லிகை (பிங்.); large flowered jasmine. **4.** சிறுசெண்பகம் (பிங்.); cananga-flower tree.

*[பித்தி → பித்திகை]*

**பித்திகை**[2] *pittigai*, பெ. (n.) **1.** கருமுகை; a shrub with small flowers. **2.** *பித்தி*[5] பார்க்க; see pitti[5].

**பித்திகைமேடு** *pittigai-mēḍu*, பெ. (n.) பித்திகையெலும்பின் மேற்புறத்திற் குவிப்பாயுள்ள பகுதி; parietal eminence.

*[பித்திகை + மேடு]*

**பித்திகையென்பு** *pittigai-y-enbu*, பெ. (n.) மண்டையோட்டின் இருபக்கத்து எலும்பு; parietal bone of the cranium.

*[பித்திகை + என்பு. எலும்பு → என்பு]*

**பித்திப்பழம்** *pittippaḻam*, பெ. (n.) வெண்காரவுள்ளி; white onion.

**பித்திரா** *pittirā*, பெ. (n.) வன்னிமரம்; a tree.

**பித்தீரல்** *pittīral*, பெ. (n.) பித்த நீருண்டாகும் உடலுறுப்பு; liver.

*[பித்து + ஈரல்]*

**பித்து** *pittu*, பெ. (n.) **1.** பித்தநீர்; bile, gall. *'குருவளர் பித்து மாகதமென்று'* (திருவாலவா. **25, 10.**) **2.** மனக்கோளாறு (பைத்தியம்); delirium, derangement, madness. பித்தொடு மயங்கி (தேவா.**475,10**) **3.** அறியாமை; ignorance foolishness *'பித்துறு முகமுழுய்ய'* (துணிகைபு வீராட். **77**) **4.** மிக்க ஈடுபாடு; excessive zeal, infatuation. *'உள்ளம் வெம்போர் பித்தேறின னென்ன'* (கம்பரா. நாகபா. **23.**)

**க.** பித்து

*[பேது → பேத்து. பேத்துதல் = அஞ்சி உளறுதல், உளறுதல், பேத்து → பீத்து. பீத்துதல் = உளறுதல், தற்புகழ்ச்சியாய் உளறுதல். பீத்து → பித்து. பித்து = மூளைக் கோளாறு, தலைச்சுற்றை உண்டாகும் நீர், அதனால் ஏற்படும் அறிவுக்கேடு, மயக்கம், மயக்கக் காதல்(மு.தா. 9)]*

**பித்துக்குளி**[1] *pittu-k-kuḷi*, பெ. (n.) *பித்துக் கொள்ளி* பார்க்க; see pittu-k-koḷḷi.

*[பித்து + குளி. கொள் + இ – கொள்ளி - கொளி → குளி]*

**ஒ.நோ:** ஏமாங்குளி, பயந்தாங்குளி.

கன்னடத்தில் அஞ்சுகுளி (அஞ்சும் இயல்புடையவன்), ஆடுங்குளி (ஆடும் இயல்புடையவன்), சாலங்குளி (கடன் வைக்கும் இயல்புடையவன்), லஞ்சங்குளி (கையூட்டுப் பெறும் இயல்புடையவன்) போன்ற சொற்களில் ஆட்சி பெற்ற 'குளி'யைக் கிட்டல் கன்னட அகரமுதலி சொல்லாக்க ஈறாகக் காட்டியுள்ளது.

**பித்துக்குளி²** *pittukkuḷi,* பெ. (n.) ஓர் ஊர்ப்பெயர்; a village.

**பித்துக்கொண்டாடு–தல்** *pittu-k-koṇḍāḍu-,* 6 செ.கு.வி. (v.i.) கிறுக்கனைப் போற் செயலாற்றுதல் (காரியஞ்செய்தல்) (வின்.); to act or behave like a madcap.

*[பித்து + கொண்டாடு–,]*

**பித்துக்கொள்ளி** *pittu-k-koḷḷi,* பெ. (n.) 1. கிறுக்கன், கிறுக்கி (பைத்தியம் பிடித்தவ–ன்–ள்) (கொ. வ.); madcap. 2. அஞ்சும் தன்மை புடையவ–ன்–ள்; faint hearted person.

*[பித்து + கொள்ளி. கொள் → கொள்ளி]*

**பித்துப்பிடி–த்தல்** *pittu-p-piḍi-,* 4 செ. கு. வி. (v.i.) கிறுக்குப் பிடித்தல் (பைத்தியமாதல்); to become mad, crazy.

*[பித்து + பிடி –,]*

**பித்துப்பிடித்தவன்** *pittu-p-piḍittavaṉ,* பெ. (n.) மனநலம் குன்றியவன்; crazy man.

*[பித்து + பிடித்தவன்]*

**பித்துப்பை** *pittu-p-pai,* பெ. (n.) *பித்தப்பை* (வின்.) பார்க்க; see *pitta-p-pai.*

*[பித்தப்பை → பித்துப்பை]*

**பித்துரியானம்** *pitturiyāṉam,* பெ. (n.) இடது மூக்குத்துளை(நாசி)வழியாய் ஓடும் மூச்சு; left nostril through which vital air passes.

**பித்தெரிவு** *pitterivu,* பெ. (n.) *பித்தவெரிச்சல்* பார்க்க; see *pitta-v-ericcal.*

*[பித்து + எரிவு. எரி → எரிவு]*

**பித்தேறி** *pittēṟi,* பெ. (n.) கிறுக்கன், கிறுக்கி, (வின்.); crazy person.

*[பித்து + ஏறி. ஏறு → ஏறி]*

**பித்தேறு–தல்** *pittēṟu-,* 5 செ.கு.வி. (v.i.) மூளைக் கோட்டம் (பிறழ்ச்சி) உண்டாதல்; to get mad.

*[பித்து + ஏறு–,]*

**பித்தை** *pittai,* பெ. (n.) மக்கள் தலைமயிர்; lock of hair. *'நீடிரும் பித்தை பொலியச் சூட்டி'* (பெரும்பாண். 482).

மறுவ. உளை, நவிர், குடுமி, ஓரி, குழல், கார், குஞ்சி, தளை, பங்கி.

*[பித்தி¹ → பித்தை]*

**பித்தோன்மத்தம்** *pittōṉmattam,* பெ. (n.) மிகக்கடுமையான மூளைக்கோட்டம்; devil madness.

*[பித்தம் + உன்மத்தம்]*

**பித்தோன்மாதம்** *pittōṉmādam,* பெ. (n.) பித்துவெறி (பைஷஜ. 286.); madness, craziness.

*[பித்தம் + உன்மாதம்]*

Skt. uṉ-māda > த. உன்மாதம்

**பிதக்கு–தல்** *pidakku-,* 15 செ. கு. வி. (v.i.) நசுங்குதல்; to be squeezed or crushed. 'நீண்முடி பிதக்கவூன்றிய' (தேவா. 802, 11.).

*[பிள் → பிடு → பிடுங்கு. பிடுங்குதல் = பெயர்த்தல், பறித்தல். பிடு → (பிது) → பிதுங்கு → பிதுக்கு → பிதுக்கம். பிதுங்குதல் = பெயர்தல், பெயர்ந்து வெளிவெருதல். (மு. தா. 261) பிதுங்கு (த.வி.) - பிதுக்கு (பி.வி.) பிதுக்கு → பிதக்கு]*

**பிதகம்** *pidagam,* பெ. (n.) இடி (யாழ். அக.). thunder bolt.

*[பிள் → பிடு → பிடுகு = வானம் வெடிப்பது போன்ற இடி (வே.க.3.111) பிடுகு → பிதுகு → பிதகம்]*

த. பிதகம் > Skt. bhidaka

**பிதரண்டம்** *pidarandam,* பெ. (n.) ஊமத்தை; thorn-apple.

**பிதரம்** *pidaram,* பெ. (n.), 1. பிளவு, வெடிப்பு; split. 2. நாணல்; a weed.

*[பிள் → பிடு. பிடுதல் = இரண்டாக அல்லது துண்டு துண்டாகப் பிளத்தல். பிடு → பிது → பிதுரம் → பிதரம்]*

**பிதரிசனம்** *pidariśaṉam,* பெ. (n.) எட்டி மரம்; a tree.

**பிதலாபம்** *pidalābam,* பெ. (n.) சிவதை வேர்; turpeth root.

**பிதவி** *pidavi,* பெ. (n.) 1. அடிமை; devoted servant. (இ.வ.) 2. கீழ்வேலைக்காரன் (வின்.); menial servant. 3. வேண்டுநர் (மனுதார்); petitioner.

**பிதளை** *pidaḷai,* பெ. (n.) எண்ணெய் ஏனம் (பாத்திரம்)' (யாழ். அக.); vessel for oil.

**பிதற்றர்** *pidaṟṟar,* பெ. (n.) பிதற்றுவோர்; babblers, bluffers. '*பின்னருஞ்சிலருண்டோ பிதற்றரே*' (திருவாலவா. 34, 19.).

*[பிதற்று → பிதற்றர்]*

**பிதற்றல்** *pidaṟṟal,* பெ. (n.) வாய் பிதற்றல்; blabbering as a result of delirium.

*[பிதற்று → பிதற்றல்]*

**பிதற்று[1]–தல்** *pidaṟṟu-,* 5 செ. குன்றாவி. (v.t.) 1. அறிவின்றிக் குழறுதல்; to chatter, babble, prate. இவை பிதற்றுங்கல்லாப் புன்மாக்கள்' (நாலடி, 45) 2. இசிவு நோய் அவதியால் (அவசத்தால்) விடாது பேசுதல். to rave, as delirious person. 'ஓர்நாண் முற்றும் பிதற்றினானே' (சீவக. 1082).

*[பித்து = மயக்கம், தலைக்கிறுக்கு. பித்து → பிதற்று. பிதற்றுதல் = உளறுதல் (மு. தா. 10)]*

**பிதற்று[2]** *pidaṟṟu,* பெ. (n.), அறிவின்றிக் குழறுகை (சூடா.); foolish talk, chatter, babble, incoherent talk. '*பித்தனா னென்னும் பிதற்றொழிவதெந்நாளோ*' (தாயு. எந்நாட். 1120.).

*[பித்து → பிதற்று]*

**பிதா** *pidā,* பெ. (n.) பெருநாரை (பிங்.); cyrus crane.

**பிதாநாழி** *pidānāḻi,* பெ. (n.) பழைய வரிகை; an ancient tax (S.I.I. ii, 531,n.).

**பிதாபுட்பி** *pitāpuṭpi,* பெ. (n.) பேராமுட்டி; pavouia odorata.

**பிதாரி** *pidāri,* பெ. (n.) பேராமல்லி; a species of jasmine.

**பிதாரிகை** *pidārigai,* பெ. (n.) நிலப்பூசனிக் கிழங்கு வடிவுள்ள பால்வினைக் கட்டி; a hard round abscess as large as a full grown gourd.

**பிதானி** *pidāṉi,* பெ. (n.) செம்முள்ளி; red thorny herb.

**பிதி** *pidi,* பெ. (n.) இடி(யாழ்.அக.); thunder.

*[பிள் → பிடு → பிடுகு = இடி. பிள் → பிடு → பிதி]*

**பிதிகம்** *pidigam,* பெ. (n.) பெருங்குரும்பை (மலை.); species of bow-string hemp

**பிதிர்¹–தல்** *pidir-,* 4 செ.கு.வி. (v.i.) 1. உதிர்தல்; to be separated into small particles; to fall to powder. '*பிதிர்ந்து போயின பிறங்கல்க ளேழும்*' (கந்தபு. யுத்தகாண். முதனாட். 50.). 2. சிதறுதல்; to become scattered. '*பிதிர்ந்தெழுந்தார்த்த பொடிக்குழீகுகி*' (கம்பரா. பிரமாத். 100). 3. கிழிதல் (வின்.); to be torn. '*சீலை பிதிர்ந்து போயிற்று*' 4. பரத்தல்; to spread. பிதிரொளித் தவிசின் (தணிகைப்பு. வீராட்.78). 5. மனங்கலங்குதல்; to be bewildered. '*பிதிரு மனமிலேன்*' (திவ். இயற். நான் மு. 84.).

*[புள் → பிள் → பிரி → பிரிவு → பிரிவிணை. பிள் → பிடு → பிடுங்கு. பிடுங்குதல் = பெயர்த்தல், பறித்தல். பிடு → (பிது) → பிதுங்கு → பிதுக்கு → பிதுக்கம். பிதுங்குதல் = பெயர்தல், பெயர்ந்து வெளிவருதல். (பிது) → பிதிர். பிதிர்தர் = பெயர்தல், (மு, தா. 261)]*

**பிதிர்²–த்தல்** *pidir-,* 11 செ. கு. வி. (v.t.) உதிர்த்தல்; to scatter, spread.

*[(பிது) → பிதிர். பிதிர்தல் → பிதிர்த்தல்]*

**பிதிர்³** *pidir,* பெ. (n.) பூந்தாது (பிங்.); pollen of a flower. 2. பொடி(பிங்.); powder. 3. திவலை (பிங்.); drop of water. 4. துண்டம்; piece. 'மதிப்பிதிர்க் கண்ணியீர்' (தேவா. 599, 4). 5. பொறி; spark. '*கொல்லனெறிபோற் பிதிரின்*' (நற். 13). 6. காலநுட்பம், (பிங்.); moment of time. 7. கைந்நொடி (வின்.); snap of the finger.

*[புள் → பிள் → பிடு. பிடுதல் = கையாற் பிளத்தல். பிள் → பிளவு = துண்டு. பிடு → பிது → பிதிர். பிதிர்தல் = பிண்டு உதிர்தல் (மு.தா. 259) பிதிர் = உதிரும் மகரந்தம், சிதறிப் பரவும் நீர்த் திவலை, துண்டு, பொறி, சிறுகாலவளவு, கைந்நொடி]*

**பிதிர்⁴** *pidir,* பெ. (n.) 1. விடுகதை; conundrum, puzzle. 2. '*கதைகளும் பிதிர்களு மொழிவார்*' (கம்பரா. ஊர்தேடு. 139.). 3. வியப்புச் செயல்; acts of wonder. '*பின்னார்தான் செய்யும் பிதிர்*' (திவ். இயற். நான்மு. 83.). 4. சேறு; mud. '*மருப்பிற் பிதிர்படவுழக்கி*' (கல்லா. 62, 10.).

*[புள் → பிள் → பிய் → (பியி) → பிசி = பிய்ப்பதுபோல் விடுக்கும் விடுகதை. பிள் → பிடு → பிது → பிதிர் = விடுகதை. (மு. தா. 262)]*

**பிதிர்போக்கு–தல்** *pidir-pōkku-,* 5 செ. குன்றாவி. (v.t.) ஊட்டுதற்கு முன்முலைப்பாலின் முதற்றிவலைகளை வெளியேற்றுதல்; to press out milk before suckling the child. '*உண்ணா முலைப்பால் பிதிர் போக்க*' (அரிசமய. பராங்குச. பக். 92.).

*[பிதிர்³ + போக்கு–,]*

**பிதிரம்** *pidiram,* பெ. (n.) இடி (யாழ்.அக.); thunderbolt.

*[பிள் → பிடு → பிடுகு = இடி. பிள் → பிடு → பிதி → பிதிரம்]*

**பிதிரா** *pidirā,* பெ. (n.) *பிதிகம்* பார்க்க; see *piḍigam.*

**பிதிராதகம்** *pidirādagam,* பெ. (n.) சுண்டைக்காய்; turkey berry.

**பிதிலி** *pidili,* பெ. (n.) பிதளை (தஞ்சை.); oil-vessel.

**பிது** *pidu,* பெ. (n.) பெருமை; greatness. '*பிதுமதி வழிநின்று*' (திருவிசைப் திருமாளி 2, 6.)

*[புல் → பில் → பிரு → பெரு → பெருமை (மு.தா.217). புல் → பல் → பது → பிது]*

**பிதுக்கம்** *pidukkam,* பெ. (n.) 1. பிதுங்குகை; protruding,projecting. 2. பிதுக்கப்பட்டது (வின்.); protuberance. 3. கட்டடத்தில் பிதுங்கி யிருக்கும் பாகம் (கட்டட. நாமா. 14.); offset. 4. விதை வீக்கம் (அண்டவாதம்) (இ.வ.); hernia.

*[பிள் → பிடு → பிடுங்கு. பிடுங்குதல் = பெயர்தல்,பறித்தல். பிடு → (பிது) → பிதுங்கு → பிதுக்கு → பிதுக்கம் (மு. தா. 261)]*

**பிதுக்கு¹–தல்** *pidukku-,* 5 செ. குன்றாவி. (v.t.) 1. பிதுங்கச் செய்தல்; to press out, squeege out, as pus or pulp, to express. "பீட்பிதுக்கி" (நாலடி. 20). 2. உப்பும்படி செய்தல் (வின்.); to blow up, as a bladder, to puff out, as the cheeks.

க. கிதுக்கு; தெ. பிதுகு; பட. பிசுக்கு

*[புள் → பிள் → பிடு → பிடுங்கு. பிடுங்குதல் = பெயர்த்தல், பறித்தல். பிடு → (பிது) → பிதுங்கு → பிதுக்கு. (மு. தா. 261)]*

**பிதுக்கு²** *pidukku,* பெ. (n.) பிதுங்கச் செய்கை (கொ. வ.); squeezing out, pressing out.

*[பிதுக்கு–தல்→ பிதுக்கு]*

**பிதுக்குப்பருப்பு** *pidukku-p-paruppu,* பெ. (n.) நீரில் ஊறவைத்துத் தோலைப் பிதுக்கும் தன்மையுடன் காணப்படும் பருப்பு; cereals that require soaking to remove its scales

*[பிதுக்கு + பருப்பு]*

**பிதுக்கை** *pidukkai,* பெ. (n.) உள்ளீடு வெளிப்படுகை; bulging.

*[பிது → பிதுங்கு → பிதுக்கம் → பிதுக்கை]*

**பிதுங்கல்** *pidungal,* பெ. (n.) வெளிவரக் காணல்; protruding of bulging as in swelling or abscess.

*[பிது → பிதுங்கு → பிதுங்கல். 'அல்' தொ. பெ. ஈறு]*

**பிதுங்கு–தல்** *pidungu-*, 5 செ. கு. வி. (v.i.) 1. அமுக்குதலால் உள்ளீடு வெளிக் கிளம்புதல்; to protrude, bulge, shoot out, gush out, to be expressed. "கதிர் முடியுங் கண்ணும் பிதுங்க வூன்றி" (தேவா. 56, 10). 2. சுவரிற் செங்கல் வெளிநீண்டிருத்தல்; to jut out beyond the plumb-line, as bricks in a wall. 3. ஒலித்தல் (வின்.); to sound.

*[ புள் → பிள் → பிரிவு → பிரிவினை. பிள் → பிடு → பிடுங்கு. பிடுங்குதல் = பெயர்த்தல், பறித்தல். பிடு → (பிது) → பிதுங்கு. பிதுங்குதல் = பெயர்தல், பெயர்ந்து வெளிவருதல் (மு. தா. 261) ]*

**பிதுர்க்கத்தரி** *pidur-k-kattari*, பெ. (n.) முள்கத்தரி; thorny brinjal.

**பிதுர்ரோகணி** *pidur-rōgaṇi*, பெ. (n.) கடைச்சரக்கு மருந்து; a bazaar drug.

**பிதுரேகமாசி** *pidurēgamāši*, பெ. (n.) நாரை; a bird-heron.

**பிந்ததாகு** *pindadāgu*, பெ. (n.) தேவதாரு மரம்; a kind of pine tree.

**பிந்தபாலம்** *pindapālam*, பெ. (n.) *பிண்டி பாலம்* பார்க்க (யாழ். அக.); see *piṇḍi pālam*.

*[பிண்டிபாலம் → பிண்டபாலம் → பிந்தபாலம்]*

**பிந்திய** *pindiya*, பெ.அ. (adi.) *பிந்தைய* பார்க்க; see *pindaiya*.

*[ பின் → பிந்து → பிந்திய ]*

**பிந்தியகாலம்**[1] *pindiya-kālam*, பெ. (n.) முதுமைக் காலம்; old age.

*[ பிந்திய + காலம் ]*

**பிந்தியாகாலம்**[2] *pindiyā-kālam*, பெ. (n.) சாயுங்காலம் (யாழ். அக); evening.

*[ பிந்து → பிந்தியா + காலம் ]*

**பிந்தினதாரம்** *pindiṉadāram*, பெ. (n.) முதன் மனைவிக்குப் பின் மணஞ் செய்து கொண்ட மனைவி; wife other then the first.

*[ பிந்து → பிந்தின + தாரம் ]*

Skt. dhārin > த. தாரம்

**பிந்து–தல்** *pindu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. பின்னால் செல்லுதல், பின்னாதல்; to go behind, to be behind, to fall in the rear. 2. கீழாழல்; to go down, as in a class, to happen subsequently. 3. பிறப்பு, தோற்றம் ஆகியவற்றில் காலத்தால் பிந்தியதாதல்; to be subsequent in time, birth or origin. 4. தாழ்தல்; to be inferior in rank, etc., 5. விரைவு குறைதல்; to be backward, tardy, slow to loiter, delay, lag, to lose time, as a clock or watch. பிந்து காவினர் (கம்பரா. கிங்கர. 55).

*[ பின் → பின்னம் → பின்னர். பின் → பின்னே. பின் → பின்பு. பின் → பின்று → பிந்து (மு. தா. 293) ]*

**பிந்துகு** *pindugu*, பெ. (n.) மருந்துப் பருப்பு வகை; a nut, Unani drug.

**பிந்தைய** *pindaiya,* பெ.அ. (adj.) (காலத்தால்) பிந்திய; later (in time). அவரின் பிந்தைய படைப்புகள் எளிய நடையில் இருக்கின்றன. (உ.வ.).

*[பின் → பிந்து → பிந்தைய ]*

**பிந்துமதி** *pindu-madi,* பெ. (n.) யாப்பு வகை (யாப். வி.); (poet.) a kind of verse.

**பிப்பரமரம்** *pippara-maram,* பெ. (n.) கிணற்றில் நின்று நீரிறைப்பதற்காக அதனுட் குறுக்காக வைக்கப்படும் மரம் (இ. வ.); plank across a well for standing on, while bailing water.

**பிப்பலம்²** *pippalam,* பெ. (n.) புல்வகை; a kind of grass.

**பிப்பலி¹** *pippali,* பெ. (n.), திப்பலி (மலை); long pepper.

க., து. பிப்பலி

*[திப்பிலி → பிப்பிலி → பிப்பலி ]*

pippali, long Gt. (p. 519) takes the word to be pippala and explains it by 'great, excellent fruit'. D. piri being great. Upon this derivation not much dependence can be placed. A. D. term of pippali is tippali. if this could be the original form, D. tin, irritation, might be thought of, in which case however the leading idea could scarcely have been taste with which tin does not appear to be connected (KKED. xxiv).

**பிப்பலி²** *pippali,* பெ. (n.) ஆனை நெருஞ்சில்; thorny shrub.

**பிப்பாலசம்** *pippālaśam,* பெ. (n.) ஆனையறுகு வகை; species of grass.

**பிப்பிரியம்** *pippiriyam,* பெ. (n.) நீர்க்கடம்பு மரம்; a tree-water kaḍamba.

**பிப்பிலிகை** *pippiligai,* பெ. (n.) *பிப்பலம்* பார்க்க; see *pippalam.*

**மறுவ.** பிப்பிலம்

**பிப்பிலிசிகரி** *pippiliśigari,* பெ. (n.) நாயுருவிச் செடி; a herb-achyranthes aspear.

**பிப்பிலிமூலம்** *pippilimūlam,* பெ. (n.) மருந்திற்குப் பயன்படும் திப்பலி வேர்; long pepper root, used for medicinal purpose.

*[பிப்பிலி + மூலம். திப்பிலி → பிப்பிலி]*

**பிப்பிலியத்தி** *pippili-y-atti,* பெ. (n.)
1. பெருநெருஞ்சில்; a large thistle.
2. நெருஞ்சிற் கொடி; a small creeper.

**மறுவ.** யானை நெருஞ்சில்

**பிப்பீலிகம்** *pippīligam,* பெ. (n.) பொன்; gold.

**பிய்¹–தல்** *piy-,* 4 செ. கு. வி. (v.i.) 1. கிழிதல்; to be tattered, torn off, torn into bits as leaf or cake. 2. பிரிந்து போதல்; to be drawn apart, loosened, parted, separated. 3. பஞ்சு முதலியன பன்னப்படுதல் (வின்.); to be carded, as cotton. 4. ஊடறுதல் (யாழ்ப்.); to be torn open, as hedge. 5. சிதைவுறுதல்; to be put to rout, as an army.

*[புள் → புய்.புய்த்தல் = பிரித்தல், பிடுங்குதல். புய் → பிய். (மு. தா. 261)]*

**பிய்²—த்தல்** *piy-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. கிழித்தல் (வின்.); to rip, tear, pluck off, rend. 2. வேறாகுமாறு பிரித்தல்; to separate into parts. 3. பஞ்சு முதலியன பன்னுதல்; to card or pick cotton. 4. இலை முதலியவற்றைச் சிதைத்தல்; to break in pieces, as thin cakes or wafers; to tear into small bits, as paper or leaves. 5. பிடுங்குதல்; to pluck, break or pinch off, pull out. பேயு "நாயும வருடலம் பிய்த்துத் தின்ன" (உத்தாரா. திருவோல. 24). 6. ஊடறுத்தல் (யாழ்ப்.); to break through a hedge. 7. வருத்துதல்; to disturb, trouble.

*[புள் → புய். புய்த்தல் = பிரித்தல், பிடுங்குதல். புய் → பிய். (மு. தா. 261)]*

**பிய்த்துக்காட்டு—தல்** *piyttu-k-kāṭṭu-,* 5 செ. குன்றாவி. (v.t.) விளங்கும்படி தனித்தனி யெடுத்துக்காட்டிச் சொல்லுதல், to explain, analyse.

*[பிய் → பிய்த்து + காட்டு—,]*

**பிய்வேலம்** *piyvēlam,* பெ. (n.) பீக்கருவேல மரம், மரவகையுளொன்று; black babul tree.

**பியந்தை** *piyandai,* பெ. (n.) மருதப்பண் வகை (சூடா); a melody type of marudam class.

**பியந்தைக்காந்தாரம்** *piyandai-k-kāndāram,* பெ. (n.) மருதப்பண் வகை(தேவா.); a melody-type of marudam class.

*[பியந்தை + காந்தாரம்]*

**பியர்** *piyar,* பெ. (n.) பெயர்; name, appellation, designation, epithet.

ம. பியர்

*[பெயர் → பியர். (கொ. வ.). பிள் → பிய் → பெய் → பெயல். பெய் → பெயர்]*

**பியல்** *piyal,* பெ. (n.) பிடர்; nape of the neck. "புலித்தோல் பியற்கு மிட்டு" (தேவா. 186, 4).

க. பெகல், தெகலு; து. புகெலு,

புகெலு,புக்கெல்; கோத. பெய்ள், பெய்ல்; கூ. பகொரி; குரு. பக்ரா.

*[பின் → பின்பு. பின் → பின்னு → பிந்து. (மு.தா.293) பின் → (பிந்) → பிய் → பியல்]*

**பியாரம்** *piyāram,* பெ. (n.) ஆடுதின்னாப் பாளை (சங். அக.); worm-killer.

**பிரக்கெந்தம்** *pirakkendam,* பெ. (n.) *பியாரம்* (சங். அக.) பார்க்க; see *piyāram.*

**பிரகுடி** *pirakuḍi,* பெ. (n.) காட்டுமல்லிகை (மூ. அ.); wild jasmine.

**பிரசாரம்²** *pirašāram,* பெ. (n.) வேங்கை (மலை); East Indian tino.

**பிரசாலம்** *pirašālam,* பெ. (n.) வீணைத்தண்டு (யாழ். அக.); the neck of the viṇai.

**பிரசுரம்** *pirašuram,* பெ. (n.) மிகுதி (இலக். அக.); immenseness.

**பிரட்டம்¹** *piraṭṭam,* பெ. (n.) முதன்மையானது. (யாழ். அக.); that which is best or foremost.

**பிரட்டம்²** *pirattam,* பெ. (n.) பொரித்தது (யாழ். அக.); that which is fried.

**மறுவ.** வறுவல், பிரட்டல்

*[ புரள் → புரட்டு. புரட்டுதல் = ஒன்றைத் திருப்புதல். புரட்டு → புரட்டி. தோசை புரட்டி = தோசை திருப்பி. புரட்டு → புரட்டல் = புரட்டிச் சமைக்குங்கறி (மு.தா.231). புரட்டல் → புரட்டல் → புரட்டம் ]*

**பிரட்டம்³** *pirattam,* பெ. (n.) தள்ளுண்டது (யாழ். அக.); that which is fallen or cast away.

*[ புரள் → புரட்டு → புரட்டம் → பிரட்டம் ]*

**பிரட்டம்⁴** *pirattam,* பெ. (n.) பொரிக்கறி; fried vegetables.

**மறுவ.** பொரித்த கூட்டு

*[ புரள் → புரட்டு → புரட்டம் → பிரட்டம் ]*

**பிரட்டல்** *pirattal,* பெ. (n.) புரட்டல் பார்க்க; see *purattal.*

*[புரள் → புரட்டு → புரட்டல் = குழம்புங் கூட்டுமின்றிக் கட்டியாகச் சமைத்த கறி வகை. (வே. க.3, 94). புரட்டல் → பிரட்டல்]*

**பிரட்டன்¹** *pirattan,* பெ. (n.) நெறியினின்று வழுவினவன்; one who has strayed from virtue. '*பிரட்டரைக் காணா கண்*' (திருவிசை. திருமாளி. 4, 3.);; (S.I.I.iii.66)

*[ புள் → புரு → புரள். புரள்தல் = சொல் மாறுதல். புரள் → புரட்டு → புரட்டன். (மு. தா. 234.) புரட்டன் → பிரட்டன் ]*

**பிரட்டன்²** *pirattan,* பெ. (n.) ஏமாற்றுக்காரன் (கொ.வ.); deceitful person.

*[ புரள் → புரட்டு → பிரட்டன். புரட்டன் → பிரட்டன் ]*

**பிரட்டி** *piratti,* பெ. (n.) பிரட்டை பார்க்க; see *pirattai.*

*[ பிரண்டை → பிரட்டை → பிரட்டி ]*

**பிரட்டிக்கீரை** *pirattikkīrai,* பெ. (n.) வயிற்றுளைச்சலுக்குப் பயன்படும் கீரை; a leaf used for drysenteric complaints.

*[ புரட்டிக்கீரை → பிரட்டிக்கீரை ]*

**பிரட்டு** *pirattu,* பெ. (n.) புரட்டு; deceit.

**மறுவ.** வஞ்சகம், ஏய்ப்பு ஏமாற்று

**ம.** பிரட்டு

*[புரள் → புரட்டு → பிரட்டு = ஒன்றைப் புரட்டி அதன்வெளிப் பக்கத்தை மறைத்து அடிப்பக்கத்தைக் காட்டுவதுபோல் உண்மையை மறைத்துப் பொய்யை உண்மையாகக் காட்டுகை.]*

**பிரட்டுக்கல்** *pirattukkal,* பெ. (n.) மஞ்சள் நிற புள்ளிகளையுடைய மட்டமான வயிரக்கல்; one of the inferior varieties of diamonds with yellow specks.

*[புல் → புர் → புரள் → புரளி = பொய், வஞ்சனை. புரள் → புரட்டு. புரட்டுதல் = சொற்பொருள்திரித்தல், வஞ்சித்தல். (வே. க. 3.94) புரட்டு → பிரட்டு + கல்]*

**பிரட்டுங்கல்** *pirattuṅkal,* பெ. (n.) பேரோசினை; a mineral.

**பிரட்டுருட்டு** *piraṭṭuruṭṭu,* பெ. (n.) பெரும் ஏமாற்றம் (மோசம்); deception. '*பிரட்டுருட்டிலே யடிக்குங் கொள்ளை*' (சரவண. பணவிடு. 89.)

பட. உருட்டுபெரட்டு

*[ பிரட்டு + உருட்டு. புரள் → புரட்டு → பிரட்டு. உருள் → உருட்டு ]*

*எதுகை நோக்கிவந்த மரபிணை மொழி*

**பிரட்டை[1]** *piraṭṭai,* பெ. (n.) 1. எலிக்காது; rat's ear greens. 2. *பிரண்டை* (வின்.) பார்க்க; see *piraṇḍai.*

*[ பிரண்டை → பிரட்டை ]*

**பிரட்டை[2]** *piraṭṭai,* பெ. (n.) மருந்து செடி; a herbal plant.

*[ புரள் → புரண்டை → பிரண்டை = திருகலான கொடிவகை. (வே.க.3,94.) புரள் → புரட்டு → புரட்டை → பிரட்டை ]*

**பிரட்டை[3]** *piraṭṭai,* பெ. (n.) திங்கள் தோறும் மகளிர்க்கு உண்டாகும் அரத்தப் போக்கு; menses.

*[புரள் → புரட்டு. புரட்டுதல் = உருட்டுதல், உண்டபின் வயிற்றிற் கோளாறு நேர்தல். வயிற்றைப் புரட்டுகிறது (உ. வ.) (வே. க. 3, 94) புரட்டு → புரட்டை → பிரட்டை]*

**பிரட்டைக்கீரை** *piraṭṭai-k-kīrai,* பெ. (n.) பார்க்க, பெரட்டிக் கீரை (இ. வ.); jewsmallow.

*[ பிரட்டை + கீரை ]*

**பிரடை** *piraḍai,* பெ. (n.) 1. யாழ் முலியவற்றின் முறுக்காணி (வின்.); plug of a lute. 2. முறுக்காணி வில்லை (கொ.வ); screw-nut.

க. பிரடெ: தெ. பிரட

*[ புள் → புரு → புரள் → புரளை → புரடை → பிரடை. (மு. தா. 242.) ]*

**பிரண்டை** *piraṇḍai,* பெ. (n.) கொடி வகை; square-stalked vine,

ம. பிரண்ட, பிரண்டி, பரண்ட

*[புரு → புரி = முறுக்குண்டநூல், கயிறு. புரிதல் = முறுகுதல். புரு → புரள் → புரண்டை → பிரண்டை = புரண்டிருக்கும் அல்லது முறுக்குண்டிருக்கும் கொடி (மு. தா. 242)]*



**பிரணயகலகம்** *piraṇaya-kalagam,* பெ. (n.) ஊடல்; bouderie.

**பிரத்தம்** *pirattam,* பெ. (n.) எதிர்பாரா இடையூறு, பேரிடர், இடுக்கண் விழுமம் (பிரமாதம்.) (துக்கயாகப். 435.); mishap, danger, calamity.

**பிரததி** *piratati,* பெ. (n.) படர்கொடி (உரி. நி.); climber, creeping plant.

**பிரப்பங்கிழங்கு** *pirappaṅ-kiḻaṅgu,* பெ. (n.) கிழங்கு வகை; tuber of cyperus.

*[பிரம்பு → பிரப்பு + கிழங்கு]*

**பிரப்பங்குச்சி** *pirappaṅkucci,* பெ. (n.) *பிரம்புக்கழி* பார்க்க; see *pirambu-k-kaḻi.*

*[பிரப்பம் + குச்சி]*

**பிரப்பங்கூடை** *pirappaṅ-kūḍai,* பெ. (n.) பிரம்பினாற் செய்த கூடை; rattan basket.

*[பிரம்பு → பிரப்பு + கூடை]*

**பிரப்பங்கோரை** *pirappaṅ-kōrai,* பெ. (n.) கோரை வகை; a sedge, scirpus.

*[பிரம்பு → பிரப்பு + கோரை]*

**பிரப்பம்பழம்** *pirappam-paḻam,* பெ. (n.) பிரம்படி (பிரம்பின் பழம்); lit., the fruit of the cane, beating.

*[பிரம்பு → பிரப்பு + பழம்]*

**பிரப்பம்பாய்** *pirappam-pāy,* பெ. (n.) பிரம்பினாற் செய்த பாய்; rattan mat.

*[பிரம்பு → பிரப்பு + பாய். பா → பாய் = பரந்த தடுக்கு]*

**பிரப்பரம்** *pirapparam,* பெ. (n.) ஒருவகை உருண்டையான அரம்; round file, tapering towards the end.

*[பிரம்பு → பிரப்பு + அரம். உர் → அர் → அரம்]*



**பிரப்பரிசி** *pirappariśi,* பெ. (n.) *பிரப்பு,1* பார்க்க; see *pirappu1.*

*[பிரப்பு + அரிசி. அரி → அரிசி]*

**பிரப்பன்** *pirappaṉ,* பெ. (n.) பூவத்தி; longan, (L.).

**பிரப்பு** *pirappu,* பெ. (n.) 1. குறுணிமேனி கொள்கலங்களிற் பரப்பிவைக்கும் படையல் பொருள்(பிங்.); food of various kinds or rice placed before a deity in receptacles of the capacity of a kuruṇi. '*பல் பிரப்பிரீஇ*' (திருமுரு. 234.) 2. குறுணியளவான பொருளைக் கொள்ளும் ஏனம்(பாத்திரம்) (பெருங். உஞ்சைக் குறிப்புரை, பக். 523.); a vessel of the capacity of a kuruṇi.

*[பரம்பு → பிரம்பு → பிரப்பு = பிரப்பினால் முடையப்பட்ட கூடை, அக்கூடையின் அளவு, அவ்வளவை ஒத்த ஏனம்.]*

**பிரம்படி** *pirampaḍi,* பெ. (n.) பிரம்பினால் அடிக்கும் தண்டனை வகை; beating with a cane, a mode of punishment. பிரம்படிக்கு அஞ்சி பள்ளிக்குச் செல்லவில்லை.

*[பிரம்பு + அடி. அள் → அண் → அடு → அடி]*

**பிரம்படிக்காரர்** *pirampaḍi-k-kārar,* பெ. (n.) பிரம்பு கொண்டு தண்டிக்கும் அரசின் ஏவலாளர்; men entrusted by a king with the duty of caning offenders. '*வெய்ய சொல்லுடைப் பிரம்படிக்காரரை விடுத்தான்*' (திருவாலாவா. 28, 3.)

*[பிரம்படி + காரர்]*

**பிரம்பம்** *pirambam,* பெ. (n.) கொவ்வை (அக.நி.); common creeper of the hedges.

**பிரம்பு** *pirambu,* பெ. (n.) 1. நீண்ட ஒல்லியான தண்டுப்பகுதியைக் கொண்டதும் பனை வகையைச் சார்ந்ததுமான கொடிவகை; rattan. 2. கொடிவகை; switchy rattan. 3. மூங்கில் (அரு. நி. 397.); bamboo. 4. *பிரப்பு* 2 (பிங்.) பார்க்க; see *pirappu*-2. 5. *பிரப்பரிசி*(அக. நி.) பார்க்க; ; see *prapparisi.* 6. கடல் (அக. நி.); sea. 7. நெய் (அக. நி.); ghee. 8. தேர்முட்டி (பிங்.); raised platform with steps, giving access to a temple car. 9. வரம்பு (சது.); ridge in the field. செய்வரம்பு திருத்தா ரேற்றிசைவரம்பு திருந்தாதே.

மறுவ. சூரல், வாஞ்சி, வேத்திரம்

ம. பெரம்பு, புரம்பு, புனம்பு; க., து. பெத்த; தெ. ப்ரேமு, ப்ரப்ப, ப்ரப்பிலி; பட. பெத்து

*[பரம்பு → பிரம்பு]*

**பிரம்புக்கழி** *pirambu-k-kaḻi,* பெ. (n.) பிரம்புக்கோல்; rattan stick

*[பரம்பு + கழி]*

**பிரம்புக்கொன்றை** *pirambu-k-koṉṟai,* பெ. (n.) கொன்றை மரவகை; siamese, tree

*[பிரம்பு + கொன்றை]*

**பிரம்புக்கோல்** *pirambu-k-kōl,* பெ. (n.) *பிரம்புக்கழி* பார்க்க; see *pirambu-k-kaḻi.*

*[பிரம்பு + கோல்]*

**பிரம்புகட்டு – தல்** *pirampukaṭṭu-,* 2. செ.குன்றாவி. (v.t.) ஏனங்(பாத்திரங்)களுக்கு விளிம்பிலே வளையங்கட்டுதல்; to fit up with a rim, as a vessel. '*விளிம்பு பிரம்பு கட்டின வட்டிலில்*' (சீவக. 2100, வரை)

*[பிரம்பு + கட்டு–, கள் → கட்டு]*

**பிரம்புத்தடுக்கு** *pirambu-t-taḍukku,* பெ. (n.) பிரம்பினாற் செய்த தட்டி; rattan-blinds (C.E.M.)

*[பிரம்பு + தடுக்கு. தள் → தடு → தடை. தடு → தடுப்பு. தடுதடுக்கு = சிறுதட்டி போன்றபாய்]*

**பிரம்புப்பனை** *pirambu-p-paṉai,* பெ. (n.) *பிரம்புக்கழி* பார்க்க; see *pirambu-k-kaḻi.*

*[பிரம்பு + பனை.]*

**பிரம்புப்பின்னல்** *pirambu-p-piṉṉal,* பெ. (n.) தட்டிவகை (புதுவை.); a kind of screen.

*[பிரம்பு + பின்னல். பின்னு → பின்னல். 'அல்' தொ. பெ. ஈறு. 'பின்னல்' என்னும் தொழிற்பெயர் பின்னப்பட்ட பொருளுக்கு ஆகிவந்துள்ளது.]*

**பிரம்புரி** *pirampuri,* பெ. (n.) ஒரு வகை நெல்; a kind of paddy. '*பெரிய செந்நெற் பிரம்புரி கெந்தசாலி*' (தேவா. 700, 7.)

**பிரமதண்டி** *piramatandi,* பெ. (n.) பேயத்தி (நாமதீப. 325); devil fig.

**பிரவிடை** *piravidai,* பெ. (n.) *பிரவுடை* (சங்.அக.) பார்க்க; see *piravudai.*

*[பிரவுடை → பிரவிடை]*

**பிரவுடை** *piravudai,* பெ. (n.) **1.** பக்குவமான பெண் (நாமதீப். 181.); adolescant girl. **2.** 31 அகவை முதல் 55 அகவை முடியவுள்ள பெண்பாற் பருவம்; stage of growth of a woman between her thirty first and fifty-fifth year. "தரித்தவாலை தருணை பிரவுடை விருத்தையாகும் வியன்பருவங்களின்" (கந்தபு. இந்திரபுரி. 33).

*[புல் → பொல்லு = தடி. புள் → (பிள்) → பிண்டு → பிண்டம் = திரட்சி. புல் → புர → பிர + உடை - பிரவுடை = திரண்ட பருவத்தினள், அத்திரட்சி நீடித்திருக்கக் கூடிய பருவம்]*

**பிரவையாடு** *piravai-y-ādu,* பெ. (n.) ஆடுவகை (எங்களூர், 168.); a kind of goat.

*[புருவை → பிரவை + ஆடு]*

**பிரள்(ளு)—தல்** *piral(lu)-,* 2 செ. கு. வி. (v.i.) *புரள்—தல்* (கொ. வ.) பார்க்க; see *pural-,*

*[புரள் → பிரள்—,]*

**பிரளி**[1] *pirali,* பெ. (n.) *புரளி* பார்க்க; see *purali.*

*[புரளி → பிரளி]*

**பிரளி**[2] *pirali* பெ. (n.) குழந்தை நோய் வகை; a children's disease.

*[புரள் → பிரள் → பிரளி (வேக.3, 95)]*

**பிறற்றல்** *pirarral,* பெ. (n.) எடுத்தலோசை (பிங்.); loud tone.

*[பிறற்று → பிறற்றல்]*

**பிறற்று—தல்** *pirarru-,* 5 செ.கு.வி. (v.i.) உரத்து ஒலியெழுப்புதல்; to utter in a loud and emphatic tone. "பிறற்றி யேங்கினர் சிலர்" (அரி.சமய. பரகா. 38.).

*[உறுதல் = உரத்து முழங்குதல். உறு → அறு = பேரொலி செய்தல். உறு → (இறு) → பிறு → பிறற்று.]*

**பிரா** *pirā,* பெ. (n.) முசுமுசுக்கை; bristly bryony. (M.M.)

**பிராங்குடி** *pirāngudi,* பெ. (n.) திருவாரூர் மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Tiruvārūr dt.

*[பிரான் + குடி]*

**பிராட்டி** *pirātti,* பெ. (n.) **1.** தலைவி; lady, mistress. முல்லைப் பிராட்டி (திவ். நாய்ச். 10, 4). **2.** தேவி; goddess. 'எம் பிராட்டி திருவடிமேற் பொன்னஞ் சிலம்பிற் சிலம்பி' (திருவாச. 7, 16).

*[புல் → பல் → பரு → பெரு → பெருமை பெரு → பெருமான். பெருமான் (ஆ. பா.) - பெருமாட்டி (பெ. பா.). பெருமாட்டி → பிராட்டி]*

**பிராமுட்டி** *pirāmutti,* பெ. (n.) புறாமுட்டி (சங்.அக.); parrakeet-bur.

*[புறாமுட்டி → பிராமுட்டி]*

**பிராய்** *pirāy,* பெ. (n.) மரவகை; paper tree.

**பிராறு** *pirāṟu,* பெ. (n.) 1. நிறைபுனல் (திவா.); full river or tank. 2. நீரூர் பாதை (நாமதீப. 534.); water course.

*[பெருகு + ஆறு - பெருகாறு → பிராறு]*

**பிரான்** *pirāṉ,* பெ. (n.) 1. தலைவன்; Lord, king, chief, master. '*கோவணம் பூணுமேனும் பிரானென்பர்*' (தேவா. 640, 7.) 2. கடவுள்; god. '*பிரான் பெருநிலங் கீண்டவன்*' (திவ். திருவாய். 1, 7, 6.) 3. சிவபெருமான் (சது.); Šivaṉ.

ம. பிரான்

*[புல் → பல் → பரு → பெரு → பெருமை. பெரு → பெருமான் → பிரான்.]*

**பிரான்மலை** *pirāṉ-malai,* பெ. (n.) பாண்டி நாட்டிலுள்ள சிவத்தலங்களுள் ஒன்று; an ancient Šivaṉ shrine in pāṇḍya country.

*[பிரான் + மலை. பெரு → பெருமான் → பிரான்]*

**பிரி¹–தல்** *piri-,* 3 செ. கு. வி. (v.i.) 1. கட்டவிழ்தல்; to become disjoined or parted, unfastended; 2. பகுக்கப் படுதல்; to be split, as words into parts. '*பிரிப்பப் பிரியா*' (தொல். சொல். 410.) 3. தொடர்பறுதல்; to dissociate. கருத்தடிப்படையில் பிரிந்தோர் பலர் உண்டு (உ.வ.) 4. வேறுபடுதல்; to vary, as pāl; to disagree, as person. '*உயர்திணை மருங்கிற் பால் பிரிந்திசைக்கும்*' (தொல். சொல். 4.) 5. முறுக்கவிழ்தல்; to be untwisted, as a rope, to be ripped or loosened as a seam or texture. 6. வகைப்படுதல்; to be classified, analysed. '*இருதிணைப் பிரிந்த வைம்பாற் கிளவிக்கும்*' (தொல். சொல். 10) 7. தண்டுதல் (வசூலித்தல்) (கொ.வ.); to collect, realise,as a sum of money. '*அவனிடமிருந்து ஒன்றும் பிரியாது*'

ம. பிரியுக; க. பிரி.

*[புல் → பி ல் → (வில்) → விலகு → விலக்கம். விலகு → விலங்கு. விலங்குதல் → விலகுதல். புள் → புய். புய்த்தல் → பிரித்தல். பிடுங்குதல். புய் → பிய். பிய் → (பெய்) → பெயர் → பெயர்தல் = பிரிதல். விலகுதல். புள் → பிள் → பிரி (மு. தா. 261)* பிளந்த பொருள் வேறாகப்பிரியும்.]

pir-i, to divide; also pōḷ, to cleave, and pāl, a portion Comp. Sans. phal-a, to divide; but especially the Latin par-s, a portion; also portio, from the suppositi-tious root por-o or par-o, to appor-tion, to divide. The Greek por-ō, in the sense of im-parting is doubtless an allied word. (CGDFL. 599)

**பிரி²–தல்** *piri-,* 3 செ.குன்றாவி. (v.t.) 1. விட்டுவிலகுதல்; to part, separate, diverge to quit, depart. '*உவப்பத் தலைக் கூடி யுள்ளப் பிரிதல்*' (குறள். 394.). 2. நினைத்தல்; to think of, contemplate. '*யாண்டும் பிரியாது*' (ஆசாரக். 21.)

ம. பிரிக்க; கோத. பிர்ய்

*[புள் → பிள் → பிரி (மு. தா. 261)]*

**பிரி³–த்தல்** *piri-,* 11 செ.குன்றாவி. (v.t.) 1. பிரியச் செய்தல்; to separate, dis-unite, sever; '*பகச் சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர்*'

(குறள், 187.). 2. வகுத்தல்; (math.) to divide. 3. பகுத்தல்; to split, as words into parts. 'பிரிப்பப்பிரியா' (தொல். சொல். 410.). 4. முறுக்கவிழ்த்தல்; to untwist, unite, disentangle. 5. புதிர் முதலியவற்றை விடுத்தல்; to solve, unravel, as a riddle; 'இந்தப் பிதிரைப் பிரிக்கவேண்டும்' 6. கட்டவிழ்த்தல்; to pull to pieces, dismantle, as the thatch of a roof. 7. பங்கிடுதல்; to distribute, portion out.

ம. பிரியுக; க. பிரி, கிரி; கோத. பிர்ச்

*[புள் → பிள் → பிரி (மு. தா. 261)]*

**பிரி⁴** *piri,* பெ. (n.) புரி; twist, strand, wisp.

ம., தெ.புரி; க.புரி, கிரி

*[புரி → பிரி]*

**பிரி⁵** *piri,* பெ. (n.) வெருகு (மலை.); a plant with large leaf, long rooted arum.

மறுவ. மெருகங்கிழங்குச் செடி.

*[புரி → பிரி]*

**பிரிக்கம்** *pirikkam,* பெ. (n.) ஒருவகை மருந்துச் செடி; a kind of medicinal herb.

**பிரிகதிர்ப்படு-தல்** *piri-kadir-p-paḍu-,* 17 செ. கு. வி. (v.i.) கேடுறுதல்; to be scattered, destroyed. 'ஒன்றும் பிரிகதிர்ப் படாமே'ரக்ஷித்த நம் கண்ணன்' (ஈடு, 2, 2, 1.)

*[பிரி + கதிர் + படு–'படு',து.வி]*

**பிரிகை** *pirigai,* பெ. (n.) தொடர்பறுந்த நிலை; isolation.

*[பிரி → பிரிகை. 'கை' தொ. பெ. ஈறு]*

**பிரிச்சல்** *piriccal,* பெ. (n.) பிரிசல்², (யாழ். அக.) பார்க்க; see *piriśal².*

*[பிரி → பிரிச்சல். 'அல்' தொ. பெ. ஈறு]*

**பிரிசம்** *piriśam,* பெ. (n.) பொருளின் அருமை (வின்.); scarcity, dearth.

*[பிரியம் → பிரிசம்]*

**பிரிசல்¹** *piriśal,* பெ. (n.) *பிரிசம்* (வின்.) பார்க்க; see *piriśam.*

**பிரிசல்²** *piriśal,* பெ. (n.) 1. பாகம்; (கொ. வ.); division, partition. 2. பிரிந்து கிடக்கும் நிலை (இ. வ.); thread bare or tattered condition.

க. பிரிசு, பிரிசு, பிறிசு, பிறிசு (வேறு வேறாக்கு, தனித்தனியாக்கு)

*[பிரி → பிரிசல். 'சல்' தொ. பெ. ஈறு]*

**பிரிசாரம்** *piriśāram,* பெ. (n.) 1. தன்னைப் பாசப் பொருளாகக் காட்டிக் கொள்ளுகை (இ. வ.); making oneself dear; 2. வற்புறுத்துகை (வின்.); urging vehemently.

*[பிரியம் + சாரம்]*

**பிரிசாலம்** *piriśālam,* பெ. (n.) *பிரிசாரம் 2* (வின்) பார்க்க; see *piriśāram 2.*

*[பிரிசாரம் → பிரிசாலம்]*

**பிரிசாலம்பிடி–த்தல்** *piriśālam piḍi-,* 4 செ. குன்றாவி. (v.t.) வற்புறுத்துதல் (வின்.); to urge vehemently, trouble.

*[பிரிசாலம் + பிடி–, 'பிடி' து. வி.]*

**பிரிசை** *piriśai,* பெ. (n.) நாகப்பித்து; pērilāḻam.

**பிரிஞ்சான்** *piriñjāṉ,* பெ. (n.) ஒரு வகைமீன்; a kind of fish.

**பிரித்தாளு–தல்** *piritt āḷu-,* 10 செ. குன்றாவி. (v.t.) ஒன்றாக இருப்போரிடையே பிரிவை உருவாக்கி அதனின்று பயன்பெறுதல்; to divide and rule. வெள்ளையர் இந்தியமக்களிடையே பிரித்தாளும் உத்தியைக்கொண்டு ஆண்டனர் (உ.வ.).

*[பிரி → பிரித்து + ஆள்–,]*

**பிரித்துக்கொடு–த்தல்** *pirittu-k-koḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) கூறுகளாக்கிக் கொடுத்தல்; to partition. 'பாகத்தைப் பிரித்துக் கொடுவென அவன் கேட்டான்' (உ.வ.)

*[பிரி → பிரித்து + கொடு–, 'கொடு' து.வி.]*

**பிரித்துணர்–தல்** *pirittuṇar-,* 3 செ. குன்றாவி. (v.t.) வேறுபாடு கண்டறிதல், வேறுபடுத்தியுணர்தல்; to discriminate. உணர்வாளர்களையும் போலியர்களையும் முதலில் பிரித்துணர வேண்டும். (உ.வ.)

*[பிரி → பிரித்து + உணர்–,]*

**பிரித்துவை–த்தல்** *pirittu-vai-,* 4 செ. குன்றாவி (v.t.) தனித்தனியாக்கிவைத்தல்; to separate into portions. சண்டையிடும் மாடுகளைப் பிரித்து வைக்க வேண்டும் (உ.வ.)

க. பிரிதிடு, கிரிதிடு.

•••

*[பிரி → பிரித்து + வை–]*

**பிரித்தெடு–த்தல்** *pirittеḍu-,* 4 செ. குன்றாவி. (v.t.) சாறு முதலியவற்றைப் பிழிந்தெடுத்தல்; to obtain juice etc. 2. தேர்ந்தெடுத்தல்; to select by separate things. சுவையான பழங்களை முதலில் பிரித்தெடுக்க வேண்டும். (உ.வ.)

*[பிரித்து + எடு–,]*

**பிரிதல்** *piridal,* பெ. (n.) உரிப்பொருள் ஐந்தனுள் பாலைத் திணைக்குரிய தலைவன் தலைவியை நீங்கியிருக்கை (தொல். பொ. 14); (agap.) theme of separation of a lover from his lady-love, appropriate to pālai-t-tiṇai, one of five uri-p-poruḷ.

*[பிரி → பிரிதல். 'தல்' தொ. பெ. ஈறு]*

**பிரிதற்கண்** *piridaṟkaṇ,* பெ. (n.) கண்ணோய் வகை; an eye disease.

*[பிரிதல் + கண்]*

**பிரிதாள்** *piritāḷ,* பெ. (n.) *புலிகட்டை* பார்க்க; see *pulikaṭṭai*

*[புரிதாள் → பிரிதாள்]*

**பிரிதிகி** *piridigi,* பெ. (n.) வழுதலை; brinjal plant.

மறுவ. வழுதுணங்காய், கத்தரிக்காய்

**பிரிதிரை** *piritirai,* பெ. (n.) ஈரலுக்கும், குடலுக்கும், நடுவேயுள்ள சவ்வு, இடையீட்டுச் சவ்வுத்திரை; diaphram.

*[பிரி + திரை]*

**பிரிதிவுநீர்** *piridivu-nir,* பெ. (n.) தண்ணீர் விட்டான் கிழங்கு; water root.

**பிரிந்திசை** *pirindišai,* பெ. (n.) செய்யுளோசை வகை; a rhythm in verse.

*[பிரி → பிரிந்து + இசை]*

**பிரிந்திசைக்குறள்** *pirindišai-k-kural,* பெ. (n.) ஒத்தாழிசைக் கலியுறுப்பினுள் ஒன்றாகிய அம்போதரங்கம் (வீரசோ. பாய். 11, உரை); (poet.) ambōdarangam, one of the seven members of ottāliššai-k-kalippā.

*[பிரிந்திசை + குறள்]*

**பிரிந்திசைத்துள்ளல்** *pirindišai-t-tullal;* பெ. (n.) பலதளையும் விரவிவரும் கலிப்பா வோசை வகை (காரிகை. செய். 1); (poet.) a kind of rhythm peculiar to kali verse.

*[பிரிந்திசை + துள்ளல். துள் → துள்ளல். 'அல்' தொ. பெ. ஈறு]*

**பிரிந்திசைத்தூங்கல்** *pirindišai-t-tūngal,* பெ. (n.) பலதளையும் விரவிவரும் வஞ்சிப்பா வோசை வகை (காரிகை. செய். 1, உரை); (poet.) a kind of rhythm peculiar to vañji verse.

*[பிரிந்திசை + தூங்கல். தூங்கு → தூங்கல். 'அல்' தொ.பெ.ஈறு]*

**பிரிந்துபோ-தல்** *pirinidu pō-,* செ.கு.வி. (v.i.) சேர்ந்திருக்கும் நிலையிலிருந்து அல்லது உறவுகொண்டிருக்கும் நிலையிலிருந்து விலகுதல்; to be separate to go away (in different directions), to disperse. நண்பர்களைப்பிரிந்து போனதால் ஏற்பட்ட தொல்லை மிகுதி (உ.வ.)

*[பிரி → பிரிந்து + போ-, 'போ'. து.வி.]*

**பிரிநிலை** *pirinilai,* பெ. (n.) வேறுபடுத்திக் காட்டும் நிலை (தொல். சொல். 258, உரை); (gram.) exclusion.

*[பிரி + நிலை.]*

**பிரிநிலைநவிற்சியணி** *pirinilai-navirci-y-ani,* பெ. (n.) பெயர்ச்சொற்களுக்கு உறுப்பாற்றல் மற்றொரு பொருளைத் தந்து உரைப்பாதாகிய அணி வகை (அணியி. 97.); (rhet.) a figure of speech in which a noun is given it etymological sense.

*[பிரிநிலை + நவிற்சி + அணி. அண் → அணி]*

**பிரிநிலையெச்சம்** *pirinilai-y-eccam,* பெ. (n.) 1. பிரிக்கப்பட்ட பொருள் விளங்க கூறப் பெறாமல் எஞ்சி நிற்கும் தொடரியம் (வாக்கியம்) (தொல். சொல். 431, சேனா.); (gram.) a sentence in which sense of exclusion is implied. 2. தொடரிய (வாக்கிய)த்தில் கூறப்படாது எஞ்சி நிற்குஞ்சொல் (தொல். சொல். 423, தெய்வச்.); (gram.) word or words that are implied in a sentence.

*[பிரிநிலை + எச்சம்]*

**பிரிநிலையேகாரம்** *pirinilai-y-ēgāram,* பெ. (n.) பிரிநிலையை உணர்த்தும் ஏகாரம்; suffix having the force of disjunction.

*[பிரி + நிலை + ஏ + காரம். பலவற்றுள் ஒன்று பிரிப்பது (இறை.உ)]*

**பிரிப்பு** *pirippu,* பெ. (n.) 1. பிரிவு; separation, division. 2. வேறுபாடு; estrangement. 'மணப்பிரிப் பொன்றின்று' (நாலடி. 189).

*[பிரி → பிரிப்பு. 'பு' தொ. பெ. ஈறு]*

**பிரிப்புச்சுவர்** *pirippu-c-cuvar,* பெ. (n.) பிரிவினைச்சுவர்; partition wall, divide wall.

**மறுவ.** தடுப்புச் சுவர்

*[பிரிப்பு + சுவர். சுவல் → சுவர்]*

**பிரிப்புத்தொகை** *pirippu-t-togai,* பெ. (n.) பங்குமான (வீத)ப்படி கிடைக்குந் தொகை (புதுவை.); dividend.

*[பிரிப்பு + தொகை. பிரி → பிரிப்பு. தொகு → தொகை]*

**பிரிபு** *piribu,* பெ. (n.) பிரிவு பார்க்க; see pirivu. "என்று மென்றோள் பிரிபறி பலரே"(இலக். வி. 580, உரை)

*[பிரி → பிரிவு → பிரிபு]*

**பிரிபொருட்சொற்றொடர்** *piriporuṭ coṟṟoḍar,* பெ. (n.) ஒன்றாத பொருளையுடைய தொடராலாகிய பா வழு (இலக். வி. 691.); (rhet.) incoherent combination of words in a poem, considered a blemish.

*[பிரிபொருள் + சொற்றொடர்]*

**பிரிபொருட்டொடர்மொழி** *piriporuṭṭoḍarmoḻi,* பெ. (n.) செய்யுட்குற்றங்களுள் ஒன்று. (யாழ். வி. 525); (poet.) defect in versification.

*[பிரிபொருள் + தொடர் + மொழி]*

**பிரிமணை** *pirimaṇai,* பெ. (n.) பாண்டம் வைக்கும் மணை; a circular ring made of straw for keeping pots on.

*[புல் → புர் = முறுக்கு, சுருள். புரி → புரிக்கூடு = வைக்கோற்புரி, நெற்கூடு. புரி → புரிமணை → வைக்கோற்புரி வளையம் (வே. க. 3, 95, 96) புரிமணை → பிரிமணை]*

**பிரிமுருக்கு** *pirimurukku,* பெ. (n.) வலம்புரிக் கொடி; a creeper.

*[புல் → புர் → புரி.புரிதல் = வளைதல், சுருள். புரி + முறுக்கு - புரிமுறுக்கு = முறுக்குவளையல் (வே. க. 3, 96) புரி → பிரி ஒ. நோ. புரண்டை → பிரண்டை. புரிமுறுக்கு → பிரிமுருக்கு]*

**பிரிமொழிச்சிலேடை** *piri-moḻi-c-cilēḍai,* பெ. (n.) பிரிக்கப்பட்டுப் பலபொருள் பயக்குஞ் சொற்றொடர் (தண்டி. 75, உரை); (rhet.) a phrase or sentence in which a šilēḍai is brought out by dividing it into different words, one of two šilēḍai.

*[பிரி + மொழி + சிலேடை]*

*'தள்ளா விடத்தேர் தடந்தா மரையடைய*
*எள்ளா வரிமானிடர் மிகுப்ப–உள்வாழ்தேம்*
*சிந்துந் தகைமைத்தே யெங்கோன்*
*றிருவுள்ளம் நந்துந் தொழில் புரிந்தார் நாடு'*

இது சோழனுடைய மனங்களிக்கும்படி நடந்தோருடைய நாட்டிற்கும், அவன் மனம் வெறுக்கும்படி நடந்தோருடைய நாட்டிற்கும் சிலேடை

**பிரியக்கடைபண்ணு–தல்** *piriya-k-kaḍai-paṇṇu-,* 6 செ.குன்றாவி. (v.t.) தன்னுடையதை அருமைப் பண்டமாக்கிக் கூறுதல் (இ. வ.); to exaggerate the value of a thing, as in a bargain. அவன் பிரியக்கடை பண்ணுகிறான்.

*[பிரியம் + கடை + பண்ணு–,]*

**பிரியகம்** *piriyagam,* பெ. (n.) **1.** கடம்பு (மலை); sea side Indian oak. **2.** வேங்கை (சங். அக.); Indian kino tree.

**பிரியங்காட்டு–தல்** *piriyaṅ-kāṭṭu-,* 7 செ. கு. வி. (v.i.) அன்பு வெளிப்படுத்தல்; to express love or fondness.

*[பிரியம் + காட்டு–, காண்(த.வி.) – காட்டு (பி. வி.)]*

**பிரியங்கு** *piriyaṅgu,* பெ. (n.) ஞாழல் (நாமதீப. 322); a shrub.

**பிரியசத்தியம்** *piriya-šattiyam,* பெ. (n.) இனிய உரையாடல் (யாழ். அக.); delightful conversation.

*[பிரியம் + சத்தியம்]*

Skt. satya > **த.** சத்தியம்

**பிரியசந்தேசம்** *piriyašandēšam,* பெ. (n.) சண்பகம் (சங். அக.); champak.

**பிரியதத்தம்** *piriyatattam,* பெ. (n.) *பிரிய தத்தமந்திரம்* (வின்.) பார்க்க; see *piriya tatta mandiram.*

*[பிரியம் + தத்தம்]*

**பிரியதத்தமந்திரம்** *piriyatattamandiram,* பெ. (n.) கத்தோலிக்கக் கிறித்தவர் வழங்கும் மந்திரவகை; ave mary, a devotional recitation. (R.C.)

*[பிரியதத்தம் + மந்திரம்]*

**பிரியதரிசி** *piriyadariši,* பெ. (n.) புத்தருள் ஒருவர் (மணிமே. 30, 14, குறிப்பு); a Buddha.

*[பிரியம் + தரிசி]*

Skt. darsin > **த.** ꞌதரிசி

**பிரியதரிசினி** *piriyadarišiṉi,* பெ. (n.) வன்னி (சங்.அக.); Indian mesquit tree.

**பிரியநாயகி** *piriyanāyagi,* பெ. (n.) அன்புள்ள மனைவி; beloved wife.

*[பிரியம் + நாயகி.]*

**பிரியப்படுத்து–தல்** *piriya-p-paḍuttu-,* 8 செ. குன்றாவி. (v.t.) **1.** மகிழ்வித்தல்; to please, gladden. **2.** முகமன் (இச்சகம்) பேசுதல் (வின்.); to humour, soothe, flatter. **3.** பிரியக்கடை பண்ணு–தல் (வின்.) பார்க்க; see piriya-k-kaḍai-paṇṇu-,

*[பிரியம் + படுத்து–,]*

**பிரியம்** *piriyam,* பெ. (n.) **1.** விருப்பம்; pleasure, delight, acceptableness. **2.** கவர்ச்சி; attraction. **3.** அன்பு, நேசிப்பு; love, fondness. **4.** நேயம், பெருவிருப்பு; partiality, endearment. **5.** பண்டங்களின் பெறலருமை; scarcity, dearth. opp. to cavaḍam. **6.** விரும்பிய பொருள்; thing desired. பிரியம் பல விரும்படி (அரிச்பு. பாயி.1)

**மறுவ.** நேசம்

*[புல் → புர் → புரி. புரிதல் = விரும்புதல் புரி → பரி = அன்பு. **(வே.க.3.87)** பரி → பிரி → பிரியம்]*

**பிரியம்பண்ணு—தல்** *piriyam-paṇṇu-,* 6 செ. குன்றாவி. (v.t.) 1. *பிரியப்படுத்து³—தல்* பார்க்க; see *piriya-p-paḍuttu³-,* 2. மேம் படுத்திக் கொள்ளுதல்; to give one self airs. 'பிரியம் பண்ணிக் கொள்வது மேரையோ' (கவிகுஞ்.)

*[பிரியம் + பண்ணு—, பண் + உ -பண்ணு. 'உ' ஒலித்துணையுயிர்]*

**பிரியலர்** *piriyalar,* பெ. (n.) (ஒருவரை யொருவர் பிரியாத) நண்பர்; friends, as persons who would not be separated.

*[பிரி + அல் + அர். 'அல்' எ. ம. இடைநிலை. 'அர்' ப. பா. ஈறு]*

**பிரியவசனம்** *piriyavaśaṉam,* பெ. (n.) இன்ப மான சொல்; sweet, pleasant words.

*[பிரியம் + வசனம்.]*

Skt. vacana > **த.** வசனம்

**பிரியன்** *piriyaṉ,* பெ. (n.) 1. அன்புள்ளவன்; one who loves. பிரியரா மடியவர்க் கணியர் (தேவா. 558, 9) 2. கணவன்; beloved husband. 'பிரியன் பிரியை யென்றாயினம்' (தனிப்பா.)

*[பிரியம் → பிரியன். 'ன்' ஆ. பா. ஈறு]*

**பிரியாணங்கை** *piriyāṇaṅgai,* பெ. (n.) பெரியாநங்கை செடிவகை; large milkwort.

*[பெரியாநங்கை → பெரியாணங்கை → பிரியாணங்கை (கொ.வ.)]*

**பிரியாதசத்து** *piriyāda śattu,* பெ. (n.) கந்தகம்; blue vitriol.

**பிரியாநங்கை** *piriyā-naṅgai,* பெ. (n.) பூநீறு முதலானவற்றினின்று செய்யப்படும் மாழையுப்பு; a kind of prepared salt.

**பிரியாம்பு** *piri-y-āmbu,* பெ. (n.) மாமரம்; mango tree.

**பிரியாயீடு** *piriyā-y-īḍu,* பெ. (n.) இடுமருந்து; drug administered secretly with food or drink in order to win over a person, a philter portion stealthily administered.

**மறுவ.** வசிய மருந்து

*[பிரியா + ஈடு. இடு → ஈடு]*

**பிரியார்கணப்பூ** *piriyār-kaṇappū,* பெ. (n.) *பிரியாயீடு* பார்க்க; see *piriyā-y-īḍu.*

**பிரியாவிடை** *piriyā-viḍai,* பெ. (n.) உள்ளம் பிரியாதே விடைபெறுகை; leave taking, farewell. '*பிரியா விடை கொண்டு*' (அருட்பா, vi, குடும்ப. முயற்சி, 37)

*[பிரி' + ஆ + விடை. விடு → விடை. 'ஆ' எ. ம. இடை நிலை]*

**பிரியாவுடையாள்** *piriyā-v-uḍaiyāḷ,* பெ. (n.) மலைமகள் (பார்வதிதேவி) (சிவபெருமானைப் பிரியாதவள்); goddess Pārvadi, as insepa-rable from Sivaṉ.

*[பிரி + ஆ + உடையாள். 'ஆ' எ.ம. இடைநிலை]*

**பிரியாளம்** *piriyāḷam,* பெ. (n.) மரல் (நாமதீப. 331.); bow string hemp.

**பிரியுமிடம்** *piriyumiḍam,* பெ. (n.) தனித்தனியாக விலகும் இடம்; a place of separation or division, parting.

*[பிரி → பிரியும் + இடம்]*

**பிரிவச்சம்** *piri-v-accam,* பெ. (n.) பிரிவதற்குக் கொள்ளும் வெரு (அச்சம்); fear for separation.

*[பிரிவு+ அச்சம். அஞ்சு → அச்சு → அச்சம். தான் பிரிவு அஞ்சிற்றும் பிரிவச்சம்; அஞ்சுவித்ததும் பிரிவச்சம் (இறை.உ.)]*

**பிரிவரும்புள்** *pirivarum-puḷ,* பெ. (n.) இருதலைப்புள்; a bird. '*பிரிவரும் புள்ளி னொருமையினொட்டி*' (பெருங். இலாவாண. 14, 66)

*[பிரிவு + அரு + புள்.]*

**பிரிவனை** *pirivaṉai,* பெ. (n.) வகுத்தற் கணக்கு (யாழ். அக.); division, partition.

*[பிரி → பிரிவனை]*

**பிரிவாற்றாமை** *pirivaṟṟāmai,* பெ. (n.) தலைவன் பிரிவைத் தலைவி பொறுக்க முடியாமை (குறள், 116, அதி.); impatience, of separation, as of lovers.

*[பிரிவு + ஆற்று + ஆ. + மை 'ஆ' எ. ம. இடைநிலை]*

**பிரிவாற்று—தல்** *pirivāṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.i.) தலைவன் பிரிவினைத்தாங்கியிருதல்; to bear patiently the separation of lovers.

*[பிரிவு + ஆற்று–,]*

**பிரிவிலசைநிலை** *pirivil-aśainilai,* பெ. (n.). தனியே வழங்காது இரட்டித்தே நிற்கும் அசைநிலை (தொல். சொல். 280, சேனா.); expletives used in pairs, as āga āga.

*[பிரிவு + இல் + அசைநிலை. 'இல்' எ. ம. இடைநிலை]*

**பிரிவினை**[1] *piriviṉai,* பெ. (n.) கூறுகளாகப் பிரிகை, பிரிக்கப்பட்ட கூறு; partition. நாட்டுப்பிரிவினை(உ.வ).

*[பிரி → பிரிவு → பிரிவினை(மு.தா.261)]*

**பிரிவினை**[2] *piriviṉai,* பெ. (n.) *பிரிவு*[1] *1, 3, 4, 8,* (கொ.வ.) பார்க்க; see *pirivu*[1] *1,3,4,8*

*[பிரி → பிரிவு → பிரிவினை(மு.தா.261)]*

**பிரிவினைக்காரர்** *piriviṉaik-kārar,* பெ. (n.) *பிரிவினையாளர்* பார்க்க; see *piriviṉai-y-āḷar.*

*[பிரிவினை + காரர்.]*

**பிரிவினையாளர்** *piriviṉai-y-āḷar,* பெ. (n.) பிரிந்து செல்வதைக் கனைகண்ணாளர் (ஆதரிப்பவர்); separatist.

*[பிரிவினை+ ஆளர்.]*

**பிரிவினைவாதம்** *piriviṉai vādam,* பெ. (n.) இனம்,மதம், மொழி போன்ற அடிப்படையில் (நாட்டை) தனித்தனியாகப்பிரிக்க வேண்டும் என்ற போக்கு; separatism, secessionism.

*[பிரிவினை + வாதம்.]*

Skt.vāda > த. வாதம்

**பிரிவினைவாதி** *piriviṉai vādi,* பெ. (n.) *பிரிவினையாளர்* பார்க்க; see *piriviṉai-y-āḷar*

பிரிவினைவாதிகள் உலகம் முழுவதும் பெருகிவருகின்றனர் (உ.வ.)

*[பிரிவினை + வாதி.]*

Skt. vādi > த. வாதி

**பிரிவு**[1] *pirivu,* பெ. (n.), 1.பிரிகை; separation severance. *'இன்னாமரீஇஇப்பின்னைப் பிரிவு'* (நாலடி,220); 2. வகுத்தற்கணக்கு; (arith.) division. 3. பாகம்; partition 4. ஒற்றுமையின்மை (யாழ்.அக); disunion disagreement, dissension. 5. பகுதி; section chapter, as of a book; paragraph. 6. அவிழ்கை; lossening,ripping, parting. 7. மூலமதத்தின் வேறுபட்ட உள்வேறுபாடு (உட்பேதம்) (வின்.); secession, schism. 8. வேறுபாடு; distinction, difference, இடையீடு gap interspace. *'பிரிவில வரையார்'* (தொல்.சொல். 460).

ம. பிரிவு; கோத. பிர்ய்வ் (பிரிந்திருக்குமிடம்)

*[புள்→ புள்→ பிரி→ பிரிவு (மு.தா.261) 'வு' பெயராக்க ஈறு .]*

**பிரிவு**[2] *pirivu,* பெ. (n.) இறப்பு (மரணம்); death. *"கேள்வற் கூனமும் பிரிவும் அஞ்சி"* (சீவக.1530.)

*[பிரி → பிரிவு.]*

**பிரிவு**[3] *pirivu,* பெ. (n.) வெறுப்பு; vexation.

*[பிரி → பிரிவு.]*

**பிரிவுக்கட்டை** *pirivu-k-kaṭṭai,* பெ. (n.) நீரோட்டத்தைப்பிரிக்கும் மதகு; division dam. (C. E. M.).

*[பிரிவு + கட்டை. கள் → கட்டை.]*

**பிரிவுக்கோடு** *pirivu-k-kōḍu,* பெ. (n.) பிரிக்குங்கோடு; a dividing line, parting.

*[பிரிவு + கோடு–,]*

**பிரிவுத்துயர்** *pirivu-t-tuyar,* பெ. (n.) பிரிவால் ஏற்படும் துன்பம்; agony caused by separation.

*[பிரிவு + துயர்.]*

**பிரிவுநிலை** *pirivu nilai,* பெ. (n.) வேறுபடுத்திக் காட்டுகின்ற தன்மை; differenciating character.

*[பிரிவு + நிலை.]*

**பிரிவுப்பாணி** *pirivuppāṇi,* பெ. (n.) வலம்புரிக்கொடி; a creeper.

*[புரி → புரிமுகம் = சங்கு, நத்தை, சங்கு. வலம்புரிச்சங்கு = வலப்புறமாக வளைந்த சங்கு. புரி → பிரி. புரிவுப்பாணி → பிரிவுப்பாணி.]*

**பிரிவுபச்சாரம்** *pirivubaccāram,* பெ. (n.) பிரிந்து செல்லும் நேரம் நல்வாழ்த்து வாழ்த்தி வழியனுப்பும் வழி; farewell. ஓய்வுபெற்ற நீதிபதிக்குப் பிரிவுபச்சாரம் நடத்தினர் (உ.வ.).

*[பிரிவு + உபச்சாரம்.]*

Skt. upacāra > த. உபச்சாரம்.

**பிரிவுபோடு–தல்** *pirivu-pōḍu-,* 20 செ. கு. வி. (v.i.) 1. கொடுக்க வேண்டிய தொகையை ஆளுக்கு இவ்வளவு என்று பகுத்துக் கொள்ளுதல்; to levy contribution. 2. ஏலச்சீட்டு முதலியவற்றிற்குக் கிடைக்கும் மேல்வரும்படியைப் பங்கிட்டுக் கொள்ளுதல்; to divide, as profits, discount.

*[பிரிவு + போடு–,]*

**பிருக்கம்** *pirukkam,* பெ. (n.) சிறுநீரகம்; kidney.

*[பிள்→ பிடு→ பிடுங்கு. பிடு→ (பிது) பிதுங்கு → பிதுக்கு → பிதுக்கம் = பெயர்ந்து வெளிவரும் பகுதி, விதை வீக்கம். பிதுக்கம் → பிருக்கம்.]*

**பிருக்கவேதனை** *pirukka-vēdaṉai,* பெ. (n.) சிறுநீரகத்திலேற்படும் வலி; kidney pain.

*[பிருக்கம் + வேதனை.]*

Skt. vēdanā > **த.** வேதனை

**பிருக்கரம்** *pirukkaram,* பெ. (n.) சிறுநீரக வீக்கம்; nephritis.

*[பிதுக்கு → பிதுக்கம் → பிருக்கம் = சிறுநீரகம். பிருக்கம் → பிருக்கரம். 'பிருக்கம்' பார்க்க.]*

**பிருகு** *pirugu,* பெ. (n.) பனை முதலியவற்றின் முற்றாக் கிழங்கு (யாழ்ப்.); immature edible root, especially to palmyra.

*[புள் → (பிள்) → பீள் = இளங்கதிர், இளமை. பூட்டை = இளங்கதிர். பூட்டை → பீட்டை. பிள் → பிர் → பிரு → பிருகு. 'குள்' என்னும் தோன்றற் கருத்து வேரிலிருந்து குள் → குருகு = குருத்து (குருத்து → குருந்து = தென்னை, பனை முதலியவற்றின் இளவிலை, குரு → குரும்பு → குரும்பை = தென்னை, பனை முதலியவற்றின் பிஞ்சு) என்னும் இளமைக் கருத்துச் சொல் தோன்றியது போல் 'புள்' என்னும் தோன்றற் கருதிலிருந்து 'பிருகு' என்னும் இளமைக் கருத்துச் சொல் பிறந்ததென்க.]*

**பிருகுடி** *pirukuḍi,* பெ. (n.) **1.** புருவம்; eye brow. **2.** புருவநெரிப்பு; arching of the brows.

*[புள் → புரு → புருவம் = வளைந்த கண்பட்டை. → புரு → புரி. புரிதல் = வளைதல். புரு → (புறு) → புறை → பிறை = வளைந்த நிலா. புள் → புரு → பிரு → பிருகு + ஒடி – பிருகொடி → பிருகுடி.]*

**பிருங்கவரச்சூரணம்** *piruṅgavara-c-cūraṇam,* பெ. (n.) கரிசலாங் கண்ணி திரிபாலாதி இவ்விரண்டின் பொடிகளைச் சேர்த்துச் செய்யப்படும் ஆயுள்வேத மருந்து; powder prepared with that of eclipse plant as chief ingredient.

**பிருங்கனி** *piruṅgaṉi,* பெ. (n.) நிலப்பனை; black musale.

**பிருங்காவரசத்தைலம்** *piruṅgā-varaša-t-tailam,* பெ. (n.) கரிசலாங்கண்ணி எண்ணெய் (தைலம்); medicated oil prepared with the juice of eclipse plant.

**பிருட்டம்[1]** *piruṭṭam,* பெ. (n.) **1.** பின் பக்கம் (யாழ். அக.); hinder part. **2.** இடுப்பின் பூட்டு (சீவரட். 4); hip-joint. **3.** குண்டி (இ. வ.); buttocks, posteriors. **4.** முதுகு (யாழ். அக.); back. **5.** பரப்பு (யாழ். அக.); surface.

*[பின் → பினம் → பிறம். பிறம் → பிடம் → பிடர் → பிடரி = தலையின் பின்புறம். பிடம் → பிட்டம் = பின்புறம், பின்புறத்தின் கடை அல்லது அடிப்பகுதி (குண்டி). பிட்டம் → பிருட்டம்]*

**த.** பிருட்டம் › Skt. pṛṣṭha.

**பிருட்டம்²** *piruṭṭam,* பெ. (n.) அரைத்த மா (சங். அக.); flour.

*[புள் → புரு → பிரு → பிருக்கு → சிறியது, சிறு துண்டு. பிள் → பிட்டு → சிறியது. பிட்டு → பிட்டம் → பிருட்டம் = நுண்மை யான மா.]*

த. பிருட்டம் › Skt. piṣṭa.

**பிருடை¹** *piruḍai,* பெ. (n.) 1. யாழ் முதலியவற்றின் முறுக்காணி (வின்.); tuning key of a lute string. 2. அடைக்குந் தக்கை (கொ. வ.); cork. 3. சுழலாணி (சங். அக.); screw.

க., தெ. பிரடெ

*[புள் → புரு → புரள் → புரளை → புரடை → பிரடை → பிருடை = யாழ் முறுக்காணி (மு. தா. 242)]*

**பிருடை²** *piruḍai,* பெ. (n.) 1. பொய்ச் செய்தி (கொ. வ.); false rumour, lie. 2. போலி நடிப்பு; that which is hollow, empty show.

க. புருடை; தெ. புருட

*[புள் → புரு → புரள் → புரளை → புரடை → பிரடை → பிருடை = முறுக்காணி, திரித்துக் கூறும் பொய், பொய்யாக இயங்கும் போலி நடிப்பு.]*

**பிருத்திரி** *piruttiri,* பெ. (n.) தண்ணீர் மீட்டான்; water root.

**பிருது** *pirudu,* பெ. (n.) விருது (வின்.); banner, insignia.

க., தெ. பிருதி

*[விருது → பிருது.]*

**பிருந்திகா** *pirundigā,* பெ. (n.) தணக்கு; whirling nut.

**பிருந்தை** *pirundai,* பெ. (n.) நாணற் கரும்பின் சாறு; the juice obtained from reed.

**பிருவு** *piruvu,* பெ. (n.) சினைபடும் பக்குவமுள்ள ஆடு; goat matured to conceive

*[புருவு → பிருவு.]*

**பிரை¹** *pirai,* பெ. (n.) உறைமோர்; fermented butter-milk used for curdling milk, curdling agent. '*பிறைசேர் பாலின்*' (திருவாச. 21, 5.);.

*[(புள்) → புளி = புளித்துப் பொங்குவது. புளி → புளிச்சி = புளிச்சை. (புள்) → (புர) → புரை → பிரை = புளித்தமோர், பாலைப் புளிக்க வைக்கும் மோர். (மு. தா. 63).]*

**பிரை²** *pirai,* பெ. (n.) 1. பாதி; half. '*பிரைக்காற்சின்னி*' (வின்.) 2. பயன்; usefulness, fruitfulness. '*கற்குங் கல்வியின் பிரையுளது*' (கம்பரா. இரணிய. 57.).

*[பிள் → பிரி → பிரை.]*

**பிரை³** *pirai,* பெ. (n.) 1. பந்தலிட்ட இடம்; shed. 2. தொழிற்சாலை; factory (G. Tn. D. I, 410.).

*[புரை → பிரை.]*

**பிரை⁴** *pirai,* பெ. (n.) சுவரின் மாடம் (தென். இந். க்ஷேத். பக். 83.); small niche in a wall.

*[புரை → பிரை.]*

**பிரைக்கபாடம்** *pirai-k-kabāḍam,* பெ. (n.) சிறுகதவு; small door.

*[பிரை + கபாடம்.]*

Skt. kapāṭa > த. கபாடம்.

**பிரைக்கல்** *piraikkal,* பெ. (n.) செம்பாறைக்கல்; red rock.

**பிரைக்காற்சின்னி** *pirai-k-kāṟciṉṉi,* பெ. (n.) அரைக்காற்படி (யாழ். அக.); one eight of a measure.

*[பிரை + கால் + சின்னி. பிள் → பிரி → பிரை = பாதி. பிரைக்கால் = கால் பகுதியில் பாதி, அரைக்கால். சில் → சின் → சின்னி = சிறியது, (சிறிய) முகத்தலளவைக் கருவி.]*

**பிரைக்கூற்று—தல்** *pirai-k-kụ-ūṟṟu-,* 5. செ. குன்றாவி. (v.t.) பிரை குத்து—தல் பார்க்க; see pirai kuttu-.

மறுவ. தோய்ச்சல், உறை ஊத்துதல்.

*[பிரை + கு + ஊற்று—,]*

**பிரைகுத்து—தல்** *pirai-kuttu-,* 5. செ. கு. வி. (v.i.) உறைமோர் குத்துதல்; to curdle milk.

*[பிரை + குத்து—,]*

**பிரைமரம்** *pirai-maram,* பெ. (n.) மரவகை; a tree, the juice of whose leaves curdles milk.

*[பிரை + மரம்.]*

**பிரைமோர்** *piraimōr,* பெ. (n.), பால் தயிராவதற்கு ஊற்றும் மோர்; butter milk used for curdling milk. பிரைகுத்துவதற்குப் பனிகாலத்தில் சற்று மிகுதியாகப் பிரைமோர் ஊற்ற வேண்டும்.

மறுவ. உறைமோர்.

*[புரை → பிரை + மோர்.]*

**பில்கு—தல்** *pilgu-,* 5. செ. கு. வி. (v.i.) 1. சிறுதுவலை வீசுதல்; to drip, as dew. *'நெடுங்கண் பில்கி'* (சீவக. 1256); 2. பொசிதல்; to exude, as honey from flowers. *'பில்குதேனுடை நறுமலர்'* (தேவா. 556, 1.) 3. கொப்பளித்தல்; to gargle, spit. 4. வழிதல்; to flow. *'கணங்களுடற்குருதி பில்கியோட'* (கவர்பு. அந்தகா. 32.).

*[புல் → புள் → பூறு. பூறுதல் = துளைத்தல். பூறு → பீறு. பீறுதல் = துளைத்தல், பிளத்தல். புல்→புள்→பிள்→ பிடு. பிடுதல் = துண்டு துண்டாகப் பிளத்தல். பிடு → பிடுகு → பிடுங்கு. பிடு→பிது→பிதிர் = திவலை (வே.க. 3 101, 112.) பிள் → பிள்கு → பில்கு.]*

**பில்லங்கம்** *pillaṅgam,* பெ. (n.) 1. குரங்கு; monkey. 2. தவளை; frog.

**பில்லங்குத்து—தல்** *pillaṅ-kuttu-,* 4. செ. கு. வி. (v.i.) கண்படலமுரித்தல் (வின்.); to remove film from the eye.

*[பில்லம் + குத்து—,]*

**பில்லங்குழல்** *pillaṅ-guḻal,* பெ. (n.) புல்லாங்குழல் (வின்.) பார்க்க; see *pullāṅ guḻal.*

*[புல்லாங்குழல் → பில்லங்குழல்.]*

**பில்லங்குழி** *pillaṅkuḻi,* பெ. (n.) தஞ்சை மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Tañjāvūr. dt.

*[பில்லம் + குழி.]*

**பில்லணை** *pillaṇai,* பெ. (n.) *பில்லாணி* பார்க்க; see *pillāṇi.*

தெ. பில்லாணி, பில்லாடி.

*[பில்லாணி → பில்லணை.]*

**பில்லநோய்** *pilla nōy,* பெ. (n.) மிகுசளி பித்தம் முதலியவற்றால் கண்ணிமையினுள் ஏற்படும் நோய்; an eye disease caused by phlegmatic and bilious disorders in the system.

*[பில்லம் + நோய்]*

**பில்லபஞ்சம்** *pillapañjam,* பெ. (n.) எலிப்பயறு; kind of gram.

**பில்லம்** *pillam,* பெ. (n.) கண்ணிமைபுருவ முழுமையும் நீர் கட்டித்திரண்டு திகழும் கண்ணோய்; a disease of the eye lid.

**பில்லரிஞ்சான்** *pil-l-ariñjāṉ,* பெ. (n.) ஓரடி வளர்வதும் வெண்ணிறமுள்ளதுமான நன்னீர் மீன்வகை; a fresh water fish, silvery, attaining 1 ft. in length, cirrhina reba.

**பில்லரோகம்** *pillarōgam,* பெ. (n.) *பில்லநோய்* பார்க்க; see *pillanōy.*

*[பில்லம் + ரோகம்.]*

Skt. rōha › த. ரோகம்.

**பில்லாங்குழல்** *pillāṅ guḻal,* பெ. (n.) *புல்லாங்குழல்* (வின்.) பார்க்க; see *pullāṅ guḻal.*

*[புல்லாங்குழல் → பில்லாங்குழல்.]*

**பில்லாச்சிவல்லி** *pillāccivalli,* பெ. (n.) ஆனைப்பிச்சான் (வின்.); a plant.

**பில்லாஞ்சி** *pillāñji,* பெ. (n.) கருப்பு நிறமுள்ள குத்துச் செடி; black honey shrub.

**பில்லாணி** *pillāṇi,* பெ. (n.) கால்விரல்களில் மகளிர் அணியும் மிஞ்சி (இ. வ.); silver ring worn by women on their fourth toes.

மறுவ. பில்லாடி.

தெ. பில்லாணி, பில்லாடி.

*[பில் → பிலம் = துளை. பில் → பில்லணி = துளையுள்ள அணிகலன். பில்லணி → பில்லாணி.]*

**பில்லார்க்குச்சி** *pillār kucci,* பெ. (n.) பில்லு அச்சின் கசடு நீக்க உதவுவது; weavers brush which helps to remove the fault.

*[புல் → பில் → பில்லு = புல்லினாற் செய்யப்பட்டது. பில் → பில்லார் + குச்சி.]*

**பில்லி¹** *pilli,* பெ. (n.), பூனை (அக. நி.); cat.

க., தெ., கொலா., நா. பில்லி;
பர். பிலெய்.

*[பிள்ளை → பில்லி]*

**பில்லி²** *pilli,* பெ. (n.) 1. செய்வினை, சூனியக்கலை (சூனியவித்தை); sorcery, witchcraft, magic. 2. சூனியக்காரர் ஏவும் தீயதேவதை (வின்.); demon in the service of sorcerers. அவனைப்பில்லி அடித்துவிட்டது.

கோத. பிள்ய், புள்ய் (எருமைகளுக்கு துடவர் வைக்கும் செய்வினை, குரும்பர் செய்வினை); துட. பில்ய்; பட. பில்லி.

*[புல் → புர் → புரை = உட்டுளை, உட்டுளைப்பொருள். புல் → புள் → பிள்*

→ பிர் → பிரி → பிரிவு = விலகல். புல் → பில் → பில்லி → வளர்ச்சியை விலகச் செய்வது, கேடு விளைவிப்பது, விளங்காமற்போகச் செய்வது.]

**பில்லிக்காரன்** *pillikkāran,* பெ. (n.) செய்வினை (மாய்மாலம்) செய்பவன்; a sorcerer.

*[பில்லி + காரன்.]*

**பில்லிக்குராயன்** *pillikkurāyan,* பெ. (n.) இலாமிச்சை; cuscus-grass.

*[புல் → பில் → பில்லு + கு + ராயன். அரையன் → ராயன். புல்லுக்குத்தலைவன்]*

**பில்லிசாரிகை** *pillišārigai,* பெ. (n.) நரிகொள்ளை மரம்; a tree.

**பில்லிசூனியம்** *pilliśūniyam,* பெ. (n.) 1. செய்வினை, சூனியக்கலை (சூனியவித்தை), (கடம்ப. பு. இலீலா. 150); witchcraft. 2. *பில்லிப்படை* பார்க்க; see *pilli-p-padai.*

*[பில்லி + சூனியம்.]*

Skt. šūnya› *த.* சூனியம்

**பில்லிசூனியமெடு-த்தல்** *pilli-šūniy medu-,* 4செ.கு.வி. (v.i.) ஒருவன் கெடுதிக்கு வைக்கப்பட்ட சூனியத்தைக் கண்டுபிடித்துச் சிதைத்தல்; to discover and destroy maleficent articles used against a person in witchcraft.

*[பில்லிசூனியம் + எடு-.]*

**பில்லிஞ்சன்** *pilliñjan,* பெ. (n.) 1. ஏழு விரலம் (அங்குலம்) வளர்வதும் பழுப்பு நிறமுள்ளதுமான கடல்மீன் வகை; a sea fish, brownish attaining 7in, in length. 2. சீலா; a sea- fish.

**பில்லிப்படை** *pilli-p-padai,* பெ. (n.) செய்வினைக்கலையில் பயன்படுத்தும் கருப் பொருள்கள்; maleficent articles used in witchcraft.

*[பில்லி + படை.]*

**பில்லிப்பன்னா** *pilli-p-pannā,* பெ. (n.) பதினாறு விரலம் வளர்வதும் சாம்பல் நிறமுள்ளதுமான கடல் மீன்வகை; a sea-fish, greyish, attaining **16** in, in length.

**பில்லிப்பாறை** *pilli-p-pārai,* பெ. (n.) மூன்றடி வளர்வதும் பொன்னிறமுள்ளதுமான மீன்வகை; horse mackerel, golden, attaining 3ft. in length.

**பில்லிபிச்சு** *pillipiccu,* பெ. (n.) காட்டுமரவகை (காடர் வழக்கு); fetid holly.

ம. பில்லிபிச்சு.

**பில்லியடி-த்தல்** *pilli-y-adi-,* 4. செ. கு. வி. (n.) பேய் பிடித்தல்; to be possessed by a demon.

மறுவ. ஆவிபிடித்தல்.

*[பில்லி + அடி-.]*

**பில்லியத்தி** *pilliyatti,* பெ. (n.) *பெருநெருஞ்சி* (மலை.); a *stout stemmed herb.*

**பில்லியெடு-த்தல்** *pilli-y-edu-,* 4 செ.கு.வி. (v.i.) கேடுசூழ்தற்காகப்பாழ் செய்வினை வைத்ததை மந்திர ஆற்றலால் (சக்தியால்)

நீக்குதல்; to discover and remove the magical articles laid in with craft to do harm.

*[பில்லி + எடு–,]*

**பில்லிவெட்டு** *pillivettu,* பெ. (n.) கண்ணோய் வகை; a kind of eye-disease.

**பில்லிவை–த்தல்** *pilli vai-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ஏவலினால் தீங்கு செய்தல். to bewitch one. 2. சூழ்வினை செய்தல் (சூனியம் வைத்தல்); to place magical materials to injure one.

*[பில்லி + வை–,]*

**பில்லு**[1] *pillu,* பெ. (n.) 1. புல் (இ. வ.); grass. 2. நெசவுப்பாவைச் செம்மை செய்யுங் கருவிவகை; weaver's brush.

*[புல் → பில் → பில்லு. புல்லால் செய்யப்பட்டது.]*

**பில்லுதள்ளு–தல்**[1] *pillu tallu-,* 6 செ.குன்றாவி. (v.t.) *பில்லோட்டு–தல்* பார்க்க; see *pillōttu-*

*[பில்(லு) + தள்ளு–,]*

**பில்லுநோவு** *pillu nōvu-,* பெ. (n.) புல் மேய்தலால் ஆடுகளுக்கு வரும் நோய்; disease that acquire due to crazing.

*[ புல் → பில் → பில்(லு) + நோவு–,]*

**பில்லுளி** *pilluli,* பெ. (n.) புல்லுருவி (இ. வ.) பார்க்க; see *pulluruvi.*

*[புல்லுருவி → பில்லுருவி → பில்லுளி.]*

**பில்லூர்** *pillūr-,* பெ. (n.) திருவாரூர் மாவட்டத்திலுள்ள ஊர் ; a village in Tiruvārūr dt.

*[பில் + ஊர். புல் → பில்.]*

**பில்லேற்பவர்** *pillērpavar-,* பெ. (n.) நெசவில் பொரப்பாவுக்குக் கஞ்சி போட்டுத்தரும் சிற்றாள்; servant engaged for applying starch to the warp in weaving.

*[பில் + ஏற்பவர். புல் → பில்.]*

**பில்லை**[1] *pillai,* பெ. (n.) 1. திரண்டுருண்டது; that which is sound, as a patch of sandal paste. 2. வில்லை; a tablet or tabloid. 3. ஆணியின் திருகுவரை; nut of a screw (C.G). 4. ஏவலர் (சேவகர்) முதலியோர் அணியும் வில்லை; badge, as of a peon. 5. சதுர ஓடு (இ. வ.); square title. 6. தலையிலணியும் அணிவகை; a head ornament.

த. பில்லை > U.billa.

*[புல் → புர் → புரி. புரிதல் = வளைதல். புரி = சுருள்.*
*புல் → புள் → பள் → பண்டு*
*→ பண்டி = சக்கரம், வண்டி (வே. க. 3. 94, 98). புல் → பில் → பில்லை = வட்டமானது, உருண்டையானது.]*

**பில்லை**[2] *pillai,* பெ. (n.) மங்கிய மஞ்சள் நிறம்; dull yellow.

*[புல்லை → பில்லை.]*

**பில்லைச்சவான்** *pillai-c-cavān,* பெ. (n.). *பில்லைச் சேவகன்* பார்க்க; see *pillai-c-cēvagan.*

*[பில்லைச்சேவகன் → பில்லைச் சவான்.]*

**பில்லைச்சேவகன்** *pillai-c-cēvagaṉ,* பெ. (n.) வில்லையணிந்த சேவகன்; peon with a badge, liveried peon.

*[பில்லை + சேவகன்.]*

Skt. Sēvaka > த.சேவகன்

**பில்லைதட்டு—தல்** *pillai taṭṭu-,* 5 செ. கு. வி. (v.i.) பொதி குளிகை செய்தல்; to make tablets.

*[பில்லை + தட்டு—,]*

**பில்லைமருது** *pillai-marudu,* பெ. (n.) பெருமரவகை; paniculate winged myrobalan.

ம. புல்லமருது.

*[வெள்ளைமருது → பிள்ளைமருது பில்லைமருது.]*

**பில்லைமிளகி** *pillai-miḷagi,* பெ. (n.), நெல்வகை (விவசா. 1); a kind of paddy maturing in six months.

*[புல்லை → பில்லை + மிளகி.]*

**பில்லோட்டு—தல்** *pil-l-ōṭṭu-,* 12 செ.குன்றாவி. (v.t.), கஞ்சியிட்ட இழை மென்மையாக விருத்தற்பொருட்டு எண்ணெய் போட்டுச் சீர் செய்தல்; to make soft by applying oil to starch thread.

*[பில்(லு) + ஓட்டு. ஓடு(த.வி.) —ஓட்டு (பி.வி.).]*

**பில—த்தல்** *pila-,* 11. செ. கு. வி. (v.i.), வலத்தல் (பலத்தல்); to strengthen, justify confirm. '*உமக்கது பிலப்பதன்றே*' (உபதேசகா. சிவத்துரோ. 98.).

*[வலு → பலு → பில—,]*

**பிலக்கச்செய்—தல்** *pilakka-c-cey-,* 1 செ. குன்றாவி. (v.t.) 1. காற்றுப் புகாதபடி கெட்டியாய் இறுகச் செய்தல்; to solidify to make hard. 2. காற்றுப் புகாதபடி சீலை மண் செய்தல்; to lute with earth and cloth.

*[பில → பிலக்க + செய்—,]*

**பிலகரி** *pilakari,* பெ. (n.) பண் (இராக.) வகை; a musical mode.

தெ. பிலகரி.

**பிலகாரி** *pilakāri,* பெ. (n.) பெருச்சாளி (சங்.அக.); bandicoot.

*[பிலம் + காரி. பிலம் = வளை, பிலகாரி வளையுள் இருப்பது, வளையையுடையது.]*

த. பிலகாரி > Skt. bila-kārin.

**பிலச்சம்** *pilaccam,* பெ. (n.) கருஞ்சீரகம்; black cumin seed.

**பிலசம்**[1] *pilašam,* பெ. (n.) 1. *கருஞ்சீரகம்* (சங். அக.); *black cumin.* 2. பெருஞ்சீரகம்; anise.

**பிலசம்**[2] *pilašam,* பெ. (n.) பற்காயம்; injury caused by bite.

**பிலத்துவாரம்** *pilattuvāram,* பெ. (n.) 1. நீண்டுசெல்லும் சுருங்கை, கீழுலகம் செல்லும் வழி(வின்); passage through the earth to the nether region. 2. நிலவறை (வின்.); mine, pit, abyss.

*[பிலம் + துவாரம்.]*

Skt. dvāra > த. துவாரம்.

**பிலபிலெனல்** *pila-pilenal,* பெ. (n.) **1.** இலை முதலியன உதிர்தற் குறிப்பு; onom. expr. signifying the rustling sound of dry leaves while falling down. **2.** மக்கள் கூட்டத்தின் ஒலிக்குறிப்பு; roaring of a multitude.

*[ பிலபில + எனல். ]*

**பிலம்** *pilam,* பெ. (n.) **1.** கீழுலகம் (பாதாளம்); nether region. 'தரணி யெல்லாம் பிலமுகத்தே புகப்பாய்ந்து' (திருவாச. 12, 17) **2.** அளை (குகை) (பிங்.); cave, cavern. **3.** கீழறை (பிங்.); subterranean room or passage. 'உடைய பிலந்தலைப்பட்டது போலாதே' (நாலடி, 160). **4.** எலி முதலியவற்றின் வளை; hole, as of a rat or snake.

*[ புள் → பிள் → விடு → விடர் = குகை. புள் → புழை → புடை → புடங்கு. புல் → (பில்) → பிலம் = நிலக்குகை (மு.தா. 274) .]*

**த.** பிலம் > Skt. bila.

**பிலம்பி** *pilambi,* பெ. (n.) புளிச்சைக்காய் (சங்.அக.); bilimbi-tree.

**பிலவசியம்** *pilavaśiyam,* பெ. (n.) பெருங்கோணம் அல்லது பெருகோணுக் கிழங்கு; root taber.

**பிலவயம்** *pilavayam,* பெ. (n.) மரவள்ளிக் கிழங்கு; root taber.

*[ பிலம் → பிலவயம் = நிலத்தடியில் வளர்வது.]*

**பிலவு** *pilavu,* பெ. (n.) பலா (கொ.வ.); jack tree.

*[ பலா → பிலா → பிலவு.]*

**பிலா** *pilā,* பெ. (n.) பலா (கொ.வ.); jack-tree.

*[ பலா → பிலா. புல் → பல் → பலா = பரும் பழமரம். ]*

**பிலாக்கணம்** *pilākkaṇam,* பெ. (n.) இறந்தவர் பொருட்டு மகளிர் அழும் புலம்பற் பாடல்; song of lamentation by women in a house of mourning. பிலாக்கணம் பாடாதே (உ.வ.).

**மறுவ.** ஒப்பாரி.

**பிலாக்காய்க்கொத்துமணி** *pilākkāy-k-kottu-maṇi,* பெ. (n.) பரதவப்பெண்டிர் பூணும் கழுத்தணிவகை; a kind of necklace worn by Parava women. (பரவர் வழக்கு).

*[ பிலா + காய் + கொத்து + மணி.]*



**பிலாக்கு** *pilākku,* பெ. (n.) பில்லாக்கு போன்ற மூக்கில் தொங்கவிடும் ஓரணி; a kind of nose-pendant.

**பிலாக்கொட்டைத்தயிலம்** *pilākkoṭṭaitta yilam,* பெ. (n.) பலாக்கொட்டை எண்ணெய் (தயிலம்); oil extracted from the seeds of jack fruit.

*[ பலா → பிலா + கொட்டை + தயிலம்]*

*Skt. taila >* **த.** தயிலம்.

**பிலாச்சை** *pilāccai,* பெ. (n.) **1.** மீன் வகை; puff-fish **2.** ஒன்பது விரலம் வளர்வதும் பழுப்பு நிறமுள்ளதுமான கடற்றவளை வகை (சங்.அக.); sea frog, brownish attaining 9 in. in length.

**பிலாச்சை மீன்** *pilāccai-mīṉ,* பெ. (n.) நச்சு மீன்; poisonous fish.

*[ பிலாச்சை + மீன்.]*

**பிலாத்தி** *pilātti,* பெ. (n.) மரவகை; a tree.

**பிலாளகம்** *pilāḷagam,* பெ. (n.) புழுகுச்சட்டம் (தைலவ. தைல. 53); ventricle or sac of the civet cat in which the perfume is generated.

**பிலாறு** *pilāṟu,* பெ. (n.) நீர் நிரம்பிய குளம் முதலியன (வின்.); a full reservoir.

*[ பெருகு + ஆறு – பெருகாறு → பிராறு → பிலாறு .]*

**பிலி**[1] *pili,* பெ. (n.) பூனைக் காஞ்சொறி (தைலவ. தைல.103); a kind of nettle.

*[ பில்லி = பூனை. பில்லி → பிலி. ]*

**பிலி**[2] *pili,* பெ. (n.) திப்பிலி; long-pepper.

*[ திப்பிலி → பிலி. ]*

**பிலிக்குடியன்** *pilikkuḍiyaṉ,* பெ. (n.) எலுமிச்சை; lime.

**பிலிஞ்சி**[1] *piliñji,* பெ. (n.) *பிலிம்பி* (வின்.) பார்க்க; see *pilimbi.*

**பிலிஞ்சி**[2] *piliñji,* பெ. (n.) மரவகை; a tree.

**பிலிபிலியெனல்** *pili-pili-eṉal,* பெ. (n.) **1.** ஒலியோடு கூட்டங் கூடுதற் குறிப்பு; onom.expr. signifying, the noises of a gathering crowd. **2.** வாயால் அடுக்குதற் குறிப்பு; blustering.

*[ பிலிபிலி + எனல். ]*

**பிலிம்பி** *pilimbi,* பெ. (n.) *புளிச்சைக்காய்* (வின்.) பார்க்க; *puḷccaikkāy.*

**பிலிமூலம்** *pilimūlam,* பெ. (n.) திப்பிலி மூலம்; root of long pepper.

*[ பிலி + மூலம். ]*

**பிலிற்று–தல்** *piliṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) **1.** தூவுதல் (பிங்.); to drizzle, drop, sprinkle. *'நன்னீர் பிலிற்றும் வாய்க் குளிர் கொள் சாந்தாற்றி'* (சீவக. 1673.). **2.** வெளிவிடுதல்; to let out, as milk from the udder, to spill. *'செருத்த றீம்பால் பிலிற்ற'* (அகநா. 14.) **3.** கொப்பளித்தல் (வின்.); to gargle.

*[ புல் → பில் → பிலிற்று. பிலிற்றுதல் = சிந்துதல், பீச்சுதல் (மு.தா.262.). ]*

**பிலீக்கச்சோகை** *pilīkka-c-cōgai,* பெ. (n.) மண்ணீரல் வீக்கத்தினாலேற்படுஞ் சோகை; anaemia caused by the enlargement of the spleen.

*[ பிலீகம்+ சோகை.]*

**பிலீகத்தாபம்** *pilīga-t-tābam,* பெ. (n.) மண்ணீரலில் ஏற்படும் வீக்கம்; inflammation of spleen.

*[ பிலீகம் + தாபம்.]*

**பிலீகநாளம்** *piliga nalam,* பெ. (n.) மண்ணீரல் நாடி; spleenic vein.

*[பிலீகம் + நாளம்.]*

**பிலீகம்** *piligam,* பெ. (n.) மண்ணீரல் (இங்.வை.42); spleen.

*[புல் → (பில்) → பிலம் = நிலக்குகை (மு.தா.274) புல் → பில் → பிலிகம் → பிலீகம்.]*

*த. பிலீகம்>* Skt.plihan.

**பிலுக்கன்** *pilukkan,* பெ. (n.) பகட்டுக்காரன்; fop, coxcomb, dandy.

*[பிலுக்கு → பிலுக்கன்.]*

**பிலுக்கி** *pilukki,* பெ. (n.) பகட்டுக்காரி (திருப்பு. 623.); a showy woman, coquette.

**மறுவ.** பசப்புக்காரி.

*[பிலுக்கன் (ஆ.பா.) - பிலுக்கி (பெ.பா.) 'இ' பெ.பா.ஈறு.]*

**பிலுக்கு** *pilukku,* பெ. (n.) பகட்டு; foppishness, ostentation, coquetry. *'பிலுக்குஞ்சுகிப்பும்'* (பணவிடு. 165.).

**தெ.** பெலுகு.

*[புல் → பொல் → பொலி. பொலிதல் = செழித்தல். புல் → பில் → பிலுக்கு = பொலிவினை வெளிக்காட்டும் தன்மை. தளுக்குதல் = ஒளிவிடுதல், மின்னுதல், துலங்குதல். தளுக்கு = மினுக்கு. தளுக்கு → தலுக்கு. 'தலுக்கு பிலுக்கு' மரபிணைமொழி.]*

**பிலுக்கு-தல்** *pilukku-,* 5. செ.கு.வி. (v.t.) பகட்டுதல்; to dress ostentationly; and show oneself off to act the dandy strat. *'பிலுக்குஞ் சம்பளநாதர்'* (திருப்பு. 22.).

**தெ.** பெல்லின்சு.

*[புல் → பில் → பிலுக்கு-,]*

**பிலுகம்** *pilugam,* பெ. (n.) செங்குன்றி மரம்; a twiner abrus precatorius with red flowers and red seeds.

**பிலுபிலுவெனல்** *pilu-pilu-v-enal,* பெ. (n.) 1. *பிலபிலெனல்* பார்க்க; see *pilapilenal* 2. *பிலிபிலியெனல்* பார்க்க; see *pilipiliyenal.*

*[பிலுபிலு + எனல்.]*

**பிலுனி** *piluni,* பெ. (n.) பெருங்குரும்பை; bowstring hemp.

**பிவாயம்** *pivāyam,* பெ. (n.) சோறு சமைத்த மிடாக்களுக்கு இடும் திருநீறு (புண்டரம்) (தக்கயாகப். 750. உரை.); mark of sacred ashes put on a cooking pot.

**பிழக்கடை** *pilakkadai,* பெ. (n.) *புழக்கடை* பார்க்க; see *pulaikkadai.*

**மறுவ.** புறக்கடை, கொல்லைப்புறம், புறவாசல், பொரவடை.

*[புழைக்கடை → பிழக்கடை]*

**பிழக்கடைநடை** *pilakkadai-nadai,* பெ. (n.) வீட்டின் பின்புறத்துள்ள நடைவழி; gangway in the back part of the house.

*[புழைக்கடை → பிழக்கடை + நடை.]*

**பிழக்கு** *pilakku,* பெ. (n.) பிழை; wrong, injustice. *'பிழக்குடைய விராவணனை'* (திவ். பெரியாழ். 4,8,5.) *'வழக்கே யெனிற் பிழக்கே'* (தேவா. 1154, 4.).

*[ பிழை → பிழைக்கு → பிழக்கு. ]*

**பிழம்பு¹** *pilambu,* பெ. (n.) 1. திரட்சி; aggregate, mass; column or pillar, as of fire. *'கடுந்தழற் பிழம்பன்ன'* (திருவாச 39–7.) உணர்ச்சிப் பிழம்பானாள் (உ.வ.) 2. வடிவு; form. *'உண்மை யுணர்த்தி பிழம்புணர்த்தப் படாதன'* (இறை. 1 பக். 15) 3. உடல்; body. *'பிழம்பு நனியுலர்த்தல்'* (தொல். பொ. 75, உரை.).

மறுவ. உண்டை, குவவு, கொம்மை, பந்தம், புஞ்சம், கேடு, முண்டம், கணை, வட்டு, முத்தை, துறுமல், சோகம், சேர்வு, மாழை, தொழுதி, பூகம், பிண்டம்.

*[ புல் → பொல்லு = தடி. புள் → (பிள்) பிண்டு → பிண்டம் = திரட்சி. புள் → (பிள்) → பிழ → பிழம்பு = திரண்டது, திரண்ட வடிவம், வடிவம் பெற்ற உடல். ]*

**பிழம்பு²** *pilambu,* பெ. (n.) கொடுமை; wicked ness. *'பிழம்பு பேசும் பிட்டர்'* (திருவிசை. திருமாளி 4, 2.).

*[ பிழை → பிழைப்பு → பிழம்பு. ]*

**பிழம்புநனியுலர்த்தல்** *pilambu-nani-y-ularttal,* பெ. (n.) முறைமையின் (நியமத்தின்) உறுப்பாகிய உடலைவருத்துதல் (காயக் கிலேசம்) (தொல். பொ. 75, உரை.); (yōga) mortification of the body,physical austerities forming part of niyamam.

*[ பிழம்பு + நனி + உலர்த்தல். உலர்த்தல் = (உடலை) வாட்டி வதக்குதல். ]*

**பிழம்புநனிவெறுத்தல்** *pilambu-nani veruttal,* பெ. (n.) *பிழம்பு நனியுலர்த்தல்* (சிலப். 14, 11, உரை.) பார்க்க; see *pilambu naniyularttal.*

*[ பிழம்பு + நனி + வெறுத்தல். ]*

**பிழற்பெய்மண்டை** *pilar-pey-mandai,* பெ. (n.) நீரூற்றும் ஈமச்சட்டி; earthen basin for sprinkling water, used in cremation. *'அழுற்பெய் குழிசியும் பிழற்பெய் மண்டையும்'* (மணிமே. 6,92.).

மறுவ. நீர்ச்சட்டி.

*[பழல் → பிழல் + பெய் + மண்டை. புள் → புழை → பூழை = துளை, கணவாய். புள் → புழு → புழல். பிள் → பிள் → பெய். முள் → மொள் → மொண்டை → மொந்தை = கள் முகக்குங்கலம். மொண்டை → மண்டை = நீர் முகக்குங்கலம்.]*

**பிழா** *pilā,* பெ. (n.) 1. தட்டுப் பிழா; round wicker basket. *'மலர்வாய்ப் பிழாவிற் புலரவாற்றி'* (பெரும்பாண். 276.) 2. இறை கூடை; baling basket. *'ஓங்கு நீர்ப் பிழாவும்'* (சிலப். 10, 111.) 3. கொள்கலம் (வின்.); large vessel receptacle.

*[ பிள் → பிளா → பிழா = வாயகன்ற ஓலைக் கொட்டான். (மு.தா.261).]*

**பிழார்** *pilār,* பெ. (n.) *பிழா* பார்க்க (சூடா.); see *pilā,.*

*[ பிழா → பிழார்.]*

**பிழி¹–தல்** *pili-,* 4. செ.குன்றாவி. (v.t.) 1. சொரிதல்; to shed, pour, as rain. *'நெடுங்கார் கிடந்து படும்புனல் பிழியும்'* (கல்லா. 19, 23.) 2. கையால் இறுக்கிச் சாறு

வெளியேறச் செய்தல்; to squeeze,express, press out with the hands. *'பிழிந்து கொள் வனைய பெண்மைப் பெய்வளைத் தோளி'* **(சீவக. 1496.).**

**ம.** பிழியுக; **க.** பிழி, பிளி, கிளி, கிழி

**தெ.** பிடுசு; **து.** பிண்டுனி (திருகுதல், முறுக்குதல்), புண்டுனி (ஈரமான ஆடையைப் பிழிதல், பழம் முதலியற்றின் சாற்றைப் பிழிதல்; **கோத.** இண்ட் (ஆடையைப்பிழிதல்); **குட.** புண்ட்; **கொலா.** பீண்ட், பிண்ட்; **நா.** பீண்ட் (பால்கறத்தல்); **கட.** பீச் (பால்கறத்தல்); **கூய்.** பிரிப; **குவி.** பீசலி (பால்கறத்தல்); **பிரா.** பிரிஞ்சிங்; **பட.** இண்டு (ஆடையைப் பிழிதல்)

*[ புள் → பிள் → பிய் → பெய் → பெயர். பிள் → பிழி (மு.தா.262, 263 ).]*

**பிழி²—தல்** *pil̤i-,* **3.** செ.கு.வி. (v.i.) வடிதல் (வின்.); to drip, as oil from hair; to exude, as juice from fruits.

**ம.** பிழியுக; **க.** பிழி; **தெ.** பிடுட்சு.

*[ புள் → பிள் → பிய் → பெய் → பெயல். பிள் → பிழி (மு.தா.262, 263 ).]*

**பிழி³** *pil̤i,* பெ. (n.) கள் (திவா.); toddy, fermented liquor.

**மறுவ.** அரி, ஈழம், நறை, தெளிவு, தேறல், பிரசம்.

*[ புள் → புளி → புளித்துப் பொங்குவது. (புள்) → (புர) → புரை → பிரை = புளித்த மோர், பாலைப் புளிக்கவைக்கும் மோர் (மு.தா.63) புளி → பிளி → பிழி = புளிக்கவைத்த கள். ஒ.நோ. பொங்கு → பொங்கல் = கள். முள் → முண் → முண்டு → முண்டகம் = கள்.]*

**பிழிசாறு** *pil̤išāṟu,* பெ. (n.) பழம் முதலியவற்றினின்று பிழிந்தெடுத்த சாறு; squash.

*[பிழி + சாறு .]*

**பிழிஞன்** *pil̤iñaṉ-,* பெ. (n.) கள் விற்போன் (நாமதீப. 166.); toddy seller.

*[ பிழி → பிழிஞன். ]*

**பிழிந்தபூ** *pil̤inda-pū,* பெ. (n.) தேங்காயைத் திருகி பாலெடுத்தபின் எஞ்சி இருக்கும் சக்கை, தேங்காய்ப்பூச் சக்கை (யாழ்ப்); residuum of the cocoanut kernel after the milk has been expressed dist. fr. ūṟṟā-p-pū.

*[ பிழி → பிழிந்த + பூ. தேங்காயைத் திருகிய நிலையில் அது பூப்போல் காணப்படுவதால் பூ எனப்பட்டது. அதனின்று பாலெடுத்த பின்னுள்ளதைக் குறிப்பிடுவதால் பிழிந்த என்ற பெயரெச்சம் சேர்க்கப்பட்டது.]*

**பிழிமருந்து** *pil̤i marundu,* பெ. (n.) மூக்கிலிடும் மருந்துச் சாறு; juice dropped into the nostril.

*[ பிழி + மருந்து.]*

**பிழியர்** *pil̤iyar,* பெ. (n.) கள்விற்போர் (சூடா.); toddy sellers.

*[ பிழி + அர். ப.பா.ஈறு. ]*

**பிழியல்¹** *pil̤iyal,* பெ. (n.) பிழி பார்க்க; see, *pil̤i.* 'பிழியலு மிறுக' நீக்கி (சீவக. 1237.).

*[ பிள் → பிழி → பிழியல் (மு.தா. 263). ]*

**பிழியல்²** *piḻiyal,* பெ. (n.) தேன்; honey.

**மறுவ.** கள், சாறு, தேறல், பிரசம்.

*[ பிழி → பிழியல். 'தல்' தொ.பெ.ஈறு. ]*

**பிழிவு** *piḻivu,* பெ. (n.) கூந்தற் பனைத் தெளிவு; toddy extracted from talipot.

**மறுவ.** தெளிவு.

*[ பிழி → பிழிவு ]*

**பிழுக்கை** *piḻukkai,* பெ. (n.) **1.** ஆடு முதலியவற்றின் மலம்; dung of sheep, goats, rats, etc; *'பிழுக்கை வாரியும் பால் கொள்வர்' (தேவா. 1110,1)* **2.** ஒன்றுக்கும் உதவாதவ–ன்–ள் (இ.வ.); a worthless fellow. **3.** வேலைக்காரன்–காரி (குற்றேவலர்குற்றே, வல்புரிபவன்) (கொ.வ.); menial, servant. *"பிழுக்கை வேலை செய்வதற்கா இங்கு வந்தேன்."*

**ம.** பிழுக்க (எலி, பாம்பு ஆகியவற்றின் மலம்); **க.** பிழ்கெ, பிக்கெ (ஆடு, மான், எலி போன்றவற்றின் மலம்); **தெ.** பிடிக, பிடுக (எரிப்பதற்காகப் பயன்படுத்தும் வறட்டி); **பட.** இக்கெ.

*[ பிள் → பிற → பிறப்பு. (புல்) → (பில்) → பேல். (புள்) → பில் → (பிய்) → பீ. புள் → புழுக்கை → பிழுக்கை (மு.தா. 262) பிழுக்கையின் இழிதகவு ஒன்றுக்கும் உதவாதனுக்கும் வேலைக்காரனுக்கும் பொருத்தப்பட்டது. ]*

**பிழுக்கைமாணி** *piḻukkai-māṇi,* பெ. (n.) **1.** இளைஞன் (சிலப். 23, 88. அரும்.); a young piramacāri **2.** சிறுபிள்ளை (சிலப். 23, 88. அரும்.); small boy.

**மறுவ.** விடலை.

*[ பிழுக்கை + மாணி. முள் → மள் → மழ = இளமை. மள் → மண் → மணி = சிறியது. மணி → மாணி = குறள் வடிவம், சிறுவன். ]*

**பிழை¹–த்தல்** *piḻai-,* 4. செ.கு.வி. (v.i.) **1.** குற்றஞ் செய்தல்; to do wrong. *'அன்பிழைத்த மனத்தரசர்க்குநீ யென் பிழைத்தனை'* (கம்பரா.நகர்நீ.13). **2.** நடக்காது போதல்; to fail. *'பிழையா விளையுணா டாயிற்று'* (சிலப். 30, 1 95.). **4.** தவறிப் போதல்; to be missing, as a child; to be lost, as an article, *'பிழைத்த பிடியைக் காணாது'* (தேவா. 1026, 4.). **5.** உய்தல்; to be emancipated from sins and births; to obtain salvation. *'உறைதலிந்தத் தரணி யெல்லாங்கண்டு பிழைத்திடத்தான்'* (சிவரக, சிவதன்மா. 30.) **6.** துன்பத்தினின்று தப்புதல்; to escape, as from an evil or a danger. *'பிழைத்தொரீஇக் கூற்றங் குதித்துய்ந்தார்'* (நாலடி, 6.). **7.** உயிர் வாழ்தல்; to live, to survive. *'நின்பின்னே தொடர்ந்தேன் பிழையேன்'* (பிரபோத. 30, 19.). **8.** வாழ்க்கை நடத்துதல்; to get on in, life, subsist. எத்தனை நாள் இப்படிக்கடன் வாங்கி பிழைக்க முடியும் (உ.வ.).

**ம.** பிழெக்க.

*[ புள் → பிள். பிள்ளுதல் = துண்டு படுதல், மனம் வேறுபடுதல். பிள் → (பிழ்) → பிழை. ]*

**பிழை²–த்தல்** *piḻai-,* 4. செ.குன்றா.வி. (v.t.) **1.** நீங்குதல்; to stop, cease. *'பெண்கள்பால் வைத்த நேயம் பிழைப்பரோ'* (கம்பரா. நாட். 10) **2.** இலக்குத் தவறுதல்; to miss, as an arrow *'யானை பிழைத்த வேல்'* (குறள், 772).

*[ பிள் → (பிழ்) → பிழை .]*

**பிழை³–த்தல்** *pilai-*, 4செ.கு.வி. (v.i.) நோயினின்று விடுபடுதல்; to recover from disease.

*[ பிள் → (பிழ்) → பிழை. ]*

**பிழை⁴** *pilai-*, பெ. (n.) 1. குற்றம்; misdemeanour, crime. *'தனபிழை பின்னூறிரங்கி விடும்'* (குறள், 535.) 2. குறைவு; defect, want. *'ஓர்துணையிலாத பிழைநோக்கி'* (கம்பரா. உருக்காட். 112.) 3. தவறு; mistake, error, inaccuracy. *'எழுத்துப் பிழை, சொற்பிழை'.*

ம. பிழ; கொலா. பிர்ச்.

*[ புள் → பிள் → பிழ் → பிழை. ]*

**பிழைக்கை** *pilaikkai*, பெ. (n.) உயிர் வாழ்க்கை; living.

*[ பிழை → பிழைக்கை. 'கை' தொ.பெ.ஈறு. ]*

**பிழைகாண்(ணு)–தல்** *pilaikāṇ(ṇu)*, 6 செ. குன்றாவி. (v.t.) தவற்றைக்காணுதல்; to find fault. பிழை காணும் பார்வையிலேயே சிலர் செயற்பாடுகள் இருக்கின்றன (உ.வ.).

*[ பிழை + காண்க.]*

**பிழைகாயம்** *pilai-kāyam*, பெ. (n.) இறப்பை விளைக்காத படுபுண் (வின்.); wound that is not fatal.

*[பிழை + காயம்]*

**பிழைகேடு** *pilai-kēḍu*, பெ. (n.) தவறு; mistake, *'பிள்ளைகால் வந்த பிழைகேடு'* (சித்திரகுப்த.79.)

*[பிழை + கேடு. கெடு → கேடு]*

**பிழைசெய்–தல்** *pilai-šey-*, 1 செ.கு.வி. (v.i.) தவறு செய்தல்; to do mistake.

*[பிழை + செய்–,]*

**பிழைதிருத்தம்** *pilai-tiruttam*, பெ. (n.) பிழையும் அதன் திருத்தமும் அடங்கிய பட்டியல்; list of errata et corrigenda.

*[பிழை + திருத்தம்]*

**பிழைப்பி–த்தல்** *pilaippi-*, 4 செ.குன்றாவி. (v.t) உயிர் பிழைக்கச் செய்தல்; to restore life.

ம. பிழெப்பிக்க

*[பிழை → பிழைப்பி–, 'பி' பி.வி.ஈறு]*

**பிழைப்பிள்ளை** *pilai-p-pillai*, பெ. (n.) கள்ளவுறவிற்பிறந்த பிள்ளை; illegitimate child.

*[பிழை + பிள்ளை]*

**பிழைப்பு¹** *pilappu*, பெ. (n.) 1. வாழ்க்கை; (wretched) life, subsistence, வெட்கம்கெட்ட பிழைப்பு என்று அலுத்துக் கொண்டார் (உ.வ.) 2. வாழ்க்கையின் அடிப்படைத் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ளத் தேவையானவற்றை ஈட்டுதல்; livilihood, existence, பிழைப்புத்தேடி நகரத்திற்கு வருவோர் எண்ணிக்கை மிகுதி (உ.வ.)

*[பிழை → பிழைப்பு]*

**பிழைப்பு²** *pilappu*, பெ. (n.) 1. குற்றம்; mistake,error, failure. 2. தப்பியுய்கை (வின்.); escape 3. உயிர்வாழ்வு; life *'சிரிப்பிப்பன் சீறும் பிழைப்பை'* (திருவாச.6,49.) 4. கருச்சிதைவு (வின்.); miscarriage, abortion.

*[பிழை → பிழைப்பு. 'பு' பெயராக்க ஈறு]*

**பிழைப்புக்காட்டு–தல்** *pil̲aippu-k-kāṭṭu-*, 6 செ.கு.வி. (v.i.) வாழ்க்கைக்கு வழி காண்பித்தல் (கொ.வ.); to provide means of subsistence.

*[பிழைப்பு + காட்டு–]*

**பிழைப்புத்தழைப்பு** *pil̲aippu-t-tal̲aippu*, பெ. (n.) உயிர்வாழ்மூலம்(வின்.); means of livelihood.

*[பிழைப்பு + தழைப்பு]*

**பிழைப்பூட்டு–தல்** *pil̲aippūṭṭu-*, 6. செ. குன்றாவி. (v.t.) 1. உயிர்ப்பித்தல்; to reanimate, resuscitate, restore to life. 2. காப்பாற்றுதல்; to support, sustain, maintain.

*[பிழைப்பு + ஊட்டு–, உண் - ஊட்டு]*

**பிழைபடு–தல்** *pil̲aipaḍu-*, 20 செ.கு.வி. (v.i.) தவறு செய்தல்; to do mistake.

*[பிழை + படு–,]*

**பிழைபாடு** *pil̲ai-pāḍu*, பெ. (n.) தவறுபடுகை; error, mistake '*பெருக நூலிற் பிழைபாடிலனே*' (நன்.42.)

*[பிழை + பாடு. படு → பாடு. 'பாடு' சொ.ஆ.ஈறு]*

**பிழைபார்[1]–த்தல்** *pil̲ai-pār-*, 4. செ.குன்றாவி. (v.t.) தவறுகளைத் திருத்துதல் (கொ.வ.); to correct errors;

*[பிழை + பார்–,]*

**பிழைபார்[2]–த்தல்** *pil̲ai-pār-*, 4 செ.கு.வி. (v.i.) *பிழைபிடி–த்தல்* (கொ.வ.) பார்க்க; see *pil̲ai-piḍi-*,

*[பிழை + பார்–,]*

**பிழைபிடி–த்தல்** *pil̲ai-piḍi-*, 4. செ.கு.வி. (v.i.) தவறு கண்டுபிடித்தல் (வின்.); to find fault.

*[பிழை → பிடி–, பிண்டி → பிடி]*

**பிழைமணம்** *pil̲ai-maṇam*, பெ. (n.) ஒழுங்கற்ற திருமணம் அல்லது சேர்க்கை; illegal marriage or union, '*பெறுக நன்மணம் விடுபிழை மணமெனவே*' (சிலப்.24, பாட்டு மடை.பக்.518.) '*பழவினை பயத்தாற் பிழைமண மெய்திய*' (மணிமே.5,35.)

*[பிழை + மணம். முள் → (மன்) → மண → மணம். மணத்தல் = கலத்தல்,கூடுதல்]*

**பிழைமொழி** *pil̲ai-mol̲i*, பெ. (n.) குற்றமுள்ள சொல்; wrong, faulty word. '*பிழைமொழி செப்பினை*' (சிலப்.11,177.)

*[பிழை + மொழி]*

**பிழைமோசம்** *pil̲ai-mōšam*, பெ. (n.) இக்கட்டு, இடையூறு; disaster. பேச்சுத் 'தள்ளிப்போனதினால் பிழைமோசம் வந்ததுவே.' (கோவ.க.91)

*[பிழை + மோசம்]*

Skt. mōṣa > த. மோசம்.

**பிழையன்** *pil̲aiyan̲*, பெ. (n.) தவறுள்ளது; that which has a flaw.

*[பிழை → பிழையன். 'ன்' உடையானைக் குறித்துவந்து ஈறு]*

**பிழையாநன்மொழி** *pilaiyā nanmoli,* பெ. (n.) நிறைவேற்றத் தவறலாகாத நல்லசொல்; promising word. 'பிழையாநன்மொழி தேறிய இவட்கே.' (நற். 10.9).

*[பிழை + ஆ + நல் + மொழி 'ஆ' எ.ம. இடைநிலை]*

**பிள்(ளு)[1]–தல்** *pil(lu)-,* 6. செ.கு.வி. (v.i.) 1. பிளவுண்டாதல்; to burst, open; to be rent or cut. 2. துண்டுபடுதல்; to be broken to pieces. *'அப்பளம் பிண்டுபோயிற்று'* 3. மனம் வேறுபடுதல்; to be at variance; to disagree. *'இருவர்க்கும் பிட்டுக்கொண்டது'.*

*[புள் → பொள் → பொளி. பொளிதல் = வெட்டுதல், பிளத்தல். புள் → பிள் → பிடு. பிடுதல் = கையாற் பிளத்தல். புள் → பிள்(மு.தா.259) பிள்ளுதல் = பிளத்தல், பிளத்தலால் துண்டுபடுதல், கருத்து வேறுபாடு காரணமாக மனம் வேறு படுதல்]*

**பிள்(ளு)[2]–தல்** *pil(lu)-,* 6. செ.கு.வி. (v.i.) 1. விள்ளுதல், பிளவுறுதல் ; to cleave asunder, divide. *'அன்னை யடரும் பிட்டுப் பிட்டுண்டாய்'* (குமர. பிர. மதுரைக் கலம். 1.) 2. நொறுக்குதல்; to crush. *'முடியொரு பஃதவையுடனே பிட்டன்'* (தேவா. 883, 8.);

*[புள் → பிள்]*

**பிள்[2]** *pil,* பெ. (n.) 1. குழந்தை; child, infant. 2. பிள்ளைமை யழகு; tender beauty of a child. *'தன் பிள்ளழியாமே எதிரிகளை முடிக்கும்படி'* (திருவிருத். 14, வ்யா. பக். 94.)

*[புள் → பிள் → பிற → பிறப்பு. புள் → பிள் → பீள் = இளங்கதிர், இளமை (மு. தா.39) புள் → புரு = குழந்தை. புள் → பிள் = பிள்ளை, பிள்ளைமையழகு. (மு.தா. 40, 41)]*

**பிள்ளாங்குழல்** *pillān gulal,* பெ. (n.) *புல்லாங் குழல்* பார்க்க; see *pullān gulal.*

*[புல்லாங்குழல் → புள்ளாங்குழல் → பிள்ளாங்குழல்]*

**பிள்ளாண்டான்** *pillāṇḍān,* பெ. (n.) பிள்ளையாண்டான் (இ.வ.) பார்க்க; see pillaiyāṇḍān, திருமணத்திற்கு அந்தப் பிள்ளாண்டான் ஒத்துக்கொள்ள வேண்டும்(உ.வ.)

*[பிள்ளையாண்டான் → பிள்ளாண்டான்]*

**பிள்ளுவம்** *pilluvam,* பெ. (n.) யானை (அக. நி.); elephant.

**பிள்ளை[1]** *pillai,* பெ. (n.). 1. குழந்தை; child, infant, offspring. *'பிள்ளையைத் தாயலறக் கோடலான்'* (நாலடி, 20.). 2. மகன்; son. *'எற்றுக்கென் பிள்ளையைப் போக்கினேன்'* (திவ். பெரியாழ். 3, 2, 2.) 3. இளைஞன்; youth, lad, boy. *'தன்னேராயிரம் பிள்ளைகளொடு தளர் நடையிட்டு வருவான்'* (திரு. பெரியாழ். 3, 1.1). 4. மகள்; daughter. 5. இளமை. tender, young age. *'பிள்ளைமாக்களிறு'* (கம்பரா. பள்ளி. 32). 6. சிறுமை; smallness littleness. *'பிள்ளைக்கொட்டை'* 7. குலம் (சாதி); caste. நீ என்ன பிள்ளை? 8. கோட்டில் வாழ் விலங்கின் இளமை (திவா.); young of arboreal animals, as the monkey. 9. நாயொழித்த விலங்கினிளமை; young of beasts except the dog. 10. பறப்பன, தவழ்வனவற்றினிளமை (தொல். பொ. 560, 561); young of birds, and certain reptiles,

as crocodlie, tortoise, etc., **11.** கரிக்குருவி; king crow. '*பிள்ளையுள் புகுந்தழித்ததாதலால்*' **(சீவக. 1584.) 12.** காகம் (சூடா.); crow. **13.** நெல்லும் புல்லும் ஒழிந்த ஓரறிவுயிரின் இளமைப் பெயர் (**தொல். பொ. 579, 580**); young of ōr-aṟi-v-uyir, excepting 'nel' 'pul'. **14.** மாலிய ஆசிரியர்களின் சிறப்புப் பெயர்; title of certain ancient Vaiṣṇava Acāryās பிள்ளை லோகாசாரியர், தூப்புற் பிள்ளை. **15.** வயிரவன் (பிங்.); Bhairava. **16.** வேளாளர் பட்டப்பெயர்; a title of the Veḷḷāla caste. **17.** சங்கின் ஏறு (**பிங்.**); male conch. **18.**மரப்பாவை;doll'*சாய்தாட் பிள்ளை*' (**கல்லா. 9**). **19.** மக்கள், சிலவிலங்கு, சிலபறவை, சிலமரம் இவற்றின் பெயர்களோடு சேர்த்துச் சொல்லுஞ் சொல்; word suffix to the names of the persons and of some animals, birds and trees. பெண் பிள்ளை, கீரிப்பிள்ளை, கிளிப்பிள்ளை, தென்னம் பிள்ளை;

**ம.** பிள்ள; **க.** பிள்ளெ, பிள்ளு, கிள்ளு,

கிள்ளெ; **தெ., கொலா.** பில்ல ; **து.**

பிள்ளெ, புள்ளெ (பேரக்குழந்தை); **கோத.** பய்ள்; **துட.** பெள்கோப் (திருமணம் செய்து கொடுக்கப்பட வேண்டியவள்); **குட.** பள்ளெ; **நா.** பில்ல (பெண்மகள்); **கோண்.** பிலா; **குரு.** பெல்லோ; **மா.** பெலி (பெண்), பிலோ (பெண்செடி); **பிரா.** பிலோத (ஏழைப்பிள்ளை, சிறுகுழந்தை, ஏதிலி); **பர்.** பில்லகா.

Mar.pil (நாய், பூனை, முயல் ஆகியவற்றின் குட்டி, சில பறவைகளின் குஞ்சு); H. pillā; Sinh. pilavā; Skt. pillikā (குஞ்சு)

*[புள் → புரு = குழந்தை புள் → பிள் = பிள்ளை, பிள்ளைமையழகு. பிள் → பீள் → கரு, கருப்பைக் குழவி, இளமை. பிள் → பிள்ளை. (மு. தா. 40. 41.)]*

மக்கள் இளமையை மகவு, குழவி, பிள்ளை என்று சொல்வதே மரபாயினும் கடைசிப் பிள்ளையைக் கடைக்குட்டி என்னும் வழக்குண்டு.

பிள்ளை என்னும் இளமைப் பெயர் ஏறத்தாழ எல்லாவுயிரினத்திலும் சென்றுவழங்கும். '*இருக்கும் பிள்ளை மூன்று, பறக்கும் பிள்ளை மூன்று*' என ஒரு சொலவடையுண்டு, ஆயின் இவ்வரம்பிறந்து பிள்ளைச் சொல் வழங்குவது தவறாம். (கு. வ. 287, 288).

பிள்ளைக்கற்றாழை, பிள்ளைக்கிணறு, பிள்ளைக் கட்டை, பிள்ளைத்தக்காளி, பிள்ளைப்பிறை, பிள்ளைப்பெட்டி, பிள்ளை விளாத்தி (குட்டிவிளாத்தி), முதலிய புணர்ப் பெயர்களால் பிள்ளை என்பது சிறுமையைக் குறிக்குமேனும், இது இளமைப் பெயரின் ஆட்சிவிரிவே என்றறிதல் வேண்டும். குட்டித் தொல்காப்பியம் என்பதில் குட்டி என்றும் அதுவே. (மு.தா.130.)

தமிழர் எல்லாரும் பொதுவாக அஃறிணையுயிரி களிடத்து அன்பு காட்டி வந்தனர். வீட்டில் வளர்ப்பனவும் மிகப் பயன்படுவனவும் கண்ணிற் கினியனவுமான நிலைத்திணை, ஒருயிர் பறவை முதலியவற்றைப் பிள்ளைகள் (தாவரம்) போன்றே பேணினர். அதனால் அவற்றின் இளமைக்குப் பிள்ளைப் பேறில்லாதவர்கள் பிள்ளைகளாகவே கருதி வளர்க்கும் வழக்கமும் ஏற்பட்டது. '*இருக்கும் பிள்ளை மூன்று, ஓடும் பிள்ளை மூன்று, பறக்கும் பிள்ளை மூன்று*' என்பது பழமொழி. தென்னம்பிள்ளை போன்றது இருக்கும் பிள்ளை; கீரிப்பிள்ளை போன்றது ஓடும் பிள்ளை; கிளிப்பிள்ளை போன்றது பறக்கும் பிள்ளை. (**ப. தா. நா. ப. 168**).

piṅga, a young animal cf. D. pinju, piḷḷe (KKED xxi)

piḷḷi-ei; a child, Comp. Yarkand Tartar billa, a child. What is the origin of the Hindi pillā, a cub, a pup?(CGDFL.621)

piḷḷ-ei Tam.a child; Tel.pilla, Can. piḷḷe, Latin puell-us, puell-a, a boy, a girl; compare with pullus, the young of an animal, if the Latin word is derived from puer-ulus, it is probably unconnected with pill-ei. Perhaps a more reliable

affinity is that of fil-ius, a son, a daughter, supposed to mean literally a suckling (CGDFL.599)

**பிள்ளை**[2] *pillai*, பெ. (n.) பிள்ளைப்புழு பார்க்க; see pillai-p-pulu. '*பிறத்தலே தலைமையாயிற் பிள்ளைகளல்ல தென்னை*' (நீலகேசி 445).

*[புள் → பிள் → பிள்ளை]*

**பிள்ளைக்கட்டி** *pillai-k-katti*, பெ. (n.) இளங்கருப்பக் கட்டி (வின்.); foetus in an early stage of pregnancy.

*[பிள்ளை + கட்டி. கள் → கட்டி = திரண்டது]*

**பிள்ளைக்கதவு** *pillai-k-kadavu*, பெ. (n.) கதவில் வைக்கப்படும் சிறு பலகணிக்கதவு; window within a door.

*[பிள்ளை + கதவு.*

புள் → பிள் → பிள்ளை = இளமை, குழந்தை. பிள்ளை இங்குக் குழந்தை போலுள்ள அல்லது சிறிய என்னும் பொருள் உணர்த்தும் அடைமொழி பெரும்பாலும் கோயில்களிலும் சிறைச் சாலைகளிலும் இக்கதவு இருக்கும்.*]*

**பிள்ளைக்கவி** *pillai-k-kavi*, பெ. (n.) 1. பிள்ளைத்தமிழ் (இலக். வி. 805.) பார்க்க; see *pillaittamil*. 2. முன்னோர் மொழிந்த சொன்னடை, பொருணடை கொண்டு பாப்புப்புனைவோன் (வெண்பாப். செய். 48.); a poet who composes poems in immitation of the standard works already existing in literature.

*[பிள்ளை + கவி. பிள்ளை = இளமைப் பருவம், பழகும் நிலை]*

**பிள்ளைக்கற்றாழை** *pillai-k-karralai*, பெ. (n.) கற்றாழை வகை (வின்.); a species of aloe.

*[பிள்ளை + கற்றாழை. கல் + தாழை - கற்றாழை]*

**பிள்ளைக்காளி** *pillai-k-kali*, பெ. (n.) செடிவகை; a kind of plant.

**பிள்ளைக்கிணறு** *pillai-k-kinaru*, பெ. (n.) கிணற்றின் உள்ளூற்றுக் குழி (இ. வ.); small well or hole sunk within a well.

ம. பிள்ளைக்கிணறு.

*[பிள்ளை + கிணறு. பிள்ளை = இளையது, சிறியது]*

**பிள்ளைக்கிரிச்சரம்** *pillai-k-kiriccaram*, பெ. (n.) *பிள்ளைக்கீரை* பார்க்க; see *pillai-k-kirai*.

**பிள்ளைக்கீரை** *pillai-k-kirai*, பெ. (n.) முளைக்கீரை; a greens.

**பிள்ளைக்குறி** *pillai-k-kuri*, பெ. (n.), பெண்களுக்குக் கருப்பமுண்டாவதற்குரிய அடையாளம்; symptoms of conceivement.

*[பிள்ளை + குறி]*

**பிள்ளைக்கெண்டை** *pillai-k-kendai*, பெ. (n.) ஒருவகை மீன்; a kind of fish.

**பிள்ளைக்கேங்கல்** *pillaikk-engal*, பெ. (n.) மகப்பேற்றிற்காக நெடுங்காலம் காத்திருத்தல்; longing to have a child.

*[பிள்ளைக்கு + ஏங்கல். ஏங்கு → ஏங்கல். 'அல்' தொ. பெ. ஈறு]*

**பிள்ளைக்கைவளை** *pillai-k-kaivaḷai,* பெ. (n.), குழந்தைகள் அணியும் வளையல் வகை (திவா.); a kind of bracelet worn by children.

*[பிள்ளை + கை + வளை. முள் → (மள்) → வள் → வளை = வட்டமான கையணி]*

**பிள்ளைக்கோசம்** *piḷḷai-k-kōšam,* பெ. (n.) நறுமணமுள்ள மருந்துச் செடி; a drug-costus.

**பிள்ளைக்கோட்டை[1]** *piḷḷai-k-kōṭṭai,* பெ. (n.) பெரிய கோட்டையின் முகப்பிலுள்ள சிறுகோட்டை(வின்.); small fort at the entrance to a large fort.

*[பிள்ளை + கோட்டை. பிள்ளை = இளமை, சிறியது. கோண் → கோடு → கோட்டை = மதிலரண் உள்ளது.]*

**பிள்ளைக்கோட்டை[2]** *piḷḷai-k-kōṭṭai,* பெ. (n.) தொடையிடுக்கிலுண்டாகும் கட்டி (யாழ். அக.); inguinal bubo.

**மறுவ.** அரையாப்பு

*[பிள்ளை + கோட்டை. கொள் → கொட்டு → கொட்டம் → கோட்டம் → கோட்டை.]*

ஈன் பொறிகளில் (ஜனனேந்திரியங்களில்) சூடு ஏற்பட்டு அங்கிருந்து அறையின் நிணநீர்க் கோளத்திற்குப் பரவுவதால் தொடையிடுக்கில் காணப்படும் ஒருவகைப் புண்.

**பிள்ளைகரை–த்தல்** *piḷḷai-karai-,* 4 செ.கு.வி. (v.i.) கருச்சிதைத்தல்; to cause abortion.

*[பிள்ளை + கரை. கரைத்தல் = நீக்குதல், அழித்தல்]*

**பிள்ளைகள்தனம்** *piḷḷaigaḷ-taṉam,* பெ. (n.) ஒரு குலத்தார் (சாதியார்); a sect of people. **'வலங்கை இடங்கை சிறுதனம், பிள்ளைகள் தனம் வடுகர் மலையாளர் பரிவாரக் கொந்தம்'.** (S.I.I.iv. 492.)

*[பிள்ளைகள் + தனம்]*

**பிள்ளைகாக்கும்பேதி** *piḷḷai-kākkum bēdi,* பெ. (n.) வலம்புரிக் கொடி; a creeper.

**பிள்ளைகுட்டி** *pillaikuṭṭi,* பெ. (n.) குழந்தை; child. பிள்ளைகுட்டி பெற்றால்தான் அவற்றை வளர்ப்பதிலுள்ள சிக்கல் தெரியும் (உ.வ.)

க. பிள்ளெமிகக்கு,

*[பிள்ளை + குட்டி. பிள்ளை = உயர் திணைக்குழவி, அதையொப்ப நினைக்கும் அஃறிணைக் குழவி. பிள்ளைகுட்டி இனப்பொருள் மரபிணைமொழி]*

**பிள்ளைகுட்டிக்காரன்** *piḷḷai-kuṭṭi-k-kāraṉ,* பெ. (n.), பெருங்குடும்பி (கொ.வ.); a man with a large family.

*[பிள்ளை + குட்டி + காரன். 'பிள்ளைகுட்டி' மக்களை(குழந்தைகளை)க் குறிக்கும் மரபிணைமொழி]*

**பிள்ளைகுட்டிகள்** *piḷḷai-kuṭṭigaḷ,* பெ. (n.) குழந்தைகள் (கொ.வ.); children. பிள்ளைக் குட்டிகள் இல்லாதவருக்குப் பொறுப்புகள் குறைச்சல்தான் (உ.வ.)

*[பிள்ளை + குட்டி + கள்]*

**பிள்ளைகூட்டு–தல்** *piḷḷai-kūṭṭu-,* 5செ. குன்றாவி. (v.t.) பிறர் ஆண்மகவைத் தன் மகனாக ஏற்றுக் கொள்ளுதல் (தத்தெடுத்தல்); to adopt a son.

*[பிள்ளை + கூட்டு–, பிள்ளை = ஆண்மகன்]*

**பிள்ளைகொல்லி¹** *pillai-kolli,* பெ. (n.), 1. மழலைக் கொலை; infanticide. 2. குழந்தைநோய் வகை; a disease fatal to infants.

*[பிள்ளை + கொல்லி. கொல் → கொல்லி = கொல்வது]*

**பிள்ளைகொல்லி²** *pillaikolli,* பெ. (n.) பெருங்காய வகை; a kind of asafoetida.

**பிள்ளைச்சாதிகள்** *pillai-c-cādigal,* பெ. (n.), இளைஞர்; young people.

மறுவ. விடலை

*[பிள்ளை + சாதிகள்]*

**பிள்ளைச்செடி** *pillai-c-cedi,* பெ. (n.) மருந்துச் செடி; a herbal tree.

*[பிள்ளை + செடி]*

**பிள்ளைச்சோமன்** *pillai-c-cōman,* பெ. (n.), சிறுதுணிவகை(வின்.); a small cloth.

*[பிள்ளை + சோமன்]*

**பிள்ளைச்சோறு** *pillai-c-cōru,* பெ. (n.) சிறு குழவிகட்குரிய குழைந்த சோறு; overcooked rice for the child.

*[பிள்ளை + சோறு]*

**பிள்ளைசாத்து—தல்** *pillai-šāttu-,* 15 செ. கு. வி. (v.i.), நாற்றுக்காகத் தென்னை நெற்றுப் புதைத்தல்; to plant coconuts for transplantation.

*[பிள்ளை + சாத்து—, பிள்ளை = தென்னம் பிள்ளை]*

**பிள்ளைத்தக்கல்** *pillai-t-takkal,* பெ. (n.) கருவழியாதிருக்கை; retention of pregnancy.

*[பிள்ளை + தக்கல். தக்கு → தக்கல். 'அல்' தொ. பெ. ஈறு]*

**பிள்ளைத்தக்காதிருத்தல்** *pillai-t-takkādiruttal,* தொ. பெ. (vbl.n.), கருவழிதல்; miscarrying.

*[பிள்ளை + தக்காது + இருத்தல்,]*

**பிள்ளைத்தக்காளி** *pillai-t-takkāli,* பெ. (n.), தக்காளி வகை (யாழ். அக.); small Indian winter cherry.

*[பிள்ளை + தக்காளி. பிள்ளை = அளவில் சிறியது]*

**பிள்ளைத்தடம்** *pillai-t-tadam,* பெ. (n.), மலைப்பாறைகளில் வெட்டிய காற்சுவடு (நாஞ்சில் வழக்கு); footprint in rocks.

*[பிள்ளை + தடம்]*

**பிள்ளைத்தண்டு** *pillai-t-tandu,* பெ. (n.), தெய்வத் திருவுருங்களைத் தூக்கிச் செல்ல உதவும் சிறுகொம்பு; a small-sized pole, used in carrying idols.

*[பிள்ளை + தண்டு. பிள்ளை = சிறிய. துள் → தள் → தண் → தண்டு]*

**பிள்ளைத்தமிழ்** *pillai-t-tamil,* பெ. (n.) ஆண்பாற் பிள்ளைத் தமிழ் பெண்பாற் பிள்ளைத் தமிழ் என இருவகைப் பட்டு, பிள்ளையின் பல பருவங்களைப் பற்றிக் கூறும் சிற்றிலக்கிய வகை; a poem describing the various stages of childhood of two kinds viz., āṇpāṟ-pillai-t-tamil, peṇpāṟ-pillai-t-tamil.

*[பிள்ளை + தமிழ் ]*

**பிள்ளைத்தனம்** *piḷḷai-t-taṉam,* பெ. (n.) அகவை முதிர்ந்தும் அறிவு முதிராச் செயற்பாடு; boyishness, திருமணமாகியும் அவனது பிள்ளைத்தனம் இன்னும் போகவில்லை (உ.வ.)

*[பிள்ளை + தனம்]*

சிறுபிள்ளைத்தனம் என்று சிறு அடைகொடுத்துவழங்குதல் பெரும்பான்மை

**பிள்ளைத்தாட்சிக்கொடி** *piḷḷaittāṭci-k-koḍi,* பெ. (n.) கருப்பக்கொடி; veins appearing on the abdomen of pregnant woman.

*[பிள்ளைத்தாய்ச்சிக்கொடி → பிள்ளைத் தாட்சிக் கொடி]*

**பிள்ளைத்தாய்ச்சி** *piḷḷai-t-tāycci,* பெ. (n.) 1. கருவுற்ற பெண் (இ.வ.); pregnant woman. 2. கைக்குழந்தையையுடைய தாய் (இ.வ.); a woman having a babe-in-arms.

*[பிள்ளை + தாய்ச்சி. தாய் → தாய்ச்சி]*

**பிள்ளைத்தாய்ச்சிநோய்** *piḷḷai-t-tāycci-nōy,* பெ. (n.) கருவுற்ற மகளிர்க்குண்டாகும் கக்கல் (வாந்தி), மயக்கம், வயிற்றுப்போக்கு முதலான நோய்கள்; senses of vomiting, giddiness, dysentery etc. affecting pregnant women.

*[பிள்ளைத்தாய்ச்சி + நோய்]*

**பிள்ளைத்தாலி** *piḷḷai-t-tāli,* பெ. (n.) பரவரில் திருமணமாகாத சிறுமகளிர் பூணுங் கழுத்தணிவகை (பரவர் வழக்கு); necklace worn close to the neck by Parava girls before marriage.

*[பிள்ளை + தாலி. ஞாலி → நாலி → தாலி]*



**பிள்ளைத்திருநாமம்** *piḷḷai-t-tirunāmam,* பெ. (n.) 1. இளமையிற் பெற்றோரிட்ட பெயர் (கொ.வ.); name bestowed in infancy by parents. 2. தத்துவராயர் இயற்றிய நூல்; a poem by Tattuvarāyar.

*[பிள்ளை + திரு + நாமம்]*

Skt. nāma> த. நாமம்

**பிள்ளைத்தூண்** *piḷḷai-t-tūṉ,* பெ. (n.) தூண்மேலுள்ள சிறுதூண்; small pillar set over a large pillar.

க.பிள்ளெகாலு, கிள்ளெகால், கிள்ளெகாலு.

*[பிள்ளை + தூண். பிள்ளை = சிறிய, சிறு. துள் → (தூள்) → தூண்]*

**பிள்ளைத்தெளிவு** *piḷḷai-t-teḷivu,* பெ. (n.) பிள்ளைத் தன்மையுள்ள போர் வீரனொருவன் போரிற்பட்ட தன் புண்ணைப் பார்த்து மகிழ்ந்து கூத்தாடுதலைக் கூறும் புறத்துறை (பு.வெ.2, 8,); (puṟap.) theme describing the dance of a young warrior, exultant at the wounds he received in battle.

*[பிள்ளை + தெளிவு. தெள்ளுதல் = தெளிவாதல். தெள் → தெளி. தெளிதல் = ஐயம் நீங்குதல்]*

**பிள்ளைத்தேங்காய்** *pillai-t-tēṅgāy,* பெ. (n.) தென்னை நெற்று (யாழ்ப்.); cocoanut, reserved for planting.

*[பிள்ளை + தேங்காய். தெங்கங்காய் → தேங்காய்]*



**பிள்ளைத்தேள்** *pillai-t-tēḷ,* பெ. (n.) நச்சுப்பூச்சி வகை (வின்.); centipede.

*[பிள்ளை + தேள்]*

**பிள்ளைத்தொண்டு** *pillai-t-toṇḍu,* பெ. (n.) புதல்வனைப் பெற விரும்புவள் நுழைந்து செல்லுங் கோயிற் கதவிலுள்ள துளை (துவாரம்) (நெல்லை.); opening in a temple door, believed to possess the power of conferring motherhood on a married women, if she passes through it.

*[பிள்ளை + தொண்டு. துள் → தொள் → தொண்டு]*

**பிள்ளைத்தோம்பு** *pillai-t-tōmbu,* பெ. (n.) 1. சிறுதுணி; a small piece of cloth. 2. தூண்; finial.

*[பிள்ளை + தோம்பு]*

**பிள்ளைத்தோழி[1]** *pillai-t-tōḻi,* பெ. (n.) பிள்ளைப் பேற்றில் இருக்கும் போது பெண்ணிற்கு வரக்கூடிய வயிற்றுநோய் வகை (இ.வ.); a disease generally affecting a woman in child-bed.

*[பிள்ளை + தோழி]*

**பிள்ளைத்தோழி[2]** *pillai-t-tōḻi,* பெ. (n.) குழந்தை வளர்க்கும் செவிலி; foster-mother.

*[பிள்ளை + தோழி]*

**பிள்ளைநஞ்சு** *pillai-nañju,* பெ. (n.) நச்சுக்கொடி; placenta. (M.L.)

*[பிள்ளை + நஞ்சு]*

**பிள்ளைநிலை** *pillai-nilai,* பெ. (n.) போரிற் சென்றறியாத மறக்குடிச் சிறுவர் தாமே செய்யுந் தறுகணாண்மையைக் கூறும் புறத்துறை (தொல். பொ. 60); (purap.) theme describing the courageous spirit shown by wrriors' children though they have never been to a battle.

*[பிள்ளை + நிலை]*

**பிள்ளைநோய்** *pillai-nōy,* பெ. (n.) குழந்தைக்கு ஏற்படும் சிறு பிணி; children's disease.

*[பிள்ளை + நோய்]*

**பிள்ளைப்பட்சி** *pillai-p-paṭci,* பெ. (n.) கிளிப்பிள்ளை நரந்தம்பிள்ளை (மைனா), குயிற்பிள்ளை யென்றாற்போலப் பிள்ளைச் சொற் சேர்த்துக் கூறும் பறவைகள் (துக்கயாகப். 44, உரை); birds like parrots, cuckoos, etc, to which the term pillai may be suffixed.

*[பிள்ளை + பட்சி]*

Skt. paṭsin > த. பட்சி

**பிள்ளைப்பந்து** *piḷḷai-p-pandu,* பெ. (n.) குழந்தைகளின் பந்து விளையாட்டுவகை; a game of ball played by children. (Parava.)

*[ பிள்ளை + பந்து ]*

**பிள்ளைப்பரிகாரி** *piḷḷai-p-parigāri,* பெ. (n.) மருத்துவச்சி; midwife.

*[ பிள்ளை + பரிகாரி ]*

Skt. pari-hārin > **த.** பரிகாரி.

**பிள்ளைப்பருவம்** *piḷḷai-p-paruvam,* பெ. (n.) **1.** சிறுமைப் பருவம்; boy-hood. **2.** குழந்தைப் பருவம்; child-hood.

*[ பிள்ளை + பருவம் ]*

**பிள்ளைப்பன்மை** *piḷḷai-p-paṉmai,* பெ. (n.) மக்கள் (சூடா.); children.

*[ பிள்ளை + பன்மை. பல் → பன் → பன்மை ]*

பெயருடன் 'கள்' போன்ற பன்மை ஈறுகள் சேர்த்துப்பன்மை படுத்துதல் இயல்பு. பன்மை ஈறுக்கு மாறாக இலக்கணக் குறியீட்டுப்பெயரைச் சேர்த்து வழங்கும் இடமுள்ளமையை இவ்வாட்சி காட்டுகிறது.

**பிள்ளைப்பாட்டு** *piḷḷai-p-pāṭṭu,* பெ. (n.) *பிள்ளைத்தமிழ்* (யாழ்.அக.) பார்க்க; see *piḷḷai-t-tamiḻ*

*[ பிள்ளை + பாட்டு. பாடு → பாட்டு ]*

**பிள்ளைப்பால்** *piḷḷai-p-pāl,* பெ. (n.) **1.** குழந்தைகளுக்கு இலவசமாக (தருமமாக) ஊற்றும் பால்; cow's milk distributed free for the use of infants. **2.** முலைப்பால்; mother's milk.

*[ பிள்ளை + பால் ]*

**பிள்ளைப்பிணக்கு** *piḷḷai-p-piṇakku,* பெ. (n.) குழந்தைகள் கொள்ளுஞ் சிறுசினம் (திவ். பெரியாழ். 2, 9, 2. வ்யா. பக். 456); childish petulance.

*[ பிள்ளை + பிணக்கு. பிண் → பிணகு → பிணங்கு → பிணக்கு ]*

**பிள்ளைப்பிணி** *piḷḷai-p-piṇi,* பெ. (n.) குழந்தை யிசிவு நோய்; infantile convulsions. (M.L.)

*[ பிள்ளை + பிணி. புள் → பிள் → (பிண்) → பிணி]*

**பிள்ளைப்பிறப்பு** *piḷḷai-p-piṟappu,* பெ. (n.) குழந்தைப் பிறப்பு; child birth.

*[ பிள்ளை + பிறப்பு. பிள் → பிற → பிறப்பு ]*

**பிள்ளைப்பிறை** *piḷḷai-p-piṟai,* பெ. (n.) இளம் பிறை (சீவக. 2390, உரை); crescent moon.

*[ பிள்ளை + பிறை. பிள்ளை = சிறிய, இளைய. புரு → (புற) → புறை → பிறை = வளைந்த நிலா ]*

**பிள்ளைப்புழு** *piḷḷai-p-puḻu,* பெ. (n.) பிள்ளைப் பூச்சி; an insect. *'பிள்ளைப்புழு என்னும் பிராணிவிசேஷத்தை'* (நீலகேசி, 445, உரை)

*[ பிள்ளை + புழு. புள் → புழு ]*

**பிள்ளைப்பூச்சி** *pillai-p-pūcci*, பெ. (n.) சேற்றில் வாழும் பூச்சிவகை. gryllo-ṭalpa, a genus of insects, including crickets, which live in mud. *'கொட்டினால் தேள், கொட்டா விட்டால் பிள்ளைப்பூச்சி'*

*[ பிள்ளை + பூச்சி ]*



**பிள்ளைப்பெட்டி** *pillai-p-peṭṭi*, பெ. (n.) சிறுபெட்டி (இ.வ.); small box.

*[ பிள்ளை + பெட்டி. பிள்ளை = சிறு. பிள் → (பெள்) → பெட்டி ]*

**பிள்ளைப்பெயர்ச்சி** *pillai-p-peyarcci*, பெ. (n.) 1. பிள்ளைத் தன்மையுள்ள போர்வீர னொருவன் தீ நிமித்தங்களுக்கு அஞ்சாது போருக்குச் செல்வதையும் அதற்காக அரசன் அவனைப் புகழ்வதையும் கூறும் புறத்துறை (புறநா. 259.); (purap.) theme describilng the march in spite of evil omens, of a youthful warrior to battle and the meed of praise he receives from his king. 2. பிள்ளையாட்டு (தொல். பொ. 60, உரை) பார்க்க; see pillaiyāṭṭu.

*[பிள்ளை + பெயர்ச்சி. பெயர் → பெயர்ச்சி]*

**பிள்ளைப்பெருமாள்கவிராயர்** *pillai-p-perumāḷkavirāyar*, பெ. (n.) 19ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்; a poet of mineteenth century.

*[ பிள்ளை + பெருமாள் + கவிராயர் ]*

**பிள்ளைப்பெருமாளையங்கார்** *pillai-p-perumāḷ-aiyaṅgār*, பெ. (n.) எண்வகைச் சிற்றிலக்கியம் (அட்டப் பிரபந்தம்) இயற்றிய ஆசிரியர்; the author of aṣṭa-pirapandam.

*[பிள்ளை + பெருமாள் + ஐயங்கார் ]*

**பிள்ளைப்பெற்றாள்தீட்டு** *pillai-p-perrāḷ tiṭṭu*, பெ. (n.) பிள்ளை பிறத்தலால் நேரும் தீட்டு; ceremonial pollution attaching to the members of a household in connection with a child birth in their house.

*[ பிள்ளை + பெற்றாள் + தீட்டு ]*

**பிள்ளைப்பேறறிந்தவள்** *pillai-p-pērarindavaḷ*, பெ. (n.) மருத்துவச்சி (வின்.); midwife.

*[ பிள்ளை + பேறு + அறிந்தவள் ]*

**பிள்ளைப்பேறு** *pillai-p-pēru*, பெ. (n.) 1. பிள்ளைப்பிறப்பு; child birth. ஊர்ப் புறங்களிலும் பிள்ளைப்பேறு மருத்துவ மனை உள்ளது (உ.வ.) 2. மக்கட்பேறு (வின்.); children, considered a blessing.

*[ பிள்ளை + பேறு. பெறு → பேறு (தொ.ஆகு.) ]*

**பிள்ளைப்பேறுபார்–த்தல்** *pillai-p-pēru-pār-*, 4 செ.குன்றாவி. (v.t.) மகப்பேறு பார்த்தல்; to attend to delivery.

*[ பிள்ளைப்பேறு + பார்–, ]*

**பிள்ளைபிடிப்பவன்** *piḷḷaipiḍippavaṉ,* பெ. (n.) குழந்தைகளைக் கடத்துபவன்; kidnapper of children.

*[ பிள்ளை + பிடிப்பவன் ]*

**பிள்ளைபெற்றவீடு** *piḷḷai-peṟṟa-vīḍu,* பெ. (n.) குழந்தை பிறந்ததனால் தீட்டுடைய வீடு (இ.வ.); house where a child is born, considered to be under pollution.

*[ பிள்ளை + பெற்ற + வீடு ]*

**பிள்ளைபெறாதமலடி** *piḷḷai-p-peṟāda-malaḍi,* பெ. (n.) 1. பிள்ளை பெறாதவள்; barren woman; 2. இரக்கமற்றவள்(வின்.); merciless woman.

*[ பிள்ளை + பெறாத + மலடி. பிள்ளை பெறுவதும் குழந்தை வளர்ப்பதும் பெண்கள் மனத்தைப் பண்படுத்து மாகையால் பிள்ளை பெறாத மலடி பண்படாதமனத்தவளாக இருக்கக்கூடும் என்னும் நிலையில் உருவானதே இரக்கமற்றவள் என்னும் பொருள்]*

**பிள்ளைபெறாமலடி** *piḷḷai-peṟā - malaḍi,* பெ. (n.) குழந்தை பெறாதவள்; barren woman.

*[ பிள்ளை + பெறா + மலடி. மலடு → மலடி. 'மலடி' என்னும் சொல்லே குழந்தைப்பெறாதவள் என்னும் பொருள் கொண்டது. அதற்குப் 'பிள்ளை பெறா" என்னும் அடை வந்தது மிகை ]*

**பிள்ளைபெறு-தல்** *piḷḷai-peṟu-,* 20 செ.கு.வி. (v.i.) குழந்தை பெறுதல்; to deliver child. பிள்ளைப் பெறுவதற்காக மருமகள் தாய்வீடு செல்ல தேவை இல்லை என்கின்றனர் இக்கால மாமியார்கள் (உ.வ.)

*[ பிள்ளை + பெறு-, ]*

**பிள்ளைமகள்** *piḷḷaimagaḷ,* பெ. (n.) தேங்காய்; cocoanut.

*[ பிள்ளை + மகள். பிள்ளை = தென்னம் பிள்ளை ]*

**பிள்ளைமகனிளையோர்** *piḷḷai-magaṉiḷaiyōr,* பெ. (n.) இளைஞர்; young person.

*[ பிள்ளை + மகன் + இளையோர் ]*

**பிள்ளை மருது** *piḷḷaimarudu,* பெ. (n.) வெண் மருது; a kind of tree.

*[ வெள்ளைமருது → பிள்ளைமருது. கருமருதை நோக்க வெளிர்நிறமாய் இருப்பது வெள்ளை மருது எனப்பட்டது. 'மருது' ஒருவகைமரம். இதில் கருமருது, செம்மருது, பிள்ளைமருது (வெள்ளை மருது) என்றாற்போல பலவகைகளுண்டு ]*

**பிள்ளைமருந்து** *piḷḷai-marundu,* பெ. (n.) வசம்பு (இ.வ.); sweet flag.

*[ பிள்ளை + மருந்து ]*

**பிள்ளைமாபிரபு** *piḷḷai-mā-pirabu,* பெ. (n.) பெருமையிற் சிறந்தோன்; nobleman, eminent person.

*[ பிள்ளை + மா + பிரபு ]*

Skt. prabhu> த. பிரபு

**பிள்ளைமார்** *piḷḷaimār,* பெ. (n.) 1. வேளாளர்; people of the Vēḷāḷa caste. (G.Tn.D-I. 139) 2. மேம்பாடுள்ளவர் (வின்.); respectable men, gentlemen.

*[ பிள்ளை + மார். 'மார்' ப.பா.ஈறு. ]*

**பிள்ளைமாற்று** *pillai-māṟṟu,* பெ. (n.) கொணமணப் பிள்ளை (இ.வ.); a ceremony in marriage in which the bride presents the bridegroom with a doll.

*[ பிள்ளை + மாற்று. பிள்ளை = குழந்தை, குழந்தை போலுள்ள பொம்மை. மாறு → மாற்று ]*

**பிள்ளைமுதலி** *pillai-mudal,* பெ. (n.) வேளாளர் தலைவன்; head man of Vēḷāḷa caste. (S.I.I. vii. 49)

*[ பிள்ளை + முதலி. முதல் → முதலி ]*

**பிள்ளைமுறல்** *pillai-muṟal,* பெ. (n.) ஒருவகை மீன்; a kind of fish.



**பிள்ளைமை**[1] *pillaimai,* பெ. (n.) 1. பிள்ளைத் தன்மை; childishness. *'அளவில் பிள்ளைமை யின்பத்தை'* (திவ். பெருமாள்.7,4.) 2. இளமையிலுள்ள அறியாமை; childish innocence. *'பிள்ளைமை காதல் கூர'* (சீவக. 2529).

*[ பிள்ளை + மை. 'மை' ப. பெ. ஈறு ]*

**பிள்ளைமை**[2] *pillaimai,* பெ. (n.) தலைச்சன் பிள்ளையினின்று எடுக்கும் மாயமை; a collyrium extracted or prepared from the first born child.

*[ பிள்ளை → பிள்ளைமை ]*

**பிள்ளையன்**[1] *pillaiyan,* பெ. (n.) வேளாளத் தலைவர் சிலர்க்கு வழங்குந் சிறப்புப் பெயர்; title of certain Vēḷāḷa chieftains. *'வடமலையப்பப் பிள்ளையன்'*

*[ பிள்ளை → பிள்ளையன் ]*

**பிள்ளையன்**[2] *pillaiyan,* பெ. (n.) இளையோன்; youth. *'மேவா ருயிருணங்க மேன்முடித்த பிள்ளையன்'* (பு. வெ. 2, 8)

*[ பிள்ளை → பிள்ளையன் ]*

**பிள்ளையாட்டு** *pillai-y-āṭṭu,* பெ. (n.) வாளாற் பொருது மேம்பட்ட அரசிளங்குமரனைக் கண்டு அந்நாட்டிலுள்ளார் உவந்து பறை யொலிக்க அரசு கொடுத்தலைக் கூறும் புறத்துறை (தொல். பொ. 60); (purap.) theme describing the citizens rejoicing at the valour of a victorious prince and bestowing the kingdom upon him to the accompaniment of drum.

*[ பிள்ளை + ஆட்டு. ஆடு → ஆட்டு ]*

**பிள்ளையாண்டான்** *pillai-y-āṇḍāṉ,* பெ. (n.) இளையோன்; youngman, youth, boy, lad. பிள்ளையாண்டான் வந்தால் எல்லாம் பார்த்துக்கொள்வான் (உ.வ.)

*[ பிள்ளை + ஆண்டான். ஆள் → ஆண்டு → ஆண்டான். ஆண்டை வீட்டுச் சிறுவன் ஒ.நோ; சின்ன முதலாளி ]*

**பிள்ளையாண்டிரு-த்தல்** *pillai-y-āṇḍiru-,* 3 செ.கு.வி. (v.i.) கருவுற்றிருத்தல்; to be pregnant.

*[ பிள்ளை + ஆண்டு + இரு –, 'இரு' து.வி.]*

**பிள்ளையார்** *pillaiyār* பெ. (n.) 1. மகன்; son, used honorifically. *'பிள்ளையார் அவதரிக்க'* (சீவக. 215, உரை) 2. யானைமுகன் (விநாயகர்); Gaṇēsa. பிள்ளையாருக்கு அண்மை காலத்தில் ஆயிரக்கணக்கான கோயில்கள் கட்டப்பட்டுள்ளன (உ.வ.) 3. முருகக் கடவுள்; Lord Murugan. *'பேராட்டி சீராட்டும் பிள்ளையார் கழல் போற்றி'* (கோயிற்பு. பாயி. 7) 4. ஆளுடைய பிள்ளையார்; the child saint Sambandha mūrti. *'ஏகும் பெருங்காதல் பிள்ளையாரேற்று'* (பெரியபு. திருஞான. 947) 5. பெருவயிறன் (கொ.வ.); man with a big belly, used in contempt. 6. நூறு அல்லது ஆயிரத்தைக் குறிக்குங் குழூஉக் குறி. cant for 100 or 1000 *'ஏழு பிள்ளையார் நீர் இறைத்தேன், வீடுகட்ட ஐந்து பிள்ளையார் ஆயிற்று'*

ம. பிள்ளையார்; து. பிள்ளாரி

*[பிள்ளை + ஆர். 'ஆர்' உயர்வுப பன்மை ஈறு ]*



**பிள்ளையார்சதுர்த்தி** *pillaiyār-cadurtti,* பெ. (n.) பிள்ளையார் விழா பார்க்க; see pillaiyār vilā.

*[ பிள்ளையார் + சதுர்த்தி ]*

Skt. caturthi > த. சதுர்த்தி

**பிள்ளையார்சவுதி** *pillaiyār-cavuti,* பெ. (n.) *பிள்ளையார் விழா* பார்க்க; see *pillaiyār vilā.*

*[ பிள்ளை + சவுதி. சதுர்த்தி → சவுதி ]*

**பிள்ளையார்சுழி** *pillaiyār-culi,* பெ. (n.) 1. எழுதத் தொடங்குங்கால் மங்கலமாக வரையப்படும் 'உ' என்ற குறி; a propitiatory mark made at the commencement of any writing. 2. செயல் தொடங்குவதைக் குறிப்பது; usage to denote the commencement of any work. கட்டடவேலைக்குப் பிள்ளையார்சுழி போட்டாய் விட்டதா? (உ.வ.)

*[ பிள்ளையார் + சுழி. சுள் → சுழி ]*

ஏதாவது ஒன்றை எழுதுவதற்குமுன் மேலும் கீழுமாகப் போட்ட இரு கோடுகள் பின்னர் ஒன்றோடொன்று இணைந்து 'உ' என்னும் எழுத்துப்போன்ற வடிவத்தைப் பெற்றது. ஓலையில் எழுத்தாணி கொண்டெழுதுங்கால் எழுத்தாணியின் எழுதும் திறத்தை அறியும் பொருட்டுப் போட்ட கோடுகள் தொடக்கத்தைக் குறிக்கும் வகையில் பிள்ளையார் சுழி எனப்பட்டது. இதனை ஊமை எழுத்து என்றும் குறிப்பர்.

**பிள்ளையார்நோன்பு** *pillaiyār-nōnbu,* பெ. (n.) பிள்ளையார் விழாவுக்குக் கொள்ளும் நோன்பு (விநாயகசதுர்த்தி விரதம்); Vināyaga-cadurtti. 2. பிள்ளையார் (விநாயக சதுர்த்தி) விழாவிற்கு விடும் மானியம்; provision for the celebration of Vināyaga-cadurtti (Pudu. insc. 399).

*[ பிள்ளையார் + நோன்பு ]*

**பிள்ளையார்நோன்புத்தேவை** *pillaiyār-nōnbu-t-tēvai,* பெ. (n.) *பிள்ளையார் நோன்பு 2.* பார்க்க; see *pillaiyār nōnbu* 2 (S.I.I. vii. 458)

*[ பிள்ளையார் + நோன்பு + தேவை]*

**பிள்ளையார்நோன்புப்பச்சை** *pillaiyār-nōṉbu-p-paccai,* பெ. (n.) *பிள்ளையார் நோன்பு* 2. பார்க்க; see *pillaiyār nōṉbu* 2 (S.I.I. vii. 458)

*[ பிள்ளையார் + நோன்பு + பச்சை ]*

**பிள்ளையார்பந்து** *piḷḷaiyār-pandu,* பெ. (n.) கல்லை நிறுத்தி அதன்மேற் பந்தெறிந்து ஆடும் பிள்ளையார் விளையாட்டு வகை; game of setting up a brick on the ground as a target and trying to knock it down with a ball.

*[ பிள்ளையார் + பந்து ]*

**பிள்ளையார்பூ** *piḷḷaiyār-pū,* பெ. (n.) துலுக்க மல்லிகை; Indian periwinkle, garden-plant (K.R.).

*[ பிள்ளையார் + பூ.* பிள்ளையாருக்குச் சாத்தும் பூ.*]*

**பிள்ளையார்பையன்** *piḷḷaiyār-paiyaṉ,* பெ. (n.) தடித்துக்குள்ளமான பையன் (இ.வ.); a stout, short lad.

*[ பிள்ளையார் + பையன். பை → பையல் = இளைஞன், சிறுவன். பையல் → பையன் ]*

**பிள்ளையார்மாடம்** *piḷḷaiyār-māḍam,* பெ. (n.) 1. பிள்ளையாரை(கணேசரை) வைப்பதற்காகச் சுவரின் நடுவில் வைக்கும் புரை (இ.வ.); niche in the centre of a wall for setting up the image of Gaṇēśa.

*[ பிள்ளையார் + மாடம் ]*

**பிள்ளையார்விழா** *piḷḷaiyār viḻā,* பெ. (n.) பிள்ளையார்க்குத் திருவிழாச் செய்யும் மடங்கல் (சிராவண) மாதத்து வளர்பிறை நான்காம் நாள் (சுக்கில பட்சத்துச் சதுர்த்தி); the fourth titi of the bright half of the lungar month of cirāvanam, as sacred to Ganeṣa.

*[பிள்ளையார் + விழா]*

**பிள்ளையார்வேடங்கொள்(ளு)–தல்** *piḷḷaiyār-vēḍaṅ koḷ (ḷu)-,* 16 செ.கு.வி. (v.i.) கருப்பமுண்டாயிருத்தல்; to conceive, to become pregnant.

*[ பிள்ளையார் + வேடம் + கொள்–, சூல் கொண்ட வயிறு பெருத்திருப்பது பிள்ளையார் பெருவயிறு போன்றிருப்பதன் தன்மையில் உண்டான சொல்லாட்சி. ]*

Skt. vēṣa > த. வேடம்.

**பிள்ளையாரெறும்பு** *piḷḷaiyār-eṟumbu,* பெ. (n.) (கடித்து வலி ஏற்படுத்தாக) கறுப்புநிறமுடைய எறும்பு; a kind of harmless black ant.

*[ பிள்ளையார் + எறும்பு ]*

**பிள்ளையுண்டா–தல்** *piḷḷai-y-uṇḍā-,* 16. செ.கு.வி. (v.i.) கருவுறுதல் (கொ.வ.); to be pregnant.

*[ பிள்ளையார் + உண்டா–, உள் → உண் → உண்டு + ஆ – உண்டா. 'ஆ(தல்)' து.வி ]*

**பிள்ளையுண்டாயிரு–த்தல்** *piḷḷai-y-uṇḍāyiru-,* 3 செ.கு.வி. (v.i.) கருப்பிணியாயிருத்தல்; to be pregnant.

*[ பிள்ளையார் + உண்டாய் + இரு–, 'இரு' து.வி ]*

**பிள்ளையெடு–த்தல்** *piḷḷai-y-eḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) ஆண்குழந்தையைத் தனதாக ஏற்றுக்கொள்ளுதல் (தத்தெடுத்தல்); to adopt, as a son.

*[ பிள்ளை + எடு–. எ → எடு ]*

**பிள்ளைலோகாசாரியர்** *piḷḷai-lōgāšāriyar,* பெ. (n.) அட்டாதச ரகசியம் என்னும் நூலை இயற்றியவரும் 14ஆம் நூற்றாண்டினருமாகிய மாலிய (வைணவ) ஆசிரியர்; a Vaiṇava Acārya, the author of asṭādasa-ragasiyam in 14th century.

*[ பிள்ளை + லோகாசாரியர் ]*

**பிள்ளைவங்கு** *piḷḷai-vaṅgu,* பெ. (n.) பாய்மரம் நிற்குங் குழி (யாழ்ப்); cavity or socket to hold the mast of a dhoney.

*[ பிள்ளை + வங்கு. வள் → (வண்) → வணங்கு → வாங்கு → வங்கு ]*

**பிள்ளைவண்டு** *piḷḷaivaṇḍu,* பெ. (n.) வண்டு வகையு ளொன்று; a kind of beetle.

*[பிள்ளை + வண்டு ]*

**பிள்ளைவலி** *piḷḷai-vali,* பெ. (n.) பிள்ளைப்பேற்றுத் துன்பம் (பிரசவவேதனை) (இ.வ.); labour, pains of childbirth.

மறுவ: இடுப்புவலி.

*[ பிள்ளை + வலி ]*

**பிள்ளைவளர்–த்தல்** *piḷḷai vaḷar-,* 4 செ.கு.வி. (v.i.) குழந்தைகளை வளர்த்தல்; to rear children. பிள்ளை வளர்த்தலில் பெண்களின் பங்கு மேலானது (உ.வ.)

*[ பிள்ளை + வளர்–, ]*

**பிள்ளைவளர்த்துக்கொள்(ளு)–தல்** *piḷḷai-vaḷarttu-k-koḷ(ḷu)-,* 10 செ.குன்றாவி. (v.t.) *பிள்ளையெடு–த்தல்* பார்க்க; see *piḷḷai-y-eḍu-,*

*[ பிள்ளை + வளர்த்து + கொள்–, 'கொள்' து.வி. ]*

**பிள்ளைவளர்ப்பான்** *piḷḷai-vaḷarppāṉ,* பெ. (n.) 1. வசம்பு; sweet flag. 2. சிற்றாமணக் கெண்ணெய்; castor-oil.

*[ பிள்ளை + வளர்ப்பான். வளர் → வளர்ப்பான். சிறு குழந்தைக்கு மருந்தாகப் பயன்படுவன பிள்ளை வளர்ப்பான் என பெயரிட்டழைக்கப் பட்டுள்ளன. பிள்ளை மருந்து பார்க்க ]*

**பிள்ளைவளர்ப்பு** *piḷḷai vaḷarppu,* பெ. (n.) குழந்தை வளர்ப்பு; child-rearing.

*[ பிள்ளை+ வளர்ப்பு. வளர் → வளர்ப்பு. 'பு' தொ.பெ.ஈறு ]*

**பிள்ளைவாசி** *piḷḷai-vāši,* பெ. (n.) கொடி வகை; a kind of creeper.

**பிள்ளைவிழுதல்** *piḷḷai-viḻudal,* பெ. (n.) கருச்சிதைந்து வெளிப்படுகை. miscarriage, abortion.

*[ பிள்ளை + விழுதல். விழு → விழுதல். 'தல்' தொ.பெ.ஈறு]*

**பிள்ளைவீட்டார்** *piḷḷai-viṭṭār,* பெ. (n.) மாப்பிள்ளையைச் சார்ந்த உறவினர்கள் (கொ.வ.); relatives of the bridegroom.

*[ பிள்ளை + வீட்டார்.பிள்ளை = மாப்பிள்ளை. வீடு → வீட்டார் = வீட்டைச்சேர்ந்தவர்கள், உறவினர் ]*

**பிள¹–த்தல்** *pila-,* 4 செ.கு.வி. (v.i.) 1. போழப்படுதல்; to be split, cleaved, rent, cracked. *'வேய்பிளந்துக்க வெண்டரளம்'* (கம்பரா. தாடகை. 8.) 2. பிரிவுபடுதல்; to be disunited. 3. வெடிபடுதல் (வின்.); to be blasted, blown up. 4. ஊடுருவப்படுதல் (வின்.); to be pierced penetrated. 5. மனமுடைதல்; (வின்.); to be broken, as heart. நேற்றைய நேர்ச்சி(விபத்து) மனத்தைப் பிளந்தது (உ.வ.) 6. திறந்திருத்தல்; to be open, as jaws or a wound; to gape. *'வாய் பிளந்துக்க'* (கம்பரா. தாடகை. 8.)

*[ புள் → பூள் → பூறு. ஒ.நோ: கீள் → கீறு. பூறுதல் = துளைத்தல், கிழித்தல், கீறுதல். புள் → புள் → பிள். பிள்ளுதல் = இரண்டாகவோ பலவாகவோ பிளந்து விடுதல், துண்டு படுதல், மனம் வேறுபடுதல், நட்புப்பிரிதல். பிள் → பிள. (வே.க.3,108,109) ]*

**பிள²–த்தல்** *pila-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. போழ்தல்; to split, cleave, rend, rive, to tear open. *'மலைகீழ்து பிளந்த சிங்கம்'* (திவ். திருவாய். 7, 4, 6.) 2. வெடிக்கச் செய்தல்; to blast, as rocks; to blow up. 3. கட்டுக்குலைத்தல்; to part asunder; to break through, as an army. 4. ஊடுருவுதல்; to pierce, penetrate, as a weapon. *'ஒண்டழல் விண்பிளந் தோங்கி'* (திருவாச. 18, 8) 5. போக்குதல் (வின்.); to dissipate, disperse, as darkness or ignorance. 6. பாகுபடுத்துதல்; to dissect, analyse. *'யாதும் பிளந்தறியும் பேராற்றலான்'* (சிறுபஞ். 58) 7. வெல்லுதல்; to overcome, as in a controversy. *'அவனைப் பேச்சிலே பிளந்து விட்டான்'*

*[ பிள் → பொள் → பொளி. பொளிதல் = வெட்டுதல், பிளத்தல். பொள் → போழ். போழ்தல் = பிளத்தல். போழ் = துண்டு. புள் → பிள் → பிடு. பிடுதல் = கையாற் பிளத்தல். பிள் → பிளவு = துண்டு. பிள் → பிள. பிளத்தலாவது ஒரு பொருளை ஒரே முறையில் வெட்டித் திறத்தல் அல்லது துணித்தல். தானாய்த்திறத்தலும் பிளத்தலே. மண்டைப் பிளத்தலை மண்டை திறத்தல் என்று கூறுவது வழக்கு (மு.தா. 259) ]*

**பிள³–த்தல்** *pila-,* 3 செ.கு.வி. (v.i.) எலும்பில் வெடிப்புக் காணுதல்; to fracture.

*[ பி ள் → பி ள . பிள்ளுதல் = பிளந்துவிடுதல். பிள் → பிள (வே.க. 3, 109) ]*

**பிளகு** *pilagu,* பெ. (n.) 1. பிளவு, 3 பார்க்க; see piḷavu 3. 2. கமுக வேர் (சங்.அக.); roots of areca-palm.

*[ பி ள் → பி ள வு → பி ள கு . 'வு' தொ.பெ.ஈறு ]*

**பிளச்சு** *pilaccu,* பெ. (n.) பிளாச்சு பார்க்க; see piḷāccu.

*[ பிளாச்சு → பிளச்சு (கொ.வ.) ]*

**பிளத்தல்** *pilattal,* பெ. (n.) வயிரக்குற்றங்களுள் ஒன்று (சிலப். 14, 180, உரை); a flaw in diamonds.

*[ பிள → பிளத்தல். 'தல்'. தொ.பெ.ஈறு ]*

**பிளந்துகட்டு–தல்** *pilandu kattu,-* 5 செ. குன்றாவி. (v.t.) (பாராட்டும் வகையில்) அருமையாக அல்லது சிறப்பாகச்செய்தல்; to do extremely well. சின்னப்பையன் ஆங்கிலத்தில் பிளந்து கட்டிவிட்டான் (உ.வ.)

*[ பி ள → பி ள ந் து + க ட் டு – , கள் → கட்டு ]*

**பிளப்பு** *pilappu,* பெ. (n.) **1.** பிளவு; crevice, cleft. **2.** வெடிப்பு (சங்.அக.); splitting.

*[ பிள → பிளப்பு. 'பு' தொ.பெ.ஈறு ]*

**பிளப்புச்சீரகம்** *pilappu-c-ciragam,* பெ. (n.) சீமைச் சோம்பு (பதார்த்த. 1036); caraway.

*[ பிளப்பு + சீரகம் ]*

**பிளப்புமஞ்சள்** *pilappu-mañjal,* பெ. (n.) துண்டாக்கப்பட்ட மஞ்சள்; split turmeric.

*[ பிள → பிளப்பு + மஞ்சள். மங்கு → மங்கல் → மஞ்சல் = மங்கலான நிறம். மஞ்சல் → மஞ்சள் = அந்நிறக் கிழங்கு ]*

**பிளவு** *pilavu,* பெ. (n.) **1.** பிளந்திருப்பதால் ஏற்படும் இடைவெளி, விரிந்துண்டாகுஞ் சந்து; cleft, as of a rock; crevice, gap, fissure; slit, as of a nib, பாறைப்பிளவில் ஒரு பாம்பு பதுங்கியிருந்தது, சுவரில் சிறுபிளவு தெரிந்தது. (உ.வ.) **2.** (இருவர்க்கிடையே அல்லது ஒரு கட்சி போன்ற அமைப்பில் ஏற்படும்) பிரிவு; (in an organisation, etc.) split, disunion. கட்சியில் பிளவு. இரு நெருங்கிய நண்பர்களுக்கு இடையில் பிளவா? (உ.வ.) **3.** துண்டு; part, division, portion, piece, slice, section. *"பிளவு கொண்டமதி"* (பெரியபு. திருக்குறிப்புத். 17) **4.** வெடிப்பு; splitting, bursting. **5.** வெட்டுப் பாக்கு; split areca nut. *'நறிய பிளவு வெள்ளிலை இவையுதவி'* (பிரமோத். 9, 25) **6.** அரைக்குன்றிமணி யெடை (வின்.); half of a crab's eye used as a weight. **7.** பிரிந்திசைப்பு; (gram.) hiatus, break in utterence, as of words. *'இரண்டும் பலவுமாகிய சொற்கள் பிளவுபடாது ஒற்றுமைப்பட'* (தொல். சொல். 412, சேனா) **8.** வெடியுப்பு (சங்.அக.); salt petre.

*[ பிள் → பிள → பிளவு. 'வு' தொ.பெ.ஈறு ]*

**பிளவுப்பிறை** *pilavu-p-pirai,* பெ. (n.) இளம்பிறை (வின்.); digit of the moon.

*[ பிளவு + பிறை. புரு → (புற) → புறை → பிறை = வளைந்த நிலா. ]*

**பிளவுபடு-தல்** *pilavu padu-,* 20 செ.கு.வி. (v.i.) *பிளவுறு-தல்* பார்க்க; see *pilavuru-,* ஒன்றாக இருந்த நண்பர்கள் இப்பொழுது பிளவுபட்டு போயினர் (உ.வ.)

*[ பிளவு + படு-, 'படு' து.வி. ]*

**பிளவுபோடு-தல்** *pilavu-pōdu,* 20 செ.கு.வி. (v.i.) வெற்றிலை பாக்கு போடுதல் (கொ.வ.); to chew betel.

*[ பிளவு + போடு-, ]*

**பிளவுறு-தல்** *pilavuru-,* 20 செ.கு.வி. (v.i.) இரண்டாதல்; to be split. விடுதலைக்காகப் போராடிய கட்சிகளும் பிளவுற்றுபோயின (உ.வ.)

*[ பிளவு + உறு-, ]*

**பிளவை** *pilavai,* பெ. (n.) **1.** பிளக்கப்பட்ட துண்டு; piece, slice. *'பைந்நிணப் பிளவை'* (மலைபடு. 176) **2.** புண்கட்டி; boil, abscess, carbancle. **3.** பிளவைக் காய்ச்சல் பார்க்க; see *pilavai-k-kāyccal.*

*[ பிள → பிளவை. 'வை' பெ.ஆ.ஈறு ]*

**பிளவைக்காய்ச்சல்** *pilavai-k-kāyccal,* பெ. (n.) மாட்டு நோய் வகை; anthrax (M.M.658.)

*[ பிளவை + காய்ச்சல். காய் → காய்ச்சல் ]*

**பிளவைகொல்லி** *pilavai-kolli,* பெ. (n.) பூடுவகை (பதார்த்த. 291); a species of the murdah plant.

*[ பிளவை+ கொல்லி. கொல் → கொல்லி = (பிளவையைக்) கொல்வது. 'இ' வி. முத. ஈறு ]*

**பிளா** *pilā-,* பெ. (n.) *பிழா*(யாழ்ப்.)பார்க்க; see *pilā*.

*[ பிள் → பிளா = வாயகன்ற ஓலைக் கொட்டான் ]*

**பிளாச்சி** *pilācci,* பெ. (n.) *பிளாச்சு* (சங்.அக.) பார்க்க; see *pilāccu.*

*[ பிளாச்சு → பிளாச்சி ]*

**பிளாச்சு** *pilāccu,* பெ. (n.) **1.** மூங்கில் முதலியவற்றின் நீளவாக்கில் பிளப்பட்ட பிளவு; bamboo split, lath. பிளாச்சுகளைக் கொண்டு படல் செய்யப்பட்டிருந்தது (உ.வ.) **2.** பிளந்த விறகு; fire-wood. **3.** பனங்கிழங்கின் பிளவு (யாழ்ப்.); slice of edible palmyra root.

*[ பிள் → பிள → பிளவு = வெடிப்பு, பிரிவு. பிள → பிளவை = பிளக்கப்பட்ட துண்டு. பிள → பிளாச்சு = கிழித்த மூங்கிற் பட்டி (வே.க.3,109) ]*

**பிளாச்சுக்கட்டை** *pilāccu-k-kattai,* பெ. (n.) கவலைப் பாதையின் நடுவிலுள்ள மேலுருளை; wooden log kept to rest the pulling rope in 'kapila' water lift.

*[ பிள் → பொள் → பொளி.பொளிதல் = வெட்டுதல், பிளத்தல். புள் → பிள → பிளாச்சு. பிளாச்சு + கட்டை. கள் → கட்டை ]*



**பிளி** *pili,* பெ. (n.) **1.** கள்; toddy. **2.** அழிஞ்சில் மரம்; a tree.

*[ பிழி → பிளி ]*

**பிளிகை** *piligai,* பெ. (n.) இரைப்பையின் இடது பக்கமுள்ள மண்ணீரல்; an abdominal organ situated in the left hypochon driaregion.

**பிளிகைத்தாபம்** *piligai-t-tābam,* பெ. (n.) மண்ணீரலழற்சி; inflammation of spleen.

*[ பிளிகை + தாபம் ]*

**பிளிச்சக்கீரை** *pilicca-k-kīrai,* பெ. (n.) *புளிச்சக்கீரை* பார்க்க; see *pulicca-k-kīrai.*

*[ புளிச்சக்கீரை → பிளிச்சக்கீரை ]*

**பிளிச்சி** *pilicci,* பெ. (n.) சீனக்காரம்; alum.

**பிளிச்சிறுகீரை** *piliccirு-kīrai,* பெ. (n.) *புளிச்சிறுகீரை* பார்க்க; see *puliccirukīrai.*

மறுவ. பிளிச்சை, புளிச்சை, புளியாரை

*[ புளிச்சிறுகீரை → பிளிச்சிறுகீரை ]*

**பிளிச்சு** *piḷiccu,* பெ. (n.) *பிளாச்சு 1* பார்க்க, (சீவக. 634, உரை); see *piḷāccu 1*

**பிளிச்சை** *piḷiccai,* பெ. (n.) *புளிச்சை* பார்க்க; see *puḷiccai.*

*[ புளிச்சை + பிளிச்சை ]*

**பிளிச்சைக்கண்** *piḷiccai-k-kaṇ,* பெ. (n.) புளிச்சைக் கண் (பாலவா); sore eye.

*[ புளிச்சை → பிளிச்சை + கண் ]*

**பிளிப்பிச்சி** *piḷippicci,* பெ. (n.) முடைநாற்ற முடைய செடி; foetid holly.

**பிளிம்பி** *piḷimbi,* பெ. (n.) புளிச்சக்காய் மரம்; bilimbi tree.

**பிளிம்பிக்காய்** *piḷimbikkāy,* பெ. (n.) புளிச்சைக்காய் வகை; fruit of bilimbi.

**பிளிர்–த்தல்** *piḷir-,* 11 செ.குன்றாவி. (v.t.) கொப்புளித்தல் (சூடா.); to gargle.

*[ புள் → பிள்→ பிரி → பிரிவு. புள் → பிள் → பிடு → பிது → பிதிர். பிதிர்தல் = பெயர்தல்,பிதுங்குதல். புள் → பிள் → பிளிர் ]*

**பிளிரல்** *piḷiral,* பெ. (n.) கிளைக்கை (திவா.); branching.

*[ புள் → பிய் → புய். புய்த்தல் = பிரித்தல், பிடுங்குதல். புள் → பிள் → பிரி → பிரிவு → பிரிவினை. புள் → பிள் → பிளிர் → பிளிரல். 'அல்' தொ.பெ.ஈறு ]*

**பிளிற்று¹–தல்** *piḷiṟṟu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. ஆரவாரித்தல்; to make a roaring noise. *'கயக்களியூரிற் பிளிற்றிவிடும்'* (நான்மணி. 36); 2. வெகுளுதல்; to fret with anger. *'பிச்சை புக்குண்பான் பிளிற்றாமை முன்னினிதே'* (இனி. நாற். 40)

*[ பிளிறு → பிளிற்று– ]*

**பிளிற்று²–தல்** *piḷiṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) கக்குதல்; to spit out, vomit. *'பிளிற்றினும்ப ரொழிந்தெயிறானஞ் செய்யுங்கோள்'* (சீவக. 1286.)

*[ பிலிற்று → பிளிற்று–, ]*

**பிளிறல்¹** *piḷiṟal,* பெ. (n.) பேரோசை (பிங்.); great noise.

*[ பிளிறு → பிளிறல். 'அல்' தொ.பெ.ஈறு ]*

**பிளிறல்²** *piḷiṟal,* பெ. (n.) *பிளிரல்* (சூடா.) பார்க்க; see *piḷiral*

*[ பிளிர் → பிளிரல் → பிளிறல் ]*

**பிளிறல்³** *piḷiṟal,* தொ. பெ. (vbl.n.) கீறிப்பார்த்தல்; tearing open.

*[ பிளிறு → பிளிறல் 'அல்' தொ.பெ.ஈறு ]*

**பிளிறு¹–தல்** *piḷiṟu-,* 5 செ.கு.வி. (v.i.) முழுங்குதல்; to trumpet; to roar, as an elephant. *'பிளிறுவார் முரசின்'* (சீவக. 200)

*[ பிள் → பிள + பிளவு. பிள → பிளறு → பிளிறு = வாயை அகலத்திறந்து எழுப்பும் ஒலி, பேரொலி. ]*

**பிளிறு²–தல்** *piḷiṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) கிண்டுதல்; to turn up, hoe up, as the soil.

**பிளிறு³** *pil̠iṟu,* பெ. (n.) பிளிறல்¹ பார்க்க; see prlıral¹. *'பிளிறுதீர...... களிறு'* (தேவா. 1132, 4)

**பிளீகநாளம்** *pilīga-nāḷam,* பெ. (n.) மண்ணீரல் நரம்பு; spleenic vein.

*[ பிளீகம் + நாளம் ]*

**பிற்கட்டு** *piṟ-kaṭṭu,* பெ. (n.) பாட்டின் இறுதியிலுள்ள நல்லோசை யமைதி; beautiful finale of a song. *'பிற்கட்டும் முன்முரணும் பின்முரணும்'* (விறலிவிடு.)

*[ பின் + கட்டு. கள் → கட்டு ]*

**பிற்கழி—த்தல்** *piṟkaḻi-,* 4 செ.கு.வி. (v.i.) வலியிழந்தோடுதல் (வின்.); to lose ground, as in battle.

*[ பிற்கு + அழி—. ஒழி → அழி. ]*

**பிற்கார்** *piṟ-kār,* பெ. (n.) மழைக்காலத்தின் பிற்பகுதியில் விளையும் நெற்பயிர்; a kind of paddy harvested in the latter part of the *kār*(rainy) season. (G.Sm.D.I.i;213)

*[ பின் + கார். கரு → கார் ]*

**பிற்கால்** *piṟ-kāl,* பெ. (n.) தம்பி (நிகண்டு, 219.); younger brother.

*[ பின் + கால். குல் → கல் → கால். கால் = கால்வழி, சரவடி, இனவழி. பிற்கால் = கால்வழியில் தனக்குப் பின்னோன், தம்பி. ஒ.நோ: தம் + பின் - தம்பின் → தம்பி.]*

**பிற்காலம்** *piṟ-kālam,* பெ. (n.) நிகழ்கிற காலத்துக்கு அல்லது முன்னர் குறிப்பிட்ட காலத்துக்கு அடுத்து வருகிற காலம்; future, later time, வீணாகச் செலவழிக்கும் பணத்தைச் சேமித்துவைத்தால் பிற்காலத்தில் உதவுமே, பிற்காலத்தில் இந்த நடைமுறை மக்களிடையே இல்லாமல் போயிருக்கலாம், பிற்காலச் சோழர்கள். (உ.வ.)

*[ பின் + காலம். கோல் → கால்=கம்பு, பந்தலைத் தாங்கும் கம்பு, தூண், தூண் போன்ற உறுப்பு. கால்போல் நீண்டு செல்லும் பொருள்களெல்லாம் கால் எனப்படும். கால் → காற்று. கால் → காலம். கடந்த காலம் அல்லது இறந்த காலம் முற்காலம். முற்காலத்திற்குப் பின்னர் வருவது பிற்காலம் (எதிர்வரும் காலம்). இது முன், பின் என்னும் எதிரிடைச் சொல் அடிப்படையில் பொருத்தமே. எனினும் முற்காலத்திற்கும் பிற்காலத்திற்கும் இக்காலம் (நிகழ்காலம்) இடைநிற்பது, பிற்காலம் இக் காலத்திற்குப் பின் வருவது எனக் கொள்ளுதலின் பொருத்தப் பாட்டை வலியுறுத்துகிறது.]*

**பிற்காலி—த்தல்** *piṟ-kāli-,* 4 செ.கு.வி. (v.i.) 1. பிற்படுதல்; to lag behind. *'விந்தியாரணியம் பிற்காலித்து'* (குருபரம். 227.) 2. பின் வாங்குதல்; to retreat, withdraw. *"பிரதி பட்சத்தைக் கண்டால் பிற்காலியாத தோள்வலியை யுடையவன்"* (திவ்.திருப்பா.18, பக்.169). 3. காலந்தாழ்த்தல்; to delay. *'திருவழுந்தூரில் பிற் காலித்து நிற்கக் கூடும்'* (திவ். திருநெடுந்.26, வ்யா. பக்.228.)

*[ பின் + காலி—, காலம் → காலித்தல். இது பின்னாக்க (backformation) முறையில் அமைந்தது]*

**பிற்கு¹** *piṟku,* பெ. (n.) பின் (அரு.நி. 647.); posteriority in time or place.

*[ பின் + கு. 'கு' சொல்லாக்க ஈறு ]*

**பிற்கு²** *pirku,* பெ. (n.) மழை (அரு.நி.); rain.

*[பில்குதல் = தூறுதல், வழிதல், சிந்துதல். பில்கு → பிற்கு = பெய்யும் மழை]*

**பிற்குளம்** *pir-kuḷam,* பெ. (n.) கடைக்குளம் (உத்திராடம்) (நாமதீப.110); the twenty-first nakṣatra.

*[ பின் + குளம் ]*

**பிற்கூழை** *pir-kūḻai,* பெ. (n.) வீட்டின் புழைக்கடை (இ.வ.); back yard of a house.

*[ பின் + கூழை. கடை → களை → கழை → குழை → கூழை ]*

**பிற்கொழுங்கோல்** *pirkoḻuṅ-kōl,* பெ. (n.) இருபத்தியாறாம் விண்மீன் (உத்தரட்டாதி) (பிங்.); the 26th nakṣatra.

*[ பின் + கொழுங்கோல் ]*

**பிற்சரிவு** *pir-šarivu,* பெ. (n.) பின்னேரம்; afternoon.

*[ பின் + சரிவு. சரி → சரிவு = ஞாயிற்றின் சரிவு ]*

**பிற்சனி** *pircaṉi,* பெ. (n.) மானேறு (உத்தரம்); the 12th naksatra. (நாமதீப.107.)

*[ பின் + சனி ]*

**பிற்சாமம்** *pircāmam,* பெ. (n.) இரவின் கடைச்சாமம்; the fourth and last watch of the night.

*[ பின் + சாமம். யாமம் → சாமம் ]*

**பிற்சேர்க்கை** *pircērkkai,* பெ. (n.) புத்தகம் அல்லது ஆவணத்திற்குக் கொடுக்கப்படும் தொடர்புடைய சேர்க்கைப்பகுதி; appendix, addendum.

*[ பின் + சேர்க்கை. சேர் + கை - சேர்க்கை. பெரும்பாலும் கொடுக்கப்படும் சேர்ப்புப் பகுதிகள் புத்தகத்தின் பின்பகுதியில் கொடுக்கப்படுவதுபற்றி இச்சொல்லாக்கம் வழக்கூன்றியுள்ளது. ]*

**பிற்சேர்பு** *pir-cērbu,* பெ. (n.) *பிற்சேர்க்கை* பார்க்க; see *pircērkkai.*

*[ பின் + சேர்பு. சேர் → சேர்பு ]*

**பிற்பக்கம்** *pir-pakkam,* பெ. (n.) 1. பின்புறம்; back side 2. தேய்பிறை; dark fortnight. (பரிபா.11,35,உரை.)

*[பின் + பக்கம்]*

**பிற்பகல்** *pir-pagal,* பெ. (n.) பகலின் பின்பகுதி நண்பகலுக்கும் மாலைக்கும் இடைப்பட்ட பொழுது; afternoon. '*தமக்கின்னா பிற்பகல் தாமேவரும்*' (குறள்,319.) பிற்பகல் இரண்டு மணிக்குத் தேர்வு தொடங்கும் (உ.வ.)

*[ பின் + பகல். பகு → பகல். காலை (6மணி)யிலிருந்து நண்பகல் (12மணி) வரைக்கான காலம் முற்பகல். நண்பகலிலிருந்து மாலை (6மணி) வரைக்கான காலம் பிற்பகல்]*

**பிற்பட்ட** *pirpaṭṭa,* பெ. அ. (adj.) காலத்தில் பிந்திய; later. உலகில் உயிர்கள் தோன்றியதில் மக்கள் தோற்றம் பிற்பட்ட வளர்ச்சியாகும்.

*[ பின் + பட்ட. படு → பட்ட]*

**பிற்படு–தல்** *pir-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. பின்னதாதல்; to be behind in time or place. '*பிற்படக்கிளவார்*' (தொல்.சொல்.286.). 2. பிந்துதல்; to slacken, delay, as in one's speed, speech, etc.

*[பின் + படு–,]*

**பிற்படுத்தப்பட்டவகுப்பு** *pirpaḍuttappaṭṭa vaguppu,* பெ. (n.) (அரசின் கணிப்பில்) கல்விக்கும் பொருளியல் முன்னேற்றத்துக்கும் சிறப்புக் கவனம் தேவை என்று குறிப்பிடப்பட்ட இனம்; communities identified by the government as needing special attention because of their economic and social backwardness, backward class or community. பிற்படுத்தப்பட்ட வகுப்பு மாணவர்களுக்கும் கல்வியில் இடஒதுக்கீடு உண்டு (உ.வ.)

*[பின் + படுத்தப்பட்ட + வகுப்பு]*

**பிற்படை** *pir-paḍai,* பெ. (n.) கூழைப்படை (வின்.); rear of an army.

*[பின் + படை]*

**பிற்பலம்[1]** *pir-palam,* பெ. (n.) பிப்பலி (அரு.நி.662.); pippali.

**பிற்பலம்[2]** *pirpalam,* பெ. (n.) அரசு (அரு.நி.662.); pipal.

**பிற்பாடர்** *pirpāḍar,* பெ. (n.) பிற்பட்டவர்; persons living in later times. '*அக்காலத்துக்குப் பிற்பாடராய்*' (திவ். திருநெடுந்.26,பக்.228.).

*[பிற்பட்டவர் → பிற்பாடர்]*

**பிற்பாடு[1]** *pir-pāḍu,* பெ. (n.) பின்னிகழ்ச்சி; subsequent event. '*பிற்பாட்டுக்கு நொந்து*' (ஈடு,1,5,ப்ர).

*[பின் + பாடு. படு → பாடு]*

**பிற்பாடு[2]** *pirpāḍu,* வி.அ (adv.) 1. பின், பிறகு; afterwards. '*அதற் பிற்பாடு*' (மணிமே.12,78.). நீ போன பிற்பாடுதான் எனக்கு இந்த எண்ணம் வந்தது (உ.வ.). 2. பிற்காலத்தில்; later. ஐந்து ஆண்டுகளுக்கு முன் தோன்றிய கருத்து பிற்பாடு ஒரு கோட்பாடாக வளர்ந்தது. (உ.வ.).

*[பின் + பாடு. படு → பாடு]*

**பிற்பாடு[3]** *pir-pāḍu,* பெ. (n.) தரத்தில் குறைவுடையது; things of lesser value. '*இது பிற்பாடென்றார்*' (பெரியபு.திருஞான.568.).

*[ பின் + பாடு. படு → பாடு ]*

**பிற்பாடை** *pirpāḍai,* பெ. (n.) மாட்டுக் குற்றவகை (மாட்டுவா.); a defect in cattle.

**பிற்பாய்** *pir-pāy,* பெ. (n.) கலிமி பாய் மரத்திலும் சலாய்களிலும் ஏற்றப்படும் பாய்கள்; after-sail, as on the mizzen mast and its stays. (M.Navi.)

*[பின் + பாய்]*

**பிற்பிறவி** *pirpiravi,* பெ. (n.) அழுக்கு; after birth secundines.

*[ பின் + பிறவி. பிற → பிறவி = குழந்தைப் பிறப்பிற்குப் பின்வரும் அழுக்கு ]*

**பிற்புறணி** *pir-purani,* பெ. (n.) பழிச்சொல், கோள் (அவதூறு) (இ.வ.); backbiting, scandal.

*[பின் + புறணி]*

**பிற்போக்கு** *piṟ-pōkku,* பெ. (n.) *பின்போக்கு 2,3,4.* பார்க்க; see *piṉpōkku 2,3,4.*

*[ பின் + போக்கு. போ → போக்கு]*

**பிற்றடி** *piṟṟaḍi,* பெ. (n.) பின்னடி (வின்.); latter part, as of a season.

[*பின் → பின்னடி →பிற்றடி. 'பின்னடி' பார்க்க*]

**பிற்றல்¹** *piṟṟal,* பெ. (n.) பின்வாங்குகை(வின்.); retiring, retreating.

*[பின் → பின்று → பிற்றல்]*

**பிற்றல்²** *piṟṟal,* பெ. (n.) மண்வெட்டிக் கழுத்து (வின்.); the neck of a hoe.

*[பித்தல் → பிற்றல்]*

**பிற்றி** *piṟṟi,* பெ. (n.) பிந்திப் போனது (சங்.அக.); that which goes behind.

*[ பின் + தி– பிந்தி → பித்தி → பிற்றி ]*

**பிற்றிகம்** *piṟṟigam,* பெ. (n.) முள்ளி; thorny plant.

**பிற்றை¹** *piṟṟai,* பெ. (n.) *பின்றை¹* (திவா.) பார்க்க; see *piṉṟai¹.*

*[ பின் → பின்றை → பிற்றை ]*

**பிற்றை²** *piṟṟai,* பெ.அ (adv.) *பின்றை²* (திவா.) பார்க்க; see *piṉṟai².*

*[ பின் → பின்றை → பிற்றை ]*

**பிற்றைநிலை** *piṟṟai-nilai,* பெ. (n.) 1. பிற்பட்ட நிலை; subsequent state. 2. வழிபாட்டு நிலை; attitude of obedience. '*பிற்றை நிலை முனியாது கற்றல் நன்றே*'.

*[ பிற்றை + நிலை. நில் → நிலை ]*

**பிற¹** *piṟa,* பெ. (n.) 1. வேறுசில; the other, the rest. '*அன்ன பிறவும்*' (தொல்.சொல்.57) நான் கூறாத பிறவும் இவ்வறிக்கையில் சேர்க்கப்பட்டுள்ளன. 2. மேலும் இருக்கிற, மற்ற, ஏனைய; other. கட்டுரையின் பிறபகுதி களை இனிமேல்தான் தட்டச்சு செய்ய வேண்டும்.

ம. பிற

*[ பின் = திரும்ப, வேறு. பின்னும் = திரும்பவும். பின்னும் பின்னும் = திரும்பத்திரும்ப. பின்னொன்று = வேறொன்று. பின → பிற (மு.தா.294) ]*

**பிற²** *piṟa,* இடை. (part.) ஓர் அசைநிலை (தொல்.சொல்.281.); an expletive or euphonic particle.

*[ பின் = திரும்ப, வேறு. பின்னும் = திரும்பவும். பின்னும் பின்னும் = திரும்பத்திரும்ப பின்னொன்று = வேறொன்று. பின → பிற (மு.தா.294) ]*

**பிற²–த்தல்** *piṟa-,* 4 செ.கு.வி. (v.i.) 1. தோன்றுதல், பிறத்தல்; to be born, as children. '*ஆன்ற குடிப்பிறத்தல்*' (குறள்,681.). 2. உருவாதல் (தொல்.சொல்.115.); to be produced, as sound, to be expressed, as oil from seeds, to be derived from, as a word from root. ஒரு வேர்ச் சொல்லினின்று நூற்றுக் கணக்கான சொற்கள் பிறக்கின்றன, ஊழலுக்கு விடிவுகாலம் எப்பொழுது பிறக்குமோ தெரியாது (உ.வ.).

**ம.** பிறக்க; **தெ.** பெட்டு; **து.** பெத்பினி, பெத்துனி; **கோத.** பெர்; **கொலா.** பெட்; **நா.** பெட்ட

*[பிள் → பிற. தாயும் பிள்ளையும் வேறுவேறு பிரிந்துவிடவேண்டும் என்று பேறுகாலத்திற் பெண்டிராற் கூறப்படுதல் காண்க. தாய் வயிற்றினின்று சேய் பிரிதலே பிறத்தலாம். (மு.தா.262) பிறத்தல் ஒன்றிலிருந்து உருவாவதைக் குறிப்பது போல் ஒலி உருவாவது, எண்ணெய் விதையினின்று எண்ணெய் எடுப்பது, வேர்ச்சொல்லிலிருந்து சொற்கள் உருவாவது போன்றனவும் பிறத்தல் என்னும் வினையால் குறிக்கப்பட்டன.]*

peṟu- to obtain, to get or beget, to bear, to bring forth; verbal noun pēṟ-u, a brining forth or birth, a thing obtained or a benefit. piṟ-a, to be born, to proceed from, is doubtless a related word: and there is probably a relationship between these words (especially the later) and piṟa, other, piṟ-agu, after, puṟa-m, the exterior, and even poṟ-u, to bear or sustain. Comp. the Lat. par-io, pe-per-i, to bring forth, to acquire. Possibly the ultimate base of all these words is the Indo-European preposition pra, signifying progressive motion, expansion, excess etc; and the Zend form to this preposition fra, indicates the propriety of classing Latin fru-x with the other derivatives (CGDFL 600.)

பிறத்தல், பெறுதல் ஆகிய இரண்டு வினைகளையும் ஒரே அடியினின்று பிறந்தனவாகத் திராவிடச் சொற்பிறப்பு அகர முதலி கொள்கிறது. கால்டுவெல்லும் அக்கருத்தினரே. 'பிள்' என்னும் வேரினின்று வளர்ந்த பிறத்தல் தாயினின்று பிரிந்து வரும் வகையில் தோன்றியது. பெறுதல் என்னும் வினை பிள்ளைப் பேற்றைக் குறித்தாலும் அதன் அடிப்பொருள் ஒருபொருளை அடைதல் (பெறுதல்) என்பதாகும். பிரிந்து வருதல், பொருளை அடைதல் என்னும் பொருள்படும் சொற்கள் இரண்டும் பிறத்தலைக் குறித்தமையால் இவ்விரு சொற்களைத் தொடர்புடையன எனக்கொள்ள இடமளித்தது. ஆயினும் இவ்விரு சொற்களின் அடிப்பொருள்கள் வெவ்வேறானவை

**பிறஇசிவு** *piṟaiśivu,* பெ. (n.) இசிவு வகையுளொன்று; a kind of fits.

*[பிற + இசிவு]*

**பிறக்கடி** *piṟakkaḍi,* பெ. (n.) பின்வாங்கின அடி; backward step. '*பிறக்கடி யொதுங்காப் பூட்கை*' (பதிற்றுப்.80,8.)

*[பின் → பிற → பிறக்கு + அடி]*

**பிறக்கடியிடு—தல்** *piṟakkaḍi-y-iḍu-,* 20 செ.கு.வி. (v.i.) நிலைகெட்டோடுதல் (தொல்.பொ.60,உரை.); to beat a retreat.

*[பிறக்கடி + இடு. பின் → பிற → பிறக்கு = பின்வாங்கும் நிலை. பிறக்கடி = பின்னுக்கு வைக்கும் அடி.]*

**பிறக்கணி—த்தல்** *piṟakkaṇi-,* 11 செ.குன்றாவி. (v.t.) *புறக்கணி—த்தல்* (வின்.)பார்க்க; see *puṟakkaṇi-*

*[புறம் = வெளி,வெளிப்பக்கம், புறப் பொருள். புறம் → புறவு → பிறகு = வெளிப்புறம், புறம்பானவன். புறகு → புறக்கு (மு.தா.295.) புறக்கு + அணி — புறக்கணி]*

**பிறக்கம்¹** *piṟakkam,* பெ. (n.) **1.** ஒளி; brightness, splendour. '*மாமணிப் பிறக்கம்*' (திருவாச.3,124.). **2.** உயர்ச்சி; loftiness,

elevation. *'சிலம்புகளின் பிறக்கங் காணாய்'* (காஞ்சிப்பு.தழுவ.26.). 3. குவியல்; heap *'பிணத்தின் பிறக்கம்'* (கம்பரா.நாகபா.156.)

*[ பிறங்கு → பிறக்கு → பிறக்கம்]*

**பிறக்கம்²** *piṟakkam,* பெ. (n.) 1. மரக்கிளை (திவா.); branch of a tree. 2. மான்கொம்பு; horn of deer. 3. அச்சம் (திவா.); awe, fear.

*[ பிள் → பிள → பிற → பிறங்கு = பிரிந்து செல்லும் மரக்கிளை, மரக்கிளை போல் பிரிந்து காணப்படும் மான்கொம்பு, மனவமைதியில் பிரிவுபட்ட அச்சவுணர்வு]*

**பிறக்கவியம்** *piṟakkaviyam,* பெ. (n.) மயிலாருங்குருத்து; a tree.

**பிறக்கிடு¹-தல்** *piṟakkiḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. பின்வாங்குதல்; to retreat. *'அடிபிறக்கிட்டோனையும் பெண் பெயரோனையும்'* (தொல்.பொ.65, உரை.). 2. பின்னிகழ்தல்; to occur subsequently.

*[ பிறக்கு + இடு. பின் → பிற → பிறவு → பிறகு → பிறக்கு. பிறக்கிடுதல் = பின்னுக்குச் செல்லுதல் (மு.தா.293.) 'இடு' து.வி. ]*

**பிறக்கிடு²-தல்** *piṟakkiḍu-,* 17 செ.குன்றாவி. (v.t.) கொண்டையிலே முடித்தல் (வின்.); to fasten in one's hair. *'நீர் திரண்டன்ன கோதை பிறக்கிட்டு'* (மதுரைக்.562.).

*[ பிறக்கு + இடு-,]*

**பிறக்கீடு** *piṟakkīḍu,* பெ. (n.) பின்னிடுகை; retreat *'அடிபிறக்கீடு மரிது'* (தொல்.பொ.68. மேற்கோள்)

*[ பின் → பிறவு → பிறக்கு. பிறக்கு → இடு – பிறக்கிடு → பிறக்கீடு. 'இடு' து.வி. இடு → ஈடு. முதனிலைத் திரிந்த தொழிற்பெயர் ]*

**பிறக்கு¹-தல்** *piṟakku-,* 5 செ.குன்றாவி. (v.t.) அடுக்குதல்; to heap, pile up. *'சூடு கோடாகப் பிறக்கி'* (பொருந.243.)

**பிறக்கு²** *piṟakku,* பெ. (n.) 1. பின்பு; back, rear, behind. *'துறை பிறக்கொழியப் போகி'* (பெரும்பாண்.351.) 2. முதுகு(நிகண்டு); back 3. குற்றம் (சூடா.); fault, blemish

*[பின் → பிற → பிறவு → பிறக்கு (மு.தா. 293) ]*

**பிறக்கு³** *piṟakku,* பெ.எ (adv.) வேறாக; differently *'நசை பிறக்கொழிய'* (சிலப்.5,95.)

*[பிற → பிறக்கு]*

**பிறக்கு⁴** *piṟakku,* பெ. (n.) வாழ்வு (அக.நி.); living.

*[ பிற → பிறக்கு ]*

**பிறகத்துக்கட்டை** *piṟagattu-k-kaṭṭai,* பெ. (n.) கப்பல் மரவகை; stem post (naut.)

**பிறகது** *piṟagadu,* பெ. (n.) வெள்ளைக்கல் சுண்ணம்; quick lime.

**பிறகரீகம்** *piṟakarīgam,* பெ. (n.) அகில் (பிரகரிகம்) (மலை.); eagle wood.

*[ பிரகரிகம் → பிறகரீகம் ]*

**பிறகருவி** *pira karuvi,* பெ. (n.) உடம்பிற்குரிய 60 வகை உண்மை(தத்துவ)ப்பொருட்கள்; the sixty thattuvas of the body.

*[ பிற + கருவி ]*

**பிறகள்** *pirakal,* பெ. (n.) *பிற* பார்க்க; see *pira, 'பொய்ப் பொருள் பிறகள்'* (சீவக. 1595.).

*[ பிற → பிறகள் ]*

**பிறகாலே** *piragālē,* கு.வி.எ. (adv). பின்பு (வின்.); afterwards, after.

*[ பின் → பிற → பிறவு → பிறகு → பிறகாலே ]*

**பிறகிடு[1]–தல்** *piragidu-,* 17 செ.குன்றாவி. (v.t.) பின்புறமாக அணிதல்; to wear, as an ornament, so as to hang at the back. *'பீலித் தழையைப் பிணைத்துப் பிறகிட்டு'* (திவ். பெரியாழ். 2, 6, 1.)

*[ பிறகு + இடு –, ]*

**பிறகிடு[2]–தல்** *piragidu-,* 20 செ. கு. வி. (v.i.) 1. தோற்றல்; to flee; to be defeated. *'சமரிற் பிறகிடு முதியரு மபயரும்'* (குமர. பிர. மீனாட். பிள். 38.). 2. கழிதல்; to be past, time or event. *'பிற்கிட்ட மாதம்'* 3. பின்வாங்குதல்; to back slide *'பிறகிடல் நின் பெருந்தகையோ'* (மனோன். v. iii, கொச்சகக் கலி.)

*[ பிறகு + இடு–, ]*

**பிறகிபத்திகம்** *piragipattigam,* பெ. (n.) அசோகு; a tree.

**பிறகு[1]** *piragu,* பெ. (n.) 1. பின்புறம் (அக.நி.); back, rear. 2. முதுகு; back. *'பிறகுங் குழலுங் கண்டபடி'* (திவ். திரு நெடுந். 21, வ்யா. 174.).

*[ பின் → பிற → பிறவு → பிறகு (மு.தா.293)]*

**பிறகு[2]** *piragu,* கு.வி.எ (adv.) 1. பின்பு. (யாழ்.அக.); afterwards, after. தேர்வுக்காகப் படிக்கும் போது பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்று தள்ளிப் போடக் கூடாது (உ.வ.) 2. சற்றுப் பொறுத்து (சது.); presentlly, shortly. வேறொரு வேலை இருக்கிறது இதைப் பிறகு பார்த்துக் கொள்ளலாம் (உ.வ.) 3. பின்னோக்கி (வின்.); backward. 4. தாழ்வாக(வின்.); below, in an inferior position.

*[ பின் → பிற → பிறவு → பிறகு ]*

**பிறகுகாட்டல்** *piragukāttal,* பெ. (n.) புணர்ச்சிக்குடன்படாது பின்புறங்காட்டிப் படுக்கை (கொக்கோ. 4, 45.); (erot.) turning away from one's husband on bed, showing ill-humour.

*[ பின் → பிற → பிறவு → பிறகு + காட்டல். பிறகு = பின்புறம், முதுகு. காண் → காட்டு → காட்டல். 'அல்' தொ.பெ.ஈறு ]*

**பிறகுகாண்(ணு)–தல்** *piragu-kān(nu)-,* 16 செ.குன்றாவி. (v.t.) தோற்கடித்தல்; to defeat. *'காலையும் மனத்தையும் பிறகு காண்பது'* (கம்பரா. படைத். 33.).

*[பின் → பிற → பிறவு → பிறகு + காண்,–]*

**பிறகுத்தம்** *pirakuttam,* பெ. (n.) வஞ்சிக்கொடி. (சங்.அக.); rattan-palm.

**பிறகுவாளி** *piraguvāli,* பெ. (n.) பின்புறமாகச் சாத்தும் அணிவகை; ornament worn on the back. *'பின்பும் பிறகுவாளியுமான அழகை'* (ஈடு, 8, 8, 9.).

*[ பிறகு + ஆளி ]*

**பிறங்கடை** *piṟaṅgaḍai,* பெ. (n.) 1. மகன் (சூடா.); son. *'பானுவின் நீள் பிறங்கடை'* (சேதுபு. சேதுவ. 9.). 2. வழித்தோன்றல் (பிங்.); descendant. *'முந்நீர்வண்ணன் பிறங்கடை'* (பெரும்பாண். 30.). 3. மருகன் (நாமதீப. 198.); nephew. 4. அயலிடம் (அக.நி.); strange place.

*[ பின் → பிற → பிறவு → பிறகு → பிறக்கு. பிறக்கு → பிறங்கு → பிறங்கடை = பின்னால் வரும் உரிமையாளன் (வாரிசு) (மு.தா. 283) பிறங்கு + அடை = ஒரு குலம் அழியாமல் விளங்குவதற்குக் காரணமாயுள்ளது (சு.வி. 18.) ]*

**பிறங்கல்[1]** *piṟaṅgal,* பெ. (n.) 1. பெருமை (சூடா.); greatness. 2. மிகுதி (பிங்.); abundance. 3. உயர்ச்சி (பிங்.) (அகநா. 8, உரை); height, eminence. 4. நிறைவு (சூடா.); fullness. 5. திரள்; pile, heap, mass. *'மென்றினைப் பிறங்கலும்'* (சீவக. 148.). 6. ஒளி (பிங்.); brightness, splendour. 7. துறக்கம் (மோட்சம்) (அக.நி.); heaven. 8. அரசன் (அக.நி.); king. 9. ஒலி (சூடா.); sound.

*[பிறங்கு → பிறங்கல். 'அல்' தொ.பெ.ஈறு]*

**பிறங்கல்[2]** *piṟaṅgal,* பெ. (n.) 1. மலை; hill, mountain. *'எண்மரும் பிறங்கல்'* (அகநா. 8.). 2. சிறுமலை (யாழ்.அக.); mound, hillock. 3. கற்பாறை; rock. *'கதிர்ப் பிறங்கால வட்டம்'* (சூளா. மந்திர. 20.).

*[ பிறங்கு → பிறங்கல். 'அல்' தொ.பெ.ஈறு ]*

**பிறங்கி** *piṟaṅgi,* பெ. (n.), கருநெல்லி; black Indian gooseberry.

**பிறங்கியல்** *piṟaṅgiyal,* பெ. (n.) முதுகாடு (யாழ்.அக.); cremation ground.

மறுவ. சுடுகாடு

*[ பிற → பிறங்கு + இயல் ]*

**பிறங்கு[1]-தல்** *piṟaṅgu-,* 5 செ.கு.வி. (v.i.). 1. விளங்குதல்; to shine, glitter, glisten. *'பிறங்கொளி சேர் விண்ணாகி'* (திருவாச. 7, 18.). 2. உயர்தல்; to be high, lofty, elevated. *'பிறங்குநிலை மாடத்து'* (புறநா. 69.). 3. சிறத்தல்; to be great, exalted, dignified. *'பெருமை பிறங்கிற் றுலகு'* (குறள், 23.). 4. மிகுதல்; to grow full, complete, abundant. *'பிறங்குநீர்ச் சேர்ப்பினும்'* (புறநா. 49.). 5. பெருகுதல்; to overflow, inundate. *'மாய்ப்பதோர் வெள்ளம் போலும்..... பிறங்கி வந்து'* (கலித். 146.). 6. செறிதல்; to be densely crowded, close together. *'பிணம் பிறங்கப் பெயர்த் திட்டன்று'* (பு.வெ. 1, 10.). 7. பெருத்தல்; to grow large in size. *'மேதியன்ன கல் பிறங்கியவின்'* (மலைபடு. 111.) 8. நிலைமாறுதல்; to change, move. *'மேல் பிறங்காப் பாண்டிலா'* (சீவக. 175.). 9. ஒலித்தல் (சங்.அக.); to sound.

*[ புள் → பள் → பள → பளபளப்பு. பள் → (பாள்) → பள்ளம் = பளபளப்பு. பள் → வாள் = ஒளி. புல் → (பூல்) → பூ = பொலிவு, அழகு, மலர். புல் → பொல் → பொலி → பொலிவு. (மு.தா, 135.) புள் → பிள் → பிற → பிறங்கு ]*

**பிறங்கு[2]** *piṟaṅgu,* பெ. (n.) விரலிறை (நிகண்டு); lines on the inside of the finger points.

*[ பிற → பிறங்கு ]*

**பிறங்குநாறி** *piṟaṅgunāṟi,* பெ. (n.) புறங்கை நாறி பார்க்க; see *puṟaṅgai nāṟi.*

*[ புறங்கைநாறி → பிறங்குநாறி ]*

**பிறச்சின்னை** *piṟaccinnai,* பெ. (n.) மீன்வகையுளொன்று; a kind of fish.

**பிறசாதனம்** *piṟaśādāṉam,* பெ. (n.) தேக்கு (மலை.); teak.

**பிறசாதிகம்** *piṟa śādigam,* பெ. (n.) தக்கோலம்; cubeb pepper.

**பிறசாதினி** *piṟaśādiṉi,* பெ. (n.) *பிறசாரணி* பார்க்க; see *piṟasāraṇi.*

**மறுவ.** பிறசாரணி, பிறசாரினி, அம்மையார் கூந்தல்

**பிறசாரணி** *piṟaśāraṇi,* பெ. (n.) கொடியார் கூந்தல்; a kind of spreading plant.

**பிறசாரினி** *piraśāriṉi,* பெ. (n.) அம்மையார் கூந்தல் (மலை.); Sita's thread.

**பிறசான்றோர்** *piṟa śāṉṟōr,* பெ. (n.) கழக (சங்க)ப் புலவரல்லாத புலவர் பெருமக்கள் (தொல். பொ. 487, உரை.); classic poets other than the sangam poets.

*[ பிற + சான்றோர். பின் → பிற. சாலுதல் = நிறைதல். சால → சான் → சான்றோர் = அறிவு நிறைந்தோர். கழகத்துப் புலவர்கள் அனைவரும் அறிவு நிறைந்தவர்கள். அவர்கள் மட்டுமன்றி அவர்களோடு ஒப்ப வைத்துப் பார்க்கும் தகைமை சான்ற புலவர் பெருமக்கள் பலர் இருந்திருக்கின்றனர் என்பதை இச்சொல்லாட்சி புலப்படுத்துகிறது ]*

**பிறத்தி** *piṟatti,* பெ. (n.) வழுதலை; plant brinjal.

**மறுவ.** கத்திரி.

**பிறத்திப்பூரம்** *piṟattippūram,* பெ. (n.) நாயுருவி (சங்.அக.); a plant.

**பிறத்தியார்** *piṟattiyār,* பெ. (n.) 2 பிறர்; others. அவர் பிறத்தியார் பணியில் தலையிட மாட்டார் (உ.வ.) 2. தன்குழுவுக்குப் புறம் பானவன் (அயலானவன்); one who belongs not to his group, outsider.

*[ பிற → பிறத்தியார் ]*

**பிறதகி** *piṟatagi,* பெ. (n.) முள்ளி; Indian nightshade.

**பிறதலை** *piṟa-talai,* பெ. (n.) கப்பலின் பிற்பக்கம்; aft or after part of a ship.

*[ புறம் → பிறம் + தலை ]*

**பிறதனம்** *piṟadaṉam,* பெ. (n.) கடுக்காய்; Indian gallnut.

**மறுவ.** பிறதேமம், பிறதேசி.

**பிறந்தகம்** *piṟaṉdagam,* பெ. (n.) 1. பிறந்த வீடு, குறிப்பாகப் பெண்களுக்குப் பிறந்த வீடு, புக்ககத்திற்கு எதிரானது; house or family in which one is born, the parental house, generally of women, opp. to pukkagam. *'பிறந்தகமும் மது'* (குமர.பிர. மீனாட். இரட். 20) 2. மணமகனுக்கு மணமகள் வீட்டார் அளிக்கும் வரிசை (வின்.); gift received by a bridegroom from his bride's family. 3. தலைக் குழந்தைக்குத் தாயைப் பெற்ற பாட்டி அளிக்கும் பரிசு (வின்.); gift to the first born child from its maternal grand mother.

*[ பிற → பிறந்த + அகம் ]*

**பிறந்தகோலம்** *piranda kōlam,* பெ. (n.) 1. ஆடையற்ற அம்மண நிலை, பிறந்த மேனி; stark nakedness. 2. முழுதும் துறக்கை; renunciation.

*[ பிறந்த + கோலம் ]*



**பிறந்தநாள்** *piranda-nāḷ,* பெ. (n.) 1. ஒருவர் பிறந்த நாள் (ஆண்டு, மாதம் ஆகியவற்றையும் உள்ளடக்கியது); the day on which one is born (inclusive of year a month.). *'பிறந்த நாடொட்டும்'* (மணிமே. 13, 53.). 2. ஒவ்வொரு ஆண்டும் வருகிற ஒருவரின் பிறந்த நாள்; birthday. பிறந்த நாளைக் கொண்டாடுவது நம் நாட்டு வழக்கமன்று (உ.வ.). 3. பிறந்த விண்மீன்; natal star. *'பிறந்தநாள் முன்னுவாநாள்'* (குற்றா. தல. கவற்சன. 14.).

க. குட்டிகதின; து. புட்டிதின

*[ பிற → பிறந்த + நாள் ]*

**பிறந்தமேனி** *piranda-mēṉi,* பெ. (n.) 1. பிறந்த கோலம் (கொ.வ.) பார்க்க; see piranda kōlam. 2. மாசின்மை (வின்.); genuineness; spotless simplicity, as of a child.

*[ பிற → பிறந்த + மேனி]*

**பிறந்தவம்** *pirandavam,* பெ. (n.) பிறப்பு (சது.); birth, nativity.

*[ பிற → பிறந்த → பிறந்தவம் ]*

**பிறந்தவழிக்கூறல்** *piranda-vaḻi-k-kūral,* பெ. (n.) இடத்து நிகழ் பொருளை இடத்தாற் கூறும் ஆகுபெயர் வகை (தொல். சொல். 110, தெய்வச்); a kind of metonymy. *"அவள் உடுத்தியிருந்தது காஞ்சிபுரம்"*

*[ பிற → பிறந்த + வழி + கூறல். கூறு → கூறல். 'அல்' தொ.பெ.ஈறு ]*

**பிறந்தவீடு** *pirandaviḍu,* பெ. (n.) பிறந்தகம்; house or family in which one is born.

மறுவ. பிறந்த இல்லம்.

து. புட்டில்.

*[ பிற → பிறந்த + வீடு]*

**பிறந்தாள்** *pirandāḷ,* பெ. (n.) புறங்கால்; back of the leg.

*[ புறம் → பிறம் + தாள் ]*

**பிறந்திளைத்தல்** *pirandiḷaittal,* தொ. பெ. (vbl.n.) பிறவி வெப்பத்தில் ஆதன் அழுந்துதல்; becoming tired of birth. *'...... எல்லாப்பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்'*

*[ பிறந்து + இளைத்தல். பிற → பிறந்து. இளை → இளைத்தல். 'தல்' தொ.பெ. ஈறு ]*

**பிறந்தை** *pirandai,* பெ. (n.) 1. பிறவி; birth. *'பிறந்தை யினத்தின் மாண்டோ ரீடே'* (ஞானா, 39, 9.). 2. துன்பம்; distress. *'உடற்சுமக்கும்*

*பிறந்தை நீங்கி'* (சிவராத்.பு. கடவுள். 18.). 3. கரிசு (பாவம்) (அக.நி.); sin. 4. இயல்பு (சுபாவம்) (வின்.); nature, natural state. 5. பிறந்தகம்; birth place. *'வையாய்! நின் பிறந்தையாகிய மலையை விட்டு'* (பரிபா. 11, 43, உரை.).

*[ பிற → பிறந்தை = பிறவி, இனம் (genus) (மு.தா. 262) ]*

**பிறநீக்கம்** *pira-nikkam,* பெ. (n.) உடைமை மாற்றம் (பராதீனம்); alienation.

*[ பிற + நீக்கம். நீங்கு → நீக்கு → நீக்கம்]*

**பிறநீர்க்கண்டி** *piranir-k-kandi,* பெ. (n.) *பிறநீர்க் கோவை* பார்க்க; see *piranir-k-kovai.*

*[ பிற + நீர் + கண்டி ]*

**பிறநீர்க்கொள்ளல்** *pirnir-k-kollal,* தொ.பெ. (vbl.n.) *பிறநீர்க்கோவை* பார்க்க; see *piranir-k-kovai.*

*[ பிற + நீர் + கொள்ளல். 'அல்'தொ.பெ. ஈறு ]*

**பிறநீர்க்கோவை** *piranir-k-kovai,* பெ. (n.) உடம்பில் வெப்பம் மிகுந்து, நீர்க்கோவையுடன் வீக்கத்தையேற்படுத்தும் நோய்; a kind of disease.

*[பிற + நீர் + கோவை]*

**பிறநூன்முடிந்ததுதானுடன்படுதல்** *pira-nūn-mudindadutān-udanpadudal,* பெ. (n.) முப்பத்திரண்டு உத்திகளுள் பிற நூல்களின் முடிபுக்குத் தான் உடம்படும் உத்தி (நன்.15.); (gram.) acquiescence in the conclusions of a work other than one's own, one of 32 utti.

*[ பிறநூன்முடிந்தது + தான் + உடன்படுதல். 'தல்' தொ.பெ.ஈறு ]*

**பிறநோய்ச்சுரம்** *piranōy-c-curam,* பெ. (n.) நோய் முதலியவற்றா லுண்டாகும் வெப்புக் காய்ச்சல்; ague associated with other diseases.

*[ பிற + நோய்சுரம் ]*

**பிறப்பார்** *pirappār,* பெ. (n.) நாய்வேளை (மலை.); a sticky plant that grows best in sandy tracts.

**பிறப்பாரி** *pirappāri,* பெ. (n.) *பிறப்பார்* பார்க்க; see *pirappār.*

*[பிறப்பார் → பிறப்பாரி]*

**பிறப்பி[1]-த்தல்** *pirappi-,* 18 செ.குன்றாவி. (v.t.) கருப்பையினின்று குழந்தையை வெளிப் படுத்தல்; to cause to be born, to get the foetus out the womb.

*[பிறப்பு → பிறப்பி–, 'பி' பி.வி.ஈறு ]*

**பிறப்பி[2]-த்தல்** *pirappi-,* 18 செ.குன்றாவி. (v.t.) நடைமுறைப்படுத்துவதற்கு ஏற்றவகையில் ஆணை வெளியிடுதல்; to issue an order, to promulgate an ordinance. கலவரப்பகுதில் கண்டவுடன் சுடும்படி காவல்துறை ஆணை பிறப்பித்துள்ளது (உ.வ.).

*[பிற → பிறப்பி–,]*

**பிறப்பிக்கை** *pirappikkai,* பெ. (n.) உண்டாக்குகை; originate.

*[ பிற → பிறப்பி → பிறப்பிக்கை]*

**பிறப்பிடம்** *pira-p-pidam*, பெ. (n.) பிறந்த இடம்; place of one's birth, place of origin. birth place. பிறப்பிடச் சான்றிதழ் வாங்கி வைக்க வேண்டும் (உ.வ.).

*[ பிற → பிறப்பு + இடம். 'ப்' தொ.பெ.ஈறு ]*

**பிறப்பியம்** *pirappiyam*, பெ. (n.) பிறப்புக் குறிப்பு (சாதகம்); horoscope. *"என் தமையனார் பிறப்பியம் பார்ப்பதற்காக வினைதீர்த்தான் கோயிலுக்குப் போயிருக் கிறார்"* (உ.வ.).

*[பிறப்பு → பிறப்பியம். 'இயம்' ஓர் ஈறு.]*

**பிறப்பிலம்** *pirappilam*, பெ. (n.) மருட்கற்றாழை வகை; a kind of aloe.

**பிறப்பிலி** *pirappili*, பெ. (n.) 1. கடவுள் (பிறப்பில்லாதவன்); god, as unborn. *'அறவன் பிறப்பிலி'* (திருமந். 1616.). 2. உடன் பிறப்பில்லாதவன் (வின்.); one without brother or sister.

*[ பிற → பிறப்பு + இலி. இல்லி → இலி = இல்லாதவன். 'இ' உடைமை குறித்த ஈறு. ]*

**பிறப்பிற்குரிய** *pirappirkuriya*, பெ.அ. (adj.) பிறப்பிற்கிடமான; generative as in organ.

*[ பிறப்பிற்கு + உரிய ]*

**பிறப்பிறப்பறல்** *pirappirapparal*, தொ.பெ. (vbl.n.) நரைதிரையற்ற சாவாமூவா உடம்பெய்தல்; attain salvation without having any rebirth.

*[ பிறப்பு + இறப்பு + அறல்.அறு → அறல். 'அல்' தொ.பெ.ஈறு]*

**பிறப்பிறப்பு** *pirappirappu*, பெ. (n.) பிறப்பும் இறப்பும்; birth and death. *'பிறப் பிறப்பு மூப்புப் பிணி துறந்து'* (திவ். இயற். பெரியதி. 80.).

*[ பிற → பிறப்பு + இறப்பு. இற → இறப்பு. 'ப்' தொ.பெ.ஈறு ]*

சிலர் பிறப்பு இறப்பு என்னும் சொற்கள் முறையே பகரமெய்ச் சேர்க்கையும் அதன் நீக்கமும் பெற்றிருப்பதால் உயிர் உடம்பொடு கூடுதலையும் அதைவிட்டு நீங்குதலையும் குறிக்குமென்று கூறுவர். பிறப்பு என்பது 'பிள்' என்னும் வேரினின்றும் இறப்பு என்பது 'இறு' என்னும் வேரினின்றும் பிறந்திருப்பதாலும், பிணங்கு இணங்கு எனப் பிறவெதிர்ச் சொற்களும் பிறப்பு இறப்பு என்பவை போன்றே யமைந்திருப்பதாலும் அது போலிக் கூற்றென்க. (சொ.க. 32.).

**பிறப்பு** *pirappu*, பெ. (n.) 1. பிறத்தல்; birth, nativity. *'விழிப்பது போலும் பிறப்பு'* (குறள், 339.) 2. தோற்றம் (உற்பத்தி); origin, production. *'பிறப்பின் ஆக்கம் வேறுவேறு இயல'* (தொல்.எழுத். 83.). 3. இனம் (சாதி); order or class of beings including animals and vegetables, caste. *'இழுக்கம் இழிந்த பிறப்பாய் விடும்'* (குறள், 133.) 4. தொடக்கம்; beginning, commencement, as of a month, or a year. *'ஆண்டு(வருஷ)ப்பிறப்பு, மாசப் பிறப்பு'* 5. உடன் பிறந்தவர்(வின்.); brother or sister. 6. மகளிரணியும் முளைத்தாலி; necklace of small seed-like gold pieces. *'காசும் பிறப்புங் கலகலப்ப'* (திவ்.திருப்பா.7). 7. வெண்பாவின் இறுதியில் நிரையசை யொன்றுடன் உகரமான நேரசை கூடிவரும் வாய்பாடு (காரிகை, செய். 5.); (pros.) a formula of a foot of one nirai-y-ašai followed by a nēr-ašai ending in, occuring as the last foot of a veṇbā 8. அச்சம் (பிங்.); fear, alarm. 9. மயக்கம் (பிங்.); confusion, bewilderment.10. நெருக்கம் (பிங்.); closeness, thickness, denseness.

ம. பிறப்பு; க. புட்டு, ஜட்டு; து. புட்டு;கோத. பெர்ப்

*[ பிள் → பிற → பிறப்பு (மு.தா. 262) 'ப்' தொ.பெ.ஈறு]*

**பிறப்புச்சான்றிதழ்** *pirappu-c-cāṉṟidaḻ*, பெ. (n.) ஒருவரது பிறந்த நாள், பிறந்தவிடம், பெற்றோர், ஆகியவற்றைத் தெரிவிக்கும் ஆவணம்; birth certificate. பள்ளிக்குச் சேர்வதற்குப் பிறப்புச் சான்றிதழ் தேவை (உ.வ.).

*[பிறப்பு + சான்றிதழ்]*

**பிறப்புத்தொந்தம்** *pirappu-t-tondam*, பெ. (n.) வழிவழியாய் ஒருவனுக்கு உண்டாகும் பண்புக் குற்றங்கள் (யாழ்ப்.); inherited characteristics.

*[பிறப்பு + தொந்தம் ]*

Skt. dvandva > த. தொந்தம்

**பிறப்புரிமை** *pirappurimai*, பெ. (n.) ஒருவருக்குப் பிறப்பால் வரும் சிறப்புரிமை; birth right. கல்வி பிறப்புரிமையாக வேண்டும் (உ.வ.).

*[பிறப்பு + உரிமை ]*

**பிறப்புவமப்போலி** *pirappuvamappōli*, பெ. (n.) அணிவகை (பாப்பா. 50.); (rhet.) a figure of speech.

*[பிறப்பு + உவமைப்போலி ]*

**பிறப்புவரிசை** *pirappu-variśai*, பெ. (n.) மக்கட்பிறவி வாய்ப்பதற்கு முன் ஆதன் அடையும் படிநிலைகள்; the considered stage of a soul prior to taking human birth.

*[பிறப்பு + வரிசை ]*

திருவாசகத்திலுள்ள சிவபுராணத்தில் ஆதனின் படிமவளர்ச்சி *"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப் பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக் கல்லாய் மனிதராய்ப்..... பிறந்திளைத் தேன் எம்பெருமான்"* எனவருகிறது.

**பிறப்புவழி** *pirappu-vaḻi*, பெ. (n.) 1. குடிவழி; family line, lineal descent. 2. குடும்பவியற்கை; hereditary disposition.

மறுவ. சரவடி, கால்வழி

*[ பிற → பிறப்பு + வழி ]*

**பிறப்புவாசி** *pirappu-vāśi*, பெ. (n.) பிறவி இயல்பு (வின்.); that which is inherent innate or natural.

*[பிற → பிறப்பு + வாசி ]*

**பிறப்புறுப்புகள்** *pira-p-puruppukaḷ*, பெ. (n.) குழந்தைப் பேற்றுக்கு உதவும் உறுப்புகள்; genitals.

*[பிறப்பு + உறுப்புகள் ]*

**பிறபொருள்வைப்பு** *pira-poruḷ-vaippu*, பெ. (n.) வேற்றுப் பொருள் வைப்பு (வீரசோ. அலங். 11.); (rhet.) a figure of speech.

*[பிற + பொருள் + வைப்பு. 'ப்' தொ.பெ.ஈறு ]*

**பிறம்பத்தங்கால்** *pirambattaṅgāl*, பெ. (n.) பின்னங்கால்; hind leg

*[பின் → பினம் → பிறம் → பிறம்பு (மு.தா.293) பிறம்பு + கால் –பிறம்பத் தங்கால். ]*

**பிறமுகம்பார்-த்தல்** *piṟamugam-pār-*, 4.செ.கு.வி. (v.i.) பிறர் உதவி வேண்டுதல்; to seek the favour of another. 2. ஒழுக்கங் குறைவாக நடத்தல் (விபசாரஞ்செய்தல்) (இ.வ); to commit adultery.

[பிறர் + முகம் + பார்-, பிறர்முகம் பார்த்தல், மாற்றார்(அயலார்) முகத்தைப் பார்த்தல் என்னும் நேரடிப் பொருளைக் கொண்டது. உதவிக்காவும்ஒழுக்கக்குறை செயலுக்காகவும் பிறரை நோக்கும் போது-, பிறர் முகத்தைப்பார்ப்பது இயல்பு. அதனால் அப்பொருள்கள் இக்கூட்டுச் சொல்லுக்கு ஆகி வந்துள்ளன]

**பிறமூலம்** *piṟa - mūlam*, பெ (n.) மலவாயிலில் தினவையுண்டாக்கு மூலநோய் வகை; a kind of piles.

[பிற + மூலம்]

**பிறர்** *piṟar*, பெ. (n.) அயலார்; outsiders, strangers. *"பிறர்க்கின்னாமுற்பகற் செய்யின்"* (குறள்,319).

[பின் → பின → பிற → பிறிது. பிற → பிறகு = வேறு. பிறம்→பிறன் = வேறொருவன், மற்றவன், அயலான் (மு.தா.294) பிறன்→ பிறர். 'ர்' ப.பா.ஈறு]

**பிறர்துயர்காத்தல்** piṟar- tuyar-kāttal, பெ. (n.) முப்பத்திரண்டறங்களுள் பிறர்க்கு வந்த துன்பத்தை நீக்குதல் (பிங்); helping others in their distress, redressing grievences, one of muppattiranḍaṟam'

[பிற → பிறர் + துயர் + காத்தல். கா → காத்தல். 'தல்' தொ.பெ.ஈறு]

**பிறர்பொருட்டனுமானம்** *piṟar-poruṭṭa ṉumāṉam*, பெ. (n.) *பிறர் பொருட்டுய்த் துணர்வு பார்க்க*, see *piṟar poruṭṭuytuṇarvu.*

[பிறர் + பொருட்டு + அனுமானம். பிறர் பொருட்டனுமானம் தன்பொருட்டனு மானத்திற்கு எதிரானது]

Skt. anumāna > த. அனுமானம்

**பிறர்பொருட்டனுமானமிதி** *piṟar-poruṭṭa ṉumāṉamiti*, பெ. (n.) பிறர் பொருள் உய்த்துணர்வி (அனுமானம்) னின்று பெறும் அறிவு; (log.) knowledge derived from piṟar poruṭṭaṉumāṉam.

[பிறர் + பொருட்டு + அனுமானமிதி]

**பிறர்பொருட்டுய்த்துணர்வு** *piṟarporuṭṭuyt tuṇarvu*, பெ. (n.) பிறரை ஒளிபெறச்செய்து கொள்ளும் உய்த்துணர்வு, தன் பொருட்டுய்த் துணர்விற்கு எதிரானது; inference employed to enlighten others opp. to taṉ poruṭṭuyttuṇarvu.

[பிறர் + பொருட்டு + உய்த்துணர்வு]

**பிறர்மனைநய-த்தல்** *piṟarmaṉai-naya-*, 3 செ.கு.வி. (v.i.) பிறன் மனையாளைப் புணர விரும்பல்; to love another's wife

[பிறர்மனை + நய-, பிறர்மனை =அயலார் மனைவி. நயத்தல் = விரும்புதல்]

**பிறர்முகம்பார்-த்தல்** *piṟarmugam pār-*, 3 செ.கு.வி (v.i.) *பிறன் மனைநய-த்தல்* பார்க்க; see *piṟar maṉai naya-*,

[பிறர்முகம் + பார்]

**பிறரோகி** *piṟarōgi* பெ (n.) வறட்சுண்டி; wormkiller, wildy climber.

**பிறவடை** *piṟavaḍai* பெ. (n.) கண்ணைச் சுற்றிலும் போடும் பற்று மருந்து; an external medicine intended to be applied round the eye.

[ புறவடை → பிறவடை ]

**பிறவலி** *piṟavali* பெ. (n.) கண்டதிப்பிலி; root of long pepper.

**பிறவலிஇசிவு** *piṟavali- iśivu,* பெ. (n.) சுரம் முதலியவற்றாலுண்டாகும் வலிப்பு நோய்; fever or delirium marked by convulsions

[ பிறவலி + இசிவு ]

**பிறவன்** *piṟavaṉ,* பெ. (n.) உடன்பிறந்தவன்; brother.

[ பிள் → பிற → பிறவன்.'அன்' ஆ.பா.ஈறு ]

**பிறவாநெறி** *piṟavā-neṟi,* பெ. (n.) வீடுபேறு; salvation, as facing one from birth. '*பிறவாநெறி தந்த பேரருளன்*' (திருமந்.1803.)

[ பிள் → பிற + ஆ + நெறி. 'ஆ' எதிர்மறை இடைநிலை. ]

**பிறவி**[1] *piṟavi,* பெ. (n.) 1. பிறப்பு; birth. '*பிணிபிறவி கேடென்று*' (தேவா. 935,1.) 2. பிறப்பு, 2,5. (வின்.) பார்க்க; see piṟappu 2,5 3. இயல்பு (கொ.வ.); natural disposition. 4. மறுபிறவி; transmigration, subjection of the soul to births. '*பிறவிப்பெருங்கடல் நீந்துவர்*' (குறள்,10.)

ம. பிறவி.

[ பிள் → பிற → பிறவி. 'வி' பெ.ஆ.ஈறு ]

**பிறவி**[2] *piṟavi,* பெ. (n.) உடன்பிறந்தவள்; sister.

[ பிள் → பிற → பிறவி. 'வி' பெ.பா.ஈறு ]

**பிறவிக்கடல்** *piṟavi-k-kaḍal,* பெ. (n.) பிறவியாகிய பெருங்கடல்; ocean of births '*புணைவன் பிறவிக்கடனீந்துவார்க்கே*' (திவ்.திருவாய்.2,8,1.)

[ பிறவி + கடல். கட → கடல். மக்கட் பிறப்பைக் கடலாக உருவகம் படுத்தப் பட்டதனால் உருவான சொல் ]

**பிறவிக்கல்** *piṟavikkal,* பெ. (n.) இயற்கையான கல்; natural stone.

[ பிறவி + கல் ]

**பிறவிக்கற்பம்** *piṟavi-k-kaṟpam,* பெ. (n.) உடல் நீடித்திருக்க உண்ணும் மருந்து; medicine for strengthening the body and prolonging life.

[ பிறவி + கற்பம் ]

**பிறவிக்குணம்** *piṟavi-k-kuṇam,* பெ. (n.) 1. இயல்பு; natural disposition. 2. முன்பிறவித் தாக்கத்தால் உண்டாங் குணம்; innate characteristics, due to the influence of previous births. '*நட்பும் தயையும் கொடையும் பிறவிக்குணம்*' (தனிப்பா,1,91,5)

[ பிற → பிறவி + குணம். குள் → குண் → குணம் ]

**பிறவிக்குருடன்** *piṟavi-k-kuruḍaṉ,* பெ. (n.) பிறந்தது முதலே கண் தெரியாதவன்; one born blind.

*[பிற → பிறவி + குருடன். குல் → குரு → குருள் → குருடு → குருடன். 'அன்' ஆ.பா.ஈறு]*

**பிறவிகளறவுரை** *piṟavikaḷaṟavurai,* பெ. (n.) முற்பிறவியைக் கூறுகின்ற அறவோர் உரை (சீவக.2848,உரை.தலைப்பு); teacher's words revealing past births.

*[பிற → பிறவி + களற + உரை]*

**பிறவிச்சீர்பந்தம்** *piṟavi-c-cīr-pandam,* பெ. (n.) சீர்பந்த செய்நஞ்சு(பாடாணம்) (வை.மூ.); a mineral poison.

**பிறவிச்சு** *piṟaviccu,* பெ. (n.) *புறவீச்சு* பார்க்க; see *puṟaviccu.*

*[புறவீச்சு → பிறவிச்சு]*

**பிறவிச்சுஇசிவு** *piṟaviccu iśivu,* பெ. (n.) பிடரியில்தோன்றும் இசிவு நோய் வகை (வின்.); a disease of the nape tetanus.

*[பிறவிச்சு + இசிவு]*

**பிறவிச்சுபாவம்** *piṟavi-c-cubāvam,* பெ. (n.) *பிறவியியல்பு* (கொ.வ.) பார்க்க; see *piṟaviyiyalbu.*

*[பிறவி + சுபாவம்]*

Skt. sva-bhāva > த. சுபாவம்

**பிறவிச்செய்ந்நஞ்சு** *piṟavic-ceynnañju,* பெ. (n.) முப்பத்திரண்டு இயற்கைச் செய்ந் நஞ்சுகள்; mineral poison, especially arsenic in its natural state, of which there are 32 kinds.

*[பிறவி + செய்ந்நஞ்சு. பிறவி = இயற்கை, இயல்பு.]*

பிறவிசெய்ந்நஞ்சு (பாஷாணம்) 32 ஆவன.

1. மரமூலம்(அங்கிரமாதி) செய்ந்நஞ்சு, 2. மை(அஞ்சன) செய்ந்நஞ்சு, 3. நீர்க்கொள்ளி (அப்பிரக) செய்ந்நஞ்சு, 4. கல்பொடி(அவுபல) செய்ந்நஞ்சு, 5. இலிங்க செய்ந்நஞ்சு, 6. கந்தக செய்ந்நஞ்சு, 7. காட்டுத் தாளகம், 8. நண்டு (கர்க்கடக) செய்ந்நஞ்சு, 9. கற்பரி செய்ந்நஞ்சு, 10. கல் செய்ந்நஞ்சு, 11. காய்ச்சற் செய்ந்நஞ்சு, 12. காந்த செய்ந்நஞ்சு, 13. கார்முகிற் செய்ந்நஞ்சு, 14. குதிரைப்பல் செய்ந்நஞ்சு, 15. கோளக செய்ந்நஞ்சு, 16. அவுரம்(கௌரி) செய்ந்நஞ்சு, 17. சங்க செய்ந்நஞ்சு, 18. சரகாண்ட செய்ந்நஞ்சு, 19. சாலாங்க செய்ந்நஞ்சு, 20. குதிரைக்காலிரும்பு(இலாமத) செய்ந்நஞ்சு, 21. சீதாங்க செய்ந்நஞ்சு, 22. சீர்பந்த செய்ந்நஞ்சு,23. சூத செய்ந்நஞ்சு, 24. தகட்டரிதாரம் செய்ந்நஞ்சு, 25. தாலம்ப செய்ந்நஞ்சு, 26. துத்த செய்ந்நஞ்சு, 27. கொட்டி செய்ந்நஞ்சு, 28. பலண்டுறுக செய்ந்நஞ்சு, 29. பிறங்கி செய்ந்நஞ்சு, 30. மனோசிலை செய்ந்நஞ்சு, 31. மிருத செய்ந்நஞ்சு, 32. வென்றலி செய்ந்நஞ்சு.

**பிறவிச்செல்வம்** *piṟavi-c-celvam,* பெ. (n.) கருவிலேயுற்ற திரு; the state of being born with a silver spoon in one's mouth.

*[பிற → பிறவி + செல்வம். பிறப்பில் இருக்கும் செல்வச் செழிப்பைக் குறிப்பது.]*

**பிறவிச்செவிடு** *piṟavi-c-ceviḍu,* பெ. (n.) பிறந்தது முதலே காது கேளாதவன்; a born deaf.

க. கட்டுகிவுடு.

*[ பிறவி + செவிடு ]*

**பிறவிடுதி** *pira-vidudi,* பெ. (n.) பிறவிடம் (பரஸ்தானம்) (யாழ்ப்.); staying at another's house before a journey.

*[ பிற(ர்) + விடுதி ]*

**பிறவித்தங்கம்** *piravi-t-tangam,* பெ. (n.) இயற்கையா யுண்டாகும் மாசறு பொன்; natural superior gold.

*[ பிறவி + தங்கம் ]*

**பிறவித்தீட்டு** *piravi-t-tittu,* பெ. (n.) குழந்தை பிறந்ததனால் உண்டாம் வாலாமை (யாழ்.அக.); pollution on child birth, among the family relations.

*[ பிறவி + தீட்டு ]*

**பிறவித்துயர்** *piravi-t-tuyar,* பெ. (n.) 1. பிறக்கையாகிய துன்பம்; the misery of births.'*பிறவித் துயரற*' (திவ். திருவாய்.1,7,1.). 2. பிறவன், பிறவி (சகோதர சகோதரி)களின் இறப்பால் உண்டாகும் துன்பம் (யாழ்.அக.); distress caused by bereavement of a brother or sister.

*[ பிறவி + துயர். பிறவி = பிறப்பு, உடன் பிறப்பு ]*

**பிறவித்துவக்கு**[1] *piravi-t-tuvakku,* பெ. (n.) பிறவியாலுண்டாம் உறவு; relationship by birth. '*அவளுக்குப் பிறவித் துவக்காலே நம்மவர்களென்று கண்ணோட்டம் பிறக்கும் ராக்ஷஸிகளும்*' (ரஹஸ்ய. 406.).

*[ பிறவி + துவக்கு ]*

**பிறவித்துவக்கு**[2] *piravi-t-tuvakku,* பெ. (n.) தொடர்ந்துவரும் பிறவியின் தொடர்ச்சி; continuity of birth.

*[ பிறவி + துவக்கு ]*

**பிறவித்துவந்தம்** *piravi-t-tuvandam,* பெ. (n.) *பிறவித் தொந்தம்* (வின்.) பார்க்க; see *piravi-t-tondam.*

*[ பிறவி + துவந்தம் ]*

Skt. dvandva> த. தொந்தம் → துவந்தம்

**பிறவித்துழதி** *piravi-t-tuladi,* பெ. (n.) பிறவித்துயர் பார்க்க; see piravi-t-tuyar. '*பிறவித் துழதி நீங்க*' (திவ்.திருவாய்.2,7,7.)

*[ பிறவி + துழதி ]*

**பிறவித்தொடக்கு** *piravi-t-todakku,* பெ. (n.) *பிறவித் துவக்கு*[1] பார்க்க; see *piravi-t-tuvakku*[1].

*[ பிறவி + தொடக்கு ]*

**பிறவித்தொடர்** *piravi-t-todar,* பெ. (n.) *பிறவித்துவக்கு*[1] பார்க்க; see *piravi-t-tuvakku*[1]

*[ பிறவி + தொடர் ]*

**பிறவித்தொந்தம்** *piravi-t-tondam,* பெ. (n.) பிறவியியல்பு (வின்.); congenital failings, as fretfulness, impatience.

*[ பிறவி + தொந்தம் ]*

Skt. dvandva> த. தொந்தம்

**பிறவிநோக்கல்** *piravi-nōkkal,* தொ.பெ. (vbl.n.) பிறவித் தொடங்கல்; about to be born.

[பிறவி + நோக்கல்]

**பிறவிநோய்** *piravi-nōy,* பெ. (n.) 1. பிறப்பிலுண்டான பிணி; congenital disease. 2. *பிறவித்துயர் 1* பார்க்க; see *piravi-t-tuyar 1.*

[பிறவி + நோய்]

**பிறவிப்பயன்** *piravi-p-payan,* பெ. (n.) பிறப்பின் பயன்; object of one's birth; achievement in life.

[பிறவி + பயன்]

**பிறவிப்பாடாணம்** *piravi-p-pāḍāṇam,* பெ. (n.) *பிறவிச் செய்ந்நஞ்சு* பார்க்க; see *piravi-c-ceynañju.*

[பிறவி + பாடாணம்]

Skt. pāṣāṇa > த. பாடாணம்

**பிறவிப்பொன்** *piravi-p-pon,* பெ. (n.) இயற்கைப் பொன்; natural gold.

[பிறவி + பொன்]

**பிறவிமயக்கு** *piravi-mayakku,* பெ. (n.) தோன்றும் (உற்பத்தியாகும்) போதேயுள்ள மயக்கம்; natural allurements of life.

[பிறவி + மயக்கு. முயங்கு → மயங்கு → மயக்கு]

**பிறவிமலடி** *piravi-maladi,* பெ. (n.) மலடி (கொ.வ.); barren or sterile woman.

[பிறவி + மலடி. மலடு → மலடி. 'இ' பெ.பா.ஈறு]

**பிறவிமலடு** *piravi-maladu,* பெ. (n.) மகப்பேறு உண்டாகாமை; inborn barrenness.

[பிறவி + மலடு]

**பிறவிமறு** *pirvimaru,* பெ. (n.) பிறந்த போதேயுள்ள மறு; moles and warts found from the birth.

[பிறவி + மறு]

**பிறவிமூலம்** *piravi-mūlam,* பெ. (n.) அரத்த மூலநோய்; congenital haemorrhoids.

[பிறவி + மூலம்]

**பிறவியாசாரம்** *piravi-y-āšāram,* பெ. (n.) பிறவியாரதம் (யாழ்ப்.) பார்க்க; see piraviyāradam.

[பிறவி + ஆசாரம்]

Skt. ācāra > த. ஆசாரம்

**பிறவியாரதம்** *piravi-y-āradam,* பெ. (n.) இயற்கையிலேயே புலாலுண்ணாதிருக்கை (யாழ்ப்.); abstinence from flesh eating from birth.

[பிறவி + ஆரதம்]

**பிறவியியல்பு** *piravi-y-iyalbu,* பெ. (n.) ஒருவரிடம் அல்லது ஒன்றிடம் அமைந்திருக்கும் அடிப்படை இயல்பு; natural disposition.

[பிற → பிறவி + இயல்பு.]

**பிறவியொழி–த்தல்** *piṟavi-y-oḻi-,* 4 செ.கு.வி. (v.i.) பிறவித் தளையினின்று விடுதல்; to be free from rebirth.

[பிறவி + ஒழி–,பிற → பிறவி.]

**பிறவிருத்தியா–தல்** *piṟaviruttiyā-,* 6 செ.கு.வி. (v.i.) மலங்கழிதல்; to have motion.

[பிற + விருத்தி + ஆ–,]

Skt. vriddhi > **த.** விருத்தி

**பிறவிவாசல்** *piṟavi-vāšal,* பெ. (n.) **1.** அல்குற் நுழைவு; osexternum. **2.** கருப்பை வழி; ostium vagina.

[பிறவி + வாசல். வாய் + இல்– வாயில் → வாசல்]

**பிறவிவேர்** *piṟavi-vēr,* பெ. (n.) ஆசை; worldy attachments, considered as the root of birth. 'ஆசையென்கிற பிறவிவேர்' (சீவக.409, உரை.)

[பிள் → பிற → பிறவி + வேர்]

**பிறவினை**[1] *piṟa-viṉai,* பெ. (n.) பிறரைக் கொண்டு செய்விக்கச் செயலை யுணர்த்தும் வினை (தொல். எழுத். 76, இளம்பூ.); (gram.) causative verb, opp.to taṉ-vinai.

[பிற + வினை]

ஒரு வினை எழுவாயின் வினையாக இருப்பது தன்வினை என்றும் எழுவாயின் வினையாக இல்லாமலிருப்பது பிறவினை என்றும் மரபிலக்கணங்கள் பெயரிட்டுள்ளன. மரபிலக்கணங்கள் காண் என்பதைத் தன்வினை என்றும் காட்டு, காண்பி, காட்டுவி என்பனவற்றைப் பொதுவாகப் பிறவினை என்றும் கொள்ளும் (இலக்.கொத்து.71,73) தன் வினையிலிருந்து பிறவினை உருவாகும் முறைகளை **1.** து ஈற்றைச் சேர்த்தல் (நட-நடத்து, அமர்–அமர்த்து) **2.** மென் தொடர் குற்றுகர இறுதியை வன்தொடர்க் குற்றுகர இறுதியாக மாற்றுதல் (திரும்பு – திருப்பு, அடங்கு - அடக்கு) **3.** உயிர்த்தொடர் நெடிற்றொடர்க்குற்றுகர இறுதியை வன்றொடர்க்குற்றுகரமாக மாற்றுதல் (பழகு - பழக்கு, ஆடு –ஆட்டு, மாறு - மாற்று) **4.** விகுதி களையும் கால இடை நிலைகளையும் சேர்க்கும் போது க், த், ப் ஆகிய வல்லொற்றுகளை ஏற்பச் சேர்த்தல் (அழி - அழிக்க, ஒளி - ஒளிக்க) என்று நான்கு வகையாகப் பிரிப்பர். எவ்வாறாயினும் தமிழிலுள்ள எல்லா வினைகளும் 'வி' அல்லது 'பி' ஈற்றை ஏற்கவல்லன.

**பிறவினை**[2] *piṟaviṉai,* பெ. (n.) காமம். (அக.நி.); sexual desire.

[பிறவி → பிற + வினை]

**பிறவு** *piṟavu,* பெ. (n.) *பிறவி* பார்க்க; see *piravi* பிறவினோடிறவுமானான் (தேவா.447,1)

[பிற → பிறவி → பிறவு]

**பிறழ்-தல்** *piṟaḻ-,* 4 செ.கு.வி. (v.i.) **1.** மாறுதல்; to vary, change in form, aspect, colour or quality. '*சிறுகா பெருகா முறை பிறழ்ந்து வாரா*' (நாலடி,110.) **2.** முறைகெடுதல்; to be irregular, misplaced, out of order. '*களிற்றுகிர்ப் பிறழ்பற்பேய்கள்*' (சீவக.804.). **3.** வாக்கு மாறுதல் (கொ.வ.); to break one's word. **4.** மாறுபட்டுக் கிடத்தல்; to lie in disorder. '*மயிலெருத்துறழணிமணி நிலத்துப் பிறழ*' (கலித்.103.) **5.** துள்ளுதல்; to flop, leap, as, fish. '*வயலாரல் பிறழ்நவும்*' (பதிற்றுப்.13.1.)

6. புடைபெயர்தல்; to move '*மாணெழி லுண்கண் பிறழுங் கயலாக*' (கலித்.98.). 7. பெயர்தல் (அக.நி.); to be dislodged, dislocated. 8. விளங்குதல்; to shine, glitter, to twinkle. '*ஒளி பிறழு நெடுஞ்சடை*' (கல்லா.54,11.) 9. முரிதல்; to break, as waves into foam. '*திரை பிறழிய விரும் பௌவத்து*' (பொருந.178.) 10. திகைத்தல்; to be perplexed '*பிறங்க லிடையிடைப் புக்குப் பிறழ்ந்து*' (பரிபா.19,59.) 11. நடுங்குதல் (சூடா.); to tremble; to be tremulous 12. இறந்துபடுதல்; to die. '*பிணிபுநீ விடல்சூழிற் பிறழ்தரு மிவளென*' (கலித்.3.)

[புள் → புரு → புரள். புரள்தல் = சொல்மாறுதல். புரள் → புரளி = மெய்ம் மாற்று, பொய். புரள் → புரட்டு → புரட்டன். புரள் → புரட்சி. புரள் → பிறள் (மு.தா.234.). பிறள் → பிறழ்-,]

**பிறழ்ச்சி** *piṟaḻcci,* பெ. (n.) 1. மாறுகை; change, variation, alteration in form or quality. 2. ஒழுங்கின்மை; disarrangement, irregularity, disorder. 3. வாக்கு மாறுகை; breaking of a promise. 4. புடைபெயர்ச்சி; movement; 5. விளங்குகை; sheen, glitter. 6. நடுக்கம்; shivering, quaking, trembling.

[புரள் → பிரள் → பிறள் → பிறழ் → பிறழ்ச்சி. 'சி' தொ.பெ.ஈறு]

**பிறழ்வு** *piṟaḻvu,* பெ. (n.) *பிறழ்ச்சி* பார்க்க; see *piṟaḻcci.*

[பிறழ் → பிறழ்வு. 'வு' தொ.பெ.ஈறு]

**பிறள்** *piṟaḷ,* பெ. (n.) மற்றவள்; another women, some other woman '*பிறள் குணமி வை*' (தொல்.பொ.234.).

[பிள் → பிற → பிறம் → பிறன். பிறன் (ஆ.பா.)– பிறள் (பெ.பா.). 'ள்' பெ.பா,ஈறு]

**பிறளி** *piṟaḷi,* பெ. (n.) நோய்வகை (மாட்டுவா.); disease.

[புரள் → பிரள் → பிறளி]

**பிறளியெண்ணெய்** *piṟaḷi-y-eṇṇey,* பெ. (n.) குழந்தைகட்குக் கொடுக்கும் மலம்நீக்கி (விரேசன) மருந்தெண்ணெய் வகை (கொ.வ.); a medicinal oil used as purgative for children.

[பிறளி + எண்ணெய்.]

**பிறன்** *piṟaṉ,* பெ. (n.) 1. மற்றையான்; another man, some other man. '*பிறன் கடை நின்றாரிற் பேதையாரில்*' (குறள், 142.) 2. புதியவன்; stranger, alien. 3. அயலான் (வின்.); neighbour. 4. மனம் வேறுபட்டவன்; estranged person. '*பிறன் பெண்டிர்*' (கலித்.84.) 5. பகைஞன்; enemy '*பிறர் அகன்றலை நாடே*' (புறநா.7.).

[பின் → பிற → பிறிது → பிற → பிறகு = வேறு. பிறகு → பிறக்கு = வேறாக. பிறம் → பிறன் = வேறொருவன், மற்றவன் அயலான். 'ன்' ஆ.பா.ஈறு]

**பிறன்கோட்கூறல்** *piṟaṉ-kōṭ-kūṟal,* பெ. (n.) முப்பத்திரண்டு உத்திகளுள்பிறன்கொள் கையைக் கூறும் உத்தி (நன்.15); (gram.) quoting the opinion of another, one of 32 utti, q.v.

[பிறன் + கோள் + கூறல். 'அல்' தொ.பெ.ஈறு]

**பிறன்பொருளாள்** *piṟaṉ-poruḷāḷ,* பெ. (n.) பிறன்மனைவி; wife of another, considered

his property. *'பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை'* (குறள்,141.)

*[ பிறன் + பொருளாள். பொருள் + ஆள். ]*

**பிறன்மனை** *piṟaṉ-maṉai,* பெ. (n.) 1. அயலான் வீடு; another's house 2. அயலான் மனைவி; another's wife *'பிறன்மனை நோக்காத பேராண்மை'* (குறள்,148.)

*[ பிறன் + மனை. ]*

**பிறனில்** *piṟaṉ-il.* பெ. (n.) *பிறன்மனை* பார்க்க; see *piṟaṉmaṉai.* *'பிறனில் புகல்'* (குறள்,144.) *'பிறனில் விழையாமை'* (குறள்,அதி.15.).

*[ பிறன் + இல். 'இல், மனை ஒருபொருட் பன்மொழி. வீட்டைக் குறிக்கும் இவ்விரு சொற்களும் வீட்டிலிருப்பவள் என்னும் அடிப்படையில் மனைவியைக் குறித் துள்ளது. மேலும் இச்சொற்கள் இல்லவள், இல்லாள், இல்லக்கிழத்தி, மனையாள், மனைக்கிழத்தி, மனையாட்டி, மனையோள் என்பன போன்று இதே பொருளில் வரும் பல சொற்களுக்கு அடிப்படையாய் இருக்கின்றன. ]*

**பிறாக்காண்டம்** *piṟākkāṇḍam,* பெ. (n.) சரகாண்ட செய்ந்நஞ்சு (பாஷாணம்) (யாழ்.அக.); a natural arsenic.

**பிறாண்டு¹–தல்** *piṟāṇḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) உகிர் (நகம்) முதலியவற்றால் கீறுதல்; to scratch, as with nails. பூனை வாலை இழுக்காதே அது பிறாண்டிவிடும் (உ.வ.).

*[ புள் → பொள் → பொளி. பொளித்தல் = கிழித்தல். புள் → (புறு) → பூறு → பீறு. பீறுதல் = நகத்தால் கீறுதல் (மு.தா.256.). புள் → (புறு) → பிறு → பிறாண்டு. ]*

**பிறாண்டு²** *piṟāṇḍu,* வி.அ. (adv.) பிற இடம்; elsewhere. தலைவன் ஆண்டும் பிறாண்டும் கூறுங்கூற்றும் (தொல்.பொ.41)

*[ பிற + ஆண்டு. 'ஆ' சேய்மைச் சுட்டு. ]*

**பிறாண்டு³** *piṟāṇḍu,* பெ. (n.) கீறல், கீறுதடம், கீறுகோடு, உகிர்(நக)க்கீறு; scratch. *'ருஷபங்கள் காற்பிறாண்டு கொள்ளுதல்'* (திருவிருத். 7, அரும். பக். 61.).

*[ புள் → (புறு) → பிறு → பிறாண்டு. ]*

**பிறாமுட்டி** *piṟāmuṭṭi,* பெ. (n.) 1. சாயவேர் (மலை.); Indian madder. 2. சிற்றாமுட்டி (சங்.அக.); sticky mallow 3. மயிர்மாணிக்கம் (சங்.அக.); sickle-leaf.

**பிறால்சவ்வு** *piṟāl šavvu,* பெ. (n.) மீனிறைச்சியின் இயற்கைப் பாளம்; flakes.

*[ பிறால் + சவ்வு. ]*

**பிறாழாடம்** *piṟāḻāḍam,* பெ. (n.) மூன்றெழுத்தி லொன்றாகிய சவ்வு; one of the three mystic letter named 'savvu'.

**பிறி¹–தல்** *piṟi-,* 4 செ.கு.வி., (v.i.) *பிரி¹–தல்* பார்க்க; see *piri-¹* *'பிறவிலாத வைந்தொழில்'* (காஞ்சிப்பு. இருபத். 185.).

*[ புள் → பிள் → பிரி → பிறி. ]*

**பிறி²–த்தல்** *piṟi-,* 11 செ.குன்றாவி. (v.t.) *பிரி²-தல்* பார்க்க; see *piri²–.*

*[ புள் → பிள் → பிரி → பிறி. ]*

**பிறிகதிர்ப்படு-தல்** *piṟi-kadir-p-paḍu,* 20 செ.கு.வி. (v.i.) 1. கெடுதல்; to be scattered; to be damaged. *'அவற்றில் ஒன்றும் பிறிகதிர்ப் படாதபடி'* (ஈடு. 1, 9,4.) 2. விட்டு நீங்குதல்; to be separated, excluded, lost. *'நித்திய சூரிகள் திரள் னின்றும் பிறிகதிர்ப் பட்டுப் போந்தார்'* (திவ். திருநெடுந். 20, வ்யா. 157.).

*[ பிரிகதிர்ப்படுதல் → பிறிகதிர்ப்படுதல். பிரிகதிர்ப்படு-தல் பார்க்க. ]*

**பிறிதாகி** *piṟidāgi,* பெ. (n.) 1. பெருநன்னாரி; bigger variety of sarasaparilla. 2. மாகாளி; the root of a twiner.

**பிறிதின்கிழமை** *piṟidiṉ,-kiḻamai,* பெ. (n.) ஒரு பொருளுக்கும் அதன் உருப்பாகாத (அங்கமாகாத) பிற பொருளுக்கும் உள்ள வேறுபாட்டுத் தொடர்பு; separable relation of a possessor and the thing possessed when the latter is not a limb or part of the former. *'தற்கிழமையும் பிறிதின் கிழமையும்'* (நன். 300.).

*[ பிறி → பிறிதின் + கிழமை.]*

**பிறிதினவிற்சி** *piṟidiṉaviṟci,* பெ. (n.) கருதிய பொருளை அதற்குரிய நேர் வகையாற் கூறாது மற்றொருவகையாற் கூறும் அணிவகை (அணியி. 29.); (rhet.) figure of speech by which an idea is expressed not directly but in an indirect or roundabout way describing the consequences, involved.

*[ பிறிதின் + நவிற்சி.]*

**பிறிதினியைபுநீக்கியவிசேடணம்** *piṟidiṉi-yaibu-nikkiya-višēḍaṇam,* பெ. (n.) (இலக்.) சிறப்பு (விசேடியம்)தன்னினத்துப் பிற பொருளைக் குறிக்காது தடுக்கும் சிறப்புத்தன்மை (சீவக. 7, உரை); (gram.) restrictive epithet.

*[ பிறிதின் + இயைபு + நீக்கிய + விசேடணம். பிறி → பிறிதின். நீக்கு → நீக்கு → நீக்கிய .]*

Skt. viṣēḍaṇa > த. விசேடணம்.

**பிறிது** *piṟidu,* பெ. (n.) வேறானது; other thing. *'தம்மொடு செல்வது பற்றியாங் கணும் தேரிற் பிறிதில்லை'* (நாலடி, 120.).

க. பெரது.

*[ பின் = திரும்ப, வேறு. பின்னொன்று = வேறொன்று. பின் → பிற → பிறகு = வேறு. பின → பிற → பிறிது = வேறானது. (மு.தா. 294.) 'து' ஒ.பா.ஈறு.]*

**பிறிதுசாபம்** *piṟidu-šābam,* பெ. (n.) சாவமாற்று; release from a curse. *'கொண்டல் வாகனனுக் கன்பிற் கொடுத்தனன் பிறதுசாபம்'* (திருவாலவா. 1, 22.).

*[ பிறிது + சாபம். சாவித்தல் = கடுமையாகத் திட்டுதல். சாவி → சாவம் → சாபம். ]*

**பிறிதுபடுபாட்டு** *piṟidu-paḍu-pāṭṭu,* பெ. (n.) ஒரு செய்யுளைத் தொடையும் அடியும் வேறுபட உரைத்தால் சொல்லும் பொருளும் வேறுபடாமற் பிறிதொருவகைச் செய்யுளாய் முடியும் மிறைக்கவி (மாறன. 291.); (rhet.) a stanza of particular metre so constructed as to be capable of being scanned into a stanza of different metre.

*[ பிறிது + படு + பாட்டு. பாடு → பாட்டு.]*

**பிறிதுபடுமொழி** *piṟidu-paḍu-moḻi,* பெ. (n.) செய்யுட் குற்றத்தொன்று (யாப்.வி. 525.); (poet.) a defect in versification.

*[ பிறிது + படு + மொழி. ]*

**பிறிதுமொழிதல்** *piṟidu-moḻidal,* பெ. (n.) கருதிய பொருளை மறைத்து அதனைப் புலப்படுத்தற்கு அதுபோன்ற பிறிதொன்றனைக் கூறும் அணி (தண்டி. 51.); (rhet.) figure of speech in which the idea of a subject-matter is sought to be conveyed suggestively by the description of another subject-matter resembling it.

எ–டு: பீலிபெய்சாகாடும் அச்சிறும் அப்பண்டம் சாலமிகுத்துப்பெயின்

*[ பிறிது + மொழிதல். 'தல்' தொ.பெ.ஈறு. ]*

**பிறிதுவிதி** *piṟidu-vidi,* பெ. (n.) சிறப்பு விதி (வின்.); rule of exception, special rule.

*[ பிறிது + விதி. பிறிது = வேறானது, சிறப்பானது. ]*

Skt. vidhi > **த.** விதி.

**பிறிதேகியம்** *piṟitēgiyam,* பெ. (n.) பொன்முசுட்டை; a twiner.

**பிறியகம்** *piṟiyagam,* பெ. (n.) **1.** கடம்பு (மலை.); seaside Indian oak. **2.** ஞாழல்; peacock's crest. **3.** வேங்கை; East Indian kino.

**பிறியம்** *piṟiyam,* பெ. (n.) *பிரியம்* (யாழ்.அக.) பார்க்க; see *piriyam.*

*[ பிரியம் → பிறியம். ]*

**பிறியாநங்கை** *piṟiyā-naṅgai,* பெ. (n.) வேப்பிலை நங்கை; a plant.

**பிறியோலை** *piṟi-y-ōlai,* பெ. (n.) இடையர் ஆடுகளைப் பிரித்தற்குதவும் ஓலைத்தட்டி (திணைமாலை. 113.); palm-leaf screen set between flocks of various shepherds.

*[ பிறி + ஓலை. ]*

**பிறிவு** *piṟivu,* பெ. (n.) *பிரிவு* பார்க்க; see *pirivu. 'பிறிவினை யறியா நிழலது போல'* (திருவாச. 4, 78.).

*[ பிரிவு → பிறிவு. 'வு' தொ.பெ.ஈறு. ]*

**பிறுதானிகா** *piṟudāṉikā,* பெ. (n.) கருங்கொடி; a kind of running plant that yields berries.

**பிறுந்தம்** *piṟundam,* பெ. (n.) வெற்றிலை வகை; one of the two chief varieties of betel.

**பிறுமிநாசி** *piṟumināśi,* பெ. (n.) தாமரைக் கிழங்கு; lotus root.

**பிறை** *piṟai,* பெ. (n.) **1.** இளந்திங்கள் (இளஞ் சந்திரன்); crescent moon, waxing moon *'பிறைமதி'* (குறை, 782.) **2.** பிறைவடிவமான மகளிர் தலையணிவகை ; a crescent shaped ornament, worn by women on the head. *'தண்ணம் பிறையும் தலை பெற நிறுத்துக'* (கல்லா. 14.) **3.** பிறைக்கை பார்க்க; see piṟaikkai (nāṭya.) **4.** ஹு, ஜூ, பூ முதலிய தமிழ் வடிவெழுத்துக்களின் கீழ்ப்பகுதி யாயுள்ள பிறைபோன்ற குறி; a crescent like loop forming part of certain Tamil letters.

**மறுவ.** வளர்பிறை,

**ம.** பிற; **க.** பெரெ; **கோத.** பெர்

*[ புள் → புரு → புருவம் = வளைந்த கண் பட்டை. புரு → புரி. புரிதல் = வளைதல். புரு → (புறு) → புறை → பிறை = வளைந்த நிலா (மு.தா. 228) பிறை = வளைந்த நிலா, பிறை போன்ற தோற்றமுடைய தலையணி, அது போன்றுள்ள எழுத்துகளின் கீழ் வளைவு. ]*

**பிறைக்கபாடம்** *piṟai-k-kabāḍam,* பெ. (n.) உள்ளுறைச் சவ்வாலான நெஞ்சுப்பை (இதயம்)யின் முன் மடிப்பு; semilunar valve of the heart made of three cusps.

*[ பிறை + கபாடம். ]*

Skt. kapāṭa > த. கபாடம்.

**பிறைக்காய்ச்சல்** *piṟai-k-kāyccal,* பெ. (n.) திங்களுக்கொரு முறை வரும் காய்ச்சல் நோய் (கொ.வ.); intermittent fever occurring at monthly intervals.

*[ பிறை + காய்ச்சல். காய் → காய்ச்சு → காய்ச்சல். 'அல்' தொ.பெ.ஈறு. திங்களுக் கொருமுறை வரும் பிறைபோல திங்களுக் கொருமுறை வரும் காய்ச்சல் பிறைக்காய்ச்சல் எனப்பட்டது. ]*

**பிறைக்கீறு** *pirai-k-kiṟu,* பெ. (n.) *பிறைநிலா* (வின்.) பார்க்க; see *piṟai nilā.*

*[ பிறை + கீறு. குள் → குறு → கிறு → கிறுக்கு. கிறுக்குதல் = கீறி வரைதல். கிறு → கீறு = வரி, கோடு. சிறு வரியைப் போல் காணப்படும் பிறை' பிறைக்கீறு எனப்பட்டது. ]*

**பிறைக்குறி** *piṟai-k-kuṟi,* பெ. (n.) *பிறைக்கோடு*[1] பார்க்க; see *piṟai-k-kōḍu*[1]. இணையான ஆங்கிலச்சொல்லைப் பிறைக் குறிக்குள் எழுது (உ.வ.).

*[ பிறை + குறி. ]*

**பிறைக்கை** *piṟai-k-kai,* பெ. (n.) பெருவிரல் நீங்கிய விரல் நான்கும் ஒட்டி வளையப் பெருவிரலை மட்டும் விலக வைக்கும் இணையாவினைக்கை (சிலப். 3, 18, உரை.); (nātya.) a gesture in dancing keeping the four fingers curved and close together and the thumb separated from them and outstretched.

*[ பிறை + கை. ]*

**பிறைக்கொழுந்து** *piṟai-k-koḻundu,* பெ. (n.) இளம் பிறை; crescent *'நெடுஞ்சடைக் கிடந்த குறும்பிறைக் கொழுந்தும்'* (கல்லா. 15, 23.).

*[ பிறை + கொழுந்து.]*

**பிறைக்கோடு**[1] *piṟai-k-kōḍu,* பெ. (n.) எழுதும் பொழுது ஒன்றைப் பற்றிய குறிப்பான செய்தியை அதற்கு முன்னரோ அதற்குப் பின்னரோ தெரிவிக்கும் போது கொடுக்கும் இரு பக்கமும் மூடுதலாக அமையும் குறி; bracket.

*[ பிறை + கோடு. ]*

**பிறைக்கோடு**[2] *piṟai-k-kōḍu,* பெ. (n.) பிறையின் நுனி; cusp of the crescent moon.

*[ பிறை + கோடு. குள் → கொள் → கோள் → கோண். கோணுதல் = சாய்தல். கோண் → கோடு. கோடுதல் = சாய்தல். வளைந்த பிறையின் நுனி பிறைக்கோடு எனப்பட்டது. ]*

**பிறைச்சந்திரன்** *piṟai-c-candiraṉ,* பெ. (n.) *பிறைநிலா* (கொ.வ.) பார்க்க; see *piṟai-nilā.*

*[ பிறை + சந்திரன். ]*

Skt. candra > த. சந்திரன்.

**பிறைச்சவ்வு** *piṟai-c-cavvu,* பெ. (n.) கண்ணிமைத் திரை; hymen.

*[ பிறை + சவ்வு. ]*

**பிறைச்சிந்தாக்கு** *piṟai-c-cindākku,* பெ. (n.) கழுத்தணி வகை (யாழ்ப்.); a kind of neck ornament.

*[ பிறை + சிந்தாக்கு. சிந்தாக்கு = அட்டிகை வகை. ]*

**பிறைசூடி** *piṟai-śūḍi,* பெ. (n.) சிவபெருமான்; (பிறையைத் தலையில் அணிபவன்); Śivaṉ, as wearing the crescent. ***'பித்தா பிறைசூடி'*** (தேவா. 100, 1.).

*[ பிறை + சூடி. சூடு → சூடி. சூடுதல் = தலையில் அல்லது கொண்டையில் அணிதல். 'இ' வினைமுதலீறு ]*



**பிறைத்தலையம்பு** *piṟai-t-talai-y-ambu,* பெ. (n.) பிறை வடிவத்தில் நுனியுடைய அம்பு; arrow with crescent-shaped head. ***'பிறத் தலையம் பிற் சென்னி பெருநிலத் திடுவல்'*** (சீவக. 1142.).

**மறுவ.** வாளி

*[ பிறை + தலை + அம்பு. ]*

**பிறைதொழு-தல்** *piṟai-toḻu-,* 1 செ.கு.வி. (v.i.) பிறை நிலாவை (சந்திரனை) வணங்குதல்; to worship the crescent moon. ***'பிறை தொழுகென்றல்'*** (திருக்கோ. 67.).

*[ பிறை + தொழு-, ]*

**பிறைநாடி** *piṟaināḍi,* பெ. (n.) அல்குல் வாயினிற் படிந்திருக்கும் மென்றோல்; nymphae, labia.

*[ பிறை + நாடி. ]*

**பிறைநிலா** *piṟai nilā,* பெ. (n.) மூன்றாம் பிறை; crescent moon, appearing on the third day after the new moon.

*[ பிறை + நிலா. ]*



**பிறைப்பூண்** *piṟai-p-pūṇ,* பெ. (n.) பிறைவடம் பார்க்க; see piṟai-vaḍam. ***'பிறைப் பூணகாத்து பெருமகன்'*** (பெருங். வத்தவ. 10, 25.).

*[ பிறை + பூண். ]*

**பிறைமலர்** *piṟai-malar,* பெ. (n.) அகத்தி (சங்.அக.); West Indian pea-tree.

*[ பிறை + மலர். ]*

**பிறைமுகப்பணி** *piṟai-muga-p-paṇi,* பெ. (n.) பிறைமுகம் போல அமைத்த அணி (திவ். பெரியாழ். 1, 5, 10 வ்யா. பக். 111.); an ornament.

*[ பிறை + முகப்பு + அணி. முகம் → முகப்பு. ]*

**பிறைமுகவாளி** *piṟai-muga-vāḷi,* பெ. (n.) *பிறைத்தலையம்பு* (சங்.அக.) பார்க்க; see *piṟai-t-talai-y-ambu.*

*[ பிறை + முகம் + வாளி.]*

**பிறையம்பு** *piṟai-y-ambu,* பெ. (n.) *பிறைத் தலையம்பு* பார்க்க; see *piṟa-t-talaiyambu* *'பிறையம்பினெய்தான்'* (சீவக. 2320.).

*[ பிறை + அம்பு. ]*

**பிறையிரும்பு** *piṟai-y-irumbu,* பெ. (n.) அரிவாள்; sickle, as crescent shaped. *'தேய்பிறை யிரும்புதம் வலக்கை சேர்த்தினார்'* (சீவக. 55.).

*[ பிறை + இரும்பு. ]*



**பிறைவடம்** *piṟai-vaḍam,* பெ. (n.) திங்கள் மாலை (சந்திரஹாரம்); necklace of crescent shaped pendants. *'பிறைவடஞ் சூடி'* (சீவக. 171.).

*[ பிறை + வடம். ]*

**பிறைவடிவு** *piṟai-vaḍivu,* பெ. (n.) வளை வுருவம் (வின்.); crescent form, arch.

*[ பிறை + வடிவு. ]*

**பிறைவளை** *piṟaivaḷai,* பெ. (n.) அரைவட்டம்; semicircular.

*[ பிறை + வளை. வள் → வளை. ]*

**பிறைவாய்வாளி** *piṟai-vāy-vāḷi,* பெ. (n.) *பிறைத்தலையம்பு* பார்க்க; see *piṟai-t-talai-y-ambu. 'பிறைவாய் வாளி நிறையுற வாங்கி விட்டான்'* (கம்பரா. இந்திரசித்துவதை. 57.).

*[ பிறை + வாய் + வாளி.]*

**பிறைவாயம்பு** *piṟai-vāy-ambu,* பெ. (n.) *பிறைத்தலையம்பு* (சங்.அக.) பார்க்க; see *piṟai-t-talaiyambu.*

*[ பிறை + வாய் + அம்பு. உர் → அர் → அரம் → அரம்ப → அரம்பன். அரம்பு → அம்பு.]*

**பிறோகி** *piṟōgi,* பெ. (n.) *பிறரோகி* (சங்.அக.) பார்க்க; see *piṟarōgi.*

*[ பிரரோகி → பிறோகி. ]*

**பிறோசனம்** *piṟōšaṉam,* பெ. (n.) புரசு (சங்.அக.); palas tree.

**பிறோனிதம்** *piṟōṉidam,* பெ. (n.) உப்புவகையுள் ளொன்று; a kind of salt.

**பின்**[1] *piṉ,* பெ. (n.) *பின்னல் 1* பார்க்க; see *piṉṉal 1 'பின்னொடு முடித்த மண்ணாமுச்சி'* (அகநா. 73.).

*[புல் → (புல்) → பில் → பின். ]*

**பின்²** *piṉ,* பெ. (n.) **1.** பின்பக்கம்; back, rear part *'கூந்தல் குலைந்து பின்வீழ'* (மணிமே. 8, 36.) **2.** இடம் (பிங்.); place. **3.** கடை (பிங்.); end as in place or time **4.** பிந்தின காலம்; that which is subsequent on time. **5.** தம்பி (திவா.); younger brother.

*[இன் → இனி = இனிமேல், பின்பு. இன் → இன்னும் = இதற்குமேலும். இன் → பின்.]*

**பின்³** *piṉ,* கு.வி.எ. (adv.) பிறகு; after, afterwards, subsquently. *'பின்னாவதென்று பிடித்திரா'* (நாலடி, 5.)

ம., **கோத., துட.** பின்; **க.** பின், பிம், கிம், கின்;

*[இன் → பின்.]*

**பின்⁴** *piṉ,* இடை (part.) **1.** ஏழாம் வேற்றுமையுருபு (நன். 302.); a suffix of the locative case. **2.** வினையெச்ச ஈறு களிலொன்று (தொல்.சொல். 231.); a suffix indicating verbal participle.

*[இல் → இன் → பின்.]*

**பின்கட்டு¹** *piṉ-kaṭṭu,* பெ. (n.) கைகளைப் பின்புறமாகச் சேர்த்துக் கட்டுகை; binding one's arms together at the back. *"திருடனைப் பிடித்துக் கையைப் பின் கட்டாகக் கட்டி நிறுத்தினர்"*

**க.** திங்கட்டு

*[பின் + கட்டு–குள் → கள் → கட்டு]*



**பின்கட்டு²** *piṉkaṭṭu,* பெ. (n.) வீட்டின் பின்புறக் கட்டடம்; rear apartment or back portion of a house. *"நெல் மூட்டைகளைப் பின்கட்டில் அடுக்க வேண்டும்"* (உ.வ.)

*[பின் + கட்டு. கள் → கட்டு]*

**பின்கட்டுமாறுகட்டு–தல்** *piṉ-kaṭṭu-māṟu-kaṭṭu-,* 5 செ. குன்றாவி. (v.t.) பின்புறமாகக் கைகளைச் சேர்த்துக் கட்டுதல்; to pinion, bind the arms of a person, of the back (C.G.)

**க.** திங்கட்டு முரிகட்டு.

*[பின்கட்டு + மாறுகட்டு]*

**பின்கடைவாய்ப்பல்** *piṉkaḍaivāy-p-pal,* பெ. (n.) பல்வரிசையில் கோடியில் இருக்கும் பல்; cheek-tooth.

*[பின் + கடைவாய் + பல்]*

**பின்கதவு** *piṉ-kadavu,* பெ. (n.) கொல்லைக் கதவு; back door. (C.E.M.)

*[பின் → கதவு. கடவு → கதவு. கடவு = கடந்து செல்லும் வழி, வாயில். வீட்டின் பின்புறத்தில் அமைந்த வாயிற் கதவு, பின்கதவு]*

**பின்கரப்பான்** *piṉkarappāṉ,* பெ. (n.) தோல்நோய் வகையு ளொன்று; a kind of skin disease.

*[ பின் + கரப்பான் ]*

**பின்கலை** *piṉkalai,* பெ. (n.) பத்துவகை நாடியு ளொன்று; one of the ten 'nāḍis'.

**பின்காட்டு–தல்** *piṉ-kāṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. முதுகுகாட்டுதல்; to turn back, go away, as in displeasure. 2. தோற்றோடுதல்; to retreat. *'திக்கானை யெட்டும் பின்கட்டிய வாறும்'* (குலோத். கோ. 10.)

மறுவ. புறக்கிடு.

*[பின்+காட்டு–,காண் (த.வி.)–காட்டு (பி.வி.). பின் → பிற்கு. பிறம் → பிறவு → பிறகு = முதுகு. பிறகு → பிறக்கு = முதுகு, முதுகு பின்புறமிருப்பதால் பின்மைப் பெயர் முதுகைக் குறித்தற்காயிற்று. பேசி உடன்பாட்டைத் தெரிவிப்பதற்கு நேர் நிற்றல் தேவை. இதற்கு நேர் மாறாக விருப்பமில்லாமல் செல்வது முதுகு தெரியுமாறுச் செல்வதால் பின்காட்டுதல் அதைக் குறித்தற்காயிற்று. போரில் தோற் றோடுவதும் பின் காட்டுவதே ]*

**பின்கால்** *piṉkāl,* பெ. (n.) *பின்னங்கால்* பார்க்க; see *piṉṉaṅkāl.*

*[ பின் + கால் ]*



**பின்குடுமி** *piṉ-kuḍumi,* பெ. (n.) 1. பின்பக்கமாக முடியுங் குடுமி; tuft of knotted hair at the back of a man's head, dist. fr. muṉ-kuḍumi. 2. பின்புறத்துக் கன்றுக் குடுமி; cropped hair behind the tuft.

*[ பின் + குடுமி. குடு → குடுமி = முடி ]*

**பின்குறிப்பு** *piṉkuṟippu,* பெ. (n.) 1. கடிதத்தில் கையெழுத்திற்குப் பிறகு கவனிக்க வேண்டும் என்ற முறையில் எழுதப்படும் குறிப்பு; post script. பின்குறிப்பு என்று போட்டுக் கட்டாயம் வரவும் என்று எழுதியிருந்தார் (உ.வ.) 2. (புத்தகம், அறிக்கைபோன்றவற்றின்) முடிவை அடுத்து இணைக்கப்படும் கூடுதல் செய்தி; additional note or notes. பின் குறிப்பாகப் பல செய்திகள் கொடுக்கப்பட்டுள்ளன (உ.வ.)

*[ பின் + குறிப்பு ]*

**பின்கூரை** *piṉ-kūrai,* பெ. (n.) வீட்டின் கூரை (வின்.); sloping roof of the back portion of a house.

*[ பின் + கூரை ]*

**பின்கொக்கி** *piṉ-kokki,* பெ. (n.) கழுத்தணியின் கொக்கி (வின்.); hook of a necklace.

*[ பின் + கொக்கி ]*

**பின்கொடு–த்தல்** *piṉ-koḍu-,* 4 செ.கு.வி. (v.i.) *பின்காட்டு–தல் 2* (யாழ்.அக.) பார்க்க; see *piṉ-kāṭṭu-2.*

*[ பின் + கொடு– ]*

**பின்கொண்டை** *pin-kondai,* பெ. (n.) *பின்குடுமி* (யாழ்.அக.) பார்க்க; see *pin kudumi.*

*[ பின் + கொண்டை ]*

**பின்கோடி** *pinkōdi,* பெ. (n.) பின்னோக்கிய நிலையில் மிகத்தொலைவு; hind most part

*[பின் + கோடி. கோடு → கோடி]*

**பின்சந்ததி** *pinšandadi,* பெ. (n.) பின்வரும் குடிவழி; descendant.

*[பின் + சந்ததி]*

**பின்சந்து** *pin-šandu,* பெ. (n.) **1.** இடுப்பின் பின்பக்கம்; back of the hips **2.** விலங்கின் இடுப்பு; hinder part or rump of a beast. **3.** தெருவின் பின்சந்து (வின்.); lane at the back of a row of houses in a street.

*[பின் + சந்து. உம் → அம் → அந்து → சந்து]*

**பின்சரம்** *pinšaram,* பெ. (n.) மஞ்சள் வண்ணக் கனிப்பொருள்; yellow orpiment.

**பின்சரிவு** *pin-šarivu,* பெ. (n.) பின்னேரம் (வின்.); afternoon.

*[பின் + சரிவு. சரி → சரிவு = ஞாயிற்றின் சரிவு]*

**பின்சிகை** *pin-šigai,* பெ. (n.) *பின்குடுமி, 1* (சங்.அக.) பார்க்க; see *pinkudumi 1.*

*[ பின் + சிகை ]*

Skt. šikhā > த. சிகை.

**பின்சுரப்பு** *pinšurappu,* பெ. (n.) கடைசியாகச் சுரக்கும் பால்; the last millk taken from the teat at any one milking as it is particularly rich in butter as compared fore milk.

*[ பின் + சுரப்பு. சுர → சுரப்பு ]*

**பின்செல்(லு)–தல்** *pin-šel(lu)-* 7, செ. குன்றாவி., செ.கு.வி (v. t.) & (v.i.) **1.** பின்தொடர்தல்; to follow obsequiously. *'தொழுதுண்டு பின்செல்பவர்'* (குறள், 1033.) **2.** இணங்கி யொழுகுதல்; to conform to, **3.** வழிபடுதல்; to obey, submit, **4.** கெஞ்சுதல் (வின்.); to entreat, supplicate cringe.

*[ பின் + செல்–, ]*

**பின்செல்லியர்** *pinšelliyar,* பெ. (n.) பின்பற்று பவர், பின்பற்றி நடப்பவர்; follower. **"*இன்று உலகெங்கும் பரவியுள்ள கிறித்துவ மதம் பன்னிரு பின்செல்லியரால் பரப்பப்பட்டதே*".**

*[பின் + செல்லியர்]*

**பின்தங்கியவகுப்பு** *pintangiya-vaguppu,* பெ. (n.) பிற்படுத்தப்பட்ட வகுப்பு பார்க்க; see pirpadutta-p-patta-vaguppu.

*[பின் + தங்கிய + வகுப்பு. வகு → வகுப்பு]*

**பின்தங்கு–தல்** *pintangu-,* 5 செ.கு.வி. (v.i.) **1.** (கல்வி, பொருளியல் போன்றவற்றில்) நிறைவானது என்று கருதத்தகுந்த நிலையை எட்டமுடியாமலிருத்தல்; to lag behind. பொருளியலில் பின்தங்கிய மாவட்டங்களுக்குத் தனிக்கவனம் செலுத்த வேண்டும் (உ.வ.) **2.** (விளையாட்டில்) ஓர்அணி) தோல்விகாணும் நிலையில் இருத்தல்; to trail as in sports. "இடைவேளை வரை **2–3** என்ற கணக்கில் பின்தங்கியிருந்த அணி பிறகு வெற்றிபெற்று விட்டது". (உ.வ.)

து. பிரபூருனி.

*[ பின் + தங்கு–, ]*

**பின்தட்டு** *pin-tattu,* பெ. (n.) **1.** தோணியின் பின் பக்கம் (வின்.); stern of a dhoney. **2.** தோணியின் பின்புறத்துக் குறுக்குக் கட்டை (வின்.); short beam across the stern of dhoney. **3.** குதிரையின் பின்கட்டுவார் (வின்.); back strap of a harness.

*[ பின் + தட்டு ]*

**பின்தலை** *pin-talai,* பெ. (n.) *பின்தட்டு, 1.* பார்க்க, (வின்.); see *pin-tattu 1.*

*[ பின் + தலை ]*

**பின்தளை** *pin-talai,* பெ. (n.) பால்கறக்கும் போது மாட்டின் பின்னங்காலுக்கு இடும் கட்டு (வின்.); strap for the hind legs of a cow when milking.

*[ பின் + தளை ]*



**பின்தாங்கி** *pin-tāngi,* பெ. (n.) சக்கரம் கழலாமைக்காக இடும் வளையம் (வின்.); ring on the inside, holding a wheel in position.

*[ பின் + தாங்கி. தாங்கு → தாங்கி ]*

**பின்திரும்பு–தல்** *pin-tirumbu-,* **5.** செ.கு.வி. (v.i.) பின்பக்கமாகத் திரும்புதல், திரும்பிவருதல்; to turn back, to return.

**து.** பிரபிசியுனி

*[ பின் + திரும்பு. திரு → திரும்பு ]*

**பின்துடரி** *pintudari,* பெ. (n.) பூண்டு வகை; a kind of plant.

**பின்தொடர்–தல்** *pintodar-,* **2** செ. குன்றாவி. (v.t.) *பின்றொடர்–தல்* பார்க்க; see *pinrodar-,* காவலர்கள் குற்றவாளியைப் பின்தொடர்ந்து பிடித்தனர் (உ.வ.).

*[ பின் + தொடர்–, ]*

**பின்பக்கம்** *pin-pakkam,* பெ. (n.) **1.** பின்புறம்; back, rear. **2.** தேய்பிறை நாட்கள்; dark fortnight. **3.** பிற்பகுதி; later part, later stage.

*[ பின் + பக்கம் ]*

**பின்பகல்** *pin-pagal,* பெ. (n.) **1.** பகலின் பிற்பகுதி; afternoon. *'பின்பகலே யன்றியும் பேணா ரகநாட்டு நன்பகலும் கூகை நகும்'* (பு. வெ. 3, 4.). **2.** அந்தி வேளை; evening. *'நன்பகல வணீத்தும் பின்பகற் பிறர்த்தேரும்'* (கலித். 74.) **3.** இரவு; night. (இலக். வி. 606, உரை).

*[ பின் + பகல். பகு → பகல் ]*

**பின்பற்று–தல்** *pin-parru-,* **5** செ.குன்றாவி. (v.t.) **1.** பின் செல்லுதல்; to follow. *'எமக்கிடு மெமக்கிடும் எனப் பின்பற்றியே'* (திருவிளை. வளையல். 28.). **2.** பிரியப்படுதல்; to set one's heart on, love. *'அன்பற்றவரைப் பின்பற்றுவாருளரோ'* (வெங்கைக்கோ.216.). **3.** போல செய்தல் (அனுசரித்தல்.); to imitate, emulate. **4.** இணங்குதல்; to conform to.

*[ பின் + பற்று–, ]*

**பின்பனி** *pin-pani,* பெ. (n.) அறுவகைப் பருவங்களுள் இரவின் பிற்பகுதியில் பனி மிகுதியுடைய கும்பம், மீனம் (மாசி, பங்குனி) மாதங்கள் (தொல். பொ. 10.); the months māsi, and panguni, being the season in which dew falls during the latter part of the night, one of six paruvam, q.v. *'பின்பனி தானு முரித்தென மொழிப'* (தொல். பொ. 10.).

*[பின் + பனி]*

**பின்பனிப்பருவம்** *pin-pani-p-paruvam,* பெ. (n.) *பின்பனி* பார்க்க; see *pinpani.*

*[ பின்பனி + பருவம் ]*

**பின்பாட்டு** *pinpāttu* பெ. (n.) 1. (பாடகருக்குப்) பின்னால் இருந்து உடன் பாடும் பாட்டு; vocal support to a singer. மேடையில் பாடகருக்குப் பின்னால் பின்பாட்டு பாடுபவர் அமர்ந்திருப்பார் (உ.வ.). 2. (கலைஞருக்கு ஏற்ப)பின்புறம் இருந்து பாடும்பாட்டு; vocal accompaniment (to a performer) பின்பாட்டுப் பாடகர் அதிகம் பணம் கேட்கிறார் (உ.வ.) 3. ஒருவன் சொன்னதையே பின்பற்றுகை (இ.வ.); servile imitation அரசியலில் பின்பாட்டு மிகுதி.

*[ பின் + பாட்டு. பாடு → பாட்டு ]*

**பின்பிறந்தாள்** *pin-pirandāḷ,* பெ. (n.) 1. தங்கை (கொ.வ.); sister. 2. திருமகள் (இலக்குமி.) (சங்.அக.); Laksmi.

*[பின் + பிறந்தாள். பிள் → பிற → பிறந்தாள். பின்பிறந்தாள் = தனக்குப் பின்னர்ப் பிறந்தாள், மூத்தாளுக்கு (மூதேவிக்கு)ப் பின் பிறந்தாள்]*

**பின்பிறந்தான்** *pin-pirandān,* பெ. (n.) தம்பி; younger brother. *'எம்பெருமான் பின் பிறந்தாரிழைப்பரோ பிழைப்பென்றான்'* (கம்பரா. குகப். 30.).

*[பின் + பிறந்தான். பிள் → பிற → பிறந்தான். 'ன்' ஆ.பா.ஈறு]*

**பின்பு**[1] *pinbu,* பெ. (n.) பின்னானது; that which is posterior in place or time. *'முன்புமாய்ப் பின்பு முழுதுமாய்'* (திருவாச. 22, 2.)

*[பின் → பின்பு. 'பு' சொ.ஆ.ஈறு.]*

**பின்பு**[2] *pinbu,* கு.வி.எ. (adv.) பிறகு; after, afterwards, subsequently.

*[பின் → பின்பு. 'பு' சொ.ஆ.ஈறு.]*

**பின்புத்தி** *pin-putti,* பெ. (n.) 1. அறிவுக் குறை (புத்தியீனம்); want of foresight, imprudence, indiscretion. பெண்புத்தி பின்புத்தி (பழ.) 2. பின் எண்ணம் (பின்யோசனை); afterthought, doing things in haste and repenting at leisure.

து. பிரபுத்தி

*[பின் + புத்தி 'எண்ணித்துணிக கருமம்' (குறள்.) அவ்வாறு இல்லாமல் செயலைச் செய்வதற்கு முன் அதன் விளைவுகளைப் பற்றி ஆராயாமல் செய்துவிட்டு பின்னர் வருந்துவது பின்புத்தி.]*

**பின்புறணி** *pin-purani,* பெ. (n.) கோள்; slander, speaking ill of a person in his absence.

*[ பின் + புறணி. பிறம் → புறம் → புறன். பிறக்கடை = வீட்டின் பின்பக்கம். புறங் கூறுதல் = பின்னாற் பழித்தல். புறன் → (புரனி) → புறணி = புறங் கூற்று (மு.தா. 294.) ]*

**பின்புறம்** *piṉ-puṟam,* பெ. (n.) பிற்பக்கம்; hind part, rear. வீட்டின் பின்புறம் தோட்டம் இருப்பது நல்லது (உ.வ.).

*[பின் + புறம்.பின் → பின → பிற → பிறிது. பிற → பிறகு = வேறு. பிறம் → புறம்]*

**பின்போக்கு** *piṉ-pōkku,* பெ. (n.) 1. தொடர்ச்சி; uninterrupted succession, chain. *'பின்போக் கல்லது பொன்றக் கெடாதாய்'* (மணிமே.30,38.). 2. வலியிழந்தநிலை; down fall, as of a people. 3. அறிவு, குணம் முதலியவற்றிற் பிந்துகை; retrogresson; backward state; detrioration, as of one's abilities. 4. முன்னேற்றங் குறியாது பழைய முறையிற் போகை; reaction. ஒற்றுமையைக்குலைக்கும் பின்போக்குச் செயல்களை மக்கள் எதிர்க்க வேண்டும்.

*[பின் + போக்கு. போ → போக்கு]*

**பின்போடு-தல்** *piṉ-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) காலந்தாழ்த்தல்; to put off, postpone, defer.

மறுவ. தள்ளிப்போடு-,

*[பின் + போடு-,]*

**பின்மழை** *piṉ-maḻai,* பெ. (n.) *பின்மாரி* பார்க்க; see *piṉmāri.*

*[பின் + மழை]*

**பின்மாரி** *piṉ-māri,* பெ. (n.) 1. காலந்தவறின மழை; belated rain-fall; 2. மாரிக்காலத்தின் பிற்பகுதியிற் பெய்யும் மழை; rain during the latter part of the rainy season.

*[பின் + மாரி]*

**பின்மாலை**[1] *piṉ-mālai,* பெ. (n.) வைகறை; dawn. *'பின் மாலையே திருவிளக்கேற்றி வைத்துத் தயிர் கடைவார்கள்'* (ஈடு, 1, 3, 1, ஜீ.)

*[பின் + மாலை]*

**பின்மாலை**[2] *piṉmālai,* கு.வி.எ. (adv.) விடியற் காலையில்; in the early morning.

*[பின் + மாலை]*

**பின்முடுகுவெண்பா** *piṉ-muḍugu-veṇbā,* பெ. (n.) பின்னிரண்டடிகள் முடுகிச் செல்லும் வெண்பா வகை; (pros.) a kind of veṇbā verse which has a quick flowing rhythm in the last two lines.

*[பின் + முடுகு + வெண்பா]*

**பின்முதுகு** *piṉ-mudugu,* பெ. (n.) நெஞ்சு நோய்வகை; croup (M.L.).

*[பின் + முதுகு]*

**பின்முரண்** *piṉ-muraṇ,* பெ. (n.) இரண்டாஞ்சீரும் நான்காஞ்சீரும் மறுதலைப்பட வருந் தொடை (காரிகை, ஒழிபி, 5, உரை.); (pros.) the meterials peculiarity in which words having opposite meanings occur in the second and fourth feet of a line of verse.

*[பின் + முரண்]*

**பின்மூலம்** *piṉ-mūlam,* பெ. (n.) சிற்றாமுட்டி (சங்.அக.); sticky mallow.



**பின்மொழிநிலையல்** *piṉ-moḻi-nilaiyal,* பெ. (n.) *'அடைகடல்'* என்ற தொடரிற்போல முதன் மொழியிற் பொருள் சிறந்து நிற்குந்தொடர் (தொல். சொல். 419, சேனா.); (gram.) a compound word, in which there is emphasis of meaning in the first member, as in aḍai-kaḍal.

*[ பின் + மொழி + நிலையல் ]*

**பின்மோனை** *piṉ-mōṉai,* பெ. (n.) இரண்டாஞ்சீரிலும் இறுதிச் சீரிலும் வரும் மோனை (காரிகை, ஒழிபி. 5, உரை.); a kind of mōṉai, in which the second foot and last foot of a line of verse alliterate.

*[ பின் + மோனை. முகனை → மோனை. ஒ.நோ. முகடு → மோடு ]*

**பின்வயிறு** *piṉ-vayiṟu,* பெ. (n.) ஒட்டின வயிறு (சென்னை.); lean stomach.

*[ பின் + வயிறு ]*

**பின்வரவு** *piṉ-varavu,* பெ. (n.) பின்னால் நேரப்போவது; future happening or event. *'பின்வர வறியாமல் சுதந்திரம் தொட்டார்'* (பாரதி. தேசீய. 42.).

*[ பின் + வரவு ]*

**பின்வருநிலை** *piṉ-varu-nilai,* பெ. (n.) முன் வந்துள்ள சொல்லும் பொருளும் தனித்தனியாயினுங் கூடியாயினும் பலவிடத்தும் பின்னும் வரும் அணிவகை (தண்டி, 40.); (rhet.) a figure of speech in which expressions or ideas or both are repeated.

*[ பின் + வருநிலை. வள் = வளைவு. வள் → வரு + நிலை = வருநிலை ]*

**பின்வரும்** *piṉvarum,* பெ.அ. (adj.) அடுத்துவருகிற; following பின்வரும் ஆண்டுகளில் மழை குறைவாக இருக்கும் என்று கூறுகின்றனர் (உ.வ.).

*[ பின் + வரும் ]*

**பின்வருமாறு** *piṉvarumāṟu,* வி.அ. (adv.) (எழுத்தில்) இதற்குப்பின் குறித்துள்ளதுபோல், கீழேகொடுக்கப்பட்டுள்ளதுபோல்; (in writting) as follows. இவ்வினாவிற்கான விடை பின்வருமாறு இருக்கவேண்டும் (உ.வ.).

*[ பின் + வருமாறு ]*

**பின்வலி** *piṉvali,* பெ. (n.) மகப்பேற்றிற்கு அல்லது அனைய புண்களை அறுவை மருத்துவம் செய்தபின் ஏற்படும் நோய்; after pains as in delivery or operation.

*[ பின் + வலி ]*

**பின்வளைந்தகருப்பை** *piṉvaḷainda karuppai,* பெ. (n.) இடம் பெயர்ந்த கருப்பை; retroverted uterus.

*[ பின்வளைந்த + கருப்பை ]*

**பின்வளைவு** *piṉvaḷaivu,* பெ. (n.) பின் மடிப்பு; retroflexion.

*[ பின் + வளைவு. வள் → வளை → வளைவு ]*

**பின்வாங்கு–தல்** *piṉ-vāṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. பின்போதல்; to recede, draw-back, retire. *'அஞ்சிப் பின்வாங்குமடி'* (நாலடி. 396.). 2. தோல்வியடைதல்; to re-treat, as in battle; to give way as in a contest. இரண்டு நாள் சண்டைக்குப்பின் பகைப்படை பின்வாங்கியது. (உ.வ.) 3. ஒப்பந்தத்தினின்று நெகிழ்தல்; to with-draw backslide, as from a bargain or an engagement; பணியைச் செய்வதாக முன்னர் ஒப்புக்கொண்டனர். ஆனால் இப்பொழுது பின்வாங்குகின்றனர் (உ.வ.) 4. நெறி தவறுதல் (கிறித்); to cease to live as a Christian.

*[பின் + வாங்கு. வள் = வளைவு. வள் → வரு → வார் → வா → வாங்கு]*

**பின்வேலப்பதேசிகர்** *piṉ-vēlappadēšigar,* பெ. (n.) பஞ்சாக்கரப் பஃறொடை இயற்றிய திருவாவடுதுறை யாதீனத்துத் தலைவர்; a head of the Tiru-v-āvaḍuturai-y-ādiṉam, au-thor of pañcakkara-p-pak-ṟoḍai.

*[பின் + வேலப்ப + தேசிகர்]*

**பின்றலை** *piṉṟalai,* பெ. (n.) தலையின் பின்புறம்; back part of the head. *'செம்பொற்பட்டம் பின்றலைக் கொளீஇ'* (பெருங். உஞ்சைக். 46, 235.).

*[பின் + தலை]*

**பின்றளை** *piṉṟaḷai,* பெ. (n.) *பின்தளை* (யாழ்.அக.) பார்க்க; see *piṉtaḷai*

*[பின் + தளை]*

**பின்றாலி** *piṉṟāli,* பெ. (n.) முதுகு மறையத் தொங்குங் கழுத்தணிவகை; a kind of necklace hanging over the back. நவரத்தினங்களைக் கோத்து முதுகு மறைய விடும் பின்றாலி (சிலப். 6, 102, அரும்.).

*[பின் + தாலி. பின் = பின்புறம், முதுகு]*

**பின்றி** *piṉṟi,* கு.வி.எ. (adv.) மீள்; again, besides. பின்றியும் பீடும் பெருகும் (தேவா. 65, 7).

*[பின் → பின்றி]*

**பின்று¹–தல்** *piṉṟu-,* 5 செ.கு.வி (v.i.) 1. பின்னிடுதல்; to retreat, fall behind. ஆற்றல் போகிப் பின்றினன் (கந்தபு. சிங்கமு. 175). 2. கீழ்ப்பட்டிருத்தல் (வின்.); to fall below, in rank or quality. 3. மீளுதல்; to turn back. பெரும்படை தான்வரிற் பின்றி நீங்கிற் பழி (சீவக. 1827.) 4. தொலைவாதல்; to be far removed. மனையானவற்றுக் கறப்பின்றி (திருநூற். 81.) 5. ஒழுக்கம் முதலியவற்றிற் பிறழ்தல்; to go astray. செலவுதான் பின்றாது பேணும் புகழான்பின் (திணைமாலை. 87) 6. மாறுபடுதல்; to change, to revert பின்று மென்றாலு நம்பாற் புகழன்றிப் பிறிதுண்டாமோ (கம்பரா. விபீடண. 108).

*[பின் → பின்னம் → பின்னர். பின் → பின்னே. பின் → பின்பு. பின் → பின்று (மு.தா. 131)]*

**பின்று²** *piṉṟu,* வி.எ. (adv.) பின்பு; afterwards. பின்று சுக்கிர வாரமென்றொரு பெரும் பெயராய் (உபதேசகா. சிவவிரத. 322.).

க. பிந்து; பட. கிந்தெ.

*[பின் → பின்று]*

**பின்றுடரி** *pinṟuḍari,* பெ. (n.) நாயுருவி; a plant growing in hedges and thickets.



**பின்றேர்க்குரவை** *pinṟēr-k-kuravai,* பெ. (n.) தேர்வீரரை வென்ற அரசனுடைய தேரின் பின்னே நின்று கொற்றவையும் கூளிச் சுற்றமும் களித்தாடுதலைக் கூறும் புறத்துறை (தொல்.பொ. 76.); (purap.) theme of Koṟṟavai and her retine dancing in joy behind the chariot of a victorious king.

*[பின் + தேர் + குரவை.தேர் = உயரமான ஊர்தி. குல் → (குல) → குலவை → குரவை = வட்டமாக நின்றாடுங் கூத்து]*

**பின்றை¹** *pinṟai,* பெ. (n.) பின்னைநாள் (பிங்.); next day, morrow.

*[பின் → பின்றை]*

**பின்றை²** *pinṟai,* வி.எ. (adv.) பின்பு; after, afterwards, subsequently. பாண்முற்றொழிந்த பின்றை (புறநா. 29.).

*[பின் → பின்றை]*

**பின்றொடர்–தல்** *pinṟoḍar-,* 2 செ.குன்றாவி. (v.t.) பின்பற்றுதல்; to follow, pursue.

*[பின் + தொடர்–,]*

**பின்றொடரி** *pinṟoḍari,* பெ. (n.) 1. தொடரிவகை; a stragglling shrub, in scrmb jungles. 2. திகைப்பூடு (யாழ்.அக.); a plant. 3. ஆடையொட்டி (சங்.அக.); a plant.

**பின்றோன்றல்** *pinṟōnṟal,* பெ. (n.) தம்பி (பிங்.); younger brother.

*[பின் + தோன்றல். தோன்று → தோன்றல். 'அல்' தொ.பெ.ஈறு]*

**பின்னகம்¹** *pinnagam,* பெ. (n.) 1. பின்னப்பட்ட மயிர்; braided hair, as of a woman. பிடிக்கையன்ன பின்னகந் தீண்டி (அகநா. 9). 2. ஆண்பால் மயிர்முடி (பிங்.); hair-tuft of men.

*[பின் → பின்னகம்]*

**பின்னகம்²** *pinnagam,* பெ. (n.) 1. வேறுபாடு (யாழ்.அக.); estrangement, difference 2. கழிச்சல் (சங்.அக.); loose bowels.

*[பின்னம்² → பின்னகம். பின் → பின்னம் = வேறுபாடு, மாறுபாடு]*

**பின்னகன்¹** *pinnagaṉ,* பெ. (n.) வேறுபாடு செய்பவன் (யாழ்.அக.); who causes estrangement or difference.

*[பின் → பின்னம் + அகன். அகம் → அகன். 'ன்' ஆ.பா.ஈறு]*

**பின்னகன்²** *pinnagaṉ,* பெ. (n.) வயிற்றுப் போக்கு; diarrhoea.

*[பின்னகம்² → பின்னகன்]*

**பின்னகனம்** *pinna-kanam,* பெ. (n.) ஒரு பின்னத்தை அது கொண்டு பெருக்கி வந்த தொகையை மீண்டும் அப்பின்னங் கொண்டே பெருக்குவது (யாழ்.அக.); (math.) cube of a fraction.

*[பின்னம்¹ → பின்னகனம்]*

**பின்னகுடும்பம்** *pinna-kudumbam,* பெ. (n.) பாகப் பிரிவினையான குடும்பம் (கொ.வ.); divided family.

*[பின்னம் + குடும்பம். பில் → (பின்) → பின்னம் = சிறியது, பிரிக்கப்பட்டது. பின்னகுடும்பம் சொத்துப் பிரிவினை செய்யப்பட்ட குடும்பம்]*

**பின்னகுணனம்** *pinna-kunanam,* பெ. (n.) ஒரு பின்னத்தை அது கொண்டே பெருக்குவது; (math.) square of a fraction.

*[பின்னம் + குணனம்]*

**பின்னகோத்திரன்** *pinna-kōttiran,* பெ. (n.) வேறு பிரிவினன் (கோத்திரத்தான்); one of a community but not belonging to the same gōtra, person of a different gōtra. (R.F.)

*[பின்னம் + கோத்திரன்]*

Skt. gōtrin > த. கோத்திரன்

**பின்னங்கால்** *pinnangāl,* பெ. (n.) 1. விலங்கின் பின்புறத்துக்கால்; hind leg or foot of a beast. 2. பாதத்தின் பின்புறம்; hind part of the foot.

*[பின் + அம் + கால். குல் → கோல் = திரண்ட கம்பு. கோல் → கால் = கம்பு, தூண், தூண் போன்ற உறுப்பு. 'அம்' சாரியை. முன்னங்காலுக்கு எதிரானது பின்னங்கால்]*

**பின்னசங்கலனம்** *pinnaśangalanam,* பெ. (n.) கீழ்வாயிலக்கக் கூட்டல் (வின்.); (arith.) addition of fractions.

*[பின்னம் + சங்கலனம்]*

Skt. sankalana > த. சங்கலனம்

**பின்னசங்கலிதம்** *pinna-śangalidam,* பெ. (n.) *பின்ன சங்கலனம்* (யாழ்.அக.) பார்க்க; see *pinna-śangalanam.*

*[பின்னம் + சங்கலிதம்]*

Skt. san-kalita > த. சங்கலிதம்

**பின்னடி¹** *pinnadi,* பெ. (n.) 1. பிற்பட்டது. latter part, that which is subsequent. 2. கடைசி (யாழ்.அக.); that which is last. 3. பின்புறம்; rear (R.). 4. பின்சரவடி (யாழ்.அக.); descendant. 5. வருங்காலம் (யாழ்.அக.); futurity, future time.

*[பின் + அடி]*

'பின்' (பின்மை) இடம் காலம் ஆகியற்றின் பின்மையைக் குறிக்கும். இடத்தின் பின்மை பிற்பட்டது, கடைசி, பின்சரவடி. காலத்தின் பின்மை வருங்காலம்.

**பின்னடி²** *pinnadi,* வி.எ. (adv.) உடனே (இ.வ.); immediately.

*[பின் + அடி]*

**பின்னடை-தல்** *pinnadai-,* 2 செ.கு.வி (v.i.). பின்தங்குதல்; to lag behind. தமிழ்ச்சுவையை

அறிந்தபின் 'தமிழ்ப்படிப்பதில் பின்னடைதல் இருக்காது (உ.வ.).

*[பின் → அடை. அடு → அடை]*

**பின்னடைப்பன்** *pinnaḍai-p-paṉ*, பெ. (n.) சிறுநீரைத் தடுக்கும் மாட்டு நோய் வகை (வின்.); disease of cattle causing obstruction of urine.

*[பின் + அடைப்பன். அடைப்பன் = மாடுகளுக்குத் தொண்டையில் வரும் ஒரு வெக்கை நோய். பின் = பிற்பகுதி, பிட்டம்.]*

**பின்னடைப்பான்** *pinnaḍaippāṉ*, பெ. (n.) பசிநோயு ளொன்று; one of the disease caused by hunger.

*[பின் + அடைப்பான்]*

**பின்னடைவு** *pinnaḍaivu*, பெ. (n.) பின்தங்கும் நிலை; lagging behind. தமிழ்வளர்ச்சியில் பின்னடைவு ஏற்படக்கூடாது (உ.வ.)

*[பின் + அடைவு. அடை → அடைவு]*

**பின்னணி** *pinnaṇi*, பெ. (n.) 1. பின் வரிசை; rear, rear rank. 2. பிற்படை (சூடா.); rear guard.

*[பின் + அணி. அண் → அணி = வரிசை]*

**பின்னணிப்பாடகர்** *pinnaṇi-p-p* பெ. (n.) திரைப்படம், நாடகம் ஆகியவற்றில் தான் நேரடியாகத் தோன்றாமல் நடிகருக்காக அல்லது காட்சிக்காகப் பாடுபவர்; play back singer.

*[பின்னணி + பாடகர்]*

**பின்னணியம்** *pinnaṇiyam*, பெ. (n.) கப்பலின் பின்புறம்; (naut.) stern of a vessel.

*[பின் + அணியம்]*

**பின்னணை** *pinnaṇai*, பெ. (n.) 1. வீட்டுக் கொல்லை (வின்.); the back-yard of a house. 2. பின்பிறந்த குழந்தை அல்லது கன்று; later born child or calf, dist. fr. muṉ-ṉ-aṇai.

*[பின் + அணை. அள் → அண் → அண → அணை. பின்னணை = வீட்டை (பின்பகுதியில்) அணைத்து(சேர்ந்து) இருப்பது, குழந்தை அல்லது கன்றை அணைத்து (தொடர்ந்து) பிறப்பது]*

**பின்னதுநிறுத்தல்** *pinnadu-niṟuttal*, பெ. (n.) முப்பத்திரண்டுத்திகளுள் முன் வைக்க வேண்டியதைப் பின்னே வைக்கும் உத்திவகை (நன். 14.); (gram.) placing later what ought to come earlier in a treatise, one of 32 utti q.v.

*[பின் → பின்னது + நிறுத்தல். நிறு → நிறுத்தல். 'அல்' தொ.பெ.ஈறு]*

**பின்னந்தண்டு** *pinnantaṇḍu*, பெ. (n.) பின்புறமுள்ள காற்சீப்பு (யாழ்.அக.); hind part of a leg.

*[பின் + அம் + தண்டு. துள் → தள் → தண்டு = திரண்டபகுதி]*

**பின்னந்தலை** *pinnantalai*, பெ. (n.) 1. பின்புறம்; back of head, occiput 2. பிடர் (யாழ்.அக.); nape of the neck.

*[பின் + அம் + தலை]*

**பின்னப்படுத்து-தல்** *pinna-p-paḍuttu-*, 5 செ.குன்றாவி. (v.t.) சிதறுவித்தல்; to break to pieces. பின்னப்படுத்தி நேமிவரையுடைத்தும் (இரகு. திக்குவி. 38.)

*[பின்னம் + படுத்து–, படு → படுத்து]*

**பின்னப்பதம்** *pinna-p-padam,* பெ. (n.) தொகாநிலையாய் நிற்கும் சொல் (சிவசம. பக். 43.); separate word, not forming part of a compound.

*[பின்னம் + பதம்]*

Skt. pada > **த.** பதம்

**பின்னபாகாரம்** *pinna-pāgāram,* பெ. (n.) கீழ்வாயிலக்கப் பிரிப்பு; (math.) division of fractions.

*[பின்னம் + பாகாரம். பகு → பாகு → பாகாரம்]*

**பின்னபேதகம்** *pinna-pēdagam,* பெ. (n.) *பின்ன பேதம்* (வின்.) பார்க்க; see *pinna-pēdam.*

*[பின்னம் + பேதகம்]*

Skt. bhēdaka > **த.** பேதகம்

**பின்னபேதம்** *pinna-pēdam,* பெ. (n.) 1. நிறைவேற்றாமை; failure to fulfil a promise2. மாறுபாடு, பகை; difference, disgreement.

*[பின்னம் + பேதம்]*

Skt. bhēda > **த.** பேதம்

**பின்னம்¹** *pinnam,* பெ. (n.) 1. பிளவு (இலக்.அக.); cleavage, break, disunion. 2. சிதைவு; break, tear. பின்னங்க ளுகிரிற் செய்து (கம்பரா. வரைக்காட்சி. 54.). 3. கேடு; change for the horse, degeneracy, deterioration. 4. கீழ்வாயிலக்கம்; (math.) fraction 5. துகள், பொடி (சது.); dust, powder. 6. பூந்துகள், பூந்தாது; pollen.

*[பிள் → பிதிர். பில் → பின் → பின்னம் → பின்னி. பின்னம் = சிறியது, துண்டு, சிற்றெண். சின்னபின்னம் என்னும் வழக்கை நோக்குக. பின்னி = சிறியது. நன்னி பின்னி என்னும் தஞ்சை வழக்கை நோக்குக (சு.வி.16.)]*

**பின்னம்²** *pinnam,* பெ. (n.) 1. மாறுபாடு; opposition. பின்மை நெறிச் சமணரை (திருவாலவா. 38, 8.) 2. வேறுபாடு (சூடா.); disagreement, variance, difference. 3. வேறாந்தன்மை; distinctness, separateness. பின்னபின்னமாத் தருக்களிற் பிறங்கிய கழலின் (பாகவத. 1, மாயவனமிச, 20.) 4. உறுப்புக் கோணல்; distortion, disfiguration, deformity. 5. தடை (யாழ்.அக.); frustration, obstacle.

*[பின் = திரும்ப, வேறு. பின்னும் = திரும்பவும். பின்னொன்று = வேறொன்று. பின → பிற → பிறிது. பிறம் → பிறன் = வேறொருவன், மற்றவன், அயலான் (மு.தா. 132.) பின் → பின்னம்]*

**த.** பின்னம் > Skt. bhinna.

**பின்னம்³** *pinnam,* வி.எ. (adv.) பின்னர்; after, afterwards. மள்ளர் பின்னந் தண்டஞ் செய்தனர் (திருவினை. பழியஞ்சி. 26.).

*[பின் → பின்னே. பின் → பின்பு. பின் → பின்னம் (மு.தா. 131.)]*

**பின்னம்**[4] *pinnam,* பெ. (n.), எலும்பு முறிவு; fracture.

*[பில் → பின் → பின்னம் = சிறியது, பிளவுபட்டது]*

**பின்னம்**[5] *pinnam,* பெ. (n.) பகுப்பு; division. (புதுவை.)

*[பில் → (பில்) → பின்னி = மிகச்சிறியது. பில் → பின் → பின்னம் = சிறியது, துண்டு, சிற்றெண், படுக்கப்பட்டது, பகுப்பு]*

**பின்னர்**[1] *pinnar,* கு.வி.எ. (adv.) பின்பு; after, afterwards, subsequently. *'பின்னரும் பீடழிக்கு நோயுள'* (நாலடி, 92.).

*[பின் → பின்னம் → பின்னர் (மு.தா, 293)]*

**பின்னர்**[2] *pinnar,* பெ. (n.) 1. பின் தொடர்ந்து வருவோர்; those who come after, followers. *'களிமகன் பின்னரும்'* (மணி. 3, 103.). 2. பிற்பட்டவன்; successor. *'மறைமுது முதல்வன் பின்னர் மேய'* (சிலப். வேட்.) *'முன்னோன் றன்னைப் பின்னைப் பின்னரியற்றி'* (சிலப். பதி. 1, உரை). 3. தம்பி (மதுரைக். 40, உரை.); younger brother. 4. இழிந்தவன் (சூத்திரர்) (பிங்.); the Sūdras.

*[பின் → பின்னம் → பின்னர் (மு.தா. 293.)]*

**பின்னரை**[1] *pin-n-arai,* பெ. (n.) விண்மீனின் பிற்பாதி; the latter half of a naksatra.

*[பின் + அரை]*

**பின்னரை**[2] *pinnarai,* பெ. (n.) சல்லடை (பிங்.); sieve.

*[பின் + அறை – பின்னறை → பின்னரை. பில் → பின் → பின்னம் = சிறியது. பின் = சிறிய]*

**பின்னல்**[1] *pinnal,* பெ. (n.) 1. பின்னுகை; braiding, plaiting, matting, wreathing, twining. 2. தொடர்ச்சி; series, succession, as of waves. *'பின்னற் றிரைமேற் றவழகின்ற பிள்ளைத் தென்றல்'* (கம்பரா, கடல்கா. 6.) 3. பின்னப்பட்டது; web, weft, texture, lace. *'கொடிப் பின்னல் வாங்கி'* (கலித். 83, 9.) 4. அரைஞாண்; waist-cord. *'பின்னல் துலங்கு மரசிலையும்'* (திவ்.பெரியாழ். 1, 7, 3.) 5. சிக்கு entanglement, tangle. 6. பின்னப்பட்ட முடி; plaited hair (of a woman) ஒற்றைப்பின்னலை எடுத்து முன்னால் விட்டுக்கொண்டாள். (உ.வ.). 7. சடை (பிங்.); matted hair. *'பின்னலிலஞ்சியின் மூழ்குதிர்'* (சேதுபு. சடா. 6.) 8. நூல இழை முதலியவை கொண்டு பின்னும் கைவேலை; knitting (work) தையல், பின்னல் எல்லாம் என் பெண்ணுக்குத் தெரியும் (உ.வ.) 9. தவறு (யாழ்.அக.); mistake, error. 10. பருத்தி (நாமதீப. 318.); cotton.

*[புல் → (புன்) → பின் → பின்னல். 'அல்' தொ.பெ.ஈறு]*

**பின்னல்**[2] *pinnal,* பெ. (n.) கடற்பாசி; edible seaweed.



**பின்னல்கொடி** *pinnal-kodi,* பெ. (n.) கிளைகளின் தண்டே கொழுகொம்புகளிற் பின்னிக் கொண்டு வளருஞ் செடிவகை; twiners.

*[பின்னல் + கொடி]*

**பின்னல்மோதிரம்** *pinnal-mōdiram,* பெ. (n.) மோதிரவகை (வின்.); a kind of ring.

*[பின்னல் + மோதிரம். முகம் + திரை → முகத்திரை → முத்திரை. முகத்திரம் → மோதிரம் = முத்திரையுள்ள விரலணி. பின்னல் அமைப்பில் அமைந்த மோதிரம் பின்னல் மோதிரம்]*

**பின்னல்வேலை** *pinnal-vēlai,* பெ. (n.) பின்னியமைத்த வேலை; network; braiding, matting.

*[பின் → பின்னல் + வேலை]*

**பின்னவர்** *pinnavar,* பெ. (n.) 1. பிற்பட்டவர்; those who come after. 2. இழிகுலத்திரராகக் கருப்படுபவர் (சூத்திரர்) (சூடா.); the Sūdrās. *'கருமேதியும் பெற்றமும் பின்னவர் தெருக்காட்டும்'* (காஞ்சிப்பு, திருநகரே. 102.)

*[பின் + அவர்]*

**பின்னவருக்கம்** *pinna-varukkam,* பெ. (n.) பின்னகுணனம் பார்க்க (யாழ்.அக.); see pinna gunanam.

*[பின்னம் + வருக்கம்]*

**பின்னவள்** *pinnaval,* பெ. (n.) 1. அகவையில் குறைந்தவள், தங்கை; younger sister. 2. கடைசியாகப் பிறந்த மகள்; youngest daughter.

**மறுவ.** இளைச்சி.

**தெ.** பின்னி, பின்னம்ம (சித்தி)

*[பின் + அவள்]*

**பின்னவன்** *pinnavan,* பெ. (n.) 1. அகவையில் குறைந்தவன், தம்பி; younger brother. *'பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்ற தன்றோ?'* (கம்பரா. கைகேசி. 110.). 2. கடைசியாகப் பிறந்த மகன்; youngest son.

**தெ.** பின்னய்ய (சிற்றப்பன்)

*[பின் + அவன். தனக்குப்பின் பிறந்தவன், பின்னர் பிறந்தார்களுள் கடைசியானவன்.]*

**பின்னளபெடை** *pin-n-alabedai,* பெ. (n.) இரண்டாஞ்சீர்க் கண்ணும், நான்காஞ்சீர்க் கண்ணும் அளபெடை வரத் தொடுக்கும் தொடை (காரிகை, ஒழி.பி. 5, உரை.); mode of versification in which the second and fourth feet take alapedai.

*[பின்னல் + அளபெடை. அளபு + எடை – அளபெடை. எடு → எடை. 'ஐ' தொ.பெ.ஈறு]*

**பின்னற்கொடி** *pinnar-kodi,* பெ. (n.) 1. ஓணான் கொடி; a creeper. 2. பெருமுசுட்டை; many flowered bindweed.

*[பின்னல் + கொடி]*

**பின்னற்கோலாட்டம்** *pinnar-kōlāttam,* பெ. (n.) தொங்கவிட்ட கயிறுகளைப் பின்னிக் கொண்டே ஆடும் கோலாட்டவகை; kōlāttam in which suspended cords are plaited in an ingenious way.

*[பின்னல் + கோலாட்டம். கோல் + ஆட்டம் – கோலாட்டம். ஆடு → ஆட்டம்]*

**பின்னற்சன்னல்** *pinnar-cannal,* பெ. (n.) *பின்னற் பலகணி* (கட்டட.நாமா. 23.) பார்க்க; see *pinnal palagani.*

*[பின்னல் + சன்னல்]*

Port. janella > த. சன்னல்.

**பின்னற்பலகணி** *pinnarpalagani,* பெ. (n.) வலைக் கதவுகளுடைய சாளரம்; window with meshed casements.

*[பின்னல் + பலகணி. பல + கணி. கண் + இ – கணி]*

**பின்னற்பாம்பு** *pinnar-pāmbu,* பெ. (n.) விலாங்கு மீன்; sea cel.

*[பின்னல் + பாம்பு]*



**பின்னறிவு** *pinnarivu,* பெ. (n.) பின்னால் நடப்பதை அறிகை; hind sight.

*[பின் + அறிவு]*

**பின்னறுவடை** *pin-n-aruvadai,* பெ. (n.) 1. பிற்பட்ட விளைவு; late harvest. 2. சுற்றி அறுவடையாக, நடுவில் அறுபடாது மிஞ்சிக் கிடப்பது (இ.வ.); that which remains unharvested after a general harvest.

*[பின் + அறுவடை. அறு → அறுவு + அடை. 'அடை' ஓர்.ஈறு]*

**பின்னன்** *pinnan,* பெ. (n.) (ஒருவனுக்குப்) பின்னர் பிறந்தவன்; younger-brother. *'பின்னனை நடபொடு மற்றவற் காணும்'* (இரகு. அவதார. நீள். 3.).

மறுவ. இளவல், தம்பி.

தெ. பின்னவாடு.

*[பின் + அன். 'அன்' ஆ.பா.ஈறு]*

**பின்னனை** *pin-n-anai,* பெ. (n.) செவிலித் தாய் (பிங்.); foster-mother.

*[பின் + அனை. அன்னை → அனை. அன்னைக்குப் பின்னானவள் பின்னனை]*

**பின்னா–தல்** *pinnā-,* 6.செ.கு.வி. (v.i.) பின்நிலையடைதல், தோற்றல்; to lag behind to fallback, to be defeated.

து. பிரபூருணி

*[பின் + ஆ –,]*

**பின்னாக** *pin-nāga,* கு.வி.எ. (adv.) 1. பிற்பாடு; afterwards. 2. பின்பக்கமாக; behind. 3. மறுபடியும்; again. 4. மேலும் (வின்.); moreover, besides.

*[பின் + ஆக]*

**பின்னாட்டு–தல்** *pinnāṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) வழிநடத்தல்; to follow in the wake. *'ஈஸ்வரத வாபிமானம் பின்னாட்டாத படி யிருக்கை'* (திவ். பெரியதி. 1.1, 4, வ்யா. பக். 35.).

*[பின் + நாட்டு–,]*

**பின்னாடி** *pinnāḍi,* கு.வி.எ. (adv.), பின்பு; afterwards. வேலை முடிந்தபின் நான் பின்னாடி வருகிறேன், நீ முன்னாடி செல் (உ.வ.)

*[பின் → பின்னால் → பின்னாடி]*

**பின்னாடிபேசு–தல்** *pinnāḍi-pēšu-,* 5 செ.கு.வி. (v.i.) புறங்கூறுதல் (இ.வ.); to speak behind one's back, back-bite. பின்னாடி பேசும் வழக்கம் பொல்லாதது (உ.வ.).

*[ பின்னாடி + பேசு–]*

**பின்னாதாரம்** *pin-n-ādāram,* பெ. (n.) மூலப்பகுதியினின்று நான்கு விரற்கடை மேலிருக்கும் உடம்பில் உட்பகுதி (சிலப். 3. 26, உரை.); (yoga.) a mystic centre of the human body, believed to be at a distance of four fingers above the 'mūlādāram'.

*[பின் + ஆதாரம்]*

**பின்னாபின்னம்** *pinnābinnam,* பெ. (n.) பின்னமும் அபின்னமுமாயிருப்பது (வாசுதேவ மனனம், பக். 52.); that which is both separate and inseparate.

*[பின்னம் + அபின்னம்]*

**பின்னாரி** *pinnāri,* பெ. (n.) முதுகின் கீழ்ப்புறம் (யாழ்.அக.); lower part of the back.

*[பின் → பின்னாரி]*

**பின்னால்** *pinnāl,* வி.அ. (adv.) 1. பின்பக்கமாக, தள்ளி, தொலைவில்; behind, after. பின்னால் வருபவர் வந்து சேரட்டும் (உ.வ.) 2. பிறகு: afterwards. வெள்ளையடித்தல் பணியைப் பின்னால் செய்து கொள்ளலாம் (உ.வ.).

*[பின் → பின்னால்]*

**பின்னாலே** *pinnālē,* கு.வி.எ. (adv.) பிற்பாடு; afterwards. இந்தப் பணியைப் பின்னாலே செய்யலாம்

*[பின் → பின்னாலே]*

**பின்னாளில்** *pinnāḷil,* வி.அ. (adv.) பிற்காலத்தில்; at a later time. பெரும்பாலும் உண்மை பின்னாளில் உணரப்படும் (உ.வ.).

*[பின் + நாள் + இல்]*

**பின்னாற்செல்(லு)–தல்** *pinnārcel(lu)-,* 13 செ.,கு.வி. (v.i.) *பின்னாற்போ–தல்* பார்க்க; see *pirnārpō-,*. செல்வர் பின்னால்செல்ல பலர் உள்ளனர் (உ.வ.).

*[பின்னால் + செல்(லு)–]*

**பின்னாற்போ—தல்** *pinnāṟ-pō-,* 8 செ.கு.வி. (v.i.) பின்செல்லுதல்; to accompany, follow.

*[பின் → பின்னால் + போ—,]*

**பின்னி** *pinni,* பெ. (n.) 1. தங்கை; younger sister. *'வசிட்ட முனி கற்பார்தரு பின்னியை'* (கோயிற்பு. வியாக். 23.) 2. சிறியதாய்; younger sister of one's mother.

*[பின் → பின்னி. 'இ'. பெ.பா.ஈறு]*

**பின்னிகழ்வு** *pinnigaḻvu* பெ. (n.) ஒரு செயலின் விளைவு; result of an action. மழை பெய்ததன் பின்நிகழ்வாகப் புல் முளைத்தது. (உ.வ.)

*[பின் + நிகழ்வு]*

**பின்னிசிப்பு** *pinnišippu,* பெ. (n.) *பின்னிசிவு* பார்க்க; see *pinnišivu.*

*[பின் + இசிப்பு. இசிவு → இசிப்பு]*

**பின்னிசிவு** *pinnišivu,* பெ. (n.) உடம்பைப் பின்பக்கமாக வளையச் செய்யும் தம்பவாதம் (சீவரட். 165.); a kind of rheumatism in which the body is bent backwards.

*[பின் + இசிவு]*

**பின்னிசீவு** *pinnišīvu,* பெ. (n.) ஓணான் நெய்யினால் குணமாக்கப்படும் இசிவு நோய் வகை; the disease which gets cure by ghee prepared out of chameleon.

*[பின் + இசிவு. இசிவு → இசீவு]*

**பின்னிடு[1]—தல்** *piṉ-ṉ-iḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. பின்செல்லுதல்; to retire, fall back. 2. பின்புறமாதல்; to get behind. 3. தோற்றல் (பிங்.); to yield; to be defeated, as in a contest. 5. தாக்கித்திரும்புதல் (வின்.); to recoil, rebound. 6. காலத்தாழ்வாதல்; to be late. 7. பின்வாங்குதல்; to retreat, resile from, withdraw.

*[பின் + இடு—, 'இடு' து.வி.]*

**பின்னிடு[2]—தல்** *pinniḍu-,* 19 செ. குன்றாவி. (v.t.) பிற்படக் கடத்தல்; to leave behind, get across. *'சென்மசாகரந்தனைப் பின்னிடப் பெறலாம்'* (சிவரக, சிவனடி. 7.).

*[பின் + இடு—, 'இடு' து. வி.]*

**பின்னிடை—தல்** *piṉ-ṉ-iḍai-,* 2 செ.கு.வி. (v.i.) பின்னிடுதல்; to flinch, fall back, retreat, yield.

*[பின் + இடை. இடு → இடை]*

**பின்னிணைப்பு** *piṉ-ṉ-iṇaippu,* பெ. (n.) பிற்சேர்க்கை; appendix. ஆய்வுக்கட்டுரையில் பின்னிணைப்பு அமைவது நல்லது (உ.வ.)

*[பின் + இணைப்பு]*

**பின்னிதம்** *pinnidam,* பெ. (n.) *பின்னம்[1]* (வின்.); பார்க்க see *pinnam[1]*

*[பின்னம் → பின்னிதம்]*

**பின்னிதம்பண்ணு[1]—தல்** *pinnidampaṇṇu-,* 12 செ.குன்றாவி. (v.t.) புறக்கணித்தல் (அலட்சியம் செய்தல்); to treat with coldness.

*[பின்னிதம் + பண்ணு—]*

**பின்னிதம்பண்ணு²—தல்** *pinnidampannu-,* 5 செ.கு.வி. (v.i.) இணங்காதிருத்தல்; to be back ward or non-compliant.

*[பின்னிதம் + பண்ணு—]*

**பின்னிப்பிணை—தல்** *pinni-p-pinai-,* 2 செ.கு.வி. (v.i.) ஒன்று மற்றொன்றோடு நெருங்கி இருத்தல்; to be interlinked, be a part of, நாட்டுப்புறக்கலைகள் மக்கள் வாழ்க்கையோடு பின்னிப் பிணைந்துள்ளன (உ.வ.)

*[பின் → பின்னு → பின்னி + பிணை]*

**பின்னியாக்கம்** *pinniyākkam,* பெ. (n.) குந்துருக்கம் (மலை.); Indian olibanum.

**பின்னியாகம்** *pinniyāgam,* பெ. (n.) *பின்னி யாக்கம்* பார்க்க; see *pinniyākkam.*

**பின்னியாசம்** *pinniyāšam,* பெ. (n.) பெருங் காயம் (சங்.அக.); asafoetida.

**பின்னியைபு** *pin-n-iyaibu,* பெ. (n.) இரண்டாஞ்சீர்க்கண்ணும், நான்காஞ் சீர்க்கண்ணும் இயைபுத் தொடை அமையத் தொடுப்பது (காரிகை. ஒழிபி. 5, உரை); (pros.) a mode of versification in which the second and fourth feet have 'iyaibu-t-todai'.

*[பின் + இயைபு. இள் → (இய்) → இயை. இயைதல் = பொருந்துல், இணங்குதல். இயை → இயைவு → இயைபு]*

**பின்னிரக்கம்** *pin-n-irakkam,* பெ. (n.) இரக்கத்தன்மை (பச்சாத்தாபம்); relenting; repentance.

*[பின் + இரக்கம். இள் → இர் → இர → இரங்கு → இரக்கம்]*

**பின்னிரவு** *pinniravu,* பெ. (n.) இரவுக் காலத்தின் பிற்பாதி; the late half of a night. தேர்வுநேரத்தில் பின்னிரவு வரை மாணவர் படிக்கின்றனர் (உ.வ.).

*[பின் + இரவு.உல் → இல் → இர் → இரா → இரவு]*

**பின்னிருட்டு** *pin-n-iruttu,* பெ. (n.) பின்னிருட்டுக் காலம் பார்க்க; see pinniruttu-k-kālam.

*[பின் + இருட்டு. உல் → இல் → இரா → இரவு. இர் → இருள் → இருட்டு. (மு.தா. 179)]*

**பின்னிருட்டுக்காலம்** *pin-n-iruttu-k-kālam,* பெ. (n.) வளர்பிறைக் காலம்; the bright fortnight.

*[பின் + இருட்டு + காலம்]*

**பின்னிரை** *pinnirai,* பெ. (n.) பின்வரிசை (யாழ்.அக.); back-row.

*[பின் + நிரை]*

**பின்னிரோவம்** *pinnirōvam,* பெ. (n.) முட்சுண்டை; thorny plant.

**பின்னில்¹—தல்** *pinnil-,* 14 செ.கு.வி. (v.t.) 1. பிறகிடுதல்; to stand back; to be reluctant. 2. இணங்குதல்; to yield, submit. *'பின்னின்று தாயிரப்பக் கேளான்'* (திவ். இயற். 2, 79.). 3. இரந்து நிற்றல்; to beg humbly for a favour 4. பின்செல்லுதல்; to wait on, follow. *'பின்னின் றேவல் செய்கின்றேன்'* (திருவாச. 21, 2.).

*[பின் + நில்—,]*

**பின்னில்²–தல்** *pinnil-,* 14 செ.குன்றாவி. (v.t.) மறுத்தல் (யாழ்.அக.); to refuse.

*[பின் + நில்–,]*

**பின்னிலவு** *pinnilavu,* பெ. (n.) 1. கரும் (அபர) பக்கத்தின் பிற்பகுதி; second half of the dark fortnight. 2. கரும்பக்கம் (அபரபக்கம்); (யாழ்.அக.); the dark fortnight.

*[பின் + நிலவு]*

**பின்னிலை** *pinnilai,* பெ. (n.) 1. குறை வேண்டுகை; seeking a redress. *'பின்னிலைத் தொன்றும்'* (தொல். பொ. 167.). 2. வழிபாடு; submitting reverently. 3. பிற்காலத்து வருவது; that is to come in the future. *'பின்னிலை முயற்சியிற் பெயர்த்தனந் தருதல்'* (பெருங். உஞ்சைக் 47, 144.). 4. பின்னேசென்று போர்புரிகை; fighting, chasing the enemy. 5. பின்தங்கி யிருக்கின்ற நிலை; state of being far beind to others. விளையாட்டுப் போட்டியில் பின்னிலை அடைவதை விளையாட்டு வீரர்கள் மானக் குறைவாகக் கருதுகின்றனர் (உ.வ.).

*[பின் + நிலை]*

**பின்னிவா–தல் (பின்னிவருதல்)** *pinnivā-,* 18 செ.கு.வி. (v.i.). நெருங்கி வருதல்; to come densely crowded or closely packed. *'பெருங்களிறு பின்னிவந் தடைந்தவே'* (சீவக. 277.).

*[பின் → பின்னி + வா–,]*

**பின்னின்மை** *pinninmai,* பெ. (n.) அழிவுபட்ட தன்மை; (log.) non-existance of a thing due to its annihilation. முன்னின்மையோடு பின்னின்மை யன்றி (வேதா. சூ. 35.).

*[பின் + இன் + மை. 'மை' ப.பெ.ஈறு. இல் → இன்]*

**பின்னீர்க்கோவை** *pinnīr-k-kōvai,* பெ. (n.) சளியடைப்பான நீர்க்குற்ற வகை (சீவரட். 275.); cold without expectoration.

*[பின் + நீர்க்கோவை. நீர்க்கோவை = தடுமன்]*

**பின்னு¹–தல்** *pinnu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. கூந்தல், ஓலை முதலியற்றை மிடைந்திணைத்தல்; to plait, braid, lace, knit, weave, entwine, inter-weave. *'பின்னிவிட்ட பிடித் தடக்கை'* (சீவக. 1658.) சிறு கூடை பின்னுவதற்கு கூலியா? (உ.வ.) 2. பிணித்தல்; to bind, hold fast. *'பின்னிய தொடர்நீவி'* (கலித். 15, 18.). 3. தழுவுதல்; to embrace. *'பின்னிய காதலர்'* (கலித். 32, 15.). 4. கூறுதல் (சங்.அக.); to say, tell. 5. அடித்தல்; to beat.நேற்றுமுதலாளி அத்திருட்டுப்பயலைப் பின்னிவிட்டார் (உ.வ.). 6. (களைப்பு, தூக்கக்கலக்கம், குடிமயக்கம் போன்ற வற்றால் கால்கள்) ஒன்றோடு ஒன்று மோதி இடறுதல்; to falter, as of feet.குடிகாரன் கால்பின்னி விழுந்தான் (உ.வ.).

*[பில் → பொல் → பொரு → பொருந்து → பொருத்து. புல் → (புன்) → பின். (மு.தா. 180) பின் + உ = பின்னு. 'உ' ஒலித்துணையுயிர்]*

**பின்னுகால்** *pinnu-kāl,* பெ. (n.) மாட்டுக் குற்றவகை (மாட்டுவா. 18.); a defect in cattle.

*[பின்(னு) + கால்]*

**பின்னுச்சி** *pinnucci,* பெ. (n.) குழவி பிறக்குங்கால், அதன் தலைப்புறத்தே முக்கோண வடிவிற் காணப்படும் ஒரு சிறு குழி; a triangular space of the back of the

infants head where occipital and parictal bones meet.

*[பின் + உச்சி]*

**பின்னுச்சித்தோற்றம்** *pinnucci-t-tōrram,* பெ. (n.) கருப்பையில் பிறக்கவியலா நிலையில் குழவியிருப்பதைக் காட்டுமோர் குறி; presentation of occipits vertex.

*[பின் + உச்சி + தோற்றம்]*

**பின்னும்** *pin-n-um,* வி.எ. (adv.) **1.** மேலும்; moreover. **2.** மறுபடியும்; again.

*[பின் = திரும்ப, வேறு. பின் + உம் – பின்னும் = திரும்பவும். பின்னும் பின்னும் திரும்பத் திரும்ப (மு.தா. 294)]*

**பின்னெதுகை** *pin-n-edugai,* பெ. (n.) இரண்டாஞ் சீர்க் கண்ணும் நான்காஞ்சீர்க் கண்ணும் எதுகையமையத் தொடுப்பது (காரிகை. ஒழிபி. 5, உரை.); (pros.) a mode of versification in which the second and the fourth feet have 'edugai-t-todai'.

*[பின் + எதுகை. எதிர்கை → எதிகை → எதுகை]*

**பின்னே** *pinnē,* கு.வி.எ. (adv.), பிறகு, பின்பு; afterwards, later சாத்தனுக்குப் பின்னே சாத்தி வந்தாள்.

ம. பின்னே

*[பின் → பின்னம் → பின்னர். பின் → பின்னே (மு.தா. 295)]*

**பின்னேரம்** *pinnēram,* பெ. (n.) **1.** பிற்பகல் (கொ.வ.); afternoon. நேற்று பின்னேரத்தில் நன்றாக மழைபெய்தது (உ.வ.) **2.** சாயங்காலம்; evening.

*[பின் + நேரம்]*

**பின்னை¹** *pinnai,* பெ. (n.) **1.** பின்² **4.** பார்க்க; see pin.² 4 *'பின்னைப் புதுமைக்கும்'* (திருவாச. 7, 9.) **2.** தங்கை (சூடா.); younger sister. *'உலகமூன்றும் காவலோன் பின்னை'* (கம்பரா. சூர்ப்ப. 29.) **3.** தம்பி(திவா.) ;younger brother *'பின்னை தன்னுடனடுக்கலை'* (கந்தபு. முதனாட்போ. 9.)

*[பின் → பின்னை = தம்பி. பின் → பின்னவன் = தம்பி. பின் → பின்னவள் = தங்கை. பின் → பின்னனை = செவிலித்தாய். பின் → பின்னை]*

**பின்னை²** *pinnai,* கு.வி.எ. (adv.) **1.** மேலும்; moreover, besides, furthermore; **2.** பிறகு (சூடா.); after, afterwards. *'பின்னை.... அழிந்தேன்'* (திருவாச. 44, 5.)

*[பின் → பின்னே. பின் → பின்னை]*

**பின்னை³** *pinnai,* பெ. (n.) **1.** நப்பின்னை; one of Krisnās consorts *'பெய் வளைக்கையாள் நம்பின்னை'* (சிலப். 17, பக், 144.).

*[நப்பின்னை → பின்னை]*

**பின்னை⁴** *pinnai,* பெ. (n.) தலைமயிர் (அக.நி.); hair.

*[பில் → (புன்) → பின் → பின்னு → பின்னை. பின்னப்படுவது]*

**பின்னை⁵** *pinnai,* பெ. (n.) புன்னை (வின்.); mast-wood.

க. பொன்னெ; தெ. பொன்ன; பட. கொன்னெ

*[புன்னை → பின்னை]*

த. புன்னை> Skt. punnāga

**பின்னை⁶** *pinnai*, பெ. (n.) நாய்த்தேக்கு; a large timber tree (L.)

**பின்னைக்கணம்** *pinnai-k-kaṇam*, பெ. (n.) வருங்காலம்; the future. *'பின்னைக் கணத்துப் பிறப்பவனும்'* (மேருமந். 662.)

*[பின் → பின்னை + கணம். கள் → கண் → கணம்]*

**பின்னைக்காயளவு** *pinnaikkāyaḷavu*, பெ. (n.) புன்னைக்காயின் அளவு; as big as the fruit Alexandrain laural.

*[பின்னைக்காய் + அளவு. புன்னைக்காய் → பின்னைக்காய்]*

**பின்னைகேள்வன்** *pinnai-kēḷvan*, பெ. (n.) (பின்னைப் பெருமாட்டி (பிராட்டி)யின் மணாளன்) திருமால் (பிங்.); Tirumāl the husband of Pinnai.

*[பின்னை + கேள்வன்]*

**பின்னைநாள்** *pinnai-nāḷ*, பெ. (n.) 1. மறுநாள்; next day. 2. பின்னாள்; subsequent day.

*[பின்னை + நாள். பின் → பின்னை]*

**பின்னைப்பூ** *pinnaippū*, பெ. (n.) புன்னைப்பூ; flower of Alexandria laurel.

*[புன்னைப்பூ → பின்னைப்பூ]*

**பின்னையெண்ணெய்** *pinnaiyeṇṇey*, பெ. (n.) புன்னைக் காயிலிருந்து எடுக்கும் எண்ணெய்; oil extracted from th kernal of the fruit of Alexandrian laurel.

*[பின்னை + எண்ணெய். புன்னை → பின்னை]*

**பின்னொட்டு** *pinnoṭṭu*, பெ. (n.) (இலக்.) அடிச்சொல்லைத் தொடர்ந்து சேர்க்கப்படும் உருபு; suffix, postposition.

*[பின் + ஒட்டு]*

**பின்னோக்காடு** *pinnōkkāḍu*, பெ. (n.) மகப்பேற்றின் பின்னுள்ள வலி (வேதனை); after-pains. (C.E.M.)

*[பின் + நோக்காடு. நொள் → நோள் → நோளை = பிணியுண்ட நிலை. நோள் → நோய் → நோ = நோய், துன்பம். நோ → நோவு = வலி. நோ → நோக்காடு. கடு → காடு = மிகுதி. ஒ.நோ. சாக்காடு]*

**பின்னோக்கி** *pinnōkki*, பெ. (n.) வேலையில் கவனம் செலுத்தாமல் பின் வருவதிலேயே கண்ணா யிருப்பவன்; one who has no interest in his work but has an eye on what is to be got subsquently. *"பிள்ளையே..... பின்னோக்கி..... நூலை உரைத்தற்குரிமை யிலாதார்"* (அறிநெறி. 4.)

*[பின் + நோக்கி. நோக்கு → நோக்கி. 'இ' வினைமுதலீறு]*

**பின்னோக்கு¹–தல்** *pinnōkku-,* 5 செ.கு.வி. (v.i.) 1. வருவதை யெதிர்பார்த்தல்; to have an eye on the consequences. *'சொல்லற்க முன்னின்று பின்னோக்காச் சொல்'* (குறள், 184.). 2. பின்புறம் பார்த்தல்; to look back. 3. பின்வாங்குதல்; to retreat, back side.

*[பின் + நோக்கு–,]*

**பின்னோக்கு²** *pinnōkku,* பெ. (n.) சென்ற காலத்தை எண்ணுகை; recalling the past.

*[பின் + நோக்கு]*

**பின்னோடு** *pinnōḍu,* கு.வி.எ. (adv.) *பின்னோடே* பார்க்க; see *pinnōḍē.*

*[பின் → பின்னோடு]*

**பின்னோடே** *pinnōḍē,* கு.வி.எ. (adv.) 1. அடுத்து; presently, immedietly. 2. பின்னால்; afterwards. 3. பின்புறமாய்; behind.

*[பின் → பின்பு. பின் → பின்னே. பின்→ பின்னோடே]*

**பின்னோன்** *pinnōn,* பெ. (n.) 1. பிற்பட்டவன்; one who comes after, follower. *'பின்னோன் வேண்டும் விகற்பங்கூறி'* (நன். 7.) 2. தம்பி; younger brother. *'பின்னோன் களத்திலாரம் இட்டணிந்தனன்'* (உபதேசகா. சிவவிரத. 369.). 3. இழிந்தவன் (சூத்திரன்) (யாழ்.அக.); Sūdra.

*[பின் + ஓன்]*

**பினத்தல்** *pinattal,* தொ.பெ. (vbl.n.) பிதற்றல்; raving.

*[பிதற்று → பினற்று → பினத்து (மு.தா. 10) → பினத்தல் 'தல்' தொ.பெ.ஈறு]*

**பினத்து–தல்** *pinattu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *பினற்று–தல்* பார்க்க; see *pinarru-.*

*[பித்து → பிதற்று. பிதற்றுதல் = உளறுதல். பிதற்று → பினற்று → பினத்து (மு.தா. 10.)]*

**பினாகபாணி** *pināgapāṇi,* பெ. (n.) குங்கும வைப்பு நஞ்சு; a kind of arsenic.

**பினாட்டு** *pināṭṭu,* பெ. (n.) பனாட்டு (யாழ்ப்.); inspissated extract of palmyra fruit and sap.

*[பனாட்டு → பினாட்டு]*

**பினாத்தல்** *pinattal,* பெ. (n.) புலப்பம் (யாழ்ப்.); delirium.

*[பினாத்து → பினாத்தல். 'அல்' தொ.பெ.ஈறு]*

**பினாத்து–தல்** *pināttu,* 5 செ.குன்றாவி. (v.t.) நோய் நிலையில் உளறுதல்; to talk incoherently, as a patient in delirium.

*[பித்து → பிதற்று. பிதற்றுதல் = உளறுதல். பிதற்று → பினற்று → பினாத்து (மு.தா. 10)]*

**பினுவபுட்பி** *pinuvapuṭpi,* பெ. (n.) நேர்வாளம்; croton seed plant.

**பீ[1]** *pī,* 'ப்' என்ற மெய்யெழுத்தும் 'ஈ' என்ற மெய்யெழுத்தும் இணைந்த உயிர் மெய்(அசை)எழுத்து; the syllable formed by adding the long vowel 'ī' to the consonant 'p'

*[ப் + ஈ]*

**பீ[2]** *pī,* பெ. (n.) குடலினின்று வெளிப் படுத்தப்படும் கழிவுப் பொருள் (நன். 178, உரை.); excrement, ordure, faeces.

**மறுவ.** மலம், பேல்

ம., க, பீ; *தெ.* பீயி.

*[புல் → பில் → பேல். புள் → புழுக்கை → பிழுக்கை. புல் → பில் → (பிள்) → பீ (மு.தா. 102)]*

**பீ[3]** *pī,* பெ. (n.) 1. தொண்டி; bloody drop ordure tree (l.) 3. பெருமரம்; toothed-leaved tree of heaven.

*[புல் → பில் → (புள்) → பீ = குடலினின்று வெளிப்படும் கழிவுப்பொருள், அக்கழிவுப் பொருளின் நாற்றம் தரும் மரம்]*

**பீ[4]** *pī,* பெ. (n.) அச்சம் (யாழ்.அக.); fear.

*[பேபே என்பது அச்சக்குறிப்பு. பே = அச்சம். பே → பேம் = அச்சம். பே → பேய் = அச்சம், அஞ்சப்படும் ஆவி. பே → பீ (வ.வ. 42)]*

**பீக்கம்** *pikkam,* பெ. (n.) எட்டிக்கொட்டை (சங்.அக.); nux vomica

**பீக்கருவேல்** *pī-k-karu-vēl,* பெ. (n.) 1. உடைவேல்; pea-podded black-babul. 2. வேலமரவகை; pulpy-podded black babul.

*[பீ + கருவேல்]*

**பீக்கலாட்டம்** *pikkalāṭṭam,* பெ. (n.) 1. தடை (வின்.); impediment, hindrance. 2. தொந்தரவு (வின்.); trouble

**க.** பீகலாட; **தெ.** பீகுலாட

*[பிய் → பிய்க்கு → பீக்கு → பீக்கலாட்டம். பிய் = பிடுங்குதல், இழுத்தல். பிய் → பீய்.]*

**பீக்கலாத்தி** *pikkalātti,* பெ. (n.) *பீக்கிலாத்தி* (யாழ்.அக.) பார்க்க; see *pikkilātti*

*[பீக்கிலாத்தி → பீக்கலாத்தி]*

**பீக்காக்கை** *pī-k-kākkai,* பெ. (n.) கருநிறமுள்ள ஒரு வகைப் பறவை; Nilgiri black bird. (M.M. 815)

*[பீ[2] + காக்கை]*



**பீக்கார்த்திகை** *pī-k-kārttigai,* பெ. (n.) திருக்கார்த்திகைக்கு அடுத்த நாள் (கொ.வ.); the day succeeding tiru-k-kārttigai.

*[பின் + கார்த்திகை - பின்கார்த்திகை பீக்கார்த்திகை]*

**பீக்கிலாத்தி** *pikkilātti,* பெ. (n.) சங்கங்குப்பி (மலை.); smooth volkameria.

*[பீச்சுவிளாத்தி → பீக்கிலாத்தி]*

**பீக்குடல்** *pi-k-kuḍal,* பெ. (n.) மலக்குடல்; the intestines.

*[பீ² + குடல். குழல் → குடல்]*

**பீக்குருவி** *pi-k-kuruvi,* பெ. (n.) பன்றிக்குருவி; white - headed babbler. (M.M. 815.)

*[பீ² + குருவி. குள் → குரு → குருவி = சிறு பறவை]*

**பீக்குழி** *pi-k-kuḻi,* பெ. (n.) பல்லாங்குழியில் இடுதற்குக் காயில்லாமையால் வெறுமையாக விடப்படுங்குழி (இ.வ.); pit in the pallāṅkuḻi left empty in the course of a game.

*[பீ² + குழி. குள் → குழி]*

**பீக்கை¹** *pikkai,* பெ. (n.) மெலியது (இலேசானது); that which is delicate or thin.

தெ. பீக.

*[புல் → (பில்) → பின் → பின்னி = மிகச்சிறியது. புல் → பில் → பிள் → பீ → பீக்கை]*

**பீக்கை²** *pikkai,* பெ. (n.) பசளை² (சங்.அக.); purslane.

**பீக்கை³** *pi-k-kai,* பெ. (n.) இடது கை (இ.வ.); left hand.

*[பீ² + கை. பீயைக் கழுவுவதற்குப் பயன்படுத்தும் கை]*

**பீக்கொஞ்சி** *pi-k-koñji,* பெ. (n.) செடிவகை; coromandel eugene myrtle. (A)

*[பீ² + கொஞ்சி. கொழுஞ்சி → கொஞ்சி]*

**பீகசாரி** *pigašāri,* பெ. (n.) இளைய பெண்; young woman.

**பீகம்¹** *pigam,* பெ. (n.) **1.** பூட்டு வகை; padlock. **2.** திறவு கோல்; key.

மறுவ. வீகம்

ம. வீக; க. பீக, பிய்யக; தெ. பீகம்; து., குட. பீக

*[பிகிதல் = இறுகுதல்; பிகி → பீக = இறுகக் கட்டுவது, இறுக்கிப்பிடிப்பது, பூட்டு, பூட்டைத் திறக்கும் திறவு கோல்]*

**பீகம்²** *pigam,* பெ. (n.) சீரகம்; cumin seed.

**பீகமுத்திரை** *piga - muttirai,* பெ. (n.) பூசை முடிந்த பின் கோயிற் கதவை யடைத்து இடும் முத்திரை (கோயிலொ. 96.); seal upon the door, especially of a temple.

க. பீகமுத்ர,

*[பீகம் + முத்திரை. பீகம் = பூட்டு. பீகமுத்திரை = பூட்டிய பின் அல்லது பூட்டின் மேல் இடும் முத்திரை]*

**பீகரம்** *pikaram,* பெ. (n.) அச்சந் தரத்தக்கது; frightfulness.

*[ பீ = அச்சம். பீ³ → பீகரம்]*

**பீங்கான்மரம்** *pingāṉ - maram,* பெ. (n.) நாட்டு வாதுமை; Indian almond. (A.)

**பீச்சக்கை** *picca-k-kai,* பெ. (n.) *பீச்சாங்கை* (இ.வ.) பார்க்க; see *piccāṅgai.*

*[பீக்கை → பீச்சக்கை]*

**பீச்சகத்தி** *piccagatti,* பெ. (n.) சிற்றகத்தி; common sesban.

**பீச்சகம்** *piccagam,* பெ. (n.) வரகு; a cereal.

**பீச்சங்கு** *pi-c-caṅgu,* பெ. (n.) தீய நாற்றமுடைய சங்கஞ் செடி; cleome.

*[பீ + சங்கு]*

**பீச்சங்குழல்** *piccaṅ-kuḻal,* பெ. (n.) பீச்சாங்குழல் பார்க்க; see piccāṅkuḻal.

*[பீச்சாங்குழல் → பீச்சங்குழல்]*

**பீச்சல்**[1] *piccal,* பெ. (n.) 1. வயிற்றுக் கழிச்சல் (கொ.வ.); looseness of the bowels, 2. பீச்சுகை; squriting, syringing.

*[புல் → பில் → பிலிற்று. பிலிற்றுதல் = சிந்துதல். பில் → பீல் → பீர் = ஒரு பீச்சு. பீல் → பீற்று → பீச்சு. ஒ.நோ. கீற்று → கீச்சு (மு.தா.102) பீச்சு → பீச்சல்]*

**பீச்சல்**[2] *piccal,* தொ.பெ. (vbl.n.) நீர் பாய்ச்சல்; syringing water.

*[பீச்சு → பீச்சல். 'அல்' தொ.பெ.ஈறு]*

**பீச்சாக்கத்தி** *piccā-k-katti,* பெ. (n.) 1. எழுத்தாணியமைந்த கைப்பிடியுள்ள கத்தி (யாழ்ப்.); combined pocket knife and iron style. 2. ஒருவகை நீண்ட கத்தி (இ.வ.); long country knife.

ம. பீச்சாங்கத்தி

*[பீச்சு + கத்தி → பீச்சுக்கத்தி → பீச்சாக் கத்தி. பீல் → பீற்று → பீச்சு.பீச்சுதல் = நீர்ப்பொருளை மிக விரைவாக வெளியேற்றுதல். பீச்சுகத்தி = வேகமாக வீசும் வகையிலமைந்த (மெல்லிய) நீண்ட கத்தி. குத்து → குத்தி → கத்தி = குத்தி வெட்டும் அல்லது அறுக்கும் கருவி]*



**பீச்சாங்கட்டி** *piccāṅ-kaṭṭi,* பெ. (n.) மாழை (உலோக)க் கட்டி (ஈடு. 5,1,ப்ர.ஜீ.); ore.

**பீச்சாங்கத்தி** *piccāṅ-katti,* பெ. (n.) *பீச்சாக்கத்தி* (யாழ்.அக.) பார்க்க; see *piccā-k-katti*

*[பீச்சாக்கத்தி → பீச்சாங்கத்தி]*

**பீச்சாங்கால்தூசு** *picccāṅ-kāl-dūšu,* பெ. (n.) மதிப்பற்ற நிலை.; humility,

*[பீச்சாங்கால் + தூசு]*

**பீச்சாங்குழல்** *piccāṅ-kuḻal,* பெ. (n.) நீர் முதலியன பீச்சுங்குழற் கருவி (கொ.வ.); syringe.

ம. பீச்சாங்குழல்.

*[பீச்சு + குழல். குள் → குழை = துளை. குழை → குழல் = உட்டுளை யுள்ளது]*

**பீச்சாங்கை** *piccāṅ-kai,* பெ. (n.) இடதுகை; left hand.

*[பீ + கை –பீக்கை → பீச்சக்கை → பீச்சங்கை. 'பீக்கை' பார்க்க.]*

**பீச்சாங்கொள்ளி** *piccāṅ-koḷḷi,* பெ. (n.) அஞ்சும் இயல்புடையவன் (பயந்தாங்கொள்ளி) (யாழ்.அக.); coward.

*[பீ = அச்சம். பீ + அச்சம் – பீச்சம். (பீமிசைச் சொல்). பீச்சம் + கொள்ளி - பீச்சங் கொள்ளி → பீச்சாங்கொள்ளி. கொள் + இ – கொள்ளி]*

**பீச்சி**[1] *picci,* பெ. (n.) *பீச்சாங்கொள்ளி* (இ.வ.) பார்க்க; see *piccāṅ-koḷḷi*

*[பீ + அச்சம் – பீச்சம் → பீச்சி]*

**பீச்சி**[2] *picci,* பெ. (n.) அத்தி வகையு ளொன்று; a kind of wild fig.

**பீச்சிங்கி** *picciṅgi,* பெ. (n.) மருந்தெண்ணெய்; a medicated oil.

**பீச்சிப்பழம்** *piccippaḻam,* பெ. (n.) தள்(துரிப்)பூசினிப் பழம்; water melon.

**பீச்சிப்பூ** *piccippū,* பெ. (n.) மல்லிகைப் பூ வகையு ளொன்று; a kind of jasmine.

**பீச்சு**[1]**–தல்** *piccu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. நீர்மப்பொருளைக் கருவிமூலம் வேகமாக வெளியேற்றுதல்; to squirt. 2. பால்கறத்தல்; to milk, as a cow.

தெ. பீச்சுக.

*[புல் → பில் → பிலிற்று. பிலிற்றுதல் = சிந்துதல்,பீச்சுதல். பில் → பீல் → பீர் = ஒருபீச்சு. பீல் → பீற்று → பீச்சு. ஒ.நோ.கீற்று → கீச்சு (மு.தா. 102)]*

**பீச்சு**[2]**–தல்** *piccu-,*5 செ.கு.வி. (v.t.) கழிச்சல் (பேதி) ஆதல்; to purge, to have loose motions.

*[பீல் → பீற்று → பீச்சு]*

**பீச்சு**[3] *piccu,* பெ. (n.) பீச்சப்பட்டது; that which is discharged at one squirt, or squeeze. *'பிள்ளைப் பாலில் இரண்டு பீச்சுக்கொடு'* (உ.வ.)

*[பீல் → பீற்று → பீச்சு (மு.தா. 102)]*

**பீச்சுக்குழல்** *piccu-k-kuḻal,* பெ. (n.) *பீச்சாங்குழல்* பார்க்க; see *piccāṅkuḻal.*

*[பீய் → பீய்ச்சு → பீச்சு + குழல்]*

**பீச்சுமருந்து** *piccumarundu,* பெ. (n.) ஊசி குத்தி அரத்தத்திற்குள் செலுத்தும் மருந்து; injecting medicines through hypodermic syringe.

*[பீச்சு + மருந்து. மரு → மருந்து]*

**பீச்சுவிளா** *piccuviḷā,* பெ. (n.) *பீச்சுவிளாத்தி* பார்க்க; see *piccuviḷātti.*

*[பீச்சு + விளா. விள → விளா ]*

**பீச்சுவிளாத்தி** *piccu-viḷātti,* பெ. (n.) சங்கங்குப்பி (மலை.); smooth volkameria. 2. விளாவகை (சங்.அக.); a kind of tree.

*[பீச்சு + விளாத்தி. விள → விளா → விளவம். விளவம் → விளாத்தி]*

**பீச்சைக்கால்** *piccai-k-kāl,* பெ. (n.) இடதுகால்; left leg.

*[பீச்சை + கால். இடது கையில் 'பீ' கழுவும் செயல்பாடுபற்றிக் கைக்கு வந்த அடை பீச்சை (பீச்சாங்கை) இடது (கை) என்னும் பொருளில் நிலையூறிய பின் இடது காலைக் குறிப்பதற்கும் பீச்சை அடையாக வந்தது]*

**பீச்சைக்கை** *piccai-k-kai,* பெ. (n.) *பீச்சாங்கை* பார்க்க; see *piccāṅ-gai.*

*[பீச்சாங்கை → பீச்சைக்கை]*

**பீச்சைக்கைவாகு** *piccai-k-kai vāgu,* பெ. (n.) இடது கைப்பழக்கம்; left handedness.

*[பீ → பீச்சை + கை + வாகு]*

**பீசகம்** *piŝagam,* பெ. (n.) 1. வெட்பாலை மரம்; tellichery bark. 2. குழவியின் கைகளும் தலையும் மகப்பேற்றின் போது இடம் பிறழ்ந்து அல்குல் வாயிலை அடைக்கை; presentation of vertex with prolapse of hands.

*[பிசகு → பிசகம் → பீசகம்]*

**பீசகவயம்** *piŝagavayam,* பெ. (n.) முயற்செவிக் கள்ளி; a kind of spurge.

**பீசகோசம்** *piŝakōŝam,* பெ. (n.) பூவில் விதையுள்ள இடம்; pericarp, seed-vessel in flowing plants.

*[பீசம் + கோசம்]*

**பீசசிங்கி** *piŝaŝiṅgi,* பெ. (n.) மருந்தெண்ணெய்; a medicated oil.

**பீசஞ்சம்** *piŝañjam,* பெ. (n.) தாமரை மணி; lotus beads.

**பீசதபம்** *piŝatabam,* பெ. (n.) விரைவீக்கம்; orchitis.

**பீசதாது** *piŝatādu,* பெ. (n.) நச்சுக் கட்டி வகையுளொன்று; a poisionous tumour.

**பீசநீர்க்கட்டு** *piŝanīr-k-kaṭṭu,* பெ. (n.) விதை (அண்ட)வீக்கம்; hydrocele.

*[பீசம் + நீர் + கட்டு. கள் → கட்டு]*

**பீசப்புல்** *piŝappul,* பெ. (n.) புல்வகை; a kind of grass.

மறுவ. பீசை

**பீசப்பை** *piŝa-p-pai,* பெ. (n.) 1. விதைப்பை; the skin covering the testicles. 2. உயிரணு தங்கும் பை; sac containing sperm.

*[பீசம் + பை]*

**பீசம்**[1] *piŝam,* சொ. (n.) 1. விதை (திவா.); seed. 2. மூலம்; cause,orgin, source. 3. விதை (அண்டம்); testicle 4. வெண்ணீர், விந்து (சுக்கிலம்) (வின்.); semen virile 5. பிறங்கடை (சந்தகி) (வின்.); offspring, progeny 6. ஒருமந்திரத்தின் சிறப்பியலான எழுத்து;

mystic letter or sylable which forms the essential part of a mantra. பீசங்கூடிய வகோரமந்திரம் (விநாயகபு. 80,687)

*[வித்து → விது → பிது → பீதம் → பீசம். ஒ.நோ: வித்து → க. பித்து. bīja என்னும் சொல்லிற்கு vīhja என்பதை வேராகக் காட்டியபின் அது of doubtful origin என்றுமா.வி.அகரமுதலி குறித்திருப்பதைக் காண்க.]*

**பீசம்²** *pišam,* பெ. (n.) தாமரைத்தண்டு (திவா.); lotus stalk.

**பீசம்வாங்கு-தல்** *pišam-vāṅgu-,* 5 செ. குன்றாவி. (v.t.) விதையடித்தல்; to castrate.

*[பீசம் + வாங்கு-,]*

**பீசவாதம்** *pišavādam,* பெ. (n.) பீசவீக்கம் பார்க்க; see piša vikkam

*[பீசம் + வாதம்]*

**பீசவாயு** *pišavāyu,* பெ. (n.) பீச வீக்கம் பார்க்க; see piša vikkam

*[பீசம் + வாயு]*

**பீசவீக்கம்** *piša vīkkam,* பெ. (n.) 1. அண்டவிதை நோய்வகை (பைஷஜ.); inflamation of the testicles; orchitis hydrocele. 2. அண்ட நோய்வகை; inflamation of the epididymis, epididymitis.

*[பீசம் + வீக்கம்]*

**பீசறாகண்டி** *pišarā-kaṇḍi,* பெ. (n.) காட்டாமணக்கு; common physic nut.

**பீசாமலம்** *pišāmalam,* பெ. (n.) கொருக்காய்ப்புளி; a thorny tree.

**பீசானி** *pišāṉi,* பெ. (n.) நச்சுப்பாலை; a plant of the species of pālai having poisonous quality.

**பீசுகோலா** *pišu-kōlā,* பெ. (n.) வெளிறிய பச்சைநிறமுள்ளதும், ஓரடி நீளம் வளரக் கூடியதுமான சிறுமீன் வகை; a garfish, greenish grey, attaining 1 ft, in length,



**பீசைப்புல்** *pišaippul,* பெ. (n.) நீண்டபுல் வகை (வின்.); a tall coarse plant.

*[மீசைப்புல் → பீசைப்புல்]*

**பீஞ்சல்** *piñjal,* பெ. (n.) *பீச்சுவிளாத்தி* பார்க்க; see *piccuviḷātti.*

**பீஞ்சாசிகம்** *piñjāšigam,* பெ. (n.) தகரைச் செடி; fetid cassia.

**பீஞ்சுகபழம்** *piñjugapaḻam,* பெ. (n.) கடுக்காய்ப் பழம்; fruit of terminalia chebula.

**பீஞ்செறி** *piñceṟi,* பெ. (n.) *பீச்சங்கு* பார்க்க; see *piccaṅgu.*

*[பீ +செறி]*

**பீட்கன்று** *pīṭ-kaṉṟu,* பெ. (n.) கீழ்க்கன்று; undershoot, sucker, as of a plantain tree. *'கரையில் நிற்கிற வேய்களைப் பீட்கன்றாக வேர்ப்பற்றிலே குத்தியெடுத்து'* (திவ். திருநெடுந்.6,வ்யா.பக்.55.)

*[பீள் +கன்று. புள் → பிள் → பிரி = பிரிவு. புள் → பீள் = பிரிந்து வருவது. பீட்கன்று, தாய் மரத்தினின்று பிரிந்து வரும் இளங்கன்று]*

**பீட்டகம்** *piṭṭagam,* பெ. (n.) பணி, பதவி (வின்.); office, employment.

*[புள் →( பிள்) → பிண்டு → பிண்டம் = திரட்டி.புள் → பிள் → பீள் → பீடு = வலிமை, பெருமை. பீடு → பீட்டகம் = பெருமை தரத்தக்க பணி]*

**பீட்டன்** *piṭṭaṉ,* பெ. (n.) 1. இரண்டாம் பாட்டன் (வின்.); great grand father 2. இரண்டாம் பேரன்; great grandson. 3. பாட்டன் (யாழ்.அக.); grand father.

**பீட்டன்பாக்கு** *piṭṭaṉpākku,* பெ. (n.) சாயப் பாக்கு வகை; a kind of prepared areca-nut.

**பீட்டி** *piṭṭi,* பெ. (n.) பாட்டி (யாழ்.அக.); grand mother.

*[பீட்டன் (ஆ.பா.) – பீட்டி (பெ.பா.)]*

**பீட்டு** *piṭṭu,* பெ.அ. (adj.) பொட்டலான (தரிசான); uncultivable (P.T.L.)

*[பீடு → பீட்டு]*

**பீட்டை** *piṭṭai,* பெ. (n.) 1. பயிரின் இளஞ்சூல் (பிங்.); rudimentary stage in the formation of grain. 2. முதலறுவடையின் பின்னுள்ள பயிரின் இளங்கதிர் (வின்.); tender ear of grain after the first harvest.

*[புள் → (பிள்) → பீள் = இளங்கதிர், இளமை. பூட்டை = இளங்கதிர். பூட்டை → பீட்டை (மு.தா. 48)]*

**பீடணம்** *piḍaṇam,* பெ. (n.) அச்சம், நடுக்கம்; fear, horror.

*[பே → பீ = அச்சம். பீ → பீர் = அச்சம். பீர் → பீலு = அச்சம். பீர் → (பீரணம்) → பீடணம்]*

**பீடபூமி** *piḍabūmi,* பெ. (n.) உயர்ந்தும் பரந்தும் காணப்படும் நிலப்பாகம் (இ.வ.); plateau, tableland

*[பீடம் + பூமி]*

Skt. bhūmi > த. பூமி

**பீடம்** *piḍam,* பெ. (n.) 1. இருக்கை (ஆசனம்); seat, stool, chair, raised seat. பீடஞ் செய் தாமரையோன் (திருக்கோ. 129.) 2. மேடை; platform, dais பொழிவு(பிரசங்க)ப் பீடம். 3. அரியணை (சிங்காதனம்); throne செம்பொற் பீடத்திருந்து (கம்பரா. கும்பகர்ண. 6.) 4. காவு(பலி)பீடம்; alter. 5. சிலை வைப்பிடம் (விக்கிரகபீடம்); pedestal ஸ்ரீபாத பீடத்துக்கு மேல் (S.I.I.II.135,7) 6. குறைவட்டத்தின் எஞ்சிய பகுதி (வின்.); complement of a segment 7. குதம், பிட்டம் (யாழ்.அக.); anus.

*[பு ள் → ( பிள்) → பிண்டு → பிண்டம் = திரட்சி. (மு.தா.51).புள் → பிள் → பீடு → பீடம் = திரண்டது, உயர்ந்தது, உயர்ந்து அமையும் இருக்கை]*

**பீடமம்** *piḍamam,* பெ. (n.) முள்துளசி; thorny holy basil.

**பீடர்** *piḍar,* பெ. (n.) பெருமையுடையவர்; persons of eminence. *'ஓடாப்பீட ருள்வழி யிறுத்து'* (பதிற்றுப். 45. 14.)

*[பீடு → பீடர். 'அர்' ப.பா.ஈறு]*

**பீடரம்** *piḍarm,* பெ. (n.) கோயில் (அக.நி.); temple, place of worship.

*[புள் → பிள் → பீடு → பீடம் → பீடரம்]*

**பீடன்பாக்கு** *piḍaṉpākku,* பெ. (n.) சேரநாட்டினின்று வரும் துவர்ப்புச்சத்து மிகுதியாயுள்ள பாக்கு; a kind of arecanut

**பீடி–த்தல்** *piḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) துன்புறுத்துதல்; to give pain, afflict, annoy, exert evil influence.

*[புள் → பொள் → பொளபொள. பொள பொளத்தல் = நெகிழ்தல். புள் → பிள் → பிடு → பீடு = குழைவு, துன்பம். பீடு → பீடி–,]*

**பீடிகை**[1] *piḍigai,* பெ. (n.) **1.** இருக்கை, பீடம் (பிங்.); seat, stool, bench. **2.** தேர் முதலியவற்றின் தட்டு; pedestal, seat, as of a car கிளர் பொற் பீடிகை (சீவக. 2213) **3.** அரியணை; throne, செம்பொற் பீடிகை கோமக னேறி (சிலப். 27, 156.) **4.** தவத்தோர் பீடம்; seat for an ascetic **5.** பீடிகைத் தெரு பார்க்க (பிங்.); see piḍigai-t-teru **6.** முகவுரை (கொ.வ.); introduction.

*[பு ள் → ( பி ள் ) → பி ண் டு → பிண்டம் = திரட்சி. புள் → பிள் → பீடு → பீடம் = இருக்கை, மேடை. பீடம் → பீடிகை]*

**பீடிகை**[2] *piḍigai,* பெ. (n.) **1.** பூந்தட்டு (பிங்.); flower trey. **2.** பூண் கொள்கலம் (திவா.); jewel-casket.

*[பிழா → பிழவு → பிடவு → பிடகு → பிடகை = பூந்தட்டு. (வ.வ. 41) பிடகை → பீடிகை]*

**பீடிகைக்கவிகை** *piḍigai-k-kavigai,* பெ. (n.) முள்ளந் தண்டு எலும்பிலுள்ள பள்ளம்; hallow of sacrum.

*[பீடிகை + கவிகை. கவி → கவிகை]*

**பீடிகைச்சந்து** *piḍigai-c-candu,* பெ. (n.) முதுகுத் தண்டு இணையுமிடத்திலுள்ள இடைவெளி; sacro ilac symphysis.

*[பீடிகை + சந்து]*

**பீடிகைச்சந்துப்பொருத்து** *piḍigai-c-candu-p- pouruttu,* பெ. (n.) முள்ளந்தண்டும் இடுப்பெலும்பும் இணையுமிடம்; sacro ilac symphysis.

*[பீடிகை + சந்து + பொருத்து]*

**பீடிகைத்தெரு** *piḍigai-t-teru,* பெ. (n.) கடைவீதி; market, bazaar. 'பீடிகைத்தெருவும்' (மணிமே. 4, 38.)

*[பீடிகை[1] + தெரு]*

**பீடிகைநரம்பு** *pīḍigai-narambu,* பெ. (n.) இடுப்படி முக்கோண மூட்டெலும்பையும் முள்ளந்தண்டையுங் இணைக்கும் நரம்புகள்; sacral nerves.

*[பீடிகை + நரம்பு]*

**பீடிகைபுச்சபந்தினி** *pīḍigai-pucca-pandiṉi,* பெ. (n.) முதுகெலும்பு இடுப்பெலும்பு முதலானவற்றின் கட்டுநார்; sacro coccygial ligament.

*[பீடிகை + புச்சபந்தினி]*

**பீடிகையென்பு** *pīḍigai-y-eṉbu,* பெ. (n.) முள்ளந்தண்டின் கீழ்ப்பகுதியில் முக்கோண வடிவில் அமைந்த ஐந்து எலும்புகள்; sacrum.

*[பீடிகை + என்பு. எலும்பு → என்பு]*

**பீடிப்பு** *pīḍippu,* பெ. (n.) துன்பம்; distress, affliction, evil influence. *'பீடிப்புறு புண்ணுடலோடு பெயர்த்தார்'* (கம்பரா. அதிகாயன். 253.)

*[பீடி → பீடிப்பு. 'பு' தொ.பெ.ஈறு]*

**பீடிலிகைவாரி** *pīḍiligaivāri,* பெ. (n.) கோயிலதிகாரிகளுள் ஒருவன்; an officer of a temple. (I.M.P.Tj. 672)

*[பீடிலிகை + வாரி]*

**பீடு[1]** *pīḍu,* பெ. (n.) 1. பெருமை; greatness *'பீடுகெழு செல்வ மரீஇய கண்ணே'* (பதிற்றுப். 50, 26.) 2. வலிமை; might, strength *'நண் ணாரு முட்குமென் பீடு'* (குறள், 1088.)

தெ. பீரு

*[புல் → பொல்லு = தடி.புள் → (பிள்) → பிண்டு → பிண்டம் = திரட்சி. (மு.தா. 51) புள் → பிள் → பீள் → பீடு]*

**பீடு[2]** *pīḍu,* பெ. (n.) 1. பொட்டல்(தரிசு) நிலம்; waste, uncultivated land; inferior soil (C.G.) 2. குறைவு (வின்.); decay, deficiency, scarcity 3. தாழ்வு; inferiority, lowness. *'இந்தச் சரக்குப் பீடானது'* (சென்னை.)

க., தெ. பீடு

*[வீழ் → பீழ் → பீள் → பீடு. வீழ்தல் = விழுதல், தாழ்வாதல், பயனற்றுபோதல், குறைவுடையதாதல் ]*

**பீடு[3]** *pīḍu,* பெ. (n.) துன்பம் (வின்.); sorrow.

*[புள் → பொள் → பொளபொள. பொளபொளத்தல் = நெகிழ்தல், ஒழுகுதல். புள் → பிள் → பிடு → பீடு]*

**பீடு[4]** *pīḍu,* பெ. (n.) (அரு.நி.141.) 1. குழைவு; pliability. 2. ஒப்பு; similarity.

*[புள் → பிள் → பிடு → பீடு]*

**பீடுகாடு** *pīḍukāḍu,* பெ. (n.) பொட்டல்(தரிசு) நிலம்; uncultivable land. (R.T)

*[பீடு + காடு. கடு → காடு]*

**பீடுகாலம்** *pīḍu-kālam,* பெ. (n.) வறற்கடைக் காலம் (வின்.); time of scarcity.

*[பீடு + காலம்]*

**பீடுநடை** *pīḍu naḍai,* பெ. (n.) பெருமிதமான நடை; proud bearing, majestic gait. வெற்றிப் பெற்றுப் பீடு நடையோடு விளையாட்டு வீரர்கள் நாடு திரும்பினர் (உ.வ.)

*[பீடு + நடை. நடு → நடை]*

**பீடுநிலம்** *piḍunilam,* பெ. (n.) பயிரிடாமல் கரம்பாயுள்ள வயல்; uncultivated land.

*[பீடு + நிலம்]*

**பீத்தரு** *pittaru,* பெ. (n.) *பீத்தாரு* பார்க்க; see *pittāru.*

*[பீ + தரு]*

Skt. taru > **த.** தரு

**பீத்தல்**[1] *pittal,* பெ. (n.) *பீற்றல்* பார்க்க; see *piṟṟal.*

*[பீற்றல் → பீத்தல்]*

**பீத்தல்**[2] *pittal,* பெ. (n.) தற்பெருமைப் பேச்சு; swagger, boast.

*[பில் → பீல் → பீர் = ஒரு பீச்சு. பீல் → பீற்று → பீற்றல் = நீர்ப்பொருள்வேகமாக வெளியேறுதல். பீற்று → பீத்து. பீற்றல் → பீத்தல் = நீர்ப்பொருள் தொடர்ந்து வெளியேறுதல் போல தன்னைப் பற்றி மிகுதியாகச் சொல்லுதல்]*

**பீத்தல்புடல்** *pittal-puḍal,* பெ. (n.) உடல் வலியற்றவன்; lit; hollow sponge-gourd. a person of weak constitution.

*[பீத்தல் + புடல். பீறு → பீற்றல் → பீத்தல். பீற்று → பீத்து. புள் → (புழு) → புழல் → புடல் = உட்டுளையுடையது. பீத்தல் புடல் = கிழிந்ததும் உள்ளீடு இல்லாததுமானது, வலுவற்றது, வலுவற்ற உடம்பினைக் கொண்டான்.]*

**பீத்தாரு** *pittāru,* பெ. (n.) பெருமரம்; a tree with bad odour.

*[பீ + தாரு.]*

Skt. taru > **த.** தாரு

**பீத்தாருசருமம்** *pittāru-šarumam,* பெ. (n.) பெருமரத்துப்பட்டை; bark of bad odour tree.

*[பீத்தாரு + சருமம்]*

Skt. carman > **த.** சருமம்.

**பீத்தாளி** *pittāḷi,* பெ. (n.) மருந்துச்செடி வகையுளொன்று; a kind of medicinal plant.

**பீத்து**[1]**–தல்** *piṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) *பீற்று–தல்* (கொ.வ.) பார்க்க; see *piṟṟu-,*

*[பீல் → பீற்று → பீத்து–,]*

**பீத்து**[2] *pittu,* பெ. (n.) *பீத்தல்*[2] பார்க்க; see *pittal.*

*[பீற்று → பீத்து.]*

**பீத்தும்பை** *pittumbai,* பெ. (n.) தும்பை வகையுளொன்று; dung tumbay.

*[பீ + தும்பை]*

**பீத்துவிளா** *piṭṭuviḷā,* பெ. (n) விளா; wood-apple.

*[பீத்து + விளா]*

**பீத்தோல்** *pittōl,* பெ. (n.) மேற்றோல் (இ.வ.); epidermis.

**தெ.** பீதோலு

*[மீத்தோல் → பீத்தால்]*

**பீதகசுரம்** *pidagašuram,* பெ. (n.) காய்ச்சல் வகையுளொன்று; a kind of fever.

*[பீதகம் + சுரம்]*

**பீதகசுருள்** *pidagasuruḷ*, பெ. (n.) வெற்றிலை; betel.

*[பீதகம் + சுருள்]*

**பீதகட்டம்** *pidakaṭṭam*, பெ. (n.) சந்தனம்; sandal.

**பீதகதலி** *pidakadali*, பெ. (n.) செவ்வாழை (மலை.); red banana.

*[பீதம் + கதலி. குதலி → கதலி = சிறு வாழைக்காய்]*

**பீதகந்தகம்** *pidakandagam*, பெ. (n.) நான்கு வகைக் கந்தகத்துள் ஒன்று; one of the four kinds of sulphur.

*[பீத + கந்தகம்]*

**பீதகபத்திரம்** *pidaga-pattiram*, பெ. (n.) சிறிய முள்ளங்கியிலை; small radish leaf.

*[பீதக + பத்திரம்]*

*Skt. patra > த. பத்திரம்*

**பீதகம்** *pidagam*, பெ. (n.) இருவேலி; cuscus root.

**பீதகல்** *pidagal*, பெ. (n.) *பீதகலிகம்* பார்க்க; see *pidakaligam*.

*[பீதகலிகம் → பீதகல்]*

**பீதகலிகம்** *pidakaligam*, பெ. (n.) கண்ணோய் மருந்து வகையுள் ளொன்று; a kind of eye-disease plant.

**பீதகவாடை** *pidagavāḍai*, பெ. (n.) *பீதாம்பரம்* பார்க்க; see *pidāmbaram* *'பீதகவாடைப் பிரானார்'* (திவ். பெரியாழ். 5. 2. 8)

**பீதகற்றாழை** *pidakaṟṟāḻai*, பெ. (n.) மருட்கற்றாழை; a kind of aloe

**பீதகாட்டம்** *pidakāṭṭam*, பெ. (n.) செஞ்சந்தனக்கட்டை; red sandal wood.

**பீதகாண்டகம்** *pidakāṇḍagam*, பெ. (n.) செம்முள்ளி; a red variety thorny shrub.

**பீதகாபேரம்** *pidakābēram*, பெ. (n.) 1. குடவம் (பித்தளை); brass. 2. மஞ்சள் நிறம்; yellow colour.

**பீதகாரகம்** *pidakāragam*, பெ. (n.) வேங்கை மரம்; kino tree.

**மறுவ.** செம்புளிச்சை

**பீதச்சா** *pidaccā*, பெ. (n.) நந்தியாவட்டம்; a plant with white flowers.

**பீதநி** *pidani*, பெ. (n.) மூவிலைப் புன்னை; a kind of Alexandrian laurel tree.

**பீதப்பெண்** *piidappeṇ*, பெ. (n.) குங்கும வைப்பு நஞ்சு; a kind of prepared arsenic.

**பீதபத்திரம்** *pidapattiram*, பெ. (n.) மலைக்காசினிச் செடி; a kind of mountainous plant.

**பீதம்**[1] *pidam*, பெ. (n.) (பொதி. நி.) 1. பன்றி; pig. 2. எலி; rat.

**பீதம்²** *pīdam,* பெ. (n.) 1. அசோகு; Asoka tree. 2. சடைச்சிச் செடி; a plant.

**பீதம்³** *pīdam,* பெ. (n.) அச்சம் (வின்.); fear, dread.

[பே → பேய் = அச்சம், அஞ்சப்படும் ஆவி. பே → பீ (வ.வ.42)= அச்சம். பீ → பீதம்]

த. பீதம் > Skt. bhīta.

bhīta என்னும் சொல்லிற்கு bhī என்பதையே வேர்மூலமாக மா.வி. அகரமுதலி குறித்துள்ளதைக் காண்க

**பீதமுண்டம்** *pīdamuṇḍam,* பெ. (n.) தூக்கணாங் குருவி; pendulus or loxia bird.



**பீதனகம்** *pīdaṉagam,* பெ. (n.) புனம்புளி; a herbal plant.

**பீதனம்** *pīdaṉam,* பெ. (n.) கடுக்காய்; Indian gall nut.

**பீதாந்தலைக்கொடி** *pīdāntalai-k-koḍi,* பெ. (n.) படர்கொடி வகை; a kind of creeper.

**பீதி** *pīdi,* பெ. (n.) 1. அச்சம் (சூடா.); fear "பீதியன்றி... நலிந்தனர்" (உத்தறா. அரக்கர்.31) 2. நோவு தரும் நோய் (திவா.); painful disease.

*[பே → பீ → பீதி.]*

த. பீதி > Skt. bhīti

**பீதூங்கிதசுரம்** *pītūṅgidaśuram,* பெ. (n.) காய்ச்சல் வகையுளொன்று; a kind of fever.

**பீந்து-தல்** *pīndu-,* 5 செ.குன்றாவி. (v.t.) கொடுத்தல் (அக.நி.); to give.

*[பீற்றுதல் = நீரை வேகமான வெளியேற்று தல். பீற்று → பீத்து. பீத்து → பீந்து. பீந்துதல் = வெளியேற்றுதல், கொடுத் தல். ]*

**பீந்தோல்** *pīn-tōl,* பெ. (n.) மீந்தோல் (நன்.178, சங்கர நமச்.); epidermis, superficial skin.

*[மீந்தோல் → பீந்தோல். இனி பிய்க்குந் தோல்→பீந்தோல் எனினுமாம். ]*

**பீநக்கி** *pīnakki,* பெ. (n.) நாக்குப் பூச்சி (சங்.அக.); thread-worm.

*[பீ + நக்கி. நக்கு → நக்கி. 'இ' வினை முதலீறு]*

**பீநண்டு** *pīnaṇḍu,* பெ. (n.) நண்டுவகை; common crab, found in holes in moist ground. (M.M. 602.)

*[பீ + நண்டு. நொள் → நொண்டு → நெண்டு.நெண்டுதல் = தோண்டுதல். நொண்டு → நண்டு. வண்டலிலும் மணலிலும் கிண்டினாற் போற் கீறிச்செல்லும் நீருயிரி]*

**பீநாற்றமரம்** *pi-nāṟṟa-maram,* பெ. (n.) *பீநாறி4* (சங்.அக.) பார்க்க; see *pi-nāṟi 4.*

*[பீ + நாற்றம் + மரம்]*

**பீநாறி** *pi-nāṟi,* பெ. (n.) 1. நீண்டமரவகை; fetid tree. 2. சிறுமரவகை; woolly-leaved fire-brand teak. 3. சிறுமர வகை; beak-drooped Nilgiri. 4. பெருமரம்; toothed-leaved tree. of heaven. 5. *பீ²,* 2 பார்க்க; see *pi²* 2.

*[பீ + நாறி. நாறு → நாறி. 'இ' வினை முதலீறு]*

**பீநாறிச்சங்கங்குப்பி** *pināṟi-c-caṅ gaṅguppi,* பெ. (n.) *பீநாறிச் சங்கு* பார்க்க; see *pi-nāṟi-c-caṅgu.*

*[பீ + நாறி + சங்கம் + குப்பி]*

**பீநாறிச்சங்கு** *pi-nāṟi-c-caṅgu,* பெ. (n.) சங்கங்குப்பி (வின்.); smooth volkameria.

*[பீநாறி + சங்கு]*

**பீநாறிப்பட்டை** *pināṟippaṭṭai,* பெ. (n.) பெருமரத்துப்பட்டை; bark of sterculia.

*[பீநாறி + பட்டை]*

**பீநாறிப்பாக்கு** *pināṟi-p-pākku,* பெ. (n.) பாக்கு வகை (இ.வ.); a kind of prepared arecanut of bad odour but pleasant taste.

*[பீநாறி + பாக்கு]*

**பீநாறியெண்ணெய்** *pināṟi - y-ēṇṇey,* பெ. (n.) பெருமரவித்து முதலானவற்றிற் காய்ச்சிய மருந்தெண்ணெய்; medicated oil prepared with sterculia foetida.

*[ பீநாறி + எண்ணெய் ]*

**பீப்பாக்கு** *pi-p-pākku,* பெ. (n.) இளம் பாக்கு (யாழ்.அக.); green tender arecanut.

*[பீள் + பாக்கு. புள் → (பிள்) → பீள் = இளங்கதிர், இளமை]*

**பீபீயாக்கு-தல்** *pi-pi-y-ākku-,* 5 செ.குன்றாவி. (v.t.) காரியத்தில் மேற்செல்ல வொட்டாதபடி கெடுத்தல் (இ.வ.); to reduce one to a state of nonplus.

*[பீ² + பீ² + ஆக்கு-,]*

**பீமசாரி** *pimaśāri,* பெ. (n.) மதகரி வேம்பு; cedrela torna.

**பீமரம்** *pi-maram,* பெ. (n.) *பீ 3* பார்க்க; see *pi 3.*

*[பீ + மரம்]*

**பீமூக்குமரம்** *pimūkku - maram,* பெ. (n.) *பீமரம்* பார்க்க; see *pimaram.*

*[ பீமூக்கு + மரம் ]*

**பீயங்கன்** *piyaṅgaṉ,* பெ. (n.) இதளியம்; mercury.

**பியாக்கு–தல்** *pi-y-ākku-*, 5 செ.குன்றாவி. (v.t.) அழிவுண்டாக்குதல் (இ.வ.); to damage.

*[பீ + ஆக்கு–, ஆகு (த.வி.) - ஆக்கு (பி.வி.)]*

**பியால்** *piyāl*, பெ. (n.) *பியாலம்* பார்க்க; see *piyālam*.

*[பீ + ஆல்]*

**பியாலம்** *piyālam*, பெ. (n.) காட்டுமொங்காய்ப் பருப்பு; wild mango pulp.

மறுவ. சாரப்பருப்பு.

*[பீ + ஆலம்]*

**பீயை** *piyai*, பெ. (n.) முடைநாற்ற மிக்க சணல்; a kind of hemp.

*[பீ → பீயை]*

**பீர்**[1] *pir*, பெ. (n.) **1.** பீர்க்கு (தொல்.எழுத். 363.); sponge-gourd. **2.** மரவகை (தொல்.எழுத். 363, உரை); a kind of tree.

க. கீர்

*[புல்லுதல் = துளைத்தல். புல் → புர் → புரை = உட்டுளைப் பொருள். புள் → பிர் → பீர்]*

**பீர்**[2] *pir*, பெ. (n.) **1.** பெண்டிர்க்குக் காம நோயாலுண்டாகும் பசலை நிறம் (சூடா.); pale colour of a love-sick woman. முலைகள் பீர் கொண்டதும் (தேவா. 835, 5.) **2.** வெளுப்பு; whiteness. மனிசர்க் காகும் பீர் (திவ். திருவாய். 1, 5, 8)

*[புல் → பில் → பிர் → பீர் = பீர்க்கம் பூவின் வெளிறிய நிறம், அதனையொத்த பசலை நிறம். பீர்பூத்தல் பார்க்க]*

**பீர்**[3] *pir*, பெ. (n.) **1.** பெருக்கு; abundant, flow. "குருதி பீர்விட" (உபதேசகா. விபூதி. 38). **2.** முலைப்பால் (சூடா.); milk, flowing from a woman's breast.

**பீர்**[4] *pir*, பெ. (n.) ஒரு பீச்சு, பீச்சப்பட்டது; that which is dischanged at one squirt or squeeze.

*[புர் → பில் → பிலிற்று. பிலிற்றுதல் = சிந்துதல், பீச்சுதல். பில் → பீல் → பீர் = ஒருபீச்சு (மு.தா. 2. 102)]*

**பீர்**[5] *pir*, பெ. (n.) அச்சம் (சூடா.); fear.

*[பேதல் = அஞ்சுதல். பே → பேய் = அஞ்சப்படும் ஆள் அல்லது தோற்றம். பே → பீ. ஒ.நோ. பேத்து → பீத்து. பீ → பீர்]*

**பீர்க்கங்காய்** *pirkkaṅkāy*, பெ. (n.) கறிப்பீர்க்கு; ridge gourd.

*[பீர்க்கு + அம் + காய்]*

**பீர்க்கங்காரம்** *pirkkaṅkāram*, பெ. (n.) *பீர்க்கங்காய்* பார்க்க; see *pirkkaṅkāy*.

*[பீர்க்கங்காய் → பீர்க்கங்காரம்]*

**பீர்க்கங்கூடு** *pīr-k-kaṅ-gūḍu,* பெ. (n.) பீர்க்கின் உள்ளீடற்ற மேற்றோடு; hollow pod of the sponge-gourd. பீர்க்கங்கூட்டின் மூன்று கண்ணும் போல (சிலப். 3. 20, உரை)

*[பீர்க்கு + அம் + கூடு. பீர் → பீர்க்கு. குள் → கூள் → கூண்டு → கூடு. 'அம்' சாரியை]*

**பீர்க்கு** *pīrkku,* பெ. (n.) கொடிவகை (திவா.); sponge gourd, strainer-vine.

தெ. பீரகாய

*[பீர் → பீர்க்கு]*

**பீர்ச்சல்** *pīrccal,* பெ. (n.) *பீச்சல்* பார்க்க; see *piccal.*

*[பில் → பீல் → பீர் = ஒரு பீச்சு. பீர் → பீர்ச்சல். 'அல்' தொ.பெ.ஈறு]*

**பீர்ச்சாங்குழல்** *pīrccāṅ-guḻal,* பெ. (n.) பீச்சாங்குழல் (யாழ்.அக.); syringe.

*[பில் → பீல் → பீர்ச்சு + அம் + குழல். குள் → குழை → குழல். 'அம்' சாரியை]*

**பீர்ச்சு[1]-தல்** *pīrccu-,* 5 செ.குன்றாவி. (v.t.) பீரிடச்செய்தல்; to cause streaming as in blood.

*[பீள்→ பீ → பீச்சு → பீர்ச்சு-, ]*

**பீர்ச்சு[2]-தல்** *pīrccu,* 5 செ.கு.வி. (v.i.) *பீச்சு[1]-தல்* பார்க்க; see *piccu[1]-,*

*[பில் → பீல் → பீர் → பீர்ச்சு]*

**பீர்ச்சு[3]-தல்** *pīrccu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *பீச்சு[2]-தல்* பார்க்க; see *piccu[2]-*

*[பில் → பீல் → பீர் → பீர்ச்சு]*

**பீர்த்தட்டி** *pīrttaṭṭi,* பெ. (n.) மிகு சுரத்துடன் கூடிய இசிவு நோய்; a delirious fever marked by high temperature.

**பீர்தங்கு-தல்** *pīrtaṅgu,* 5 செ.கு.வி. (v.i.) *பீர்பூ-த்தல்* பார்க்க; see *pīrpū-,*

*[பீர் + தங்கு-,]*

**பீர்பீராய்** *pīrpīr-āy,* வி.அ. (adv.) தாரை தாரையாய்; in streams. அரத்தம் பீர்பீராய் பாய்ந்து கொண்டிருந்தது.

*[பீர் + பீர் + ஆய்]*

**பீர்பூ-த்தல்** *pīrpū-,* 4 செ.கு.வி. (v.i.) காமநோயால் பீர்க்கம்பூப்போல உடல் பசத்தல்; to grow pale through love-sickness, resembling in colour the sponge-gourd flower. பெய் வளை..... நன்னலம் பீர்பூப்ப (பு.வெ.12, இருபாள், 18.)

*[பீர் + பூ-,]*

**பீர்மாந்தம்** *pīrmāndam,* பெ. (n.) குழந்தைகட்கு ஏற்படும் வயிற்றுப் போக்கு நோய்; a diarrhoea in children characterised by milky white motions.

**பீர்மோதினி** *pirmōdiṉi,* பெ. (n.) மல்லிகை; jasmine.

**பீர்விடு-தல்** *pirviḍu,* 20 செ.கு.வி. (v.i.) பெருக்கெடுத்தல்; to stream forth. "குருதி பீர்விட மறுகிடைக் கிடக்கலும்" (உபதேசகா. விபூதி. 38.).

*[பீர் + விடு-,]*

**பீரம்¹** *piram,* பெ. (n.) 1. பீர்க்கு; sponge gourd. 2. பசலை நிறம்; paleness through love-sickness. பீரமு கோயு மாறின் (கல்லா. 32, 24.) 3. பூவரசு (அக.நி.); portia tree. 4. வாகை (அக.நி.); siris.

*[பீர் → பீரம்]*

**பீரம்²** *piram,* பெ. (n.) தாய்ப்பால்; mother's milk. பீரம் பேணிற் பாரந் தாங்கும் (கொன்றைவே.)

*[பீர் → பீரம்]*

**பீரெனல்** *pireṉal,* பெ. (n.) விரைந்து பாய்தற் குறிப்பு; onom. expr. of streaming. பீரென ரத்தமிறங்கிட (இராமநா. உயுத். 57.)

*[பீர் + எனல்]*

**பீரை** *pirai,* பெ. (n.) பீர்க்கு; sponge-gourd. பீரை நாறிய சுரையிவர் மருங்கின் (புறநா. 116.)

க. தீ்ரெ; தெ. பீர

*[பீர் → பீரை]*

**பீரோடு-தல்** *pirōḍu,* 5 செ.கு.வி. (v.i.) முலைப்பால் வெளிப்படுதல்; to stream out, as milk. மன்னுதிரு முலைப்பால்கள் பீரோட (அரிசமய. பராங்குச. பக். 91)

*[பீர் + ஓடு-,]*

**பீல்** *pil,* பெ. (n.) முலைப்பாலின் பீச்சு; guantity of milk that gushes out a single squeeze of the udder பிள்ளைப் பாலில் இரண்டு பீல்கொடு (இ.வ.)

*[புல் → பில் → பிலிற்று. பிலிற்றுதல் = சிந்துதல், பீச்சுதல். பில் → பீல் (மு.தா. 2, 102)]*

**பீலகம்** *pilagam,* பெ. (n.) எறும்பு; ant.

**பீலகயம்** *pilagayam,* பெ. (n.) செந்தழை மருந்து; shrub, a reddish yellow varietey of pandanus.

**பீலாழி** *pilāḻi,* பெ. (n.) காற்பீலி வகை; a kind of toe-ring. *"காலாழி பீலாழி"* (கோவ. க. 26.)

*[புல் → (பீலி) → ஆழி]*

**பீலி¹** *pili,* பெ. (n.) 1. மயிற்றோகை; peacock's feather. பழன மஞ்சை யுகுத்த பீலி (புறநா. 13) 2. மயில் (பிங்.); peacock. 3. சிற்றால வட்டம் (பிங்.); peacock-fan, circular fan. 4. வெண்குடை (அரு.நி.); white umbrella.

ம., க., து. பீலி

*[புல் → பில் → பிலி. பிலிற்றுதல் = தூவுதல், உதிர்த்தல். பிலி → பீலி =*

*உதிர்க்கப் படும் தோகை, தோகையை உடைய பறவை, மயிற் றோகையால் செய்யப்பட்ட விசிறி, மென் தோகையால் செய்யப்பட்ட குடை ]*

**பீலி²** *pīli,* பெ. (n.) **1.** பொன் (அக.நி.); gold. **2.** மகளிரிடும் கால்விரலணி (சிலப். 6, 83, உரை); toe-ring of a woman. **3.** சிறு சின்னம்; small trumpet பீலி காகளம் (கந்தபு. சூரப. இரண்டாநாள் யுத். 20) **4.** இசைக்கருவிப் பொது (திவா.); musical insturment. **5.** பெருஞ் சவளம் (பிங்.); large lance. **6.** மலை (பிங்.); mountain. **7.** மதில் (யாழ்.அக.); fortification, wall of a fort. **8.** நத்தையோடு (சங்.அக.); shell of conch.

க. பிலி.

[புல் → பூல் → பூ = பொலிவு, அழகு. புல் → பொல → பொலிவு. பொல் → பொற்பு. பொல்லுதல் = பொலிதல். பொல் → பொலம் → பொலன். பொல் → பொன் = பொலிவு, அழகு, பொலியும் தங்கம். புல் → பில் → பீல் → பீலி ]

**பீலி³** *pīli,* பெ. (n.) **1.** பனங்குருத்து (யாழ்.அக.); the first leaf or shoot of a palmyra. **2.** பனங்கிழங்கின் உட்குருத்து (வின்.); heart of the palmyra root, being the embryo of the future leaf; palmyra sprout. **3.** நீர்பாய் தொட்டி (வின்.); water trough or spout for irrigation. **4.** பந்தயமுறி (யாழ்ப்.); dice for casting lots.

*[பீலி¹ → பீலி³ ]*

**பீலிக்கண்¹** *pīli-k-kaṇ,* பெ. (n.) மயிற்றோகைக் கண் (ஈடு, 2, 2, 1, ஜீ); peacock-eye, the ocellus on a peacock's feather.

*[பீலி + கண்]*

**பீலிக்கண்²** *pīli-k-kaṇ,* பெ. (n.) *பீலிப்பிச்சம்* பார்க்க; see *pīli-p-piccam* ***"பீலிக் கண்ணும் ஸ்நேஹிகளாயிருப்பார் கண்களு மிறே சாத்துவது"*** (திவ். பெரியாழ். 1, 9, 5. வ்யா. பக் 191.)

*[பீலி + கண். கள் → கண்]*

**பீலிக்கினி** *pīlikkiṉi,* பெ. (n.) சிவதைச் செடி; a plant with purgative effect.

**பீலிக்குஞ்சம்** *pīli-k-kuñjam,* பெ. (n.) அணி செயப்பட்ட தூக்கம் (சூடா.); decorative hangings.

*[பீலி + குஞ்சம்]*

**பீலிக்குடை** *pīli-k-kuḍai,* பெ. (n.) **1.** மயிற்றோகையாலான குடை (சீவக. 860. உரை); umbrella made of peacock's feathers. **2.** மயிற்குஞ்சம் (வின்.); bunch of peacock's feahers.

க. பீலிதெழெ

*[பீலி + குடை. குள் → குழை = துளை. குழை → குடை]*

**பீலிக்கொட்டு** *pīli-k-koṭṭu,* பெ. (n.) நீர்பாய் தொட்டி (வின்.); water trough.

*[பீலி + கொட்டு]*

**பீலிகம்** *piligam,* பெ. (n.) 1. மண்ணீரல்; spleen. 2. வயிற்றினிடதுபுறம் உள்ள இறைச்சிக்கட்டி; an abdominal organ situated in the left hypochonderic region.

**பீலிகவூதை** *piliga-vūdai,* பெ. (n.) மண்ணீரல் கெடுதியால் வரும் ஊதைநோய்; a kind of disease of the spleen.

**பீலிகை** *piligai,* பெ. (n.) மண்ணீரலில் ஏற்படும் நோய்; a disease of the spleen.

*[ பீலிகம் → பீலிகை ]*

**பீலிகைக்கட்டி** *piligai-k-katti,* பெ. (n.) வயிற்றை உப்பச்செய்து ஒக்களித்து பசியைக் குறைக்கும் மண்ணீரல் நோய்; enlargement of spleen attended with loss of appetite, big abdomen vomit etc.

*[ பீலிகை + கட்டி ]*

**பீலிகோதாரம்** *pilikōdāram,* பெ. (n.) மண்ணீரல் வீங்கி, வயிறு பெருத்துக் காணுமோர் நோய்; enlargement of the spleen with dropsy of the abdomen.

*[ பீலிகை + உதரம் ]*

**பீலிடு–தல்** *pilidu-,* 17 செ.கு.வி. (v.i.) *பீரிடு¹–தல்* பார்க்க; see *piridu¹–*

*[புல் → பில் → பிலிற்று. பில் → பீல் = பீச்சு. பீல் + இடு–,]*

**பீலித்தண்டு** *pili-t-tandu,* பெ. (n.) பிண்டிபாலம் (பிங்.); a missile weapon.

*[பீலி + தண்டு. தூள் → தள் → தண்டு]*

**பீலிப்பட்டை** *pili-p-pattai,* பெ. (n.) பெரிய இறைகூடை (வின்.); a large basket for baling water.

*[பீலி + பட்டை]*

**பீலிப்பிச்சம்** *pili-p-piccam,* பெ. (n.) மயிலிறகு (திவ். பெரியாழ். 1, 9, 5. வ்யா. பக். 191.); peacock's feather.

*[பீலி + பிச்சம்]*

**பீலிப்பிஞ்சம்** *pili-p-pinjam,* பெ. (n.) *பீலிப்பிச்சம்* (திவ். பெரியாழ். 1, 9, 5, வ்யா. பக். 191.) பார்க்க; see *pili-p-piccam.*

*[பீலி + பிஞ்சம்]*

**பீலிபோடு–தல்** *pili-pōdu-,* 20 செ.கு.வி. (v.i.) பந்தயமுறியிடுதல் (யாழ்ப்.); to cast lots.

*[பீலி + போடு–,]*

**பீலியார்** *piliār,* பெ. (n.) அருகர் (சமணர்); Jains.

*[பீலி → பீலியார் = மயிற் பீலியுடையார். 'ஆர்' ப.பா.ஈறு]*

**பீலிவாகை** *pili-vāgai,* பெ. (n.) நீண்டமரவகை; saw tree.

*[பீலி + வாகை]*

**பீலு¹** *pilu,* பெ. (n.) அச்சம் (வின்.); fear.

*[பீர் → பீல் → பீலு. பீர்⁴ பார்க்க]*

**பீலு²** *pilu,* பெ. (n.) உகாய் மரம் (நாமதீப.326.); a tree.

**பீலு³** *pilu,* பெ. (n.) உள்ளங்கை; palm of hand

**பீலுகம்** *pilugam,* பெ. (n.) கரடி (யாழ்.அக.); bear.

*[பீர் → பீல் → பீலு → பீலுகம் = அச்சம் தரத்தக்கது. பீருகம் பார்க்க]*

**பீவண்டு** *pi-vaṇḍu,* பெ. (n.) வண்டு; dor, a lamellicorn beetle.

*[பீ + வண்டு]*

**பீவேல்** *pivēl,* பெ. (n.) மரவகை; pulpy-podded black babul (L.)

**பீவேலிகம்** *pivēligam,* பெ. (n.) வேலிப்பருத்தி; a twiner.

**பீவை** *pivai,* பெ. (n.) நீர்; water.

**பீழ்-தல்** *piḻ-,* 4 செ.குன்றாவி. (v.t.) பிடுங்குதல்; to uproot. பெருமரம் பீழ்ந்து கொண்டெற்றி (தேவா.185,9)

*[பிள் → பிடு → பிடுங்கு. பிடுங்குதல் = பெயர்த்தல், பறித்தல். பிள் → பீள் → பீழ்]*

**பீழம்** *piḻam,* பெ. (n.) பீனாக்கி மரம்; a kind of tree.

**பீழி-த்தல்** *piḻi-,* 11 செ.குன்றாவி. (v.t.) வருத்துதல்; to afflict, forment; give pain to. அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை (குறள்,843)

**பீழை¹** *piḻai,* பெ. (n.) மரவகை; a tree.

**பீழை²** *piḻai-,* பெ. (n.) துன்பம்; distress, affliction, pain. பிரிவின்கண் பீழைதருவ தொன்றில் (குறள்,839)

**பீழைசாறல்** *piḻaiśāṟal,* தொ. பெ. (vbl.n.) *பீளைசாரல்* பார்க்க; see *piḷaiśāral.*

*[பீளை → பீழை + சாறல். சாரல் → சாறல்]*

**பீழைவச்சிரம்** *piḻaivacciram,* பெ. (n.) வடப்பூலா மருந்து; a kind of poolā shrub.

**பீள்** *piḷ-,* பெ. (n.) 1. கரு; embryo, foetus. பீட்பிதுக்கிப் பிள்ளையை... கோடலான் (நாலடி,20) 2. இளங்கதிர் (பிங்.); tender ears of corn. கருந்தாள் போகி யொருங்குபீள் வரிந்து (புறநா.120) 3. இளமை (திவா.); tenderness.

*[புள் → பிள் → பீள் = இளங்கதிர், இளமை (மு.தா.38)]*

**பீள்வாயு** *piḷvāyu,* பெ. (n.) கருப்ப வாயு; a disease of the uterus due to wind humour.

*[பீள் + வாயு]*

**பீளல்** *pīļal,* பெ. (n.) பெண்குறி (யாழ்.அக.); pudendum muliebre.

*[பிள் → பீள் → பீளல்]*

**பீளை¹** *pīļai,* பெ. (n.) கண்மலம்; forming of rheum about the eys.

ம. பீள.

*[பிள் → பீள் → பீளை (மு.தா.262]*

**பீளை²** *pīļai,* பெ. (n.) கீரை வகையு ளொன்று; a plant.

**பீளைக்கண்** *pīļaikkaṇ,* பெ. (n.) அழுக்குச் சேர்ந்து பீளை சாரும் கண்; bleared eyes.

*[ பீளை + கண் ]*

**பீளைசாடுதல்** *pīļaišāḍudal,* பெ. (n.) கண்மலம் பொங்குகை; forming of rheum about the eyes.

*[பீளை + சாடுதல்]*

**பீளைசாரல்** *pīļaišāral,* தொ. பெ. (vbl.n.) கண்ணில் பீளை கட்டல்; rheum in the eyes.

*[ பீளை + சாரல். சார் → சாரல் ]*

**பீளைசாறி** *pīļaišāṟi,* பெ. (n.) பூடுவகை (வின்.); a plant.

**பீளைசாறுகை** *pīļaišāṟugai,* பெ. (n.) *பீளை சாரல்* பார்க்க; see *pīļaišāral.*

*[ பீளை + சாறுகை. சாரல் → சாருகை → சாறுகை ]*

**பீளைசாறுதல்** *pīļaišāṟudal,* பெ. (n.) *பீளைசாடுதல்* (உ.வ.) பார்க்க; see *pīļaišaḍudal.*

*[பீளைசாடுதல் → பீளைசாறுதல்]*

**பீளைசேர்தல்** *pīļaišērdal,* பெ. (vbl.n.) *பீளை சாடுதல்* பார்க்க; see *pīļaišāḍudal.*

*[ பீளை + சேர்தல் ]*

**பீளைதள்ளல்** *pīļaitaļļal,* பெ. (n.) கண்ணோய் வகையுளொன்று; a kind of eye-disease.

*[ பீளை + தள்ளல் ]*

**பீற்றல்** *piṟṟal,* பெ. (n.) **1.** கிழியல்; rent, rip, slit. **2.** கந்தை; rag, tatter. **3.** கடனாளி; debtor.

*[பீறு → பீற்று → பீற்றல்]*

**பீற்றல்பொத்து¹-தல்** *piṟṟal-pottu-,* 5 செ.குன்றாவி. (v.t.) கிழிசலைப் பொருத்துதல்; to mend a rent.

*[பீற்றல் + பொத்து-,]*

**பீற்றல்பொத்து²-தல்** *piṟṟal pottu-,* செ.கு.வி. (v.i.) குறை நிரப்புதல்; to supply what is wanting.

*[பீற்றல் + பொத்து-,]*

**பீற்று-தல்** *piṟṟu-,* 5 செ.கு.வி. (v.i.) வீண்பெருமை பேசுதல் (கொ.வ.); to swagger, boast, hector.

*[பிதற்று → பீற்று-,]*

**பீறிப்போடு-தல்** *piṟi-p-pōḍu,* 19 செ.குன்றாவி. (v.t.) தசை கிழியச் செய்தல்; to lacerate or tear in pieces.

*[ பீறி + போடு-, ]*

**பீறு[1]-தல்** *piṟu-,* 5 செ.கு.வி. (v.i.) கிழிதல் (பிங்.); to be torn. பீறிற்றா மண்ட மென்பதோ ராகுலம் (கம்பரா. தேரேறு,33.)

ம. பீறு

*[பிள் → பீள் → பீர் → பீறு]*

**பீறு[2]-தல்** *piṟu-,* 5செ.குன்றாவி. (v.t.) 1. கிழித்தல்; to tear, rip, slit. அல்குற் பூந்துகிற் கலாயம் பீறி (கம்பரா. ஊர்தே.189). 2. கீறுதல்; to lecerate, scratch. உகிர்(நகங்)களாற் பீறினான். 3. பிளத்தல்; to split.

*[பிள் → பீள் → பீர் → பீறு]*

**பீறு[3]** *piṟu,* பெ. (n.) 1. கிழிவு (சங்.அக.); rent, tear. 2. பிட்டம், குதம் (யாழ்ப்.); anus.

*[பிள் → பீறு]*

**பீறுண்டுசா-தல்** *piṟuṇḍu-sā-,* 19 செ.கு.வி. (v.i.) விலங்குகளினால் கிழிபட்டு இறத்தல்; to die of lacerated wounds caused by wild beasts, mauled by wild animals.

*[ பீறு + உண்டு + சா-, சாய் + சா. ]*

**பீனக்கி** *piṉakki,* பெ. (n.) நாக்குப்பூச்சி; earth worm round-worm of the intestines.

*[ பீ + நக்கி ]*

**பீனங்கன்** *piṉaṅgaṉ,* பெ. (n.) இதளியம்; mercury.

**பீனம்** *piṉam,* பெ. (n.) வயிறு; belly.

**பீனயக்கம்** *piṉayakkam,* பெ. (n.) விலை மலிந்த மட்டத்தேக்கான புரசமரம்; a tree, bastard teak.

**பீனாறிப்பட்டை** *piṉāṟippaṭṭai,* பெ. (n.) பீநாறிப்பட்டை பார்க்க; see pināṟippaṭṭai.

*[ பீநாறிப்பட்டை → பீனாறிப்பட்டை ]*

**பீனிசவ்விரை** *piṉiśavvirai,* பெ. (n.) சீமை அவரை; a kind of lablab.

**பு**[1] *pu-,* 'ப்' என்ற மெய்யெழுத்தும் 'உ' என்ற உயிரெழுத்தும் இணைந்த உயிர்மெய் (அசை) எழுத்து; the syllable formed by adding the short vowel 'u' to the consonant 'p'

*[ப் + உ ]*

**பு**[2] *pu,* இடை. (part.) **1.** தொழிற்பெயரீறு; suffix of verbal nouns, as in 'kalappu.' **2.** பண்புப் பெயரீறு; suffix of abstract nouns, as in 'māṉbu' **3.** இறந்த கால வினையெச்ச ஈறு; suffix of incomplete verbs of the past tense, as in 'ceybu'.

**க.** பு, வு.

**எ-டு:** உடை – உடைப்பு, கல – கலப்பு, எடு – எடுப்பு

மாண் – மாண்பு, செம் – செவப்பு (சிவப்பு), வெம் – வெப்பு

செய் – செய்பு, காண் – காண்பு, நோக்கு – நோக்குபு

**புக்ககம்** *pukkagam,* பெ. (n.) கணவன் வீடு. (குருபரம். பக். 358); the house into which a girl is married, opp. to pirandagam.

**மறுவ.** புகுந்த வீடு.

*[புழு → புகு + அகம். திருமணமான வுடன் பெண் கணவன் வீட்டிற்குச் செல்லும் மரபடிப்படையில் உருவான சொல்]*

**புக்கம்**[1] *pukkam,* பெ.(n) விடியல்; day dawn.

*[பகு → பக்கு = பிளப்பு. பக்கெனல் = வெடித்தற்குறிப்பு. பகு → பக்கு → பக்கம் → புக்கம் = இருளைப் பிளந்து ஒளி வரும் நேரம்]*

**புக்கம்**[2] *pukkam,* பெ. (n.) அரத்தத்திலிருந்து கழிவுப்பொருளைப் பிரித்துச் சிறுநீராக்கி வெளியேற்றும் உறுப்பு; kidney

**மறுவ.** குண்டிக்காய், சிறுநீரகம்

*[பகு → பக்கு = பை. பக்கு → பக்கம் → புக்கம் = சிறுநீர்ப்பை]*



**புக்கமால்** *pukkamāl,* பெ. (n.) தொண் மணிகளுள் ஒன்றான பச்சைமணி (மரகதம்); one of the nine gems, emerald.

**புக்கமாவு** *pukkamāvu,* பெ. (n.) புக்கை[2] பார்க்க; see *pukkai*[2] குழந்தைக்குப் புக்கமாவு ஊட்டிவிட்டாயா? (உ.வ.).

*[புகா → புக்கா → புக்கை → புக்க + மாவு]*

**புக்கரம்** *pukkaram,* பெ. (n.) தொட்டிவைப்பு நஞ்சு; red orsenic.

**புக்கரம்பை** *pukkarambai,* பெ. (n.) தஞ்சை மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Tañjāvūr dt.

*[புல் + கரம்பை. கர → கரம் → கரம்பு = கரிசல் நிலம். கரம்பு → கரம்பை]*

**புக்கன்சம்பா** *pukkaṉ-sambā,* பெ. (n.) நெல்வகை; a kind of paddy.

**புக்காத்து** *pukkāttu,* பெ. (n.) சணல்நூல் வலை (இ.வ.); net made of flaxen cords.

*[புகு → புக்கு + ஆத்து. சணல் நூல் இழைகள் புகுந்து ஆக்கப்பட்ட வலை]*

**புக்காம்** *pukkām,* பெ. (n.) *புக்ககம்* (கொ.வ.) பார்க்க; see *pukkagam.*

**மறுவ.** புக்காத்து.

*[புக்ககம்→ புக்காம்.* தொகுப்பு→ தோப்பு என இரு குறில் ஒரு நெடிலாகத் திரிந்தது போன்றது*]*

**புக்கி** *pukki,* பெ. (n.) *புக்கு* (நாமதீப. 323) பார்க்க; see *pukku.*

*[புக்கு → புக்கி]*

**புக்கிகா** *pukkigā,* பெ. (n.) *புக்கி* பார்க்க; see *pukki.*

*[புக்கு → புக்கிகா]*

**புக்கில்** *pukkil,* பெ. (n.) **1.** தங்குமிடம்; abode 'உயிர் புகும் புக்கில்' (மணிமே. 23, 76) **2.** வீடு; house, dwelling, permanent abode. *'புக்கில மைந்தின்று கொல்லோ'* (குறள், 340). **3.** புகலிடம்; place of refuge. *'துகளறு கேள்வி யுயர்நேதோர் புக்கில்'* (புறநா.221). **4.** உடம்பு; body as a temporary abode for the soul. *'நோக்கார் கொல் நொய்யதோர் புக்கிலை'* (நாலடி, 41).

*[புகு → புக்கு + இல். ஒ.நோ. துஞ்சில் → துச்சில். இல் = இடம், இல்லம்.]*

**புக்கு[1]** *pukku,* பெ. (n.) பிராய் (பிங்.); paper-tree.

**புக்கு[2]** *pukku,* பெ. (n.) *புக்குலி* பார்க்க; see *pukkuli.*

**புக்குத்திருப்பி** *pukku-t-tiruppi,* பெ. (n.) வட்டத்திருப்பி எனும் செடி (சங்.அக.); a plant.

**புக்குபுக்கெனல்** *pukku-pukkeṉal,* பெ. (n.) நெருப்பில் காற்றுப்படுவதால் உண்டாகும் ஒலிக் குறிப்பு; onom, expr. of crackling sound of fire, due to puffs of wind.

**மறுவ.** பகபகவெனல்.

*[புக்கு + புக்கு + எனல்]*

**க.** பக, பகபக; **தெ.** பக்குனா; **து.** பகபக; **கோத.** பக்ன், பக்பக்ன்.

**புக்குலி** *pukkuli,* பெ. (n.) வில்வமரம்; a sacred tree.

**புக்குழி** *pukkuḻi,* பெ. (n.) *புக்ககம்* பார்க்க; see *pukkagam.* '*கிழத்தி புக்குழி*' (தக்கயாகப். 130).

*[புகு → புக்கு + உழி. உழி = இடம். புக்குழி = புகுந்த இடம்]*

**புக்கை[1]** *pukkai,* பெ. (n.) நீரூற்றுள்ள கேணி (இ.வ.); spring-pond.

**மறுவ.** நீரூற்று

**க.** புக்கெ; **தெ.** புக்க

*[பொய்கை → புக்கை]*

**புக்கை²** *pukkai,* பெ. (n.) ஒருவகைக் கூழ் (இ.வ.); a kind of porridge.

*[புகா = உணவு. புகா → புக்கா → புக்கை = குழந்தைக்கு ஊட்டும் குழைத்த உணவு]*

**புகட்டல்** *pugattal,* தொ.பெ. (vbl.n.) பருகச் செய்தல்; administering medicines or food to children by force or to adults in disease.

*[புகட்டு → புகட்டல். 'அல்' தொ.பெ.ஈறு]*

**புகட்டு-தல்** *pugattu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. உட்புகுத்துதல் (யாழ். அக.); to insert, introduce 2. ஊட்டுதல்; to infuse, instil; to feed; to pour down the throat, as milk. 'அல்லம தேவன் சரிதத் தீம்பால்... புகட்டினானால் (பிரபுலிங். துதி. 11). குழந்தைக்குச் சங்கில் பால் புகட்டு (உ.வ.). 3. அறிவுறுத்துதல்; to impress on the mind, teach, instruct 'செவி திறந்து புகட்ட' (திருவிளை. விடையிலச். 4).

*[புகவொட்டு → புகட்டு. புகட்டுதல் = நீர்ப் பொருளைக்கலத்தில் ஊட்டுதல். (வே.க. 3,105) ஒ.நோ: வரவிடு → வரட்டு]*

**புகட்டுமருந்து** *pugattu marundu,* பெ. (n.) பீச்சங் குழலின் மூலம் மலவாயிலிற் செலுத்தப்படும் மருந்து; a liquid substance injected into the rectum for cleansing the bowels etc.

*[புகட்டு + மருந்து]*

**புகடு¹-தல்** *pugadu-,* 6 செ. குன்றாவி. (v.t.) வீசியெறிதல்; to throw '*மரனொடு வெற்பினம் புகடவுற்ற பொறுத்தன*' (கம்பரா. நாகபாச. 146).

*[புகவிடு → புகடு (வே.க. 3, 105) புக + அடு – புகடு என்றுமாம்]*

**புகடு²** *pugadu,* பெ. (n.) அடுப்பின் சுற்றுப்புறத்திலுள்ள மேடு (யாழ்ப்.); ridge of an oven.

**மறுவ.** அடுப்புத்திண்டு, அடுப்பம் பொடை

*[புல் → புள் → புடை = பருத்தபாகம். புள் → (புயடு) → புகடு]*

**புகம்** *pugam,* பெ. (n.) பாக்கு; areca nut.

**புகர்¹** *pugar,* பெ. (n.) 1. கபிலநிறம் (பிங்.); tawny colour, brown, cloud colour. 2. கபில நிறமுள்ள மாடு; tawny coloured bull or cow. '*பல்பொறிக் கடுஞ்சினப் புகரும்*' (கலித்.105). 3. நிறம்; colour. '*புகர்ப்போந்தை*' (பட்டினப்.74).

**ம.** புகர்; **தெ.** பொகரு.

*[புகு → புகல் → புகர் = புள்ளி, புள்ளிகளால் தோன்றும் மங்கல் நிறம், அந்நிறமாடு]*

**புகர்²** *pugar,* பெ. (n.) 1. ஒளி; brightness, light. '*புகருடு மழுங்கின*' (திருப்போ.சந். திருப்பள்ளி.3). 2. அழகு; beauty '*புகர் வெள்ளை நாகர்தங்கோட்டம்*' (சிலப்.9,10). 3. வெள்ளி (சுக்கிரன்); venus. '*மந்தன்புகர் பெறும் பாந்தள்*' (இலக்.வி.883). 4. அருவி (அரு.நி.); waterfall. 5. உயிர் (அரு.நி.); life.

**க.** பொகரு.

*[புகு → புகல் → புகர் = புகுந்து அதாவது ஊடுருவிச் செல்லும் ஒளி, ஒளி பொருந்திய அழகு, ஒளியுடன் இருக்கும் வெள்ளி, மலைப் பாதையில் புகுந்து செல்லும் அருவி, உடம்பினுள் புகுந்து இருக்கும் உயிர்]*

**புகர்³** *pugar,* பெ. (n.) 1. புள்ளி; spot. *'புகரணி நுதல்'* (புறநா.3). 2. குற்றம்; fault, defect, blemish. *'புகரின்று'* (தொல். எழுத்து, 369). 3. கறை; stain. *'செழும்புகர் வேர்'* (குஞ்சைவா.289).

*[புகு → புகர் = ஒரு வண்ணப்பரப்பின் மேல் புகுந்திருப்பது (இடம் பெற்றிருப்பது), புள்ளி, புள்ளிபோல் கருதும் குற்றம், குற்றமாகப் கருதப்படும் கறை]*

**புகர்⁴** *pugar,* பெ. (n.) சோறு (அரு.நி.); food.

*[புகு → புகா = உணவு. புகா → புகவு = உணவு. புகா → புகர்.]*

**புகர்⁵** *pugar,* பெ. (n.) கொக்கு (அரு.நி.); crane.

*[புல் → புர் → புரள். புல் → புர் → புரி. புல் → புழு → புகு → புகர் = வளைந்த கழுத்துள்ள நீர்ப்பறவை. ஒநோ: கொள் → கொட்டு → கொக்கு ]*

**புகர்⁶–தல்** *pugar,* 3. செ.குன்றாவி. (v.t.) 1. பாராட்டுதல்; to praise. 2. புகழ்தல்; to extol 3. கைதட்டிப் பாராட்டுதல்; to applaud.

**ம.** புகர், புகர்ச; **க.** பொகர்; **தெ.** பொகடு, பொவடு; **து.** புகருணி, புகழுணி, பொருநி, பொகழுணி; **கூய்.** போங்க; **மால.** பொகல

*[புகு → புகல் → புகர்]*

**புகர்க்கலை** *pugar-k-kalai,* பெ. (n.) புள்ளிமான்கலை; spotted male deer. *'புழற்றலைப் புகர்க்கலை யுருட்டி'* (புறநா.152).

*[புகர் + கலை. புகர் = புள்ளி. கலை = ஆண்மான்]*

**புகர்தீபம்** *pugar-tibam,* பெ. (n.) வெண்கடம்பு; white kadamab.

**புகர்நிறம்** *pugarniṟam,* பெ. (n.) சாம்பல் நிறம்; ash colour.

*[புகர் + நிறம்]*

**புகர்முகம்** *pugar-mugam,* பெ. (n.) 1. யானை; elephant, as having a spotted face. *"புலியொடு பொரூஉம் புகர்முக வோதையும்"* (சிலப். 25, 29). 2. ஒரு வகை அம்பு(பாணம்); a kind of arrow. *"புண்டரீகத்தின் முகையன்ன புகர்முகம் விட்டான்"* (கம்பரா. இராவணன் வதை. 108.).

*[புகர்+முகம். உ → மு → முகு → முகம்]*



**புகர்வு¹** *pugarvu,* பெ. (n.) *புகவு* (யாழ். அக.) பார்க்க; see *pugavu.*

*[ புகு → புகவு → புகர்வு ]*

**புகர்வு²** *pugarvu,* பெ. (n.) சோறு; cooked rice.

*[ புழு → புகு. புகுதல் = துளைத்தல்போல் உட்செல்லுதல். புகு → புகா = (உட்புகும்) உணவு. புகா → புகவு = புகுகை, உணவு (வே.க. 3,104) புகவு → புகர்வு ]*

**புகர்வு³** *pugarvu* பெ. (n.) உணவுக்குரிய பண்டம்; edible item. 'புகர்வை அரிசிப் பொம்மல் பெருஞ்சோறு' (நற்.60,5).

*[ புகா → புகவு → புகர்வு ]*

**புகர்வேலை** *pugar-vēlai,* பெ. (n.) நொய்ம்மையான வேலைப்பாடு (நகாசு வேலை) (சென்னை.); filigree work.

*[ புகர் + வேலை. புகர் = புள்ளி. புகர் வேலை = புள்ளியிட் டாற்போல் செய்யப்படும் நொய்ம்மையான மினுக்கு வேலை ]*

**புகரோன்** *pugarōn,* பெ. (n.) வெள்ளி மீன் (அரிச்.பு. நகர்நீங். 23); venus.

*[ புகர் → புகரோன் = புள்ளிபோல் தோற்றமளிப்பது ]*

**புகல்¹(லு)-தல்** *pugal(lu)-,* 3. செ.குன்றாவி. (v.t.), 1. சொல்லுதல்; to say, declare, state. '*புகைநிறக் கண்ணனும் புகன்று*' (கம்பரா. யுத். மந்திரப். 45). 2. விரும்புதல்; to desire. '*செருப்புகன் றெடுத்த*' (திருமுரு.67). 3. தெரிதல்; to learn. '*மாயை புகன்றுளாய் கொலோ*' (கந்தபு. கயமுகன்வ. 8.).

ம. புகலுக.

*[ புல்லுதல் = நட்புச் செய்தல். புல் → புர் → புரி. புரிதல் = விரும்புதல். புல் → புள் → (புளு) → புகு → புகல். (வே.க. 3,87) ]*

**புகல்²-தல்** *pugal-,* 14செ.கு.வி. (v.i.), 1. ஒலித்தல்; to sound. '*புகன்ற தீங்குழல்*' (சீவக. 940). 2. மகிழ்தல்; to rejoice '*முகம்புகல் முறைமையின்*' (தொல். பொருள். 152).

*[ புல் → புல்கு. புல்குதல் = நண்பராய் மருவுதல். புல் → புள் → (புளு) → புகு → புகல் = விருப்பம், கொண்டாடுகை (வே.க. 3,87) ]*

**புகல்³** *pugal,* பெ. (n.) 1. சொல் (பிங்); word. 2. விருப்பம்; desire. '*வானுறை புகறந்து*' (பரிபா. 19,1). 3. கொண்டாடுகை; rejoicing. '*புகலகல் நின்மார்பின்*' (கலித். 79) 4. பாடும்முறை; mode of singing. (பெரியபு. ஆனாய.26). 5. வெற்றி; victory '*புகல் விசும்பில்*' (பு.வெ. 9,21) (திவா.). 6. புகழ்; fame, renown. '*பொருபுக னல்லேறு*' (கலித். 102).

க. புகல், புகில்.

*[ புல் → புள் → (புளு) → புகு → புகல் (வேக. 3,87) ]*

**புகல்⁴** *pugal,* பெ. (n.) 1. புகுகை; entering, going in முனைபுகல் புகல்வின் (பதிற்றுப். 84, 17) 2. இருப்பிடம்; residence, dwelling. "புனவர் கொள்ளியிற் புகல்வரு மஞ்ஞை" (ஐங்குறு. 295) 3. துணை (பிங்.); assistance, help. 4. பற்றுக்கோடு; support, prop. '*மையணற்காளை பொய்புகலாக*' (நற். 179) 5. அடைக்கலம் (சரண்); refuge, asylum. '*புகலது கூறுகின்றான்*' (கம்பரா. வீடண. 109) 6. உடம்பு (பிங்.); body 7. வழிவகை (உபாயம்); means. '*புகலொன்றில்லா வடியேன்*' (தி.திருவாய். 6, 10, 10) 8. போக்கு (இ.வ.); excuse. '*இவன் அடிக்கடி புகல் சொல்லுகிறான்*'.

*[ புழு → புகு. புகுதல் = துளைத்தல் போல் உட்செல்லுதல், உட்படுதல். புகு → புகல் ]*

**புகல்⁵** *pugal,* பெ. (n.) தவசக்குதிர் (திவா.); receptacle for storing grain.

மறுவ. சால், உறை, நெற்கூடு, சாடி.

*[புகு → புகல்]*



**புகல்**[6] *pugal*, பெ. (n.) புரையுள்ளது (நெல்லை. 2); hollowness.

**தெ.** போலு

*[புள் → புழு → புழல் → புழை → பூழை = துளை, கணவாய். புழல் → போல் புள் → பொள் → பொள்ளல் (மு. தா. 277) புழல் → புகல் = உட்டுளையுள்ளது]*

**புகல்வார்த்தை** *pugal-vārttai*, பெ. (n.) போக்குச் சொல் (கொ.வ.); vain excuse.

*[புகல் + வார்த்தை. புகு → புகல் = போக்கு]*

Skt. vārttā > **த.** வார்த்தை

**புகல்வி** *pugalvi*, பெ. (n.) விலங்கின் ஏறு; male of an animal 'புழற் கோட்டாமான் புகல்வியும்' (குறிஞ்சிப்.253)

*[புகுதல் = ஏறுதல். புகு → புகவு = மேலேறுகை. புகு → புகல் → புகல்வி = விலங்கின் ஆண். ஒ.நோ: ஏறு → ஏற்றை (மு. தா. 66)]*

**புகல்வு** *pugalvu*, பெ. (n.) **1.** விருப்பம்; desire. '*முனைபுகல் புகல்வின் மாறாமைந்தரொடு*' (பதிற்றுப்.84:17) **2.** மனச்செருக்கு; pride, arrogance. '*மாறு பொரு தோட்டிய புகல்வின்*' (குறிஞ்சி. 135).

**க.** புக்கு, புர்கு; **தெ.** பொகரு

*[புல் → புள் → (புளு) → புகல் = விருப்பம், கொண்டாடுகை. புகல் → புகல்வி (வே. க. 3, 87, 88)]*

**புகல்வேலை** *pugal-vēlai*, பெ. (n.) அணிகலன் முதலியவற்றில் உட்டுளை யமையச் செய்யப் பட்ட வேலை (இ.வ.); hollow, unsubstantial work as of jewels.

*[புகல் + வேலை. புல் = உட்டுளையுடைய பயிர் வகை. புல் → புள் → (புழு) → புழல் → புகல் = உட்டுளை]*

**புகலி** *pugali*, பெ. (n.) **1.** புதிதாகக் குடியேறியவன்; new-comer; settler. '*அல்லாத தேவர்களெல்லாம் புண்ணியத்தால் வலிந்து புகுந்த புகலிகள்*' (தக்கயாகப். 352, உரை) **2.** சீகாழி (தேவா.); Shiyali.

*[புகு → புகல் = புகுகை, இருப்பிடம். புகல் → புகலி = புகலடைந்தவன் – வள். ஒரு பெருவெள்ளக் காலத்திற் புகலிடமாயிருந்த சீகாழி (வே. க. 3, 104)]*

**புகலிடம்** *pugal-iḍam*, பெ. (n.) **1.** இருப்பிடம்; dwelling, residence. '*புகலிட மெமதாகும் புரையிடை*' (கம்பரா. வனம்புகு. 24) **2.** ஊர் (பிங்.); town, village. **3.** தஞ்சம்; refuge, retreat, asylum. '*புகலிடம் பிறிதொன்றில்லை*' (திருவாச. 5, 62).

*[புகல் + இடம். புல் → புர் → புரை = உட்டுளை, உட்டுளைப் பொருள். புல் → புள் → புழு = துளைக்கும் சிற்றுயிரி. புகு → புகல் = புகுந்திருக்குமிடம், இருப்பிடம், சரண்]*

**புகலூர்** *pugalūr,* பெ. (n.) தஞ்சை மாவட்டத்தில் உள்ள ஊர்; a village in Tañjāvūr dt. 'பூம் பொய்கை சூழ்ந்த புகலூர்' (சம்பந்தர். 251–8).

*[ புகல் + ஊர். ]*

புகல் என்பதற்கு விருப்பம், இருப்பிடம், அடைக்கலம் (சரண்) போன்ற பல பொருள்கள் அமைகின்றன. எனவே இறைவன் விரும்பிய இடம், அல்லது இறைவனிடம் மக்கள் புகல் அடையும் அல்லது அடைந்த ஊர் என்ற நிலையில் பெயர் அமைந்திருக்கின்றது.

**புகவு¹** *pugavu,* பெ. (n.) 1. புகுகை; entering கழுது புகவயர (ஐங்குறு. 314) 2. மேலேறுகை; mounting, as a vehicle. '*புகவரும் புள்ளியன்மார்*' (பரிபா. 10, 14).

*[ புழு → புகு. புகுதல் = துளைத்தல் போல் உட்செல்லுதல். வீட்டுக்காரர் வீட்டுக்குள் புகுந்தார் (உ.வ.) (வே.க.3,104) புகு → புகுவு → புகவு ]*

**புகவு²** *pugavu,* பெ. (n.) உணவு; food. '*பழுஞ்சோற்றுப் புகவருந்தி*' (புறநா. 395).

*[ புகு → புகா = உட்புகும் உணவு. புகா → புகவு (வே.க. 3, 104) ]*
*'புகா' பார்க்க*

**புகவுச்சீட்டு** *pugavu-c-cīṭṭu,* பெ. (n.) ஓரிடத்திற்குப் புகுவதற்குரிய சீட்டு; enterance ticket.

*[ புகவு + சீட்டு ]*

புகவுச் சீட்டை நுழைவுச்சீட்டு என்றும் புகவுத் தேர்வை நுழைவுத் தேர்வு என்றும் வழங்குதல் தவறாம் (வே.க. 3, 19)

**புகழ்¹–தல்** *pugaḻ-,* 3 செ.குன்றாவி. (v.t.) 1. ஏத்துதல், துதித்தில்; to praise, extol. '*புகழு நல்லொருவ னென்கோ*' (திவ். திருவாய். 3, 4,1). 2. பாராட்டுதல்; to applaud 'வாழுமூர் தற்புகழும்' (நாலடி, 383).

**மறுவ.** சீர்த்தி, ஒளி, மீக்கூற்று

**ம.** புகழுக, புகழ்த்துக; **க.** பொகழ்; **தெ.** பொகடு, பொவடு; **து.** புகருனி, புகழுனி, பொகருனி, பொகழே; **மா.** பொகலரெ, பொகலத்ரெ; **கூ.** போங்க, போங்கி.

*[ புல் → புர் → புள் → புழு → புகு. புகுதல் = ஏறுதல். புகு → புகு → புகவு = மேலேறுகை. புகு → புகல் → புகழ். புகழ்தல் = உயர்த்துச் சொல்லுதல் (மு.தா. 1, 74) ]*

'ஒருவர்க்கு இம்மை மறுமைகட்கு இன்பத்தைத் தந்து பூமி யுள்ளளவும் நிற்பது புகழ்' என்பார் அடியார்க்கு நல்லார் (சிலப். 11: 14) அதனாலன்றோ '*புகழ் எனில் உயிரும் கொடுப்பர்*' என்கிறது புறநானூறு.

**புகழ்²** *pugaḻ,* பெ. (n.) 1. பாராட்டு, மெச்சு, துதி; praise, panegyric, eulogy. '*புகழாய்ப் பழியாய்*' (திவ். திருவாய். 6, 3, 6.). 2. கீர்த்தி; fame, renown glory, celebrity. '*சேண்விளங்கு புகழ்*' (புறநா. 10). 3. அருஞ்செயல்; famous deed, exploit. '*இலங்கு புகழ்*' (திருவாலவா. திருநரகச். 18).

**மறுவ.** இசை

**ம.** புகழ்; புகழ்ச்சி; **க.** பொகழ்; பொகழ்கெ, பொககெ; **து.** புகரிகெ, பொகளு; **கூ.** போப்க; **மா.** பொகலெ

*[ புகு → புகல் → புகழ் ]*

புகழ்வகை – ஒளி நன்மதிப்பு; பெயர் அல்லது பேர் நல்ல வழியிலும் தீயவழியிலும் பரவும்

பேர்: இசை புலவர் பாடுவதால் உண்டாகும் புகழ்; புகழ் இறந்தபின்னும் வழங்கும் உயர்த்துரை; சீர்த்தி அல்லது கீர்த்தி மிகு புகழ் (சொ.க. 40)

**புகழ்³** *pugal*, பெ. (n.) **1.** வாகை மரம் (அக.நி); Indian laurel. **2.** அகத்தி மரம் (அக.நி.); West Indian pea tree.

*[ புகு → புகல் → புகழ் ]*

**புகழ்க்கூத்து** *pugal-k-kūttu*, பெ. (n.) கதைத்தலைவன் புகழ் குறித்து நிகழும் ஆடல் (சிலப். 3, 12, உரை); a dance in praise of a hero.

*[ புகழ் + கூத்து. குதித்தாடுவது கூத்து. புகழ்க்கூத்திற்கு நேரெதிரானது வசைக் கூத்து ]*

**புகழ்கூறல்** *pugal-kūral*, பெ. (n.) மும்மொழி (பழித்தல், புகழ்தல், மெய்கூறல்) ஒன்றான கீர்த்தியை எடுத்து விளக்குகை (யாழ்.அக.); eulogy, one of mu-m-moli, q.v.

*[ புகழ் + கூறல். கூறு → கூறல். 'அல்' தொ.பெ.ஈறு. ]*

**புகழ்ச்சி** *pugalcci*, பெ. (n.) பாராட்டு; praise. 'புகழ்ச்சியைக் கடந்த போகமே' (திருவாச. 37, 4.).

*[ புகழ் → புகழ்ச்சி. 'சி' தொ.பெ.ஈறு. பாடாண்பொருள் புகழ்ச்சி, வாழ்த்து, வழுத்து எனமூவகைப்படும். புகழ்ச்சி யாவது ஒருவரைச் சிறப்பித்துக் கூறல்; வாழ்த்தாவது ஒருவரை நீடு வாழ்க வென்றல்; வழுத்தாவது ஒரு தெய்வத்தைப் பராவுதல் (ஒ.மொ.2,67)]*

**புகழ்ச்சிமாலை** *pugalcci-mālai*, பெ. (n.) 96 சிற்றிலக்கியங்களுள் அகவலடியும் கலியடியும் மயங்கிய வஞ்சிப்பாவால் மகளிரது சிறப்பைக் கூறும் இலக்கியம் (பிரபந்தம்) (இலக்.வி. 866); panegyric on a heroine in *vañji* verse, intermixed with *agaval* and *kali* lines, one of 96 pirapandams q.v.

*[ புகழ் → புகழ்ச்சி + மாலை. மயல் = மயக்கம். மயல் → மால். மாலுதல் = மயங்குதல். மால் → மாலை = பல மலர்கள் கலக்குந் தொடை. புகழ்ச்சி மாலை = அகவலடியும், கலியடியும் கலந்து வஞ்சிப் பாவாலான சிற்றிலக்கிய வகை ]*

**புகழ்ச்சோழநாயனார்** *pugal-c-cōla nāyanār*, பெ. (n.) நாயன்மார் அறுபத்து மூவருள் ஒருவரான சோழ அரசர் (பெரியபு.); a Cōla king, canonized šaiva saint one of 63.

*[ புகழ் + சோழநாயனார் ]*



**புகழ்த்துணைநாயனார்** *pugal-t-tuṇai nāyanār*, பெ. (n.) நாயன்மார் அறுபத்து மூவருள் ஒருவர் (தேவா. 611,7); a canonized šaiva saint one of 63.

*[ புகழ் + துணை + நாயனார் ]*

**புகழ்தல்** *pugaldal,* பெ. (n.) ஒன்பான் புண்ணியத்துள் ஒன்றான போற்றி (யாழ்.அக.); adoration, one of nava-punniyam, q.v. eulogy.

*[ புகழ் → புகழ்தல். 'தல்'.தொ.பெ.ஈறு. ]*

**புகழ்தலுவமை** *pugaldal-uvamai,* பெ. (n.) உவமேயத்தை வாளாவிடுத்து உவமானத்தை யாதேனும் ஒரு சிறப்புக்காட்டிப் புகழ்ந்து கூறும் உவமையணிவகை (தண்டி. 30, உரை.); (rhet.) a simile in which the upamānam is praised and the upanēyam is left bare.

*[ புகழ்ச்சி + உவமை ]*

**புகழ்ந்துபேசு—தல்** pugalndu-pēšu-,. 5 செ.குன்றாவி. (v.t.) *புகழ்ந்துரை—த்தல்* பார்க்க; see *pugalndurai-* புகழ்ந்து பேசுவதையே பலரும் விரும்புகின்றனர். (உ.வ.)

*[ புகழ் → புகழ்ந்து + பேசு-, ]*

**புகழ்ந்துரை—த்தல்** *pugalndurai-,* 4. செ.குன்றாவி. (v.t.) பாராட்டுதல், மெச்சுதல்; to praise, to be mouth., to eulogize.

*[ புகழ் → புகழ்ந்து + உரை ]*

**புகழ்ப்பூ** *pugal-p-pū,* பெ. (n.) பொன்னாவிரை (சங்.அக.); fetid cassia.

**புகழ்புகழ்** *pugal-pugal,* பெ. (n.) மூக்கிரட்டைக் கொடி; a prostate or creeper plant.

**புகழ்பெறு—தல்** pugal peru-, 20 செ.கு.வி. (v.i.) புகழடைதல்; to get renown. எளிமையாகப் புகழ்பெற வேண்டும் என்பது திரைப்படக் கலைஞர் நோக்கம் (உ.வ.).

*[ புகழ் + பெறு-, ]*

**புகழ்பொருள்** *pugal-porul,* பெ. (n.) உவமேயம் (அணியி. 3.); (rhet.) subject of comparison.

*[ புகழ் + பொருள் ]*

**புகழ்பொருளுவமையணி** *pugal-porul-uvamai-y-ani,* பெ. (n.) உவமைகளுள்ள இரண்டு தொடரியங்களுள் (வாக்கியங்களுள்) முதலாவதன் உவமேய உவமானங்கள் முறையே இரண்டாவதன் உவமான உவமேயங்களாகத் தொடர்ந்து வருமாறு இரண்டு தொடரியமாக (வாக்கியமாக)ச் சொல்லப்படும் ஒருவகை உவமையணி (அணியி.2.); (rhet.) a type of simile in which there is a mutal interchange, for greater effect, in the next sentence, as between the subject of comparison as the object with which it is compared.

*[ புகழ்பொருள் + உவமையணி ]*

எ-டு: கண் மீனைப் போன்றுள்ளது. மீன் கண்ணைப் போன்றுள்ளது.

**புகழ்மகள்** *pugal-magal,* பெ. (n.) புகழாகிய தேவி; the goddess of fame 'புகழ்மகளைத் தழுவிய' (கம்பரா. இராவண. வதை. 226).

*[ புகழ் + மகள் ]*

**புகழ்மங்கை[1]** *pugal-mangai,* பெ. (n.) *புகழ்மகள்* பார்க்க; see *pugal-magal.* 'புகழ்மங்கை யெங்குந் திகழ' (திவ். பெரியதி. 3, 2, 5).

*[ புகழ் + மங்கை ]*

**புகழ்மங்கை[2]** *pugal-mangai,* பெ. (n.) எருக்கு; a milky shrub.

**புகழ்மங்கைப்பால்** *pugal-mangai-p-pāl,* பெ. (n.) எருக்கம் பால்; the milky juice of madar.

*[ புகழ்மங்கை + பால். புல் → பல் → (பன்) → பன்னல் = பருத்தி. புல் → பல் → பால் = வெண்மையானது ]*

**புகழ்மரம்** *pugal-maram,* பெ. (n.) அகத்தி மரம்; sesbania tree.

*[ புகழ் + மரம் ]*



**புகழ்மாலை** *pugal-mālai,* பெ. (n.) தலைவர் புகழைத் தெரிவிக்கும் சொன்மாலை; garland of verse in praise of a deity or a person. 'வறியோர் தொடுக்கும் புகழ்மாலை சூடும் நல்லியக்கோடனை' (புறநா. 176, உரை).

மறுவ. புகழாரம்.

*[ புகழ் + மாலை ]*

**புகழ்மை** *pugal-mai,* பெ. (n.) 1. புகழுடைமை; praise worthiness. 'பொச்சாப்பார்க் கில்லைப் புகழ்மை' (குறள், 533) 2. புகழ்; fame. 'புகழ்மையாக் கொள்ளாது பொங்குநீர் ஞாலம்' (நாலடி, 72).

*[ புகழ் → புகழ்மை. 'மை' பண்புப் பெயரீறு. ]*

**புகழ்மொழி** *pugalmoli,* பெ. (n.) புகழுரை; eulogy.

*[ புகழ் + மொழி ]*

**புகழ்வதினிகழ்தல்** *pukalvadin-igaldal,* பெ. (n.) புகழ்வது போலப் பழித்துக் கூறும் அணி (மாறனலங். 229, உரை); (rhet.) a figure of speech which consists in ironical praise.

மறுவ. இகழாவிகழ்ச்சி

*[ புகழ்வதில் + இகழ்தல். இழு → இகு இகழ் → இகழ்ச்சி. இகழ் → இகழ்தல். 'தல்' தொ.பெ.ஈறு ]*

**புகழ்வீசுசந்திரன்** *pugal-višu-šandiran,* பெ. (n.) 1. பச்சைச் சூடம் (கருப்பூரம்) (யாழ்.அக.); medicated camphor; 2. சூட (கருப்பூர) மரம்; camphor tree.

**புகழ்வீசுமதி** *pugal-višu-madi,* பெ. (n.) பச்சைச் சூடம் (கருப்பூரம்); crude camphor.

**புகழ்வு** *pugalvu,* பெ. (n.) புகழ்ச்சி; praise, fame '*புகழ்வினையாகி*' (பெருங். உஞ்சைக். 6, 193).

*[ புகழ் → புகழ்வு. 'வு' தொழிற் பெயரீறு ]*

**புகழ்வோர்** *pugalvōr,* பெ. (n.) அகவர் (சூதர்), ஓவர் (மாகதர்) முதலிய ஏற்றியுரைப்போர் (வந்திகள்) (பிங்.); professional panegyrists.

*[ புகழ் → புகழ்வோர். 'ஓர்' பலர் பாலீறு ]*

பழந்தமிழகத்தில் வேந்தன் அமைதிக் காலத்தில் ஒவ்வொரு நாளும் பகலில் முதல்பத்து நாழிகை கொடைக்கும், இடைப் பத்துநாழிகை வழக்குத் தீர்த்து முறை

செய்வதற்கும், கடைப்பத்து நாழிகை தன் இல்லற இன்பத்திற்கும் செலவிட்டான். அவன் காலையில் எழுந்தவுடன் பள்ளியெழுச்சி முரசம் அறையப்படும். எட்டர் என்பவர், அவனுக்கு நாழிகை யறிவிப்பவர். அகவர் (சூதர்) என்பவர் நின்று கொண்டு அவன் முன்னோர் பெருமையைக் கூறி அவனைப் புகழ்ந்து பாடுபவர். ஓவர் (மாகதர்) என்பவர், இருந்து கொண்டு அங்ஙனம் பாடுபவர். ஏத்தாளர் பிறசமயங்களில் புகழ்ந்து பாடுபவர் (ப.த.நா.ப.104).

**புகழனார்** pugalaṉār பெ. (n.) 'அப்பரி'ன் தந்தையார்; father of the cannoized šaiva saint Appar.

*[ புகழ் → புகழனார்]*

**புகழாப்புகழ்ச்சி** *pugaḻā-p-pugaḻcci,* பெ. (n.) பழிப்பது போலப் புகழும் அணிவகை. (தண்டி. 82); (rhet.) a figure of speech, containing praise couched in terms of apparent censure.

மறுவ.வஞ்சப்புகழ்ச்சி

*[ புகழ் + ஆ + புகழ் + சி. 'சி' தொ.பெ.ஈறு. 'ஆ' எ.ம.இடைநிலை ]*

**புகழாவாகை** *pugaḻā-vāgai,* பெ. (n.) 1. அகத்தி; West Indian pea-tree. '*புகழா வாகைப் பூவினன்ன*' (பெரும்பாண். 109.) 2. செருக்கு (அகங்காரம்) (சங்.அக.); conceit.

*[ புகழ் + ஆ + வாகை. 'ஆ' எ.ம. இடைநிலை]*

**புகழாளன்** *pugaḻāḷaṉ,* பெ. (n.) புகழையுடை யோன் (திவா.); renowned person.

*[ புகழ் + ஆளன். புகழை ஆளுகின்றவன், புகழாளன் ]*

**புகழுரை** *pugaḻurai,* பெ. (n.) புகழ்ந்து கூறும் உரை; eulogy.

*[ புகழ் + உரை ]*

**புகழேந்தி** *pugaḻ-ēndi,* பெ. (n.) நளவெண்பா இயற்றிய புலவர்; a poet, author of Naḷaveṇbā 'வெண்பாவிற் புகழேந்தி' (தனிப்பா.).

*[ புகழ் + ஏந்தி. ஏந்து → ஏந்தி.'இ' வினை முதலீறு ]*

இவர் 13 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் ஒப்பாரிக்கண்ணி கொற்றந்தைக் கலம்பகம், துரோபதைகுறம், மின்னொளியாள் குறம், விதுரன் குறம், புலந்திரன் தூது, அபிமன்னன் சுந்தரி மாலை, அல்லி அரசாணி மாலை, சுபத்திரை மாலை, பவளக்கொடி மாலை, புலந்திரன் களவு மாலை ஆகிய நூல்களையும் இவர் இயற்றியுள்ளார் என்று கூறப்படுகிறது. ஆனால், பாக்களின் போக்கையும் மொழிநடையையும் வண்ணனை முறைகளையும் பிறவற்றையும் நோக்கின், இவற்றை எழுதியவர், புகழேந்தி என்னும் பெயர் தாங்கிய வேறொருவராக இருக்கக் கூடும் என்று கருத வேண்டியுள்ளது.

இவரது ஊர் பொன் விளைந்த களத்தூர். சிலர் முதுகளத்தூர் என்றும் சிலர் களப்பாழ் என்றும் கூறுவர்.

**புகள்** *pugaḷ,* பெ. (n.) *புகழாவாகை.* (மலை.) பார்க்க; see *pugaḻāvāgai.*

*[ புகழ் → புகள்]*

*'புகழ்மரம்' பார்க்க.*

**புகற்சி** *pugaṟci,* பெ. (n.) 1. விருப்பம்; desire. '*குறக்குறு மாக்கள் புகழ்சியினெறிந்த*' (நற்.104) 2. காதல்; love. "*புகற்சியி னமைந்தோர்*" (நம்பியகப். 37).

*[ புல் → புர் → (புளு) → புகு → புகல் + சி. 'சி' தொ.பெ.ஈறு ]*

**புகற்று–தல்** *pugaṟṟu-*, 6 செ.குன்றாவி. (v.t.) விரும்பச் செய்தல்; to cause to desire. '*உள்ளு மாந்தரை யுள்ளம் புகற்றுமே*' (சீவக. 870).

*[ புகலு–தல் (து.வி.) → புகற்று–தல் (பி.வி.) ]*

**புகனான்கு** *puganāngu*, பெ. (n.) நிலைபேறு (ஸ்திதி) தொடக்கம் (பிரக்கிரமம்) கலப்பு (சஞ்சாரம்) ஏற்றவிறக்கம் (மூர்ச்சனை)ஆகிய நால்வகைப்பட்ட பாடன்முறை; (mus.) the four modes of singing, viz, sthiti, pirakkiramam, cañcāram, mūrccaṉai. ஆயவிசைப் புகனான்கினமைந்த புகல் வகையெடுத்து (பெரியபு. ஆனாய. 26). (செந். vi, 216)

*[ புகல்[2] + நான்கு ]*

**புகா** *pugā*, பெ. (n.) உணவு; food. "*புகாஅக் காலை*" (தொல். பொருள். 101).

*[ புகுதல் = உட்செல்லுதல், வாய்க்குட் செல்லுதல். புகு → புகா = வாய்க்குட் செல்லும் உணவு. ஒ.நோ: உள் → உண் – உணா. புகு → புஜ். ஒ.நோ: பகு → பஜ். புஜ் என்னும் அடியினின்றே, புக்தி, போக்த்ரு, போக, போகி, போக்ய, போஜ, போஜன முதலிய சொற்கள் பிறந்துள்ளன (வ.வ. 2, 37) ]*

உண்ணுதல் என்பது உட்கொள்ளுதல்; அதாவது, ஒன்று இன்னொன்றைத் தன்னுள் இழுத்தல் அல்லது சேர்த்தல், வாய்வழி வயிற்றிற்குள் ஒன்றை இடுதலும், நிலம் நீரை உறிஞ்சுதலும், பாதம் செம்பஞ்சுக்குழம்பு நிறத்தைப் பெறுதலும் உண்ணுதலே. இவற்றுள் முதலதே மக்கள் பேச்சிற் பெரு வழக்கானது. இறுதியது, சேர்தலின் அல்லது சேர்த்தலின் வகைகளுள் ஒன்றாகும்.

உண்ணுதல் என்பது அடிப்படைப் பொருளில் உட்கொள்ளுதலாதலின், பெரும்பாலும் உள்ளிடத்தை அல்லது உட்புகுத்தலைக் குறிக்குஞ் சொற் களினின்றே உண்ணுதல் வினைச்சொற்கள் தோன்றியுள்ளன.

எ–டு: உள் → உண் → உணா → உண → உணவு.
புகு– Gk. பகு *(phag) phagin*, to eat, devour; *phagema*,food; *phagas,phagōn*. glutton.

*phage* (*phag.*), combining from meaning 'eater' as in xylophage.

*phagedena*, gangrene, L. *phagedaena* fr. Gk. *phagedaina*, cancer, lit. voracity fr. *phagein*, to eat.

*phago*, combining form meaning 'eating' as in phagocyte.

*phagous*, combining form meaning 'eating feeding on' as in creophagous, xylophagous, Gk. phagos, 'eater of'.

*phagus*. combining form meaning 'eating', as in *sarco phagas*. L. fr. Gk. *sarkophagos*,orig. flesh-consuming (stone).

*phagy*, combining form meaning 'eating of' (something specified), as in anthropoph*agy*, *geophagy*.

*phagia*, same as '*phagy*'

உகரமுதல் அகரமுதலாகத் திரிவது பெரும்பான்மை. தமிழில் மூச்சொலி (aspirate) இல்லை. தமிழ் மெய்கள் பிற மொழிகளில் மூச்சொலி மெய்யாகத் திரிவதுண்டு.

எ–டு: கல்–khal (பிராகுவீ).

இங்ஙனம் தமிழ்ச்சொல் தமிழுக்கு அகப்புறமான திரவிடத்திலேயே மூச்சொலி பெறும்போது அதற்குப் புறமான ஆரியத்தில் அதைப் பெறுவது இயற்கைக்கு மாறானதன்று.

ph என்னும் இணைவரி அல்லது கூட்டெழுத்து, ஆங்கிலத்தில் 'f' என்றொலிப்பினும், கிரேக்கத்தில் மூச்சொலி கூடிய பகரமே (ப்ஹ) என்பதை அறிதல் வேண்டும்.

புகு என்னும் தமிழ்ச்சொல், கிரேக்கத்தில் பகு அல்லது பக என்று திரிந்தபின், அதற்கினமான இந்திய ஆரிய முன்னை மொழியில் (Pre-Indian East Aryan) புஜ் (bhuj) என்று திரிந்துள்ளது.

ஒ.நோ: பகு–வ. பஜ் (bhaj).

சமற்கிருதத்திற்கு முந்தின, வேத மொழியிலேயே இத் திரிபு காணப்படுவதால், இது வேத ஆரியர் இந்தியாவிற்குட் புகுமுன்னரே நிகழ்ந்திருக்க வேண்டும். மிடற்றொலி அண்ணவொலியாகத் திரியும்போது, எடுப்பிலா வொலி (voiceless sound) எடுப்பொலியாகவும், எடுப்பொலி (voice sound) எடுப்பிலா வொலியாகவும் திரிவதே பொதுவியல்பு.

எ–டு: க–ச: குடிகை – குடிசை.

g-j: L. ago-Skt. aj (to drive).

இம் முறைப்படி, புகு என்பதன் திரிபான பகு (phag) என்னும் மேலையாரியக் கிரேக்கச் சொல் கீழையாரியத்தில் புஜ் (bhuj) என்று திரிந்துள்ளது. எடுப்பிலாவொலி எடுப்பொலியாகத் திரிவதும் இயல்பே.

எ–டு: E. acre, L. ager, Gk. agros. E. triple-E. treble.

*bhuj*, to eat, eat and drink, enjoy a meal, consume, enjoy, use, possess, make use of, utilize, exploit, suffer, experience, undergo, R.V., AV., Up., MBh., Kāv.

*bhukta*, enjoyed, eaten, made use of, possessed etc.

*bhukti*, eating, enjoyment, consuming, fruition, possession, usufruct.

*bhuktvā*, having enjoyed or eaten or possesed.

*bhuji*, the granting of enjoyment, favour, RV.

*bhujishya*. granting food, useful, AV.

*bhoktru*, one who enjoys or eats Maitr Up.

*bhōga*, enjoyment, eating, feeding on RV.

*bhogin*, enjoying, eating, having wealthy; a kind, a concubine.

*bhōgya*, to be enjoyed, to be used.

*bhōja*, bestowing enjoyment, bountiful, liberal, RV. leading a life of enjoyment, BhP., a king. *bhōjaka*, eating, being about to eat, giving to eat, nourishing.

*bhōjana*, feeding, giving to eat; the act of enjoying, using, R.V., the act of eating; a meal, food.

*bhōjaniya*, to be eaten, eatable; to be fed, to be made to eat, Mn.; one to whom enjoyment is to be afforded or service to be done, Nir,; food (esp. what is not masticated, as opp. to khādaniya) MBh. *bhōjin*, enjoying, eating.

*bhōjya*, to be enjoyed or eaten, eatable, what is enjoyed or eaten, anything to be enjoyed or eaten, a festive dinner.

*bhōktavya*, to be enjoyed or eaten, to be used or employed; to be possessed or governed or ruled, to be utilized or exploited, to be fed.

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் பேரகரமுதலியைத் தொகுத்தவர்கள், புகு (உண்) என்னும் தென்சொற்கும் புஜ் (bhuj) என்னும் வடசொற்கும் உள்ள தொடர்பை அறிந்தே, புகவு, புகா என்னும் இரு சொற்களையும் புஜ் என்னும் வட சொல்லோடு ஒப்பு நோக்கக் குறித்திருக்கின்றனர். ஆயின் தென்சொல்லே வடசொல்லின் மூலம் என்று காட்டுவது அவர் கருத்தன்று. வடமொழி தேவமொழி என்னும் அடாவடித்தன ஏமாற்றை அடிப்படையாகக் கொண்டு, வடமொழியிலுள்ள தென்சொல் லெல்லாம் வடசொல்லென்று சொல்லாமற் சொல்வதே, அவ்வொப்பு நோக்கக்குறிப்பின் நோக்கம். தமிழை வடமொழித் திரிபாக அல்லது கிளையாகக் காட்ட வேண்டுமென்பதே சென்னைப்

ப.க.த. அகரமுதலித் தொகுப்பாளரின் அடிப்படைக் கொள்கையாதலால், வடமொழிக்கு அடிப்படையான தென்சொற்ளை யெல்லாம் வடசொல்லென்று காட்டுவதொடு, உண்மையில் தொடர்பின்றி ஒருமருங்கு ஒலியொத்த போலியொப்புமைச் சொற்களையும் வடசொற் களினின்று திரிப்பதிலும் அவற்றொடு ஒப்புநோக்குவதிலும், கண்ணுங் கருத்துமா யிருந்திருக்கின்றனர். எ—டு: ஆரியன்—ஐயன், ச்யாமா—சாமை. வேந்தன்—ஒ. நோ: தேவேந்திரன், மருந்து—ஒ.நோ:அம்ருத. (தலை.த.132—135).

**புகாமோகி** *pugāmōgi,* பெ. (n.) புல் வகை யுளொன்று; a kind of grass.

**புகார்**[1] *pugār,* பெ. (n.) **1.** ஆற்றுமுகம்; mouth of a river. *'புகாஆர்ப் புகுந்த பெருங்கலம்'* (புறநா. 30). **2.** காவிரிப் பூம்பட்டினம் (சிலப்.).; the town of Kāviri-p-pūm paṭṭiṉam, as situated at the mouth of the river Kāvēri.

*[ புழு → புகு → புகார் = ஆறுகடலொடு கலக்குமிடம், காவிரி கடலொடு கலந்த இடத்துக் காவிரிப்பூம்பட்டினம் (வே.க. 3, 105) ]*

சோழ நாட்டின் தலை நகரமாகிய புகாரைச் சிறப்பித்துக் கூறுவதன் மூலம் சோழ நாட்டை வெளிப்படுத்துகின்றார் இளங்கோவடிகள். சிலப்பதிகாரக்காலத்தில் புகார் நகரம் பெரும் புகழ் வாய்ந்த பழம் பெருமை வாய்ந்த நகரமாக இருந்த தென வரலாற்று அறிஞர்கள் ஆய்ந்து கூறி யுள்ளனர். புகார் நகரம் தேவலோகத்தோடு ஒப்பிட்டுப் பேசுமளவிற்குச் சிறப்பு வாய்ந்ததை இளங்கோவடிகள். நாகநீள் நகரொடு நாகநா, டதனொடு போகநீள் புகழ்மன்னும் புகார் நகர் என்பர். இந்திர விழவூரெடுத்த காதையில் புகார் நகரின் பல்வேறு சிறப்புகள் சுட்டப் பெற்றுள்ளன. மருவூர்ப்பாக்கம், பட்டினப்பாக்கம். பற்றிய செய்திகள் ஐவகை மன்றங்கள் அல்லங்காடி, நாளங்காடி, தெருவமைப்பு முறைகள் முதலியனவும் பேசப்பட்டுள்ளன.

இக்காலத்திற் பட்டணம் என்பது சென்னையைச் சிறப்பாய்க் குறித்தல் போல், அக்காலத்தில் பட்டினம் என்பது புகாரைச் சிறப்பாய்க் குறித்தது. பட்டினப்பாலை, பட்டினத்துப்பிள்ளையார் என்னும் வழக்குகளை நோக்குக (ப.த.நா.ப. 104).

பதி + அமை – பதனம் → பத்தனம் → பட்டனம் → பட்டினம். தகரம் டகரமாவது பெருவழக்கு.

பலநாடுகளிலிருந்து வந்த பல்வேறு பொருள்கள், காவிரிப்பூம்பட்டினக் கடை மறுகில் மண்டிக்கிடந்தன.

நீர் வாணிகத்தின் பொருட்டு பல்வேறு மொழிகள் பேசும் பல்வேறு நாட்டுமக்கள் காவிரிப்பூம்பட்டினத்தில் வந்து கலந்தினிது வாழ்ந்தனர் (ப.த.நா.ப.97).

**புகார்**[2] *pugār,* பெ. (n.) **1.** பனிப்படலம்; mist, fog, haze. **2.** மந்தாரம்; cloudiness of the weather, overcast sky. **3.** மழை பெய்யும் முகில்; rain-cloud. **4.** மங்கியநிறம்; duskiness, dinginess, dimness.

*[ புகர் → புகார் ]*

**புகார்பிடி—த்தல்** *pugār-piḍi-,* **4.** செ.கு.வி. (v.i.) ஆடையில் நீலநிறம் பற்றுதல் (வின்.); to take on a faint blue in the process of staining as a cloth.

**மறுவ.** நீலம் போடுதல்

*[ புகர் → புகார் + பிடி—. ]*

**புகிடி** *pugiḍi,* பெ. (n.) புறச்செவி விளிம்பில் மாட்டிக்கொள்ளும் மகளிர் காதணி வகை (வின்.); a golden ear-pendant worn by women on the top of the helix.

**மறுவ.** பொகடி, பூடி

**க.** புகடி, புகுடி; **தெ.** புகட, பொகட; **து.** புகுடி.

Mar. bugḍī

*[ புல்லுதல் = பொருந்துதல். புல் → புள் →*

புண் → புணர். புணர்தல் = பொருந்து தல் புல் → புள் → புகள் → புகடி → புகிடி ]

**புகு[1]–தல்** *pugu-,* 3 செ.குன்றாவி. (v.t.) 1. அடைதல்; to reach, attain, enter. உயர்ந்த வுலகம் புகும் (குறள், 346) வீட்டிற்குள் புகுமுன் பாதத்தைக் கழுவிட வேண்டும் (உ.வ). 2. தொடங்குதல்; to make a beginning, commence. நக்குபு புக்கென (கம்பரா.சிறப். 4).

ம. புகுக, பூகுக; க. புகு, பொகு, குகு, கொகு, ஒகு; து. பொக்குனி; பட. குகு; கோத. உக்; துட. புக்

*[புல் → புர் → புரை = உட்டுளை. புல் → பொல் → பொள். பொள்ளுதல்= துளைத்தல், பொளிதல். பொள் → பொள்ளை = துளை. புல் → புள் → புழு. துளைத்தரிக்கும் சிற்றுயிரி. புழு = புகு. புகுதல் = துளைத்தல் போல் உட்செல்லுதல், உட்படுதல், அகப்படுதல், செல்லுதல், தொடங்குதல், (வே.க. 3, 101–104) ]*

**புகு[2]–தல்** *pugu-,* 3 செ.கு.வி. (v.i.) 1. செல்லுதல்; to go, proceed. 2. தொடங்குதல்; to begin. *"கடனீராடுவான்... புகும்"* (திவ். இயற். 3, 69.) 3. தாழ்நிலை யடைதல் (வின்.); to come to a mean or abject condition. 4. வாழ்நாளடைதல்; to enter upon, as a particular age or stage of life. *"பிராய நூறு மனிதர்தாம் புகுவ ரேனும்"* (திவ். திருமாலை, 3) 5. ஏறுதல்; to mount upon, ride. *"புகவரும் பொங்குளைப் புள்ளியன் மாவும்"* (பரிபா. 10, 14). 6. நிகழ்தல்; to happen, come to pass. 7. உட்படுதல்; to undergo. *"சிறைதளை சங்கிலி புகிலும்"* (S.I.I. iii, 28). 8. அகப்படுதல்; to caught. *"சூறைபுகுவன பாறையே"* (தக்கயாகப். 64).

*[புழு → புகு–. 'புகு' என்னும் வினை 'புக்கு' என இரட்டித்து இறந்தகாலம் காட்டினது அசைபழுத்தத்தினாலேயே, புக்கு பண்டைக் காலத்தில் முற்றாகவும் எச்சமாகவும் வழங்கப்பட்டது. பின்பு பால்காட்டும் ஈறுசேர்ந்து புக்கான் (புக்கு +ஆன்) என்று முற்றுக்குத் தனிவடிவம் ஏற்பட்டபின் அவ்வீறு பெறாத பண்டைவடிவம் எச்சமாக மட்டும் வழங்கி வருகின்றது. (ஒ.மொ. 1, 97–98)]*

**புகு[3]–த்தல்** *pugu-,* 3 செ.குன்றாவி. (v.t.) 1. போகவிடுதல்; to cause to enter. *"வாயில் புகுப்பினும்"* (தொல்.பொருள்.149). 2. உட்செலுத்துதல்; to insert, put in.

ம. புகுக்க, புக்கிக்க, பூகிக்க: து. பொக்காவுனி, பொக்பாவுனி.

*[புகு–தல் (த.வி.) - புகு–த்தல் (பி.வி.) ]*

**புகுடி[1]** *pugudi,* பெ. (n.) 1. கழி; back water, estuary. 2. வாயில்; gate, doorway.

*[ புள் → புழு → புகு → புகுதி = மனைவாயில், வழி, வருவாய். புகுதி → புகுடி (மு.தா. 288)]*

**புகுடி[2]** *pugudi,* பெ. (n.) புருவம் (பிங்.); eyebrow

*[ புல் → புர் → புரு → புருவு → புருவம் = கண்களின் மேலுள்ள மயிர்வளைவு புருவு → புகுவு → புகுடி ]*

**புகுடி[3]** *pugudi,* பெ. (n.) புகிடி (அரு.நி.) பார்க்க; see *pugiḍi.*

*[ புகிடி → புகுடி ]*

**புகுத்து–தல்** *puguttu,-,* 5 செ.குன்றாவி. (v.t.) *புகு³–தல்* பார்க்க; see-*pugu³-,*

*[ புகுது–தல் (கு.வி.) – புகுத்துதல் (பி.வி.)]*

**புகுதி** *pugudi,* பெ. (n.) 1. மனைவாயில் (பிங்.); front door or main entrance of a house. 2. நிகழ்வு; occurrence, event. *'புகுதியின்னதால்'* (கந்தபு. சிங்கமு. 20). 3. ஆழ்ந்தறியும் நுண்ணறிவு; penetrating intellect. *'புகுதி கூர்ந் துள்ளார்வேதம்'* (கம்பரா. முதற்போர். 222). 4. வழி (அரு. நி.); way. 5. வருவாய் (அக.நி.); income.

*[ புள் → புழு → புகு → புகுதி = மனை வாயில், வழி, வருவாய் (மு.தா. 2, 126)]*

**புகுது–தல்** *pugudu-,* 3 செ.குன்றாவி. (v.t.) 1. புகுதல், உட்செல்லுதல், நுழைதல்; to enter. *'பொய்யிலங்கெனைப் புகுதலிட்டு'* (திருவாச. 5, 92). 2. நிகழ்தல்; to happen, come to pass. *'வேறொன்றும் புகுதாவிட்ட'* (பெரியபு. எறிபத்த. 38).

*[ புள் → புழு → புகு → புகுது (மு.தா. 2, 126) ]*

**புகுந்தகம்** *pugundagam,* பெ. (n.) *புக்ககம்* பார்க்க; see *pukkagam. 'புகுந்தகமும்'* (குமர. மீனாட். இரட். 20).

*[ புகு → புகந்த + அகம் ]*

**புகுந்துபார்–த்தல்** *pugundu-pār-,* 4 செ.குன்றாவி. (v.t.) ஆழ்ந்து நோக்குதல்; to look into a thing carefully, scrutinise, examine closely.

*[ புகு → புகுந்து + பார்–,]*

**புகுந்துவிளையாடு–தல்** *pugundu viḷai-y-āḍu-,* 5 செ.கு.வி. (v.i.) தடை ஏதுமில்லாமல் நன்றாகச் செயற்படுதல்; to give free rein to (one's proficiency is strength). to make a show of one's capability. வினாத் தாள் எளிமையாக இருந்ததால் மாணவர்கள் புகுந்து விளையாடி விட்டார்கள் (உ.வ.).

*[ புகுந்து + விளையாடு–,]*

**புகுபுகெனல்** *pugupugeṉal,* பெ. (n.) 1. நீர்ப்பொருள் வெளியேறுதலின் விரைவுக் குறிப்பு; onom. expr. of gushing out as water. 2. காற்று வீசுதலின் ஒலிக்குறிப்பு; onom. expr. of coming in puffs, as wind.

*[ புகுபுகு + எனல்]*

**புகுமுகம்புரிதல்** *pugu-mugam-puridal,* பெ. (n.) (அகப்.) ஒருவரையொருவர் எதிர்ப்பட்ட விடத்துத் தலைவன் தன்னை நோக்குதலை விரும்பும் தலைவியின் உள்ள நிதழ்ச்சி (தொல். பொருள். 261.); the desire of a maiden that her lover should return her gaze, when they meet each other for the first time.

*[ புகு + முகம் + புரிதல். 'தல்' தொ. பெ. ஈறு ]*

**புகுர்–தல்** *pugur-,* 3 செ.குன்றாவி. (v.t.) புகுதல்; to enter.

*[ புள் → புழு → புகு → புகுதி. புகு → புகுர்–, (மு.தா. 288) ]*

**புகுரு–தல்** *puguru-,* 4. செ.குன்றாவி. (v.t.) *புகுர்–தல்* (இ.வ.) பார்க்க; see *pugur-,*

*[ புகு → புகுரு (கொ.வ.) ]*

**புகுவழி** *puguvaḻi-,* பெ. (n.) நுழைவுத் தடம்; entrance.

**மறுவ.** நுழைவாயில்

*[புகு + வழி]*

**புகுவாசல்** *pugu-vāšal,* பெ. (n.) அடைக்கலம் புகுமிடம்; place of refuge. *'தேவதைகளும் நீங்களும் ஒரு புகுவாசல் தேடித் திரியு மன்றல்லது ஸர்வாதிகன் ஒருவன் உளன் என்று உங்கள் நெஞ்சிற்படமாட்டாது'* (திவ். திருமாலை, 9, வ்யா. பக். 42).

**மறுவ.** புகலிடம்

*[புகு + வாசல். வாயில் → வாசல்]*

**புகுவாயில்** *puguvāyil,* பெ. (n.) இரைக்குழலின் இறுதிப்பகுதி; the termination of the elsophagus.

*[புகு + வாயில். வாய் + இல் – வாயில்]*

**புகை¹–தல்** *pugai-,* 3 செ.கு.வி. (v.i.) 1. புகையெழுதல்; to smoke *'தீப்போற் புகைந்தெரிய'* (திருவாச. 6, 36.) 2. ஆவியெழுதல் (கொ.வ.); to emit vapour or steam. 3. செய்தி வெளிப்படத் தொடங்குதல்; to begin to be spoken of or made public; to come out 4. வருந்துதல்; to burn, as the heart; to be chagrined; to grieve. *'புண்வேற் புடையிற்புகைந்தாள்'* (சீவக. 13). 5. சினங் கொள்ளுதல் (சூடா.); to fume with anger; to be furious. 6. பயிர் முதலியன தீய்தல் (யாழ்ப்.); to be blighted, as crops; to wither, as plants. 7. குடி முதலியன அழிதல்; to be ruined as a family 8. மாறுபடுதல்; to become unfavourable. *'கரியவன் புகையினும்'* (சிலப். 10, 102). 9. தொண்டை முதலியன கரகரத்தல். to be irritated, as the throat. *'தொண்டை புகைகிறது'*.

**ம.** புகயுக; **க.** பொகெ, புகு, பொகு, கொகு; **தெ.** பொகையு, பொவடி, பொகசு, பொகுசு; புகெயுனி; பட. கொகெ.

*புள் → புகு = துளைக்குட் செல், உட்செல். புகு → புகை (சு.வி. 36)]*

**புகை²** *pugai-,* பெ. (n.) 1. எரிகின்ற பொருளின்றெழும் கரும்படலம்; smoke, fume. *'வேள்விக் கொழும் புகையும்'* (சீவக. 2977) பண்டைத் தமிழகத்தில் பெண்டிர் காரகிற் புகையாலும் சந்தனக் கட்டைப்புகையாலும் தம்கூந்தலின் ஈரம் புலர்த்துவர். (உ.வ). 2. பனிப்படலம் (வின்.); mist, haze. 3. ஆவி; vapour, steam. *'புகை வேய் குன்றத்து'* (பெரும்பாண். 19). 4. தென் கீழ்த்திசைப் பாலன் குறி (சூடா.); sign of the guardian of the South East. 5. யோசனைத் தொலைவு (தூரம்); distance of a yōjana. *'ஐஞ்ஞூறு புகைபெறும்'* (யசோதா. 1,34). 6. கண்ணில் விழும் படல வகை (சீவரட்); cataract of the eye. 7. துன்பம் (துக்கம்); distress *'சிந்தை புகையில்லை'* (திருமந். 1346). 8. மாணிக்கத்தின் குற்ற வகை; flaw in a ruby. *'புகையொடு திருகல்'* (திருவாலவா. 25, 14). 9. சுறாலைப்புகை (சாம்பிராணித் தூபம்); incense. *'புகையும் சாந்தும்'* (சிலப். 5, 198). 10. சுறாலை புகைக்கும் போது அடிக்கும் மணி (தூபமணி); gong struck while incense is burnt. *'புகை யணங்க'* (பு.வெ. 10, பொது. 8). 11. புகை வட்டம்; a hell. *'ஈரும் புகையிரு ளோடு'* (ஏலாதி, 67).

**மறுவ.** அரி.

**ம.** புக; **க.** பொக; **தெ.** பொக, பொவ; **து.** புகெ, பொகெ; **கோத.** பெக்; **துட.** பக்; **பட.** கொகெ; **கொலா., நா., கட.** பொக்;

குவி. போஇயி, போஇ.

*[புள் → புகு = துளைக்குட் செல், உட் செல். புகு → புகை]*

If *AS.* smoca; E smoke. LowGer; Dut. smook *(சு.வி. 36)* pu-gei, smoke (Tel. pog-a). comp. Hung. fūs, smoke; also the following words signifying vapour in the Turkish dialects; bug, buch, bugu. Comp. also the English fog. (CGDFL. 621).

**புகை³–த்தல்** *pugai-,* 11 செ.குன்றாவி. (v.t.) 1. புகையச் செய்தல்; to cause to smoke, to emit smoke '*நெடுநகர் வரைப்பிற் கடிநறை புகைஇ*' (புறநா.281) 2. புகையை உட்புகுத்தி உயிரிகளை (பிராணிகளை)க் கிளப்பி அகப் படுத்தியழித்தல் (திவ்.இயற். நான்மு.3வ்யா); to entrap and destroy, as by letting smoke into rat-holes. 3. கெடுத்தல்; to ruin.

ம. புகைக்க; க. கொகெ

*[புகை–தல் (த.வி.) – புகை–த்தல் (பி.வி)]*

**புகை⁴–த்தல்** *pugai-,* 4 செ.கு.வி. (v,i.) சினக்குறிப்புக் காட்டுதல் (சது.); to fume with anger; to be inflamed with rage

ம. புகயுக

*[புகை → புகை–த்தல்.]*

**புகை⁵–த்தல்** *pugai-,* 11 செ.குன்றாவி. (v.t.) புகையிலை முதலியவற்றின் புகையை உட்கொள்ளுதல்; to smoke, as tobacco or other drugs.

*[புகு → புகை → புகைத்தல்]*



**புகைக்கட்டு** *pugai-k-kaṭṭu,* பெ. (n.) புடமிட்டெடுக்கை; calcination '*நீடும் புகைக்கட்டினா லுண்டாகுங் காரியமென்னு*' (சரவண. பணவிடு.210).

*[புகை + கட்டு. கள் → கட்டு]*

**புகைக்கண்** *pugai-k-kaṇ,* பெ. (n.) நீலவிழி; blue-eye.

*[புகை + கண். கள் → கண்]*

**புகைக்கப்பல்** *pugai-k-kappal,* பெ. (n.) நீராவிக்கப்பல்; steamer, steamboat.

து. புகெகப்பல்

*[புகை + கப்பல். கப்பு → கப்பல்]*



**புகைக்கம்மல்** *pugai-k-kammal,* பெ. (n.) பார்வையை மழுங்கச்செய்யும் கண்ணோய் வகையுளொன்று; an eye disease.

*[புகை + கம்மல்]*

**புகைக்கரி** *pugai-k-kari,* பெ. (n.) 1. எரிபொருளால் பக்கத்து இடங்களில் படியும் கரும்படலம்; smoke-black. 2. புல்கரி, தூள் நிலக்கரி; peats.

து. புகெகரி

*[புகை + கரி. கர் → கரி. புகைப்படலம் கருப்பாய் அமைவதால் கரி எனப்பட்டது. ஒ.நோ: ம. இல்கரி (இல்லத்தில் படியும் புகை, ஒட்டடை)]*

**புகைக்காடு** *pugai-k-kāḍu,* பெ. (n.) 1. புகைப்படலம் (வின்.); smoke; thick mist, fog. 2. வேகம் முதலியவற்றின் மிகுதி குறிக்குஞ் சொல் (யாழ்.அக.); term indicating excess as, of speed.

ம. புகக்காடு

*[புகை + காடு. கடு → காடு]*

**புகைக்குண்டு** *pugai-k-kuṇḍu,* பெ. (n.) 1. நச்சுப்புகை புகைக்கும் ஏனம் (யாழ்.அக.); a vessel for fumigating with poisonous fumes. 2. துமுக்கி (துப்பாக்கி)க் குண்டு; bullet. (நெல்லை.).

*[புகை + குண்டு குள் → குண்டு = உருண்ட வடிவானகலம், உருண்டையான கோளம். 'காய்ச்சினால் (நச்சுப்) புகை வருவது, வெடித்தால் புகைவருவது]*

**புகைக்கூடு** *pugai-k-kūḍu,* பெ. (n.) 1. புகைபோக்கி (கட்டட. நாமா.10); chimney-piece, flue, covered opening for the escape of smoke. 2. வானக்கூண்டு (இ.வ.); balloon.

ம. புகக்கூடு; தெ. பொககூடு; பட. கொகெகூடு.

*[புகை + கூடு. கூளுதல் = வளைதல். கூள் → கூண்டு → கூடு = உருண்டையான புகைக்கூண்டு]*



**புகைக்கூண்டு** *pugai-k-kūṇḍu,* பெ. (n.) 1. புகைக்கூடு பார்க்க; see *pugai-k-kuḍu.* 2. விண்ணில் வெடிக்கும் வாணம் (வின்.); explosive shell thrown by hand or from a mortar, rocket.

*[புகை + கூண்டு. குள் → கூள் → கூண்டு]*

**புகைக்கூர்** *pugai-k-kūr,* பெ. (n.) புகைப்படை (இ.வ.); soot.

*[புகை + கூர்]*

**புகைக்கொடி** *pugai-k-koḍi,* பெ. (n.) வால் மீன் (தூமகேது); comet. '*புகைக்கொடி தோன்றினும்*' (சிலப்.20.102, அரும்.)

*[புகை + கொடி. கொள் → கொடு → கொடி = வளைந்து படரும் நிலைத் திணை வகை. புகை கொடிப்போல் நீண்டுகாட்சியளிக்கும் கோள்]*



**புகைக்கோள்** *pugai-k-kōḷ,* பெ. (n.) வால்வெள்ளி; comet.

**து.** புகைபீலெ

*[புகை + கோள். குள் → கொள் → கோள் = சுற்றிவரும் விண்மீன். மங்கலாக, புகைப் படலம் போலத்தெரிவது புகைக்கோள்]*

**புகைகட்டு—தல்** *pugai-kaṭṭu-,* 15 செ.கு.வி. (v.i.) **1.** புகையேற்றுதல்; to smoke or fumigate affected parts of the body, as in tooth-ache. **2.** புகையால் நிறமூட்டுதல்; to impart a gold or silver colour by fumigation

*[புகை + கட்டு. கள் → கட்டு]*

**புகைகாட்டு—தல்** *pugai-kāṭṭu-,* 15 செ.கு.வி. (v.i.) **1.** புகைத்து நோய் நீக்குதல்; to smoke, fumuigate, as a cure **2.** புகையுண்டாக்குதல் (வின்.); to burn incense, as for expelling flies, exorcising devils; **3.** சுறாலைப்புகை (தூபங்) காட்டுதல்; to offer incense, as to a deity.

*[புகை + காட்டு—, காண் (கு.வி.) — காட்டு (பி.வி.)]*

**புகைகாண்(ணு)—தல்** *pugai-kāṇ(ṇu)-,* 16 செ.குன்றாவி. (v.t.) முற்ற அழித்தல்; to destroy completly, as by cremation '*அவனைப் புகை கண்டால்தான் விடுவான்*' (கொ.வ.).

*[புகை + காண்—,]*

**புகைகுடி—த்தல்** *pugai-kuḍi-,* 4 செ.கு.வி. (v.i.) *புகை*[5]*—த்தல்* பார்க்க; see *pugai*[5]-. இளமையில் நண்பர்களால் புகை குடிக்கும் பழக்கம் ஏற்படுகிறது (உ.வ.).

*[புகை + குடி-,]*

**புகைகொள்ளல்** *pugaikoḷḷal,* தொ.பெ. (vbl.n.) *புகையிழுத்தல்* பார்க்க; see *pugaiyiḻuttal.*

*[புகை + கொள்ளல். 'அல்' தொ.பெ.ஈறு]*

**புகைச்சகுனம்** *pugai-c-caguṇam,* பெ. (n.) புகையினாற் சகுனம் பார்க்கை; omens read by observing the smoke. (Pond.).

*[புகை + சகுனம்]*

Skt. sakuna > த. சகுனம்

**புகைச்சரக்கு** *pugai-c-carakku,* பெ. (n.) புகைந்து ஆவியாகுந் தன்மையுள்ள இதளியம், வைப்பு நஞ்சு, முதலான பொருள்கள்; drugs that send fumes when put on burning unders.

*[புகை + சரக்கு. சர் → சரகு → சரக்கு]*

**புகைச்சல்** *pugaiccal,* பெ. (n.) **1.** புகை; smoke *'அங்கு மிகவும் புகைச்சலாயிருக்கிறது'* (கொ.வ.) **2.** இருள் (யாழ்.அக.); darkness, obscurity, dullness, gloominess. **3.** பார்வை மழுக்கம்; dimness of sight. *'கண்புகைச்சலாயிருக்கிறது'* (இட.வ.). **4.** வயிற்றில் உண்டாகும் காந்தல் (கொ.வ.); burning sensation in the stomach. **5.** தொண்டை யிலுண்டாம் கரகரப்பு; sore-throat **6.** *புகையிருமல்* (கொ.வ.) பார்க்க; see *pugai-y-irumal* **7.** செய்தி சிறுகச்சிறுக வெளிப்படுகை (கொ.வ.); coming out little by little, getting publicity gradually. **8.** மனவெரிச்சல் (கொ.வ.) ; umbrage, chagrin, heat-burning, ill-will.

**ம.** புகச்சல்

*[புகை → புகைச்சல். 'சல்' தொ.பெ.ஈறு]*

**புகைச்சல்போடு–தல்** *pugaiccal-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) கொசு முதலியவை யொழியத் தீமூட்டிப் புகையூட்டுதல்; to make smoke for driving away mosquitoes.

*[புகை → புகைச்சல் + போடு–,]*

**புகைச்சற்காதி** *pugaiccaṟkādi,* பெ. (n.) எவட்சாரம்; salt petre-nitre.

**புகைசாப்பிடல்** *pugai-šāppiḍal,* தொ.பெ. (vbl.n.) கஞ்சா பிடித்தல்; "kanja" smoking.

*[புகை + சாப்பிடல். சாப்பிடு → சாப்பிடல்]*

**புகைசாப்பிடு–தல்** *pugai-šāppiḍu-,* 22 செ.கு.வி. (v.i.) கஞ்சா பிடித்தல்; to smoke 'kañja'.

*[புகை + சாப்பிடு–,]*



**புகைச்சுருட்டு** *pugai-c-curuṭṭu,* பெ. (n.) புகை குடிப்பதற்கு உதவும் புகையிலைச் சுருள்; cigar, cheroot.

**தெ.** பொகச்சுட்ட
**த.** சுருட்டு →Eng. cheroot

*[புகை + சுருட்டு. சுருள் → சுருட்டு]*

**புகைசுற்று–தல்** *pugai-cuṟṟu-,* 15 செ.கு.வி. (v.i.) **1.** சோறு முதலியன தீய்ந்து கும்பனாற்ற மடித்தல்; to be overcooked or charred and have a smell of smoke, as food. **2.** புகை வெளியேறாமல் தங்கிக் கொள்ளுதல்; accumilation of the smoke அடுப்புப் புகைந்து வீடெல்லாம் புகைசுற்றிக் கொண்டது. (உ.வ)

**மறுவ.** கரிவாடை அடித்தல்

*[புகை + சுற்று–,]*

**புகைசூழ்–தல்** *pugai-šūḻ-,* 3 செ.கு.வி. (v.i.) *புகைசுற்று–தல்* (வின்.)பார்க்க; see *pugaišṟṟu-,*

*[புகை + சூழ்–,]*

**புகைசூழ்வட்டம்** *pugai-šūḻ-vaṭṭam,* பெ. (n.) *புகைவட்டம்* பார்க்க; see *pugai-vaṭṭam.*

*[புகை+ சூழ் + வட்டம். வள் → வட்டு → வட்டம்]*

**புகைஞ்சான்** *pugaiñjāṉ,* பெ. (n.) **1.** பயனற்றது (கொ.வ.); that which is low or useless. **2.** ஆற்றலில்லாதவன் (கொ.வ.); man of inferior ability.

*[புகை → புகைஞ்சான்]*

**புகைத்தல்** *pugaittal,* பெ. (n.) சினத் தாலுண்டாகும் மனவெரிச்சல்; fuming with anger, spite. '*அவர்கள் புகைத்தலிருக்கிறபடி*' (ஈடு, 5, 9, 5)

*[புகை → புகைத்தல். 'தல்' தொ.பெ.ஈறு]*

**புகைத்திராவகம்** *pugai-t-tirāvagam,* பெ. (n.) *புகைநீர்மம்* பார்க்க; see *pugai-nirmam.*

*[புகை + திராவகம்]*

Skt. drāvaka. > **த.** திராவகம்

**புகைதாண்டுவாள்** *pugai-tāṇḍuvāḷ,* பெ. (n.) கொசு; mosquitoe.

*[புகை + தாண்டுவாள்]*

**புகைதள்ளல்** *pugaitaḷḷal,* தொ. பெ. (vbl.n.) **1.** சுருட்டுப் பிடிப்பதை நீக்கிக் கட்டுப் பாடாயிருத்தல் (பத்தியமாயிருத்தல்); prohibition of smoking when mediciene is taken or when on diet. **2.** மிகையாக புகையை வெளியேற்றுதல்; exhausting smoke excess. வண்டி மிகுதியாகப் புகை தற்றுகிறது (உ.வ)

*[புகை + தள்ளல். தள்ளு → தள்ளல். 'அல்' தொ.பெ.ஈறு]*

**புகைந்திருமல்** *pugaindirumal,* பெ. (n.) தொண்டையிலெரிச்சலை யுருவாக்கும் இருமல்; inflammatory cough.

**மறுவ.** கக்குவான்இருமல். தொண்டைப் புகைச்சல்

*[புகை→ புகைந்து + இருமல்]*

**புகைநாள்** *pugai-nāḷ,* பெ. (n.) தீக்கோள் நிற்கும் விண்மீனிற்கடுத்த விண்மீன் (விதான.குணகுண.94); (astrol.) the naksatra next after that with which a malefic planet is in conjunction.

*[புகை + நாள்]*

**புகைநாற்றம்** *pugai-nāṟṟam,* பெ. (n.) கும்பல் வீச்சம்; smell of smoke. '*குழம்பில் புகைநாற்றம் வருகிறது*'

**மறுவ.** கரிவாடை, தீநாற்றம்

*[புகை + நாற்றம். நாறு → நாற்றம்.]*

**புகைநிட்காரணம்** *pugai-niṭkāraṇam,* பெ. (n.) வெடியுப்பு (எவட்சாரம்) (சங்.அக.); saltpetre.

*[புகை + நிட்காரணம்]*

Skt. nis-kāraṇa. > **த.** நிட்காரணம்.

**புகைநிறம்** *pugai-niṟam,* பெ. (n.) புகையை யொத்த நிறம்; smoky colour.

**ம.** புகநிறம்

*[புகை + நிறம்]*

**புகைநிறி** *pugai-niṟi,* பெ. (n.) எவட்சாரம்; nitrate of potash.

**புகைநீர்** *pugai-nir,* பெ. (n.) வடித்திறக்கிய காடிநீர்; acid, any liquid obtained by distillation. எ.கா: வெடியுப்பு நீர்.

*[புகை + நீர்]*

**புகைநீர்மம்** *pugainirmam-,* பெ. (n.) புகையாலுண்டாகும் எண்ணெய்; liquid obtained by cooling the fumes.

*[புகை + நீர்மம். நீர் → நீர்மம்]*

**புகைப்படக்காரர்** *pugai-p-padakkārar* பெ. (n.) நிழற்படம் எடுப்பவர்; *photographer.*

*[புகைப்படம் + காரர்]*

**புகைப்படச்சுருள்** *pugai-p-pada-c-curul,* பெ. (n.) நிழற்படம் எடுப்பதற்குரிய படச்சுருள்; film roll.

*[புகைப்படம் + சுருள். சுரு → சுருள்]*



**புகைப்படப்பெட்டி** *pugai-p-pada-p-petti.* பெ. (n.) நிழற்படம் எடுக்கும் கருவி; camera.

*[புகைப்படம் + பெட்டி]*

**புகைப்படத்தாள்** *pugai-p-padattāl* பெ. (n.) நிழற் படச்சுருளில் பதிவு செய்த காட்சியைப் படியெடுக்கப் பயன்படும் ஒருவகைத் தாள்; paper used for printing the image from the negative.

*[புகைப்படம் + தாள்]*

**புகைப்படம்** *pugai-p-padam,* பெ. (n.) ஒளிப்படம்; photograph, as seemingly smoked.

மறுவ. நிழற்படம்

*[புகை + படம். பட்டு → பட்டம் = பட்டையான துணி. பட்டம் → படம் = துணி, துணியிலெழுதிய ஓவியம். புகைப்படம் = புகைப்போற் காணப்படும் உருவப்படம்]*

புகைப்படம் ஒரு காட்சி அல்லது உருவத் திலிருந்து வரும் ஒளியை ஆடிகள் பொருத்தப் பட்ட ஒரு கருவியின் மூலம் புகைப்படச் சுருளில் பதிவு செய்து வேதியியல் மாற்றங்களுக்கு உள்ளாக்கிப் படியெடுக்கப் படுவது

**புகைப்படலம்** *pugai-p-padalam,* பெ. (n.) புகைத்திரள்; expanse or volume of smoke, vapour, fog, cloud.

*[புகை + படலம்.]*

**புகைப்படை** *pugai-p-padai,* பெ. (n.) படிந்த புகைத்திரள்; soot.

*[புகை + படை]*

**புகைப்பரண்** *pugai-p-paran,* பெ. (n.) புகைபடும்படி பண்டங்களை வைப்பதற்கான பரண் (வின்.); loft over a fireplace to keep things on for being smoked.

*[புகை + பரண். புரம் = உயர்ந்தமனை.புரம் → பரம் = மேல். பரம் → பரண் = உயர்ந்த இருக்கை, அடுப்புக்கு மேலே அமைந்த பரண்]*

**புகைப்பற்று¹** *pugai-p-paṟṟu,* பெ. (n.) *புகையாற்றி* பார்க்க (இ.வ.); see *pugai-y-āṟṟi*

*[புகை + பற்று]*

**புகைப்பற்று²** *pugai-p-paṟṟu,* பெ. (n.) புகைபடிந்த ஒட்டடை; cobweb with smoke deposit.

*[புகை + பற்று]*

**புகைப்பு** *pugaippu,* பெ. (n.) புகைக்கை; smoking, fumigation, smouldering.

**தெ.** பொகபு, பொகுபு; **து.** புகெப்பு

*[புகை→புகைப்பு. 'பு' தொ.பெ.ஈறு]*

**புகைப்புற்று** *pugai-p-puṟṟu,* பெ. (n.) *புகைப்பற்று* பார்க்க; see *pugai-p-paṟṟu.*

*[புகைப்பற்று → புகைப்புற்று]*

**புகைபடாமண்** *pugaipaḍāmaṇ,* பெ. (n.) சுடாதபச்சை மண்பானை; unburnt mud vessel.

*[புகை + படு + ஆ + மண். 'ஆ' எதிர்மறை இடைநிலை]*

**புகைபடு—தல்** *pugai-paḍu-,* 19 செ.கு.வி. (v.i.) *புகைசுற்று—தல்* பார்க்க; see *pugaiśuṟṟu-.*

*[புகை + படு—,]*

**புகைபிடி¹—த்தல்** *pugai-piḍi-,* 4 செ.கு.வி. (v.i.) *புகைசுற்று—தல்* பார்க்க; see *pugai-śuṟṟu-* பொதுவிடங்களில் புகைபிடித்தல் தடை செய்யப்பட்டுள்ளது (உ.வ.)

**ம.** புகபிடிக்க

*[புகை + பிடி]*

**புகைபிடி²—த்தல்** *pugaipiḍi-,* 4 செ.கு.வி (v.i.) புகையால் கரையேறுதல்; to get black due to smoke,as of wall.

**மறுவ.** கரிபிடித்தல்

*[புகை + பிடி—,]*

**புகைபிடி³—த்தல்** *pugai-piḍi-,,* 4 செ.கு.வி. (v.i.) புகை குடித்தல் (இ.வ.); to smoke cigars புகைபிடித்தலால் நன்மை யேதும்இல்லை (உ.வ.).

**க.** ஹொகெ சேது; **து.** புகெஒய்புனி,

புகெபுட்புனி

*[புகை + பிடி—,]*

**புகைபிடி⁴—த்தல்** *pugai-piḍi-,* 4 செ.கு.வி. (v.i.) நச்சுத் தன்மையினைப் போக்க, மருந்துப் புகையின் முன்னின்று வேவு பிடித்தல்; to exposure to the fumes of disinfection.

*[புகை + பிடி—,]*

**புகைபோக்கி** *pugai-pōkki,* பெ. (n.) **1.** வீடு, தொழிற்சாலை போன்றவற்றிலிருந்து புகை போகுங் கூடு; chimney. **2.** ஊர்திகளில் புகை வெளியேறுவதற்கு அமைக்கப்பட்ட குழாய் போன்ற அமைப்பு; exhaust pipe, in vehicle.

**ம.** புகப்பழுது

*[புகை + போக்கி. போக்கு→போக்கி. 'இ' வினைமுதலீறு]*



**புகைபோக்குவாய்** *pugai-pōkkuvāy,* பெ. (n.) *புகைப்போக்கி* பார்க்க; see *pugai-p-pōkki.*

மறுவ. புகைக்கூண்டு

*[புகைபோக்கு + வாய்]*

**புகைபோடல்** *pugai-pōḍal,* தொ. பெ. (vbl.n.) நறும்புகை காட்டித் தூய்மைப் படுத்தல்; disinfecting through fumes and smoke.

*[புகை + போடல். போடு → போடல். 'தல்' தொழிற்பெயரீறு.]*

**புகைபோடு—தல்** *pugai-pōḍu-,* 19செ. குன்றாவி. (v.t.)- 20 செ.கு.வி. (v.i.) 1. புகை எழுப்புதல்; to create smoke. கொசுவை விரட்ட வேப்பிலை புகைபோடு (உ.வ.) 2. சுறாலைப்புகை போடுதல்; to burn incense. 3. காயைப் பழுக்கவைக்க வைக்கோல் முதலியவற்றை எரித்துப் புகை யெழுப்புதல்; to smoke hay stock etc. for fruits to quicken the process of ripening. இந்தப்பழம் தானாகப் பழுத்ததா? இல்லை புகை போட்டுப் பழுக்க வைத்ததா?

க., பட. கொகெ காகு; து. பகெஒய்புனி

*[புகை + போடு–,]*

**புகைமடக்கி** *pugai-maḍakki,* பெ. (n.) வெண்காரம் (யாழ்.அக.); borax.

*[ புகை + மடக்கி ]*

**புகைமண்டலம்** *pugai-manḍalam,* பெ. (n.) புகைப்படலம் பார்க்க; see pugai-p-paḍalam

*[ புகை + மண்டலம். முண்டு → மண்டு. மண்டுதல் = வளைதல். மண்டு → மண்டலம் = வட்டம், வட்டவடிவம், வட்டமாய்ச் சுற்றி வருகை, வட்டமாக அல்லது சூழ்ந்து காணப்படும் புகை, புகை மண்டலம் ]*

**புகைமணம்** *pugai-maṇam,* பெ. (n.) புகை நாற்றம் பார்க்க; see pugai-nāṟṟam.

*[ புகை + மணம். முள் → மள் → மண → மணம். மணத்தல் = வாசனை வீசுதல். புகையின் மணத்தை வீசுவது புகை மணம் ]*

**புகைமாய்ச்சல்** *pugai-māyccal,* பெ. (n.) கண்ணோய் வகையுளொன்று; a kind of eye disease.

*[ புகை + மாய்ச்சல். மாய் → மாய்ச்சல். 'சல்' தொ.பெ.ஈறு ]*

**புகைமூட்டம்** *pugai-mūṭṭam,* பெ. (n.) 1. கொசு போன்ற சிற்றுயிரிகளை விரட்டுவதற்குப் போடும் புகைத் திரள்; emiternce of smoke to drive insects as mosquitoes. நகராட்சியினர் நேற்று புகை மூட்டம் போட்டனர் 2. காயைப்பழுக்க வைக்க எழுப்பும் புகை; emiternce of smoke to ripen the unriped fruits. புகை மூட்டத்தால் பழுக்க வைத்த பழம் விரைவில் அழுகிவிடும். (உ.வ.)

*[ புகை + மூட்டம். மூடு → மூட்டம் ]*



**புகைமூட்டம்போடு—தல்** *pugai-mūṭṭam, pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) **1.** சில பொருட்களைக் கெடாமல் வைப்பதற்குப் புகை எழுப்புதல்; to produce smoke to keep things unspoiled, to fumigate. **2.** வாழைக்காய் முதலியவற்றைப் பழுக்கச் செய்ய புகைபோடுதல்; *to expose fruits to smoke to make them ripen quick.*

**து.** புகைகொர்புனி

*[ புகைமூட்டம் + போடு—, ]*

**புகையடி—த்தல்** *pugai-y-aḍi-,* 4 செ.கு.வி. (v.i.) சோறு புகை சூழ்ந்து நாறுதல்; to smell smoke as badly boiled rice. 'சோறு புகையடிக்கிறது'.

*[ புகை + அடி—, ]*

**புகையடுப்பு** *pugai-y-aḍuppu,* பெ. (n.) மெழுகு எண்ணெய் (தைலம்) எரிக்கப் பயன்படுத்தும் அடுப்பு வகை; a variety of oven.

*[ புகை + அடுப்பு. அடு → அடுப்பு. 'பு' தொ.பெ.ஈறு ]*

**புகையாவி** *pugaiyāvi,* பெ. (n.) *புகை²* பார்க்க; see *pugai².*

*[ புகை + ஆவி ]*

**புகையாற்றி** *pugai-y-āṟṟi,* பெ. (n.) புகையேறிய நூலாம்படை (யாழ்.அக.); flake of smoke, soot.

**ம.** புகயற

*[ புகை + ஆற்றி ]*

**புகையிருமல்** *pugai-y-irumal,* பெ. (n.) வெப்பத்தினால் புகைந்து இருமச் செய்யும் நோய்; inflammation of the pharynx, dry cough.

**மறுவ.** தொண்டை புகைச்சல், கக்குவான் இருமல்.

*[ புகை + இருமல். இருமு → இருமல். 'அல்' தொ.பெ.ஈறு ]*

**புகையிலை** *pugai-y-ilai,* பெ. (n.) புகைத்தல், மெல்லுதல், மூக்குப்பொடியாகப் பயன் படுத்துதல் ஆகியவற்றிற்குப் பயன்படுத்தும் கசப்போடு கூடிய காரச்சுவை கொண்ட ஒருவகை இலை, அவ்விலை தரும் செடி (பதார்த்த.560.); tobacco.

**மறுவ.** பித்தகோரி

**ம.** பொகயில; **தெ.** பொகாகு; **து.** புகெர், புகிர், புக்கிர்; **க., பட.** ஹொகெசொப்பு;

*[ புகை + இலை ]*

**புகையிலைக்கட்டையுருட்டல்** *pugai-y-ilai-k-kaṭṭai-y-uruṭṭal,* பெ. (n.) ஒருவகைக் கண்ணாம் பொத்தி விளையாட்டு; a kind of hide-and-seek game.

*[ புகையிலை + கட்டை + உருட்டல் ]*

இது ஒருவாறு கண்ணாம்பொத்தி போன்றதே. ஆயின் இதற்கு ஒரு வட்டம் போடப்படும்; அதோடு முந்தித்தொடுவது யார் என்று தீர்மானித்தற்கு, எல்லாரையும் வரிசையாய்க் குனிய வைத்து, அவர்கள், நிழலில் புகையிலைக் கட்டையை ஒருவர் உருட்டுவார். அது யார் நிழலில்போய் நிற்கின்றதோ அவர் ஏனையோரைக் தொடுதல் வேண்டும். (த.வி.120)

**புகையிலைக்கட்டையெடுத்தல்** *pugai-y-ilai-k-kaṭṭai-y-eḍuttal* பெ. (n.) ஒளிந்து விளையாடும் விளையாட்டு; a kind of hide and seek game.

*[புகையிலை + கட்டை + எடுத்தல்]*

ஆடுவாரெல்லாம் உத்திகட்டி இரு கட்சியாகப் பிரிந்து கொண்டபின், ஒரு கட்சியார் ஓடி ஒளிந்து கொள்வர். இன்னொரு கட்சியார், கடைகட்குச் சென்று புகையிலைக் கட்டை. (அல்லது வெற்றிலைக் காம்பு) எடுத்து வந்து, ஒளிந்தவரைத் தேடிப்பிடிப்பர், யாரையேனும் கண்டுபிடித்தபோது, கடைக்குச் சென்று வந்தமைக்கு அடையாளமாகப் புகையிலைக் கட்டையைக் காட்டல் வேண்டும், கண்டு பிடிக்கப்பட்டவர் முன்பு எல்லாரும் நின்ற இடத்திற்கு வந்துவிடுவர். எல்லாருங் கண்டுபிடிக்கப்பட்டபின் வினைமாறி விளையாடுவர். (த.வி.121)

**புகையிலைக்கரி** *pugaiyilai-k-kari,* பெ. (n.) எரிந்து தீய்ந்த புகையிலைச் சாம்பல்; ash of burnt tobacco.

*[புகையிலை +கரி]*

**புகையிலைகறள்** *pugai-y-ilai-k-kaṟaḷ,* பெ. (n.) 1. புகை குடித்தலால் வயிற்றிலுறைந்து இருமச் செய்யும் புகைப்படலம்; soot of the tobacco, concreting in the stomach and inducing cough 2. புகைச் சுருட்டுக் குடியால் பல் கறுப்படைகை; blackening of the teeth by tobacco smoke.

*[ புகை + இலை + கறள்.கறு → கறை = கருநிறம். கறு → கறள் = கறை ]*

**புகையிலைகட்டு—தல்** *pugai-y-ilai-kaṭṭu-,* 15 செ.கு.வி. (v.i.) 1. புகையிலைச் சரக்குக் கட்டுதல்; to make up packs of tobacco 2. புகையிலையைப் பாடஞ்செய்தல்; to lay up tobacco.

*[ புகையிலை + கட்டு—, ]*

**புகையிலைகுடி—த்தல்** *pukai-y-ilai-kuḍi-,* 4 செ.கு.வி. (v.i.) புகையிலைப் புகையை உட்கொள்ளுதல் (வின்.); to smoke tobacco.

*[ புகையிலை + குடி—, ]*

**புகையிலைச்சாறு** *pugai-y-ilai-c-cāṟu* பெ. (n.) புகையிலையைப் பிழியும்போது வரும் நீர்மம்; the juice of tobacco leaves.

*[ புகையிலை + சாறு ]*

வீக்கம், முடக்குவூதை (வாதம்) போன்ற நோய்களுக்கு மருந்தாகத் தேய்க்கப்படுகிறது. உடம்பில் ஒட்டிக் கொள்ளும் அட்டையின் மேல் புகையிலைச் சாற்றைப் பிழிந்தால் அது விட்டு நீங்கும்.

**புகையிலைச்சிப்பம்** *pugai-y-ilai-c-cippam,* பெ. (n.) புகையிலைக் கட்டு (வின்.); pack of tobacco.

*[ புகையிலை + சிப்பம் ]*

**புகையிலைச்சுருட்டு** *pugai-y-ilai-c-curuṭṭu,* பெ. (n.) புகைச்சுருட்டு பார்க்க; pugai-c-curuṭṭu.

*[ புகையிலை + சுருட்டு. சுள் → (சுரு) → சுருள் = சுருண்ட பொருள். சுருள் → சுருட்டு = சுருட்டப்பட்டது ]*

**புகையிலைச்சுருள்** *pugai-y-ilai-c-curuḷ,* பெ. (n.) காய்ந்தபுகையிலைச் சுருள்; dried tobacco leaf.

*[ புகையிலை + சுருள் ]*

**புகையிலைச்சுற்று** *pugai-y-ilai-c-cuṟṟu,* பெ. (n.) *புகைச்சுருட்டு* (வின்.) பார்க்க; see *pugai-c-curuṭṭu.*

*[ புகையிலை + சுற்று. சுல் → சுற்று = சுற்றப்பட்டது ]*

**புகையிலைச்செடி** *pugai-y-ilai-c-ceḍi,* பெ. (n.) புகைச்சுருட்டுக்குப் பயன்படுத்தும் இலைதரும் செடி; tobacco plant.

க. கொகெசொப்பின கிட; தெ. பொகசெட்டு, பொகாகுசெட்டு

*[ புகையிலை + செடி ]*



**புகையிலைத்தட்டு** *pugai-y-ilai-t-taṭṭu,* பெ. (n.) புகையிலையைப் போன்ற இலையை யுடைய ஒருவகைச் செடி; a plant in Kodaikkanal, its leaves resembling tobacco leaves.

*[ புகையிலை + தட்டு. துட்டு → தட்டு ]*

**புகையிலைத்தூள்** *pugai-y-ilai-t-tūḷ,* பெ. (n.) மூக்குத்தூள்; snuff. "*நாசிக் கழகு புகையிலைத் தூள்*" (குனிப்பா).

மறுவ. மூக்குப்பொடி.

*[ புகையிலை + தூள் ]*

**புகையிலைபோடு—தல்** *pugai-y-ilai-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) வெற்றிலையோடு புகையிலையை மெல்லுதல் (கொ.வ.); to chew tobacco with betel-leaf புகையிலை போடுதல் வாய்ப்புற்றை உருவாக்கும் (உ.வ.).

*[ புகையிலை + போடு-, சிலர்வெறும் புகையிலையை மெல்லுவர் ]*

**புகையிலைவிடுதூது** *pugai-y-ilai-viḍudūdu,* பெ. (n.) தூதுவகையைச் சேர்ந்த ஒரு சிற்றிலக்கிய வகை; 'tūdu' literature.

*[ புகையிலை + விடு + தூது ]*

***18ஆம் நூற்றாண்டின் இறுதியிலும் 19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் வாழ்ந்த சீனிச் சக்கரைப் புலவர் என்பவரால் இயற்றப்பட்டதும் பழனி முருகவேளைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டதுமான ஒரு சிற்றிலக்கியம்.***

**புகையிழு–த்தல்** *pugai-y-iḻu-,* 4 செ.கு.வி. (v.i.) மருந்துப் புகையினை உள்ளிழுத்தல்; to inhale medicated fumes.

*[புகை + இழு–,]*

**புகையின்வட்டம்** *pugai-y-iṉ-vaṭṭam,* பெ. (n.) *புகைவட்டம்* (திவா.) பார்க்க; see *pugai-vaṭṭam.*

*[ புகை + இன் + வட்டம். முள் → வள் → வட்டு → வட்டம் = சுற்று, ஒரு கோள் வான மண்டலத்தை ஒருமுறை சுற்றி வருங்காலம் ]*

**புகையுட்கொள்(ளு)–தல்** *pugaiyuṭkoḷ(ḷu)-,* 12 செ.கு.வி. (v.i.) 1. *புகையிழு–த்தல்* பார்க்க; see *pugaiyiḻu-,* 2. *புகையுண்(ணு)–தல்* பார்க்க; see *pugaiyuṇ(ṇu)-,*

*[ புகை + உட்கொள்–, 'கொள்' து.வி ]*

**புகையுண்(ணு)[1]–தல்** *pugai-y-uṇ(ṇu)-,* 12 செ.கு.வி. (v.i.) சுருட்டுப் பிடித்தல்; to smoke.

*[ புகை + உண்–, ]*

**புகையுண்(ணு)[2]–தல்** *pugai-y-uṇ (ṇu) -,* 12 செ.கு.வி. (v.i.) புகைபட்டுப் படத்தின் உருக்கெடுதல்; to be discoloured by smoke. "ஓவியம் புகையுண்டதே யொக்கின்ற வுருவாள்" (கம்பரா.காட்சி.11).

*[ புகை + உண்–, ]*

**புகையுயிர்–த்தல்** *pugai-y-uyir-,* 4 செ.கு.வி. (v.i.) கொதிப்படைதல்; to be hot with passion, to be agitated. 'செங்கண் சிவந்து நெஞ்சு புகையுயிர்த்து' (மணிமே. 8, 58).

*[ புகை + உயிர்–, ]*

**புகையுறுப்பு** *pugai-y-uṟuppu-,* பெ. (n.) நேர்கட்டி, செந்தேன், நிரியாசம், பச்சிலை, சந்தனம், அகில் என்ற அறுவகைச் சுறாலை (தூப) வகை (சிலப். 5, 14 உரை); incense, things that emit fragrance when smoked, numbering six viz., nērkaṭṭi, sendēṉ, niriyāsam, paccilai, sandaṉam, agil.

*[ புகை + உறுப்பு. புகைக்கும்போது நறுமணம் தரும் பொருள்கள் ]*

**புகையுறை** *pugai-y-uṟai,* பெ. (n.) *புகையாற்றி* (யாழ். அக.) பார்க்க; see *pugai-y-āṟṟi.*

*[ புகை + உறை. உறு → உறை ]*

**புகையூட்டல்** *pugai-y-ūṭṭal,* தொ.பெ. (vbl.n.) 1. *புகையூட்டு–தல்* பார்க்க; see *pugai-y-ūṭṭu-,* 2. காய்கள் விரைவில் பழுப்பதற்குப் புகை காட்டல்; applying smoke to make fruits to ripen quickly 3. மருந்துத்திரியின் புகையைக் காயத்திற்குள் செலுத்துதல்; fumigation.

*[ புகை + ஊட்டல் ]*

**புகையூட்டு–தல்** *pugai-y-ūṭṭu-,* 5 செ. குன்றாவி. (v.t.) 1. கூந்தல் முதலியற்றுக்கு நறுமணப் புகையூட்டுதல்; to perfume the hair with incense. 2. நோவுற்ற உடற்பகுதியில் மருந்துப் புகையேற்றி மருத்துவம் செய்தல் (வின்); to tincture, or medicate with smoke.

*[ புகை + ஊட்டு. உண் (கு.வி) – ஊட்டு (பி.வி.) ]*

**புகையூட்டுகை** *pugai-y-ūṭṭugai,* பெ. (n.) தூய்மையாக்குதற்காகக் கீழிருந்து புகை யேற்றுகை; the act of fumigation, suffmigation

*[ புகை + ஊட்டுகை ]*

**புகையூதல்** *pugai-y-ūdal,* தொ. பெ. (vbl.n.) 1. *புகையூட்டல்* பார்க்க, see *pugaiyūṭṭal* 2. புண்புரைகட்கு மருந்துப்புகை காட்டல்; exposure of ulcers and wounds to medicinal vapour to make them heal quickly.

*[புகை + ஊதல். ஊது → ஊதல். 'தல்' தொ.பெ.ஈறு]*

**புகையூது-தல்** *pugai-y-ūdu-,* 9 செ.கு.வி (v.i.) 1. காய்களைப் புகையினாற் பழுக்கச் செய்தல் (இ.வ.); to quicken the ripening of fruits by fumigation. 2. பளபளப்பேற்றுதல், பொன்பூசுதல் (முலாம் பூசுதல்) (வின்.); to gild, to line with gold.

மறுவ. புகைமூட்டம் போடுதல்

*[புகை + ஊது-,]*

**புகையூபம்** *pugaiyūbam,* பெ. (n.) தோணிமரம்; wood for preparing boats.

*[புகை + யூபம்]*

Skt. yūpa > த. யூபம்

**புகையூரல்** *pugai-y-ūral,* பெ. (n.) *புகைப்படை* (வின்.) பார்க்க; see *pugai-p-paḍai.*

*[புகை + ஊரல். ஊறல் → ஊரல். 'அல்' தொ.பெ.ஈறு]*

**புகையேற்றல்** *pugai-y-ēṟṟal,* பெ. (n.) *புகையூட்டல்* பார்க்க; see *pugai-y-ūṭṭal.*

*[புகை + ஏற்றல். ஏறு → ஏற்று → ஏற்றல். 'அல்' தொ.பெ.ஈறு]*

**புகையோடு** *pugai-y-ōḍu* பெ. (n.) புகைவெளியேறுவதற்கு அமைக்கப்பட்ட ஓடு; a special tile with an outlet to allow smoke to go out.

மறுவ. புகைபோக்கு

து. புகெஒடு

*[புகை + ஓடு]*



**புகைரதம்** *pugai-radam,* பெ. (n.) புகைவண்டி; railway train.

*[புகை + ரதம்.]*

Skt. rata → *த.ரதம்*

**புகைவட்டம்** *pugai-vaṭṭam,* பெ. (n.) எழுநிரயத்தொன்று (சூடா.); a hell, one of ēḻu naragam, q.v.

*[புகை + வட்டம்]*

**புகைவண்டி** *pugai-vaṇḍi,* பெ. (n.) இருப்புப் பாதையில் ஓடும் வண்டி ; railway train. (இ.வ.).

ம. புகவண்டி க. கொகெபண்டி; து. புகெதகாடி

*[புகை + வண்டி. வள் → வண்டு = வளையல், வட்டமான பூச்சி. வண்டு → வண்டி = சக்கரம், சக்கரத்தையுடைய யூர்த்தி. புகைவண்டி = புகையெழுப்பிக் கொண்டு ஓடும் வண்டி. முன்னர் நீராவிப் புகை எழுப்பி இயங்கியதால் புகை வண்டி எனக் கலைச் சொல்லாக்கம் செய்யப்பட்டது. இப்பொழுது நீராவி இல்லாமல் மின்சாரம் ஆகியவற்றால் இவ்வகை வண்டி ஓடுகிறது. அதனால், இப்பொழுது தொடர்வண்டி என்பன போன்று வேறு வகையில் கலைச்சொல்லாக்கம் செய்யப் பட்டு வருகின்றது.]*



**புகைவண்டிநிலையம்** *pugai-vaṇdinilayam,* பெ. (n.) இருப்பூர்தி நிலையம்; railway station.

**ம.** புகவண்டித்தானம்

*[புகைவண்டி + நிலையம். 'அம்' பெருமைப் பொருள் பின்னொட்டு]*

**புகைவண்டு** *pugai vaṇḍu,* பெ. (n.) வண்டு வகை; a kind of beetle.

*[புகை + வண்டு]*

இவ்வகைப் பூச்சி தன் உடலின் நுனியில் காற்றுபட்டால் புகை எழும்பக்கூடிய நீர்மத்தைச் சுரக்கும் தன்மையது. பகையுயிரிகளிலிருந்து காக்க இந் நீர்மத்தைச் சுரந்து புகை யுண்டாக்கி அப்புகையின், மறைவில் ஓடி மறைந்து விடுகிறது.

**புகைவரி** *pugai-vari,* பெ. (n.) வீட்டு வரி வகை; house tax.

*[புகை + வரி]*

**புகைவாங்கல்** *pugai-vāṅgal,* பெ. (n.) மருந்துப்புகையை மூக்கினால் உள்ளிழுத்தல்; inhalation of medicinal fumes.

*[புகை + வாங்கல். வங்கு → வாங்கு → வாங்கல். 'அல்' தொ.பெ.ஈ.று]*

**புகைவாய்** *pugai-vāy,* பெ. (n.) எரிமலைக் குவட்டில் ஆவி வெளிப்படும் புழைவாய்; smoke-hole of valcanoes.

*[புகை + வாய்]*

**புகைவு**[1] *pugaivu,* பெ. (n.) **1.** புகைச்சல் (யாழ்.அக.); smoking. **2.** மனவெரிச்சல்; heart-burning **3.** வறட்டிருமல் ; dry-cough.

**மறுவ.** நெஞ்சுகரித்தல்

*[புகை → புகைவு. 'வு' தொ.பெ.ஈறு]*

**புகைவு**[2] *pugaivu,* பெ. (n.) தொண்டையி லேற்படும் அழற்சி; irritation of the throat.

*[புகை → புகைவு]*

**புகைவூட்டுகை** *puga-v-ūṭṭugai,* பெ. (n.) புகையூட்டுகை பார்க்க; see *pugai-y-uṭṭugai.*

*[புகை → புகைவு + ஊட்டுகை. ஊட்டு → ஊட்டுகை. 'கை' தொ.பெ.ஈறு.]*

**புங்கங்காய்** *pungaṅkāy,* பெ. (n.) *புங்கங்கொட்டை* பார்க்க ; see *pungaṅkoṭṭai.*

*[புங்கம் + அம் + காய்]*

**புங்கங்கொட்டை** *pungaṅkoṭṭai,* பெ. (n.) புங்க மரத்தின்கொட்டை; soapnut.

*[புங்கம் + கொட்டை]*

**புங்கம்[1]** *pungam,* பெ. (n.) *புங்கமரம்* பார்க்க; *see punga-maram.*

**புங்கம்[2]** *pungam,* பெ. (n.) 1. அம்பு; arrow. 'புங்கப்படை (தக்கயாகப். 82). 2. அம்பின் அடிப்பாகம் (பிங்.); shaft or feathered part of an arrow. புங்கவாளியொன்றினால் (தக்க யாகப். 617)

*[புல் → புன் → புன்கு → புங்கு → புங்கம்.]*

த. புங்கம் > Skt. piṅkha

**புங்கம்[3]** *pungam,* பெ. (n.) தூய்மை; purity, 'புங்கமுறு மம்புயத்தை' (சரபே. குற. 11.4)

*[புல் → பல் → பால் = வெண்மை. (மு.தா. 146) புல் → பல் → (பன்) பன்னல் = பருத்தி (மு.தா. 147) புல் → (புன்) → புங்கம்]*

**புங்கம்[4]** *pungam,* பெ. (n.) குவியல் (யாழ். அக.); heap. collection.

*[புல் → புள் → பிள் → பிழம்பு = திரட்சி. புல் → புங்கு → புங்கம்]*

**புங்கம்[5]** *pungam,* பெ. (n.) புன்கு (கொ.வ.) பார்க்க; see *puṉgu.*

ம. புங்ங்; க. கொங்கெ.

*[புன்கு → புங்கு → புங்கம்]*

**புங்கம்பால்** *pungampāl,* பெ. (n.) நீர்ப்புங்க மரத்தின் பட்டை, வேர் முதலானவற்றினின்று எடுக்கும் பால்; milky juice extracted from the bark and root of pongania glabra.

*[புங்கம் + பால். புல் → பல் → பால்]*

**புங்கமரம்** *punga maram,* பெ. (n.) சிறிய வெள்ளை நிறப் பூக்களையும் அவரைவிதை வடிவிலான காய்களையும் கொண்ட ஒருவகை மரம்; Indian beech.

*[புங்கம் + மரம்]*

**புங்கர்க்காழகம்** *pungar-k-kaḻāgam,* பெ. (n.) மெல்லிய ஆடை வகை (சிலப்.14,108. உரை); a fine cloth.

*[புங்கம்+ காழகம்]*

**புங்கலகம்** *pungalagam,* பெ. (n.) தணக்கு மரம்; a kind of tree.

**புங்கலன்** *pungalaṉ,* பெ. (n.) ஆதன்; soul.

**புங்கவம்[1]** *pungavam* பெ. (n.) 1. ஆனேறு, விடையெருது(உரி.நி); bull. 2.சிவன் ஊர்தி (நந்தி) (பிங்.); nandi, Siva's bull. "புங்கவ மூர்வோனும்" (பரிபா. 8,2) 3. சிறந்தது (இலக். அக.); that which is excellent.

*[புங்கம் → புங்கவம்]*

**புங்கவம்**[2] *puṅgavam* பெ. (n.) *புங்கம்*[2] *1* பார்க்க; see *puṅgam*[2] *1* "சூர்விடும் புங்கவங் களை" (கந்தபு. சூர. வதை).

**புங்கவன்**[1] *puṅgavaṉ,* பெ. (n.) **1.** சிறந்தோன்; eminent person, chief. "அமரர் புங்கவன் புந்தியி னோர்ந்தான்" (காசிக. துருவ. தவ.1). **2.** குரு (பிங்.); priest, preceptor. **3.** தேவன் (பிங்.); god, **4.** புத்தன் (திவா.); Buddha. **5.** அருகன் (திவா.); Arhat. **6.** செய்நஞ்சு வகை (யாழ்.அக.); a kind of arsenic.

*[புங்கம் → புங்கவம்]*

**புங்கவன்**[2] *puṅgavaṉ,* பெ. (n.) கந்தக நஞ்சு; natural arsenic being one of the 32 kinds.

**புங்கவி** *pungavi* பெ. (n.) **1.** தெய்வப்பெண் (சங்.அக.); goddess. **2.** மலைமகள் (பார்வதி); Pārvadi. 'எழிற்புங்கா' (தாயு. மலைவளர். 5).

*[புங்கவன் (ஆ.பா.) – புங்கவி (பெ.பா.)]*

**புங்கவிருகம்** *puṅga-virugam,* பெ. (n.) கத்தூரிமான் (யாழ்.அக.); musk deer.

*[புங்க(ம்) + விருகம். புன்கு → புங்கு → புங்க]*

Skt. mrga > **த.** விருகம்

**புங்கவெண்ணெய்** *puṅga-v-eṇṇey* பெ. (n.) *புங்கெண்ணெய்* பார்க்க; see *puṅkeṇṇey.*

*[புங்க(ம்) + எண்ணெய்]*

**புங்கன்** *puṅgaṉ,* பெ. (n.) மூடன் (இ.வ.); fool.

**ம.** புங்கன்

**புங்கன்கொட்டை** *puṅgaṉ-koṭṭai,* பெ. (n.) பூவந்திக் கொட்டை; soapnut.

**மறுவ.** புங்காங்கொட்டை, பூந்திக் கொட்டை

*[புங்கன் + கொட்டை]*

**புங்கனூர்மாடு** *puṅgaṉūr-māḍu,* பெ. (n.) வடார்க்காடு மாவட்டம் புங்கனூரிலுள்ள ஒருவகைச் சிறுசாதி மாடு (கொ.வ.); a excellent breed of Mysore cattle, raised in Puṅgaṉūr in North Arcot.

*[புங்கனூர் + மாடு]*

**புங்காங்கொட்டை** *puṅgāṅ-koṭṭai,* பெ. (n.) பூவந்தி; soapnut.

**மறுவ.** பூந்திக்கொட்டை

*[புன்கு → புங்கு + ஆம் + கொட்டை]*

**புங்காட்டி** *puṅgāṭṭi,* பெ. (n.) மான்மணத்தி; bezoar.

**புங்காரம்** *puṅgāram,* பெ. (n.) மத்தள (மிருதங்க)த்தின் வலக்கைப் பக்கம் (இ.வ.); the right side of a drum.

**புங்கி** *puṅgi,* பெ. (n.) முட்காவேளை (தைலவ. தைல. 76.); a plant.

**புங்கு**[1] *puṅgu,* பெ. (n.) *புன்கு* பார்க்க; see *puṉgu.*

**ம.** புங்நு; **க.** கொங்கெ.

*[புன்கு → புங்கு]*

**புங்கு²** *pungu,* பெ. (n.) முருக்கு; bastard kino.

**புங்கெண்ணெய்** *punkenney,* பெ. (n.) புங்கமரத்தின் வேர், பட்டை முதலான வற்றுடன் மருந்துச் சரக்குகள் கூட்டிக் காய்ச்சிய எண்ணெய் (தைலம்); medicinal oil extracted from the root of pongamila glabra.

*[புங்கு + எண்ணெய். எள் + நெய் – எண்ணெய்]*

**புங்கைமரம்** *pungai-maram,* பெ. (n.) புன்கு (இ.வ.) பார்க்க; see *pungu.*

*[புங்கு → புங்கை + மரம்]*

**புச்சத்தலம்** *pucca-t-talam,* பெ. (n.). புட்டம் (குதம்)(பிங்.); *anus, posteriors.* "புச்சத் தலத்திடை நிற்ப தபானன்"

*[புச்சம் + தலம். புள் → புட்டி → புட்டம் = மாந்தன் உடம்பின் பின்பக்கம். புட்டம் → புத்தம் → புச்சம்]*

Skt. stala › த. தலம்

**புச்சபீதலம்** *puccapitalam,* பெ. (n.). உடலின் பின்பக்கம் (யாழ்.அக.); back.

*[புட்டம் → புத்தம் → புச்சம் + பீ + தலம்]*

**புச்சம்¹** *puccam,* பெ. (n.) **1.** பிட்டம், குண்டி; hinder part. **2.** வால்; tail. **3.** வால்மீன் (பிங்.); comet. **4.**பின்புறந்தொங்கும் ஆடைக் கொடுக்கு; fold of a man's cloth, partly left hanging behind. புச்சந் தோன்றாதபடி உள்முடியாக முடிந்து" (ஈடு, 5, 1, 6). **5.** நேரம் (திதி4), விண்மீன் முதலியவற்றின் முதல் நாள் சென்றது போக எஞ்சிய குறை; remainder or unexpired portion of a titi or a naksatra. **6.** மயிற்றோகை (யாழ்.அக.); peacock feather. **7.** தேட்கொடுக்கு; scorpion's sting. "புச்சமுறிந்த கருந்தேள் போல" (பிரபோத. 30, 26). **8.** தேள் (யாழ்.அக.)scorpion.

*[புள் → புட்டி = உட்டுளையுள்ளது, ஒரு வகைக் கலம், சிறுபடி, குடுவை, குப்பி. புட்டி → புட்டில் = அம்பறாத் தூணி புட்டி = குடுவை போன்ற பறவையுடம் பின் பிற்பகுதி. புட்டி → புட்டம் = குடுவை போற் புடைத்த மாந்தன் உடம்பின் பின்பக்கம். (வேக. 2,38) புட்டம் → (புத்தம்) → புச்சம் = பிட்டம், விலங்கு, பறவை ஆகியவற்றின் பிட்டப் பகுதியில் இருக்கும் வால், வால்போல் நீண்டு காணப்படும் விண்மீன், பின்புறத்தில் தொங்கவிடும் ஆடை, ஒன்றின் (முன்பகுதி) கழிந்தது போக எஞ்சி நிற்கும் பின்பகுதி, வால் போல் நீண்டிருக்கும் மயிற்றோகை, வால் போல் வளைந்து காணப்படும் தேட் கொடுக்கு, அக் கொடுக்கையுடைய உயிரி.]*

**புச்சம்²** *puccam,* பெ. (n.) முள்ளந்தண்டின் கீழ்ப்பகுதியிற் காணப்படும் புச்சவெலும்பு; cuckoo's beak shaped bone.

**புச்சவூதை¹** *puccavūdai,* பெ. (n.) கை கால் முட்டிகள் மடக்கவியலாது, மிகுவலியை யுண்டாக்கும் ஊதை நோய் வகை; a painful disease affecting generally the small joints and often accompanied by concretions at the joints.

மறுவ. முடக்கு வாதம்

*[புச்சம் + ஊதை]*

**புச்சவூதைநோய்** *pucca-v-ūdai-nōy,* பெ. (n.) முள்ளந்தண்டின் அடிப்பாகத்தி லேற்படும் வலி; a disease of the coccyx.

*[புச்ச + நோய்]*

**புச்சவெலும்பு** *pucca-v-elumbu,* பெ. (n.) முள்ளந்தண்டின் கீழ்ப்பகுதியில், முக்கோண வடிவிலமைந்த தொங்கும் எலும்பு; cuckoo's beak shaped bone.

*[புச்சம் + எலும்பு]*

**புச்சவெலும்புவலி** *pucca-v-elumbu-vali,* பெ. (n.) இடுப்பெலும்பின் இணைப் பிலுண்டாகும் வலி; pain in the coccyx and the neighbouring region due to rheumatism.

*[புச்சவெலும்பு + வலி]*

**புச்சி**[1] *pucci,* பெ. (n.) எருக்கு (சங்.அக.); madar.

*[புல் → புன் → புழு = துளைத்தரிக்கும் சிற்றுயிரி. புல் → புன் → (புன்சி) → புச்சி = முள்ளுள்ள காயைக் கொண்ட செடி]*

**புச்சி**[2] *pucci,* பெ. (n.) கோழி; fowl.

**புச்சிகம்** *puccigam,* பெ. (n.) சித்தாமல்லிச் செடி; a plant.

**புசங்கம்** *pušaṅgam,* பெ. (n.) வங்கமலை; mountain containing lead ore.

**புசபத்திரி** *pušapattiri,* பெ. (n.) சாதிப்பத்திரி; mace.

**புசல்**[1] *pušal,* பெ. (n.) பெருங்காற்று; storm. whirlwind, cyclone.

*[புயல் → புசல்]*

**புசல்**[2] *pušal,* பெ. (n.) குச்சு மட்டை (வின்.); plastering brush.

**புசலடித்துப்போ—தல்** *pušal-aḍittu-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) சூறை நோயாற் பயிர் கெடுதல் (இ.வ.); to become wind swept and devoid of crop, as a corn, field.

*[புயல் → புசல் + அடித்து + போ—,]*

**புசற்காற்று** *pušaṟ-kāṟṟu,* பெ. (n.) பெருங்காற்று; storm-wind.

**மறுவ.** சூறாவளி

*[புயற்காற்று → புசற்காற்று.]*

**புசி—த்தல்** *puši,* 4 செ.குன்றாவி. (v.t.) **1.** உட்கொள்ளுதல்; to eat, feed on. "நின்மாலியந் தீர்த்தம் புசியாதிருந்துமிலோம்." (சிவரக. தேவர்முறை. 12). **2.** வினைப்பயன் முதலியன கொண்டொழுகுதல் (அனுபவித்தல்); to experience, as the fruits of past actions.

*[ புள் → புழு → புழு → புகா = சோறு. புகா → புகவு = உணவு. புள் → புசி → பொசி. பொசித்தல் = உண்ணுதல். (மு.த. 289) ஒ.நோ. முள் → (முசி) → மொசி. மொசித்தல் = தின்னுதல். புள் → புசி ]*

**த.** புசி > Skt. bhuj.

bhuj, to enjoy, use, possess (esp.)enjoy a meal, eat, eat and drink, consume என்று வடமொழியில் நுகர்தல் (அனுபவித்தல்), பயன்படுத்துதல், உடைமையாகக் கொண் டிருத்தல் என்றாற் போன்ற பொருள் வளர்ச்சியில், உணவை நுகர்தல் (அனுபவித்தல்) என்று புசித்தல் உண்ணுதல் பொருளில் வந்துள்ளதாக மா.வி.அக. காட்டியிருப்பது இயல்பல்லாத தன்மை யினதாதலையும் உட்செல்லுதல் என்னும் பொருளில் புகு → (புள்) → புசி என்று இயல்பாய் அமைந்திருத்தலையும் கண்டுகொள்க.

**புசிகரணம்** *pušikaraṇam,* பெ. (n.) தின்பண்டம்; eatables.

*[ புசி + கரணம் ]*

**புசிக்கத்தக்க** *pušikka-t-takka,* பெ.எ. (adj.) உண்பதற்கு ஏதுவான; to be eaten.

*[ புசிக்க + தக்க ]*

**புசிகரம்** *puši-karam,* பெ. (n.) 1. பேணுதல்; nourishing. 2. ஊண்; food.

*[ புசி → புசிகரம் ]*

**புசிதம்** *pušidam,* பெ. (n.) உண்பதற்குகந்த மணித்தக்காளி; a plant - used both as an vegetable and medicine.

*[ புசி → புசிதம் ]*

**புசிப்பன** *pušippaṉa,* பெ. (n.) உண்ணும் பொருள்கள் (வின்.); eatables.

*[ புசி → புசிப்பன ]*

**புசிப்பாளி** *pušippāḷi,* பெ. (n.) கொடுத்து வைத்தவன், ஆகூழ்க்காரன் (அதிட்டசாலி) (வின்); lucky person,one who enjoys happiness by virtue of past actions.

*[ புசி → புசிப்பு + ஆளி ]*

**புசிப்பு** *pušippu,* பெ. (n.) 1. உண்ணுகை; eating, feeding, taking food. 2. உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன ஆகிய நால்வகை யுணவு (பிங்.); food, of four kinds, viz, uṇbaṉa, tiṉbaṉa, nakkuvaṉa, paruguvaṉa. 3. வினைப்பயனுகர்ச்சி; experiencing the fruits of past actions. *"வினையளவாக ஆன்மாக்களுக்குப் புசிப்புண்டாம்"* (பிரபஞ்சவி.117). 4. நல்லூழ், ஆகூழ் (அதிட்டம்) (வின்.); good fortune or destiny.

*[ புசி → புசிப்பு ]*

**புசிப்புத்துறவு** *pušippu-t-tuṟavu,* பெ. (n.) ஒருபோது உணவு கிடைக்காதபோதும் உடல் நில்லாதென்றும் எத்தனை நாள் எத்தனை வகையிலே உண்டாலும் பொந்திகை (திருப்தி) யுண்டாகாது என்றும் கருதுவதனால் தோன்றும் துறவு; the idea of renunciation occurring on a consideration of the necessity of food and the constant carrying of the body for food.

*[ புசி → புசிப்பு + துறவு. துற → துறவு ]*

**புசிப்புவைராக்கியம்** *pušippu-vairākkiyam,* பெ. (n.) *புசிப்புத் துறவு* பார்க்க; (சி.சி.8, 2 சிவாக்.); see *pušippu-t-tuṟavu.*

*[புசிப்பு + வைராக்கியம்]*

Skt. vairāgya. > த. வைராக்கியம்

**புசுபுசுவெனல்** *pušupušuveṉal,* பெ. (n.) மயிர், நூல் போன்றவற்றைத் தொடும்போது உணரும் மென்மைத் தன்மையை உணர்த்தும் ஒலிக்குறிப்பு; onom. expr. signifying fluff, fur.

*[புசுபுசு + எனல்]*

**புஞ்சம்** *puñjam,* பெ. (n.) **1.** திரட்சி, குவியல்; collection, heap, quantity, lump. "*சலஞ்சலப் புஞ்சமும்*" (கல்லா.59,18). **2.** கூட்டம், கும்பல்; flock, crowd, swarm. "*புட்குல புஞ்சம்*" (இரகு.திக்குவி.266) **3.** நெசவில் 240 இழை கொண்ட நூற்கொத்து; (weav.) subdivision of the warp containing 240 threads of skein. **4.** நெய்த ஆடையின் அளவு வகை; cloth of the length of 36 cubits and 38 to 44 inch in width and 14 lbs in weight. (M.M.707).

க. புஞ்சி; து. புஞ்ச, புஞ்சொ

*[ புல் → புள் → பிள் → பிழம் = திரட்சி, வடிவு. புல் → (பிள்) → (பிண்டு) → பிண்டம் = தொகுதி, முழுமை, உடம்பு. புல்→ பல் → பலா = பரும் பழமரம். புல் → புன் → (புன்சு) → புஞ்சம் ]*

த. புஞ்சம் > Skt. puñja.

**புஞ்சம்கொள்(ளு)-தல்** *puñjam kol(lu)-,* 16 செ.கு.வி. (v.i.) ஒன்றாக இணைதல், ஒன்றாகச் சேர்தல் (கருநா.); to get together.

க. புஞ்சகொள்

*[ புஞ்சம் + கொள்-, ]*

**புஞ்சமுத்து** *puñjamuttu,* பெ. (n.) *புஞ்சைமுத்து* பார்க்க; see *puñjai muttu* (S.I.I.ii.34).

*[ புஞ்சைமுத்து → புஞ்சமுத்து]*

**புஞ்சவனம்** *puñjavanam,* பெ. (n.) மூன்றாம் மாதக் கருப்பம்; foetus three months old.

*[புல் → புன் → (புன்சு) → புஞ்சம் = திரட்சி. புஞ்சம் → புஞ்சவனம் = திரண்ட கருப்பம் ]*

**புஞ்சி-த்தல்** *puñji-,* 4 செ.குன்றாவி. (v.t.) ஒன்றாக்குதல், குவியலாக்குதல் (கருநா.); together, to make heap.

க. புஞ்சிசு

*[ புல் → புன் → புன்சி → புஞ்சி-, ]*

**புஞ்சிகை** *puñjigai,* பெ. (n.) ஆலங்கட்டி (சங்.அக.); hail-stone.

க. புஞ்சிகை (திரண்டது, குவியல்)

*[ புல் → புன் → ( புன்சு ) → புன்சிகை = திரண்ட நீர்க்கட்டி. ]*

**புஞ்சித்துவம்** *puñjittuvam,* பெ. (n.) வெள்ளை (சுக்கிலம்) (யாழ்.அக.); semen.

*[ புஞ்சு + துவம். புல் → புன் → புன்சு → புஞ்சு. புஞ்சுதல் = ஒன்று சேர்தல், புஞ்சித்துவம் = புணர்ச்சியின் போது வெளிப்படுவது ]*

**புஞ்சின்னம்** *puñcinnam,* பெ. (n.) ஆண்குறி (யாழ்.அக.); membrum virile.

*[ புஞ்சு + சின்னம் புல் → புன் → புன்சு → புஞ்சு. புஞ்சுதல் = ஒன்றுசேர்தல். சுல் → சில் → சின் → சின்னம். புஞ்சின்னம் = புணர்ச்சிக்கு உரியது ]*

**புஞ்சு-தல்** *puñju-,* 5 செ.கு.வி. (v.i.) ஒன்றுசேர்தல்; to gather, unite. '*புஞ்சிய பந்த சந்தம்*' (மேருமந்.104).

க. புஞ்சிசு

*[ புல் → புன் → புன்சு → புஞ்சு. ]*

**புஞ்சுகம்** *puñjugam,* பெ. (n.) முருக்கமரம்; bastard teak.

**புஞ்சை** *punjai,* பெ. (n.) புன்செய்; dry land.

ம. புஞ்ச; க. புஞ்சை, பிஞ்ச, புஞ்சி, புணச, புணகி, புஞுகி; தெ. புஞ்ச (மேட்டுநிலம்); து. புஞ்ச, புஞ்சொ

*[புல் → புன் + செய் – புன்செய் → புஞ்சை]*

'புன்செய்' பார்க்க

**புஞ்சைக்கண்டம்** *puñjai-k-kaṇḍam,* பெ. (n.) பாசனத்தில் இருக்கும் நிலம் (சேரநா.); field under irrigation, yielding even three harvests.

ம. புஞ்சக்கண்டம்; து. புஞ்சகண்ட (ஓராண்டுக்கு ஒரு விளைச்சல் தரும் மேட்டு நிலம்)

*[ புஞ்சை + கண்டம் ]*

**புஞ்சைநிலம்** *puñjai-nilam,* பெ. (n.) புன்செய் பார்க்க; see *punšey.*

*[ புஞ்சை + நிலம். புன்செய் →புஞ்சை ]*

**புஞ்சைப்பற்றுக்கட்டு** *puñjai-p-parru-k-kattu,* பெ. (n.) இறைவை நீராற்பயிராகும் புன்செய் நிலங்களுக்கு விதிக்கும் பணத்தீர்வை; money rent levied on lands in which crops. other than paddy are raised under well-irrigation. (R.T.).

*[ புஞ்சை + பற்று + கட்டு ]*

**புஞ்சைபாகாயாத்து** *puñjai-pāgayāttu,* பெ. (n.) தோட்டத்தரப்பிலுள்ள புன்செய் நிலம்; dry land rated as garden land. (R.T.).

*[ புஞ்சை + பாகாயாத்து ]*

U. bāgāyat > த. பாகாயாத்து

**புஞ்சைமுத்து** *puñjai-muttu,* பெ. (n.) பருமுத்து; big-sized pearl. (S.I.I.ii,176).

*[ புஞ்சை + முத்து. புல் → புன் → (புன்சு) → புஞ்சை. முள் → முட்டு → முத்து ]*

**புஞ்சைமேல்நஞ்சை** *puñjai-mēl-nañjai,* பெ. (n.) புன்செய் நிலங்களில் சாகுபடி செய்த நன்செய்ப் பயிர்; wet crops raised in fields classed as dry.

*[ புஞ்சை + மேல் + நஞ்சை ]*

**புஞ்சைவர்த்தனை** *puñjai-varttaṉai,* பெ. (n.) புன்செய்த் தீர்வையொடு செலுத்தும் மிகுதியானவரி; acesss in addition to the puñjai tax (R.T.).

*[ புஞ்சை + வர்த்தனை ]*

Skt. vartana > த. வர்த்தனை

**புஞ்சைவரவுநஞ்சை** *puñjai-varavu nañjai,* பெ. (n.) நன்செய்நிலமாய் மதிக்கப்படும் புன்செய்; dry land classed as wet. (R.T.).

*[ புஞ்சை + வரவு + நஞ்சை. புன்செய் → புஞ்சை. நன்செய் → நஞ்சை ]*

**புஞ்சைவான்பயிர்** *puñjai-vāṉ-payir,* பெ. (n.) புன்செயிற் பயிராகும் மிளகாய், கத்தரி, புகையிலை, மஞ்சள் முதலியன; particular dry crop, such as chillies, brinjals, tobacco, turmeric, etc., (R.T.).

*[ புஞ்சை + வான் + பயிர் ]*

**புட்களம்** *puṭkaḷam,* பெ. (n.) நிறைவு; fulfilment.

**புட்கால்** *puṭ-kāl,* பெ. (n.) புள்ளடி; caret.

*[புள் + கால். கோல் = திரண்ட கம்பு. கோல் → கால் = மரத்தூண், கற்றூண், தூண்போல் உடம்பைத் தாங்கும் உறுப்பு]*

**புட்குத்திருப்பி** *puṭkuttiruppi,* பெ. (n.) வட்டத்திருப்பி என்ற ஒரு கொடிவகை (மலை.); velvet leaf

**புட்குரல்** *puṭkural,* பெ. (n.) நற்குறி, தீக்குறியாகக் கருதப்படும் பறவையொலி; cry of birds, especially omen-birds. **'ஒருவன் புட்குரன் முன்னங் கூறினான்'** (சீவக.415).

*[புள் + குரல்]*

**புட்கோ** *puṭ-kō,* பெ. (n.) கலுழன் (கருடன்) (நாமதீப.236); white headed kite.

**மறுவ.** கழுகு, பருந்து

*[புள் + கோ. பறவைகளுக்கு அரசன் போன்றவன், பெரிய பறவை.]*

**புட்டகப்புடைவை** *puṭṭaga-p-puḍavai,* பெ. (n.) சீலைவகை (நேமிநா.61,உரை); a kind of cloth.

*[புட்டகம் + புடைவை]*

**புட்டகம்** *puṭṭagam,* பெ. (n.) புடைவை; cloth. 'புட்டகம் பொருந்துவ புனைகுவோரும்' (பரிபா.12,17.).

*[புட்டம் → புட்டகம்]*

'புட்டம்¹' பார்க்க

**புட்டகமண்டபம்** *puṭṭaga-maṇḍabam,* பெ. (n.) கூடாரம்; tent. 'புட்டக மண்டபத்திறைவன் சென்றான்' (சேதுபு.அகத்.36).

*[புட்டகம் + மண்டபம். துணியால் அமைக்கப்பட்டது]*

**புட்டகவிலை** *puṭṭaga-vilai,* பெ. (n.) சீலை விற்போருக்கிடும் வரிவகை; fees leveied on sellers of cloths. (S.I.I.ii,352).

*[புட்டகம் + விலை]*

**புட்டதண்ணி** *puṭṭataṇṇi,* பெ. (n.) பூதத்தான்றி (இ.வ.); carey's myrtle bloom.

**புட்டந்தருவேர்** *puṭṭantaru-vēr,* பெ. (n.) சிறுபாம்புக்கடி நஞ்சினைப் போக்கும் மருந்து; a root given for the poison of siṟu-pāmbu.

**புட்டம்¹** *puṭṭam,* பெ. (n.) புடைவை (பிங்.); cloth.

**மறுவ.** கோடி, கோடிகம், படாம்,கோசிகம், கூறை, பஞ்சி, நீவியம், சீரை, கலை, கலிங்கம், சூடி, காடிகம், தூசு, கழகம், வட்டம், ஆடை, தானை, அறுவை

**தெ.** புட்டமு

*[புடை → புடம் → புட்டம் = புடைத்த பின்புறம், புடைவை (வே.க.3.77)]*

**புட்டம்²** *puṭṭam,* பெ. (n.) **1.** உடலின் பின்புறத்தில் புடைப்பாக உள்ள பகுதி. (ஆசனப்பக்கம்); buttocks; **2.** பெண்குறி; pudendum muliebre.

**க., தெ,** புட்டி.

*[புள் → புட்டி = உட்டுளையுள்ளது ஒருவகைக் கலம், சிறுபடி, குடுவை, குப்பி, புட்டி → புட்டில் = அம்பராத் தூணி. தெ. புட்டிக. புட்டி = குடுவை போன்ற பறவையுடம்பின் பிற்பகுதி. புட்டி → பிட்டி கொழுத்த கோழிப் புட்டியை நெய்க்குடம் என்று கூறும் வழக்கை நோக்குக.]*

*புட்டி புட்டம் = குடுவை போற் புடைத்த மாந்தன் உடம்பின் பக்கம். ஒ.நோ. குண்டு → குண்டி. புட்டம் → பிட்டம் மா.வி.அ.ப்ர–ஸ்த எடுப்பாய் முன் நிற்பது என்பது மூலமாயிருக்கலாம் என்று கருதுகின்றது. (வ.வ.2.37,38.) ]*

puta,pūta,a buttock cf.D.pūḷa etc. the original idea is the hind part the change of ḷ in to t is found in D. (KKED.xviii)

**புட்டரிசி** *puṭṭariši,* பெ. (n.) இனிப்புச்சுவை மிக்க அவியரிசி; a kind of rice, which is heated in steam and taken with sugar and cocoanut.

*[ புட்டு + அரிசி. அரி → அரிசி ]*

**புட்டரிசியுருண்டை** *puṭṭariši-y-uruṇḍai,* பெ. (n.) பணிகார வகை (மதி.க.ii,143); a kind of cake.

*[ புட்டு + அரிசி + உருண்டை. உல் → உரு → உருண்டை ]*

**புட்டல்** *puṭṭal,* பெ. (n.) தலைச்சுமை (யாழ்.அக.); head-load.

*[ புட்டு → புடம் → புட்டம் = புடைத்துக் காணப்படுவது. புட்டம் → புட்டல் = புடைத்துத் திரளாகக் காணப்படும் கட்டு, தலைச்சுமை ]*

**புட்டவரப்பு** *puṭṭavarappu,* பெ. (n.) பெரிய வரப்பு; hedge.

*[ புட்டம் → புட்டை = பெருத்த விதை. புட்டம் → புட்டா → புட்ட. புட்ட + வரப்பு ]*

**புட்டவி–த்தல்** *puṭṭavi-,* 4 செ.குன்றாவி. (v.t.) ஆவியில் வேகவைத்தல்; to cook in steam.

*[ புட்டு + அவி–, ]*

**புட்டவியல்** *puṭṭaviyal,* பெ. (n.) 1. சீலையில் ஏடு கட்டி வேக வைத்தல்; heating in steam using a special apparatus. 2. புழுக்கம்; sultriness heat.

*[ புட்டு + அவியல் ]*

**புட்டா**[1] *puṭṭā,* பெ. (n.) வீங்கின விதை (அண்டம்) (இ.வ.); swelled testicle.

**க.** புட்டெ; **தெ.** புட்ட

*[ புடம் → புட்டம் = புடைத்த பின்புறம் புட்டம் → புட்டா ]*

'புட்டை' பார்க்க

**புட்டா**[2] *puṭṭā,* பெ. (n.) பாவின் உடற்பகுதியில் செய்யப்படும் பூவேலைப்பாடு; flower design done in the chintz.

**புட்டாஏணி** *puṭṭā-ēṇi,* பெ. (n.) சேலையில் புட்டா போடுவதற்குப் பயன்படும் ஏணி; a weapon used by weavers, to do flower design in saree.

**புட்டாபலகை** *puṭṭā-palagai,* பெ. (n.) புட்டா வாங்கப் பயன்படும் பலகை; board used to design flower in the saree.

**புட்டாலம்மை** *puṭṭāl-ammai,* பெ. (n.) அம்மைக்கட்டு (பைஷஜ); mumps.

*[ புட்டம் → புட்டல் + அம்மை. புட்டலம்மை → புட்டாலம்மை ]*

**புட்டாளம்மை** *puttāḷammai,* பெ. (n.) பொன்னுக்கு வீங்கி; mumps.

*[புட்டாளம் + அம்மை]*

**புட்டி**[1] *putti,* பெ. (n.) இடை; waist. *'புட்டியிற் சேறும் புழுதியும்'* (திவ். பெரியாழ்.1, 7, 6.)

*[புட்டம் → புட்டி]*

**த.** புட்டி > Skt. pṛṣṭha

**புட்டி**[2] *putti,* பெ. (n.) 1. பருமை; stoutness, robustness. *"புட்டிபடத் தசநாடியும் பூரித்து"* (திருமந்.574) 2. கொழுப்பு (கொ.வ.); fatness, plumpness.

*[புல் → புது. புது → புதல் = செறிந்ததூறு, புல்லிளம், மருந்துப்பூடு. புது → புதை → புடை. புடைத்தல் = பருத்தல், வீங்குதல். புடை → புடம் → புட்டம் = புடைத்த பின்புறம், புடைவை. புட்டம் → புட்டி = பருமை, பருத்துக் காணப்படும் கொழுப்பு (வே.க. 3. 76, 77)]*

**த.** புட்டி > Skt. puṣṭi

**புட்டி**[3] *putti,* பெ. (n.) குப்பி; bottle, flask. அவள் குழந்தைக்குப் புட்டியில் பால் கொடுத்தாள் (உ.வ.).

**க.** புட்டி; **தெ.** புட்டி, புட்டிக; **பட.** புட்டி; **கோத.** பொடி; **து.** புடி

*[புள் → புட்டி = உட்டுளையுள்ளது, ஒரு வகைக்கலம், சிறுபடி, குடுவை, குப்பி (வ.வ. 2. 37)]*

**புட்டி**[4]. *putti,* பெ. (n.) 1. ஒருவகை முகத்தலளவை; measure of capacity 750 Madras paḍi. 2. நிலவளவை வகை; land measure 8 to 11 1/2 acres. 3. சிறுபடி; measure of capacity = about 1/2 Madras measure. 4. ஒருவகை நிறுத்தலளவை; bazaar weight = 20 maṇu = 500 lbs.

**தெ.** புட்டி,

*[புள் → புட்டி = உட்டுளையுள்ளது, ஒரு வகைக்கலம், சிறுபடி (வ.வ. 2. 37)]*

**புட்டிகரம்** *puttigaram,* பெ. (n.) 1. அழுக்கு; dirty. 2. புட்டி பார்க்க; see *putti.*

**புட்டிடு-தல்** *puttidu-,* 17 செ.குன்றாவி. (v.t.) *புட்டவி-த்தல்* பார்க்க; see *puttavi-,*

*[புட்டு + இடு-,]*

**புட்டிப்பால்** *putti-p-pāl,* பெ. (n.) தாய்ப்பாலுக்குப்பகரமாகக் குழந்தைகளுக்கு ஆவின்பாலை அல்லது இதற்கென்றே பதப்படுத்தப்பட்ட மாவுப்பொருளை நீரில் கலந்து புட்டியின் மூலம் கொடுக்கப்படும் பால்; cow milk or milk prepared from milk powder (used for bottle-feeding). தேவையான சூழ்நிலைகளில் மட்டும் குழந்தைக்குப் புட்டிப்பால் கொடுக்க வேண்டும். (உ.வ.)

*[புட்டி + பால்]*



**புட்டில்**[1] *puttil,* பெ. (n.) **1.** அம்பறாத் தூணி; quiver. *'வாளிபெய் புட்டில்'* (கம்பரா. கரன். 18). **2.** விரலுறை; cover for fingers; gloves. *'விரற்றலைப் புட்டில் வீக்கி'* (சீவக. 2202). **3.** உறை (யாழ்.அக.); sheath, scabbard, cover. **4.** கூடை; basket, flower basket. *'போழிற் புனைந்த வரிப்புட்டில்'* (வின்.) (கலித், 117). **5.** இறைகூடை; baling basket. **6.** முறம் (யாழ்.அக.); winnow. **7.** குதிரையுணவு கட்டும் பை; food bag for horses. *'புழுக்கும் காணமும் புட்டில் வாய்ச் செறித்தனா'* (சீவக. 1938). **8.** கெச்சையென்னும் அணி; tinkling anklet of a horses. *'அரிபுனை புட்டின்'* (கலித். 80). **9.** தக்கோலத்தின் காய்; cubeb. 'அம்பொதிப் புட்டில்' (திருமுரு. 191).

**ம.** புட்டில்; **க.** புட்டி, புட்டி, புட்டெ; **தெ.** புடி (பூக்கூடை), புடிக, புட்டிக, புடிகெ, புட்டி; **து.** புட்டி, புடயி, புடாயி. புட்டி; **கூ.** புடி, (பெரிய கூடை)

*[ புள் → புட்டி = உட்டுளையுள்ளது, ஒரு வகைக் கலம், சிறுபடி, குடுவை, குப்பு. புட்டி → புட்டில் = அம்பறாத்தூணி (வ.வ. 2. 37), உட்டுளையுள்ள உறை, 'இல்' குறுமையீறு. புட்டி + இல் – புட்டில். ஒ. நோ. தொட்டி + இல் – தொட்டில். (சு.வி. 14) பாண்டி – பாண்டில், விட்டி – விட்டில் ]*



**புட்டில்**[2] *puttil,* பெ. (n.) *புட்டி*[3] (இ.வ.) பார்க்க; see *putti*[3]

*[ புள் → புட்டி → புட்டில் ]*

**புட்டிலவம்** *puttilavam,* பெ. (n.) சிறுதும்பை; small lucus plant.

**புட்டிவெல்லம்** *putti-vellam,* பெ. (n.) பனங்கட்டி (யாழ்.அக.); jaggery, coarse sugar, kept in cases of palmyra leaves.

*[ புட்டி + வெல்லம்]*

**புட்டிற்கூடை** *puttir-kūdai,* பெ. (n.) சிறுகூடை (வின்.); small basket.

*[ புட்டில் + கூடை ]*

**புட்டு** *puttu,* பெ. (n.) **1.** சிற்றுண்டிவகை; a kind of confectionery. **2.** தினைமா; millet flour.

*[ புள் → புட்டு ]*

**புட்டுக்கூடை** *puttu-k-kūdai,* பெ. (n.) மிகச் சிறிய கூடை; a small size basket.

**மறுவ.** புல்லாங் கூடை

**பட.** பொட்டுகூடெ.

*[புட்டு + கூடை ]*

**புட்டுத்திருப்பி** *puttu-t-tiruppi,* பெ. (n.) பொன்முசுட்டை வேர்; gravel root.

**புட்டுப்பழம்** *puttu-p-palam,* பெ. (n.) தின் பழவகையுளொன்று; an edible fruit.

*[புட்டு + பழம்]*

**புட்டுவாழை** *puttu-vāḻai,* பெ. (n.) வாழை வகை; a kind of plaintain. (G.Sm.D.I.i, **215**).

*[புட்டு + வாழை]*

**புட்டுவை—த்தல்** *puttuvai-,* 4 செ.குன்றாவி. (v.t.) *புட்டவி—த்தல்* பார்க்க; see *puttavi-,*

*[புட்டு + வை—, ]*

**புட்டை** *puttai,* பெ. (n.) **1.** பெருத்த விதை (அண்டம்); elephantoid scrotum. **2.** விதை வீக்கம் (அண்டவாதம்); rupture, hernia.

**க., கொலா.** புட்டெ; **தெ., பர்.** புட்ட

*[ புடை → புடம் → புட்டம் = புடைத்த பின்புறம், புடைவை (பிங்.). புட்டம் → புட்டா = வீங்கின விதை (அண்டம்). புட்டா → புட்டை. (வே.க. 3, 77) ]*

**புட்பகத்தாவு** *putpagattāvu,* பெ. (n.) கறுப்பரிசி; black rice.

**புட்பகம்** *putpagam,* பெ. (n.) **1.** கண்ணோய் வகை; an eye disease. **2.** மூக்கிரட்டை; a spreading plant. **3.** கஞ்சாங்கோரை; white basil.

**புட்பகரிகம்** *putpagarigam,* பெ. (n.) மூங்கில்; bamboo.

**புட்பகை** *put-pagai,* பெ. (n.) சோழன் நலங்கிள்ளியின் புனைபெயர்; title of a Cōlan king, Nalan-killi. *'புட்பகைக் கேவானாகலின்'* (புறநா. **68**).

*[ புள் + பகை]*

**புட்பகொரித்தாரு** *putpa-korittāru,* பெ. (n.) கொட்டைக் கரந்தை; Indian globe thistle.

**புட்பசங்குணத்தி** *putpašan-gunatti,* பெ. (n.) நத்தைச் சூரி; a plant when snails approach it their shells brake.

**புட்படு—த்தல்** *put-padu-,* 15 செ.கு.வி. (v.i.) புட்களை வலையில் அகப்படுத்துதல்; to ensnare birds.

*[ புள் + படு—, ]*

**புட்பறை** *put-parai,* பெ. (n.) பறை வகை (சிலப். **10, 139,** உரை); a kind of drum.

*[ புள் + பறை ]*

**புட்பாகம்** *putpāgam,* பெ. (n.) மூக்கிரட்டை (சங்.அக.); spreading hogweed.

**புட்பாகன்** *putpāgan,* பெ. (n.) திருமால்; Tirumāl. போரானைக் கொம்பொசித்த புட்பாகன் (திவ். பெரியதி. **3, 6, 6**).

*[ புள் + பாகன் ]*

**புடகடம்** *pudakadam,* பெ. (n.) புடமிடுதற்குப் பயன்படுத்தப்படும் துளையிட்ட மண்குடம்; an earthen pot, which has holes at the bottom. used for extracting medicine oil by the process of calcination.

*[ புட + கடம் ]*



**புடகநாறி** *pudaganāṟi,* பெ. (n.) பீநாறி; woolly-leaved firebrand teak.

**புடகம்** *pudagam,* பெ. (n.) 1. இலைத் தொன்னை; cup or vessel formed by stitching leaves. பலாசுறு பத்தரத்திற் புடகம் பரிவற (சிவ. தரு. கோபுர. 184). 2. தாமரை (யாழ்.அக.); lotus.

*[ புல் → புள் → புழல் = உட்டுளை, புழல் → புடல் = உட்டுளையுள்ள புடலங்காய். புழு → புழை → புடை = துளை, எலிவளை, குகைபுடை → புடம் = பொன்னைக் காய்ச்சித் தூய்மைப்படுத்தும் சிறுகலம், தொன்னை. (வே.க. 3. 101–108) புடம் → புடகம் = தொன்னை, தொன்னை போன்று உள்ளீடற்றுக் காணப்படும் தாமரை]*

puṭa, puṭaka, puṭi, a cup made of leaf folded (and stitched); a basket or vessel or dish made of leaves. Its so-called D. Tbh. is pōḍa. It is somewhat difficult to determine from which root the words have arisen; but there is the Sk. verb puṭ with the meanings of 'to unite, to connect, to bind together; to interwine (samšleshaṇa, šlēsha), and there are the D. verbs pūḍu, pūṇ, hūḍu, which mean 'to unite, to connect, etc. and also D. puri, piri, which mean to twist, to twine (see s. puri cf pōsē). On these verbs puṭa, etc., rest. Sk. verbs, puṇ, pūṇ, pul, pūl, used in the meanings of samhati and sanghāta, piṭ in that of samhati and huḍ, huṇḍ in those of saṅgha and saṅghāta are evidently cognate. For all the above-mentioned Sk. verbs and their meanings there are no authoriative references, and they may be confidently declared to have been borrowed from the adduced D.verbs which are firmly rooted in the D. language. Puṭa, etc., are therefore ultimately connected either with D. pūḍu etc. or with puri etc. (KKED. xxxv)

**புடகாமிகம்** *pudakāmigam,* பெ. (n.) செந்நாயுருவி; a plant Indian burred variety.

**புடசயம்** *pudašayam,* பெ. (n.) மருந்தைப் புடமிடுவதினால் ஏற்படும் நன்மை; benefit obtained by calcinating the medicine.

*[ புடம் + சயம் ]*

**புடசாலி** *pudašāli,* பெ. (n.) நாகை; stork.

**புடசெந்தூரம்** *puda-šendūram,* பெ. (n.) புடம்போட்ட எரிப்புச் செந்தூரம்; red oxide obtained by calcination as opposed to one obtained by burning in oven.

*[ புடம்+ செந்தூரம் ]*

**புடஞ்சம்** *pudañjam,* பெ. (n.) பெருமுத்தக் காசு; large sedge.

**புடஞ்சயம்** *pudañjayam,* பெ. (n.) மருந்தைப் புடமிடுவதினா லுண்டாகும் நன்மை; benefit obtained by calcinating the medicine.

*[ புடம்+ சயம் ]*

**புடஞ்செய்–தல்** *pudañjey-,* 1 செ.குன்றாவி. (v.t.) *புடமிடு–தல்* பார்க்க; see *pudam-idu-,*

*[ புடம்+ செய்–, ]*

**புடத்தங்கம்** *puda-t-tangam,* பெ. (n.) புடமிட்ட உயர்ந்த பொன்; refined gold.

*[புடம்+ தங்கம் ]*

**புடத்திற்காதி** *pudattiṟkādi,* பெ. (n.) வளையலுப்பு; glass gall-fel vitri.

**புடத்தைலம்**[1] *puda-t-tailam,* பெ. (n.) *புடமெண்ணெய்* (பைஷஜ. 3) பார்க்க; see *pudam-eṇṇey.*

*[ புடம்+ தைலம் ]*

Skt. taila > **த.** தைலம்.

**புடத்தைலம்**[2] *puda-t-tailam,* பெ. (n.) சிவனார் வேம்பு எண்ணெய்; a kind of medicinal oil extracted by the process of calcination.

**மறுவ.** குழித்தைலம்.

*[ புடம் + தைலம் ]*

Skt. taila > **த.** தைலம்.

**புடதலை** *pudatalai,* பெ. (n.) பொடுதலை; wild long pepper.

*[ பொடுதலை → புடதலை ]*

**புடதிட்டம்** *pudatiṭṭam,* பெ. (n.) புடம் போடுவதற்காக எருவிடுங் குழியின் அளவு; the dimension of the pit, to pile up cowdung cakes for purpose of calcinating.

*[ புடம்+ திட்டம் ]*

"காடியே புடத்திட்ட மாமா கேளாய்
காட்டெருவி லொன்றுபுடம்
காடையாகும் பாடியே மூன்றெருகவு
தரிபுடமாம் பத்தெருத்
தான் குக்குடமாம் புரிந்து கேளாய் நாடியே
ஐம்பதெருவே
ஏனமாகும் நல்லநூறு எருகசத்தின்
புடமதாமே" (சா.அக.)

புடம் போடப் பயன்படும் எருக்குழியின் அளவு, அதில் பயன்படுத்தும் மருந்தின் அளவைப் பொறுத்தும், அதனுள் அடுக்கப்படும் வறட்டிகளின் எண்ணிக்கையைப் பொறுத்தும் நீள, அகல உயரங்கள் வேறுபடுகின்றது

1. **மாப்புடம்** 1000 வறட்டிகள் போட்டுப் புடம் போடப் பயன்படும் எருக்குழியின் அளவு, இரண்டுமுழ அகலமும், இரண்டு முழ ஆழமும் கொண்டதாய் இருக்கும்.

2. **கசபுடம்** 500 வறட்டிகள் போட்டுப் புடம் போட பயன்படும் எருக்குழியின் அளவு ஒரு முழ அகலமும் ஒரு முழ ஆழமும் கொண்டதாய் இருக்கும்.

3. **வராக புடம்** 150லிருந்து 200 வறட்டிகள் போட்டுப் புடம் போடப் பயன்படும் சதுரக்குழி. ஒரு அடி அகலமும் ஒரு அடி உயரமும் கொண்டிருக்கும்.

4. **குக்குட புடம் அல்லது கோழிப்புடம்** எட்டு வறட்டிகள் மட்டுமே போட்டுப் புடம் போடும் அளவில் வெட்டப்படும் எருக்குழி.

5. **கோவுர புடம்** வறட்டியின் சிறு துண்டுகளும், தூள்களும் போட்டுப் புடம் போட பயன்படுத்தப்படும் மண்பானை.

6. **பாண்ட புடம்** மண் கலத்தில் சுடுவதற்காக, அதை வாய்கட்டப்பட்ட உமி நிறைந்த மட்கலத்தில் திணிப்பர்.

**புடந்தசம்** *pudandaśam,* பெ. (n.) பத்துபுடம்; calcinating ten times.

*[ புடம் + தசம் ]*

**புடப்பூடு** *puda-p-pūdu,* பெ. (n.) பொன்னூமத்தை; a yellow coloured dhatura plant.

*[ புடம் + பூடு ]*

**புடபாகம்** *puḍa-bāgam,* பெ. (n.) 1. புடமிடுகை; a particular method of preparing drugs in which various substances are placed in clay cups covered over with clay and heated over the fire. புட பாகத்திற் சார்தரு முலோகமாசு தள்ளல் போல் (திருக்காளத்.பு. ஞுபானயோ. (18.)2. செரிமானம்; digestion. 3. சமைக்கை (யாழ்.அக.); cooking.

*[ புடம் + பாகம் ]*

**புடபாதவிதி** *puḍapādavidi,* பெ. (n.) புடம்போடுவதற்குரிய முறைகளைக் கூறும் நூல்; book on calcination and its rules.

*[ புடம் + பாதவிதி ]*

**புடம்**[1] *puḍam,* பெ. (n.) 1. புடமிடுங்கலம்; the refining or sublimating vessel or cup. 2. மூடி; cover. *'தொகு புடஞ் சற்றே யோங்கி'* (விநாயகபு. 15, 40). 3. வெயிலில் வைத்தல் முதலிய வழிகளாற் பக்குவப் படுத்துகை; calcination in fire or in the sun; preservation by being buried under the earth or in a heap of grain. *'புடஞ்சே ரெழிற்பொன்'* (உத்தரரா. திருவோலக். 10). 4. புடபாகம் 1 பார்க்க; see puḍa-bāgam, 1. 5. இடம்; place, spot. *'போதிகைப் புடங்க டோறும்'* (சூளா. கல்யா). 6. பக்கம்; side *'புடங்கழையும் வேயும்'* (சூளா. சீய. 162) 7. உள்வளைவு (யாழ்.அக.); concavity, bend. 8. இலைக்கலம், தொன்னை (யாழ்.அக.); leaf-cup. 9. கண்ணிமை (யாழ்.அக.); eye-lid. 10. கோவணம் (யாழ்.அக.); loin - cloth. 11. மூடுகை (யாழ்.அக.); closing.

*[புல் → புள் → புழல் = உட்டுளை, சாய்கடை. புழல் → புடல் = உட்டுளையுள்ள புடலங்காய். புழு → புழை = துளை, குழாய், வாயில். புழை → புடை = துளை, எலிவளை. புடை → புடம். ஒ. நோ. நடை → நடம். புடம் = பொன்னைக்காய்சித் தூய்மைப் படுத்தும் சிறுகலம், தொன்னை (வே.க. 3. 106–108) ]*

த. புடம். > Skt. puṭa.

**புடம்பாசியம்** *puḍampāśiyam,* பெ. (n.) அலரி; a flower.

**புடம்பு** *puḍambu,* பெ. (n.) குகை; cave. *'காணாமலைப் புடம்புந்தேடி யொளிவார் சிலபேர்கள்'* (பஞ்ச. திருமுக. 1895).

மறுவ. அளை, முழை, முழைஞ்சு.

*[ புழ → புழை → புடை = துளை, எலிவளை, குகை, குகை போன்ற கிணற்றடிப் புழை. புழல் → புடை = சிறுகலம், இலைக்கலம். (வே.க. 3. 108). புடம் → புடம்பு. ]*

**புடம்போடு—தல்** *puḍam-pōḍu-,* 19. செ. குன்றாவி. (v.t.) 1. தங்கம் போன்ற மாழை (உலோகம்)களை நெருப்பில் உருக்கி தூய்மைப்படுத்துதல்; to purify by melting (esp. gold), to refine metal. பழைய பொன்னைப் புடம்போட்ட பின்னர் நகை செய்வார்கள் (உ.வ.). 2. மூலிகை போன்றவற்றை நெருப்பிலிட்டு எரித்து நீறா(பஸ்பம்)க்குதல்; to calcine. 3. மிக வருத்துதல் (கொ.வ.); to subject to extreme torture.

*[ புடம் + போடு–. ]*

**புடம்வை—த்தல்** *puḍam-vai-,* 4 செ. குன்றாவி. (v.t.) *புடமிடு—தல்* பார்க்க; see *puḍam-iḍu-,*

*[ புடம் + வை–. ]*

**புடமண்** *pudaman,* பெ. (n.) தூய்மையான அழுக்கற்ற மண்; pure mud.

*[ புடம்+ மண் ]*

**புடமாறிப்போடல்** *pudamāri-p-pōdal,* தொ. பெ. (vbl.n.) புடமிடும் போது, தேவையான மருந்துகளில் குறைவுபடில் சரிசெய்து மீண்டும் புடமிடல்; resubmitting the medicine to calcination if it is not properly done or finished.

*[ புடம் + மாறி + போடல் ]*

**புடமாறியெடுத்தல்** *pudamāriyeduttal,* தொ. பெ. (vbl.n.) புடத்தின் நெருப்பவிந்த பின்பு, பிரித்து மருந்தை எடுத்துக் கொள்ளுதல்; taking out the medicine after the fire completely cooled in calcination.

**புடமிடு–தல்** *pudam-idu-,* 19 செ. குன்றாவி. (v.t.) 1. பொன் முதலியவற்றைத் தூய்மை படுத்துதல் (சுத்தி செய்தல்); to refine metals. *'அதகமிகப் புடமிட்டு'* (காசிக. ஓங்காரலி, சி. 6). 2. வெய்யிலில் வைத்தல் முதலிய வழிவகை களாற் பக்குவப் படுத்துதல்; to calcinate to preserve by burying under the earth, etc; 3. எரித்தல் (கொ.வ.); to cremate.

*[ புடம் + இடு–,* புடமிடப்பட்டது மாற்றுயர்ந்த பொன் எனப்படும்.*]*

**புடமெண்ணெய்** *pudam-enney,* பெ. (n.) புடம் போட்டு எடுக்கும் எண்ணெய்; medicinal oil extracted by pudam process.

*[ புடம்+ எண்ணெய் ]*

**புடல்** *pudal,* பெ. (n.) 1. புடலங்காய் காய்க்கும் கொடி; the snake-gourd plant. 2. பேய்ப் புடல்; wild snake-gourd.

ம. புட்டல், பிட்டல்; க. பொட்ல, படல, பட்ல; தெ. பொட்ல; து. பட்ல; கட. புட்ருகி; கூ. புட்ர

த. புடல்→ skt.paṭola, paṭu, paṭuka.

*[ புல்→ புள் → புழு = துளைத்தரிக்கும் சிற்றுயிரி. புழு → புழை = துளை, குழாய், வாயில், பலகணி. புழை → பூழை = துளை, சிறுவாயில்புழு → புழல் = உட்டுளை, சாய்கடை. புழல் → போல் = உள்ளீடல்லாதது, உட்டுளையுள்ள மூங்கில், புழல் → புடல். ஒ.நோ. குழல் → குடல். புடல் = உட்டுளையுள்ள புடலங்காய் (வே.க. 3, 106). ]*

**புடல்வெள்ளரி** *pudal - vellari,* பெ. (n.) புடலங்காய் போன்ற தோற்றமுள்ள வெள்ளரி வகை; a kind of melon.

*[ புடல்+ வெள்ளரி]*

**புடலகம்** *pudalagam,* பெ. (n.) பன்றி மோத்தை எனும் நிலைத்திணை; a kind of plant.

**புடலங்காய்** *pudalankāy,* பெ. (n.) வெளிர் பச்சை நிறம்கொண்ட பாம்பு போல நீளமாக இருக்கும் ஒருவகைக் காய்; snake-gourd.

*[ புடல் + அம் + காய். 'அம்' சாரியை]*



**புடலி¹** *pudali,* பெ. (n.) பிடர் (இ.வ.); nape.

*[ பின்→ பினம் → பிறம்பு. பிறம் → பிடம் → பிடர் → பிடரி = தலை யின் பின்புறம் (மு.தா. 293) பிடரி → புடரி. ஒ.நோ. பிட்டம் → பிட்டி → புட்டி. = பறவையின் பின்புறம். புடரி → புடலி (கொ.வ.) ]*

**புடலி—த்தல்** *pudali-,* 4 செ.கு.வி. (v.i.) *புடவி²—த்தல்* (யாழ்.அக.) பார்க்க; see *pudavi²-;*

*[ புடவி→ புடலி ]*

**புடலை** *pudalai,* பெ. (n.) *புடல்* 1. (கொ.வ.) பார்க்க; see *pudal*-1.

*[ புழல் → புடல்→ புடலை]*

**புடவி¹** *pudavi,* பெ. (n.) 1. உலக உருண்டை (திவா.); earth. 2. உலகம் (திவா.); world. *'அதிர்வன புடவிகளடையவே'* (தக்கயாகப் 723).

க. பொடவி; தெ. புட

*[ புல்→ புது → புதை. புடை → புடை = பருத்தபாகம், பகுதி, பக்கம், சார்பு, இடம். புடை → புடைவி → புடவி = பருத்த ஞாலம், உலகம் (வே.க. 3. 76, 77) ]*

**புடவி²—த்தல்** *pudavi-,* 4 செ.கு.வி. (v.i.) வீங்குதல்; to be swollen, as from a blow.

*[ புடை→ புடைவி → புடவி = பருத்த ஞாலம், உலகம், (வே.க. 3 77). புடவி → புடவி(த்தல்) —, பின்னாக்கம் (back formation). அதாவது பெயரினின்று வினையாக்கப்பட்டது. புடவித்தல் = பருக்க வீங்குதல் ]*

**புடவிமூலம்** *pudavimūlam,* பெ. (n.) சிறுகுறட்டை (மலை.); a species of snake-gourd.

**புடவை** *pudavai,* பெ. (n.) 1. துணி; cloth, (S.I.I.iv., 31.) 2. *புடைவை* 2. பார்க்க; see *pudaivai².*

ம. புடவ; தெ. புட்டமு

*[ புல்→ புது → புதை → புடை. புடைத்தல் = பருத்தல், வீங்குதல். புடை → புடைவை = சுற்றிக்கட்டிவிடும் ஆடை, மகளிர் சேலை. புடைவை → புடவை = துணி, சேலை (வே.க. 3. 77) ]*

**புடவைக்குஞ்சம்** *pudavai-k-kuñjam,* பெ. (n.) சீலையின் முன்றானைக் குஞ்சம் (வின்.); bunch of flounce of cloth, tassel of a cloth.

*[ புடவை+ குஞ்சம். புடை → புடைவை → புடவை ]*

**புடவைக்கொடை** *pudavai-kodai-,* பெ. (n.) மணமகன் மணமகளுக்குப் புடைவை கொடுப்பதாகிய திருமண வகை; a form of marriage among Malayālis which consists in the presentation of the cloth by the bride-groom to the bride.

*[ புடைவை → புடவை + கொடை. கொடு → கொடை ]*

**புடவைகளை—தல்** *pudavai-kaḷai-,* 3 செ.கு.வி. (v.i.) 1. தூய்மையில்லாத (அசுத்தச்)சீலையை நீக்குதல்; to cast off dirty or impure clothes. 2. மாதவிடாய் நிகழ்தல்; to be subject to catamenia

*[ புடைவை → புடவை + களை—, கள் → களை ]*

**புடவைபோடு–தல்** *puḍavai-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) கோடிபோடுதல் (இ.வ.); to offer ceremonially a new cloth to widow in mourning.

*[ புடைவை→ புடவை+ போடு–, ]*

**புடவையெழுது–தல்** *puḍavai-y-eḻudu-,* 8 செ.கு.வி. (v.i.) சீலையில் அச்சடித்தல்; to print chintz.

*[ புடவை + எழுது–, ]*

**புடனண்டம்** *puḍaṉaṇḍam,* பெ. (n.) பெருமுத்தக் காசு; large sedge.

**புடனம்** *puḍaṉam,* பெ. (n.) முறையற்ற பேச்சு; raving.

**புடாயம்** *puḍāyam,* பெ. (n.) மாணிக்கக் குற்றவகை; flaw in a ruby. *'இகலுறு புடாயம்'* (திருவாலவா. 25, 14).

*[ புள் → புளு → புடு (வே.க.3,107)*
*புளு → புடு → புடாயம்]*

**புடாரமுளை** *puḍāra - muḷai,* பெ. (n.) செந்நாயுருவி (மலை.); a kind of dog-prick.

**புடி–த்தல்** *puḍi-,* 4 செ.கு.வி. (v.i.) பொய் சொல்லுதல்; to lie. பொய்புடிக்கிறான் (சேலம் வழக்கு).

*[ புள் → புளு → புடு → புடி. பொய் புடிக்கிறான் என்பது பொய் புளுகுகிறான் என்பது போன்ற மிகைபடக் கூறல். (வே.க. 3, 107) ]*

**புடிதம்** *puḍidam,* பெ. (n.) கைமுட்டி (யாழ்.அக.); fist.

*[பிண்டி → பிடி → (பிடிதம்) → புடிதம்]*

த. புடிதம். > Skt. puṭita.

**புடியாப்பு** *puḍi-y-āppu,* பெ. (n.) மேழியிலுள்ள கைப்பிடி; handle of the hoe.

*[ பிடியாப்பு → புடியாப்பு ]*

பிடியாப்பு பார்க்க

**புடுக்கஞ்சுறா** *puḍukkañjurā,* பெ. (n.) புடுக்கன்சுறா பார்க்க; see *puḍukkaṉ-šuṟā.*

*[ புடுக்கன்சுறா → புடுக்கஞ்சுறா ]*

**புடுக்கன்சுறா** *puḍukkaṉ-šuṟā,* பெ. (n.) அடுக்குப் பற்சுறா; grey shark.



**புடுக்கு** *puḍukku,* பெ. (n.) விதை (அண்டம்); testicle.

*[ புடை → புடம் → புட்டம் = புடைத்த குண்டி. புட்டம் → புட்டா → புட்டை = பெருத்த விதை (அண்டம்). (வே.க. 3, 77) புடம் → புட → புடுக்கு. 'கு' சொ.ஆ.ஈறு. ]*

**புடை¹** *puḍai,* பெ. (n.) 1. அடி; blow 2. அடித்துண்டாக்கும் ஒலி; sound, noise, as from a stroke. *'கொலைவல் யானை*

*செவிப்புடையும்'* (சீவக. 2355) 3. பகை (இலக். அக.); enmity. 4. போர் (இலக்.அக.); war, battle.

க. பொடெ; தெ. போடு

*[ புல் → புது → புதை → புடை ]*

**புடை²—த்தல்** *puḍai-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. அரிசி முதலியவற்றைத் தவிடு தூசி முதலியன போம்படி முறத்திலிட்டுத் தட்டுதல்; to winnow, sift. அரிசி புடைக்க ஆள் வேண்டும் (உ.வ.). 2. அடித்தல்; to beat, strike; to thresh, as grain. *'களப்படப் புடைத்தான்'* (கம்பரா. சம்புமா. 24). 3. குத்துதல் (சூடா.); to pierce; to thrash. 4. கொட்டுதல்; to beat, as a drum; to tap, as on a tambourine. *'கணைவிடு புடையூஉ'* (குறிஞ்சிப். 160). 5. சிறகடித்தல் (வின்.); to flap, as the wings. 6. நூல் முதலியன எற்றுதல்; to snap, as a carpenter's string. *'நூல் புடைத்தாற் போற் கடந்த'* (சீவக. 1044). 7. துவைத்தல்; to wash, as by beating. *'கந்தை புடைத்திட வெற்றுங் கற்பாறை'* (பெரியபு. திருக்குறிப்பு. 125). 8. குட்டுதல்; to cuff with the knuckle *'சென்னியுறப் புடைத்தவர் பால்'* (பிரமோத். 2, 59). 9. உடைத்தல்; to break. புங்கவனிடுவளை புடைத்து (திருவிளை. வளையர்.27). 10. நீந்துதல் (யாழ்.அக.); to swim.

*[ புது → புதை → புடை ]*

**புடை³—த்தல்** *puḍai-*, 4 செ.கு.வி. (v.i.) 1. வீங்குதல்; to swell, dilate, rise, puff up, as from a blow. *'உடல் புடைப்ப வடித்து'* (திருவாலவா. 34, 4). 2. பருத்தல்; to be enlarged. *'மெச்சவே பருத்தல் முத்தமார் தனத்தி'* (திருப்பு. 1176). 3. முன்பிதுக்கியிருத்தல், துருத்திக் கொண்டிருத்தல்; to protrude. புடைப்புச் சிற்பம் வேலைப்பாடுடையது(உ.வ.). 4. வெளிப்படுதல் (வின்.); to come to light; to be expossed, divulged, talked of 5. ஆரவாரித்தல்; to utter a loud noise; to roar, rattle. *'திண்டேர் புடைத்த மறுகெல்லாம்'* (கலித். 98). 6. அலைத்துப் பெருகுதல்; to flow in profusion, as blood. *'குருதி தோள் புடைப்ப'* (பு.வெ. 4, 16). 7. தட்டுதல்; to pat oneself, as on the shoulder.

து. புட்கெ, பொட்டெ; குட. புடீ; கோண். போரானா; நா. பொர்.

*[ புல் → புது → புதை → புடை (வே.க. 3, 76–77) ]*

**புடை⁴** *puḍai*, பெ. (n.) 1. பக்கம்; side *'ஒருபுடை பாம்பு கொளினும்'* (நாலடி, 148). 2. இடம் (பிங்.); place, room, location; site. 3. பகுதி; portion, section. *'மற்றப் புடையெல்லாம் ஒவ்வாது'* (இறை. கள. 1, பக்.23). 4. முறை; method. *'நிர்வகிப்பதும் சில புடைகளுண்டு'* (ஈடு, 10, 10, 11). 5. கிணற்றுப் புடைப்பு (வின்.); side of a wall. 6. எலிவளை (வின்.); rat-hole. 7. துளை (துவாரம்) முதலியன; hole, cave. 8. திரட்சி (யாழ்.அக.); bulkiness. 9. பழமுதலியவற்றின் பருத்த பாகம் (வின்.); protuberance, as in a fruit. 10. ஏழனுருபு (நன். 302); (gram.) a case-ending of the locative.

*[ புல் → புது → புதல் = செறிந்த தூறு, புல்லினம், மருந்துப்பூடு. புது → புதை = அம்புக் கூடு, மரச்செறிவு, செடியடர்த்தி. புதை → புடை. புடைத்தல் = பருத்தல், வீங்குதல். புடை²–, → புடை (வே.க. 3, 76. 77) ]*

**புடை⁵** *puḍai*, பெ. (n.) கட்டி; carbuncle.

*[ புல் → புது → புதை → புடை ]*

**புடைக்கரப்பன்** *pudai-k-karappan,* பெ. (n.) சிறுவர்கட்குப் பித்தத்தின் விளைவாலுண் டாகும் தோல் நோய்; a skin disease in children caused by biliousness.

*[ புடை+ கரப்பான் ]*

**புடைக்கருத்து** *pudai-k-karuttu,* பெ. (n.) இனம் பற்றிச் சார்ந்துவரும் கருத்து (யாழ். அக.); collateral or correlative meaning, as of a word of a passage.

*[ புடை=திரட்சி. புடை+கருத்து. ]*

**புடைக்காலம்** *pudai-k-kālam,* பெ. (n.) இடைப்பட்ட காலம்; intervel. *'புடைக் கால மற்றொத்து'* (தக்கயாகப். 542).

*[ புடை+ காலம் ]*

**புடைக்கொள்(ளு)[1]–தல்** *pudai-k-kol(lu)-,* 7 செ.குன்றாவி. (v.t.) தட்டுதல்; to pat, as one's shoulders in defiance. *'தோட்புடைக் கொள்ளா'* (நாலடி, 312).

*[ புடை+ கொள்–, ]*

**புடைக்கொள்(ளு)[2]–தல்** *pudai-k-kol(lu)-,* 7 செ.கு.வி. (v.i.) அருகு பருத்தல்; to swell, increase in size. *'பால் புடைக் கொண்டு'* (சிலப். 13, 162.).

*[ புடை+ கொள்–, ]*

**புடைகவல்(லு)–தல்** *pudai-kaval(lu)-,* 13 செ.கு.வி. (v.i.) 1. வேறு சிந்தையுடைத்தாதல்; to be worried over a collateral issue; to be distracted. *'இவள் பிறிதொன்றிற்குப் புடைகவன்று நின்ற நிலைமைக்கண் வந்தேன்'* (இறை. கள. 12 பக். 86).

*[ புடை+ கவல்–. கவை → கவல் ]*

**புடைகவற்றி** *pudai-kavarri,* பெ. (n.) வேறுசிந்தை; absent-mindedness, distraction. *'புடை கவற்றியில்லா நிலைமைக்கண் வந்தால்'* (இறை. கள. 12, பக். 87).

*[ புடை+ கவற்றி. கவல் → கவறு → கவற்றி ]*

**புடைகொள்(ளு)[1]–தல்** *pudai-kol(lu)-,* 7 செ.கு.வி. (v.i.) *புடைக்கொள்–,* பார்க்க; see *pudai-k-kol.* *'முலை புடைகொள்ளும்படி தழுவி'* (சீவக. 584, உரை).

*[ புடை+ கொள்–, ]*

**புடைகொள்(ளு)[2]–தல்** *pudai-kol(lu)-,* 7 செ.கு.வி. (v.i.) புரையோடுதல்; to form a running sore. *'கட்டி புடைகொண்டிருக்கின்றது'* (இ.வ.).

*[ புடை+ கொள்–, ]*

**புடைசூழ** *pudaišūla,* வி.அ.(adv.) (ஒருவருடன் அவரைச் சேர்ந்தவர்கள் பலர்) பின் தொடர, சுற்றிவர; followed by (people or one's retinue), surrounded by. மாணவர்கள் புடைசூழ முதல்வர் அரங்கத்திற்கு வந்தார்.

*[ புடை → சூழ–, புடை = பக்கம். சூழ் → சூழ ]*

**புடைநகர்** *pudai-nagar,* பெ. (n.) புறநகர்; suburb. *'புடைநகர்த் தொழிலிடங் கடந்து புக்கபின்'* (சீவக. 85).

*[ புதை → புடை = இடம், பக்கம், புடை+ நகர். புடைநகர் = நகருக்குப் பக்கத்தில் அமைந்த ஊர் ]*

**புடைநூல்** *puḍai-nūl,* பெ. (n.) சார்பு நூல்; a class of work or treatise. *'திரிபு வேறுள்ளது புடை நூலாகும்'* (நன். 8).

*[ புதை → புடை = இடம், பங்கு, சார்பு. புடை + நூல் ]*

**புடைப்பு¹** *puḍaippu,* பெ. (n.) 1. அடிக்கை; stroke. *'துடைப் பேனொரு புடைப் பால்'* (கம்பரா. முதற்போர். 164). 2. கொழிக்கை; sifting. 3. வீங்குகை; swelling, protuberance from a blow. 4. மந்தணம் (இரகசியம்) முதலியன வெளியாகை (வின்.); becoming public or well-known.

தெ. போடு (போர்); கட. போடு (சண்டை)

*[ புடை → புடைப்பு. 'பு' தொ.பெ.ஈறு ]*

**புடைப்பு²** *puḍaippu,* பெ. (n.) 1. வீங்கியிருக்கும் அல்லது தடித்திருக்கும் நிலை; swelling. தலையில் என்ன புடைப்பு, எங்காவது இடித்துக்கொண்டாயா? (உ.வ.). 2. துருத்திக் கொண்டிருக்கும் நிலை; protrusion.

தெ. புட்ட (எறும்புப்புற்று)

*[ புடை → புடைப்பு. 'பு' தொ.பெ.ஈறு ]*

**புடைப்புச்சித்திரம்** *puḍaippu-c-cittiram,* பெ. (n.) *புடைப்புச்சிற்பம்* பார்க்க; see *puḍaippu-c-ciṟpam.*

*[ புடைப்பு + சித்திரம் ]*

**புடைப்புச்சிற்பம்** *puḍaippu-c-ciṟpam,* பெ. (n.) (கல், மரம் போன்றவற்றைச் செதுக்கி அல்லது மாழை (உலோகம்)யை உருக்கி) பின்புலத்திலிருந்து தனித்து முன் தள்ளித் தெரியுமாறு உருவாக்கப்படும் உருவம்; relief. பிள்ளையார்ப்பட்டி பிள்ளையார் சிலை புடைப்பு சிற்பம்.

*[ புடைப்பு + சிற்பம் ]*



**புடைப்பெண்டிர்** *puḍai-p-peṇḍir,* பெ. (n.) வைப்பாட்டிகள்; concubines. *'புடைப்பெண்டிர் மக்களுங் கீழும் பெருகி'* (நாலடி, 368).

*[ புடை + பெண்டிர் ]*

**புடைப்பொன்னாளி** *puḍaippoṉṉāḷi,* பெ. (n.) உடும்பு; guana.

**புடைப்படு¹–தல்** *puḍai-p-paḍu,* 19 செ.குன்றாவி. (v.t.) அணுகுதல்; to approach; to be near. *'என்னாரமுதைப் புடைபட்டிருப்ப தென்று கொல்லோ'* (திருவாச. 27,1)

*[ புடை + படு–, ]*

**புடைப்படு²–தல்** *puḍai-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. இடம்படுதல்; to be roomy, spacious. *'மலைகளைப் புடைபடத் துளைத்து'* (ஈடு, 10, 6, 6). 2. மிகுதியாதல்; to be excessive. *'அரசனும் புடை படக் கவன்று'* (இறை. 1, பக். 7). 3. திரண்டு பருத்தல்; to swell in size; to become round. *'முதிர்ச்சியாற் புடைபடுதல்'* (குறள், 1274, உரை).

*[ புடை + படு–. ]*

**புடைபர–த்தல்** *pudai-para-,* 4 செ.கு.வி. (v.i.) சுற்று விரிதல்; to expand, swell. *'எய்த்திடை வருந்த வெழுந்து புடைபரந்து'* (திருவாச. 4, 33).

*[ புடை + பர–, ]*

**புடைபெயர்[1]–தல்** *pudai-peyar-,* 3 செ.கு.வி. (v.i.) **1.** நிலைமாறுதல்; to change in condition or position, to become topsy-turvy or overturned. *'நிலம்புடைப் பெயர்வதாயினும்'* (புறநா.34). **2.** வெளியேறுதல்; to go beyond; to trangress limits. *'புடைபெயர் கடலென'* (கம்பரா.எழுச்சி.10). **3.** அசைதல்; to move, change place. *'நாப்புடை பெயராது'* (மணிமே.23,16). **4.** தொழிற்படுதல்; to do an action. **5.** எழுந்திருத்தல்; to rise up, get up. *'கனவொடும் புடைபெயர்ந்து'* (குக்கயாகப்.240).

*[ புடை + பெயர்–, ]*

**புடைபெயர்[2]–தல்** *pudai-peyar-,* 3 செ.கு.வி (v.i.) வினைச்சொல் மாற்றுவடிவம் அடைதல்; to conjugate. வினைச்சொல் முக் காலத்திற்கும் புடை பெயரும்.

*[ புடை + பெயர்–,]*

வினைச்சொல் புடைபெயரும் போது கால இடைநிலைகளைக் கொண்டு, காலத்தை உணர்த்தும்.

**புடைபெயர்ச்சி** *pudai-peyarcci,* பெ. (n.) **1.** நிலைமாறுகை; change in condition or position. **2.** வெளியேறுகை; movement; journey as from a place. **3.** கருத்தாவின் தொழிற்பாடு; (gram.) action of the agent.

*[ புடை + பெயர்ச்சி. பெயர் → பெயர்ச்சி. 'சி' தொழிற்பெயரீறு.]*

**புடைமண்** *pudai-man,* பெ. (n.) சுதை (யாழ்.அக.); plaster.

*[ புடை$^3$ + மண் ]*

**புடைமூக்கன்** *pudai-mūkkan,* பெ. (n.) மூக்கிலுண்டாகும் புண் வகையுளொன்று; a kind of ulcer in the nose.

*[ புடை + மூக்கன். முகு → முக்கு → மூக்கு = முகரும் உறுப்பு. மூக்கு → மூக்கன் = மூக்கி லுண்டாகும் புண்]*

**புடையடுப்பு** *pudai-y-aduppu,* பெ. (n.) கொடியடுப்பு (இ.வ.); side-oven.

*[ புடை = பக்கம். புடை + அடுப்பு. அடு → அடுப்பு ]*



**புடையல்** *pudaiyal,* பெ. (n.) மாலை; garland. *'இரும்பனம் புடையல்'* (புறநா.99).

*[ புடை → புடையல். 'அல்' தொ.பெ.ஈறு ]*

**புடையன்** *pudaiyan,* பெ. (n.) பாம்புவகை (நாமதீப.257); wart snake.

*[புடை → புடையன் ]*

**புடையான்குத்து** *pudaiyān-kuttu,* பெ. (n.) நச்சுக்கடிப் புண்ணோய்; an ulcer formed by

poisonous prick by beaver snake with its tail.

*[புடையன் → புடையான் + குத்து]*

**புடையுண்(ணு)-தல்** *puḍai-y-uṇ(ṇu)-,* 16 செ.கு.வி. (v.i.) அடிபடுதல்; to be beaten, thrashed. *'பேயினாற் புடையுண்டாரோ'* (பாரத.சூது.267).

*[புடை + உண்-,]*

**புடைவை** *puḍaivai,* பெ. (n.) 1. ஆடை; garment. *'வெண்புடைவை மெய்சூழ்ந்து'* (பெரியபு. திருநாவுக்.1.). 2. பெண்கள் இடுப்பில் சுற்றி கைச்சட்டை (ரவிக்கை)க்கு மேல் வரும் வகையில் கட்டிக்கொள்ளும் மேலாடை, மகளிர் சீலை; saree.

ம.புட,புடவ; தெ.புட்டமு(துணி); கோத.பொர்வ; குட. பொடெய; Skt. phuṭṭikā (ஒருவகைத்துணி)

*[புடை → புடைவை = சுற்றிக்கட்டும் ஆடை, மகளிர் சேலை (வே.க.3,77)]*

**புடோல்** *puḍōl,* பெ. (n.) *புடல்* பார்க்க; see *puḍal*.

*[புழு → புழல் → புடல் = உட்டுளையுள்ள புடலங்காய். புடல் → புடோல்]*

த. புடோல் > Skt. paṭōli

**புடோலங்காய்** *puḍōlaṅ-kāy,* பெ. (n.) புடலங்காய். (தொல்.எழுத்து. 405, உரை.); fruit of snake gourd.

*[ புடலங்காய் → புடோலங்காய் ]*

**புண்** *puṇ,* பெ. (n.) 1. உடற்றோலில் உண்டாம் ஊறு; raw sore,ulcer, wound. *'தீயினாற் சுட்டபுண்'* (குறள்,129). 2. தசை; flesh. *'பிறவற்றின் புண்ணுமாந்தி'* (சீவக.2822). 3. வடு; scar, scratch. 'கொடிற்றுப்புண்' (கலித்.95). 4. மனநோவு; soreness of heart. *'புண்டரு நெஞ்சினள்'* (சேதுபு.கத்துரு.15.)

ம. புண், புண்ணு, க. புண், குண், குண்ணு; கோத. புண் தெ. புண்டு; பட. குண்ணு; து. புடி; குட. புண்ணீ; நா; கொலா, புன்; மா.புனு.

*[ புல் → புள் → பிள் → பிழம்பு = திரட்சி. புல் → புள் → புண் = தோலில் திரண்டு காணப்படும் ஊறு, திரண்டது போல் தெரியும் வடு, திரண்டதசை, புண்வலிப்பது போன்று உணரும் மனநோவு.]*

**புண்வகைகள்:** varities of ulcer. 1. நெருப்புப் புண்; burns. 2. இணைவிழைச்சு (மேக)ப்புண்; venereal ulcer. 3. வெள்ளைப் புண்; gonorr heal ulcer. 4. ஆறாப்புண்; chronic ulcer. 5. வேனற்கட்டி(கிரந்திப்புண்); syphilitic secondary rashes. 6. ஒட்டுப்புண்; contagious sore. 7. குழிப்புண்; deep sore or perforating ulcer. 8. நீரிழிவுப்பரு(இராசப்புண்); diabetic-carbuncle. 9. கரப்பான்புண்; eczema. 10. பரங்கிப்புண்; syphilitic primary sore. 11. வெட்டுப்புண்; incised wound. 12. காயப்புண்; traumatic sore. 13. அழிப்புண்; slonghing sore. 14. கொறுக்குப்புண்; chancre. 15 வெடித்தப்புண்; fissured ulcer. 16. அழற்புண்; inflamed ulcer. 17. இதளிய நஞ்சு(இரச வேக்காட்டு)ப்புண்; ulcer caused by mercurial poisoning. 18. புற்றுப்புண்; fungus ulcer. 19. வயிற்றுப்புண்; gastric ulcer. 20. துளைப்புண், புரைப்புண்; sinus. 21. அரிப்புண்; rodent ulcer eating away the tissues.

**புண்கரப்பன்** *puṇkarappaṉ,* பெ. (n.) குழந்தை களுக்கு வரும் கரப்பன் புண்வகை; a kind of eczema in children.

*[ புண் + கரப்பன் ]*

**புண்கழுநீர்** *puṇkaḻunīr,* பெ. (n.) புண்கள் அல்லது காயத்தைக் கழுவுவதற்குப் பயன் படுத்தும் காய்ச்சிய மருந்து நீர்; liquid used for cleaning the ulcers and wounds.

*[ புண் + கழுநீர்]*

**புண்களுபகாரி** *puṅgaḷubagāri,* பெ. (n.) கறுப்பரிசி; black rice.

**புண்சுரம்** *puṇśuram,* பெ. (n.) ஆறாத காயத்தினாலேற்படுங் காய்ச்சல்; fever arising from wound.

*[ புண் + சுரம். சுள் → சுர் → சுரம் ]*

**புண்டரம்** *puṇḍaram,* பெ. (n.) சந்தனம் நீறு முதலியவற்றால் நெற்றி முதலியவற்றில் தரிக்கும் குறி; marks on the forehead and other parts of the body, made with sandal, sacred ashes or earth. 'புண்டரவிசால நெற்றிப் புரவல' (பாரத.சூது.28).

*[ புடம் → புண்டம் → புண்டரம். புடம்போடுதல் = எரித்து நீறாக்குதல். மா.வி.அகரமுதலி புண்டர என்னும் சொற்குப் பத்திமை (பக்தி)யுடன் இருத்தல் என்னும் பொருளுடைய 'புண்' என்பதை வேராகக் காட்டுகிறது. திருநீறு பூசிவழிபடுதல் பழந்தமிழர் வழக்க மாயிருப்பதையும் வேள்வி வழிப் பாட்டாளர்க்கு இது உரியதன்று என்பதையும் பார்க்கும் போது இச்சொல் தென்சொல்லென்பது பெறப்படும். மேலும் திருநீறுபூசுதல் முதன்மையாயிருந்து அதனின்றுபத்திமைத்தன்மை வளர்ந்தது என்று குறித்திருப்பதன் பொருத்தப் பாட்டின்மையும் நோக்கத் தக்கது ]*

**புண்டவம்** *puṇḍavam,* பெ. (n.) சாரணை (சங்.அக.); purslane leaved trianthema.

**புண்டு** *puṇḍu,* பெ. (n.) நரம்புச் சிலந்தியின் புண்; guinea worm ulcer.

*[ புண் → புண்டு]*

**புண்டுவிரிஞ்சான்** *puṇḍuviriñjāṉ,* பெ. (n.) மீன்வகை; a kind of fish.

*[ புண்டு + விரிஞ்சான்]*

**புண்டை** *puṇḍai,* பெ. (n.) பெண்குறி; pudendum muliebre.

கோத. பிட்; துட. பீடி

*[ புல் → புர் → புரை = உட்டுளை,உட்டுளைப் பொருள். புல் → புள் → புண் → புண்டை = துளையுள்ளது]*

**புண்ணடிப் பறிச்சல்** *puṇṇaḍi-p-paṟiccal,* பெ. (n.) புரைப்புண்; elongated abscess with only a small orifice, sinus. (M.L.).

*[ புண் + அடி + பறிச்சல்.]*

**புண்ணழற்சி** *puṇ-ṇ-aḻaṟci,* பெ. (n.) புண்ணால் உண்டாம் எரிவு (யாழ்ப்.); smart of a sore.

*[ புண் + அழற்சி. அழல் → அழற்சி. 'சி' தொழிற்பெயரீறு.]*

**புண்ணழற்றி** *puṇ-ṇ-aḻaṟṟi,* பெ. (n.) புண்ணில் வைக்கும் காரமருந்து; caustic or antiseptic applied to ulcers or abscess. (M.M.).

*[புண் + அழற்றி. அழல் (த.வி.) - அழற்று (பி.வி.) → அழற்றி. 'இ'வி.மு.ஈறு]*

**புண்ணழற்றுதல்** *puṇ-ṇ-aḻaṟṟudal,* பெ. (n.) *புண்ணழற்சி* (யாழ்ப்.) பார்க்க; see *puṇṇaḻaṟci.*

*[புண் + அழற்றுதல். 'தல்' தொ.பெ. ஈறு. அழல்(அழலுதல்) (த.வி.) → அழற்று (பி.வி.). அழற்றுதல் = அழலச் செய்தல்]*

**புண்ணழுக்கு** *puṇ-ṇ-aḻukku,* பெ. (n.) புண்ணினின்று தோன்றும் அழுக்கு; dirt of a sore.

க. புண்பொலசு.

*[புண் + அழுக்கு]*

**புண்ணளை** *puṇ-ṇ-aḷai,* பெ. (n.) **1.** புண்ணின் குழி (யாழ்ப்.); cavity or orifice in an ulcer. **2.** மூலம்;fistula

*[புண் + அளை. உள் → அள் → அளை = துளை]*

**புண்ணாக்கர்மூலி** *puṇṇākkar-mūli,* பெ. (n.) மூலிகை வகையு ளொன்று; a herb.

**புண்ணாக்கீசர்** *puṇṇākkīšar,* பெ. (n.) பதினெண் சித்தருளொருவர்; one of eighteen Siddhar.

**புண்ணாக்கு-தல்** *puṇ-ṇ-ākku-,* 15 செ.குன்றாவி. (v.t.) **1.** புண் உண்டாக்குதல்; to do or cause to ulcer, make wound. **2.** பிறர் மனத்தை நோகச் செய்தல்; to hurt, wound one's feelings. பிறருடைய உணர்வுகளைப் புண்ணாக்குமாறு பேசக் கூடாது (உ.வ.).

க. புண் படிசு; தெ. புண்டுசேயு

*[புண் + ஆக்கு-, ஆகு(த.வி.) – ஆக்கு (பி.வி.)]*

**புண்ணாக்கு** *puṇṇākku,* பெ. (n.) *பிண்ணாக்கு* (கொ.வ.) பார்க்க; see *piṇṇākku.*

*[பிண்ணாக்கு (பிளவுபட்ட நாக்குப் போலிருப்பது) → புண்ணாக்கு]*

**புண்ணாக்குக்கீரை** *puṇṇākku-k-kīrai,* பெ. (n.) பிண்ணாக்குப் பூண்டு (இ.வ.); a herb.

*[புண்ணாக்கு + கீரை. பிண்ணாக்கு → புண்ணாக்கு]*

**புண்ணாக்குகை** *puṇ-ṇ-ākkugai,* பெ. (n.) சீழ்ப்பிடிக்கை; becoming ulcerated.

*[புண் + ஆக்குகை]*

**புண்ணாக்குப்பூண்டு** *puṇṇākku-p-pūṇḍu,* *பிண்ணாக்குப் பூண்டு* பார்க்க; see *piṇṇākku-p-pūṇḍu.*

*[பிண்ணாக்குப் பூண்டு - புண்ணாக்குப் பூண்டு. புள் → பூண்டு]*

**புண்ணாங்குழி** *puṇṇāṅ-kuḻi,* பெ. (n.) குழிப்புண் (இ.வ.); internal ulcer.

*[புண் + ஆம் + குழி]*

**புண்ணாணி** *puṇ-ṇ-āṇi,* பெ. (n.) புண்ணின் அடிமுளை; core of an ulcer.

*[புண் + ஆணி]*

**புண்ணாளி** *puṇ-ṇ-āḷi,* பெ. (n.) புண்ணுடை யோன்; one having sores.

*[புண் + ஆளி]*

**புண்ணாற்றி** *puṇ-ṇ-āṟṟi,* பெ. (n.) புண்ணைக் குணப்படுத்தும் மருந்து; medicine that heals the sores.

*[புண் + ஆற்றி. ஆறு → ஆற்று → ஆற்றி.]*

**புண்ணானவுடம்பு** *puṇṇāṉa-v-uḍambu,* பெ. (n.) புண் போல் நோகுந்தன்மை யுள்ளவுடம்பு; pain in the body with tenderness as there is ulcer.

*[புண் + ஆன + உடம்பு]*

**புண்ணியக்கருத்து** *puṇṇiya-k-karuttu,* பெ. (n.) வள்ளல் மனம் (தரும சிந்தை) (யாழ்.அக.); charitable mind.

*[புண்ணியம்+ கருத்து]*

**புண்ணியக்காலம்** *puṇṇiya-k-kālam,* பெ. (n.) நல்ல நேரம்; an auspicious time.

**ம., க.** புண்யகால; **தெ.** புண்யகாலமு

*[புண்ணியம் + காலம்]*

**புண்ணியக்குழம்பு** *puṇṇiya-k-kuḻambu,* பெ. (n.) புண்ணிய சாந்தம் பார்க்க; see puṇṇiya-šāndam. '*வெண்ணெயொண்பாப் புண்ணியக் குழம்பு*' (ஞானா.34,10).

*[புண்ணியம்+ குழம்பு]*

**புண்ணியகதை** *puṇṇiya-kadai,* பெ. (n.) மறவனப்பு தொன்மங்கள் (இதிகாச புராணங்கள்); sacred story, as the purāṇās.

*[புண்ணியம் + கதை]*

**புண்ணியகந்தம்** *puṇṇiya-kandam,* பெ. (n.) சண்பகம் (சங்.அக); champak.

*[புண்ணியம் + கந்தம்]*

**புண்ணியகருமம்** *puṇṇiya-karumam,* பெ. (n.) நற்செயல் (வின்.); meritorious act.

*[புண்ணியம் + கருமம். கரு → கரும் → கருமு → கருமம்]*

**புண்ணியகாரம்** *puṇṇiya-kāram,* பெ. (n.) குங்கிலியம் (சங்.அக.); koṅkani resin.

*[புண்ணியம் + காரம்]*

**புண்ணியகாரியம்** *puṇṇiya-kāriyam,* பெ. (n.) *புண்ணியகருமம்* பார்க்க; see *puṇṇiya karumam.*

*[புண்ணியம் + காரியம்]*

Skt. kārya > **த.** காரியம்

**புண்ணியகாலம்** *puṇṇiya-kālam,* பெ. (n.) சமயச் சடங்குகளைக் கடைப்பிடிக்க ஏற்ற வெள்ளுவா (பௌர்ணமி), கோள்மறைப்பு (கிரணம்) ஆகியன நிகழும் காலம் (சேதுப. சேதுபல.23); auspicious time for the performance of religious rites, as the time of a new moon or an eclipse.

**க.** புண்யகால

*[புண்ணியம் + காலம்]*

**புண்ணியகீர்த்தி** *punniya-kirtti,* பெ. (n.) தூய்மையான புகழ்; holy praise. "*புண்ணிய கீர்த்திநுஞ் செவிமடுத்து*" (திவ்.திருச்சந்.67)·

*[புண்ணியம் + கீர்த்தி. சீர் = சிறப்பு, புகழ். சீர் → சீர்த்தி = பெரும்புகழ். சீர்த்தி → கீர்த்தி. ச–க ஒ.நோ. செய்–கை, செம்பு–கெம்பு. சேரலம்–கேரலம்.]*

**புண்ணியகேத்திரம்** *punniya-kēttiram,* பெ. (n.) *புண்ணிய பூமி* (வின்.) பார்க்க; see *punniyabūmi.*

*[புண்ணியம் + கேத்திரம்]*

Skt. ksētra › **த.** கேத்திரம்.

**புண்ணியச்செயல்** *punniya-c-ceyal,* பெ. (n.) நற்செயல்; meritorious act.

*[புண்ணியம் + செயல்]*

**புண்ணியசடம்** *punnia-šadam,* பெ. (n.) தூயவன் (பரிசுத்தமானவன்) (யாழ்.அக.); holy person.

*[புண்ணியம் + சடம்]*

**புண்ணியசரவணம்** *punniya-šaravanam,* பெ. (n.) அழகர் மலையிலுள்ள ஒரு பழைய பொய்கை (சிலப்.11,94); an ancient sacred pool in the Alagar hills near Madurai.

**மறுவ.** சரவணப் பொய்கை.

*[புண்ணியம் + சரவணம்]*

**புண்ணியசரித்திரம்** *punniya-šarittiram,* பெ. (n.) *புண்ணியகதை* (வின்.) பார்க்க; see *punniyakadai.*

**க.** புண்யசரிதெ

*[புண்ணியம் + சரித்திரம்]*

Skt. caritra › **த.** சரித்திரம்

**புண்ணியசரீரம்** *punniya-šariram,* பெ. (n.) *புண்ணிய சடம்* (வின்.) பார்க்க; see *punniya šadam.*

*[புண்ணியம் + சரீரம்]*

Skt. sarira › **த.** சரீரம்

**புண்ணியசன்மம்** *punniya-šanmam,* பெ. (n.) **1.** முற்பிறவிகளிற் செய்துள்ள புண்ணியங் களால் நற்பிறவி யெடுத்தவன் (வின்.); one born with a virtuous disposition as a result of good deeds in former births. **2.** *புண்ணிய சடம்* (யாழ்.அக.) பார்க்க; see *punniya-šadam.*

*[புண்ணியம் + சன்மம்]*

Skt. janmam › **த.** சன்மம்.

**புண்ணியசனம்** *punniya-šanam,* பெ.(n.) **1.** தூய்மையர்; holy person. **2.** அசுரர் அல்லது அரக்கர் (இராக்கதர்) வகை (பரிபா.5;5, உரை.); a class of Asuras or Rāksasas.

**க.** புண்யசன

*[புண்ணியம் + சனம்]*

Skt. jana › **த.** சனம்

**புண்ணியசனேசுவரன்** *punniya-šanēusuvaran,* பெ. (n.) குபேரன் (யாழ்.அக.); Kubēra.

*[புண்ணியம் + சனேசுவரன்]*

Skt. janēšvara › **த.** சனேசுவரன்

**புண்ணியசாந்தம்** *punniya-šāndam,* பெ. (n.) 1. சாணி (திவா.); cowdung. 2. திருநீறு (பிங்.); sacred ashes.

*[புண்ணியம் + சாந்தம்]*

**புண்ணியசாந்து** *punniya-šāndu,* பெ. (n.) *புண்ணிய சாந்தம்* (சங்.அக.) பார்க்க; see *punniyašāndam.*

*[புண்ணியம் + சாந்து]*

**புண்ணியசாலி** *punniya-šāli,* பெ. (n.) ஆகூழ்க்காரன் (பாக்கியவான்)(கொ.வ.); fortunate person.

*[புண்ணியம் + சாலி]*

**புண்ணியசுரூபி** *punniyašurūbi,* பெ. (n.) *புண்ணிய வடிவினன்* (வின்.) பார்க்க; see *punniya-vaḍivinaṉ.*

*[புண்ணிய + சுரூபி]*

Skt. svarūpin > த. சுரூபி

**புண்ணியசேடம்** *punniya-šēḍam,* பெ. (n.) எடுத்த பிறவியில் நுகர்ந்தது போகப் பிற் பிறவியில் நுகர எஞ்சிநிற்கும் நல்வினை; unexhausted merit attaching to the soul of a person, left over to be exhausted in subsequent births.

*[புண்ணியம் + சேடம்]*

Skt. šēaṣa > த. சேடம்

**புண்ணியசொரூபி** *punniyašorūbi,* பெ. (n.) புண்ணிய வடிவினன் பார்க்க; see punniya-vaḍivinaṉ.

*[புண்ணியம் + சொரூபி]*

Skt. šuarūpin > த. சொரூபி.

**புண்ணியத்தலம்** *punniya-t-talam,* பெ. (n.) *புண்ணிய தலம்* பார்க்க; see *punniya-talam.*

*[புண்ணியம் + தலம். தலை → தலம்]*

**புண்ணியத்தானம்** *punniya-t-tāṉam,* பெ. (n.) 1. (சாதகனுடைய) புண்ணியத்தைக் குறிப்பதாகிய ஒன்பதாமிடம் (யாழ்.அக.); (astrol.), the ninth house from the rising sign at birth. 2. புண்ணியத் திருவிடம்; sacred place.

*[புண்ணியம் + தானம்]*

**புண்ணியத்துறை** *punniya-t-tuṟai,* பெ. (n.) 1. புண்ணியத்தைப் பயக்கும் நீர்த் துறை. sacred bathing ghat. "*புண்ணியத்துறை களாடி*" (கம்பரா.கைகேசி.107). 2. புண்ணியத் துறையின் நீர்; sacred water. "*புண்ணிய நீரில்... மண்ணிய வாளின்*" (பு.வெ.6,27).

*[புண்ணியம் + துறை]*

**புண்ணியத்தோற்றம்** *punniya-t-tōṟṟam,* பெ. (n.) நன்மக்களிடம் தோன்றுதற்குரிய தவம், ஒழுக்கம், கொடை, கல்வி என்ற நால்வகைச் சிறந்த குணங்கள் (சூடா.); characteristics of a good person of four kinds, viz., tavam, oḻukkam, koḍai, kalvi.

*[புண்ணியம் + தோற்றம். தோன்று → தோற்று → தோற்றம்]*

**புண்ணியதலம்** *punniya-talam,* பெ. (n.) தூய்மையான திருவிடம்; sacred place.

*[புண்ணியம் + தலம்]*

**புண்ணியதானம்[1]** *punniya-dānam,* பெ. (n.) புண்ணியந் தருங் கொடை; gifts made on special occasions considered meritorious. *"புண்ணிய தானம் புரிந்தோனாதலின்"* (சிலப்.15,30).

*[புண்ணியம் + தானம்]*

**புண்ணியதானம்[2]** *punniya-dānam,* பெ. (n.) *புண்ணியவேள்வி* (இ.வ.) பார்க்க; see *punniya-vēḷvi.*

*[புண்ணியாகவாசனம் → புண்ணியதானம்]*

**புண்ணியதிசை** *punniya-tišai,* பெ. (n.) வடதிசை; the north, as the sacred direction. *"புண்ணிய திசைமுகம் போகிய வந்நாள்"* (சிலப்.5,94).

*[புண்ணியம் + திசை]*

**புண்ணியதிருணம்** *punniya-tiruṇam,* பெ. (n.) வெண்டருப்பை (மலை.); white darbha-grass.

*[புண்ணியம் + திருணம்]*

**புண்ணியதினம்** *punniya-dinam,* பெ. (n.) *புண்ணிய நாள்* பார்க்க; see *punniya - nāḷ.*

க. புண்யதின

*[புண்ணியம் + தினம்]*

Skt. dina> த. தினம்

**புண்ணியதீர்த்தம்** *punniya-tīrttam* பெ. (n.) 1. *புண்ணியத் துறை* பார்க்க; see *punniya-t-tuṟai.* 2. *புண்ணிய நீர்* பார்க்க; see *punniya nīr.*

*[புண்ணியம் + தீர்த்தம்]*

**புண்ணியதேகம்** *punniya-dēgam,* பெ. (n.) *புண்ணியவுடம்பு* பார்க்க; see *punniya-v-uḍambu.*

*[புண்ணியம் + தேகம்]*

Skt. dēha › த. தேகம்.

**புண்ணியநதி** *punniya-nadi,* பெ. (n.) புண்ணியம் பயக்கும் ஆறு; sacred river. *"புண்ணிய நதிகளின் நீரை"* (சிலப்.3, 122,உரை.).

க. புண்யநதி

*[புண்ணியம் + நதி]*

Skt. nadin › த. நதி

**புண்ணியநல்லுரை** *punniya-nallurai,* பெ. (n.) நல்லுரை (உபதேச) மொழி; sacred teaching.. *"புண்ணிய நல்லுறை யறிவீர் பொருந்துமின்"* (மணிமே.1,59.)

*[புண்ணியம் + நல்லுரை]*

**புண்ணியநாள்** *punniya-nāḷ,* பெ. (n.) சிறப்பு (விசேட) நாள்; holy day, day fit for performance of religious rites.

*[புண்ணியம் + நாள்]*

**புண்ணியநிலம்** *punniyanilam,* பெ. (n.). 1. புண்ணியத் திருவிடம்; sacred place. 2. இமயத்துக்கும் விந்தத்துக்கும் இடையிலுள்ள தேசம்; the tract of country in India lying between the Himālayas and the Vindhya mountains.

*[புண்ணியம் + நிலம்]*

**புண்ணியநீர்** *punniya-nīr*, பெ. (n.) புண்ணியத் துறையின் நீர்; sacred water. "*புண்ணிய நீரில் .... மண்ணிய வாளின்*" (பு.வெ.6,27).

க. புண்யசல

*[புண்ணியம் + நீர்]*

**புண்ணியபலம்** *punniya-palam*, பெ. (n.) நல்வினைப் பயன் (வின்.); fruit of past meritorious deeds.

க. புண்யபல

*[புண்ணியம் + பலம்]*

Skt. phala> த. பலம்

**புண்ணியபுத்திரன்** *punniya-puttiran*, பெ. (n.) நன்மகன் (சற்புத்திரன்) (யாழ்.அக.); good, virtuous son.

*[புண்ணியம் + புத்திரன்]*

**புண்ணியபுருடன்** *punniya-purudan*, பெ. (n.) நல்லோன் (சற்புருடன்) (வின்.); venerable man.

*[புண்ணியம் + புருடன்]*

Skt. puruṣa > த. புருடன்

**புண்ணியபூ** *punniya-pū*, பெ. (n.) *புண்ணிய நிலம்* (வின்.) பார்க்க; see *punniya nilam*.

*[புண்ணியம் + பூ]*

**புண்ணியபூமி** *punniya-būmi*, பெ. (n.) *புண்ணிய நிலம்* பார்க்க; see *punniyanilam*.

ம., தெ. புண்யபூமி

*[புண்ணியம் + பூமி]*

**புண்ணியம்¹** *punniyam*, பெ. (n.) 1. அறம் (தருமம்) (உரி.நி.); virtue, moral or religious merit. 2. நல்வினை; charity, good deeds. "*புண்ணியம் பாவம் புணர்ச்சி பிரிவென்றிவையாய்*" (திவ்.திருவாய்.6,3,4). 3. நல்வினைப் பயன்; merit of virtuous deeds done in previous births. "*வையத் துப் புண்ணியமோ வேறே*" (நாலடி,264). 4. தூய்மை; purity, holiness. 5. ஒன்பான் செயல்களுள் ஒன்றான மனவமைதியைத் தரும் நற்கருமம் (சீவக.2814.உரை); (Jaina) good karma which brings peace of mind, one of nava-padārttam, q.v. 6. தெய்வத் தன்மை (யாழ்.அக.); divine nature. 7. ஒன்பான்(நவ)புண்ணியம்; acts of hospitality shown to an honoured guest. 8. பணிவு (நகங்கிருதி), கொடை (தானம்), நோன்பு (விரதம்), நட்பு (சினேகம்), உணவளிக்கை (நயபோசனம்), பொறுமை (கமை), ஊக்கம் (உற்சாகம்) என எழுவகைப்பட்ட நற்செய்கை (யாழ்.அக.); meritorious acts, of seven kinds viz., nagaṅkirudi, tāṉam, viradam, sinēgam, nayapōšanam, kamai, uṟcāgam. 9. புண்ணியசாந்தம் (அரு.நி.) பார்க்க; see punniya - šandam. 10. நீர்த்தொட்டி (யாழ்.அக.); trough.

க. புண்ய; தெ. புண்யமு

*[புல்லுதல் = பொருந்துதல். புல் → புர் → புரை. புரைதல் = பொருந்துதல். புல் → புள் → புண் → புணர். புணர்தல் = பொருந்துதல். புண் → பூண் = (பொருந்த)அணிதல், (விலங்கு) மாட்டுதல், சூழ்ந்து கொள்ளுதல். புள் → புண் → புண்ணியம் = ஏற்றுக்கொள்ளும் (பூணும்)அறம், மேற்கொள்ளும் நல்வினை ]*

புண்ணியம் என்னும் சொல் மேலை யாரிய மொழிகளில் இன்மையால் அது வடநாட்டுச்சொல்லே. சமற்கிருதமன்று (த.ம.150)

puṇya, (pūṇya, huṇya, hūṇya) good, right, just, beautiful etc. Could the original meaning be that is to be assented to (of D.pūṇ) - puṇya, a habitation. This has been formed of D.pūṇ, to put together; to construct. (KKED.XL)

**புண்ணியம்²** *puṇṇiyam,* பெ. (n.) புளிநறளை; a spreading plant.

**புண்ணியம்செய்–தல்** *puṇṇiyam-šey,* 1 செ.கு.வி. (v.i.) நற்செயல் புரிதல்; to do good.

க. புண்ணியங்கெய்.

*[ புண்ணியம் + செய் ]*

**புண்ணியமுதல்வன்** *puṇṇiya-mudalvaṉ,* பெ. (n.) 1. கடவுள்; god, as the most holy. 2. புத்தன் (திவா.); Buddha.

மறுவ. அண்ணல், முக்குற்றமில்லோன், எண்ணால் கண்ணுடையோன், பூமிசை நடந்தோன்.

*[ புண்ணியம் + முதல்வன் ]*

**புண்ணியமுதல்வி** *puṇṇiya-mudalvi* பெ. (n.) 1. மலைமகள் (பார்வதி) (பிங்.); Pārvadi. 2. தவத்திற் சிறந்தவள்; a woman of austere, penance. "*புண்ணிய முதல்வி திருத்தடி பொருந்தி*" (சிலப்.13,2).

*[ புண்ணியம் + முதல்வி ]*

**புண்ணியமூர்த்தி** *puṇṇiya-mūrtti,* பெ. (n.) 1. புண்ணியமே உருவெடுத்தாற் போன்றவன்; a holy person, considered an embodiment of virtue. "*புண்ணிய மூர்த்தி தன்னைக் காணலாம் என்னும் ஆசை*" (கம்பரா. மாயாசன.22) 2. கடவுள்; god. 3. புத்தன் (திவா.); Buddha. 4. அருகன் (பிங்.); Arhat.

க. புண்யமூர்த்தி

*[ புண்ணியம் + மூர்த்தி ]*

Skt. mūrtti > த. மூர்த்தி

**புண்ணியராத்திரம்** *puṇṇiyarāttiram,* பெ. (n.) *புண்ணிய விரவு* (வின்.) பார்க்க; see *puṇṇiya-v-iravu.*

*[ புண்ணியம் + ராத்திரம் ]*

Skt. rātra > த. ராத்திரம்

**புண்ணியலோகம்** *puṇṇiyalōgam,* பெ. (n.) *புண்ணியவுலகம்* பார்க்க; see *puṇṇiya-v-ulagam.*

க. புண்யலோக

*[ புண்ணியம் + லோகம். உலகம் → லோகம் ]*

**புண்ணியவடிவினன்** *puṇṇiya-vaḍiviṉaṉ,* பெ. (n.) 1. புண்ணிய வடிவான கடவுள்; god, as the embodiment of goodness. 2. தெய்வவுருவினன் (திவ்வியரூபி); divine form or personality.

*[ புண்ணிய + வடிவினன் ]*

**புண்ணியவதி** *puṇṇiyavadi,* பெ. (n.) *புண்ணிய வாட்டி* பார்க்க; see *puṇṇiya-vāṭṭi.*

க. புண்யவதி

*[ புண்ணியவான் (ஆ.பா.) → புண்ணியவதி (பெ.பா.) ]*

**புண்ணியவந்திரி** *punniya-vandiri,* பெ. (n.) மரவகை; a tree.

**புண்ணியவரசு** *punniya-v-arašu,* பெ. (n.) அரசமரவகையு ளொன்று; ficus reli.

**புண்ணியவாட்டி** *punniya-vātti,* பெ. (n.) **1.** நற்பண்புகளையுடையவள்; woman of religious merit. **2.** நற்பேறு பெற்றவள்; lucky woman. **3.** வள்ளன்மை கொண்டவள் (தருமஞ்செய்பவள்); a benevolent woman.

*[புண்ணியவாளன் (ஆ.பா.) - புண்ணிய வாட்டி (பெ.பா.)]*

**புண்ணியவாளன்** *punnia-v-ālan,* பெ. (n.) *புண்ணியவான்* பார்க்க; see *punniyavān.*

**தெ.** புண்யுடு

*[புண்ணியம் + ஆளன்]*

**புண்ணியவான்** *punniyavān,* பெ. (n.) **1.** புண்ணியமிக்கவன்; person of great religious merit. "*சிவபூசைபுரி புண்ணிய வானன்*" (சிவரக.தேவர்முறை.15). **2.** நற்பேறு பெற்றவன்; lucky person. **3.** அறம் (தருமஞ்) செய்பவன் (இ.வ.); a benevolent person.

**ம.** புண்யவான்; **தெ.** புண்யடு.

*[ புண்ணியம் → புண்ணியவான் ]*

**புண்ணியவிரவு** *punniya-v-iravu,* பெ. (n.) சடங்கு செய்வதற்கு ஏற்ற நல்லிரவு; auspicious night for performance of ceremonies.

*[ புண்ணியம் + இரவு ]*

**புண்ணியவுடம்பு** *punniya-v-udambu,* பெ. (n.) தூய்மையானவ–ன்–ள்; holy person.

*[ புண்ணியம் + உடம்பு]*

**புண்ணியவுலகம்** *punniya-v-ulagam,* பெ.(n.) தேவருலகம்; the world of the gods.

**தெ.** புண்யலோகமு.

*[ புண்ணியம் + உலகம்]*

**புண்ணியவேள்வி** *punniya-vēlvi,* பெ. (n.) தூய்மை யாக்கச் செய்யும் சிறப்புச் சடங்கு; purificatory ceremony.

*[ புண்ணியம் + வேள்வி]*

**புண்ணியன்** *punniyan,* பெ. (n.) **1.** புண்ணியவான் பார்க்க; see punniyavān. "*புண்ணியர் கூடி*" (சீவக.301). **2.** அறவோன்; virtuous man. 'புலவன் தீர்த்தன் புண்ணியன் புராணன்' (மணிமே. 5,98). **3.** கடவுள்; god, as the holy being. "*அனந்தன் மேற்கிடந்த வெம்புண்ணியா*" (திவ்.திருச்சந்.45). **4.** சிவபெருமான் (பிங்.); Sivan. "*பெருந்துறை யெம்புண்ணியன்*" (திருவாசக.43,1). **5.** அருகன் (பிங்.); Arhat. **6.** புத்தன் (யாழ்.அக.); Buddha.

**தெ.** புண்யடு, புண்யவந்துடு

*[ புண்ணியம் → புண்ணியன் ]*

**புண்ணியாக்கம்** *punniyākkam,* பெ. (n.) குந்துருக்கம் (சங்.அக.); konkany resin.

**புண்ணியாகம்** *punniyāgam,* பெ. (n.) *புண்ணிய வேள்வி* பார்க்க; see *punniyavēlvi.*

*[ புண்ணியம் + யாகம் ]*

Skt. yāga > **த.** யாகம்

**புண்ணியாகவாசனம்** *puṇṇiyākavāšanam,* பெ. (n.) *புண்ணிய வேள்வி* பார்க்க; see *puṇṇiyavēḷvi.* "*விதிவழியே புண்ணியாக வாசனஞ் செய்து*" (நாகைக் காரோ.புண்டரீக முனி.11).

*[ புண்ணியம் + யாகவாசனம் ]*

Skt. yāga > த. யாகம்

Skt. vācana > த. வாசனம்

**புண்ணியாத்துமா** *puṇṇiyāttumā,* பெ. (n.) *புண்ணியவான்* பார்க்க; see *puṇṇiyavāṉ.*

தெ. புண்யாத்முடு

*[ புண்ணியம் + ஆத்துமா ]*

Skt. ātmā > த. ஆத்துமா

**புண்ணியாவாசனம்** *puṇṇiyāvāšaṉam,* பெ. (n.) *புண்ணிய வேள்வி* பார்க்க; see *puṇṇiyavēḷvi.* "*பொருந்து புண்ணியா வாசனமும்*" (திருவானைக்.கோச்.செங்.31).

*[ புண்ணியம் + வாசனம் ]*

Skt. vācana > த. வாசனம்

**புண்ணியானம்** *puṇṇiyāṉam,* பெ. (n.) *புண்ணிய வேள்வி* பார்க்க; see *puṇṇiyavēḷvi.*

*[ புண்ணியாகவாசனம் → புண்ணியானம் ]*
Skt. yāna > த. யானம்

**புண்ணியை** *puṇṇiyai,* பெ. (n.)
1. *புண்ணியவதி* பார்க்க; see *puṇṇiyavadi.*
2. துளசி; sacred basil.

*[ புண்ணியன் (ஆ.பா.) - புண்ணியை (பெ.பா.) ]*

**புண்ணியோதயம்** *puṇṇiyōdayam,* பெ. (n.) ஆகூழ் (அதிட்டம்) (யாழ்.அக.); luck.

*[ புண்ணியம் + உதயம் ]*

**புண்ணிலளை** *puṇṇil-aḷai,* பெ. (n.) *புண்ணளை* (யாழ்ப்.) பார்க்க; see *puṇṇaḷai.*

*[ புண் + இன் + அளை – புண்ணினளை → புண்ணிலளை ]*

**புண்ணிற்புரை** *puṇṇiṟ-purai,* பெ. (n.) புண்ணிலோடும் புரை; sinus.

*[ புண் + இன் + புரை. புல் → புர் → புரை = உட்டுளைப் புண்.*
*புண்ணிற்புரை = புண்ணுக்குள்ளோடும் புரை ]*

**புண்ணிற்பூ** *puṇṇiṟ-pū,* பெ. (n.) புண்ணிலுண்டாகும் பூச்சி; maggot formed in an ulcer. (M.L.).

*[ புண் + இன் + பூ ]*

**புண்ணீர்** *puṇṇīr,* பெ. (n.) அரத்தம்; blood, serum. "*புண்ணீர் மாந்தி*" (பிரமோத்.2, 17).

*[ புண் + நீர் ]*

**புண்ணீர்வடிகை** *puṇṇīr-vaḍigai,* பெ. (n.) புரையோடிய புண்ணினின்று அரத்தம் வடிகை; a thinichor running from a sore.

*[ புண்ணீர் + வடிகை.*
*வடி வடிகை. புண் + நீர் – புண்ணீர் ]*

**புண்ணுடம்பு** *puṇ-ṇ-uḍambu,* பெ. (n.) 1. ஈன்றணிமையினால் அமைந்த பச்சையு டம்பு; body of a mother, on account of recent child birth. delicate body of woman

after delivery. 2. அறங்கடை (பாவ) உடம்பு (வின்.); sinful body. 3. புண்கள் நிறைந்தவுடம்பு; body full of sores.

*[ புண் + உடம்பு ]*

**புண்ணுறுத்து–தல்** *puṇ-ṇ-uṟuttu-*, 8 செ.குன்றாவி. (v.t.) வருத்துதல்; to give pain. *"நயந்த கிழவனை நெஞ்சு புண்ணுறீஇ"* (தொல்.பொருள்.147).

*[ புண் + உறுத்து–, ]*

**புண்ணூறுகை** *puṇṇūṟugai*, பெ. (n.) ஆறாப் புண்ணிலேற்படும் அரிப்பு; itching in an ulcer.

*[ புண் + ஊறுகை. ஊறு → ஊறுகை ]*

**புண்ணெஞ்சு** *puṇṇeñju*, பெ. (n.) துன்பம்; grief.

*[ புண் + நெஞ்சு ]*

**புண்ணோவு** *puṇṇōvu*, பெ. (n.) புண்ணால் ஏற்படும் வலி; the pain of a sore.

க. புண்ணோவு

*[ புண் + நோவு ]*

**புண்படு–தல்** *puṇ-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. காயமடைதல்; to become wounded. 2. வருந்துதல்; to be sorely grieved. பெரியோர் மனம் புண்படும்படி பேசக் கூடாது (உ.வ.).

க. புண்படெ

*[ புண் + படு–. பள் → படு ]*

**புண்படுத்து–தல்** *puṇ-paḍuttu*, 2.பி.வி. (c.v.) 1. புண்ணுண்டாக்குதல்; to inflict a wound. *"யானை வரிமுகம் புண்படுக்கும் வள்ளுகிர் நோன்றா ளரிமா"* (நாலடி,198). 2. வருந்துதல்; to persecute. 3. மனம் நோவச் செய்தல்; to wound one's feelings. பிறர் மனம் புண்படுத்துமாறு பேசுதல் நல்லதன்று (உ.வ.).

க. புண்படிசு

*[ புண் + படுத்து. படு–தல்(த.வி.) – படு–த்து–தல் (பி.வி.) ]*

**புண்புரை** *puṇpurai*, பெ. (n.) 1. புண்ணின் உட்டுளை; sinus. 2. குறுகிய வாயையுடைய புரையோடிய புண் (பௌத்திரம்); fistulla.

*[ புண் + புரை ]*

**புண்புரைப்புகை** *puṇpurai-p-pugai*, பெ. (n.) ஆறாப்புண்ணைக் குணமாக்கும் மருந்துப் புகை; fistulla over an ulcer, to heal quickly.

*[ புண்புரை + புகை ]*

**புண்மதி** *puṇmadi*, பெ. (n.) திருமணமாகாதவன் (காட்டுநாயக்கர் பே.வழ.); bachelor.

**புண்மாசறு–த்தல்** *puṇmāšaṟu-*, 4 செ.கு.வி. (v.i.) புண்ணினழுக்ககற்றுதல்; to clear a sore.

*[ புண் + மாசு + அறு –]*

**புண்வழலை** *puṇ-vaḻalai*, பெ. (n.) புண்ணிலிருந்து வடியும் சீழ்; pus from sores. *"புண் வழலை வடியும் பெரிய தலையை யுடைய ... இளங்களிறு"* (புறநா.22, உரை).

*[ புண் + வழலை ]*

**புண்வாய்** *puṇvāy*, பெ. (n.) புண்ணின் புழை; opening of a boil, etc.

*[ புண் + வாய் ]*

**புண்வாய்கனக்கை** *puṇvāy-kaṉakkai,* பெ. (n.) புண்துளை தடிக்கை; ridge of the sore getting thicker.

*[ புண்வாய் + கனக்கை. கல் → கன் → கனம். கனம் → கனக்கை ]*

**புண்வாய்ச்சன்னி** *puṇvāy-c-caṉṉi,* பெ. (n.) காயத்தினால் உண்டாகும் இசிவு (சன்னி) நோய் (வின்.); convulsive tetanus, lockjaw from a wound.

*[ புண் + வாய் + சன்னி ]*

**புண்வெட்டை** *puṇ-veṭṭai,* பெ. (n.) புண்வகை; soft sore. (M.L.).

*[ புண் + வெட்டை ]*

**புணர்[1]–தல்** *puṇar-,* 4செ.குன்றாவி. (v.t.) 1. பொருந்துதல் (திவா.); to join, unite. 2. கலவி செய்தல்; to cohabit, copulate. "*மன்னியவளைப் புணரப் புக்கு*" (திவ். பெருமாள்.6,9). 3. அளவளாவுதல் (பிங்.); to associate with, keep company with. "*ஊதியமில்லார்ப் புணர்தல்*" (நாலடி,233). 4. மேற் கொள்ளுதல்; to undertake. "*பொருவகை புரிந்தவர் புணர்ந்த நீதியும்*" (பெருங்.வத்தவ.6,9).

மறுவ. துவள்தல், நொட்டுதல், பொலிதல், பிணைதல், புல்லுதல்.

ம. புணருக

*[ புல் → புள் → புண் →புணர் (வே.க.3,64) ]*

**புணர்[2]–தல்** *puṇar-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ஏற்புடையதாதல்; to suit, fit. "*குரல் புணர்சீர்*" (புறநா.11). 2. விளங்குதல்; to appeal to the mind; to be understood. 3. எழுத்து முதலியன சந்தித்தல்; (gram.) to combine, coalesce, as letters or words in sandi. "*மொழி புணரியலபே*" (தொல்.எழுத்து.108). 4. உடலிற்படுதல்; to touch. "*மென்முலை மேற்பனிமாருதம் புணர*" (கம்பரா.சூர்ப்பண.47). 5. கூடியதாதல்; to be possible. "*புணரின் வெகுளாமை நன்று*" (குறள், 308).

*[ புல் → புள் → புண் →புணர், (வே.க.3,64) ]*

**புணர்[3]–த்தல்** *puṇar-,* 11 செ.குன்றாவி. (v.t.) 1. சேர்த்தல்; to combine, connect, unite. "*நின்கழற்கணே புணர்ப்பதாக*" (திருவாச.5,71). 2. எழுத்து முதலியன சந்திக்கும்படி செய்தல்; (gram.) to combine letters or words, in sandi. "*பெயரொடு பெயரைப் புணர்க் குங்காலும்*" (தொல்.எழுத்து. 108). 3. நிகழ்த்து தல்; to do, make bring about. "*தூமமென் குழலியர் புணர்த்த சூழ்ச்சியால்*" (கம்பரா.திருவவ.48). 4. பாகுபடுத்தல்; to analyse, choose, resolve. "*நாவினாற் பூவை புணர்த்துப் பேசும்*" (பு.வெ.12, வென்றிப்.12) 5. கூட்டிச் சொல்லுதல்; to speak connectedly. "*தருக்கிய புணர்த்து*" (தொல்.பொருள்.50). 6. கட்டுதல்; to fasten, tie. "*புணர்நாப் பெய்த புனைவின் கண்ணி*" (பெரும்பாண்.218). 7. படைத்தல் (சிருட்டித்தல்); to create. "*புணர்க்கு மயனாம்*" (திவ்.திருவாய் 2,8,3). 8. சிற்றிலக்கிய (பிரபந்த)மாகச் செய்தல்; to compose, as a pirapandam. "*நாயகன் பேர் வைத்துப் புணர்த்த புணர்ப்பு*" (ஈடு.5,9,3).

*[ புல் → புள் → புண் → புணர், புணர்தல்(த.வி.) - புணர்த்தல்(பி.வி.) ]*

**புணர்[4]** *puṇar,* பெ. (n.) 1. சேர்க்கை; mating, uniting. "*புணர்பிரியா வன்றிலும் போல்*" (நாலடி, 376) 2. புதுமை (பிங்.); newness, novelty.

க. பொணர்

*[ புல் → புள் → புண் →புணர், (வே.க.3,64) ]*

**புணர்க்கை** *puṇarkkai,* பெ. (n.) **1.** சேர்க்கை; mating, uniting. **2.** *புணர்ப்பு² 1,4* பார்க்க; see *puṇarppu² 1,4.*

*[ புல் → புள் → புண் →புணர் + கை. 'கை' தொ.பெ.ஈறு ]*

**புணர்குறி** *puṇar-kuṟi,* பெ. (n.) தலைவன் தலைவியர் சந்திக்கும் குறியிடம்; (agap.) lovers trysting place. "*புணர்குறி செய்த புலர்குர லேனல்*" (அகநா.118).

*[ புணர் + குறி ]*

**புணர்ச்சி¹** *puṇarcci,* பெ. (n.) **1.** சேர்க்கை (பிங்.); combination, association, union. **2.** ஒரு நாட்டவராயிருத்தல்; co-residence. "*புணர்ச்சி பழகுதல் வேண்டா*" (குறள்,785). **3.** கலவி (பிங்.); coition. "*தகைமிக்க புணர்ச்சியார்*" (கலித்.118) **4.** முன்பின் தொடர்பு (வின்.); connection of the different parts of a subject.

*[ புல் → புள் → புண் → புணர் → புணர்ச்சி. 'சி' தொழிற்பெயரீறு ]*

**புணர்ச்சி²** *puṇarcci,* பெ. (n.) எழுத்து முதலியவற்றின் சேர்க்கை(சந்தி) சொற்கூட்டு; (gram.) coalescence of letters or words in 'sandi' "*புணர்ச்சிவாயின்*" (தொல்.எழுத்து.142)

*[ புணர் → புணர்ச்சி.'சி' தொ.பெ.ஈறு ]*

இருசொற் புணர்வது புணர்ச்சி. மொழி பொதுமக்களால் ஆக்கம் பெற்றதாகலின், அதன் புணர்ச்சியும் அவரது அமைப்பே. கவனித்தறியப் பெறாது ஏற்கெனவேயிருந்த சொற்கூட்டு நெறிமுறைகளையே, புணர்ச்சி நெறிமொழிகள் (விதிகள்) என எடுத்துக் கூறினர் இலக்கணியர். இயல்புப்புணர்ச்சி, திரிபுப்புணர்ச்சி எனப் புணர்ச்சி இரு வகைப்படும். ஒரு வகை வேறுபாடுமின்றி இயல்பாயிருப்பது இயல்புப்புணர்ச்சி; ஏதேனுமொரு வகையில் திரிவது திரிபுப் புணர்ச்சி. திரிதல்–வேறுபடுதல். அது தோன்றல், திரிதல், கெடுதல் என மூவகைப்படும். முன்னில்லாத எழுத்தோ அசையோ தோன்றுவது தோன்றல், ஒரெழுத்து மற்றோரெழுத்தாக மாறுவது திரிதல்; முன்னுள்ள எழுத்தோ அசையோ மறைவது கெடுதல்.

புணர்ச்சியிற் புதிதாய்த் தோன்றும் அசை, இரு சொற்களை அல்லது ஒரு சொல்லையும் ஒரு சொல்லுறுப்பைச் சார்ந்து நின்று இயைப்பதால் (இசைப்பதால்) சாரியை எனப்படும்.

**திரிபு புணர்ச்சி–தோன்றல்** (insertion)
வாழை + காய் – வாழைக்காய்
அவரை + பந்தல் – அவரைப்பந்தல்
களா + பழம் – களாப்பழம், களாம்பழம்
பூ + செடி – பூச்செடி (பூக்கும்செடி)
பூ + செடி – பூஞ்செடி (அழகியசெடி)
பணத்தை + கொடு – பணத்தைக் கொடு
ஊருக்கு + போ – ஊருக்குப்போ
வர + சொல் – வரச்சொல்
இ + நாள் – இந்நாள்
வெள் + ஆடு – வெள்ளாடு
நாடு + ஆண்மை – நாட்டாண்மை
இவை எழுத்துத்தோன்றல்
செக்கார் + குடி – செக்காரக்குடி
புளி + பழம் – புளியம்பழம்
கண் + பொத்தி – கண்ணாம் பொத்தி
இவை சாரியைதோன்றல்.

**திரிதல்** (mutation)
நல் + செய் – நன்செய்
வெள் + கலம் – வெண்கலம்
செம் + தாமரை – செந்தாமரை
வெம் + நீர் – வெந்நீர்
வேம்பு + இலை – வேப்பிலை
தண் + நீர் – தண்ணீர்
உள் + நாக்கு – உண்ணாக்கு
கல் + தாழை – கற்றாழை
நல் + நிலம் – நன்னிலம்
உள் + து – உண்டு
ஈன் + து – ஈற்று
இவை திரிதல்

கெடுதல் (omission)
மரம் + வேர் – மரவேர்
தொல்காப்பியம் + நூல் – தொல்காப்பிய நூல்
இவை கெடுதல்.
அன்று + கூலி – அற்றைக்கூலி
மண் + கட்டி – மண்ணாங்கட்டி
இவை தோன்றலும் திரிதலும்.
பட்டினம் + பிள்ளையார் – பட்டினத்துப் பிள்ளையார்
நகரம் + ஆன் – நகரத்தான்.
இவை தோன்றதலும் கெடுதலும்.
வேம்பு + காய் – வேப்பங்காய்
பனை + தோப்பு – பனந்தோப்பு
இவை தோன்றலும் திரிதலும், கெடுதலும்.

மரூஉப்புணர்ச்சி

சில சொற்கள் ஒலி நெறிப்படி ஒழுங்காய்ப் புணராது மருவிப் புணரும். இப்புணர்ச்சி மரூஉப் புணர்ச்சியாம். மருவுதல் நெறி திறம்புதல்.

எ–டு : ஆதன் + தா – (ஆந்தா) ஆந்தை
அகம் + கை – அங்கை
நாழி + உரி – நாழுரி – நாடுரி
மக + கள் – மக்கள்.

உள்ளங்கை (உள்+அங்கை) என்பது அங்கையின் நடுப்பகுதி. இதில் அம் என்பது சாரியை யன்று. எந்தை, தந்தை என்பன மரூஉப் புணர்ச்சியில் எம்+தா, தம்+தா எனப் பிரியும். தா என்பது தந்தையைக் குறிக்கும் பெயர்ச்சொல். தாதை என்பதிற் போன்றே. எந்தை, தந்தை, ஆந்தை, பூந்தை என்பவற்றிலும் தை என்பது தா என்பதன் திரிபாகும்.

ஒ.நோ. எம்பி(ன்), எங்கை, எவ்வை, எம்முன், எந்தை, நும்பி(ன்), நுங்கை, நுவ்வை, நும்முன், நுந்தை, தம்பி(ன்), தங்கை, தவ்வை தம்முன், தந்தை

எம்பின் = எமக்குப் பின் பிறந்தான். கை = தங்கை (பிங்.). எங்கை = எமக்குச் சிறியவள். எம்+அவ்வை–எவ்வை. இதில் அவ்வை என்னும் அன்னையின் பெயர் அன்னை போலும் அக்கையைக் குறித்தது. இச்சொல் சில பழஞ்செய்யுள்களில் தங்கையைக் குறிப்பது, காதல் பற்றிய மரபு வழுவமைதியென அறிக. என் தந்தை, என் தம்பி, என் தங்கை என்பனவெல்லாம் வழக்குப் பற்றிய இடவழுவமைதியே.

கார்காலம், வடகோடு, கோவூர்கிழார், நாடு கிழவோன் எனச் செய்யுள் வழக்கிலும், கேடு காலம், பேறுகாலம், விறகுதலையன், விறகு காடு, வடகரை, மழைகாலம் என உலக வழக்கிலும் வலிமிகாது வழங்குவதாலும், நான்கு, வெட்கு என்னும் திரிபு வடிவுகளுடன் நால்கு, வெள்கு என்னும் இயல்பு வடிவுகளும் வழங்கி வருவதாலும், பல்கு, பல்பொருள், சில்கால், வல்சி, வள்பு எனச் சில சொற்கள் என்றும் இயல்பாகவேயிருப்பதனாலும் முதற்காலத்தில் திரிதற் புணர்ச்சி அத்துணைக் கண்டிப்பா யிருந்ததில்லை யென உய்த்துணரலாம்.

மூவகைப் புணர்ச்சியும் ஒலியிசைவை மட்டுமன்றி, இரு பொருட் கிடைப்பட்ட நெருங்கிய தொடர்பையும் உணர்த்துதல் காண்க. (த.வ.1,95–98)

**புணர்ச்சி**[3] *puṇarcci,* பெ. (n.) அணிகலன்கள்; dress. "*புணர்ச்சிகள் பலவு மெல்லையில் பொருள்... இட*" (பெரியபு.அமர்நீ.38).

*[ புணர் → புணர்ச்சி ]*

**புணர்ச்சிநிருவாகம்** *puṇarcci-niruvāgam,* பெ. (n.) பாலியற் பொறுமை; sexual tolerance.

*[ புணர்ச்சி + நிருவாகம் ]*

Skt. nirvāka > த. நிருவாகம்

**புணர்ச்சிமாலை** *puṇarcci-mālai,* பெ. (n.) தண்டக மாலை (சங்.அக.); a kind of poem.

*[ புணர்ச்சி + மாலை. மயல் → மால் → மாலை ]*

**புணர்ச்சியாயரை—த்தல்** *puṇarcciyāy-arai*, 4 செ.குன்றாவி. (v.t.) கலக்கும்படி அரைத்தல்; to grind well in such a way that ingredients mix well.

*[புணர்ச்சி + ஆய் + அரை—,]*

**புணர்ச்சியிலிச்சை** *puṇarcciyil-iccai*, பெ. (n.) பாலியல் விருப்பம்; liking for coitus.

*[புணர்ச்சியில் + இச்சை ]*

**புணர்ச்சிவிகாரம்** *puṇarcci-vigāram*, பெ. (n.) *புணர்ச்சி வேறுபாடு* பார்க்க; see *puṇarcci-vēṟupāḍu.*

*[ புணர்ச்சி + விகாரம் ]*

Skt. vikāra > த. விகாரம்

**புணர்ச்சிவிழையாமை** *puṇarcci-viḻaiyāmai*, பெ. (n.) பெண்ணுடன் சேருதலை விரும்பாமை; dislike to have female companian for intercourse. புணர்ச்சி விழையாமையாவது மாணிய நிலை (பிரமசரியம்) காத்தல் (தொல்.பொருள்.74 இளம்.)

*[புணர்ச்சி + விழையாமை. 'ஆ' எ.ம. இடைநிலை]*

**புணர்ச்சிவேறுபாடு** *puṇarcci-vēṟupāḍu*, பெ. (n.) தோன்றல், திரிதல், கெடுதல் என்னும் புணர்ச்சி வேறுபாடுகள்; (gram.) changes occurring in the combination of words of three kinds viz. tōṉṟal, tiridal, keḍudal.

*[ புணர்ச்சி + வேறுபாடு ]*
புணர்ச்சி[2] பார்க்க

**புணர்த்து—தல்** *puṇarttu-*, 5 செ.குன்றாவி. (v.t.) *புணர்[2]—தல்* பார்க்க; see *puṇar-[2]*,

*[புணர்தல்(த.வி.) – புணர்த்தல்(பி.வி.) புணர்த்துதல் (கா.வி.)]*

**புணர்தம்** *puṇardam*, பெ. (n.) புனர்கொடிறு (பிங்.); the seventh nakṣatra.

**புணர்தல்** *puṇardal*, பெ. (n.) தலைவனும் தலைவியும் கூடுதலாகிய குறிஞ்சியுரிப் பொருள் (தொல்.பொருள்.14); (akap.) union of lovers, appropriate to kuṟiñji, one of five 'uripporul', q.v.

*[ புணர் → புணர்தல். 'தல்' தொ.பெ.ஈறு ]*

**புணர்நலம்** *puṇar-nalam*, பெ. (n.) சாரணை; purslane - leaved traintheme.

**புணர்நிலை** *puṇar-nilai*, பெ. (n.) சொற்கள் திரியாது புணர்ந்து ஒருசொற்றன்மைப்பட்டு நிற்றல்; compound.

*[ புணர் + நிலை ]*

பாம்மா, மாசெல்சுரம் என்றாற் போலச் சொற்கள் திரியாது புணர்ந்து ஒரு சொற்றன்மைப்பட்டு நிற்றலே புணர் நிலையாகும்.

**புணர்நிலையணி** *puṇar-nilai-y-aṇi*, பெ. (n.) வினை பண்பு இவை காரணமாக இரு பொருளுக்கு முடிக்குஞ் சொல்லொன்றாகப் புணர்ந்து நிற்கச் சொல்லும் அணி. (தண்டி.84); (rhet.) figure of speech in which two subjects are referred to one common predicate of action or attribute.

*[ புணர் + நிலை + அணி ]*

**புணர்ப்பாவை** *puṇar-p-pāvai*, பெ. (n.) சக்கரப் பா முதலியவற்றின் இலக்கணங் கூறுவதும் வழக்கற்றதுமான ஒரு பழைய நூல்

(யாப்.வி.பக்.497); an ancient treatise dealing with cakkara-k-kavi, etc. not extant.

*[ புணர் + பாவை ]*

**புணர்ப்பு¹** *puṇarppu,* பெ.(n.) **1.** தொடர்பு; connection. *"என்தனி நாயகன் புணர்ப்பே"* (திவ்.திருவாய்.2,8,2). **2.** புணர்ச்சி, 1,3 பார்க்க; see puṇarcci, 1 3. **3.** எழுத்து முதலியவற்றின் சந்தி; (gram.) coalescence of letters or words in sandi. *"இயல்பொடு விகாரத் தியைவது புணர்ப்பே"* (நன்.152). **4.** நட்பு; friendship, intimacy. **5.** துணை; associate, comrade. *"புகையழல் வேலோன் புணர்ப்பாகி நின்றாள்"* (பு.வெ.10, சிறப்பிற்.10) **6.** உடல் (சூடா.); body, as a combination of parts. **7.** கடல் (ஈடு,2,8,3. அரும்); ocean.

*[ புல் → புள் → புண் → புணர். புணர்தல் = பொருந்துதல், நட்பாடல், கலவி செய்தல், சொற்கூடுதல், கூடியதாதல். புணர் → புணர்ப்பு (வே.க.3.64). 'பு' தொ.பெ.ஈறு ]*

**புணர்ப்பு²** *puṇarppu,* பெ. (n.) **1.** சூழ்ச்சி; contrivance, scheme, plan, artifice, craft, plot. *"முதியவன் புணர்ப்பினால்"* (கலித்.28). **2.** ஏவல்; command. *"கஞ்சன் புணர்ப்பினில் வந்த"* (திவ்.பெரியாழ்.2,4,4). **3.** சிற்றிலக்கியம், பனுவல்; poem. *"நாயகன் பேர் வைத்துப் புணர்த்த புணர்ப்புக் கேட்டாற் போலே காணும்"* (ஈடு.5,9,3) **4.** மாயம்; illusion. *"ஏழைதன் னீர்மையிந் நீர்மை யென்றாற் புணர்ப்போ கனவோ"* (திருக்கோ.17) **5.** செயல்; action,deed. *"புணர்ப்பன் பெரும்புணர்ப்பெங்கும் புலனே"* (திவ். திருவாய்.2,8,3).

*[ புல் → புள் → புண் →புணர் → புணர்ப்பு. 'பு' தொ.பெ.ஈறு ]*

**புணர்ப்புவழு** *puṇarppu vaḻu,* பெ. (n.) செய்யுட்குற்றங்களு ளொன்று (யாப்.வி.525); (pros.) a defect in versification.

*[ புணர் → புணர்ப்பு + வழு ]*

**புணர்மீன்** *puṇarmīṉ,* பெ. (n.) இணைக்கயல் (சூடா.); one of aṭṭa-mangalam.

*[ புணர் + மீன் ]*

**புணர்விருத்தி** *puṇarvirutti,* பெ. (n.) பாலியல் நிறைவு; sexual satisfaction.

*[ புணர் + விருத்தி ]*

Skt. vṛtti > த. விருத்தி

**புணர்வு** *puṇarvu,* பெ. (n.) **1.** சேர்க்கை; combination. **2.** கலவி; coition. *"புணர் வின்னினிய புலவிப்பொழுதும்"* (சீவக.1378). **3.** இணைப்பு (சூடா.); connection, joining. **4.** உடல் (பிங்.); body.

*[ புல் → புள் → புண் →புணர் → புணர்வு. (வே.க.3,64) 'பு' தொ. பெ. ஈறு ]*

**புணராக்கரு** *puṇarā-k-karu,* பெ. (n.) உறவின்றி யுருவாகுஞ் சூல்; impregnation by external contact without intromission, adosculation.

*[ புணரா + கரு ]*

**புணராவிரக்கம்** *puṇarā-v-irakkam* பெ. (n.) தான் காதலித்தவளைக் கூட நேராமையால் உண்டான வருத்தத்தோடு தலைவன் தனித்து உறைந்து வருந்துதலைக் கூறும் புறத்துறை; (பு.வெ.11, கைக்.8.). (purap.) theme of a lover grieving in solitude on account of his separation and consequent inability to meet his beloved.

*[ புல் → புள் → புண் → புணர் + ஆ + இரக்கம். 'ஆ' எ.ம.இ ]*

**புணரி** *puṇari,* பெ. (n.) **1.** அலை, கடற்றிவலை; wave. *'வரைமருள் புணரிவான் பிசிருடைய'* (பதிற்றுப்.11). **2.** கடல் (பிங்.); sea. *'உலகுசூழ்ந்த நெடும் புணரி'* (திவ்.பெரியதி.8,6,5). **3.** கரை (சூடா.); shore. **4.** ஒலிக்கை (அரு.நி.); sounding. **5.** தனிமை (அரு.நி.); loneliness.

*[ புணர் → புணரி = கலந்தெழும் பேரலை (வே.க.3,64), அவ்வலையையுடைய கடல், அலை மோதும் கரை, அலையால் எழும் ஒலி ]*

**புணரிசூழ்வேலி** *puṇari-šūḻ-vēli,* பெ. (n.) உட்புறம் ஒளியும் வெளிப்புறம் இருளுங் கொண்டு நிலவுலகத்தைச்சூழ்ந்துள்ளதாகக் கருதப்படும் மலைத்தொடர்; a mythical range of mountains encircling the orb of the earth and forming the limit of light and darkness. *'வெண்டிரைப் புணரிசூழ் வேலிவேந்தனே'* (சீவக.3052).

*[ புணரி + சூழ் + வேலி ]*

**புணரியல்** *puṇariyal,* பெ. (n.) உயிரீற்றுப் புணரியல், மெய்யீற்றுப் புணரியல், உருபு புணரியல்கள் அமைந்த இலக்கணப்பகுதி; (gram.) the section of grammar which treats of coalescence of letters in sandi, of three kinds viz., uyir-īṟṟu-p-puṇariyal; mey-y-īṟṟu-p-puṇariyal, urubu-puṇariyal.

*[ புணர் + இயல் ]*

**புணரியிற்றுயின்றோன்** *puṇariyiṟṟuyiṉṟōṉ,* பெ. (n.) திருமால் (பிங்.); Tirumāl, as sleeping on the ocean.

*[ புணரி + இல் + துயின்றோன் ]*

**புணரியோர்** *puṇariyōr,* பெ. (n.) ஒன்று கூட்டியவர்; those who bring things together. *'நீருநிலனும்புணரியோர்'* (புறநா.18).

*[ புணர் → புணரியோர். ]*

**புணரொலி** *puṇaroli,* பெ. (n.) ஈருயிர்க் கூட்டொலி; dipthongs

*[ புணர் + ஒலி ]*

தமிழ் உயிரெழுத்துகளுள் ஐ, ஔ இரண்டும் புணரொலியன்கள், *"அகர இகரம் ஐகாரமாகும்'* (தொல்.54). *'அகர உகரம்ஔகாரமாகும்'* (தொல்.55) என்று தொல்காப்பியங்கூறுவதால், அகரஇகரம் சேர்ந்து ஐகாரமும் அகரவுகரம் சேர்ந்து ஔகாரமும் புணரொலிகளாய்த் தோன்றின வென அறியலாம். இகரம் உகரத்தினும் முந்தியதாதலின் இகரக்கூறுள்ள ஐகாரம் உகரக்கூறுள்ள ஔகாரத்தினும் முந்தித் தோன்றியிருத்தல் வேண்டும்.

ஓரிரு சொல்முதலில் வரும் அகரஇகரம் ஐகாரமாகவும் எழுதப்பெறும்

எ–டு: வய் → வய →வயிர்→வயிரம் → வைரம் ஓரிருசொன்முதலில் வரும் அகரஉகரம் ஔகாரமாகவும் எழுதப்பெறும்.

எ–டு: கதுவாலி (குறுகிய வாலையுடைய பறவைஇனம்) → கவுதாரி (இலக்கணப்போலி → கௌதாரி) (த.வ.134,135).

**புணி[1]—த்தல்** *puṇi-,* 4 செ.குன்றாவி. (v.t.) சேர்த்துக்கட்டுதல்; to make bundle, to tie.

*[ புண் → புணி–,(வே.க.3,64) ]*

**புணி²** *puṇi,* பெ. (n.) மயிர்முடி (அக.நி.); tuft of hair.

*[ புல் → புள் → புண் → புணி. புணித்தல் = சேர்த்துக்கட்டுதல் (வே.க.3,64) புணி → புணி = சேர்த்துக் கட்டிய மயிர்முடி ]*

**புணி³** *puṇi,* பெ. (n.) *பிணி³,6* பார்க்க; see *piṇi³,6.*

*[ பிணி → புணி ]*

**புணிகயிறு** *puṇikayiṟu,* பெ. (n.) புணி தெரிவதற்காகப் பயன்படுத்தும் கயிறு; thread used to project the row of threads in a weaver's loom.

*[ புணி + கயிறு ]*

**புணிச்சட்டம்** *puṇi-c-caṭṭam,* பெ. (n.) புணி ஆணியுடைய பதினெட்டுச் சட்டங்கள்; an instrument in weaving.

*[ புணி + சட்டம் ]*



**புணிசுழற்று—தல்** *puṇi-cuḻaṟṟu-,* 15 செ.கு.வி (v.i.) ஆலையில் பாவு ஓடிய பிறகு புணிகளிலிருந்து இழைகளைச் சுழற்றுதல்; to wind the threads used to project the row of threads after spinning the warp in weaver's loom.

*[ புணி + சுழற்று–,. சுழல் → சுழற்று ]*

**புணிமாறு—தல்** *puṇimāṟu-,* 20 செ.கு.வி. (v.i.) *புணை மாறு—தல்* பார்க்க; see *puṇai-māṟu-,.*

*[ புணைமாறு → புணிமாறு ]*

**புணை¹—த்தல்** *puṇai-,* 11செ.குன்றாவி (v.t.) கட்டுதல்; to unite, tie.

*[ புல் → புள் → புண் → புணை –, (வே.க.3,65) ]*

**புணை²** *puṇai,* பெ. (n.) **1.** நீரில்மிதக்கும் கட்டை, தெப்பம்; கட்டுமரம்; float, raft. *'நல்லாண்மை யென்னும் புணை'* (குறள்,1134). **2.** மரக்கலம் (சூடா.); boat, vessel, ship **3.** உதவி; support, help. **4.** விலங்கு (சூடா.); fetters. **5.** ஈடு; pledge, security. **6.** பிணைமுறி; surety; *'இவனுக்குப் புணை'* (S.I.I.v,173).. **7.** ஒப்பு; comparison. *'புணையில்லா வெவ்வ நோய்'* (கலித்.124).

*[ புள் → புண் → புணை → புணைத்தல் = கட்டுதல். புண்¹ → புணை (வே.க.3,65) ]*

**புணை³** *puṇai,* பெ. (n.) மூங்கில் (அக.நி.); bamboo.

**மறுவ.** பணை

பட. கொணெ (பால்கறக்கப்பயன்படுத்தும் மூங்கிற்குழாய்); **கோத.**பெண்; **துட.**பீண்; **குட.** புண்ட

*[ புள் → புண் → புணை ]*

**புணைக்கட்டை** *puṇai-k-kaṭṭai,* **பெ.** (n.) கட்டுமரம் (இ.வ.); catamaran.

*[ புள் → புண் → புணை + கட்டை ]*

**புணைகயிறு** *puṇai-kayiṟu,* **பெ.** (n.) பூட்டாங்கயிறு, நுகத்தடியில் எருதைப் பிணைக்கும் நுகக்கயிறு (அருங்கலம்,94,உரை); rope with which a bullock is fastered to the yoke.

**மறுவ.** பூட்டாங்கயிறு

*[ புண் → புணை + கயிறு ]*



**புணைசல்** *puṇaišal,* **பெ.** (n.) *புணையல்* பார்க்க; see *puṇaiyal.*

*[ புணையல் → புணைசல் ]*

**புணைசல்விடு-தல்** *puṇaišal-viḍu-,* **18** செ.குன்றாவி. (v.t.) களத்திற் கதிரைக் கடாவிட்டு உழக்குதல்; to tread out grain on the threshing-floor with the help of cattle fastened together.

**மறுவ.** பிணையோட்டுதல், படைவிடுதல்.

*[ புணையல் → புணைசல் + விடு –, 'விடு' து.வினை ]*



**புணைப்படு-தல்** *puṇai-p-paḍu-,* **4** செ.கு.வி. (v.i.) **1.** பிணையாதல்; to become security; to go bail. **2.** உறுதியாதல்; to be responsible. ***'திருவிளக்கெரிக்க நெய்யட்டுவதாகப் புணைப்பட்டோம்'*** (S.I.I.iii.28).

*[ புணை + படு–, ]*

**புணைபுணை** *puṇaipuṇai,* **பெ.** (n.) கட்டுமரம்; catamaran. 'புணைபுணை யேறத் தாழ்த்ததை தளிரிவை நீரிற் றுவண்ட சேஎய்குன்றம்' (பரிபா.6;68).

*[ புணை + புணை ]*

***'புணை'*** பார்க்க,

**புணைமாறு-தல்** *puṇaimāṟu-,* **20** செ.கு.வி. (v.i.) இணைப்பு மாறுதல்; to change the pair.

*[ புணை + மாறு–, ]*

**புணையல்** *puṇaiyal,* **பெ.** (n.) பிணைப்பு; joining together.

*[புல் → புள் → புண் → புணை → புணையல். 'அல்' தொ.பெ.ஈறு]*

**புணையலடி–த்தல்** *puṇaiyal-aḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) புணைசல் விடு–தல் பார்க்க; see puṇaišal-viḍu-.

**மறுவ.** பிணையோட்டுதல், பிணையடித்தல்.

*[ புணை → புணையல் + அடி –, ]*

**புத்** *put,* இடை. (part.) இதுவரை இல்லாமலிருந்து அப்பொழுது புதியதாகத் தோன்றியதை அல்லது உருவாக்கப்பட்டதைக் குறிக்கும் முன்னொட்டு; prefix indicating the meaning new.

*[ புது → புத் ]*

எ–டு: புத்தாடை, புத்தூர்.

**புத்தகக்கல்** *puttaga-k-kal,* பெ. (n.) **1.** காகச் சிலை; a black load stone. **2.** கனிமம்; mineral.

**புத்தகப்படுத்து–தல்** *puttaga-p-paḍuttu-,* 18 செ.குன்றாவி. (v.t.) ஆவணம் பதிவு செய்தல் (யாழ்ப்.); to record, register as a notary public.

*[ புத்தகம் + படுத்து–, ]*

**புத்தகப்பை** *puttaga-p-pai,* பெ. (n.) பள்ளிப் பாடநூல்களை வைக்கப் பயன்படுத்தும் பை; school bag. ஆண்டுக்கு ஒரு புத்தகப்பை வாங்க வேண்டியிருக்கிறது (உ.வ.).

*[ புத்தகம் + பை–, ]*

**புத்தகம்[1]** *puttagam,* பெ. (n.) **1.** நூல், நூற்பொருள் எழுதிய ஏட்டுத்தொகுதி, book; old manuscript. *'புத்தகமே சாலத் தொகுத்தும்'* (நாலடி, 318). **2.** படிப்பதற்கு ஏற்ற வகையில் அட்டை போட்டு இணைத்த அச்சிட்ட தாள்களின் தொகுப்பு; book. பொழுது போக வில்லை, புத்தகம் படித்துக் கொண்டிருக்கிறேன். (உ.வ.). **3.** எழுதுவதற்கு ஏற்ற வகையில் வெற்றுத் தாள்களை அட்டை போட்டு இணைத்த தொகுப்பு; notebook, ledger. பட்டாப் புத்தகம். **4.** சித்திரப்படாம் (பிங்.); printed cloth. **5.** மயிலிறகு (சங்.அக.); peacock-quill.

*[ புல் → புள் → புண் → புணர் புணர்தல் = பொருந்துதல், நட்பாடல், சொற்கூடுதல். புண் → புணி. புணித்தல் = சேர்த்துக் கட்டுதல். புல் → பொல் → பொரு. பொருதல் = பொருந்துதல், தொடுதல், முட்டுதல். பொரு → பொருந் → பொருநுதல் = பொருந்துதல், உடன்படுதல். பொருந் → பொருந்து → பொருத்து = இணைப்பு, மூட்டு. பொருத்து → பொத்து. பொத்துதல் = பொருத்துதல், தைத்துமூட்டுதல், மாலை கட்டுதல். பொத்து → பொத்தகம் = சுவடி, நிலக்கணக்கு. ஏடுகளின் சேர்க்கை. ஏட்டுச் சுவடி, சுவடி சேர்த்தல் என்னும் வழக்குகளை நோக்குக. (வே.க.3,64–70) பொத்தகம் → புத்தகம்]*

**த.** புத்தகம் > Skt. pustaka.

**புத்தகம்[2]** *puttagam,* பெ. (n.) வரகு; kodu millet.

**புத்தகம்படி–த்தல்** *puttagam-paḍi-,* 4 செ.கு.வி. (v.i.) நூல் வாசித்தல்; to read a book. புத்தகம் படிக்கும் பழக்கத்தைத் தூண்ட வேண்டும் (உ.வ.).

*[ புத்தகம் + படி –, ]*

**புத்தகம்பண்ணு–தல்** *puttagam-paṇṇu-,* 12 செ.குன்றாவி. (v.t.) *புத்தகப் படுத்து–தல்* பார்க்க; see *puttaga-p-paḍuttu-.*

*[ புத்தகம் + பண்ணு –, பண் → பண்ணுதல் ]*

**புத்தகமெழுது–தல்** *puttagam-eḻudu-,* 5 செ.கு.வி. (v.i.) நூலெழுதுதல்; to author a book. புத்தகமெழுதும் ஆசிரியர் பெருக வேண்டும். (உ.வ.)

*[ புத்தகம் + எழுது–, ]*

**புத்தகரம்** *puttagaram,* பெ. (n.) தஞ்சை மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Tanjavūr.

*[ புது + அகரம் ]*

**புத்தசேடம்** *putta-sēḍam,* பெ. (n.) உண்ட மிச்சில் (யாழ்.அக.); leavings of food after a meal.

**புத்தப்புதிய** *putta-p-pudiya,* பெ.அ. (adj) *புத்தம் புதிய* (கொ.வ.) பார்க்க; see *puttam pudiya.*

*[ புத்தம் + புதிய ]*

**புத்தப்புதுமை** *putta-p-pudumai,* பெ. (n.) மிக்க புதுமை (குக்கயாகப்.99); brand-new or very recent thing.

*[புத்தம் + புதுமை. புது → புதுமை 'மை'ப.பெ.ஈறு]*

**புத்தபலை** *puttabalai,* பெ. (n.) ஏழிலைப் புன்னை; seven leaf milky plant.

**புத்தம்புதிய** *puttam-pudiya,,* பெ.அ. (adj.) மிகப்புதிய; brand-new,very recent. புத்தம் புதிய துணி (உ.வ.).

*[ புத் → புத்தம் + புதிய. புது → புதிய ]*

**புத்தம்புது** *puttampudu,* பெ.அ. (adj.) *புத்தம் புதிய* பார்க்க; see *puttampudiya.* புத்தம் புதுத்துணி (உ.வ.).

*[ புத்தம் + புது ]*

**புத்தமலர்** *putta-malar,* பெ. (n.) *புத்தமலராதனம்* (குத்துவப்.108) பார்க்க; see *puttamalarādaṉam.*

**புத்தமலராதனம்** *putta- malar- ādaṉam,* பெ. (n.) இரண்டு காலையும் தரையினீட்டி இரண்டு கையும் கொண்டு காற்பெரு விரல்களைப் பிடித்திருக்கும் இருக்கை (ஆசன) வகை (குத்துவப்.108,உரை); a sitting posture in which the legs are stretched out and the toes are held by the hands in yoga stage.



**புத்தர்** *puttar,* பெ. (n.). கைச்சம்மட்டி; southern wood.

**புத்தரக்கன்** *puttarakkaṉ,* பெ. (n.) பருத்த குறளன் (யாழ்.அக.); stocky dwarf.

*[ புது → புத்து + அரக்கன். அரக்குதல் = வருத்துதல், அழித்தல். அரக்கு → அரக்கன் ]*

**புத்தரவு** *puttaravu,* பெ. (n.) *புற்றரவு* பார்க்க; see *puṟṟaravu.*

*[ புற்றரவு → புத்தரவு ]*

**புத்தரி** *puttari,* பெ. (n.) விழாக்களில் பயன்படுத்தும் புது அரிசி; new rice used in ceremonies.

ம., க. புத்தரி; து. புதுபாரு (புதுநெல்); துட. புத்தேரி (அறுவடைத் திருநாள்); குட. புத்தரி, புத்தேரி.

*[ புது → புத் + அரி ]*

**புத்தல்** *puttal,* பெ. (n.) நீர்க்கோங்கு; iron-wood of Malabar.

**புத்தளி** *puttaḷi,* பெ. (n.) தருப்பையாற் செய்த உரு; effigy made of darbha grass.

*[ புது → புத் + அளி ]*

த. புத்தளி > Skt. puttalikā

**புத்தன்**[1] *puttaṉ,* பெ. (n.) 1. புதிய–வன்–வள்–து (சிவதரு.சென்ன.91); new person or thing. 2. காசு; a coin. *'பிரதானி புத்தனுக்கும்'* (பணவிடு.12).

ம. புத்தன் (புதியபொருள்)

*[ புது → புத்து + அன். ]*

**புத்தன்**[2] *puttaṉ,* பெ. (n.) எட்டிமரம்; a tree strychnos.

**புத்தாக்கம்** *puttākkam,* பெ. (n.) புதியதாக ஆக்கல்; making new.

*[ புது → புத் + ஆக்கம் ]*

**புத்தாஞ்சோறு** *puttāñcōṟu* பெ. (n.) கரையான் புற்று; ant hill.

*[ புற்று → புற்றாம் + சோறு = புற்றாம்சோறு = புற்றிலுள்ள கரையான்திரள். புற்றாம் சோறு → புத்தாம் சோறு ]*

**புத்தாடை** *puttāḍai,* பெ. (n.) புதுத்துணி, புதிய ஆடை; new clothes. பொங்கலுக்குப் புத்தாடை உடுப்பது வேளாளர் பழக்கம் (உ.வ.).

*[ புதிய → புத் + ஆடை. ஆடு → ஆடை = ஆடுவது, அசைவது ]*

**புத்தாண்டு** *puttāṇḍu,* பெ. (n.) அண்மையில் தொடங்கிய அல்லது அடுத்துத் தொடங்கும் ஆண்டு; new year. புத்தாண்டு வாழ்த்துகள் (உ.வ.). தமிழ்ப்புத்தாண்டின் தொடக்கம் சுறவ முதல்நாளே; மேழம் அன்று (உ.வ.)

*[ புது → புத் + ஆண்டு ]*

**புத்தாத்திரி** *puttāttiri,* பெ. (n.) அரிநெல்லி (மலை.); otaheite gooseberry.

*[ புது → புத்து + தாத்திரி ]*

**புத்தாயிப்பழம்** *puttāyi-p-paḻam,* பெ. (n.) பம்பளிமாசு(இ.வ.); pomela.

**புத்தாரி** *puttāri,* பெ. (n.) *புத்தாத்திரி* (சங்.அக.) பார்க்க; see *puttāttiri.*

**புத்தாளி** *puttāḷi,* பெ. (n.) கல்லுப்பனை; palmyra tree.

**புத்தான்பவளம்** *puttāṉ-pavaḷam,* பெ. (n.) நூற்றியிருபது சித்தர் மருந்து வகையுளொன்று; one of 120 kinds of natural Siddhar's medical science.

மறுவ. புத்துக்குளச்சி

**புத்தான்பழம்** *puttāṉpaḻam,* **பெ.** (n.) புத்தான் பவளம் பார்க்க; see puttāṉ-pavaḷam.

**மறுவ.** புத்தான் பவளம்

**புத்தி**[1] *putti,* **பெ.** (n.) **1.** அந்தக்கரணம் நான்கனுள் ஆராய்ந்து தெளியுங் கரணம் (சி.போ.சிற்.4,1,2.); reason, power of species of andakkaraṇam, q.v. **2.** அறிவு; intellect, understanding knowledge, wisdom. '*புத்திபுகுத்தவா*' (திருவாச.13,19). **3.** இயற்கையுணர்வு; instinct, instinctive knowledge as that of animals. **4.** நல்வழி (நல்லுபாயம்) (வின்.); nice plan, method **5.** அறிவுரை (போதனை); instruction, admonition counsel, exhortation. **6.** வழிவகை (பரிகாரம்) (வின்.); remedy, antidote. **7.** தாழ்ந்தோர் தலைவர்க்குத் தம் உடன்பாடுணர்த்துஞ் சொல்(கொ.வ.); a term signifying acceptance of the word of a superior by an inferior used in response. '*நம்பனே புத்தியென்று நலத்தரு சிற்பர் போந்து*' (விநாயகபு.3,10).

*[ புல் → புலம் = பொருளொடு பொருந்தும் அறிவு, அறிவுறுப்பு, அறிவுநூல், புலம் → புலன் = பொருளொடு பொருந்தும் அறிவு, அறிவுறுப்பு, அறிவுநூல் (சு.வி.36). புல் → புன் → (புந்தி) → புத்தி = அறிவு; நல்வழி, வழிவகை ]*

**புத்தி**[2] *putti,* **பெ.** (n.) *புட்டி*[3]; பார்க்க; see *puṭṭi*[3] (Pond.).

*[ புட்டி → புத்தி(கொ.வ.) ]*

**புத்தி**[3] *putti,* **பெ.** (n.) புறவுருத்தோற்றம்; reflexion.

**புத்திச்சிரேணி** *putticcirēṇi,* **பெ.** (n.) எலிச்செவி; a creeper.

**புத்திதம்** *puttidam,* **பெ.** (n.) எட்டி; nuxvomica tree.

**புத்திமி** *puttimi,* **பெ.** (n.) வெள்ளையீடு கொல்லி மரவகை; a tree.

**புத்தியல்பு** *puttiyalbu,* **பெ.** (n.) புதியத்தன்மை; new nature.

*[புது → புத்து + இயல்பு. இயல் → இயல்பு]*

**புத்திரகருமம்** *puttira-karumam,* **பெ.** (n.) பெற்றோர்க்கு மகன் செய்யும் ஈமச்சடங்கு; funeral ceremonies performed by a son for his deceased parent.

*[புத்திரன் + கருமம்]*

**புத்திரகன்** *puttiragaṉ,* **பெ.** (n.) சிறப்புத் தீக்கை பெற்றவன் (சைவச. மாணா. 4); (šaiva) one who has obtained the vicēḍa tīṭcai. **2.** அன்பன்(யாழ். அக.); beloved man. **3.** வஞ்சகன் (யாழ். அக.); cheat.

**புத்திரகாமியம்** *puttira kāmiyam,* **பெ.** (n.) புத்திரகாமேட்டி பார்க்க (யாழ். அக.); see *puttira-kāmēṭṭi.*

*[புத்திரன் + காமியம்]*

Skt. kāmya > **த.** காமியம்

**புத்திரகாமேட்டி** *puttirakāmēṭṭi,* **பெ.** (n.) ஆண்மகப்பேறுவிரும்பிச் செய்யும் வேள்வி (யாகம்) (இராமநா. பாலகா. 7); sacrifice performed to obtain sons.

**புத்திரச்செல்வம்** *puttira-c-celvam,* பெ. (n.) மக்கட்செல்வம்; sons, considered as wealth.

**மறுவ.** மக்கட்பேறு, மக்கட்செல்வம்

*[புத்திரன் + செல்வம்]*

**புத்திரசஞ்சீவி** *puttira šañjivi,* பெ. (n.) மரவகை; a kind of tree.

**புத்திரசந்தானம்** *puttira šandāṉam,* பெ. (n.) ஆண் சரவடி (சந்ததி); male offspring.

*[புத்திரன் + சந்தானம்]*

Skt. san-tāna > **த.** சந்தானம்

**புத்திரசம்பத்து** *puttira šambattu,* பெ. (n.) *புத்திரச் செல்வம்* பார்க்க; see *puttira-c-celvam.*

*[புத்திர(ன்) + சம்பத்து]*

Skt. sampad > **த.** சம்பத்து

**புத்திரசளி** *puttirašāḷi,* பெ. (n.) காஞ்சிரை மரம்; a kind of tree.

**மறுவ.** புத்திரசாரி, புத்துருணி, புத்துவணி

**புத்திரசீவம்** *puttira šivam,* பெ. (n.) *புத்திர சீவி* பார்க்க; see *puttira šivi.*

*[புத்திரன் + சீவம்]*

Skt. jivam > **த.** சீவம்

**புத்திரசீவி** *puttira-šivi,* பெ. (n.) குழந்தைகள் நலமாயிருத்தற்குக் காப்பாகக்கட்டும் வித்துகளையுடை மரம் (பதார்த்த. 1024); child's amulet tree. **2.** வெள்ளால் (இ.வ); Java fig.

*[புத்திரன் + சீவி]*

Skt. jivi > **த.** சீவி

**புத்திரசீவிக்கொட்டை** *puttira-šivi-k-koṭṭai,* பெ. (n.) மூலம், பித்தம், நாவறட்சி, வயிற்றுப் பொருமல் போன்றவற்றைப் போக்கும் மருந்துக் கொட்டை; a nut which is said to cure piles, gleet, thrist, bloating of abdomen etc.,

**புத்திரசீவிவிதை** *puttirašivi-viḍai,* பெ. (n.) *புத்திரசீவிக்கொட்டை* பார்க்க; see *puttira šivi-k-koṭṭai.*

*[புத்திரசீவி + விதை]*

**புத்திரசுவீகாரம்** *puttirašuvigāram,* பெ. (n.) வளர்ப்பு மகனாக எடுத்து (தத்தெடுத்து)க் கொள்ளுகை; adoption of a son.

*[புத்தின் + சுவீகாரம்]*

Skt. svikāra > **த.** சுவீகாரம்

**புத்திரசெனனி** *puttirašeṉaṉi,* பெ. (n.) தாளி (மலை.); hedge bind-weed.

**புத்திரசோகம்** *puttira-šōgam,* பெ. (n.) *புத்திரத்துயர்* பார்க்க; see *puttira-t-tuyar.* "*புத்திரசோக முற்றுப் பொன்னனாணின்ற வாறும்*" (பிரமோத். 6, 25).

*[புத்திர + சோகம்]*

Skt. šōka > **த.** சோகம்

**புத்திரசோதி** *puttira šōdi,* பெ. (n.) *புத்திரசீவி* (பதார்த்த, 1024, உரை) பார்க்க; see *puttirašivi.*

*[புத்திரசீவி → புத்திரசோதி]*

Skt. jyōtis > **த.** சோதி

**புத்திரசோபம்** *puttira-šōbam,* பெ. (n.) *புத்திரத்துயர்* (யாழ். அக.) பார்க்க; see *puttira-t-tuyar.*

*[புத்திரன் + சோபம்]*

Skt. kṣōbha > **த.** சோபம்

**புத்திரணி** *puttirani,* பெ. (n.) முள்ளிச் செடி; a plant, Indian night shade.

**புத்திரம்** *puttiram,* பெ. (n.) காஞ்சிரை மரம்; strychnine tree.

**புத்திரமஞ்சரி** *puttira-mañjari,* பெ. (n.) தணக்கு; small ach root.

**புத்திரலாபம்** *puttira-lābam,* பெ. (n.) மகப்பேறு; children, considered an acquisition.

*[புத்திரன் + லாபம்]*

Skt. lābha > **த.** லாபம்

**புத்திரவஞ்சரி** *puttira-vañjari,* பெ. (n.) கடுக்காய் மரம்; gall nut tree.

**புத்திரவதி** *puttira-vadi,* பெ. (n.) மக்கட் பேறுடையவள்; woman blessed with children.

*[புத்திர → புத்திரவதி]*

**புத்திரவாஞ்சை** *puttiravāñjai,* பெ. (n.) மக்களிடம் அன்பு; attachment to children.

*[புத்திரன் + வாஞ்சை]*

**புத்திரவான்** *puttiravāṉ,* பெ. (n.) மக்கட் பேறுடையவன்; man blessed with children.

*[புத்திரன் → புத்திரவான்]*

**புத்திரத்தானம்**[2] *puttira-t-tāṉam,* பெ. (n.) மக்கட் பேற்றைக் குறிக்கும் ஓரையின் (இலக்கினத்து) ஐந்தாமிடம்; (astrol.) the fifth house from the ascendant, indicating off-spring.

*[புத்தின் + தானம்]*

**புத்திரத்துயர்** *puttira-t-tuyar,* பெ. (n.) மகனை இழந்த துயர்; grief or sorrow occasioned by the loss of son.

*[புத்திரன் + துயர்]*

**புத்திரதானம்** *puttira-tāṉam,* பெ. (n.) **1.** புதல்வரைப் பிறப்பிக்கை; procreation of sons. **2.** வளர்ப்புப் பிள்ளையாக (தத்தாக) மகனைக் கொடுக்கை; gift of a son in adoption.

*[புத்திரன் + தானம்]*

**புத்திரதீபம்** *puttiradībam,* பெ. (n.) *புத்திர தீபமணி* பார்க்க; see *puttira-dībamaṇi.* *காளாமுகத்தினர்க்குப் படிகம் புத்திரதீபந் தரித்த மூர்த்தியாயும்* (சி. சி. பாயி. 1. சிவாக்.)

**புத்திரதீபமணி** *puttira-dībamaṇi,* பெ. (n.) காளாமுகர் மாலையாகக் கழுத்தில் அணியும் ஒரு வகை மணி; a kind of beads stringed into a necklet and worn by Kāḷāmugar. "காளாமுகர்க்குப்..... புத்திர தீபமணிகள்.......... மூர்த்தியாய்" (சி. சி. பாயி. 1, ஞானப்.)

*[புத்திரதீபம் + மணி. மண்ணுதல் = கழுவுதல். மண்ணப்பட்டது மண்ணி. மண்ணி → மணி]*

Skt. dīpa > த. தீபம்

**புத்திரநாதன்** *puttiranādan*, பெ. (n.) பிள்ளையினாற் காக்கப்படுவன் (யாழ். அக.); one who is maintained by his sons.

*[புத்திரன் + நாதன்]*

Skt. nadha > த. நாதன்

**புத்திரப்பிரதிநிதி** *puttira-p-piradinidi*, பெ. (n.) வளர்ப்புப்பிள்ளை (தத்துப்பிள்ளை) (யாழ். அக.); adopted son.

*[புத்திரன் + பிரதிநிதி]*

Skt. prati-nidhi > த. பிரதிநிதி

**புத்திரபாகம்** *puttira bāgam*, பெ. (n.) ஆண்மக் (புத்திரர்) களுக்கு ஈவுப்படி கொடுக்கும் பங்கு; division of inheritance per capita among the sons, opp. to pattiṉi-bāgam (R.I.).

*[புத்திர(ன்) + பாகம்]*

**புத்திரமுகங்காணுதல்** *puttiramugaṅ-kāṇudal*, பெ. (n.) ஒருவன் புதிதாகப் பிறந்த தன் ஆண்குழந்தையின் முகத்தை முதன் முறை நோக்குதலாகிய சடங்கு; the ceremony in which one sees the face of his new-born son for the first time.

*[புத்திரன் + முகம் + காணுதல்]*

**புத்திரன்** *puttiraṉ*, பெ. (n.) **1.** மகன்; son. **2.** மாணாக்கன்; disciple, pupil. "புத்திரரோடுங் கூடிப்போவதே கருமம்" (திருவாலவா. 54, 37).

**தெ.** புத்ருடு, புத்ரகுடு

*[புது → புத்து → புத்திரன். புதுவதாக (குடும்பத்திற்கு) வந்தவன்]*

**த.** புத்திரன். > Skt. puttra

putra, a son Gt. (p. **526**) compares a K. root pudu, to be born. This root is nowhere found in D; it occurs only in Mr. Reave's Dictionary that was used by Dr. Gundert. Gt. further, compares puytal (of. T.puy, to become, to exist) a coming into existence, an existing and T. pudalva, a son, and then D. puṭṭu. T. pudalva appears to be identical with K. pōdḻva (of pōdaḻ), which may become pōdarva, and means "one who comes forth or springs up". See Te. podalu, to be born, s. puṭṭu. When (L. p. **486** as **506**) compares T.paydal, etc., a boy (see s.D. pasuḷe, hay, etc.,) with putra, he is decidedly wrong. (KKED, xxix).

putra, son; Drav. root pud, new(CGDFL. 577).

புத்ர என்னும் சொல்லிற்கு 'புத்' என்னும் நிரய(நரக)த்திற்குச் செல்லாமல் காப்பவன் (மகன்) என்று மா.வி. அகரமுதலி குறித்திருப்பது இயல்பு நிலைக்கு மாறானது. மேலும் putra வுக்கு push என்று வேர்மூலம் காட்டிய பின் அது etym. doutful என்று அவ்வகர முதலி குறித்துள்ளது.

**புத்திராசாரி** *puttirāšāri*, பெ. (n.) எட்டி மரம்; nuxvomica tree.

**புத்திராதரபலா** *puttirātarapalā*, பெ. (n.) கீழ்க்காய் நெல்லி; a small plant with slender green main branches.

**புத்திராதிகட்டி** *puttiradikaṭṭi,* பெ. (n.) புண் கட்டிவகையு ளொன்று; a kind of abscess.

**புத்திரி¹** *puttiri,* பெ. (n.) மகள் (சூடா.); daughter.

*[புது → புத்து → புத்திரன் (ஆ. பா.) - புத்திரி (பெ. பா.)]*

த. புத்திரி > Skt. putri

**புத்திரி²** *puttiri,* பெ. (n.) 1. கீழாநெல்லி (மலை.); small plant with slender green branches. 2. கரிமுள்ளி; Indian nightshade.

மறுவ. புத்திராதரபலா

**புத்திரிகம்** *puttirigam,* பெ. (n.) தக்காளிச் செடி; tomato plant.

**புத்திரிகை** *puttirigai,* பெ. (n.) 1. மகள் (வின்.); daughter. 2. சித்திரப்பாவை (யாழ். அக.); doll.

*[புது → புத்து → புத்திரன் (ஆ. பா.) - புத்திரி (பெ. பா.) → புத்திரிகை]*

**புத்திரிகைபுத்திரன்** *puttirigai-puttiraṉ,* பெ. (n.) 1. புத்திரி புத்திரன் பார்க்க; see puttiri puttiraṉ. 2. மகனாகக் கொள்ளும் (பாவிக்கும்) மகள்; the appointed daughter, regarded as a son.

*[புத்திரிகை + புத்திரன்]*

**புத்திரிபுத்திரன்** *puttiri-puttiraṉ,* பெ. (n.) தன் மகள் வயிற்றுப் பிறந்தவனும் தனக்கே மகனாகக் கொள்ளப் பட்டவனுமாகிய பேரன் (ஏலாதி, 31); son of an appointed daughter.

*[புத்திரி + புத்திரன்]*

**புத்திரினி** *puttiriṉi,* பெ. (n.) சிறுகொப்புள வகையுளொன்று; a kind of thin abscess.

**புத்திரைசுவரியம்** *puttirai-šuvariyam,* பெ. (n.) *புத்திரச் செல்வம்* பார்க்க; see *puttira-c-celvam.*

*[புத்திர(ன்) + ஐசுவரியம்]*

Skt. aišvarya > த. ஐசுவரியம்

**புத்திலக்கியம்** *puttilakkiyam,* பெ. (n.) உள்ளடக்கத்திலும் அமைப்பு முறையிலும் இக்கால எண்ணங்களைக் காட்டும் இலக்கியம் (நவீன இலக்கியம்); modern literature.

*[புது → புத் + இலக்கியம்]*

**புத்திறி** *puttiṟi,* பெ. (n.) கறிமுள்ளி; a thorny shrub.

**புத்தின்சாரி** *puttiṉšāri,* பெ. (n.) காஞ்சிரை; nuxvomica tree.

**புத்தீசல்** *puttīšal,* பெ. (n.) புற்றீசல் பார்க்க; see puṟṟīšal.

*[புற்றீசல் → புத்தீசல்]*

**புத்தீமம்** *puttīmam,* பெ. (n.) வட்டசாரணைக் கொடி; a creeper.

**புத்து¹** *puttu,* பெ. (n.) புற்று பார்க்க; see puṟṟu.

*[புல் → புற்று → புத்து]*

**புத்து²** *puttu,* பெ. (n.) பவளப்புற்று வைப்பு நஞ்சு; a kind of prepared arsenic.

**புத்துக்கடி** *puttu-k-kaḍi,* பெ. (n.) மேகப்படை; ringworm (M.L.).

*[புத்து + கடி]*

**புத்துக்கல்** *puttukkal,* பெ. (n.) சவர்க்காரம்: essence of fuller's earth.

**புத்துக்குளச்சி** *puttukkuḷacci,* பெ. (n.) *புத்தான் பவளம்* பார்க்க; see *puttāṉ-pavaḷam.*

**மறுவ.** புத்தான் பழம்

**புத்துணர்ச்சி** *puttuṇarcci,* பெ. (n.) 1. (சோர்வு நீங்கும் வகையில்) மகிழ்ச்சிஉணர்வு, மனவெழுச்சி; rejuvenation, invigorating, feeling. கடற்காற்று புத்துணர்ச்சியைத் தரும் (உ.வ.). 2. புதிய உணர்வை அல்லது பட்டறிவை (அனுபவத்தை)த் தருவது; refreshing feeling. புத்துணர்ச்சி பெற நீர் பருக வேண்டும்.

*[புது → புத் + உணர்ச்சி]*

**புத்துணர்ச்சியளி-த்தல்** *puttuṇarcci-y-aḷi-,* 4 செ.கு.வி. (v.i.) புதிய உளப்பாங்கு தருதல், புதியதாகப் பரபரப்புக் காட்டுதல்; to give an new sensation.

*[புத்துணர்ச்சி + அளி-,]*

**புத்துணர்வு** *puttuṇarvu,* பெ. (n.) *புத்துணர்ச்சி* பார்க்க; see *puttuṇarcci.*

*[புது → புத் + உணர்வு]*

**புத்துத்தேன்** *puttu-t-ttēṉ,* பெ. (n.) புதிய தேன்; fresh honey.

*[புது → புத் + தேன்]*

**புத்துமண்** *puttumaṇ,* பெ. (n.) *புற்றுமண்* பார்க்க; see *puṟṟumaṇ.*

*[புற்றுமண் → புத்துமண்]*

**புத்துமாங்காய்** *puttu-māṅgāy,* பெ. (n.) சூட்டைத் தணிப்பதற்கு உண்ணுங் கிழங்குவகை; a kind of tuber eaten for its cooling effect.

*[புற்று → புத்து + மாங்காய்.*
*மா + காய் – மாங்காய்]*

**புத்துயிர்** *puttuyir,* பெ. (n.) (குன்றிய நிலையிலிருந்தோ வீழ்ச்சிக்குப் பின்னோ பெறும்) புதிய மலர்ச்சி, ஆற்றலோடுகூடிய எழுச்சி; rebirth, revival. பண்டைய கலைகளுக்குப் புத்துயிர் அளிக்க வேண்டும். (உ.வ.).

*[புது → புத் + உயிர்]*

**புத்துருக்கு** *putturukku,* பெ. (n.) செங்கற் சூளையிற் காணப்படும் உருகிய கற்புற்று; melted mud on the brick kiln, seen after baking the bricks.

**புத்துருக்குநெய்** *putturukku-ney,* பெ. (n.) புதியதாக உருக்கின நெய்; fresh clarified butter.

*[புத்து + உருக்கு + நெய். புது → புத்து.*
*உருகு → உருக்கு. நெள் → நெய்]*

**புத்துருணி**[1] *putturuṇi,* பெ. (n.) எட்டி (சங்.அக.); staychnine tree.

**புத்துருணி**[2] *pulturuṇi,* பெ. (n.) *புத்துவணி* பார்க்க; see *puttuvaṇi.*

**புத்துவணி** *puttuvaṇi,* பெ. (n.) காஞ்சிரை மரம்; trychnine tree.

**மறுவ.** எட்டி, புத்துருணி, புத்திசாரி.

**புத்துவைத்தல்** *puttu-vaittal,* தொ. பெ. (vbl.n.) *புற்று வைத்தல்* பார்க்க; see *purruvaittal.*

*[புத்து + வைத்தல்]*

**புத்தூர்** *puttūr,* பெ. (n.) புதியவூர்; new village.

*[புதி(ய) → புத் + ஊர்.]*

புதியதாகத் தோன்றும் ஊர் புத்தூர். திருப்புத்தூர் என்றாற் போன்று அடை கொடுத்து வழங்கும் ஊர்களும் உண்டு. இராமநாதபுர மாவட்டத்தில் உள்ள புத்தூர் 'செறிபொழில் சூழ் மணிமாடத் திருப்புத்தூர்' என (290.7) திருஞானசம்பந்தரால் குறிக்கப்பட்டுள்ளது. தேவாரப் பாடல் பெற்ற பாண்டிநாட்டுப் பதியொன்று திருப்புத்தூர். அரிசில் ஆற்றங்கரையில் அமைந்த ஊர் அரிசிற்கரைப் புத்தூர். கடுவாய் ஆற்றங் கரையில் அமைந்த ஊர் கடுவாய்க்கரைப் புத்தூர். பாண்டி நாட்டிலுள்ள திருவில்லிபுத்தூர் மாலியர் (வைணவர்) போற்றும் பெரும்பதி.

சுந்தரர் திருமணம் செய்யப்போந்த புத்தூர் மணம் வந்த புத்தூர். கொங்குநாட்டில் பேரூருக்கு அருகே அமைந்த கோவன் என்னும் தலைவன் பெயரால் அமைந்தது கோயம்புத்தூர்.

**புத்தேணாடு** *puttēṇāḍu,* பெ. (n.) வானுலகு; celestial world. "*புலத்தலிற் புத்தேணா குண்டோ*" (குறள், 123).

*[புத்தேள் + நாடு]*

**புத்தேள்**[1] *puttēḷ,* பெ. (n.) 1. புதுமை (சூடா.); novelty. 2. புதியவள்; strange woman, stranger. "*புலத்தகைப் புத்தேளில் புக்கான்*" (கலித்.82).

*[புது → புத் → புத்தேள்]*

**புத்தேள்**[2] *puttēḷ,* பெ. (n.) தெய்வம்; god, deity. "*புத்தேளிர் கோட்டம் வலஞ் செய்து*" (கலித். 82);

மறுவ. அணங்கு, தெய்வம்.

*[புது + எல் – புத்தெல் → புத்தேள் = புதியதாக ஒளிவடிவில் தோன்றும் தெய்வம் அல்லது தேவன் (கு.ம.21)]*

**புத்தேளிர்** *puttēḷir,* பெ. (n.) தேவர்; celestial being. "*புத்தேளிர் கோட்டம் வலஞ்செய்து*" (கலித். 82).

மறுவ. அமரர், பண்ணவர், கடவுளர், அண்டர், உம்பர், இமையவர், வானோர், புலவர், விண்ணோர், அமுதர், ஆதித்தர், மேலோர், ஐயர், சுரர், உயர்நிலத்தவர்.

*[புத்தேள் → புத்தேளிர்]*

**புத்தேளுகம்** *puttēḷugam,* பெ. (n.) மரவகை (மலை); deodar cedar.

**புத்தேளுலகம்** *puttēḷulagam,* பெ. (n.) புத்தேணாடு பார்க்க; see puttēṇāḍu. புத்தேளுலகத்து மீண்டும் பெறலரிதே, (குறள், 213).

*[புத்தேள்*[2] *+ உலகம்]*

**புத்தேளுலகு** *puttēḷulagu,* பெ. (n.) *புத்தேணாடு* (பிங்.) பார்க்க; see *puttēṇāḍu.*

*[புத்தேள் + உலகு]*

**புத்தேன்** *puttēṉ,* பெ. (n.) எட்டி (மலை); nuxvomica tree.

**புத்தொட்டிவைப்புநஞ்சு** *puttoṭṭi-vaippu-nañju,* பெ. (n.) வைப்பு நஞ்சுவகையுளொன்று; a prepared arsenic.

**புத்தோடு** *puttōḍu,* பெ. (n.) புதுப்பானை; new pot. "*புத்தோடு தண்ணீர்க்குத் தான் பயந்தாங்கு*" (நாலடி. 1391).

*[புது → புத் + ஓடு]*

**புத்தோவம்** *puttōvam,* பெ. (n.) அத்திமரம்; fig tree.

**புத** *puda,* பெ. (n.) வாயில்; gate. "*மழை போழ்ந்து புதத்தொறும்*" (சீவக. 2398).

*[புல் → புது → புதா → புத]*

**புதசனன்** *pudašaṉaṉ,* பெ. (n.) அறிஞன் (அக. நி.); wise or learned man.

**புதஞ்செய்–தல்** *pudañ-cey-,* 1 செ. கு. வி. (v.i.) *புதமெழு–தல்* பார்க்க; see *pudameḻu-,* "*வெண்டிரை புரவியென்னப் புதஞ்செய்து*" (திவ். பெரியதி. 9, 3, 7).

*[புதம் + செய்–,]*

**புதப்பிரியம்** *pudappiriyam,* பெ. (n.) மரகதம் (சங். அக.); emerald.

**புதம்** *pudam,* பெ. (n.) மஞ்சு (மேகம்); cloud. "*புதமிகு விசும்பில்*" (திவ். பெரியதி. 9, 8, 8).

*[புல் → புளி = (புளித்துப்) பொங்குவது, மேலெழுவது. புல் → புது → புதம் = மேலெழுந்து காணப்படுவது, முகில்]*

**புதமெழு–தல்** *pudameḻu-,* 6 செ. கு. வி. (v.i.) தாவியெழுதல்; to leap up, jump up, rise with a bound. "*புதமெழு புரவிகள் புடைபரந்திட*" (சூளா. துற. 42).

க. புடவேள்

*[புதம் + எழு–,]*

**புதர்**[1] *pudar,* பெ. (n.) *புதல்*[1] (அரு. நி.) பார்க்க; see *pudal.* கொல்லைப் புறத்தில் புல்லும் புதரும் மண்டிக்கிடக்கிறது (உ.வ.).

க. பொதரு; தெ. பொத; து. பூண்டெல்

*[புல் → புது → புதல் → புதர் (வே. க. 3, 76) ல, ர போலி]*

**புதர்**[2] *pudar,* பெ. (n.) *புதர்*[2] (அக. நி.) பார்க்க; see *pudār*[2].

*[புது → புதா → புதர்]*

**புதர்க்காடை** *pudar-k-kāḍai,* பெ. (n.) புல்நிலங்களிலும் புதர்காடுகளிலும் திரியும் காடை வகை; jungle bush-quail.

*[புதர் → காடை]*

**புதர்ச்சிட்டு** *pudar-c-ciṭṭu,* பெ. (n.) பீடபூமிப் பகுதிகளில் புல்வெளிகள், பள்ளத்தாக்குப் புதர்கள், விளைநிலங்கள், வேலிகள் ஆகியவற்றைச் சார்ந்து திரியும் ஒருவகைச்சிட்டு; pied bushchat.

*[புதர் + சிட்டு]*

**புதர்ப்பூ** *pudarppū,* பெ. (n.) புல்லின் பூ; grass flower.

*[புதர் + பூ]*

**புதர்வானம்பாடி** *pudarvāṉambāḍi,* பெ. (n.) புல்லும் புதருமான வெற்றுநிலங்களில் இருக்கும் வானம்பாடி; jerden's bush lark.

*[புதர் + வானம்பாடி]*

**புதரவண்ணான்** *pudara-vaṇṇāṉ,* பெ. (n.) இராப்பாடி; washerman for Adidravidās.

மறுவ. பொறதவண்ணான்

**புதரெலி** *pudar-eli,* பெ. (n.) எலிவகை; field rat.

*[புதர் + எலி]*

**புதல்**[1] *pudal,* பெ. (n.) 1. குத்துச் செடிகளின் செறிவு, தூறு; bush, thicket, low jungle. "*புதன் மறைந்து*" (குறள், 274). 2. புல்லினம் புறசாதி (திவா.); grass. 3. மருந்துப்பூடு (திவா.); medicinal shrub. 4. அரும்பு; bud. "*பூத்த முல்லைப் புதல்சூழ் பறவை*" (பதிற்றுப். 66, 16).

*[புல் → புது → புதல் (வே. க. 3. 76)]*

**புதல்**[2] *pudal,* பெ. (n.) புருவம் (பிங்.); eyebrow. "*கழைவிற்புதல்*" (தனிப்பா. ii,193, 467.).

*[புல் → புது → புதல் = செறிந்த தூறு, புல்லினம் (வே.க.3,76) செறிந்த மயிர்ப்பாகம்]*

**புதல்**[3] *pudal,* பெ. (n.) நாணல்; reed.

*[புது → புதல் (புதராக வளர்வது)]*

**புதல்வர்ப்பேறு** *pudalvar-p-pēṟu,* பெ. (n.) ஆண்மக்களைப் பெறுகை; obtaining sons. "*புதல்வர்ப் பேற்றினது சிறப்புக் கூறப்பட்டது*" (குறள், 61, உரை).

*[புதல்வர் + பேறு. பெறு → பேறு]*

**புதல்வன்** *pudalvaṉ,* பெ. (n.) 1. மகன்; son "*பொன்போற் புதல்வர்ப் பெறாதீரும்*" (புறநா. 9.). 2. மாணக்கன்; disciple, student; "*எண்ணில் பத்திதிகழ் புதல்வர்க்கு*" (திருவாலவா. 35, 1). 3. குடி; subject; "*நின்புதல்வரைத் தழீஇ*" (பெருங். இலாவாண. 1, 33).

*[புள் → புரு = குழந்தை. புள் → பிள் = பிள்ளை. பிள் → பிள்ளை. (புது) → புதல்வு → புதல்வன் (மு. தா. 40, 41)]*

**புதல்வி** *pudalvi,* பெ. (n.) மகள் (பிங்.); daughter. "*பூவிலோன புதல்வன் மைந்தன் புதல்வி*" (கம்பரா. சூர்ப்ப. 39).

*[புதல்வன் (ஆ. பா.) - புதல்வி (பெ. பா.) 'இ' பெ.பா. ஈறு]*

**புதவம்**[1] *pudavam,* பெ. (n.) வாயில்; gate. "*புதவம் பலவுள*" (சிலப். 11, 119).

க. புதி (கதவின் பக்கம்)

*[புதவு → புதவம்]*

**புதவம்**[2] *pudavam,* பெ. (n.) அறுகு; bermuda grass. "*பொய்கைக் கொழுங்காற் புதவமொடு*" (பட்டினப். 243).

*[புதர் → புதவம்]*

**புதவு**[1] *pudavu,* பெ. (n.) 1. கதவு; door. "*நல்லெழினெடும்புதவு*" (பதிற்றுப். 16, 5). 2. வாயில்; entrance, gate. "*கோழிகேக்குங் கூடுடைப் புதவின்*" (பெரும்பாண். 52). 3. மதகு; sluice. "*புனல் பொரு புதவினுறந்தை*" (அகநா. 237). 4. திட்டிவாசல் (சூடா); small door with in a larger one, wicket. 5. குகை (இ. வ.); cave.

க. புதி (நுழைதல்), புது (நுழைகை), புதி (கதவின் பக்கம்)

*[புல் → (புல்லம்) → பொல்லம் = ஓட்டை, துளை. புள் → புழை → பூழை = துளை, கணவாய். (மு. தா. 277) புல் → (புது) → புதவு]*

**புதவு²** *pudavu,* பெ. (n.) புதவம்² பார்க்க; see pudavam². "*புல்லரைக் காஞ்சிப்புனல் பொருபுதவின்*" (மலைபடு. 449).

*[புதல் → புதர் → புதவு]*

**புதவு³** *pudavu,* பெ. (n.) புல்வகை; a kind of grass.

மறுவ. புதவம்

**புதளி** *pudaḷi,* பெ. (n.) புலால் (அக. நி.); animal food.

**புதற்புல்** *pudaṟ-pul,* பெ. (n.) புல்வகை (அக. நி.); a kind of grass.

*[புதர் + புல்]*

**புதற்பூ** *pudaṟ-pū,* பெ. (n.) நிலப்பூ; flowers of grasses and shrubs.

*[புதல் + பூ]*

**புதா¹** *pudā,* பெ. (n.) கதவு; door. "*இன்பப் புதாத்திறக்குந் தாளுடைய மூர்த்தி*" (சீவக. 1549).

*[புல் → (புது) → புதா]*

**புதா²** *pudā,* பெ. (n.) 1. மரக்கானாரை; a crane. (சிலப். 10, 117, அரும்). 2. பெருநாரை; a large heron. "*புள்ளும் புதாவும்*" (சிலப், 10, 117).

*[புல் → புது → புதா (வே. க. 3. 76]*

**புதாநாழி** *pudānāḻi,* பெ. (n.) பழைய வரிவகை; an ancient tax. (S.I.I.ii ,521).

**புதாரு** *pudāru,* பெ. (n.) புதர்; bush. (Pond.).

*[புதர் → புதார் → புதாரு]*

**புதாழி** *pudāḻi,* பெ. (n.) புதா நாழி பார்க்க; see pudānāḻi (S.I.I. ii,509).

*[புதாநாழி → புதாழி]*

**புதானன்** *pudāṉaṉ,* பெ. (n.) 1. *புதசனன்* (யாழ். அக.) பார்க்க; see *pudaśaṉaṉ.* 2. குரு; preceptor.

**புதிசு** *pudišu,* பெ. (n.) *புதிது* பார்க்க; see *pudidu.*

*[புதிது → புதிசு]*

**புதிது** *pudidu,* பெ. (n.) புதியது; that which is new, uncommon or wonderful. "*அந்தோ சிறியனேன் செய்வது புதிதோ*" (அருட்பா. vi, திருமு. பிள்ளைப்பெரு. 89). 2. திருவிளக்கின் முன் வைக்கப்படும் முதல் விளைச்சற் காணிக்கை (வின்.); first sheaves of a rice crop, offered to a lamp personifying Laksmi.

க. பொதசு

*[புதியது → புதிது]*

**புதிநகம்** *pudinagam,* பெ. (n.) ஒரு வகை பழுப்பு வண்ணக்கூலம் (கோதுமை); a kind of lucas.

**புதிய** *pudiya,* கு. வி. எ. (adj.) புதியதான; new; புதியவிளைச்சலை அறுவடைக் காலத்தில் எதிர்ப்பார்ப்பர் (உ.வ.).

ம. புதிய; க. கொச, பொச

*[புது → புதிய]*

**புதியஏற்பாடு** *pudiya-ērpāḍu.,* பெ. (n.) ஏசுவின் பிறப்பு, வாழ்வு, இறப்பு, உயிர்ப்பு, அறிவுரை முதலியவற்றைப் பற்றிக் கூறும் நூல்; the new testament.

*[புதிய + ஏற்பாடு]*

**புதியகோச்சினை** *pudiya-kōccinai,* பெ. (n.) ஆன்மணத்தி; fresh bezoar. "*பொருவுறுங் குமப்பூ புதிய கோச்சினையோ ரென்றே*" (பரராசசேகரம்).

*[புதிய + கோச்சினை]*

**புதியது**[1] *pudiyadu,* பெ. (n.) இதற்கு முன் இருந்திருக்காதது, இப்பொழுது முதன்முதலாக வந்தது; that which is new. புதியது கவர்ச்சி மிக்கதாக இருக்கும் (உ.வ.).

க. பொசது; பட. கொசது

*[புது → புதிய → புதியது]*

**புதியது**[2] *pudiyadu,* பெ. (n.) புதியதாகச் சமைத்த சோறு (இ. வ.); freshly cooked rice, opp. to paḻaiyadu.

*[புது → புதிய → புதியது]*

**புதியது**[3] *pudiyadu,* பெ. (n.) அறுவடையானதும் கொண்டாடும் விழா; the festival on the completion of the harvest. "*கார்த்திகைப் புதியதுக்கு குளித்தார்களாகில்*" (ஈடு, 1, 5, 1).

*[புது → புதிய → புதியது]*

**புதியதுண்(ணு)**[1]**–தல்** *pudiyaduṇ(ṇu)-,* 6 செ. கு. வி. (v.i.) 1. ஒரேயடியாக நுகர்ச்சி கொள்ளுதல்; to enjoy in part; to have partial experience. "*இதுக்குமுன் புதியதுண்டறி யாத நான்*" (ஈடு 3, 2, 4). 2. முதல்விளைந்த விளைவை நல்வேளையிற் சமைத்துண்ணுதல்; to celebrate the ceremoney in which the first fruits of crops are cooked and eaten at an auspicious hour. "*புனத்தினிக் கிள்ளிப் புதுவலிக்காட்டி ....இனக்குறவர் புதியதுண்ணும்*" (திவ். பெரியாழ். 5, 3, 3).

*[புதியது + உண்–.]*

**புதியதுண்(ணு)**[2]**–தல்** *pudiyaduṇ(ṇu)-,* 6 செ. கு. வி. (v.i.) முதன் முதல் சுவை(ருசி) பார்த்தல்; to have a first taste of. "*தன் பிறவிக்குரிய போகங்களிலும் ஆசார ஸம்ஸ் காராதிகளிலும் புதியதுண்ணாதே*" (ரஹஸ்ய. 87).

*[புதியது + உண்–.]*

**புதியதுண்ணல்** *pudiduṇṇal-,* பெ. (n.) புதியதாக விளைந்த விளைவை நல்வேளையிற் சமைத்துண்ணும் சடங்கு; a ceremony in which the rice of a new crop is cooked and eaten at an auspicious hour.

*[புதிது + உண்ணல். உண் → உண்ணல். 'அல்' தொ. பெ. ஈறு]*

**புதியமனிதன்** *pudiya-maṉidaṉ,* பெ. (n.) 1. வெளியார், புதுவரவாளர் (அன்னியன்); stranger. 2. புதிதாக வேலையில் அமர்ந்தவன் (வின்.); novice, beginner one new in office. 3. ஆண்குழந்தை; stranger, new born male child.

*[புதிய + மனிதன்]*

**புதியமரிசம்** *pudiyamarišam,* பெ. (n.) நிறுத்தலளவையுளொன்று; a height. "*புதிய மரிசங்காற்கழஞ்சு*" (பரராசசேகரம்).

**புதியர்** *pudiyar,* பெ. (n.) *புதியவர்* பார்க்க; see *pudiyavar.*

*[புதிய → புதியர். 'அர்' ப. பா. ஈறு]*

**புதியவர்** *pudiyavar,* பெ. (n.) 1. புதிதாக வந்தவர்; new-comers. 2. விருந்தினர் (சூடா.); guests, visitors.

க. பொசம்ப, கொசப; து. பொசதாயெ, பொசப; கூ. பூனஞ்சு; பட. கொசம.

*[புது → புதியவர்]*

**புதியவிலை** *pudiyavilai,* பெ. (n.) பச்சிலை; fresh green leave.

*[புதிய + இலை]*

**புதியவேற்பாடு** *pudiyavērpāḍu,* பெ. (n.) *புதியஏற்பாடு* பார்க்க; see *pudiyaērpāḍu.*

*[புதிய + ஏற்பாடு]*

**புதியன்புதினா** *pudiyan-pudinā,* பெ. (n.) புதினாக்கீரை; a plant.

மறுவ. *புதினா*

**புதியனபுகுதல்** *pudiyanapugudal,* பெ. (n.) சொல்வழக்கம் முதலியன புதியனவாக உண்டாகுகை; (gram.) coming into vogue of new forms of speech or expression."பழையன கழிதலும், புதியன புகுதலும் வழுவல" (நன். 462)

*[புதியன + புகுதல். 'தல்' தொ.பெ.ஈறு]*

**புதியிளநீர்** *pudiyiḷa-nīr,* பெ. (n.) புதிதாகப் பறித்த இளநீர்க்காய்(பதார்த்த,63); tender coconut just plucked.

*[புதுயிளநீர் → புதியிளநீர் ]*

**புதியோர்** *pudiyōr,* பெ. (n.) *புதியவர்* (வின்.) பார்க்க; see *pudiyavar.*

*[புது → புதி → புதியோர் ]*

**புதிர்**[1] *pudir,* பெ. (n.) *புதிது* 2 (வின்) பார்க்க; see *pudidu* 2.

*[புது + கதிர் - புதுக்கதிர் → புதிர்]*

**புதிர்**[2] *pudir,* பெ. (n.) விடுகதை; riddle.

மறுவ. பிசி

க. பது

*[புள் → பிள் → பிய் → (பியி) → பிசி = பிய்ப்பது போல் விடுக்கும் விடுகதை. பிள் – பிடு → பிது → பிதிர் = விடுகதை. பிதிர் → புதிர் (மு.தா.262)]*

**புதிரி** *pudiri,* பெ. (n.) புதுநெற்சோறு; rice (food) prepared with newly harvested paddy.

*[புது + கதிர் – புதுகதிர் → புதிர் → புதிரி]*

அறுவடையான பின், புதிரி என்னும் புது நெல்லைச் சமைத்து நன்றியறிவுடன் வழிபடுதெய்வத்திற்குப் படைத்துண்பதே பொங்கல் (த.க.140).

**புதிரிவயல்** *pudirivayal,* பெ. (n.) தஞ்சை மாவட்டத்திலுள்ள ஊர், a village in Tañjāvūr dt.

*[புல் + திரி + வயல் – புல்திரிவயல்→ புதிரிவயல் ]*

**புதிலி** *pudili,* பெ. (n.) எண்ணெய்த்துருத்தி (யாழ்.அக); leather bag for keeping oil

க. புத்தலி

*[புள் → புட்டி = உட்டுளையுள்ள கலம். புள்→ (புல்) → புது → புதுலி → புதிலி]*

**புதினக்கடுதாசி** *pudiṉa-k-kaḍudāśi,* பெ. (n.) செய்தித்தாள் (யாழ்ப்.); newspaper.

*[ புதினம் + கடுதாசி ]*

Port. cartez > த. கடுதாசி

**புதினத்தாள்** *pudiṉa-t-tāḷ,* பெ. (n.) செய்தித்தாள்; newspaper.

*[ புதினம் + தாள் ]*

**புதினம்**[1] *pudiṉam,* பெ. (n.) **1.** புதுமை (வின்.); newness, novelty. **2.** செய்தி; news. **3.** வியப்பு (வின்.); wonderful or strange thing; extraordinary event; miracle.

*[ புது → புதி →புதினம் ]*

**புதினம்**[2] *pudiṉam,* பெ. (n.) *புதினத்தாள்* பார்க்க (இக்.வ.); see *pudiṉattāḷ.*

*[ புது → புதி →புதினம்]*

**புதினாகம்** *pudiṉāgam,* பெ. (n.) வீரம்; perchloride of mercury.

**புது** *puḍu,* பெ.அ. (adj.) **1.** புதியதாக இருக்கிற; new. குழந்தைக்குப் புதுத்துணி என்றால் மிகவும் பிடிக்கும் (உ.வ.). **2.** மீண்டும் வருகிற அல்லது மீண்டும் ஏற்படுத்துகிற; fresh, afresh. புதுவெள்ளம், புதுக் கணக்கு. **3.** (ஒரு நிகழ்வின் தன்மை) இன்னும் விட்டு நீங்காத; still retaining the newness. புதுமாப்பிள்ளை, புதுமருமகள்.

**ம.** புது; **க.** ஒச, பொச, கொச; **து.** பொச;

**பட.** கொச; **பர்.,** **கட.** புன்; **கோண்.** புனோ;

**கூ., குவி.** புனி; **குரு.** புனா; **மா.** புனெ; **பிரா.** பூச்குன்; **துட.** புத்.

*[ புல் → புள் → புழு = துளைத்தரிக்கும் சிற்றுயிரி. புழு → புகு. புகுதல் = உட்செல்லுதல். புல் → புது. ஒ.நோ. மெல் → மெது]*

**புதுக்கட்டு** *pudu-k-kaṭṭu,* பெ. (n.) புதியமுறை (வின்.); new institutions, orders, ordinances, establishments or regulations.

*[ புது + கட்டு]*

**புதுக்கணக்குநாள்** *pudu-k-kaṇakku-nāḷ,* பெ. (n.) நாட்டுக் கோட்டைச் செட்டிமார் மூன்றாண்டுக் கொருமுறை வணிக(வியாபார)த் தொடக்கத்திற்கு ஏற்படுத்தும் நல்ல நாள்; auspicious day for the commencement of business transactions for a fresh triennial period, (Nāṭṭu.Cheṭṭi)

*[ புது + கணக்கு + நாள்]*

**புதுக்கணி—த்தல்** *pudu-k-kaṇi-,* 4 செ.கு.வி. (v.i.) அழகுபெறுதல்; to receive new beauty, have new attraction. *'புதுக்கணித்த சிறகையுடைய சேவல்'* (ஈடு).

*[ புது + கணி—,]*

**புதுக்கணிப்பு** *pudu-k-kaṇippu,* பெ. (n.) புதியவொளி; fresh lustre, enhanced beauty. ***'ஆடையுடையும் புதுக்கணிப்பும்'*** (திவ்.திருவாய் 8,9.5.).

*[புதுக்கணி→ புதுக்கணிப்பு. 'பு' தொ.பெ.ஈறு]*

**புதுக்கம்** *pudukkam,* பெ. (n.) புதியதன்மை; newness.

ம. புதுக்கம்.

*[ புது → புதுக்கு → புதுக்கம். 'அம்' தொ.பெ.ஈறு]*

**புதுக்கரகம்** *pudu-k-karagam,* பெ. (n.) புதுப்பானை அல்லது புது மண்சட்டி; a new earthern pot.

*[ புது+ கரகம்]*

**புதுக்கருக்கு** *pudu-k-karukku,* பெ. (n.) 1. வேலைத் தொடக்கத்தில் புதிய ஆளுக்கு உண்டாஞ் சுறுசுறுப்பு; smartness or briskness of fresh hand. 2. புதுமை; freshness. ***'நகை யின்னும் புதுக்கருக்கு அழியவில்லை'*** .

*[ புது + கருக்கு]*

**புதுக்கலசசக்கரம்** *pudu-k-kalaša-šakkaram,* பெ. (n.) புதிய ஓடு; a piece of new broken tile.

*[ புது+ கலசம் + சக்கரம்]*

**புதுக்கலசம்** *pudu-k-kalašam,* பெ. (n.) *புதுக்கரகம்* பார்க்க; see *pudu-k-karagam.*

*[ புது+ கலசம் ]*

**புதுக்கலம்** *pudu-k-kalam,* பெ. (n.) புதியமட் பாண்டம்; new pot of clay ***'புதுக்கலம் போலும்'*** (சீவக.2108.).

ம. புதுக்கலம்

*[ புது+ கலம் ]*

**புதுக்கழுநீர்** *pudu-k-kaḻunīr,* பெ. (n.) புதிதாக அரிசி கழுவின நீர்; water of washed rice which is fresh.

மறுவ. அரிசிக்கழனி, கழனித்தண்ணீர்

*[ புது + கழுநீர் ]*

**புதுக்காசு** *pudu-k-kāšu,* பெ. (n.) காசு (நாணய) வகை; a kind of coin. (Pd.M.).

*[ புது + காசு. காழ் → காசு]*

**புதுக்கால்** *pudu-k-kāl,* பெ. (n.) புதியதாக வெட்டப்படும் கால்வாய்; new water channel. பழங்காலைத் தூர்க்காதே புதுக்காலை வெட்டாதே (பழ.).

*[ புது+ கால். கால் = வாய்க்கால் ]*

**புதுக்கு—தல்** *pudukku-,* 8 செ.குன்றாவி. (v.t.) 1. புதுப்பித்தல்; to renovate, make new. ***'ஒளிபெறப்புதுக்கி'*** (பெருங்.வத்தவ.4,2). 2. அழகுபடுத்துதல் (அலங்கரித்தல்); to adorn. ***'உலகமெல்லாம் புதுக்குவானமைந்தேம்'*** (உபதேசகா.சிவபுண்.365). 3. மெருகேற்றுதல்; to polish, to make shines. விளக்கைப்புளி போட்டுப் புதுக்கு (உ.வ.).

ம. புதுக்குக.

*[ புது →புதுக்கு—, ]*

**புதுக்குடி** *pudu-k-kuḍi,* பெ. (n.) புதிதாய் வந்தேறிய குடி; ryots newly settled in a village or town (R.T.). வாடகை வீடுகளிற் புதுக்குடி புகும்போது ஒட்டடை போக்கி வெள்ளையடிக்கப்பெறும் (உ.வ.).

*[ புது + குடி ]*

**புதுக்குப்புறம்** *pudukku-p-puṟam,* பெ. (n.) கோயில் முதலியவற்றைப் புதுப்பித்தற்கு வைத்த அற(தரும)ச் சொத்து; provision made for the repair of charitable institutions. 'ஸ்ரீராஜ ராஜன் கிணற்றுக்கும் தொட்டிக்கும் சேதத்துக்கும் ஆட்டாண்டு தோறும் புதுக்குப் புறமாக வைச்ச நெல்லு' (S.I.I.iii, 7).

*[ புதுக்கு + புறம். 'புறம்' இறையிலி நிலத்தைக் குறிக்கும் பின்னொட்டு. ஒ.நோ. அடிசிற்புறம், அறப்புறம். (த.வ.1,95) ]*

**புதுக்குளிகை** *pudu-k-kuḷigai,* பெ. (n.) பழைய காசு (நாணய) வகை; an ancient coin. (S.I.I.iv.108).

*[ புது + குளிகை. குள் → குளியம் → குளிகை ]*

**புதுக்கொல்லை** *pudu-k-kollai,* பெ. (n.) புதியதாகக் திருத்திய வேளாண்நிலம்; newly cultivated agricultural land.

*[ புது + கொல்லை ]*

காடுவெட்டிக் களப்புதல், கல்பொறுக்குதல், எருவிடுதல், ஆழவுழுதல், கட்டியடித்தல், பரம்படித்தல் (தாளியடித்தல், பல்லியாடுதல், ஊட்டித்தல்,படலிழுத்தல்) புழுதியுணக்கல், விதைத்தல், களையெடுத்தல், காவல்காத்தல், அறுவடைசெய்தல், களஞ்சேர்த்தல், சாணை யடைதல் (சூடுபோடுதல்,போரமைத்தல்), சாணைபிரித்தல், காயப்போடுதல், பிணை யலடித்தல் (கடாவிடுதல்,அதரிதிரித்தல்), வைக்கோல் அல்லது சக்கை, அல்லது கப்பி நீக்கல், பொலிதூற்றல், பொலியளத்தல், விதைக்கெடுத்தல், களஞ்சியஞ் சேர்த்தல் என்பன வானாவாரிப் புதுக்கொல்லை வேளாண்மை வினைகளாம் (ப.த.நா.ப.89,90)

**புதுக்கோட்டை** *pudu-k-kōṭṭai,* பெ. (n.) **1.** புதியதாக அமைக்கப்பட்ட கோட்டை; new fort. **2.** ஒரு நகரத்தின் பெயர்; name of a town.

*[ புது + கோட்டை ]*

**புதுக்கோட்டைமாடு** *pudu-k-kōṭṭai-māḍu,* பெ. (n.) முரட்டுத்தனமுள்ள மாடு (இ.வ.); wild cattle, as of Pudukkōṭṭai, a small Indian state in south India.

*[ புதுக்கோட்டை + மாடு ]*

**புதுக்கோடி** *pudu-k-kōḍi,* பெ. (n.) கைம்பெண்ணுக்கு (விதவைக்கு) அளிக்குங் கோடிப்புடைவை (இ.வ.); new cloth offered ceremonially to a woman on her widow-hood.

*[ புது + கோடி ]*

**புதுக்கோள்** *pudu-k-kōḷ,* பெ. (n.) புதிதாகப் பற்றிக் கொள்ளப்பட்டது; new acquisition, as of a wild elephant; seizure, as of a fort-wall. '*புதுக்கோள் யானையும்*' (மணிமே.28,60).

*[ புது + கோள். கொள் → கோள் ]*

**புதுகை** *pudugai,* பெ. (n.) புதுக்கோட்டை ஊரின் மரூஉச்சொல்; contracted form of the Pudukkōṭṭai town.

*[ புதுக்கோட்டை → புதுகை]*

**புதுச்சமையல்** *pudu-c-camaiyal,* பெ. (n.) புதியதாக சமைத்த உணவு, சுடுசமையல்; fresh food, hot food. நாட்டுப்புறத்தில் பொதுவாக இராவுணவே புதுச்சமையலாகும் (உ.வ.).

*[ புது + சமையல். சமை → சமையல்]*

**புதுச்சரக்கு** *pudu-c-carakku,* பெ. (n.) 1. புதிய வணிகப் பண்டம் (வின்.); new or fresh merchandise. 2. இனிவரும் ஊழ் (ஆகாமியம்); karma, which is yet to come to fruition. *'பழஞ்சரக்கும் புதுச்சரக்கும் பணியற்றேனே'* (மதுரைப்,49).

*[ புது + சரக்கு]*

**புதுச்செய்கை** *pudu-c-ceygai,* பெ. (n.) புதிய ஆண்டில் முதற்சாகுபடி (வின்.); first cultivation in a year.

*[ புது + செய்கை. செய் → செய்கை]*

**புதுச்செய்தி** *pudu-c-ceydi,* பெ. (n.) புதுவதாக வரும் செய்தி; latest news. புதுச்செய்தி தருவதற்கு இதழ்களில் முன்னுரிமை (உ.வ.).

*[ புது + செய்தி]*

**புதுச்சேரி** *pudu-c-cēri,* பெ. (n.) 1. இந்திய நாட்டின்நடுவண் அரசின் ஆளுகைக்குட்பட்ட ஒரு மாநிலம்; an union territory of India. 2. அம்மாநிலத்தின் தலைநகரம்; capital of Puduccēri union territory.

மறுவ. பாண்டிச்சேரி

ம. புதுச்சேரி

*[ புது + சேரி. சேர் → சேரி]*

**புதுச்சேரிக்கிழங்கு** *puduccēri-k-kiḻangu,* பெ. (n.) *புதுச்சேரிவள்ளி* பார்க்க; see *puduccēri-vaḷḷi.*

*[ புதுச்சேரி + கிழங்கு]*

**புதுச்சேரிமாப்பிள்ளை** *puduccēri-māppiḷḷai,* பெ. (n.) பகட்டாக (ஆடம்பரமாய்) இருப்பவன்; fop,dandy.

*[ புதுச்சேரி + மாப்பிள்ளை]*

**புதுச்சேரிவள்ளி** *puduccēri-vaḷḷi,* பெ. (n.) *புதுச்சேரி வள்ளிக்கிழங்கு* பார்க்க; see *pudu-c-cērivaḷḷi-k-kiḻangu.*

*[ புதுச்சேரி + வள்ளி]*

**புதுச்சேரிவள்ளிக்கிழங்கு** *puduccēri-vaḷḷi-k-kiḻangu,* பெ. (n.) 1. செவ்வள்ளி; purple yam. 2. மரவள்ளிக்கிழங்கு; root of tapioca

*[ புதுச்சேரி + வள்ளிக்கிழங்கு]*

**புதுச்சேவகன்** *pudu-c-cēvagaṉ,* பெ. (n.) புதிதாகப் படைத்துறையில் சேர்ந்த (இராணுவத்திலமர்ந்த) படையாள் (புதுவை.); conscript.

*[ புது + சேவகன்]*

**புதுச்சொல்புனைவு** *pudu-c-col puṉaivu,* பெ. (n.) புதியதாகக் கலைச்சொல் படைப்பு; coining new technical terms பாவாணரின் புதுச்சொல் புனைவு நிகரற்றது (உ.வ.).

*[ புதுச்சொல் + புனைவு]*

**புதுச்சோறு** *pudu-c-cōṟu,* பெ. (n.) சுடுசோறு; hot cooked rice.

*[ புது + சோறு]*

**புதுசு** *pudušu,* பெ. (n.) *புதியது* பார்க்க; see *pudiyadu.*

*[ புதியது → புதிது → புதுசு ]*

**புதுத்தண்ணீர்** *pudu-t-taṇṇīr,* பெ. (n.) *புதுநிறை* (இ.வ.) பார்க்க; see *pudunirai.*

*[ புது + தண்ணீர் ]*

**புதுத்தண்ணீர்விட்டலசு-தல்** *pudu-t-taṇṇīr viṭṭalašu-,* 8 செ.குன்றாவி. (v.t.) 1. பாத்தியிலிருந்து உப்புவாரிய பின்னர் பழைய நீரைப் பாத்தியிலிருந்து கழித்துவிட்டுப் புது நீரால் நன்றாக அலசுதல்; to wash the salt pan with fresh water after sweeping the salt from it. 2. ஒருமுறை அலசிய துணிகளைச் சவர்க்காரம் போக மீண்டும் புது நீர் விட்டு நன்றாக அலசுதல்; to rince the washed clothes one again with fresh water to romove the soap cleanly

*[ புதுத்தண்ணீர் + விட்டு + அலசு -, ]*

**புதுத்தரை** *pudu-t-tarai,* பெ. (n.) 1. நீர்நிலையைத் தூர்த்து உண்டாக்கின நிலம் (பூமி) (வின்.) ; reclaimed land, as by draining away water and raising the surface level. 2. புதிதாக இடப்பட்ட தரை; floor newly laid.

*[ புது + தரை ]*

**புதுத்திங்கள்** *pudu-t-tiṅgaḷ,* பெ. (n.) பிறைநிலா; crescent moon. 'புதுத் திங்கட்கண்ணியான்' (கலித்.150.)

*[ புது + திங்கள் ]*

**புதுத்துணி** *pudu-t-tuṇi,* பெ. (n.) பயன்படுத்தப்படாத துணி; new cloth.

க., பட. கொசபட்டெ

*[ புது + துணி ]*

**புதுத்தேவங்குடி** *pudu-t-tēvaṅgudi,* பெ. (n.) தஞ்சை மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Tañjāvūr dt.

*[ புது + தேவன் + குடி ]*

**புதுத்தேன்** *pudu-t-tēṉ,* பெ. (n.) நாட்படாத தேன்; fresh honey.

*[ புது + தேன் ]*

**புதுநகர்** *pudunagar* பெ. (n.) புதியதாக உருவான நகரம்; new town.

*[ புது + நகர் ]*

**புதுநடை** *pudu-naḍai,* பெ. (n.) புது மாதிரியான முறை (அல்லது) ஒழுக்கம் (வின்.); new style or fashion; strange or unusual manners.

*[ புது + நடை ]*

**புதுநாணயம்** *pudu-nāṇayam,* பெ. (n.) 1. புதிதாக முத்திரையடிக்கப்பட்ட காசு; new coin. 2. பழைய வழக்குக்கு மாறுபட்ட வழக்கு (வின்.); an innovation.

*[ புது + நாணயம் ]*

Skt. nāṇaka > த. நாணயம்

**புதுநிலசலம்** *pudunila-šalam,* பெ. (n.) கங்கைத் தண்ணீர்; water of Ganges.

*[ புது + நிலசலம் ]*

**புதுநிறை** *pudu-niṟai,* பெ. (n.) ஆறு முதலியவற்றின் புதுப்பெருக்கு; freshes in a river. '*புதுநிறைவந்த புனலஞ்சாயல்*'

மறுவ. ஆற்றுப்பெருக்கு

க. கொசநீரு

*[ புது + நிறை ]*

**புதுநீர்**[1] *pudunīr,* பெ. (n.) *புதுநிறை* பார்க்க; see *pudu-niṟai.*

*[ புது + நீர் ]*

**புதுநீர்**[2] *pudunīr,* பெ. (n.) ஊற்று நீர்; spring water.

*[ புது + நீர் ]*

**புதுநீர்விழவு** *pudunīr-viḻavu,* பெ. (n.) புதுப்புனல்விழவு பார்க்க, see *pudu-p-puṉal-viḻavu* '*புதுநீர் விழவின் ஆரவாரத்தை*' (மதுரைக்.264, உரை).

*[ புதுநீர்+ விழவு ]*

**புதுநீராட்டு** *pudu-nīr-āṭṭu,* பெ. (n.) புதுப்புனல்விழவு பார்க்க, see *pudu-p-puṉalviḻavu.* '*புதல்வராணை புதுநீராட்டென்*' (பெருங். உஞ்சைக்.38,23).

*[ புதுநீர் + ஆட்டு ]*

**புதுப்பசளை** *pudu-p-pašaḷai,* பெ. (n.) கொடிப்பசலை; heart leaved malabar night-shade.

*[ புது + பசளை ]*

**புதுப்பட்டி** *pudu-p-paṭṭi,* பெ. (n.) தஞ்சை மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Tañjāvūr dt.

*[ புது + பட்டி ]*

**புதுப்பணம்** *pudu-p-paṇam,* பெ. (n.) 1. சிறு காசு (நாணய)வகை (வின்.); a small coin. 2. புதுச்செல்வம்; newly acquired wealth.

*[ புது + பணம். படம் → பணம் ]*

**புதுப்பழக்கம்** *pudu-p-paḻakkam,* பெ. (n.) 1. புதிய வழக்கம்; new usage, practice or fashion. புகைபிடித்தல் அவனுக்குப் புதுப்பழக்கம் (உ.வ.). 2. பழக்கமில்லாதவன் செயல்; work of a beginner; un accustomed effort, as of a novice 3. புதிய பழக்கம்; new or recent acquaintance.

*[ புது + பழக்கம் ]*

**புதுப்பானை** *pudu-p-pāṉai,* பெ. (n.) *புதுக்கலசம்* பார்க்க; see *pudu-k-kalasam.*

மறுவ. புதுப்பாண்டம்.

க., பட. கொச மடகெ.

*[ புது + பானை ]*

**புதுப்பி—த்தல்** *puduppi-,* 11 செ.குன்றாவி. (v.t.) 1. பழுதுபார்த்தல்; to renovate, repair. 2. காலத்திற்கு ஏற்ப மாற்றியமைத்தல்; to make new, remodel,refit, modernise. வேலை

வாய்ப்பு அட்டையைப் புதுப்பித்து விட்டாயா? (உ.வ.).

*[ புது → புதுப்பி–,]*

**புதுப்புது** *pudu-p-pudu,* பெ.அ (adj.) அண்மையில் உருவாக்கப்பட்டது அல்லது தோன்றியது; very recently made or produced.

க. கொசகொச.

*[ புது + புது]*

**புதுப்புதுக்கு–தல்** *pudu-p-pudukku-,* 8 செ. குன்றாவி. (v.t.) ***புதுப்பி–த்தல்*** (வின்.) பார்க்க; see *puduppi-,*

*[ புது + புதுக்கு–,]*

**புதுப்புனல்விழவு** *pudu-p-puṉal-viḻavu,* பெ. (n.) ஆற்றின் புது நீர் வந்தபோது நிகழ்த்தும் கொண்டாட்டம்; festival celebrating the on-coming of freshes in a river. கரிகால் வளவன் புதுப்புனல் விழவு கொண்டாடுந் தலைநாட்போல (சிலப்.6,160 உரை).

*[புது + புனல் + விழவு. விள் → விளை → விழை → விழைவு = விருப்பம், விரும்பி நிகழ்த்தும் கொண்டாட்டம்.]*

**புதுப்புனலாட்டு** *pudu-p-puṉal-āṭṭu,* பெ. (n.) *புதுப்புனல் விழவு (சிலப்.10.22,அரும்)* பார்க்க; see *pudu-p-puṉal-viḻavu.*

*[புது + புனல் + ஆட்டு]*

**புதுப்புனைவர்** *pudu-p-pūṉaivar,* பெ. (n.) புதியதாக ஒன்றைக் கண்டு பிடிப்பவர்; inventer.

*[புது + புனைவர்]*

**புதுப்பெண்** *pudu-p-peṇ,* பெ. (n.) புதியதாகத் திருமணமான பெண் (கொ.வ.); newly-married woman, bride.

மறுவ. மணப்பெண்

ம. புதியபெண்ணு

*[புது + பெண்]*

**புதுப்பெயல்** *pudu-p-peyal,* பெ. (n.) முதன்முதலாகப் பெய்யும் மழை; first rains ***"பொய்யா வானம் புதுப்பெயல் பொழிதலும்"*** (சிலப்.23, கட்டுரை.9).

*[புது + பெயல். பெய் → பெயல். 'அல்' தொ.பெ.ஈறு 'புது' முன்மை குறித்த முன்னொட்டு. (த.வ.1,93)]*

**புதுப்போக்கு** *pudu-p-pōkku,* பெ. (n.) புதுவகை; style, new fashion. திரைப் படங்களில் புதுப்போக்கைக் கடைப் பிடிப்பவர் நன்கு பொருளீட்டுவர் (உ.வ.)

*[புது + போக்கு. போ → போக்கு]*

**புதுபுது–த்தல்** *pudupudu-,* 11 செ.கு.வி. (v.i.) *புதுமு–தல் (இ.வ.)* பார்க்க; see *pudumu-,*

*[புது + புது–,]*

**புதுமங்கலக்குடியான்** *pudumaṅgala-k-kuḍiyāṉ,* பெ. (n.) பழைய காசு (நாணய) வகை (பணவிடு.139); an ancient coin.

*[புதுமங்கலம் + குடியான்]*

**புதுமணம்** *pudumaṇam,* பெ. (n.) திருமணம் (திவா.); marriage, wedding.

*[புது + மணம். முள் → (மள்) → மண → மணம். மணத்தல் = கலத்தல், கூடுதல்]*

**புதுமணவாட்டி** *pudu-maṇavāṭṭi,* பெ. (n.) புதியதாகத் திருமணம் செய்து கொண்டவள்; woman, bride.

**மறுவ.** மணப்பெண், புதுப்பெண்

**ம.** புதியபெண்ணு.

*[புது + மணவாட்டி]*

**புதுமணவாளன்** *pudu-maṇavāḷaṉ,* பெ. (n.) 1. புதிதாகத் திருமணம் செய்துகொண்டவன்; newly-married man, bridegroom. புதுமணவாளப் பிள்ளைகளும்....காத்தற்கு ஏகினார் (சீவக.420,உரை) 2. என்றும் மணமகனாக இருக்கும் தன்மையினன்; one who ever enjoys the pleasures of a bridegroom "*பூக்கம ழமளி சேக்கும் புதுமணவாளனார்*" (சீவக.1880)

**மறுவ.** மணமகன், புதுமாப்பிள்ளை

*[புது + மணவாளன்.]*

**புதுமருந்து** *pudu-marundu,* பெ. (n.) 1. அன்று செய்த மருந்து; newly prepared medicine. 2. வழக்கமாகத் தரப்படும் மருந்து அல்லாமல் மாற்று மருந்து அல்லது கூடுதலான வேறுமருந்து; new medicine instead of old medicine or new medicine additional to it.

*[புது + மருந்து. முரு → மரு → மருந்து = நோய்தீர்க்கும் நறுமணத்தழை, நோய் நீக்கும்பொருள்.]*

**புதுமலர்** *pudu-malar,* பெ. (n.) அன்றலர்ந்த மலர்; fresh flower.

**ம.** புதுமலர்

*[புது + மலர்]*

**புதுமழை** *pudumaḻai,* பெ. (n.) முதல் மழை; the first rain.

**ம.** புதுமழ

*[புது + மழை]*

**புதுமழைத்தண்ணீர்** *pudumaḻai-t-taṇṇīr,* பெ. (n.) அன்று பெய்த மழைநீர்; water obtained by fresh rain.

**மறுவ.** புதுப்பெயல்

*[புது + மழை + தண்ணீர்]*

**புதுமனிதன்** *pudu-maṉidaṉ,* பெ. (n.) 1. *புதிய மனிதன்* பார்க்க; see *pudiya maṉidaṉ.* 2. தன் கரிசு(பாவம்)க்கு இரங்கிய கிறித்தவன் (கொ.வ.); true Christian.

*[புது + மனிதன்.]*

Skt. manu-ja > **த.** மனிதன்

**புதுமனை** *pudu-maṉai,* பெ. (n.) புதியதாகக் கட்டப்பட்ட இல்லம்; newly built house.

**மறுவ.** புதுவீடு.

*[புது + மனை]*

**புதுமனைப்புகுவிழா** *pudu-maṉai-p- pugu-viḻā,* பெ. (n.) புதியதாகக் கட்டப்பட்ட இல்லத்திற்குக் குடியேறுவதைக் குறிக்க நடத்தும் விழா (கிரகப்பிரவேசம்); house warming. நண்பர் புதுமனைப்புகுவிழாவினைச் சிறப்பாக நடத்தினார் (உ.வ.)

*[புதுமனை + புகுவிழா]*

**புதுமாடு** *pudu-māḍu,* பெ. (n.) பழக்கப்படாத மாடு; untamed bull.

*[புது + மாடு]*

**புதுமாடுகுளிப்பாட்டு–தல்** *pudu-māḍu-kuḷippāṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) (புதியமாட்டைக் குளிப்பித்தல்) தொடக்கத்தில் ஆர்வமாயிருத்தல்; (lit., to wash a new bull) to show extreme zeal in work, at the commencement.

*[புதுமாடு + குளிப்பாட்டு–,]*

**புதுமாப்பிள்ளை** *pudu-māppiḷḷai*, பெ. (n.) *புதுமணவாளன் (கொ.வ.)* பார்க்க; see *pudumaṇavāḷaṉ*.

*[புது + மாப்பிள்ளை. மணப்பிள்ளை → மாப்பிள்ளை]*

**புதுமானியம்** *pudu-māṉiyam*, பெ. (n.) புதிதாகக் கொடுத்த இலவய (இனாம்) நிலம். (பணவிடு.171.); newly-granted inam land.

*[புது + மானியம்]*

**புதுமின்னல்** *pudumiṉṉal*, பெ. (n.) பழைய காசு(நாணய)வகை (பணவிடு.143.); an anicient coin.

**புதுமு–தல்** *pudumu-*, 5 செ.கு.வி. (v.i.) ஒன்றும் அறியாததுபோல் பேசுதல் (நெல்லை.); to talk with feigned ignorance.

*[புது → புதுமு–,]*

**புதுமுகனை** *pudumugaṉai*, பெ. (n.) தொடக்கம் (வின்.); beginning, commencement, as of an event.

*[புது + முகனை]*

**புதுமுகம்** *pudu-mugam*, பெ. (n.) **1.** நாடகம் திரைப்படம் போன்றவற்றில் முதன் முதலாக அறிமுகமாகுபவர்; person making his or her debut in stage, film etc. புதுமுகங்களுக்கு நல்லவரவேற்பு இருக்கிறது. (உ.வ.) **2.** புதியவர், முதன்முறையாகப் பார்க்கப்படுபவர்; stranger. யார் அந்தப் புதுமுகம் (உ.வ.)

*[புது + முகம்]*

**புதுமுதல்** *pudumudal*, பெ. (n.) அடுத்த ஆண்டு (இ.வ.); succeeding year.

*[புது + முதல்]*

**புதுமுயற்கூடு** *pudumuyaṟ-kūḍu*, பெ. (n.) திங்கள் (சந்திரன்) (சாதக சிற்.6.); the moon.

**புதுமை¹** *pudumai*, பெ. (n.) **1.** புதிதாந்தன்மை; newness, freshness, novelty. "*பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே*" (திருவாச.7,9). **2.** பழக்கமின்மை; want of training or practice **3.** அரியதாக நிகழ்வது (அபூர்வம்); strangeness, extraordinariness, uncommonness **4.** வியப்பு; miracle அங்ஙனங்காண்பேனாயின் இஃது ஒரு புதுமையன்றோ (சிலப்.19,10, உரை) **5.** மிகுதி (திவா.); plenty, abundance **6.** எழில்; fresh glow, brightness புது மயிலூர் பரன் (கந்தபு.அவையடக்.13) **7.** நாட்டுக்கோட்டையார் பிள்ளைப்பேறு முதலியவற்றைக் கொண்டாடும் சடங்கு வகை (நாட்.செட்.); ceremonial feast on the occasion of childbirth etc.

ம.புதும; க.பொசது,கொசது; பட. கொசது;

குட.,புதுமெ

*[புது → புதுமை]*

யாதொன்றும் எவ்விடத்தானும் எக்காலத்தினும் தோன்றாததோர் பொருள் தோன்றுதல் (தொல்.பொருள்.251) என்று இளம்பூரணர்

புதுமைக்குத் தரும் வரையறை பருப்பொருளுக்கும் நுண்பொருளுக்கும் பொருந்துதல் காண்க.

**புதுமை²** *pudumai,* பெ. (n.) நான்முகப் புல்; a kind of grass.

**புதுமைகாட்டு-தல்** *pudumai-kāṭṭu-,* 15 செ.கு.வி. (v.i.) 1. இயற்கை இறந்த செயல் (அற்புதம்) தோற்றுவித்தல் (வின்.); to perform miracles; to show miraculous powers. 2. அறியாததுபோற் காட்டிக் கொள்ளுதல்; to pretend ignorance.

[புதுமை + காட்டு-,]

**புதுமைசெய்-தல்** *pudumai-šey-,* 1 செ.கு.வி. (v.i.) *புதுமைகாட்டு-தல் (வின்.)* பார்க்க; see *pudumai-kāṭṭu-.*

[புதுமை + செய்]

**புதுமொழி¹-தல்** *pudu-moḻi-,* 3 செ.கு.வி. (v.i.) புதிய செய்தி கூறுதல்; to announce fresh news "*தூதர் புதுமொழிந்துறக் கேட்டனை*" (உபதேசகா. சிவத்துரோ.171)

[புது + மொழி-,]

**புதுமொழி²** *pudu-moḻi,* பெ. (n.) புதியதாகத் தோன்றிய மொழி, முதுமொழிக்கு எதிரானது; new language.

[புது + மொழி. தமிழ் ஒரு முதுமொழி (ancient language). இந்தி ஒரு புதுமொழி. (ஒ.மொ.1,80)]

**புதுமொழி³** *pudu-moḻi,* பெ. (n.) புதியதாக அனைவராலும் பயன்படுத்தப் படும் தொடர் மொழி, பழமொழி போல் புதியதாக உருவாக்கப்பட்டது; newly constructed proverb.

**புதுவது** *pudu-vadu,* பெ. (n.) புதிது; anything new "*அது புதுவதோவன்றே*" (புறநா.42).

**புதுவயல்** *pudu-vayal,* பெ. (n.) புதியதாக திருத்தியமைக்கப்பட்ட வயல்; land newly brought under cultivation.

[புது + வயல்]

**புதுவரவு** *pudu-varavu,* பெ. (n.) புதியதாகத் வந்தது; new arrival.

[புது + வரவு]

**புதுவல்** *puduval,* பெ. (n.) புதியதாகத் திருத்தி யமைத்த வயல் (நாஞ்.); land newly brought under cultivation.

ம. புதுவல்

[புதுவயல் → புதுவல்]

**புதுவழி** *pudu-vaḻi,* பெ. (n.) புதியதாக உருவாக்கப்பட்ட வழி; new path.

[புது + வழி]

**புதுவன்** *puduvaṉ,* பெ. (n.) புதியவன்; new man, stranger. "*புலம்பெயர் புதுவன்*" (சிலப்.16:129)

[புது → புதுவன்]

**புதுவன்னம்** *puduvaṉṉam,* பெ. (n.) *புதுச்சோறு* பார்க்க; see *pudu-c-cōṟu.*

[புது + அன்னம்]

Skt. anna > த. அன்னம்

**புதுவீடு** *puduvīḍu* பெ. (n.) *புதுமனை* பார்க்க; see *pudumaṉai.*

க., பட. ஹொசமனெ.

*[புது + வீடு]*

**புதுவெட்டு** *pudu-veṭṭu,* பெ. (n.) பழைய காசு(நாணய) வகை (பணவிடு.133.); an ancient coin.

**புதுவெள்ளம்** *puduveḷḷam,* பெ. (n.) மழைக்குப்பின் ஆற்றில் வரும் திடீர் நீர்ப்பெருக்கு, புதியதாக வரும் வெள்ளம்; fresh flood, sudden rise of water in rivers after rain.

ம. புதுவெள்ளம்.

*[புது + வெள்ளம். வெள் → வெள்ளம் = வெளுப்பான புதுப்பெருக்கு நீர்]*

**புதுவெள்ளை** *pudu-veḷḷai,* பெ. (n.) நாட்படாத வெட்டைநோய்; fresh gonorrhoea *opposed* to chronic one.

மறுவ. வெள்ளைநோய்

*[புது + வெள்ளை. முள் → வெள் → வெள்ளை = உடம்பிலுள்ள சூட்டுவகை]*

**புதுவை** *puduvai,* பெ. (n.) திருவில்லிபுத்தூர் (ஸ்ரீவில்லிபுத்தூர்), புதுச்சேரி, புதுக்கோட்டை முதலிய ஊர்ப் பெயர்களின் மரூஉச்சொல்; contracted form of the names of certain towns, as Tiruvilliputtūr, Puduccēri, Pudukkōṭṭai etc. புதுவை விட்டுசித்தன் (திவ்.பெரியாழ்.3,3,10) 'தருவுயர்ந்திடு புதுவையம்பதி' (தனிப்பாடல்)

*[புதுச்சேரி → புதுவை, புதுக்கோட்டை → புதுவை என வெவ்வேறு நிலையின் மரூஉச் சொற்கள் இவை.]*

**புதுவைசுப்புராமசாமிமுதலியார்** *puduvai šuppurāmašāmi-mudaliyār,* பெ. (n.) ஒரு புலவர்; a poet.

இவர் கோகிலாம்பிகைமாலை, வில்வ வனத்தந்தாதி ஆகிய நூல்களை எழுதியுள்ளார்.

**புதுவைபொன்னையாமுதலியார்** *puduvai poṉṉaiyā - mudaliyār,* பெ. (n.) ஒரு புலவர்; a poet.

இவர் மயிலாசல முருகர் மும்மணிக்கோவை என்ற நூலை இயற்றியுள்ளார்.

**புதுவோர்** *puduvōr,* பெ. (n.) 1. புதிய மாந்தர்; strangers. "*புதுவோர் நோக்கினும் பணிக்கு நோய்கூ ரடுக்கத்து*" (மலைபடு.288). 2. பட்டறிவு (அனுபவம்) அற்றவர்; inexperienced persons.

*[புது → புதுவோர்]*

**புதை¹–தல்** *pudai-,* 4 செ.கு.வி. (v.i.) 1. மண்ணுக்குள் மறைதல், ஏதாவது ஒரு பொருளாய் மறைக்கப்படுதல்; to be buried, as treasure, to be covered, concealed, அங்கண்மால் விசும்பு புதைய (மதுரைக்.384.). 2. அமிழ்தல்; to sink in, as a wheel, to enter, penetrate, as in arrow. "*நெடுஞ்சுனை புதையப் புகுந்தெடுத்தளித்தும்*" (கல்லா.13). 3. உள்ளடங்கியிருத்தல்; to lie hidden, as a meaning. இப்பாட்டு புதைபொருளுள்ளது.

*[புல் → புது → புதை–]*

**புதை²–த்தல்** *pudai-,* 11 செ.குன்றாவி. (v.t.) 1. அடக்கம் பண்ணுதல்; to bury, to inter. பிணத்தைப் புதைப்பதும் தமிழர் வழக்கம் (உ.வ.) 2. ஒளித்துவைத்தல்; to hide, as treasure, to conceal. "*தேமாங்கனியை.... அறையிற் புதைத்து*" (திருமந்.202). 3. வாய் செவி முதலியவற்றைப் பொத்துதல்; to close, cover, as the mouth, ear. "*சிந்துரப்பவளச் செவ்வாய் செங்கையிற் புதைத்து*" (கம்பரா. கைகேசி, சூழ்.104). 4. போர்த்துதல் (வின்.); to clothe, to cover. "*புதையிரும்படாஅம்போக நீக்கி*" (சிலப்.5,4) 5. மறைத்துப் பேசுதல் (வின்.); to speak in parables, to write obscurely. 6. மணிக்கற்கள் (இரத்தினம்) பதித்தல்; to inlay, encase, as jewels. 7. வலிமையைக் குறைத்தல்; to weaken, reduce, diminish. புதைத்திலன் மிதத்திலன் (இரகு. முடிசூட்.117) 8. அமிழ்த்துதல் (யாழ்.அக.); to cause to sink., to lower.

க.பொதிசு; தெ. பொதுகு; து. புதெக்க.

*[புல் → புது → புதை]*

**புதை³** *pudai,* பெ. (n.) 1. மறைவு (சூடா.); concealment 2. காட்டில் மரம் அடர்ந்த இடம் (வின்.); thick part of jungle, as a cover for beasts. 3. மறைபொருள் (வின்.); that which is concealed, mystical. 4. புதைபொருள்; hidden treasure. புதைக்குணிதியென (தனிப்பா. i,353,78). 5. மறைவிடம்; place of concealment. புதையிருந்தன்ன கிளரொளி வனப்பினர் (பெருங்.உஞ் சைக்.34,133). 6. உடல் (சூடா.); body. 7. அம்புக்கட்டு (திவா.); bundle or sheaf of arrows. 'புதையம்பிற்பட்டு' (குறள்,597). 8. ஆயிரம்; thousand.

*[புல் → புது → புதை]*

**புதை⁴** *pudai,* பெ. (n.) புதுமை (சூடா.); novelty.

*[புது → புதை]*

**புதை⁵** *pudai,* பெ. (n.) *புரை⁶* பார்க்க; see *purai⁶* புண்புதை வைத்துப் பழுத்திருக்கிறது. (உ.வ.)

*[புல் → புர்→புரை = உட்டுளை, உட்டுளைப் பொருள். புரை → புதை]*

**புதைக்கரு** *pudai-k-karu,* பெ. (n.) முதிரா நிலையிற்பிறந்தவுடனிறந்து புதைக்கப்படும் குழந்தை; buried foetus or immatured child which born dead or died after delivery.

*[புதை + கரு. குரு → கரு = சூல், முட்டை, குழவி, குட்டி]*

**புதைகுழி** *pudai - kuḻi,* பெ. (n.) 1. இறந்தவரைப் புதைப்பதற்கான குழி; pit for burial, grave. 2. *புதைமணல்* பார்க்க; see *pudai-maṇal.*

*[புதை + குழி]*

**புதைசாலகம்** *pudaiśālagam,* பெ. (n.) சாய்க்கடை நீர் செல்வதற்காக ஏற்படுத்தப்பட்ட நிலத்தடி வழி; underground drainage.

மறுவ.கரந்துபடை.

*[புதை + சாலகம்]*

பண்டைத்தமிழகத்தின் கோநகர்களில் அங்கண நீரைக்கண்ணிற்படாமல் செலுத்துதற்கு, கரந்துபடை என்னும் புதைசாலகம் இருந்தது. அது தெரு நடுவிற் கட்டப்பட்டு யானைக்கூட்டம் மேற்செல்லும்படி கருங்கல்லால் மூடப்பட்டிருந்தது. அதிற்சென்ற நீர் யானைத் துதிக்கை போன்ற தூம்பின் வாயிலாய் அகழியில் விழுந்தது. (ப.த.நா.ப.138)

**புதைபொருள்** *pudai-poruḷ,* பெ. (n.) **1.** நிலத்திற் புதைந்து கிடக்கும் செல்வம்; hidden treasure. **2.** நிலத்தின் கீழ் புதைந்திருக்கும் பண்டைக் காலச் சின்னங்கள்; burried remains (found in archaeological excavations). **3.** ஆழ்ந்த கருத்துடைய பேச்சு அல்லது எழுத்து (கொவ.); speech or written of profound significence. **4.** பாட்டில் மறைந்துள்ள பொருள்; hidden meaning in the verse.

*[புதை + பொருள்]*

**புதைமணல்** *pudai-maṇal,* பெ. (n.) மேற்பரப்பில் அழுந்தும் எந்த ஒன்றும் உட்சென்றுவிடக் கூடிய மணற்பரப்பு. quicksand.

**மறுவ.** சொரிமணல், உதிர்மணல்.

*[புதை + மணல்]*

**புதையல்** *pudaiyal,* பெ. (n.) **1.** மறைகை; being hidden. **2.** *புதைபொருள்* பார்க்க; see *pudai poruḷ.* புதையலைக் கல்லியெடுத்தவன் (இராமநா.ஆரணி.23). **3.** அம்புக்கட்டு (அக.நி.); sheaf of arrows. **4.** கேடயம் (அக.நி.); shield.

*[புதை → புதையல். 'அல்' தொ.பெ.ஈறு]*

**புதையிருள்** *pudaiyiruḷ,* பெ. (n.) காரிருள்; deep darkness. 'புதையிருட் படாஅம்போக நீக்கி' (சிலப்.5,4).

*[புதை + இருள்]*

**புதையூரல்** *pudai-y-ūral,* பெ. (n.) கொல்லங்கோவை (மலை.); a climbing shrub.

**புதைவாணம்** *pudaivāṇam,* பெ. (n.) பொறிவாணவகை; a kind of rocket

*[புதை + வாணம்]*

**புப்புசக்கட்டி** *puppuša-k-kaṭṭi,* பெ. (n.) நுரையீரலில் ஏற்படுங் கட்டி; pulmonary abscess.

*[புப்புசம் + கட்டி]*

**புப்புசச்சன்னறை** *puppuša-c-caṉṉaṟai,* பெ. (n.) நுரையீரலிலுள்ள காற்றறை; aircell of the lung.

*[புப்புசம் + சன்னறை]*

**புப்புசச்சுருக்கம்** *pupuša-c-curukkam,* பெ. (n.) நுரையீரலின் ஒடுக்கத்தி னாலுண்டாகும் நோய்; pulmonary condensation.

*[புப்புசம் + சுருக்கம்]*

**புப்புசச்சுழற்றி** *puppuša-c-cuḻaṟṟi,* பெ. (n.) நுரையீரல் வழியாய் அரத்தம் போதல்; pulmonary circulation of blood.

*[புப்புசம் + சுழற்றி]*

**புப்புசதாபிதம்** *puppuša-tābidam,* பெ. (n.) *புப்புசவழற்சி* பார்க்க; see *puppuša-v-aḻaṟci.*

*[புப்புசம் + தாபிதம்]*

Skt. tāpita > **த.** தாபிதம்

**புப்புசநரம்பு** *puppuša - narambu,* பெ. (n.) மூளை நரம்பு; pneumo gastric nerves.

*[புப்புசம் + நரம்பு]*

**புப்புசநாடி** *puppuša-nāḍi,* பெ. (n.) தூய்மை யான செவ்வியரத்தத்தை நுரையீரலினின்று

நெஞ்சுப்பையினிடப் பக்கத்திற்குக் கொண்டு போய்ச் சேர்க்கும் குழல்; pulmonary vein.

*[புப்புசம் + நாடி]*

**புப்புசநாளம்** *puppuša-nāḷam,* பெ. (n.) மாசுபட்ட காரியரத்தத்தை நுரையீரற் பைகளுக்கு எடுத்துச் செல்லுங்குழல்; pulmonary artery.

*[புப்புசம் + நாளம். நுள் → (நூள்) → நாள் → நாளம் = உட்டுளையுள்ள தண்டு, அரத்தக் குழாய்]*

**புப்புசபதம்** *puppuša-padam,* பெ. (n.) *புப்புசவழற்சி* பார்க்க; see *puppuša-v-aḻarci.*

**மறுவ.** புப்புசதாபம்

*[புப்புசம் + பதம்]*

**புப்புசம்** *puppušam,* பெ. (n.) நுரையீரல் (இங்.வை.); lung.

*[உ → உப்பு → உப்புசம் → புப்புசம் = உப்பி அதாவது விரிந்து சுருங்குவது]*

**த.** உப்புசம் > Skt. phuppusa.

**புப்புசவழற்சி** *puppuša-v-aḻarci,* பெ. (n.) நுரையீரல் நோய்வகை; lung discese, pleuro-pneumonia (M.L.).

*[புப்புசம் + அழற்சி]*

**புப்புசவழிப்புண்** *puppuša-vaḻi-p-puṇ,* பெ. (n.) நுரையீரலிலேற்படும் தசையழுகல் நோய்; pulmonary gangrene.

*[புப்புசவழி + புண்]*

**புப்புசவேர்** *puppuša-vēr,* பெ. (n.) நுரையீரலின் அடிப்பகுதி; root fo the lungs.

*[புப்புசம் + வேர்]*

**புப்புசோனதனம்** *puppušōṉadaṉam,* பெ. (n.) முழு சுழற்சியற்ற நுரையீரல்; atelutasis pulmonium.

**புப்புலம்** *puppulam,* பெ. (n.) நுரையீரலினின்று உச்சிநோக்கிச் செல்லும் பத்துவகை வளியு ளொன்று; one of the ten vital airs situated in the chest or lungs.

**புப்புளம்** *puppuḷam,* பெ. (n.) புடைப்பு, குமிழ்; திரட்சி; bulb.

*[ புடை → புடைப்பு → புப்பு → புப்புளம்]*

**பும்மெனல்** *pumm-eṉal,* பெ. (n.) ஒலிக்குறிப்பு வகை (சங்.அக.); onom. expr. denoting buzzing sound.

*[பும் + எனல்]*

**பும்மைதுனம்** *pummaiduṉam,* பெ. (n.) எருவாய்ப்புணர்ச்சி a kind of sodomy.

**பும்விருகம்** *pumvirugam,* பெ. (n.) **1.** ஒருவகை (கத்தூரி) நஞ்சு; a variety of aconity. **2.** ஒருவகை மான் (கத்தூரி) (சங்.அக.); musk deer.

**புய்¹–தல்** *puy-,* 4 செ.கு.வி. (v.i.) **1.** பறிக்கப்படுதல்; to be pulled out, torn off, wrested. புய்ந்து கால்போகில் புலான் முகந்த வெண்குடை (களவழி. 39). **2.** மறைதல்; to disappear. கோலப்பகற்களிகறான்றுகற் புய்ய (திவ்.இயற்.திருவிருத்.40).

*[புல் → புள் → புய் (வே.க.3,114)]*

**புய்²—த்தல்** *puy-,* 4 செ.குன்றாவி. (v.t.) **1.** பறித்தல்; to extract, pull out, uproot புய்த்தெறி கரும்பின் விடுகழை (புறநா.28). **2.** பயத்தல்; to produce, yield.

தெ.புச்சு; நா.புச்; பர்.புச்ச; கட.புச்கிர்; கோண்.புச்கானா; குரு. புதுக்னா; மா.புசெ,

*[புள்→புய். புய்தல் (த.வி.) – புய்த்தல் (பி.வி.)]*

**புய¹—த்தல்** *puya-,* 12செ.குன்றாவி. (v.t.) **1.** *புய்²—த்தல் 1* பார்க்க; *puy² 1,* மெய்வதி வேல்புயந்து மேல்வரும் (விநாயகபு. 37,60) **2.** வெளியேறுதல் (ஈடு, 9,5,10); to depart, separate.

*[புய்த்தல் → புயத்தல்]*

**புய²—த்தல்** *puya-,* 4 செ.குன்றாவி. (v.t.) பெயர்த்தல்; to pluck, pull out *'நவைகண்டு வாட்கண் புயக்கவொரு மைந்தனைப் போவித்தார்'* (கச்சி.வண்டுவிடு.293.).

*[புல்→ புள் → புய். புய்த்தல் = பறிக்கப்படுதல் (வே.க.3,114.) புய்த்தல் → புயத்தல்]*

**புயக்கு** *puyakku,* பெ. (n.) **1.** விட்டுநீங்குகை; departing, separation. **2.** மனக்கவர்ச்சி (ஈடு. 9, 5, 10); attractiveness.

*[புய → புயக்கு]*

**புயங்கொட்டு—தல்** *puyaṅ-koṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) மறக்குறியாகத் தோள்கட்டுதல்; to strike or pat on one's own shoulder in challege, as a warrior. தங்கச் சிமையப் புயங் கொட்டும் (தனிப்பா.i,382,29).

*[புயம் + கொட்டு—,]*

**புயத்துணை** *puya-t-tuṇai,* பெ. (n.) தகுந்த துணைவன் (வின்.); helper, useful as the arm.

*[புயம் + துணை]*

**புயபராக்கிரமம்** *puya-parākkiramam,* பெ. (n.) *புயவலி (வின்.)* பார்க்க; see *puya-vali.*

*[புய + பராக்கிரமம்]*

Skt. parākrama > **த.** பராக்கிரமம்

**புயபலம்** *puya-palam,* பெ. (n.) *புயவலி (வின்.)* பார்க்க; see *puya-vali.*

*[புயம் + பலம்]*

Skt. phala > **த.** பலம்

**புயம்** *puyam,* பெ. (n.) **1.** தோள்; arm, shoulder. "புயம்பலவுடைய தென்னிலங்கையர் வேந்தன்" (தேவா.130,8) **2.** புடை; side **3.** கோணத்தின் பக்கக்கோடு (இக்.); (math.) side of an angle.

*[புல் → பொல்லு = தடி. புள் → (பிள்) → பிண்டு → பிண்டம் = திரட்சி (மு.தா.209) புள் → புய் → புயம் = திரண்ட தோள்]*

**த.** புயம் > Skt. bhuja

வளைதல் பொருள்படும் bhuj என்னும் அடியிலிருந்து வளைந்தது, வளைந்து தொங்குவது, தொங்கும் கை, கைபோன்ற தும்பிக்கை, போன்ற பொருள் வளர்ச்சியைக் கொண்ட bhuja என்னும் சொல் வளர்ந்துள்ளதை மா.வி.அகரமுதலி காட்டுகிறது. இப்பொருள் வளர்ச்சி கைக்கும் அதுபோன்று விளங்குவனவற்றிற்கும் பொருந்துமேயல்லாமல் தோளுக்குப் பொருந்தாமையைக் காணலாம். பணைத்தோள், திண்டோள், திணிதோள் என்பன போன்ற வழக்குகள் தமிழில் தோள் திரட்சிப்

பொருளில் வழக்கூன்றியுள்ளதைக் காட்டுகின்றன. திரட்சிப்பொருள் அடிப்படையில் தோள், பின் அத்தோளுடன் பொருந்தியிருக்கும் மேற்கை, கை, கைபோன்ற தும்பிக்கை என்றாற்போன்ற ஆட்சிகள் இயல்பான பொருள் வளர்ச்சியைக் காட்டுக்கின்றன. தமிழில் தோள், இருதோள்களில் ஒன்றைப்போன்று இருக்கும் பக்கம், பக்கத்தைப்போன்ற கோணத்தின் பக்கக்கோடு ஆகிய பொருள்களுடன் நின்றுள்ளது.

**புயமுட்டி** *puya-muṭṭi,* பெ. (n.) வில்லைத் தோண்மேற் பிடித்து மேனோக்கி அம்பெய்கை (சீவக.1680, உரை); holding the bow above the shoulder and shooting upwards.

*[புயம் + முட்டி]*

**புயல்**[1] *puyal,* பெ. (n.) 1. மழைபெய்கை; raining. புயல்(மேகம்)போற்றிருமேனியம்மான் (திவ்.திருவாய்.8,10,2) 2. நீர்; water.'மாமேகம் பெய்த புயல்' (சீவக.2476). 3. முகில் (மேகம்); cloud.`விண்டுமுன்னிய புயல்' (பதிற்றுப்.84,22).

**மறுவ.** மழை, எழிலி, மங்குல், மஞ்சு, கொண்டல், கொண்மூ, விண், விசும்பு, மால், செல், கார், மை, மாரி,

*[பொய் → பெய். பெய்தல் = துளைவழி நீர் ஒழுகுதல், (வே.க.3,126) பெய் → பெயல் = பொழிகை, மழை, மழைத்துளி. பெயல் → புயல் = முகிலினின்று விழும் மழை, மழையாலான நீர், மழைபெய்யும் முகில்]*

**புயல்**[2] *puyal,* பெ. (n.) 1. கொடுங்காற்று (வின்.); gale, storm, tempest, gust, squall. 2. சுழல் காற்று; cyclone.

**மறுவ.** சூறை, சூறாவளி,

*[புள் → (புய்) → புயல் (மு.தா.251)]*

**புயல்காற்று** *puyal-kāṟṟu,* பெ. (n.) *புயற்காற்று* பார்க்க; see *puyaṟ-kāṟṟu,* புயல்காற்றின் வேகம் தணியவில்லை.

*[புயல் + காற்று]*

**புயல்சின்னம்** *puyal - śiṉṉam,* பெ. (n.) புயல் தோற்றுதற்குரிய அறிகுறி; storm

*[புயல் + சின்னம்]*

**புயல்மண்டலம்** *puyal - maṇḍalam,* பெ. (n.) புயல் உருவாகியிருக்கும் பகுதி; storm-zone.

*[புயல் + மண்டலம்]*

**புயல்முகில்** *puyal - mugil,* பெ. (n.) புயலின்போது எழும் முகில்; storm cloud.

*[புயல் + முகில்]*

**புயல்மேகம்** *puyal - mēgam* பெ. (n.) *புயல் முகில்* பார்க்க; see *puyal-mugil.*

*[புயல் + மேகம்]*

**புயல்மையம்** *puyal - maiyam,* பெ. (n.) புயல்காற்று நிலை கொண்டிருக்கும் இடம்; the centre place of storm, cyclone.

*[புயல் + மையம்.]*

Skt. madya > **த.** மத்தியம் → மையம்

**புயல்வண்ணன்** *puyal-vaṇṇaṉ,* பெ. (n.) திருமால்; Tirumāl. புயல் வண்ணன் புனல் வார்க்க (கலிங்.1).

*[புயல் + வண்ணன். புயல் = முகில்]*

**புயலடி—த்தல்** *puyal-aḍi-,* 4 செ.கு.வி. (v.i.) சூறாவளி காற்றடித்தல்; to form cyclone.

*[புயல் + அடி –,]*

**புயலாய்** *puyalāy,* வி.எ. (adv.) ஆர்ப்பாட்டமாய்; stormily. தேர்தல் நாள்களில் தலைவர் புயலாய் இயங்கினார் (உ.வ.).

*[புயல் + ஆய்]*

**புயலேறு** *puyalēṟu,* பெ. (n.) இடி; thunder. பெருஞ்சினப் புயலேறனையை (பதிற்றுப்.51,28).

*[புயல் + ஏறு]*

**புயவகுப்பு** *puya-vaguppu,* பெ. (n.) பாட்டுடைத் தலைவனது தோள்வலியைக் கூறும் கலம்பக வுறுப்பு (குமர.பிர.மதுரைக்.11); a section of kalampagam, describing the valourous deeds of its hero.

*[புயம் + வகுப்பு]*

**புயவலி** *puya-vali,* பெ. (n.) தோள்வலிமை (வின்.); strength of arm.

*[புயம் + வலி]*

**புயற்காற்று** *puyaṟ-kāṟṟu,* பெ. (n.) பெருங்காற்று; storm-wind. (C.G.).

*[புயல் + காற்று]*

**புயாசலம்** *puyāšalam,* பெ. (n.) மலையொத்த தோள் (வின்.); hill-like shoulder.

*[புயம் → புயா + அசலம்]*

Skt. acala > த. அசலம்

**புயாந்தரம்** *puyāndaram,* பெ. (n.) பெ. (n.) மார்பு (யாழ்.அக.); chest of a person.

*[புயம் → புயாந்தரம்]*

**புர—த்தல்** *pura-,* 12 செ.குன்றாவி. (v.t.) 1. காத்தல், பேணிவளர்த்தல்; to keep, preserve, protect, cherish, tend, govern. வளங்கெழு சிறப்பி னுலகம் புரைஇ (பதிற்றுப்.50,4). 2. மிகுதியாகக் கொடுத்தல் (பிங்.); to give bountifully, bestow. 3. வணங்குதல்(பிங்.); to reverence. 4. உதவுதல்; to bestow favour. மகோதராதிகள் புரக்க (தக்கயாகப்.138).

க.பொரெ; தெ.ப்ரோசு; கோண்.பொர்பனா; கொலா. புராய்; பர்.பொரிப்

AS.beorgen; Ger. bergew

*[புல் → புர் → புர–,]*

**புரக்காழ்** *pura-k-kāḻ,* பெ. (n.) பெண்மரம்; the female species of tree.

*[புறம் → புரம் + காழ்]*

**புரகரன்** *purakaraṉ,* பெ. (n.) முப்புர (திரிபுர) மழித்தோன், சிவபெருமான்; Šivaṉ, as the destroyer of tiripuram. "புரகரனிச்சாஞானக் கிரியையாப் போந்தவில்வ மரமுதல்" (திருவிளை, இந்திரன் முடி.17.).

*[புரம் + கரன்,]*

Skt.hara > த. கரன்

**புரச்சோதி** *puraccōdi,* பெ. (n.) மலைபடு மூலிகை; an herb that grows on mountains.

**புரசங்கொட்டை** *purašaṅ-koṭṭai,* பெ. (n.) மலப்புழு, வயிற்றிரைச்சல் போன்றவற்றைப் போக்கும் புரசம் விதை; seed of buteafrondosa.

மறுவ. முருக்கம் விதை, புரசம் விதை

*[புரசம் + கொட்டை]*

**புரசம்பிசின்** *purašam-pišiṉ,* பெ. (n.) பிசின்வகையுளொன்று; gum of butea frondosa tree.

*[புரசம் + பிசின்]*

**புரசம்விதை** *purašam - vidai,* பெ. (n.) *புரசங்கொட்டை* பார்க்க; see *purašaṅ-koṭṭai.*

*[புரசம் + விதை]*

**புரசல்** *purašal,* பெ. (n.) ஒழுக்கு (இ.வ.); leak.

*[புல் → புர்→புரை = உட்டுளை. புரை → புரைசல் = துளை வே.க.3.101,102, புரைசல் → புரசல்]*

**புரசு**[1] *purašu,* பெ. (n.) பூவரசு; portia tree.

*[பூவரசு → புரசு]*

**புரசு**[2] *purašu,* பெ. (n.) மரவகை; East Indian satin-wood. (L.).

**புரசு**[3] *purašu,* பெ. (n.) மரவகை (பதார்த்த.212); battle of plessey tree.

**புரசு**[4] *purašu,* பெ. (n.) சிறு பெண்குழந்தை; a little girl.

*[புள் → பிள் = பிள்ளை, பிள்ளமையழகு. புள் → புரு = குழந்தை (மு.தா.40,41) புரு → புருசு → புரசு]*

**புரசுமேற்புல்லுருவி** *purašu-mēṟ-pulluruvi,* பெ. (n.) மூலமுளையைப் போக்குஞ் சூரணம்; parasite of buteafrondosa powder which is useful in piles.

*[புரசுமேல் → புல்லுருவி]*

**புரசை** *purašai,* பெ. (n.) யானைக் கழுத்திலிடும் கயிறு; halter or head-stall of an elephant. ஆய்மணிப் புரசை யானையின் (கம்பரா. சூளா.36)

*[புள் → புரு → புரள். புள் → புர → புரசை]*

**புரஞ்சரம்** *purañjaram,* பெ. (n.) தோள்; shoulder.

*[புரந்தரம் → புரஞ்சரம்]*

**புரட்சி**[1] *puraṭci,* பெ. (n.) **1.** பிறழ்வு (கொ.வ.); upsetting, overturning, **2.** ஒழுங்கின்மை; disorder. **3.** சட்டமில்லா நிலை; anarchy.

*[புள் → புரு → புரள். புரள்தல் = சொல் மாறுதல். புரள் → பிறள் → பிறழ்ச்சி, புரள் → புரட்சி (மு.தா.234)]*

**புரட்சி**[2] *puraṭci,* பெ. (n.) குறுகிய காலத்தில் நிலைமை முற்றிலும் மாறும் தன்மை; revolution. தொழிலாளர்கள் புரட்சி செய்வதைத் தவிர வேறு வழி இல்லை. (உ.வ.)

*[புரள் → புரட்சி (மு.தா.234)]*

**புரட்சிகரம்** *puraṭcigaram,* பெ. (n.) (பழமையிலிருந்து விலகி) துணிவுடன் செய்யும் புதுமை; the quality of being revolutionary. புரட்சிகரமானதிட்டம் (உ.வ.)

*[புரட்சி + கரம்]*

Skt. ākarṣaka > த. கரம்

**புரட்சிசெய்–தல்** *puratci-šey-,* 4 செ.கு.வி. (v.i.) குறுகிய காலத்தில் இருக்கும் நிலையை மாற்றுவதற்குப் பணிபுரிதல்; to revolutionize.

*[புரட்சி + செய்–,]*

**புரட்சியாளர்** *puratciyāḷar,* பெ. (n.) நிலைமையை முற்றும் மாற்ற பணிபுரிந்தவர்; revolutionary.

*[புரட்சி + ஆளர்]*

**புரட்டல்¹** *purattal,* பெ. (n.) கறி; (fried) vegetables.

*[புரள் → புரட்டு. புரட்டுதல் = ஒன்றைத் திருப்புதல். புரட்டு → புரட்டல் = புரட்டிச் சமைக்குங் கறி, (மு.தா.231)]*

**புரட்டல்²** *purattal,* பெ. (n.) அமைதியின்மை; restlessness.

*[புரட்டு → புரட்டல். 'அல்' தொ.பெ.ஈறு]*

**புரட்டல்³** *purattal,* பெ. (n.) ஏமாற்றுதல்; cheating. அவன் ஒரு புரட்டல் பேர்வழி (உ.வ)

*[புரட்டு → புரட்டல். 'அல்' தொ.பெ.ஈறு]*

**புரட்டன்** *purattan,* பெ. (n.) 1. மாறாட்டக்காரன்; deceiver, equivocator,(S.I.I.v.3). 2. பொய்யன், உண்மையைத் திரித்தும் மாற்றியும் கூறுபவன்; liar, one who distorts facts, wheeler - dealer, twister.

ம. பிரட்டன்

*[புள் → புரு→புரள். புரள்தல் = சொல் மாறுதல். புரள் → புரளி = மெய்ம்மாற்று, பொய். புரள் → புரட்டு → புரட்டன் (மு.தா.234)]*

**புரட்டி** *puratti,* பெ. (n.) ஒன்றைப்புரட்ட பயன்படுத்தும் கருவி; an instrument used to turn.

*[புரள் → புரட்டு. புரட்டுதல் = ஒன்றைத் திருப்புதல். புரட்டு→ புரட்டி. தோசை புரட்டி = தோசைத்திருப்பி (மு.தா.231.)]*

**புரட்டிக்கீரை** *puratti-k-kīrai,* பெ. (n.) காட்டுத்துத்தி; bristly-leaved jew's mallow (L.)

**புரட்டியடி–த்தல்** *puratti-y-adi-,* 4 செ. குன்றாவி. (v.t.) 1. மாறாட்டமாய்ப் பேசுதல் (வின்.); to prevaricate. 2. உண்மையை மறுத்தல்; to deny a fact, to lie boldly.

*[புரள் → புரட்டு → புரட்டி + அடி –,]*

**புரட்டு¹–தல்** *purattu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. உருட்டுதல்; to turn a thing over, to roll முடையுடைக் கருந்தலை புரட்டு முன்றா ளுகிருடையடிய(பட்டினப்.230.) 2. செய்து முடித்தல்; to accomplish, used in contempt. 3. கீழ்மேலாகத் திருப்புதல்; to turn up, as the soil in ploughing 4. கறி முதலியவற்றைக் கிண்டி வதக்குதல் (இ.வ.); to fry, as vegetable curry 5. குமட்டுதல்; to nauseate, retch. வயிற்றைப் புரட்டுகிறது 6. ஏய்த்தல் (வஞ்சித்தல்) (வின்.); to deceive, to falsify. 7. மாறுபடுத்துதல் (கொ.வ.); to pervert, distort. 8. தேய்த்தல் (வின்.); to smear, rub on the head, as oil.9. அழுக்காக்குதல் (வின்.); to stain, foul with dirt. 10. மறுத்துரைத்தல் (ஆட்சேபித்தல்) (வின்.); to deny, refute.

ம. புரட்டுக, பிரட்டுக; பட.பெரட்டு

*[புரள் → புரட்டு]*

**புரட்டு²** *puraṭṭu,* பெ. (n.) 1. கீழ்மேலாகத் திருப்புகை; turning over, over turn, overthrow. 2. மாறுபட்ட பேச்சு; prevarication. 'புறப்பட்டார் புரட்டுப் பேசி' (திருவாலவா.38,14) 3. ஏய்ப்பு (வஞ்சகம்); deceit, treachery. 4. குமட்டும் உணர்வு (வாந்திக்குணம்); sickness, nausea. 5. வயிற்றுவலி (யாழ்ப்.); pain in the bowels. 6. கறிவகை (இ.வ.); a kind of vegtable curry.

*[புரள் → புரட்டு]*

**புரட்டு³-தல்** *puraṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) பொத்தகவிதழ்கள் முதலியவற்றைத் திருப்புதல்(கொ.வ.); to turn over, as the leaves of a book.

*[புல் → புர் → புரள் → புரளுதல் = கீழ்மேலாகத்திருப்புதல். (வே.க.3,94,95), திருப்புதல்]*

**புரட்டுருட்டு** *puraṭṭuruṭṭu,* பெ. (n.) 1. மாறாட்டமாகப் பேசுகை; lying, prevarication. 2. தந்திரச் செயல்; subterfuge.

*[புரட்டு + உருட்டு. இதை உருட்டு புரட்டு என்று மாற்றிச்சொல்வதும் உண்டு.]*

**புரட்டோடியம்** *puraṭṭōḍiyam,* பெ. (n.) இழிவழக்கு (வின்.); obscene language.

*[புரட்டு → புரட்டோடியம்]*

**புரடம்** *puraḍam,* பெ. (n.) பொன்; gold.

**புரண்டை** *puraṇḍai,* பெ. (n.) திருகலான கொடிவகை, பிரண்டை; square stalked vine.

*[புரு → புரள் → புரண்டை = புரண்டிருக்கும் அல்லது முறுக்குண்டிருக்கும் கொடி (மு.தா.242)]*

**புரணி¹** *puraṇi,* பெ. (n.) 1. ஊன் (பிங்.); flesh 'குணபாசி....நடித்து நின்றயின்றன புரணி' (அரிசமய. பரகா.37.) 2. தோல் (கொ.வ.); skin. 3. சாரமற்றது; that which is useless. 'சோலையின் போக்யதை புரணியென்னும்படி யாய்த்து ஊரில் போக்யதை' (திவ். திருமலை.18,வ்யா,பக்,67)

*[புறம் → புறன் → புறணி = மேற்புறம், மரத்தின் மேற்புறமாயிருக்கும் பட்டை. புறணி → புரணி = விலங்குகளின் மேலாக இருக்கும் ஊன், ஊனைப் போர்த்தியிருக்கும் தோல், (மேலாக இருக்கும்) சாரமற்றது.]*

**புரணி²** *puraṇi,* பெ. (n.) *புளியம்புறணி* பார்க்க; see *puḷiyam puṟaṇi.*

*[புறணி → புரணி]*

**புரணிமண்** *puraṇimaṇ,* பெ. (n.) கழுதை; ass.

**புரத்தாபனநோய்** *purattābaṉa-nōy,* பெ. (n.) சிறுநீர்ப்பையிலேற்படும் அழலை நோய்; a disease of urinary bladder.

**புரத்திரயம்** *purattirayam,* பெ. (n.) *புரம் மூன்று* பார்க்க; see *puram - mūṉṟu.* 'திண்சிலையாற் புரத்திரயங்களையும் பொடியாக்கிலன்...எங்கள் பண்ணவனே' (திருநாற்.24.)

*[புரம் + திரயம்.]*

Skt. traya > த. திரயம்

**புரத்துவாரம்** *pura-t-tuvāram,* பெ. (n.) *புரவாயில் (வின்.)* பார்க்க; see *puravāyil.*

*[புரம் + துவாரம்]*

Skt. dvāra > த. துவாரம்

**புரதகனன்** *puradagaṉaṉ,* பெ. (n.) *புரமெரித்தோன் (வின்.)* பார்க்க; see *puramerittōṉ.*

*[புரம் + தகனன்]*

**புரந்தரம்** *purandaram,* பெ. (n.) தோள் (சங்.அக.); shoulder.

*[புயம் → புரம் → புரந்தரம்]*

**புரந்தரலோகம்** *purandaralōgam,* பெ. (n.) *புரந்தரவுலகம்* பார்க்க; see *purandara-v-ulagam.* 'செல்வப்புரந்தரலோகம் புழைக்கடை யாகுமெம் போலிகட் கே' (திருநூற்.32.).

*[புரந்தர(ன்) + லோகம்.]*

**த.** உலகம் > Skt. lōga.

Skt. dara > **த.** தரன்

**புரந்தரவுலகம்** *purandara-v-ulagam,* பெ. (n.) இந்திரவுலகம்; Indra's heaven.

*[புரந்தர(ன்) + உலகம்]*

**புரந்தரன்** *purandaraṉ,* பெ. (n.) (கோட்டையை உடைத்தவன்) இந்திரன்; Indra. "புரந்தரன் தன்னோடு வானோர்" (தேவா. 926, 8).

**ம.** புரந்தரன்

*[புரம் + தரன்]*

Skt. dara > **த.** தரன்

**புரந்தார்** *purandār,* பெ. (n.) அரசர்; kings. 'புரந்தார்கண் ணீர்மல்க' (குறள், 780)

**க.** பொரெதர்

*[புரம் → புரந்தார்]*

**புரப்பிரியை** *purappiriyai,* பெ. (n.) செந்தாழை (அனாசி) (மூ.அ.); pine-apple.

**புரப்பு** *purappu,* பெ. (n.) காப்பு (பாதுகாப்பு) (சங்.அக.); keeping, protection.

**தெ.** ப்ரோபு

*[புர → புரப்பு]*

**புரம்[1]** *puram,* பெ. (n.) **1.** ஊர்(பிங்.); town. **2.** நகரம் (பிங்.); city.' மதுரை யந்தண் புரத்தின் கண் '(திருவாலவா. 39, 1) **3.** மதிலரண் ஆழ்ந்த தலைநகரம் (சூடா.); metropolis, fortified town, royal city, capital. **4.** புரம் மூன்று பார்க்க; see puram mūṉṟu.'புரமெரி செய்தவர்' (தேவா. 97, 11) **5.** கோயில்; temple. 'மேருவு மூவர்க் கோதிய புரமும்' (கல்லா. 24, 23) **6.** மேன்மாடம் (யாழ்.அக.). upper storey. **7.** வீடு (யாழ்.அக.); house. **8.** உடல் (பிங்.); body.'அயன்புரமெனப் பொலிந்தான்' (பாகவத. 1, மாயவனமி. 16) **9.** புறணி, தோல் (யாழ்.அக.); skin.

OE. *burg, burh;* OS. *burg;* OHG. *burug;* ON. *burg;* Goth. *baurge;* E. *borough* Sc. *burgh.*

*[புர் → புரை = உயர்வு. புரையோர் = உயர்ந்தோர். புர் → புரம் = உயர்ந்தமனை, அஃதுள்ள நகர். குடிநகர், பதி முதலிய பிற சொற்களும் தனியில்லையும் ஊரையுங் குறித்தல் காண்க. உயர்ந்த கட்டடங்களுள் தலைமையானது கோபுரம். ஒ.நோ. கோநாய், அரசமரம், நாயகத் தூக்கம். புரம் → பரம் = மேல். பரம் → பரன், பரை. (மு.தா. 67)]*

வேந்தன் இருந்த உயர்ந்த எழுநிலைக் கட்டடம் முதலிற் கோபுரம் எனப்பட்டது. பின்பு அதைப் பொற்கோயிலில் அமைந்த எழுநிலை வானளாவி அப்பெயர் பெற்றது. அதன் அமைப்பு தேரை ஒத்ததாகும்.

வேந்தன் தன் தலைநகரை நாற்புறமும் நோக்கவும் தொலைவிற் பகை வரவைக் காணவும், பகைவர் முற்றுகையிட்டு உழிஞைப்போரை நடத்துங்கால் நொச்சிப்போரைக் கண்காணிக்கவும், அவன் அரண்மனையில் மேல் எழுநிலை கொண்ட ஓர் உயர்ந்த தேர் போன்ற கட்டடம் கட்டப்பட்டிருந்தது. அது புரம் எனப்பட்டது. புரம் = உயர்ந்த கட்டடமான மேன்மாடம். புரவி = உயர்ந்த சுவரைத் தாண்டும் குதிரை.

புரம் என்பது, பின்பு புரத்தைக் கொண்ட அரண்மனையையும் அதன் சூழலையும் (Acropolis) குறித்து, அதன் பின் நகர் என்னும் சொற்போல் தலைநகர் முழுவதையும் குறித்து, நாளடைவில் நகரப் பொதுப் பெயராயிற்று.

அரண்மனையிலுள்ள புரம் அரசன் இருக்கையாதலால், கோபுரம் எனப்பட்டது. கோ அரசன். கோ இருந்த இல் கோயில் எனப்பட்டதை நோக்குக.

பகைவர் வரவு காண்டற்குக் கோபுரம் சிறந்த அமைப்பென்று கண்டபின் நகரைச் சூழ்ந்த கோட்டை மதிலிலும், வாயிலிற் பெரிதாகவும் மற்ற இடங்களிற் சிறியனவாகவும் கோபுரங்கள் கட்டப் பட்டன. சிறியன கொத்தளம் எனப் பட்டன. (ப.த.நா.ப. 123, 124)

**புரம்²** *puram,* பெ. (n.) முன் (சூடா.); before, in place or time.

**புரம்பாய்வை-த்தல்** *purampāy-vai-,* 4 செ. குன்றாவி. (v.t.) மறைவாக வைத்தல்; to keep aside.

*[புரம்பாய் + வை-, புறம் → புரம்]*

**புரம்மூன்று** *parammūṉṟu,* பெ. (n.) முப்புரம் (திரிபுரம்); the three cities destroyed by Sivaṉ.

*[புரம் + மூன்று]*

**புரம்மூன்றெரித்தோன்** *purammūṉṟerittōṉ,* பெ. (n.) முப்புரத்தை (திரிபுரத்தை) எரித்தவன், சிவபெருமான்; Sivaṉ, as the destroyer of tiripuram.

**மறுவ.** புராரி, புராந்தகன், பித்தன், புலித்தோலான், அரவன், அண்ணல், பரமன், அரன்.

*[புரம் + மூன்று + எரித்தோன்]*

**புரமெரித்தோன்** *puram - erittōṉ,* பெ. (n.) ***புரம்மூன்றெரித்தோன்*** பார்க்க; see *purammūṉṟerittōṉ.*

*[புரம் + எரித்தோன்]*

**புரவரித்திணைக்களம்** *puravari-t-tiṇai-k-kaḷam,* பெ. (n.) ***புரவுவரித்திணைக்களம்*** பார்க்க; see *puravuvari tiṇai-k-kaḷam* (s.1.1 iii. 116, 17).

*[புரவு + வரி + திணைக்களம்]*

**புரவரியார்** *puravariyār,* பெ. (n.) அரசிறைக் கணக்கர்; revenue accountants. (I.M.P.Sm. 56)

*[புரவு + வரியார்]*

**புரவலன்** *puravalaṉ,* பெ. (n.) காத்துதவுவோன்; protector, preserver, defender. 'மெய்யது புரவல ரின்மையிற் பசியே' (புறநா. 69) 2. அரசன்; king.'புரவல னெடுங்கடை' (பு.வெ. 9, 2, கொளு) 3. கொடையாளன் (பு.வெ. 9, 25, கொளு); liberal man.

**மறுவ.** பெருமான், ஏந்தல், வேந்தன், மன்னன், பொருநன், கோ, கொற்றவன், இறைவன், அண்ணல், தலைவன், காவலன், குரிசில்.

*[புர → புரவு → புரவலன்]*

அரசனுக்குக் காவல் தொழிலே சிறப்பாதலால் புரவலன் காவலன் அல்லது அரசன் என்னும் பொருளைக் குறித்து நின்றது. அரசு என்பது அரண் என்னும் சொல்லிற்கு இணையாய் காவல் என்னும் கருத்தை அடிப்படையாய்க் கொண்டிருப்பது ஒப்பு நோக்கத் தக்கது.

வேந்தன் அமைதிக் காலத்தில் ஒவ்வொரு நாளும் பகலில் முதற் பத்து நாழிகை கொடைக்குச் செலவிட்டான். இது போன்ற அரசின் அல்லது புரவலன் கொடைக் குணம் பற்றிப் புரவலன் கொடையாளனைக் குறித்தது.

**புரவாய்தல்** *pura-vāydal,* பெ. (n.) *புரவாயில் (நாமதீப. 493)* பார்க்க; see *puravāyil.*

*[புரவாயில் → புரவாய்தல்]*

**புரவாயில்** *puravāyil,* பெ. (n.) நகரத்தின் வாயில் (சூடா.); tower gate of a city or town.

*[புரம் + வாயில்]*

**புரவாலி** *puravāli,* பெ. (n.) கழிப்பிடம் (கக்குசு); latrine, privy (C.G.).

*[புறவாலி → புரவாலி]*

**புரவி**[1] *puravi,* பெ. (n.) குதிரை; horse. 'கதழ்பரிய புரவி' (பதிற்றுப். 80, 13)

**மறுவ.** பாடலம், கோடகம், இவுளி, வன்னி, குதிரை, பரி, கந்துகம், கனவட்டம், கோரம்.

*[புரம் = உயர்ந்தமனை. புரம் → புரவி = மதில் தாண்டும் உயர்ந்த குதிரை. (மு.தா. 67)]*

**புரவி**[2] *puravi,* பெ. (n.) **1.** முதலாம் விண்மீன் (அசுவதி) (பிங்.); the first naksatra. **2.** குதிரை அல்லது யானை கட்டுமிடம்; stable for horses or elephants. 'பட்டத்தியானை பூண்ட புரவியிற் குறடும், குதிரை பூண்ட புரவியிற் குறடும்.' (கோயிலொ.17)

*[புரம் → புரவி]*

**புரவி**[3] *puravi,* பெ. (n.) பிறப்பு; class, order, 'கெட்டிக்காரப்புரவி' (யாழ்ப்.)

*[பிறவி → புரவி (கொ.வ.)]*

**புரவிசயன்** *puraviśayan,* பெ. (n.) முப்புரம் வென்றோன்; Śivan, as conqueror of tiripuram. 'புரவிசயன் சூடந்தரு பாகீரதி' (பாரத.அருச்சுனன்றீர்.7)

*[புரம் + விசயன்.]*

Skt.vijaya> **த.**விசய

**புரவித்தேவர்** *puravi-t-tēvar,* பெ. (n.) குதிரைமுகமுள்ள தேவர் (அசுவினி தேவதைகள்); the Asvins, as gods with horse-faces. 'ஆயுள் பெருகுமா றுதவிக்கப்பர் பிரிந்திடாப் புரவித் தேவர்' (யாகவத.2, மாயவனிலை.14)

*[புரவி + தேவர்]*

**புரவியாட்டம்** *puravi-y-āṭṭam,* பெ. (n.) பொய்க்கால் குதிரை; a folk dance performed with a dummy horse.

*[புரவி + ஆட்டம்]*

**புரவியெடுப்பு** *puravi-y-eḍuppu,* பெ. (n.) குதிரைஊர்தியில் (வாகனத்தில்) இறைவன் (சுவாமி) எழுந்தருளுந் திருவிழா (பஞ்ச. திருமுக.172.); festival of taking a deity on a horse in procession.

*[புரவி + எடுப்பு. எடு → எடுப்பு]*

**புரவிவட்டம்** *puravi-vaṭṭam,* பெ. (n.) குதிரையோடும் தெரு (வையாளி வீதி) (சூடா.); riding ground.

*[புரவி + வட்டம்]*

**புரவிவேள்வி** *puravi-vēḷvi,* பெ. (n.) குதிரை வேள்வி; horse sacrifice 'அண்ணலம் புரவிவேள்வி யாற்றினன்' (பாகவத.1. பரிட்சித்துவின்.19).

*[புரவி + வேள்வி ]*

**புரவென்றியோன்** *puravenṟiyōṉ,* பெ. (n.) முப்புரம் (திரிபுரம்) வென்றோன், சிவபெருமான்; Sivaṉ, as conqueror of tiripuram.

*[புரம் + வென்றியோன். வெற்றி → வென்றி]*

**புரவு** *puravu,* பெ. (n.) **1.** காப்பு; care, protection.'பெயன்மழை புரவின்றாகி' (பதிற்றுப்.26.6) **2.** கொடை; gift, grant, boon.'இடுகதிறையே புரவெதிர்ந் தோர்க்கென' (பதிற்றுப். 80,10) **3.** ஆட்சியிடம்; place of jurisdiction. 'புரவுடையார்களை வரும் புரவாசற வாண்டு' (தேவா.461.5) **4.** அரசிறை; tax.'குடிபுர விரக்குங் கூரி லாண்மைச் சிறியோன்' (புறநா.75.) **5.** அரசனால் அளிக்கப்படும் இறையிலி நிலம்; land given free of rent by a king."புரவுத்தொடுத் துண்குவை யாயினும்" (புறநா.260) 'எட்டிப்புரவு, காவிதிப்புரவு' (நன்.158, மயிலை.) **6.** ஆறுமுதலியவற்றிலிருந்து நீர்பாயும் வயனிலம்; paddy-field irrigated by a river or tank. ஆற்றுப்புரவு **7.** செழுமை; fertility, as of the soil.'புரவார் கழனிசூழ்' (திவ். திருவாய்.8,9,9).

*[புல் → புர் → புர. புரத்தல் = காத்தல், பேணிவளர்த்தல். புர → புரவு]*

**புரவுநெல்** *puravu-nel,* பெ. (n.) நெல்லாகச் செலுத்தும் நிலவரி; land-tax paid in paddy. '*அளக்கக் கடவ புரவுநெல் முந்நூற்றுக் காடியும்*' (S.I.I.v,499.)

*[புரவு + நெல் ]*

**புரவுபொன்** *puravu-poṉ,* பெ. (n.) வரிவகை; an ancient tax (S.I.I.ii,509, 52).

*[புரவு + பொன்]*

**புரவுரிதிணைக்களம்** *puravuri-tiṇai-k-kaḷam,* பெ. (n.) அரசிறைக் கணக்கு வைப்போர் கூடும் அலுவலகம்; office of revenue accountants.

*[புரவு + வரி + திணைக்களம் ]*

**புரவுவரி** *puravu-vari,* பெ. (n.) அரசிறைக்கணக்கன்; revenue accountant. (S.I.I.ii.306)

*[புரவு + வரி ]*

**புரள்(ளு)–தல்** *puraḷ(ḷu)-,* 2 செ.கு.வி. (v.i.) **1.** உருளுதல்; to roll over, to tumble over, to be upset, 'அடித்துப் புரண்டுவிழுந்தான், கழுதை புரண்ட களமாய் போய் விட்டது' **2.** கழிதல்; to slip off, 'புல்லார் புரவி விடல்' (குறள், 755) **3.** அலைமறிதல்; to roll, as waver. 'புரணெடுந்திரைகளம்' (கம்பரா. விபீடண.27) **4.** நிரம்பி வழிதல், கரை கடந்தோடுதல்; to be full to the brim, to overflow. "ஆறுகரைபுரண்டு போகிறது" **5.** அழுக்காதல் (வின்.); to become besmeared, soiled or dirty. **6.** நீரிற்கலத்தல் (வின்.); to be soaked, drenched. **7.** மாறுபாடடைதல்; to deranged, to be changed, as times, seasons customs or laws; to be overturened, as a state. **8.** சொற்பிறழ்தல்; to go back upon one's word.

9. மறுப்புத் தெரிவிக்கப்படுதல் (வின்.); to be refuted or confuted. 10. சுற்றுதல் (வின்.); to revolve. 11. பணம் விரைந்து தொகுதல் அல்லது கைமாறுதல்; to abound, அந்த ஊரில் பணம் புரள்கிறது. 12. மாறிமாறி வருதல்; to come alternately. 'வெயில்களும் நிலாக்களும் புரள' (கம்பரா. பிரமா.99) 13. சாதல்; to die. 'கழுத்திலே புண்ணாகிப் புழுத்துப் புரண்டான்' (குருபரம்.105, ஆறா.)

ம.புரளுக, பிரளுக; க.பொரள், புருள்; தெ.பொரலு; து.புரெலுனி, புரெயுனி, பொளரலுனி, பொரெடுனி; கோத. பொர்ண், பொண்; பட. பெரளு

*[புல் + புர் → புரள் (வே.க.31, 94) ]*

**புரளவை—த்தல்** *puraḷa-vai-,* 4 செ.குன்றாவி. (v.t.) உண்ணாக்கில் தடவல்; to smear over ovula.

*[புரள் → புரள + வை—, ]*

**புரளி**[1] *puraḷi,* பெ. (n.) 1. பொய் (வின்.); lying, falsehood. 2. ஏய்ப்பு (வஞ்சனை); deceit, 3. குறும்பு (வின்.); mischief, waggishness. 4. சண்டை; quarrel, wrangle, broil. 5. கலகம்(வின்.); insurrection. 6. முருட்டுத்தனம் (வின்.); restiveness, as of a beast, unruliness, refractoriness.

*[புல் → புர் → புரள். புரளுதல் = உருளுதல், மாறுபாடடைதல் புரள் → புரளி = (வே.க.3,94) ]*

**புரளி**[2] *puraḷi,* பெ. (n.) அரத்தம், குருதி; (இறை.1,பக்,9.); blood.

**புரளிக்காரன்** *puraḷi-k-kāraṉ,* பெ. (n.) 1. பொய்யன்(வின்.); liar, prevaricator. 2. புரட்டுச் செய்வோன்; mischievous person, wag, knave, 3. சண்டையிடுபவன்; quarrelsome person. 4. ஆணைமீறிக் கலகஞ்செய்வோன்; rebel, insurgent.

*[புரளி + காரன் ]*

**புரளிபண்ணு**[1]**—தல்** *puraḷi-paṇṇu-,* 15 செ.கு.வி. (v.i.) குறும்பு செய்தல் (வின்.); to be waggish, mischievous.

*[புரளி + பண்ணு—, ]*

**புரளிபண்ணு**[2]**—தல்** *puraḷi-paṇṇu-,* 12 செ.குன்றாவி. (v.t.) ஏளனம் செய்தல் (கொ.வ.); to mock.

*[புரளி + பண்ணு—, ]*

**புரளிவித்தைக்காரன்** *puraḷi-vittai-k-kāraṉ,* பெ. (n.) மாய்மாலக் காரன்(புதுவை.); charlatan.

*[புரளி + வித்தை + காரன்]*

Skt. vidyā › த. வித்தை

**புராணம்** *purāṇam,* பெ. (n.) கடுக்காய்; galnut.

**புராணி**[1] *purāṇi,* பெ. (n.) *புறணி (தைலவ.தைல)* பார்க்க; see *puṟaṇi.*

*[புரணி → புராணி]*

**புராணி**[2] *purāṇi,* பெ. (n.) பட்டைவகையு ளொன்று; a kind of bark.

*[புரணி → புராணி]*

**புராணியை** *purāṇiyai,* பெ. (n.) *புராணி* பார்க்க; see *purāṇi.*

*[புராணி → புராணியை]*

**புராரி** *purāri,* பெ. (n.) *புரமூன்றெரித்தோன்* பார்க்க (பிங்.); see *pura-mūṉṟerittōṉ.*

*[புரம் + எரி–புரமெரி → புராரி]*

**புரி¹–தல்** *puri-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. விரும்புதல்; to desire. புகுமுகம் புரிதல் (தொல்.பொ.261.) 2. ஊழ்கம் செய்தல் (தியானித்தல்); to meditate upon. 'இறைவன்...புகழ் புரிந்தார்' (குறள்,5). 3. செய்தல்; to do, make. 'தினைத் துணையு நன்றி புரிகல்லா' (நாலடி.323) 4. படைத்தல்; to create. 'எவ்வுலகும் புரிவானை' (சிலப்.பிரபஞ். வெங்கைக்க.65) 5. ஈனுதல்; to bring forth, produce. 'பொன்போறார் கொன்றை புரிந்தன' (திணைமாலை,109) 6. கொடுத்தல்; to give. 'பெருநிதி வேட்டன வேட்டன புரிந்தான்' (உபதேசகா. சிவவிரத,257) 7. பட்டறிதல் (அனுபவித்தல்); to experience, suffer. 'புண்டரிகை போலுமிவ ளின்னல் புரிகின்றாள்' (கம்பரா.சூளா.1) 8. உற்றுப் பார்த்தல்; to gaze at, watch intently. 'பயத்தாலே புரிந்து பார்க்கிறபோது' (திவ்.திருநெடுந்.21, வ்யா.பக்.174) 9. உசாவுதல் (விசாரணை செய்தல்); to investigate, examine. 'அறம் புரிந்தன்ன செங்கோனாட்டத்து' (புறநா.35) 10. சொல்லுதல்; to say, tell. 'அந்தணாளர்புரியு மருமறை' (தேவா.865,5) 11. நடத்துதல்; to exercise, perform அரசு புரிந்தான். 12. மேற்கொள்ளுதல்; to accept. 'போக்குவரவு புரிய' (சி.போ.2).

தெ. புர, புரலாடு

*[புல்லுதல் = நட்புச் செய்தல். புல் → புல்க. புல்குதல் = நண்பராய் மருவுதல், புல் → புர் → புரி (வே.க.3,87)]*

**புரி²–தல்** *puri-,* 2 செ.கு.வி. (v.i.) 1. முறுக்குக் கொள்ளுதல்; to be twisted, to curl. 'சுகிர்புரி நரம்பின்' (மலைபடு.23) 2. திரும்புதல்; to turn. 'மற்றையருகே புரியல்' (திவ். இயற். திருவிருத்,42,வ்யா.பக்.247). 3. மிகுதல்; to abound. 'வனப்புப் புரிந்த தகையினான்' (பரிபா.7,51) 4. அசைதல்; to shake. 'தார்புரிந்தன்ன' (பதிற்றுப். 66,13)

ம. புரியுக.

E.spire; L.spira; Gk.speria.

*[புல் → புர் → புரள். புரளுதல் = உருளுதல், மாறுபாடடைதல். புர் → புரி (வேக,3, 94,95)]*

**புரி³–த்தல்** *puri-,* 11 செ.குன்றாவி. (v.t.) விரும்பச் செய்தல்; to cause to desire. 'புரித்த தெங்கிளநீரும்' (சீவக.2402)

*[புல் → புர்→ புரி. புரிதல்(த.வி.) – புரித்தல் (பி.வி.) (வே.க.3.87)]*

**புரி⁴** *puri,* பெ. (n.) 1. கயிறு; cord, twine, rope. '*மாற்புரி நரம்பின்*' (பெரும்பாண்.181.) 2. முறுக்கு; strand, twist as of straw. '*புரியடங்கு நரம்பு*' (சிறுபாண்.34) 3. சுருள்; curl, as of hair. '*புரிக்குழன் மடந்தை*' (சீவக. 2688) 4. சுரி(கொ.வ.); spiral, screw. 5. சங்கு; conch. '*புரியொருகை பற்றி*' (திவ். இயற்.1,31) 6. யாழ் நரம்பு; string, as of a lute. '*புரிவளர் குழலொடு*' (சீவக.124) 7. மாலை; garland, as of pearls. '*புரிமணி சுமந்த பொற்பூண்*' (சீவக.619) 8. கட்டு (சூடா.); tie, fastening.

ம., க., தெ., து. புரி

*[புல் → புர் → புரி (வே.க.3,94,95) = முறுக்கு, முறுக்கிய கயிறு, உள்திருகிய சங்கு. இடம்புரி = வலமிருந்து இடமாக வளைந்த சங்கு. கொடும்புளி = அறும் நிலையிலுள்ள கம்பியின் அல்லது முடிச்சுப்படும் நிலையிலுள்ள கயிற்றின் கொடு முறுக்கு. முப்புரி = வைக்கோற் பழுதை. (த.க. 148.149)]*

த. புரி > Skt. puri

**புரி[5]** *puri,* பெ. (n.) **1.** செய்கை (சூடா.); making, doing. **2.** விருப்பம் (சீவக.124, உரை); desire.

*[புல் → புர் → புரி (வே.க.3.87)]*

**புரி[6]–த்தல்** *puri-,* 11 செ.குன்றாவி. (v.t.) நிறைத்தல்; to fill up. '*நன்மணிபுரித்தன*' (சீவக.1203) **2.** பதித்தல்; to enchase, inlay. '*முத்தம்வாய் புரித்தன*' (சீவக.150)

*[புல் → புர் → புரி]*

**புரி[7]** *puri,* பெ. (n.) **1.** நகரம் (பிங்.); town, city. **2.** தலைநகரம் (சூடா.); capital city. **3.** மருதநிலத்தூர் (சூடா.); village of an agricultural tract. **4.** உடல்; body. '*புரிக்கிலேசத்தை யகற்றி யாட்கொள்ளும்*' (அருட்பா, vi பிள்ளைப்பெரு.129)

க., து. புரி

*[புல் → புர் → புரி = வளைவு, வளைந்த (சூழ்ந்த) கோட்டை. (தமி.வ.15)]*

த புரி > Skt. puri

தமிழிற் புரம் என்பது கோபுரமுள்ள நகரையும், புரி என்பது கோட்டையுள்ள நகரையும் குறிக்கும். ஆயின், வடமொழியில் இவ்வேறுபாடின்மையால் புர, புரய என்னும் சொற்களும் கோட்டை அல்லது நகர் என்னும் பொதுப்பொருளே தரும். (த.க.149.)

**புரி[8]–தல்** *puri-,* 4 செ.கு.வி. (v.i.) **1.** விளங்குதல்; to shine; to be manifest. "*சோதிபுரிந்திடுமதுவே*" (சி.சி.2,82) **2.** பொருள்விளங்குதல்; to be understood. நன்கு புரிகின்றது.

*[புல் → புலம் = ஐம்பொறிகள்பொருள்களோடு பொருந்தி அறியும்அறிவு.புல்→ புலம் → புலர். புலர்தல் = தெளிதல், தெளிவாதல், விடிதல். (வே.க.3.62,63) புல் → புர் → புரி]*

**புரி[9]–த்தல்** *puri-,* 11 செ.கு.வி. (v.i.) *புரி[8]–தல்* பார்க்க; see *puri[8]-,* 'நின்மலவடிவாய்ப் புரிக்கும்' (ஞானவா.மாவலி.48.)

*[புல் → புர் → புரி]*

**புரிக்குழல்** *puri-k-kuḻal,* பெ. (n.) *புரிகுழல்* பார்க்க; see *puri-kuḻal.* '*புரிக்குழன் மடந்தையர்*' (சீவக.2688).

ம. புரிகுழல்

*[புரி + குழல்]*

**புரிக்கூடு** *puri-k-kūḍu,* பெ. (n.) நெற்சேர்; straw bin for paddy '*புரிக்கூட்டில் நின்ற.....பலவருக்கத்து நெல்லு*' (சிலப்.10,123,உரை.)

*[புல் → புர் → புரி = முறுக்கு, சுரி,கயிறு. புரி + கூடு – புரிக்கூடு = வைக்கோற்புரி, நெற்கூடு (வே.க.3,95)]*

**புரிகயிறு** *purikayiṟu,* பெ. (n.) வைக்கோலால் முறுக்கிச் செய்த கயிறு; rope made of hay.

*[புரி + கயிறு]*



**புரிகன்மம்** *purikaṉmam,* பெ. (n.) மாற்றிலக்கம் (புதுவை.); (math.) logarithm.

*[புரி + கன்மம்]*

**புரிகுழல்** *puri-kuḻal,* பெ. (n.) கடைகுழன்று சுருண்ட கூந்தல்; curly tresses '*புரிகுழன் மாதர்*' (சிலப்.14,37)

*[புரி + குழல்]*

**புரிகை** *puri-gai,* பெ. (n.) முத்திரை (அங்கக்கிரியை) வகை (சிலப்.3,12,உரை,பக்.81.); (nātya.) a hand-pose.

*[புரி → புரிகை. புல் → புர் → புரி. புரிதல் = செய்தல். புரிகை = கைகளால் முத்திரை செய்கை]*

**புரிசடை** *puri-šaḍai,* பெ. (n.) திரண்டு சுருண்ட சடை (வின்.); tangled, matted locks.

*[புரி + சடை]*

**புரிசம்**[1] *purišam,* பெ. (n.) அருமை (இ.வ.); scarcity.

**புரிசம்**[2] *purišam,* பெ. (n.) நான்கு முழ நீளம் (வின்.); length of four cubits.

**புரிசாலம்** *purišālam,* பெ. (n.) 1. கெஞ்சுகை; urgent entreaty 2. வேண்டுகை (விண்ணப்பம்) (இ.வ.); petition.

*[புரி + சாலம். சாரம் → சாலம்]*

**புரிசாலம்பிடி—த்தல்** *purišālam-piḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) வருந்தி வேண்டுதல் (வின்.); to beg earnestly.

*[புரிசாலம் + பிடி —,]*

**புரிசை** *purišai,* பெ. (n.) மதில்; fortification, wall. '*ஏந்துகொடியிறைப் புரிசை*' (புறநா.17) E.murus

*[புரி → புரிசை = நகரைச்சூழ்ந்த மதில் (வே.க.3,96)]*

பண்டைத்தமிழகத்தின் கோநகர்களில், ஊரைச்சுற்றிக் கோட்டைமதில் இருந்தது. அது புரிசை எனப்பட்டது. புரிதல் வளைதல். புரிசையுள்ள நகர்ப்பெயர்களே முதலில் புரி என்னும் ஈறு பெற்றன. கோட்டை என்பதும் வளைதற் பொருளதே. கோடுதல் வளைதல். பாம்புரி, கொத்தளம் (bastion), வாயிற் கோபுரம், பதணம் (rampart), ஞாயில் முதலிய பல வுறுப்புகளை யுடையது கோட்டைமதில். சில நகர்களில் ஏழெயில்கள் இருந்தன. புறமதிலைச் சுற்றி அகழி இருந்தது. (ப.த.நா.ப.138, 139)

**புரிதாள்** *puridāḷ,* பெ. (n.) *புரிகட்டை* பார்க்க; see *purikaṭṭai.*

*[புரி + தாள்]*

**புரிதிரி—த்தல்** *puri-tiri-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. கயிற்றுக்காகப் புரிமுறுக்குதல் (யாழ்.அக.); to twist, as strands for rope-making. 2. கெடுக்க வாய்ப்புத் தேடுதல் (இ.வ.); to plot one's ruin.

*[புர் → புர் → புரி = முறுக்கு, கயிறு. புரி + திரி—,]*

**புரிதெறித்தல்** *puri-teṟittal,* பெ. (n.) 1. கயிறு அறுகை; breaking of a rope 2. வழி தவறுகை; failure of a stratagem.

*[புரி + தெறித்தல். 'தல்' தொ.பெ.ஈறு]*

**புரிந்துகொள்ளு—தல்** *purindukoḷ(ḷu)-,* 10 செ.குன்றாவி. (v.t.) 1. செய்தியைப் பொருள் தெளிவோடு உள்வாங்குதல்; to understand.

அவர் சொன்னதை நான் புரிந்து கொண்டேன் (உ.வ.) 2. நிலைமையை யுணர்தல்; to realize, comprehend, அவர் என் நிலைமையைப் புரிந்துகொண்டார்.

*[புரி → புரிந்து + கொள்–,]*

**புரிந்தோர்** *purindōr,* பெ. (n.) நண்பர் (சூடா.); friends.

*[புல் → புல்கு. புல்குதல் = நண்பராய் மருவுதல். புல்→புர்→புரி. புரிதல் = விரும்புதல் (வே.க.3.87) புரி → புரிந்தோர்]*

**புரிநூல்** *puri-nūl,* பெ. (n.) *புரிமுந்நூல்* பார்க்க; see *purimunnūl.* '*திருமார்பினிற் புரிநூலும் பூண்டெழு பொற்பதே*' (தேவா.385,3.)

க. புரிநேண்(திரித்தகயிறு)

*[புர் → புரி = முறுக்கு, கயிறு. புரி + நூல் ஒ.நோ.முப்புரி = முறுக்கிய முந்நூல் (பூணூல்)]*

**புரிப்பி–த்தல்** *purippi-,* 11 செ.குன்றாவி. (v.t.) வளைந்து திரும்பச் செய்தல்; to cause to bend. "*சந்ததம் திருத்தச் செம்பதம் புரிப்பித்து*" (திருவாலவா.கடவுள் 2.)

*[புல் → புர் → புரி. புரிதல் = வளைதல், திரும்புதல். புரி → புரிப்பி–, 'பி' பி.வி.ஈறு]*

**புரிபாய்ச்சு–தல்** *puri-pāyccu-,* 5 செ.குன்றாவி. (v.t.) சிறு கயிற்றை முறுக்குதற்கு ஒழுங்குபடுத்துதல் (யாழ்ப்.); to arrange strands for making cord.

*[புரி + பாய்ச்சு. பாய் → பாய்ச்சு]*

**புரிமணை** *puri-maṇai,* பெ. (n.) பாண்டம் வைத்தற்கு வைக்கோலைச் சுற்றியமைத்த பீடம்; ring shaped pad of twisted straw, etc.

*[புல்→ புர்→புரி = முறுக்கு, கயிறு. புரி + மணை – புரிமணை = வைக்கோற் புரியால் செய்யப்பட்ட மணை]*



**புரிமாந்தம்** *purimāndam,* பெ. (n.) மாவிலங்க மரம்; a tree-crataeva.

**புரிமுகம்[1]** *puri-mugam,* பெ. (n.) கோபுரம் (யாழ்.அக.); tower at the front of a town.

*[புரி + முகம். புல் → புர்→புரி,வளைவு, மதில் சூழ்ந்த கோட்டை. புரிமுகம் = மதில் சூழ்ந்த கோபுரம்]*

**புரிமுகம்[2]** *puri-mugam,* பெ. (n.) 1. சங்கு (யாழ்.அக.); conch 2. நத்தை; snail.

*[புரி → முகம். புல் → புர் → புரி = முறுக்கு, சங்கு. புரிமுகம் = வளைந்த சங்கு. ஒ.நோ. வலம்புரி = வலப்புறமாக வளைந்த சங்கு. இடம்புரி = இடப்புறமாக வளைந்த சங்கு]*

**புரிமுந்நூல்** *puri-munnūl,* பெ. (n.) முறுக்கிய பூணூல்; sacred thread worn by the twice born, consisting of three stands. '*புரிமுந்நூலணிமார்பர்*' (பெரியபு.தடுத்தாட்.117.)

*[புல் → புரி = முறுக்கு, கயிறு. புரி + முந்நூல். புரிமுந்நூல் = மூன்று நூல்கள் முறுக்குண்ட பூணூல்]*

**புரிமுறுக்கல்** *puri-muṟukkal,* பெ. (n.) கோட்சொல்லுகை (யாழ்.அக.); tale bearing.

*[புரி + முறுக்கல். புல் → புர் → புரி = முறுக்கு, சுருள். முறு → முறுக்கல். 'அல்' தொ.பெ. ஈறு. புரிமுறுக்கல் = பிணையச்செய்து திரித்தல், திரித்துப் பேசுதல்.]*

**புரிமுறுக்கு[1]-தல்** *puri-muṟukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) கோட்சொல்லுதல்; to carry tales, back-bite.

*[புரி + முறுக்கு –,]*

**புரிமுறுக்கு[2]** *puri-muṟukku,* பெ. (n.) *புரிமுறுக்கல்* பார்க்க; see *purimuṟukkal.* 2. மலராத தாமரைப்பூ (வின்.); unblown lotus.

*[புரி + முறுக்கு.]*

**புரிமுறுக்கு[3]** *purimuṟukku,* பெ. (n.) முறுக்கு வளையல்; ring made of twisted hay etc.

*[புரி + முறுக்கு.]*

**புரிமோகம்** *purimōgam,* பெ. (n.) 1. சம்புநாவல் (மலை.); rose-apple. 2. விளா; wood-apple.

**புரியட்டகம்** *puriyaṭṭagam,* பெ. (n.) *புரியட்டம்* பார்க்க; see *puriyaṭṭam.* 'மனாதி தன்மாத்திரை புரியட்டகந்தான்' (சி.சி.2,64.)

*[புரியட்டம் → புரியட்டகம்]*

**புரியட்டகாயம்** *puriyaṭṭa-kāyam,* பெ. (n.) *புரியட்டம்* பார்க்க (வின்.); see *puriyaṭṭam.*

*[புரியட்டம் + காயம்]*

**புரியட்டசித்தினி** *puriyaṭṭašittiṉi,* பெ. (n.) தக்கோலம்; a fragrant drug chewed with betal.

**புரியட்டம்** *puriyaṭṭam,* பெ. (n.) நுண்ணுடம்பு; a kind of spiritual form of body, subtle body.

*[புல் → புரி = முறுக்கு. புரி → புரியட்டம். பருவுடம்பிற்குள் வெளிப்படையாக அறியவியலாத தன்மையில் முறுக்கு போல் இருப்பதாகக் கொள்ளப்படும் நுண்ணுடம்பு]*

**புரியட்டரூபம்** *puriyaṭṭa-rūbam,* பெ. (n.) *புரியட்டம்* பார்க்க; see *puriyaṭṭam.* 'புரியட்ட ரூபம்தானே பாகனா சரீரமாகி' (சி.சி.2,36.)

*[புரியட்டம்+ ரூபம்]*

த. உருவம் > Skt. rūpa › த. ரூபம்.

**புரியணை** *puri-y-aṇai,* பெ. (n.) *புரிமணை (தைலவ.தைல.)* பார்க்க; see *purimaṇai.*

*[புரி + அணை. புரிமணை → புரியணை என்றுமாம்]*

பானையின் அடித்தூரைச் சுமக்கவும் அதை நிலத்தில் படாதவாறு தாங்கவும் பின்னப்பட்ட அணை புரியணை. இது வாழைநார், வைக்கோல், தெங்கின்நார், பச்சைக்கொடி முதலியவற்றால் பின்னப்படும்.

**புரியம்** *puriyam,* பெ. (n.) கூத்துவகை (பிங்.); a kind of drama.

*[புரி → புரியம்]*

**புரியிட்டீர்—த்தல்** *puriyiṭṭīr-,* 4 செ.குன்றாவி. (v.t.) *புரியைக் கட்டியிழு—த்தல்* பார்க்க; see *puriyai-k-kaṭṭiyiḻu-,* இடந்தொறும் புரியிட்டீர்த்தாரிருநூறு காதம்' (குற்றா. தல.கவுற்சன.31.)

*[புரி → புரியை + இட்டு + ஈர்—,]*

**புரியைக்கட்டியிழு—த்தல்** *puriyai-k-kaṭṭi-y-iḻu-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. பழுதையினாற் கட்டியிழுத்தல்; to fasten with strands of straw and draw. 2. தொல்லைப் படுத்துதல்; to vex, harass, torment. "*நான் உன்னைப் புரியைக்கட்டி யிழுக்கிறேன்*" (உ.வ.)

*[புரியை + கட்டி + இழு—,]*

**புரிவலி—த்தல்** *puri-vali-,* 4 செ.கு.வி. (v.i.) கட்டுதல்; to tie, fasten. 'முத்தாற் புரிவலித்து' (திருவாலவா.32,20)

*[புரி + வலி—,]*

**புரிவளை** *puri-vaḷai,* பெ. (n.) முறுக்கு வளையல்; twisted bracelet. 'புகலாதொழுகும் புரிவளையார் மென்றோள்' (பு.வெ.10, காஞ்சிப்.1)

*[புரி + வளை. வள் → வளை = வளையல்]*

**புரிவிடு—தல்** *puri-viḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) கயிறு திரிக்கப் புரியை முறுக்குதல் (வின்.); to twist for making cord.

*[புரி + விடு—,]*

**புரிவில்புகழ்ச்சியணி** *purivil-pugaḻcci-y-aṇi,* பெ. (n.) பழிப்பது போலப் புகழும் அணிவகை (வீரசோ.அலங்.12); (rhet.) indirect or veiled eulogy.

*[புரிவு + இல் + புகழ்ச்சி + அணி]*

**புரிவின்மைநயம்** *purivinmai-nayam,* பெ. (n.) புத்தசமயத்து நயம் நான்கனுள் ஒன்று (மணிமே.30,218); (Buddh.) a casual relation one of four nayam.q.v.

*[புரிவு + இன்மை + நயம்]*

**புரிவு**[1] *purivu,* பெ. (n.) 1. அன்பு; love, attachment. 'புரிவொடு நாவினாற் பூவை புணர்த்து' (பு.வெ.ஒழிபு,12) 2. விருப்பம்; desire. 'வினை தீர்க்கும் புரிவுடையார்' (தேவா.905,1) 3. தொழில்; action, practice. 'இருவிரளி மிர்த்துப் புரிவொரு சேர்த்து' (கல்லா.8)

*[புல் → புர் → புரி. புரிதல் = விரும்புதல். புல் → புர் → புரி → பரி = அன்பு (வே.க.3.87), புரி → புரிவு]*

**புரிவு**[2] *purivu,* பெ. (n.) 1. தவறு; error. 'புரிவிலாமொழி விதூரம்' (பாரத.சூது.43) 2. தப்பி நீங்குகை; escape. 'புரிவின்றி.... போற்றுவ போற்றி' (பு.வெ.8,20) 3. வேறுபடுகை (அக.நி.); change.

*[புரி → புரிவு (வே.க.3.96)]*

**புரிவு**[3] *purivu,* பெ. (n.) தெளிவு; clearness, lucidity. 'புரிவில்புகழ்ச்சி கட்டே' (வீரசோ. அலங்.12)

*[புல்லுதல் = பொருந்துதல். புல் → புல்கு. புல்குதல் = அணைதல். நண்பராய் மருவுதல். புல் → புலம் → புலன் = பொறியறிவு, அறிவுடைமை, கண்கூடு, தெளிவு (வே.க.3,62,63) புல் → புர் → புரி]*

**புரீடமம்** *purīḍamam,* பெ. (n.) உளுந்து; black gram.

**புரீத்தி** *puritti,* பெ. (n.) தூக்கத்திற்குரிய நாடி வகை; a nerve one that causes sleep.

**புரு**[1] *puru,* பெ. (n.) **1.** மிகுதி (சங்.அக.); abundance **2.** பருமை; greatness புரு சுண்டந் தாங்குந் தன்மையால் (விநாயகபு.**46,44**) **3.** வீடு (மோட்சம்) (வின்.); heaven.

*[புல் → பல் → பன்மை = ஒன்றிற்கு மேற்பட்ட தொகைப் பருமை, தொகுதி. புல் → புர் → புரு.]*

**புரு**[2] *puru,* பெ. (n.) குழந்தை (வின்.); child, infant.

**து.** புரு (இளைய), புருகஞ்சிட(சிறு கன்று) புருநிணெ (இளையகாய், பிஞ்சு)

*[புள் + புரு (மு.தா.40)]*

த. புரு > Skt.bhrūṇa

**புரு**[3] *puru,* பெ. (n.) காட்டுக்குமிழ் (கா.); french mulberry of the wersern ghat.

**புருங்கி** *purungi,* பெ. (n.) கரிசலாங்கண்ணி; a plant eclypta prostata.

**புருசு** *purušu,* பெ. (n.) வாணவகை (வின்.); a kind of rocket.

**புருடகி** *puruḍagi,* பெ. (n.) புன்னை; poon tree.

*[புருடம் → புருடகி.]*

**புருடம்** *puruḍam,* பெ. (n.) புன்னை (மலை.); common poon.

**புருடமிரு** *puruḍamiru,* பெ. (n.) *புருபிரு (சங்.அக.)* பார்க்க; see *puru biru.*

**புருடா**[1] *puruḍā,* பெ. (n.) அச்சமூட்டுகை (கொ.வ.); frightening.

*[புல் → புர்→புரள். புரளுதல் = உருளுதல், மாறுபாடடைதல், சொற்பிறழ்தல். புரள்→ புரட்டு. புரட்டுதல் = உருட்டுதல், கீழ்மேலாகத் திருப்புதல், வஞ்சித்தல். புரள்→ புரட்டு = கீழ்மேலாகத் திருப்புகை, சொற்பொருள்திரிப்பு, வஞ்சகம் (வே.க.3.94,95) புரள்→புரடு→புரடா = மாற்றிச்சொல்லி அச்சுறுத்துகை.]*

**புருடா**[2] *puruḍā,* பெ. (n.) பொய் (இ.வ.); falsehood.

**தெ.**புருடா.

*[புல்→புர்→புரள்→புரட்டு, கீழ்மேலாகத் திருப்புகை, வஞ்சகம். புரள் → புரடு → புரடா.]*

**புருடாதிகம்** *puruḍādigam,* பெ. (n.) பெருநரந்தம் (பம்பளிமாசு); a very big citrus fruit.

**புருடால்** *puruḍāl,* பெ. (n.) *புருடா*[2] பார்க்க; see *puruḍā*[2]

*[புருடா → புருடால்]*

**புருடி** *puruḍi,* பெ. (n.) புருண்டி பார்க்க; see *purunḍi.*

*[புருண்டி → புருடி]*

**புருடு** *puruḍu,* பெ. (n.) **1.** பேறுகால தூய்மைக்கேடு (பிரசவத்தீட்டு) (இ.வ.); ceremonial pollution on account of child birth.

2. மகப்பேறு கூடத்தில் குழந்தைக்கு வரும் புண்கட்டி; skin eruptions of a new born child.

க.புருடு; புருடு, புருடி; துட.பிச்அச் (பேறுகாலத்திற்குப்பின்காருவாவரை பெண்கள் தங்கும்குடில்)

*[புள் → புரு = குழந்தை. புள் → புரு→ புருடு]*

**புருண்டி** *puruṇḍi,* பெ. (n.) மல்லிகை (மலை.); jasmine.

*[புல்→புர். புரு → புருண்டி]*

த. புருண்டி>Skt. bhūruṇḍi.

**புருணம்** *puruṇam,* பெ. (n.) கருப்பைக் குழவி (தைலவ.தைல.); foetus.

*[புள் → புரு = குழந்தை. புள் → பிள் → பிள்ளை. பிள் → பீள் = கரு, கருப்பைக் குழவி, இளமை (மு.தா.40,41.) புரு → புருணம்]*

த. புருணம்> Skt. bhrūṇa

**புருணமேகம்** *puruṇamēgam,* பெ. (n.) கடுக்காய்; galnut.

**புருபீரு** *purupīru,* பெ. (n.) தண்ணீர் விட்டான் (மலை); water root.

**புருபீருகம்** *purupīrugam,* பெ. (n.) *புருபீரு* பார்க்க; see *purupīru.*

*[புருபீரு → புருபீருகம்]*

**புருமோகம்** *purumōgam,* பெ. (n.) *புரிமோகம்* பார்க்க; see *purimōgam.*

மறுவ. சம்பு நாவல்

**புருவத்துடிப்பு** *puruva-t-tuḍippu,* பெ. (n.) புருவ நடுவிடத்தில் துடித்தலையுருவாக்கும் ஊதை நோய்; a disease which causes constant twitch of the eye-brows.

*[புருவம் + (அத்து) + துடிப்பு 'அத்து' சாரியை. துடி → துடிப்பு]*

**புருவத்துமேல்** *puruvattu-mēl,* பெ. (n.) சிவபெருமானது நெற்றிக்கண் (குக்கயாகப்.334, உரை); Śivaṉ's third eye, in the forehead.

*[புருவம் → புருவத்து + மேல்]*

**புருவநடு** *puruvanaḍu,* பெ. (n.) 1. புருவங்களின் இடையிலுள்ள பகுதி; space between the eyebrows. 2. ஆறாதாரங்களுள் ஒன்றான ஆதன் இருப்பிடம் (ஆஞ்ஞை); (yōga) middle of the forehead considered as the seat of the soul.

*[புருவம் + நடு]*

**புருவநெரி-த்தல்** *puruvaneri-,* 4 செ.கு.வி. (v.i.) சினத்தால் புருவங்களை வளைத்தல் (கொ.வ.); to knit one's eyebrows in anger, to frown.

*[புருவம் + நெரி-]*

**புருவப்புழுவெட்டு** *puruva-p-puḻu-veṭṭu,* பெ. (n.) புருவத்திலேற்படுமுடியுதிர்வு நோய்; a disease marked by the falling of the hairs of eyebrow.

*[புருவம் + புழு + வெட்டு]*

**புருவம்**[1] *puruvam,* பெ. (n.) குதிரை (சது.); horse.

*[புரவி → புருவி → புருவம்]*

**புருவம்²** *puruvam,* பெ. (n.) 1. கண்களின் மேலுள்ள மயிர்வளைவு, வளைந்த கண்பட்டை; eybrow. 'கொடும்புருவம்' (குறள்,1086) 2. புண்விளிம்பு (வின்.); lip of a sore 3. வரம்பு (வின்.); ridge of flowerbed or plot of garden.

*[புல் → புரு → புரி. புரிதல் = வளைதல். வலம்புரி இடம்புரி என்னும் சங்குகளை நோக்குக. புரு → புருவம் = கண்மேல் மயிர் வளைவு (த.வ.1.68)]*

**புருவம்சுழி–த்தல்** *puruvam - šuḷi-,* 4 செ.கு.வி. (v.i.) *புருவ நெரி–த்தல்* பார்க்க; see *puruva neri-.*

*[புருவம் + சுழி–,]*

**புருவமத்தி** *puruvamatti,* பெ. (n.) *புருவநடு* பார்க்க; see *puruva-naḍu.*

*[புருவம் + மத்தி]*

Skt. madhya > **த.** மத்தி

**புருவமத்தியம்** *puruva-mattiyam,* பெ. (n.) *புருவநடு* பார்க்க; see *puruva-naḍu.*

*[புருவம் + மத்தியம்]*

Skt. madhya > **த.** மத்தியம்

**புருவமையம்** *puruvamaiyam,* பெ. (n.) *புருவநடு* பார்க்க; see *puruva-naḍu.*

*[புருவம் + மையம்]*

Skt. madhya > **த.** மைய.

**புருவை¹** *puruvai,* பெ. (n.) 1. ஆடு; goat, 'செந்நிலப் புறவின் புன்மயிர்ப் புருவை' (நற்.321) 2. செம்மறியாடு (பிங்.); sheep 3. பெண்ணாடு; female of goat or sheep. 'குருமயிர் புருவை' (ஐங்குறு.238)

*[புல் → புரை → பிரை → பெருகு → பெருக்கு. புல் → புரு → புருவை]*

**புருவை²** *puruvai,* பெ. (n.) இளமை (சூடா.); youth, juvenility.

*[புள் → புரு = குழந்தை. புரு → புருவை = இளமைப்பருவம்]*

**புருன்றி** *puruṇṛi,* பெ. (n.) மல்லிகை; jasmine flower.

**புரூஉ** *purūu,* பெ. (n.) புருவம்; eyebrow. 'சிலபுரூஉப் பங்கத்தினும்' (குக்கயாகப்.430)

*[புரு → புருவம். புரு → புரூஉ]*

**புரூண்ணம்** *puṟūṇṇam,* பெ. (n.) கருப்பத்திலுள்ள முதிர்கரு; foetus.

*[புரு → புருண்ணம் → புரூண்ணம்]*

**புரை¹–தல்** *purai-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. ஒத்தல்; to resemble. 'வேய்புரை பெழியி...பணைத்தோள்' (பதிற்றுப்.65,8) 2. தைத்தல்; to sew coarsely with a fibre or thread, to stitch. 'தம்முடைய வஸ்திரத்தைப் புரையாநின்றாராய்' (ஈடு,4,10,7) 3. மறைத்தல் (வின்.); to take means to hide, as a fault, to conceal.

*[புல்லுதல் = பொருந்துதல், ஒத்தல். புல் → புரை (மு.தா.197) புரைதல் = ஒத்தல், பொருத்தித் தைத்தல்,]*

**புரை²–தல்** *purai-,* 2செ.கு.வி. (v.i.) 1. பொருந்துதல்; to be becoming or proper,

to be appropriate. "புறத்தோ ராங்கட் புரைவ தென்ப" (தொல். பொ.176). 2. நேர்தல்; to happen, occur. "புணர்ந்தோரிடை முலையல்கல் புரைவது" (பரிபா.6,55). 3. மூச்சுத் திணறுதல் (இ.வ.); to be suffocated.

க. புருள்

*[புல்லுதல் = பொருந்தல். புல் → புரை (மு.தா.197)]*

**புரை³—த்தல்** *purai-,* 11 செ.குன்றாவி. (v.t.) பெருமையாதல்; to be great.'பொழிற்பூம் புகலி' (தேவா.73,11)

*[புல் → பல் → பரு → பெரு → பெருமை. (வே.க.3,72–75) புல் → புர் → புரை]*

**புரை⁴** *purai,* பெ. (n.) ஒப்பு (பிங்.); resemblance.

தெ. புருடு

*[புல் → புரை (மு.தா.197)]*

**புரை⁵** *purai,* பெ. (n.) 1. உயர்ச்சி; height, elevation, eminence. 'முனிவன் புரைவரைக் கீறி' (பரிபா.11,11) 2. பெருமை; greatness. "புரையோய் புரையின்று" (பரிபா.20,73).

*[புல் → பல் → பரு → பெரு → பெருமை. (வே.க.3,72–75) புல் → புர் → புரை]*

**புரை⁶** *purai,* பெ. (n.) 1. உட்டுளை; tubular hollow. "புரைபுரை கனியப் புகுந்து" (திருவாச.22,3) 2. உட்டுளைப் பொருள் (பிங்.); tube, pipe. 3. குரல்வளை; wind pipe (C.G.). 4. விளக்கு மாடம்; small niche in a wall for a lamp. 5. குற்றம்; defect, fault, blemish. 'புரைதீர்ந்த நன்மை பயக்கு மெனின்' (குறள்,292) 6. உள்ளோடும் புண், உட்டுளைப் புண்; deep ulcer, fistula, sinus. 7. கண்ணோய் வகை; cataract. 8. (உள்ளீடற்ற அல்லது உண்மையில்லாப்) பொய்; false-hood. 'வடிவிற் பிறந்த புகரிலும் புரையின்றிக்கே' (ஈடு, 4,3,9) 9. களவு (யாழ்.அக.); theft. 10. நொய்ம்மை (கனமின்மை); lightness.'புரையாய்க் கனமாய்' (தேவா.174,7) 11. பைமடிப்பு அல்லது அறை; (வின்.); division or pouch of a bag. 12. கூறுபாடு; division of a subject. 'புரைவிடுத்துரைமோ' (சீவக.1732)

ம. புர; க. பொரெ, பொரகெ; தெ. பொர

*[புல்லுதல் = துளைத்தல். புல் = உட்டுளை யுள்ள நிலைத்திணை வகை, உட்டுளையுள்ள பனை, உட்டுளையுள்ள தென்னை, உட்டுளையுள்ள மூங்கில், சிறுமை. புல் → புன் புன்மை = சிறுமை புல் → புர் → புரை (வே.க.3.101)]*

Skt.pura; Gk.poros (passage); L.,OF.,ME.,E.pore (minute opening)

**புரை⁷** *purai,* பெ. (n.) 1. வீடு; house, dwelling. "புரைபுரை பாலிலை செய்ய வல்ல" (திவ்.பெரியாழ்.2,9,1), "மண்புரை பெருகிய மரமுள் கானம்" (ஐங்குறு.319). 2. தவச்சாலை; hermitage. (கம்பரா.திருவவ.42) 3. கோயில்; temple. "புரைவயிற் புரைவயிற் பெரிய நல்கி" (பதிற்றுப்.15,37). 4. அறை; small room. 5. பெட்டியின் அறை; compartment, as of a box. பெட்டிப்புரைக்குள் வை. 6. மாட்டுத் தொழுவம் (மாட்டுவா.23); cowstall. 7. இடம்; place. "இருமற்றிரைவிரிபுரையை" (ஞானா.43,21). 8. மூலை,பக்கம்; corner, side. "பொகுட்டதோர் புரையின் வைகுமால்" (கம்பரா.இரணிய.71). 9. நிலம், பூமி (பிங்.); earth.

ம. புர; து. பொரெ, புரெ (கூரை), புர. (வீடு); துட.பர்ய் (கூரை); குட.பொரெ (கூரை)

*[புல் → புர் → புரை (வே.க.3,100)]*

**புரை⁸** *purai,* பெ. (n.) பழமை (யாழ்.அக.); antiquity.

**புரை⁹–த்தல்** *purai-,* 11 செ.கு.வி. (v.i.) 1. குற்றப்படுதல்; to be defective. 2. தப்புதல்; to escape. 'உணரவல்லார்க்குப் புரைத்தெங்கும் போகான்' (திருமந்.1774) 3. ஒரு வாய்ப்பாட்டில் (தானத்தே) பாட ஒருவாய்ப்பாட்டிற்கு (தானத்தே) இசை நழுவுதல் (திவாலவா.57,26); (mus.) to slip into one note when trying another. 4. மறைவு வெளிப்படுதல் (வின்.); to come out, as a secret.

தெ.பொரபடு,பொரபோவு

*[புல் → புர் → புரை ]*

**புரைக்கட்டி** *purai-k-kaṭṭi,* பெ. (n.) உட்டுளையுடைய புண்கட்டி (இ.வ.); tumour.

க. பொரெ, புரெ

*[புரை + கட்டி]*

**புரைக்கல்** *purai-k-kal,* பெ. (n.) மருந்தரைக்கும் குழியம்மி; small stone slab for grinding drugs.

*[புரை + கல்]*



**புரைக்குத்தல்** *purai-k-kuttal,* பெ. (n.) *பிரைக்குத்தல்* பார்க்க; see *pirai-k-kuttal.*

*[பிரைக்குத்தல் → புரைக்குத்தல்]*

**புரைக்குழல்** *purai-k-kuḻal,* பெ. (n.) 1. பிடரியில் அல்லது கழுத்தில் தோன்றும் தசைக்கட்டி; dewlap, goitre, morbid enlargement in the nape of neck. 2. *புரைக்கட்டி* பார்க்க; see *purai-k-kaṭṭi.*

*[புரை + குழல்]*

**புரைக்குழி** *purai-k-kuḻi,* பெ. (n.) *புரைக்கட்டி (பிங்.)* பார்க்க; see *purai-k-kaṭṭi* (M.L.).

*[புரை + குழி + குள் → குழி]*

**புரைக்குழை** *purai-k-kuḻai,* பெ. (n.) *புரைக்குழல் 1* பார்க்க; see *purai-k-kuḻai 1* (M.L.).

*[புரை + குழை. குள் → குழை]*

**புரைக்கேறு–தல்** *puraikkēṟu,-* 7 செ.கு.வி. (v.i.) *புரையேறுதல்(வின்.)* பார்க்க; see *purai-y-ēru-,*

*[புரைக்கு + ஏறு–,*
*மூச்சுக்குழலான புரைக்கு*
*உணவுப்பொருள் சென்று விடுதல்]*

**புரைகிளை–த்தல்** *purai-kiḷai-,* 4 செ.கு.வி. (v.i.) *புரையோடு–தல்* பார்க்க; see *purai-y-ōḍu-,*

*[புரை + கிளை–,]*

**புரைச்சதை** *purai-c-cadai,* பெ. (n.) கழலை; sarcoma.

**புரைச்சதைப்புண்** *purai-cadai-p-puṇ,* பெ. (n.) சீழ்க்கழலை; ulcerated sarcoma.

*[புரைச்சதை + புண்]*

**புரைச்சல்** *puraiccal,* பெ. (n.) திணறுமூச்சு (சங்.அக.); suffocation, panting.

*[புரை → புரைச்சல்]*

**புரைசல்¹** *puraišal,* பெ. (n.) 1. பொத்துகை; mending, darning, braiding. 2. மந்தணம் (இரகசியம்); secret, private affairs.

*[புல் → புள் → புண் → புணர். புல் → புர் → புரை → புரைசல்]*

**புரைசல்²** *puraišal,* பெ. (n.) 1. குழப்பம் (யாழ்.அக.); disorder, discord, variance. 2. துளை; hollow, hole, interstice. 3. வலுவின்மை; weakness. 'பிறனுடைய புரைசல்களை எப்படி யறியலாம்.' (பஞ்சதந்.64.) 4. குற்றம்; flaw, defect. 5. மாணிக்கக் குற்றங்களுள் ஒன்று (இ.வ.); flaw in a precious stone.

*[புரை = துளை, சிறுதுளை. புரை → புரைசல் (வே.க.3.102)]*

**புரைசு** *puraišu,* பெ. (n.) பலாசு (மூ.அ.); palas-tree.

**புரைசை** *puraišai,* பெ. (n.) புரசை பார்க்க; see purašai. "புரைசை யானையிற் கொண்டு" (கம்பரா.பள்ளியடை.126)

*[புரசை → புரைசை]*

**புரைத்தல்** *puraittal,* பெ. (n.) இன்னாமுரல் (அபசுர) வகை (திருவாலவா. 57,14, அரும். இசைமரபு); (mus.) a defective note in singing.

*[புல் → (புல்லம்) → பொல்லம் = ஓட்டை, துளை. புல் → புரை = குற்றம். புரை → புரைத்தல் = பாடும்போது புரை (குற்றம்) விழுதல், புரைவிழுந்த பாடல்]*

**புரைத்தைலம்** *purai-t-tailam,* பெ. (n.) சீழ்ப்பிடித்துப் புரையோடிய புண்களுக்குப் பயன்படுத்தும் மருந்து; medicated oil for sinus sore, fistula etc.

*[புரை + தைலம்]*

Skt. taila > த. தைலம்

**புரைப்படு-தல்** *purai-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) பொந்துபடுதல்; to become hollow, as a tree. "மரம் புரைபட்டது" (தொல்.சொல்.390,உரை).

*[புரை + படு-, புல் → புரை = ஓட்டை, துளை. 'படு' து.வி.]*

**புரைப்பு¹** *purai-p-pu,* பெ.(n) 1. குற்றம்; fault, defect. *"புரைப்பிலாத பரம்பானே"* (திவ்.திருவாய். 4,3,9). 2. ஐயுறவு; doubt 'புரைப்பறத் தெளிதல் காட்சி' (மேருமந் .107)

*[புல்லுதல் = துளைத்தல். புல் = உட்டுளையுள்ள நிலைத்திணைவகை, புல்லரிசி, சிறுமை. புல் → புர் → புரை = உட்டுளை, உட்டுளைப் பொருள், பொய், குற்றம். புரை → புரைப்பு (வே.க.3.101,102 ]*

**புரைப்பு²** *puraippu,* பெ.(n) ஒப்பு ; resemblance, likeness. 'புரைப்பின்று' (பு.வெ.2,6.)

*[ புல் → புரை. புரைதல் = ஒத்தல். (மு.தா.197) புரை = ஒப்பு. புரை → புரைப்பு. 'பு'. தொ.பெ.ஈறு ]*

**புரைப்புண்** *purai-p-puṉ,* பெ.(n) உள்ளோடும் அல்லது உட்டுளைப் புண்; elongated abscess with only a small orifice, sinus.

*[ புரை + புண் ]*

**புரைபடு-தல்** *purai-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) வருந்துதல்; to be distressed 'புள்ளிநிலனும் புரைபடலரிதென' (பரிபா.2,34.).

*[ புரை + படு-, ]*

**புரைபோ-தல்** *purai-pō-,* 8 செ.கு.வி. (v.i.) *புரையோடு-தல்* பார்க்க; see *purai-y-ōḍu-,* (M.L.)

*[ புரை + போ-, ]*

**புரைமாறல்** *puraimāṟal,* பெ. (n.) புண்புரை ஆறிக்குணமடைதல்; healing of the sinus.

*[ புரை + மாறல். மாறு → மாறல் ]*

**புரைமை**[1] *puraimai,* பெ. (n.) *புரை*[5] பார்க்க; see *purai.*[5] *'மன்பதை காக்கும் நின் புரைமை நோக்காது'* (புறநா.210).

*[ புரை + புரைமை. 'மை'ப.பெ.ஈறு ]*

**புரைமை**[2] *puraimai,* பெ. (n.) ஊடுருவ இடந்தரும் இயல்பு; permeability.

*[ புரை → புரைமை ]*

**புரைமோர்** *purai-mōr,* பெ. (n.) *பிரைமோர்* பார்க்க; see *pirai mōr.* மறுவ. உறைமோர்

*[ பிரைமோர் → புரைமோர் ]*

**புரைய** *puraiya,* இடை. (part.) ஓர் உவமஉருபு (தொல்.பொ.290); particle showing simalarity or resemblance.

*[ புல்→ புரை(வி.)=பொருந்து, ஒப்பாகு (பெ.) ஒப்பு.புரைய=போல(உவமஒருபு) (சு.வி.36) ]*

**புரையகடிக்கரைசல்** *puraiya-kadi-k-karaišal,* பெ. (n.) மாங்கிசக்கரைசல்; water distilled from the flesh of birds.

**புரையன்** *puraiyaṉ,* பெ. (n.) 1.வீடு; house, cottage 2. இலைக்குடில் (பன்னசாலை); dwelling made of leaves.

*[ புரை→ புரையன் = (உட்டுளையுள்ள) வீடு (வே.க.3,102) ]*

**புரையிசிவு** *purai-y-išivu,* பெ. (n.) நீர்கோவை சளிநோய்வகை; neuralgia (M.L).

*[ பிரை + இசிவு ]*

**புரையிடம்** *purai-y-iḍam,* பெ. (n.) 1. தோப்பு; garden(T.A.S.ii,51.); 2. வீட்டை யொட்டிய வெறுமையான (காலி) இடம்; vacant space at the backyard of a house. புரையிடத்தில் தான் வைக்கோற் போர் வைத்திருக்கிறோம். (உ.வ.)

*[ புரை+இடம்.புல்= உட்டுளையுள்ள நிலைத்திணை வகை, உட்டுளையுள்ள பனை, உட்டுளையுள்ள தென்னை. புல் → புரை = உட்டுளைப்பொருள். புரையிடம் = உட்டுளையுள்ள நிலைத்திணை (தென்னை, பனை முதலியன) வளருமிடம் ]*

**புரையுநர்** *puraiyunar,* பெ. (n.) ஒப்பவர்; rivals, equals. *"புரையுநரில்லாப் புரமையோய்"* (திருமுரு.280.).

*[ புரை = ஒப்பு. புரையுநர் = ஈடானவர், நிகரானவர், சம நிலையாளர். ]*

**புரையுள்** *purai-y-ul,* பெ.(n.) வீடு(பிங்.); house.

*[ புல் → புர் → புரை = (உட்டுளையுள்ள) வீடு. புரை → புரையுள் (வே.க.3,102) ]*

**புரையேற்றம்** *purai-y-ēṟṟam* பெ (v.i.) உணவுப்பொருள் தனக்குரிய வழியிற் செல்லாது உயிர்ப்பு (சுவாச)க் குழலிற் சென்று அடைத்துக் கொள்கை; suffocation due to food entering the wind pipe.

*[ புரை + ஏற்றம். ஏறு → ஏற்றம் ]*

**புரையேறு-தல்** *purai-y-ēṟu-,* 6 செ.கு.வி(v.i.) உணவுப்பொருள் தனக்குரிய வழியிற் செல்லாது மூச்சுக்குழலிற் சென்று அடைத்துக்கொள்ளுதல்; to be suffocated by food passing into the wind pipe. சாப்பிடும்போது பேசாதே, புரையேறிவிடும் (உ.வ.).

*[ புரை + ஏறு-, ]*

**புரையோடல்** *purai-y-ōḍal.* பெ. (n.) புரையோடுதல்; becoming fistulous.

*[ புரை + ஓடல். ஓடு → ஓடல். ]*

**புரையோடிய** *purai-y-ōḍiya,* பெ.எ. (adj.) பன்மடி வளைவுகளுடைய; sinuous.

*[ புரை + ஓடிய. ஓடு → ஓடிய ]*

**புரையோடு-தல்** *purai-y-ōḍu-,* 5 செ.கு.வி (v.i.) புண்ணில் உட்டுளையுண்டாதல்; to become fistulous as an ulcer.

*[ புரை + ஓடு-. ]*

**புரையோர்[1]** *puraiyōr,* பெ. (n.) 1.பெரியோர்; eminent persons. *"வேட்கைப்புரையோர்"* (பதிற்றுப். 15,31,) 2. மெய்ப்பொருளுணர்ந்தோர் men of real wisdom.*"புரையோரைப் படர்ந்து நீ"* (கலித்.15.)

E. peer,an equal, a nobleman; L. peer, equal.

*[ புல் → புலம் → புலன்.புல் → புரை. புரைதல் = பொருந்துதல் ஒப்பாதல். புல் → புரை → புரைய போல. புரை → புரையோர் = ஒத்தோர், உவமை கூறத்தக்க பெரியோர். 'உயர்ந்ததன் மேற்றே உள்ளுங்காலை' (தொல்.1222) என்றதனால் உயர்ந்த பொருளே உவமை கொள்ளப்படுவது மரபு எனவறிக ]*

**புரையோர்[2]** *puraiyōr,* பெ. (n.) காதல் மகளிர்; sweet hearts. *'புரையோருண்கட்டுயில்"* (பதிற்றுப்.16,18.).

*[ புரை → புரையோர் ]*

**புரையோர்[3]** *puraiyōr,* பெ. (v.i.) 1. கீழோர் (சூடா.); base persons of low rank; 2. திருடர் (பிங்.); robbers.

மறுவ. புழுக்கை.

*[ புல் → புன்மை = சிறுமை. புல் → புர் → புரை = உள்ளீடற்ற அல்லது உண்மையில்லாப்பொய், நொய்ம்மை (கனமின்மை), குற்றம் (வே.க.3.11.102) புரை → புரையோர் ]*

**புரைவளர்–தல்** *purai-vaḷar-,* 3 செ.கு.வி. (v.i.) கண்ணில் சதை வளர்தல் (இ.வ.); to have cataract developed in the eye.

*[ புரை + வளர்–, ]*

**புரைவு** *puraivu,* பெ. (n.) பொருத்துவாய் தையல்; stitching.

*[ புரை → புரைவு. 'வு' தொ.பெ.ஈறு ]*

**புரைவை–த்தல்** *purai-vai-,* 4 செ.குன்றாவி. (v.t.) துழாயாக்கல்; to fistulate

*[ புரை + வை–, ]*

**புரோரவிளை** *purōra-v-iḷai,* பெ.(n.) ஈளை நோய் வகையுளொன்று; thymic asthma

மறுவ. புரையிசிவு

**புல்¹** *pul,* பெ. (n.) மூங்கிற் குடும்பத்தைச் சேர்ந்த புல்வகை (தொல். பொ. 641) (திவா.); grass family having exogenous toughness of structure as bamboo. 2. பனை (மலை.); palmya-palm. "அன்றில் புற்சேக்கை புக்கு" (கல்லா.38,10). 3. பதினேழாம் மீன். (அனுடம்); the 17th naksatra. 4. தென்னை (தைலவ. தைல.); coconut palm. 5. நிலத்திணை வகை; a vegetable kingdom. 6. ஒரு சார் விலங்குகளின் உணவான பூடு வகை; grass. பசும்புல் தலை காண்பரிது (குறள், 16) 7. புதர் (பிங்); thicket. 8. கம்பு; bulrush millet. 9. புன்செய் தவசம் (புறநா.248); any grain other than paddy. 10. *புல்லரிசி* பார்க்க; see *pullariśi.* 11. மருந்துச் செடி வகை (திவா.); a kind of medicinal plant. 12. சிறுமை; smallness, in quantity, number or value. புல்லுளை (கம்பரா. வரைகாட்சி.70). 13. இழிவு; meaness, lowness, baseness. "புன்கோட்டி" (நாலடி, 255) 14. கபில நிறம் (பிங்.); tawny colour.

ம. க., கோத., துட. புல்; தெ. புலு, புல்லு, பில்லு; து. புல்லு, பட. குல்லு, குட. பில்லீ ...

*[ புல்லுதல் துளைத்தல். இவ்வினைச்சொல் வழக்கிறந்தது. புல்உட்டுளையுள்ள நிலைத்திணை வகை, ஊனுண்ணா விலங்குணவான தாளுள்ள நிலைத்திணை வகை, உட்டுளையுள்ளபனை, பனைவடிவான நாள் (அனுடம்). உட்டுளையுள்ள தென்னை, உட்டுளை யுள்ளமூங்கில், புல்லாங்குழல், புற்போன்ற கம்பம் பயிர், புல்லசிரி (வே.க. 3.101). ]*

புல்வகை

| | |
|---|---|
| 1. அறுகம்புல் | 10. நாணற்புல் |
| 2. இலைப்புல் | 11. நெல்லுப்புல் |
| 3. எலிக்குச்சிப்புல் | 12. பீனசப்புல் |
| 4. ஒட்டுப்புல் | 13. பேய்ப்புல் |
| 5. காவட்டம்புல் | 14. மத்தங்காய்ப்புல் |
| 6. கன்றுக்குட்டிப்புல் | 15. மாந்தப்புல் |
| 7. கோரைப்புல் | 16. வயற்புல் |
| 8. சோதிப்புல் | 17. வாசனைப்புல் |
| 9. தருப்பைப்புல் | |

**புல்²** *pul,* பெ.(n.) (பிங்.) 1. புணர்ச்சி; copulation. 2. சிவல்; partridge.

*[ புல்லுதல் = பொருந்துதல், புணர்தல் (வே.க. 3, 62) புல்(லு) → புல் ]*

**புல்³** *pul,* பெ. (n.) புலி (திவா.); tiger.

ம., க., தெ. புலி; து. பில்லி

*[புல்லுதல் → பொருந்துதல். புல் → புல்லி → புலி = முன்னங் கால்களால் தழுவிப் பற்றும் வேங்கை அல்லது சிறுத்தை (வே.க. 3,62) ]*

**புல்கல்** *pulgal,* பெ.(n.) அணைதல்; embracing.

*[ புல்கு → புல்கல் ]*

**புல்கு-தல்** *pulgu-,* 6 செ.கு.வி.(v.i.) 1. அணைதல்; to embrace, 'அன்னந் தன்னினம் பெடையொடும் புல்கி' (தேவா. 584. 9). 2. புணர்தல்; to copulate, 3. நண்பினராய் மருவுதல் (யாழ்ப்); to be attached, as friends.

ம. புல்குக, புல்லுக.

*[ புல்லுதல் = பொருந்துதல். புல் → புல்கு (வே.க. 3,62) ]*

**புல்சுருட்டை** *pulśuruṭṭai,* பெ.(n.) பாம்புவகையு ளொன்று; a variety of snake.

*[புல் + சுருட்டை. சுருள் → சுருட்டை ]*

**புல்நாகம்** *pul-nāgam,* பெ.(n.) நாகப்பாம்பு வகை (இ.வ.); a kind of cobra.

*[ புல் + நாகம் ]*



**புல்நாகன்** *pulnāgaṉ,* பெ.(n.) தாழம்பூ விலிருக்கும் சிறு நாகம்; snake in the flower of fragrant screw pine.

மறுவ. சிறுநாகம்

*[ புல் + நாகன் ]*

**புல்பத்தையடி-த்தல்** *pul-pattai-y-aḍi-,* 4 செ.கு.வி. (v.i.) புல் முளைத்த பத்தைகளை வரிசையாய் வைத்துக் கட்டுதல்; to turf. (C.E.M).

*[ புல் + பத்தை + அடி. பற்றை = புல் வளர்ந்த மண்கட்டி. பற்றை → பத்தை. ]*

**புல்மரம்** *pulmaram,* பெ.(n.) தென்னைமரம்; coconut palm.

*[ புல் + மரம் ]*



**புல்மானம்** *pul-māṉam,* பெ.(n.) *புன்மானம் (வின்)* பார்க்க; see *puṉmāṉam.*

*[ புல் + மானம். புல் → புலம் → புலர். புலர்தல் = தெளிதல், தெளிவாதல். புல் → புலர்ச்சி = விடிகை. புலர் → புலரி = விடியல். புல்லுதல் = பொருந்துதல், புணர்தல் (வே.க. 3,62-64) ]*

**புல்முளை-த்தல்** *pul-muḷai-,* 4 செ.கு.வி. (v.i.) *புல்லெழு-தல் (கொ.வ.)* பார்க்க; see *pul-l-eḻu-,*

*[ புல் + முளை ]*

**புல்முனைப்பூச்சி** *pulmuṉai-p-pūcci,* பெ.(n.) சிறு புழு அல்லது உயிரி வகையு ளொன்று; a kind of small-worm or insect.

*[ புல்முனை + பூச்சி ]*

**புல்மேய்-தல்** *pul-mēy-,* 3 செ.கு.வி. (v.i.) *புல்லு மேய்-தல்* பார்க்க; see *pullu-mēy-,*

*[ புல் + மேய் ]*

**புல்ல**[1] *pulla,* வி.எ.(adv.) பொருந்த; suitably, agreeably.

*[ புல்லுதல் = பொருந்துதல். புல் → புல்ல (வே.க. 3,63) ]*

**புல்ல**[2] *pulla,* இடை. (part.) உவமவுருபு; particle showing similarity or resemblence. 'புல்லப் பொருவப் பொற்பப் போல' (தொல். உவம. 11)

*[ புல்லுதல் → பொருந்துதல். புல் → புல்ல (வே.க.3,63) = ஒன்றினோடு பொருந்திப் பார்ப்பதை உணர்த்துவது ]*

**புல்லகச்சி** *pullagacci,* பெ. (n.) சேம்பு; colocasia.

**புல்லகண்டங்கரும்பு** *pullakaṇḍaṅ karumbu,* பெ. (n.) பேய்க்கரும்பு; wild sugarcane.

*[ புல்ல + கண்டம் + கரும்பு. கள் → கண்டு → கண்டம். கரு → கரும்பு ]*

**புல்லகண்டம்**[1] *pullakaṇḍam,* பெ. (n.) 1. ஒருவகைக் கரும்பு (நாநார்த்த 178) ; a kind of sugar-cane. 2. கண்ட சருக்கரை (பிங்.); sugan candy.

**தெ.** புல்லகண்டமு

*[ புல் → புல்ல + கண்டம். தென்னை, பனை, மூங்கில் போன்று கரும்பும் புல்லினத்தைச் சார்ந்தது. இதைப் புல் (grass)லுக்குப் பொருள் சொல்லும் போது any plant of the monocotyledonous family Gramineae, the most important to man in the vegetable kingdom, with long, narrow leaves and tubular stems, including wheat and other cereals, reeds (but not sedges), bamboo and sugar-cane என்று சேம்பரார் ஆங்கில அகரமுதலி குறித்துள்ளதைக் காண்க. ]*

**புல்லகண்டம்**[2] *pullagaṇḍam,* பெ.(n.) கருப்பஞ்சாறு; juice of sugarcane.

*[ புல் → புல்ல + கண்டம் ]*

**புல்லகம்** *pullagam,* பெ. (n.) மகளிர் தலைக்கோலத்தில் ஒருறுப்பாகிய நெற்றியணி; women's ornament for the forehead,part of 'talai-k-kōlam'. *'தொய்யகம் புல்லகந் தொடர்ந்த தலைக்கணி'* (சிலப்.6,107).

*[புல்லுதல்= பொருந்துதல். புல் → புல்லகம்= நெற்றியோடு பொருந்தியிருக்கும் அணி ]*

**புல்லங்கண்டம்** *pullaṅkaṇḍam,* பெ. (n.) சருக்கரைக்கட்டி; jaggery.

**மறுவ.** மண்டை வெல்லம்

*[ புல் → புல்லம் + கண்டம் ]*

**புல்லங்காடனார்** *pullaṅgāḍaṉār,* பெ. (n.) 5 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்; a poet of fifth century.

இவர் கைந்நிலை என்ற நூலை இயற்றியுள்ளார்

**புல்லட்டை** *pul-l-aṭṭai,* பெ. (n.) பயிரையழிக்கும் பூச்சிவகை (இ.வ.); slug species of vaginula.

*[ புல் + அட்டை. ஒட்டு → அட்டு → அட்டை ]*

**புல்லடை** *pulladai,* பெ (n.) அப்பம்; rice-cake.

**புல்லணர்** *pul-l-aṇar,* பெ. (n.) *புல்லணல் (யாழ்.அக)* பார்க்க; see *pullaṇal.*

*[ புல் +அணல் – புல்லணல் → புல்லணர் ]*

**புல்லணல்** *pullaṇal,* பெ. (n.) இளந்தாடி; down on the chin. 'புல்லணற்காளை ' (புறநா.258.)

*[ புல் +அணல். அண் → அணல் ]*

**புல்லணை¹** *pul-l-aṇai,* பெ. (n.) புற்படுக்கை (வின்); bed of grass.

*[ புல் +அணை. அள் → அண் → அண → அணை = இருக்கை,மெத்தை, படுக்கை ]*

**புல்லணை²** *pul-l-aṇai,* பெ. (n.) முன்னிட்டி (புதுவை.); manger, crib.

*[ புல் + அணை ]*

**புல்லம்¹** *pullam,* பெ. (n.) 1.எருது; bull. *'புல்லமேறிதன் பூம்புகலியை'* (தேவா. 76,11.) 2. விடையோரை (சூடா.); taurus of the zodiac.

*[புல் → புல்லம். திரண்ட உருவமுடையது ]*

**புல்லம்²** *pullam,* பெ. (n.) வசைமொழி; abuse. *'புல்லம்பேசியும்'* (தேவா. 380,6.).

*[ புல்லுதல்=துளைத்தல். புல்= சிறுமை, இழிவு. புல்→புல்லம்=இழிவுபடக் கூறும் வசவு, ]*

**புல்லம்³** *pullam,* பெ. (n.) பூ (யாழ்.அக.); flower.

*[ புல் → புலர். புலர்தல் = தெளிதல், வடிதல். புல்→ புல்லம் = (இதழ்)விரிந்த பூ ]*

**புல்லமருது** *pullamarudu,* பெ. (n.) மரவகை; paniculate winged myrobalan.

**புல்லர்¹** *pullar,* பெ. (n.) வேடர்(சது.); hunters.

க. புளுங்கார (வலை விரித்துப் பறவைகளைப் பிடிப்பவன்)

*[ வில் → வில்லர் = வில்லேந்தி வேட்டையாடுபவர், வேடர். வில்லர் → பில்லர் → புல்லர். ]*

**புல்லர்²** *pullar,* பெ. (n.) சிறுமைக்குணமுடையவர்; mean or petty-minded person.

*[ புல் → புல்லர். புல் = சிறுமை. எ.கா. புன்மை, புல்லியர், புன்செய், புன்செயல், புன்னகை (ஒ.மொ.2,96.) ]*

**புல்லரி¹–த்தல்** *pul-l-ari-,* 4 செ.கு.வி. (v.i.) 1. மயிர்க்கூச்செறிதல்; to make the flesh creep; to horripilate. 2. மாடு முதலியன உணவு விருப்பமின்றிப் புல்லைத் துழாவுதல்; to show aversion towards fodder, as cattle. *'மாடு தீவனந் தின்னாது புல்லரிக்கும்'* (மாட்டுவா.88.).

மறுவ. மயிர்க்கூச்செறிதல்

தெ. புல்லரி

*[ புல்+அரி–, அரித்தல் = தினவெடுத்தல் ]*

**புல்லரி²** *pullari,* பெ. (n.) புற்கட்டு; sheaf of grass.

*[ புல் + அரி. அரி = கதிர்க்கட்டு. ]*

**புல்லரி³** *pullari,* பெ. (n.) மேய்ச்சல்வரி; tax on grazing fine levied on stray cattle (C.G).

தெ.புல்லரி

*[ புல்வரி → புல்லரி ]*

**புல்லரிச்சாவி** *pullari-c-cāvi-,* பெ. (n.) புல்முளையாத காலத்துச் செய்யும் வரிநீக்கம்; remission of tax when grazing lands become barren or devoid of grass (C.G).

*[ புல்லரி + சாவி ]*

**புல்லரிசி** *pul-l-ariśi,* பெ. (n.) வற்கட (பஞ்ச)க் காலத்தில் ஏழைகள் உண்ணும் அரிசிபோன்ற தவசம் (புறநா.248 உரை); grain of cluster grass eaten in time of scarcity.

*[ புல்லுதல் = துளைத்தல். புல்= உட்டுளை யுள்ள நிலைத்திணைவகை புற்போன்ற கம்பம், புல்லரிசி (வேக.3,101) புல் +அரிசி ]*

**புல்லரிப்பு** *pul-l-arippu,* பெ. (n.) உணர்வின்மி குதியால் தோலில் ஏற்படும் சிலிர்ப்பு நிலை, புல்லரிக்கிற நிலை; thrilling, exciting (state). புல்லரிப்பை ஏற்படுத்தும் நிகழ்ச்சி.

*[ புல் + அரிப்பு ]*

**புல்லரிவரி** *pullari-vari,* பெ. (n.) *புல்லரி²* பார்க்க; see *pullari²* (C.G.).

*[ புல்லரி + வரி ]*

**புல்லரிவாள்** *pullarivāḷ,* பெ. (n.) நெற்பயிரினிடையிலுள்ள புல்லையறுக்கப் பயன்படுத்தும் பன்னறுவாள்; a kind of sickle.

*[ புல் + அரிவாள். அரிதல் = சிறிது சிறிதாக அறுத்தல். வள் → வாள் = வளைந்த கத்தி ]*



**புல்லல்** *pullal,* பெ. (n.) *புல்கல்* பார்க்க; see *pulgal*.

மறுவ. மருவுதல், நண்ணல், சார்தல், அணுகல், அருகுதல், சிவணல், துன்னல், அண்ணல். தழுவுதல், கட்டிப்பிடித்தல்

*[ புல் → புல்லல் ]*

**புல்லவட்டக்காசு** *pullavaṭṭa-k-kāśu,* பெ. (n.) பழைய காசுவகை (பணவுடு. 114); an ancient coin.

*[ புல்லவட்டம் + காசு ]*

**புல்லவம்** *pullavam,* பெ. (n.) சிறுநாவல் மரம்; a tree.

*[புல் → புல்லவம் ]*

**புல்லவை** *pullavai,* பெ. (n.) சிறியோர் (கல்வியறிவு குறைந்தோர்) அவை; council of less learned. 'புல்லவையுள் பொச்சாந்தும்' (குறள்,719.)

*[ புல் + அவை]*

**புல்லற்கூறு—தல்** *pullaṟ-kūṟu-,* 5 செ.கு.வி. (v.i.) ஏசுதல்; to abuse, revile.

'தலைமகள் பரத்தையைப் புல்லற் கூறியது' (பு.வெ. 12, பெண்பாற். 10, கொளு, உரை.).

*[ புல் → புல்லம் = வசைமொழி. புல்லல் + கூறு–, ]*

**புல்லறிவர்** *pul-l-arivar,* பெ. (n.) *புல்லறிவாளர்* (நிகண்டு) பார்க்க; see *pullarivāḷar.*

*[ புல் = சிறுமை, இழிவு. புல் + அறிவர். அறிவு → அறிவர் ]*

**புல்லறிவாண்மை** *pul-l-arivāṇmai,* பெ. (n.) அறிவின்மை (குறள், அதி.5.); low understanding, ignorance.

*[ புல் + அறிவு + ஆண்மை ]*

**புல்லறிவாளர்** *pul-l-arivāḷar,* பெ. (n.) மேம்போக்கான அறிவுடையவன் (குறள், 841, உரை); men of low understanding; foolish men; shallow pretenders to knowledge.

*[ புல் + அறிவு + ஆளர் ]*

**புல்லறிவினார்** *pul-l-arivinār,* பெ. (n.) *புல்லறிவாளர்* பார்க்க; see *pullarivāḷar.* *'வாழ்நாளைப் போக்குவார் புல்லறிவினார்'* (நாலடி, 327.).

*[ புல் + அறிவினார் ]*

**புல்லறிவு** *pul-l-arivu,* பெ. (n.) அறியாமை; ignorance, little knowledge. *'புல்லறிவு காட்டி விடும்'* (நாலடி, 314.).

*[ புல் = சிறுமை, இழிவு. புல் + அறிவு ]*

**புல்லறுகு** *pul-l-arugu,* பெ. (n.) அறுகு வகை (இ.வ.); a variety of bermuda grass.

*[ புல் + அறுகு. ]*

**புல்லன்** *pullan,* பெ. (n.) **1.** அறிவற்றவன்; ignorant person; **2.** இழிந்தவன்; vile, base person. *'கல்லாப் புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளென'* (கம்பரா. தாடகை. 72). **3.** ஒழுக்க மில்லாதவன்; man without character.

*[ புல் → புன்மை = சிறுமை, இழிவு. புல் → புல்லன். 'அன்'. ஆ.பா.ஈறு. ]*

**புல்லா** *pullā,* பெ. (n.) ஆறடி கொண்ட நீட்டலளவைக் கோல் (வின்.); six foot rod, used as a linear measure.

க.புள்ளெ; **தெ.** புல்ல; **து.** புல்லே

*[புல் →பல்= பல்காற் பறவை. புல்→ புது → புதா → புதை= அம்புக்கட்டு. புல் → புல்லா = திரண்டகோல், அளவு கோல்]*

**புல்லாக்கு** *pullākku,* பெ. (n.) *புலாக்கு* பார்க்க; see *pulākku.*

*[ புலாக்கு → புல்லாக்கு. ]*

**புல்லாங்கழி** *pullāṅ-kaḻi,* பெ. (n.) *புல்லாங்குழல்* பார்க்க; see *pullāṅ-kuḻal.*

*[ புல் = உட்டுளையுள்ள நிலைத்திணை வகை, உட்டுளையுள்ள மூங்கில். புல் + ஆம் + கழி. புல்லாங்கழி = மூங்கில் கழியால் செய்யப்பட்ட இசைக்கருவி. ]*

**புல்லாங்குழல்** *pullāṅ-kuḻal,* பெ. (n.) ஒருபுறம் அடைப்பும் குழலில் வாய் வைத்து ஊத ஒருதுளையும், வாயால் ஊதிய காற்று வெவ்வேறு வகைகளில் வெளியேறுவதற்கு ஏற்ப ஆறுமுதல் எட்டுத்துளைகளும் உடைய ஒரு இசைக் கருவி ; flute.

ம. புல்லாங்குழல்

[ புல் + ஆம் + குழல். புல் = உட்டுளை, உட்டுள்ளயுள்ள பயிர்வகை அல்லது மூங்கில். புல்லாங் குழல் = மூங்கிற் குழல் (த.வ. 1, 69.) ]



**புல்லாஞ்சி** *pullāñji*, பெ. (n.) செடிவகை; a plant. *'புல்லாஞ்சிப் பழமும்'* (இராசவைத். 143).

**புல்லாடவன்** *pullāḍavaṉ*, பெ. (n.) *புல்லாள், 1* பார்க்க; see *pullāḷ 1*. *'புல்லாடவனை யறியா திரையென'* *(துணிகைப்பு. களவு. 415.).*

*[ புல் + ஆடவன் ]*

**புல்லாணி** *pullāṇi*, பெ. (n.) திருப்புல்லாணி; Tirumāl shrine. புன்னை முத்தம் பொழில் சூழ்ந்து அழகாயப் புல்லாணியே (நாலா. 1768)

*[புல் + அணை – புல்லணை → புல்லாணி]*

இராமன் புல்லணை மேல் கிடந்து வருணனை வேண்டிய இடம் என்று தொல்கதை வழங்குகின்றது.

**புல்லாந்தி** *pullāndi*, பெ. (n.) பூலா (தைலவ. தைல.); a large, often scandent shrub.

**புல்லாநீர்** *pullānīr*, பெ. (n.) அரத்தம்; blood.

**புல்லாம்பாசி** *pullām-pāśi*, பெ. (n.) பாசிவகை (இ.வ.); a kind of moss.

*[ புல் + ஆம் + பாசி ]*

**புல்லாம்பூச்சி** *pullāmpūcci*, பெ. (n.) *புல்லாமொய்ச்சி (இ.வ.)* பார்க்க; see *pullā-moycci.*

*[ புல்லாம் + மொய்ச்சி – புல்லாம்மொய்ச்சி → புல்லாம்பூச்சி ]*

**புல்லாமகம்** *pullāmagam*, பெ. (n.) சேவகனார் கிழங்கு; a kind of medcinal root.

**புல்லாமணக்கு** *pul-l-āmaṇakku*, பெ. (n.) நீர்ப்பனை; creeping aumanac. (M.M. 55).

*[ புல் + ஆமணக்கு ]*

**புல்லாமொய்ச்சி** *pullā-moycci*, பெ. (n.) புல் நிறைந்த தரை (கொ.வ.); grassy ground.

*[ புல் + ஆம் + மொய்ச்சி. மொய் → மொய்ச்சி ஒ.நோ: காய் → காய்ச்சி ]*

**புல்லார்¹–தல்** *pul-l-ār-*, 3 செ.கு.வி. (v.i.) (புல்லைத் தின்னுதல்) தோல்வியுறுதல்; lit. to eat grass to submit, surrender. *'பகைவர் புல்லார்க'* (ஐங்குறு. 4).

*[ புல் + ஆர்–, ]*

புல்லார்தல் என்னும் வழக்கு மற்போரில் தோற்றுப் போனவன் சிறிது புல்லைத் தின்ன வேண்டுமென்று இருந்ததாகத் தெரிய வருகின்றது. (சொ.க. 23)

ஒ.நோ: மண்ணைக் கவ்வுதல்

**புல்லார்²** *pullār*, பெ. (n.) பகைவர் (திவா.); foes, enemies.

*[ புல்லு + ஆ + அர். 'ஆ' எ.ம. இடை நிலை.*

*புல்லார் = நட்புச் செய்யும் தன்மை இல்லாதவர், இகலுபவர் ]*

**புல்லாவிரை** *pullāvirai,* பெ. (n.) செடிவகை (இ.வ.); a plant.

**புல்லாள்**[1] *pul-l-āḷ,* பெ. (n.) **1.** புல்லுரு பார்க்க; see pulluru. *'புல்லாளைச் செய்து கொல்லையிலே வைத்தாற் போலே'* (இராமநா. கிட்கி. 5). **2.** ஆறலை கள்வன்; highway robber. *'புலவு வில்லுழவிற் புல்லாள் வழங்கும்'* (பதிற்றுப். 15, 12).

*[ புல் + ஆள் ]*

**புல்லாள்**[2] *pul-l-āḷ,* பெ. (n.) புல்வெட்டிக் கொணருங் கூலியாள் (இ.வ.); grass-cutter.

*[ புல் + ஆள் ]*

**புல்லி** *pulli,* பெ. (n.) **1.** புறவிதழ் (பிங்.); external petal of a flower, opp. to alli. **2.** பூவிதழ் (சங்.அக.); petal of a flower.

*[ புல் → புல்லி ]*

**புல்லிகம்** *pulligam,* பெ. (n.) சிறுதேக்கு; bushy fire brand teak.

**புல்லிகை** *pulligai,* பெ. (n.) கன்னசாமரை (கலித். 96, 11, உரை.); tassels for horse's ears.

*[ புல்லி → புல்லிகை ]*

**புல்லிகைச்சாமரை** *pulligai-c-cāmarai,* பெ. (n.) *புல்லிகை* பார்க்க; see *pulligai. 'மென் காதின் புல்லிகைச் சாமரை'* (கலித். 96).

*[ புல்லிகை + சாமரை ]*

**புல்லிடைமூலி** *pulliḍai-mūli,* பெ. (n.) மூலிகை வகையு ளொன்று; a herb.

**புல்லிண்டல்** *pullinḍal,* பெ. (n.) பேய்க்கரும்பு; wild sugarcane.

**தெ.** புல்லகண்ட (ஒருவகைக்கிழங்கு)

*[ புல்லகண்டம் → புல்லிண்டல் ]*

**புல்லிதழ்** *pul-l-idaḻ,* பெ. (n.) *புல்லி* பார்க்க; see *pulli. 'மலரி னகவிதழொடு புல்லிதழு மொன்றுதல்'* (சிவப். பிர. சோண. 50.).

*[ புல் + இதழ் ]*

**புல்லிது** *pullidu,* பெ. (n.) பூ (யாழ்.அக.); flower.

*[ புல் → புல்லிது ]*

**புல்லியம்** *pulliyam,* பெ. (n.) *புளிநரளை (மலை.)* பார்க்க; see *puḷinaraḷai.*

**புல்லியார்** *pulliyār,* பெ. (n.) இழிந்தவர்; low, base persons. *'பரத்தையருள்ளும் புல்லியாரை விரும்புவான்'* (ஐங்குறு. 164, உரை.).

*[ புல்= சிறுமை, இழிவு. புல் → புல்லியார் = இழிகுணமுடையார் ]*

**புல்லிலைவைப்பு** *pul-l-ilai-vaippu,* பெ. (n.) இலைகளால் வேயப்பட்ட குடிசை களையுடைய ஊர்; village of leafy huts. புல்லான்வழங்கும் புல்லிலைவைப்பான் (பதிற்றுப்.15,13.).

*[ புல் + இலை + வைப்பு ]*

**புல்லிவட்டம்** *pulli-vaṭṭam,* பெ. (n.) பூவின் வெளிவரிசை இதழ், புறவிதழ்; sepals (of flower)

*[ புல்லி+ வட்டம் ]*



**புல்லினத்தாயன்** *pullinattāyan,* பெ. (n.) ஆட்டிடையன்; shepherd. *'புல்லினத் தாயனை நீயாயின்'* (கலித். 113.).

*[ புல்லினம் + அத்து + ஆயன். 'அத்து' சாரியை ]*

**புல்லினத்தான்** *pullinattān,* பெ. (n.) புல்லினத்தாயன் (கலித். 107) பார்க்க; see pullinattāyan.

*[ புல்லினம் + அத்து + ஆன். 'அத்து' சாரியை. 'ஆன்' ஆ.பா.ஈறு ]*

**புல்லினம்** *pul-l-inam,* பெ. (n.) ஆட்டினம்; goats and sheep, dist. fr. nallinam. *'புல்லினத் தார்க்கும் குடஞ்சுட் டவர்க்கும்'* (கலித். 107.).

*[ புல் + இனம். நல்லினம் = ஆநிரை. அதற்கு எதிரானது அதாவது சிறுமையான ஆட்டினம். ]*

**புல்லீரம்** *pul-l-īram,* பெ. (n.) சிறு ஈரம்; slight moisture. *'புல்லீரம் போழ்தி னுழவே போல்'* *(நாலடி, 115.).*

*[ புல் = சிறுமை, சிறுதன்மை. புல் + ஈரம் ]*

**புல்லு[1]–தல்** *pullu-,* 6 செ.குன்றாவி. (v.t.) 1. தழுவுதல்; to embrace *'என்னாகம்..... புல்லி'* (பு.வெ. 9, 49) 2. புணர்தல்; to copulate. தம்மைப் புலந்தாரைப் புல்லாவிடல் (குறள், 1303.) 3. பொருந்துதல்; to agree, suit. *'அல்லா வாயினும் புல்லுவவுளவே'* (தொல். பொ. 221) 4. வரவேற்றல்; to receive warmly. *'புல்லா வகம் புகுமின்...... என்பவர் மாட்டு'* (நாலடி, 303) 5. ஒத்திருத்தல்; to resemble equal. *'புத்தே ளுலகிற் பொன்மரம் புல்ல'* (தொல். பொ. 289, உரை.) 6. ஒட்டுதல் (வின்.); to cling to; to join.

*[ உல் → புல் → புல்லு– ]*

**புல்லு[2]–தல்** *pullu-,* 6 செ.கு.வி. (v.i.) நட்புச் செய்தல்; to contract friend-ship. *'ஒல்லா ரிடவாயிற் புல்லிய பாங்கினும்'* (தொல். பொ. 76, உரை.).

*[ புல் → புல்லு. (வே.க. 3,62) ]*

**புல்லு[3]** *pullu,* பெ. (n.) *புல்[1]* பார்க்க; see *pul[1]*.

க. புல்லு

*[ புல் → புல்லு ]*

**புல்லு[4]** *pullu,* பெ. (n.) 1. கிட்டிப்புள் (கொ.வ.); the cat in the game of tipcat. 2. கொடியின் தாங்கு கட்டை (இ.வ.); wooden toggle of a clothes - line.

*[ புல்லுதல் = பொருந்துதல். புல் → புல்லு ]*

**புல்லுக்கட்டு** *pullu-k-kattu,* பெ. (n.) புற்கட்டு; bundle of grass. *'புல்லுக் கட்டும் விறகுஞ் சுமந்தபேர்'* (தனிப்பா. i, 266.).

மறுவ. அரிகெடை, அரிகட்டு.

க. பூமாழ

*[ புல் → புல்லு + கட்டு ]*

**புல்லுக்கட்டை** *pullu-k-kaṭṭai,* பெ. (n.) அறுத்து விட்ட புல்லின் அடிப்பாகம் (வின்.); stubble of grass.

*[ புல்லு + கட்டை ]*

**புல்லுக்கற்றை** *pullu-k-kaṟṟai,* பெ. (n.) புல்லுத்திரள் (யாழ்.அக.); grass-pile.

**மறுவ.** அரிகெடை, அரிதாள்

*[ புல் → புல்லு + கற்றை ]*

**புல்லுக்காரி** *pullu-k-kāri,* பெ. (n.) புல் விற்பவள்; woman who gathers and sells grass.

*[ புல் → புல்லு + காரி ]*

**புல்லுக்குருவி** *pullu-k-kuruvi,* பெ. (n.) காடைவகை (வின்.); kind of quail.

*[ புல் → புல்லு + குருவி ]*



**புல்லுச்சத்தகம்** *pullu-c-cattagam,* பெ. (n.) *புல்வாரி (யாழ்.அக.)* பார்க்க; see *pul-vāri.*

*[ புல் → புல்லு + சத்தகம் ]*

**புல்லுச்செதுக்கி** *pullu-c-cedukki,* பெ. (n.) 1. புல்லைச் செதுக்குங் கருவி; grass-hoe. 2. பாவிலுள்ள சிக்கல்களை எடுக்குங் கருவி; weaver's brush.

**மறுவ.** புல்வெட்டி.

*[ புல் → புல்லு + செதுக்கி ]*



**புல்லுத்தடுக்குஞ்சூரைக்கொடி** *pullu-t-taḍukkuñ-cūrai-k-koḍi,* பெ. (n.) செடிவகை (இ.வ.); a shrub.

*[ புல் → புல்லு + தடுக்கும் + சூரைக்கொடி ]*

**புல்லுத்தரை** *pullu-t-tarai,* பெ. (n.) புற்படர்ந்த நிலம்; pasture, meadow.

**து.** புல்லடி.

*[ புல் → புல்லு + தரை ]*

**புல்லுநர்** *pullunar,* பெ. (n.) நண்பர் (சூடா.); friends.

*[ புல்லுதல் = பொருந்துதல், தழுவுதல், நட்புச் செய்தல். புல் → புல்லுநர் = நட்புச் செய்பவர், நண்பர் ]*

**புல்லுநீர்** *pullu-nīr,* பெ. (n.) வெண்ணீர் (விந்து நீர்); semen.

*[ புல்(லு) + நீர் ]*

**புல்லுப்பற்றை** *pullu-p-parrai,* பெ. (n.) புல்வளர்ந்த மண்கட்டி(கொ.வ.); turf, sod.

*[ புல் → புல்லு + பற்றை ]*

**புல்லுப்பிடி—த்தல்** *pullu-p-pidi-,* 4 செ.கு.வி. (v.i.) புல்லடர்ந்து விடுதல் (வின்.); to be over grown with grass.

**மறுவ.** கோரைப்பற்றுதல்

*[ புல் → புல்லு + பிடி—, ]*

**புல்லுமாறு** *pullumāru,* பெ. (n.) ஊகம் புல்லாலான துடைப்பம் (நெல்லை.); broom made of a kind of grass.

**மறுவ.** பூந்துடைப்பம், சீவு துடைப்பம்.

*[ புல் → புல்லு + மாறு ]*

**புல்லுமேய்[1]—தல்** *pullu-mēy-,* 3 செ.கு.வி. (v.i.) புல்லாற் கூரை போடுதல் (வின்.); to thatch.

**மறுவ.** கூரைவேய்தல்.

*[ புல் → புல்லு + மேய்—,]*

**புல்லுமேய்[2]—தல்** *pullu-mēy-,* 3 செ.கு.வி. (v.i.) புல்லுத்தின்னுதல்; to graze.

*[ புல் → புல்லு + மேய்—, மே → மேல், மே → மேய் = புல்லின் மேற்பகுதியை (விலங்கு) தின்னுதல் ]*

**புல்லுமேய்[3]—த்தல்** *pullu-mēy-,* 4 செ. குன்றாவி. (v.t.) ஆடுமாடுகளைப் புல்லுத் தின்னச் செய்தல்; to graze.

*[ புல் → புல்லு + மேய்—. மேய்தல் (த.வி.) – மேய்த்தல் (பி.வி.) ]*

**புல்லுயிர்** *pul-l-uyir,* பெ. (n.) (சிறுஉயிர்) குழந்தை; lit, little life, child. *'புல்லுயிர் தன்னோடு நின்றுழி'* (சீவக. 332.).

*[ புல் + உயிர் ]*

**புல்லுரு** *pul-l-uru,* பெ. (n.) பயிரையழிக்கும் விலங்கு பறவை முதலியன வெருவியோடும் படி புல்லாற் செய்து புலத்தில் வைக்கப்பட்ட உருவம்; scare crow made of grass. *'மாபறவை புல்லுரு வஞ்சுவபோல்'* (நீதிநெறி. 23.).

**மறுவ.** சோளக்கொல்லை பொம்மை.

*[ புல் + உரு ]*

**புல்லுருவி** *pulluruvi,* பெ. (n.) 1. மரஞ் செடிகளில் ஒட்டி வளரும் பூடுவகை; honey suckle mistletoe. *'கீரைக்குப் புல்லுருவி கீழே முளைத்தாற் போல்'* (இராம நா. அயோத். 20.) 2. பயிரோடு கலந்திருக்கும் புல்; tares. 'புல்லுருவியை யெல்லாம் களைந்தால்தான் பயிர் செழிக்கும்' (உ.வ.) 3. பிறர் உழைப்பைச் சார்ந்து தன் பிழைப்பினை மேற்கொள்பவன்; a man of parasitic nature. நல்லவர்களுக்கு நடுவில் புல்லுருவியாக இருக்கும் இவன் யார்? (உ.வ.).

*[ புல் + உருவி. உருவு → உருவி ]*

**புல்லுருவியம்மன்** *pulluruvi-y-amman,* பெ. (n.) சின்னம்மை; chicken pox (M.L.).

*[ புல்லுருவி + அம்மன் ]*

**புல்லுருவிவேர்** *pulluruvi-vēr,* பெ. (n.) குருவிச்சை வேர்; roots of parasitic plant.

*[ புல்லுருவி + வேர் ]*

**புல்லுவரி** *pullu-vari,* பெ. (n.) மேய்ச்சல் வரிவகை; a grazing tax. (G.T.D. **1, 211.**).

*[ புல் → புல்லு + வரி ]*

**புல்லுவேய்–தல்** *pullu-vēy-,* 3 செ.கு.வி. (v.i.) *புல்லுமேய்–தல்* பார்க்க; see *pullu-mēy-,*

*[ புல் → புல்லு + வேய். மேய் → வேய் ]*

**புல்லுளி** *pulluḷi,* பெ. (n.) *புல்லுருவி (கொ.வ.)* பார்க்க; see *pulluruvi.*

*[ புல் → புல்லுளி ]*

**புல்லுளுவை** *pulluḷuvai,* பெ. (n.) ஆறடி பத்துவிரல நீளம் வளர்வதும் மங்கல் நிறமுள்ளதுமான கடல்மீன் வகை; a kind of sea-fish, dull brown in colour, attaining 6ft 10 in length.

*[ புல் → புன்மை = புகர்நிறம், புல் + உளுவை]*



**புல்லுறு–த்தல்** *pulluṟu-,* 4 செ.குன்றாவி. (v.t.) நிகழ்த்துதல்; to cause to occur, to perform. *'மேலைநாள் புல்லுறுத்ததியாவும்'* (கம்பரா. சடாயுகாண். 43.).

*[ புல் → புல்லு + உறு–, ]*

**புல்லூகி** *pullūgi,* பெ. (n.) மிதித்தவர்களை மயங்கச் செய்யும் பூண்டு; a plant that bewilders persons trampling on it.

மறுவ. திகைப்பூடு.

**புல்லூதியம்** *pullūdiyam,* பெ. (n.) பனை (மலை.); palmyra palm.

*[ புல் = உட்டுளையுள்ள நிலைத்திணை வகை, (உட்டுளையுள்ள புல்) பனை. புல் → புல்லூதியம் ]*

**புல்லூரி[1]** *pullūri,* பெ. (n.) *புல்லுருவி* பார்க்க; see *pulluruvi.*

*[ புல்லுருவி → புல்லூரி ]*

**புல்லூரி[2]** *pullūri,* பெ. (n.) கருங்குட்டத்தைப் போக்கும் மூலிகை; a herb that cures the disease that turns the skin black.

**புல்லூறு** *pullūṟu,* பெ. (n.) பறவை வகை (பிங்.) (பதிற்றுப். 165. அரும்.); a kind of bird.

**புல்லெடு–த்தல்** *pul-l-eḍu-,* 4 செ.கு.வி.(v.i.) பயிரினிடையிலுள்ள களை பறித்தல்; to weed out.

மறுவ. புல்பிடுங்கல், களையெடுத்தல்

*[ புல் + எடு–, புல் = களை ]*

**புல்லெண்ணெய்** *pul-l-eṇṇey,* பெ. (n.) புற்களினின்றெடுத்த நறுமண எண்ணெய் (வாசனைத் தைல) வகை (இ.வ.); oil distilled from grasses, used in perfumery; grass-oil.

*[ புல் + எண்ணெய் ]*

**புல்லெழு–தல்** *pul-l-eḻu-,* 3 செ.கு.வி. (v.i.) (புல்லுண்டாதல்) ஆள்வழக்கறுதல்; lit, to be overgrown with grass; to become deserted. *'நரகமெல்லாம் புல்லெழுந் தொழியும்'* (திவ். திருமாலை. 13.).

*[ புல் + எழு–, ]*

**புல்லெனல்** *pul-l-eṉal,* பெ. (n.) 1 பொலிவழிதற் குறிப்பு; expr. signifying ruined condition, loss of splendour. *'அரங்கு புல்லென்னப் போகி'* (சீவக, 2531.) 2 இழிவுபாட்டுக் குறிப்பு; expr. signifying worthlessness.

*[ புல் + எனல் ]*

**புல்லை** *pullai,* பெ. (n.) மங்கல் நிறம் (வின்.); dull, yellowish colour.

ம., க., தெ., புல்ல.

*[ புல் → புன்மை = புகர்நிறம், மங்கலான பார்வை. புல் → புல்லை]*

**புல்லைக்காளை** *pullai-k-kāḷai,* பெ. (n.) மங்கல் நிறமுள்ள எருது; dull yellowish bull, dull-coloured bull.

*[ புல்லை + காளை ]*

**புல்லொலி** *pulloli,* பெ. (n.) *புல்லுருவி* பார்க்க; see *pulluruvi.*

**புல்லொளி** *pul-l-oḷi,* பெ. (n.) வெள்ளென்ற விடியற் காலம் (புதுவை.); early dawn, twilight.

மறுவ. வெள்ளணம் (நெல்லை.)

*[ புல் + ஒளி ]*

**புல்வரகு** *pul-varagu,* பெ. (n.) தவசவகை (யாழ்.அக.); a kind of millet.

மறுவ. வரகரிசி.

*[ புல் + வரகு ]*

**புல்வரி** *pul-vari,* பெ. (n.) மேய்ச்சல் வரி; tax on grazing; fine levied on stray cattle.

*[ புல் + வரி ]*

**புல்வழி** *pul-vaḻi,* பெ. (n.) புல்லடர்ந்த வழி; a grassy path.

க. புலுவட்டெ, புலுபட்டெ; பட. குல்லுதாரி.

*[ புல் + வழி ]*

**புல்வாடி** *pul-vāḍi,* பெ. (n.) புல்விற்குமிடம் (யாழ்.அக.); grass depot.

*[ புல் + வாடி ]*

**புல்வாண்டைக்காசு** *pul-vāṇḍai-k-kāšu,* பெ. (n.) சிறுகாசு (நாணய) வகை; a small coin. *'புல்வாண்டைக் காசு மில்லையென்று கரைவாரும்'* (விறலிவிடு. 373.).

**புல்வாய்** *pul-vāy,* பெ. (n.) கலைமான்; deer, antelope. *'புல்வாய் புலியுழை மரையே கவரி'* (தொல். பொ. 590.).

க. புல்லெ, குல்லெ

*[ புல் + வாய் ]*



**புல்வாரி** *pul-vāri,* பெ. (n.) **1.** புல்லறுக்கும் அரிவாள் (யாழ்.அக.); sickle for cutting grass. **2.** புல்லை வாரும் கருவி; வறண்டி, வைக்கோல் வாரி; rake.

**மறுவ.** ஆக்கறுவாள்.

*[ புல் + வாரி ]*

**புல்விரியன்** *pul-viriyan,* பெ. (n.) விரியன் பாம்பு வகை; grass adder, small viper. (M.M.).

*[ புல் + விரியன் ]*

**புல்வீடு** *pul-vīḍu,* பெ. (n.) புல்வேய்ந்த கூரையுள்ள குடிசை (வின்.); thatched house.

**மறுவ.** புற்குரம்பை.

**க.** புல்மனெ, புல்வனெ

*[ புல் + வீடு ]*

**புல்வெட்டிப்பல்** *pul-veṭṭi-p-pal,* பெ. (n.) மாட்டின் முன்வாய்ப் பல்; front teeth of cattle; incisors.

*[ புல் + வெட்டி + பல் ]*

**புல்வெளி** *pul-veḷi,* பெ. (n.) புல் அடர்ந்து வளர்ந்திருக்கும் நிலப்பரப்பு; pasture, medow. நகரத்தில் புல்வெளி இருக்க வாய்ப்பு இல்லை. (உ.வ.)

**ம.** புல்புறம்; **து.** புலவாட், புலாடி.

*[ புல் + வெளி. ]*

**புல்வேய்குரம்பை** *pul-vēy-kurambai,* பெ. (n.) புல்வீடு பார்க்க; see pulvīḍu. *'குன்றக் குறவன் புல்வேய் குரம்பை'* (ஐங்குறு. 252.).

*[ புல் + வேய் + குரம்பை. மே = மேல். மே → மேய்.மேய்தல் = விலங்கு புல்லின் மேற் பகுதியைத் தின்னுதல், கூரையின் மேல் வைக்கோலிடுதல். மேய் → வேய். வேய்தல் = கூரையின் மேல் வைக்கோலிடுதல். ]*

**புல¹–த்தல்** *pula-,* 4 செ.கு.வி. (v.i.) **1.** மனம் வேறுபடுதல்; to pout, sulk; to be displeased. *'புலத்தலு மூடலு மாகியவிடத்து'* (தொல். பொ. 157.) **2.** துன்புறுதல்; to suffer pain. *'போகும் புழையுட் புலந்து'* (ஏலாதி, 11).

*[ புல் → புர் → புரள். புரளுதல் = உருளுதல், மாறுபாடடைதல். புல் → புல (மு.தா. 206) ]*

**புல²–த்தல்** *pula-,* 4 செ.குன்றாவி. (v.t.) வெறுத்தல்; to dislike. "பலபுலந்து" (பொருந. 175).

*[ புல் → புல–, ]*

**புல³–த்தல்** *pula-,* 4 செ.குன்றாவி. (v.t.) அறிவுறுத்துதல்; to make known; to instruct. *'புலக்க வேண்டுறுமக் காதை'* (உபதேசகா. சிவத்துரோ. 264).

*[ புல்லுதல் = பொருந்துதல். புல் → புலம் = ஐம்பொறிகள் பொருள்களொடு பொருந்தி அறியும் அறிவு. புல் → புல ]*

**புல⁴** *pula,* பெ. (n.) புலவு² 2. 3, பார்க்க; see pulavu² 2. 3, *'புலவேல் வானவன்'* (பு. வெ. 10, 1, கொளு).

*[ புல் → புல ]*

**புலக்கட்டுப்பாடு** *pula-k-kaṭṭu-p-pāḍu,* பெ. (n.) களக்கட்டுப்பாடு; field control.

*[ புலம் + கட்டுப்பாடு. கட்டுப்படு → கட்டுப்பாடு ]*

**புலக்கம்** *pulakkam,* பெ. (n.) வழக்கம் (யாழ்.அக.); habit.

*[ புழக்கம் → புலக்கம் (கொ.வ.) ]*

**புலக்காசு** *pula-k-kāšu,* பெ. (n.) பழைய காசு வகை (பணவிடு. 114); an ancient coin.

*[ புலம் + காசு. காய்ச்சு → காசு. ]*

**புலக்காணி** *pula-k-kāṇi,* பெ. (n.) மேட்டு நிலம் (வின்.); high elevated land.

*[ புல் → புலம் = பொருந்தியிருக்கும் நிலம், விளைநிலம் (வே.க. 3. 62). புலம் + காணி ]*

**புலங்கொள்(ளு)-தல்** *pulaṅ-koḷ(ḷu)-,* 16 செ.கு.வி. (v.i.) 1. விளங்குதல் (வின்.); to be clearly understood. 2. வெளிச்சமாதல்; to be visible; to be bright.

*[ புல் → புலம் = ஐம்பொறிகள் பொருள்களொடு பொருந்தி அறியும் அறிவு, பொறியுணர்வு (வே.க. 3. 62) புலம் + கொள். ]*

**புலங்கொளி** *pulaṅ-koḷi,* பெ. (n.) 1. உணர்வுறுப்பு (வின்.); sense-organ. 2. செய்திப் பற்றுள்ளவன் (யாழ்.அக.); epicure, sensual-man.

*[ புலம் + கொளி. கொள் + இ – கொளி ]*

**புலச்சாமை** *pula-c-cāmai,* பெ. (n.) சாமை வகை(வின்.); a kind of poor-man's millet.

*[ புலம் + சாமை ]*

**புலச்சாய்வு** *pula-c-cāyvu,* பெ. (n.) *புலச்சார்வு (வின்.)* பார்க்க; see *pula-c-cārvu.*

*[ புலச்சார்வு → புலச்சாய்வு ]*

**புலச்சார்வு** *pula-c-cārvu,* பெ. (n.) வயற்புறம் (வின்.); field and lands adjacent to fields.

*[ புலம் + சாய்வு. புலத்தைச் சார்ந்திருப்பது. சார் → சார்வு. 'வு' பெ.ஆ. ஈறு. ]*

**புலச்சி¹** *pulacci,* பெ. (n.) அறிவு நிறைந்தவள்; wise woman. *'சிவனிற் புலச்சி தனக்கு'* (திருப்பு. 123).

*[ புல் → புலம் → புலவன்(ஆ.பா.) - புலத்தி (பெ.பா.) புலத்தி → புலச்சி. ஓ.நோ. வேட்டுவத்தி → வேட்டுவச்சி (வே.க. 3. 63.) ]*

**புலச்சி²** *pulacci,* பெ. (n.) கும்பாதிரி¹; gum lac tree. (Nels.).

**புலச்செய்கை** *pula-c-ceygai,* பெ. (n.) உழவு (வின்.); agriculture, husbandry, tillage.

*[ புல் → புலம் = பொருந்தியிருக்கும் நிலம், நிலம். புலம் + செய்கை. செய் → செய்கை ]*

**புலச்சோதி** *pulaccōdi,* பெ. (n.) மாமூலிகை இருபத்து மூன்றிலொன்று; one of the 23 drugs which are considered best.

**புலத்தகை** *pula-t-tagai,* பெ. (n.) ஊடல்; sulks. *'இராகுலன் றன்னெடு புலத்தகை யெய்தினை'* (மணிமே. 10, 21).

*[புல → புலத்தகை]*

**புலத்தமரம்** *pulatta-maram,* பெ. (n.) பெருமரம்; tooth-leaved tree.

*[புல் → பல் → பல. புல் → பல் → பர் → பரு. புல் → புலத்த + மரம்]*

**புலத்தரை** *pula-t-tarai,* பெ. (n.) *புலக்காணி (வின்.)* பார்க்க; see *pulakkāṇi.*

*[புலம் → புலத்தரை]*

**புலத்தவிருக்கம்** *pulatta-virukkam,* பெ. (n.) பெருமரம் (சங்.அக.); tooth-leaved tree of heaven.

*[புல் → பல் → பல. புல் → பல் → பர் → பரு → பருமை. புல் → புலத்த + விருக்கம்.]*

Skt. vṛikṣa > த. விருக்கம்

'புலத்தமரம்' பார்க்க

**புலத்தார்** *pulattār,* பெ. (n.) குடிகள் (வின்.); inhabitants. "தென்புலத்தார்".

*[புல் → புலம் = நிலம். புலம் → புலத்தார் = (ஓரிடத்தில்) நிலையாக வாழ்பவர். 'ஆர்' ப.பா.ஈறு.]*

**புலத்தி[1]** *pulatti,* பெ. (n.) பெண் புலவர்; poet-ess.

*[புலவன் (ஆ.பா.)–புலத்தி (பெ.பா.)]*

கிழவன் என்னும் சொல் பெண்பாலிற் கிழத்தி என்றாவது போல் புலவன் என்னும் சொல் புலத்தி என்றாகும். இங்ஙனம் அமைக்காது பெண்பாற் புலவர் என்பது வழுவாம். (த.வ.288)

**புலத்தி[2]** *pulatti,* பெ. (n.) வண்ணாத்தி; washerwoman. *'அறனில்புலத்தி'* (நற்.90).

ம. புலத்தி, புலச்சி (இழிகுலப்பெண்); க. பொலத்தி (இழிகுலப்பெண்)

*[புலைத்தி → புலத்தி]*

**புலத்துறைமுற்றியகூடலூர்கிழார்** *pulatturai-muṟṟiya-kūḍalūr-kiḻār,* பெ. (n.) ஐங்குறு நூறு தொகுத்த சங்ககாலத்துப் புலவர்; an ancient poet, compiler of aiṅkuṟunūṟu.

**புலத்தோர்** *pulattōr,* பெ. (n.) அறிஞன், முனிவன்; wisemen, sages, savants. *'போத நிலைகண்ட புலத்தோர்'* (தாயு.பராபர.194).

*[புலம் + அத்து + ஓர். புல் → புலம். அத்து' சாரியை. 'ஓர்' ப.பா.ஈறு]*

**புலந்திரன்களவுமாலை** *pulandiraṉ-kaḷavu-mālai,* பெ. (n.) புகழேந்திப் புலவர் இயற்றியதாகச் சொல்லப்படுவதும் எளிய செய்யுள் நடையில் அமைந்ததுமான கதை நூல்; a popular poem, attributed to Pugaḻēndi-p-pulavar.

**புலநரம்பு** *pula-narambu,* பெ. (n.) சிறப்புணர்வைத் தூண்டும் நரம்பு; nerve which induces feelings.

*[புலம் + நரம்பு. நாளம் → (நளம்) → நரம் → நரம்பு]*

**புலநெறிவழக்கம்** *pula-neṟi-vaḻakkam,* பெ. (n.) புலவரால் கைக்கொள்ளப்படும் செய்யுள் வழக்கு (தொல்.பொ.53.); literary usage or convention, dist. fr. 'ulagiyal vaḻakku' and 'nāḍāga vaḻakku'.

*[புலம் + நெறி + வழக்கம்]*

**புலப்பங்காணல்** *pulappaṅ-kāṇal,* பெ. (n.) இசிவுநோயினாலேற்படும் பிதற்றல்; raving.

*[புலப்பம் + காணல்]*

**புலப்படு—தல்** *pula-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. தெரிதல்; to be perceived, understood. 2. வெளிப்படுதல்; to become clear or conspicuous.

*[புலம் = அறிவு, பொறியுணர்வு புலம் + படு–, புலப்படுதல் = புலனொடு பொருந்து தல். (மு.தா.183)]*

**புலப்படுத்து—தல்** *pula-p-paḍuttu-,* 12 செ.குன்றாவி. (v.t.) தெரிவித்தல்; to make clear or intelligible; to cause to be understood.

*[புலப்படு—தல் (த.வி.) – புலப்படு—த்துதல் (பி.வி).]*

**புலப்பம்[1]** *pulappam,* பெ. (n.) 1. நோய் மிகுதியால் வாய்குழறுகை; delirium. 2. பிதற்று; raving, as of a lunatic. 3. அலப்பு; chattering, babbling. '*மந்திர மோதாவாய்க்கு மட்டறாப் புலப்பம் வைத்தார்*' (குற்றா.தல. கவுற்சன.42). 4. அழுகை (கொ.வ.); crying, weeping, lamentation.

*[புலம்பு → புலப்பம்]*

**புலப்பம்[2]** *pulappam,* பெ. (n.) *புலப்பாடு (யாழ்.அக.)* பார்க்க; see *pulappāḍu.*

*[புலம் → புலப்பம்]*

**புலப்பாடு** *pula-p-pāḍu,* பெ. (n.) 1. நன்றாய்த் தெரிகை (வின்.); appearing clearly understood. 2. மட்டுக் கட்டுகை (யாழ்.அக.); adjusting, keeping within bounds.

*[புலப்படு → புலப்பாடு]*

**புலபுலப்பு** *pula-pulappu,* பெ. (n.) காய்ச்சல் நிலத்தின் புழுதித் தன்மை; looseness, as of soil.

*[புலபுல → புலபுலப்பு]*

**புலபுலெனல்** *pulapuleṇal,* பெ. (n.) விரைந்து தொடர்ந்து வருதற் குறிப்பு; expr. denoting quick succession. '*புலபுலெனக் கலகலென புதல்வர்களைப் பெறுவீர்*' (பட்டினத் திருப்பா.178).

**மறுவ.** பொலபொலவென

*[புலபுல + எனல்]*

**புலம்[1]** *pulam,* பெ. (n.) 1. வயல்; arable land, rice field மிச்சில் மிசைவான் புலம் (குறள்,85.) 2. இடம்; place, location, region, tract of country. '*புலங்கெடவிறுக்கும் வரம்பிறானை*' (புறநா.16) 3. திக்கு; quarter, point of the compass '*தென்புல வாழ்நர்க்கு*' (புறநா.9) 4. மேட்டு நிலம் (யாழ்ப்.); high land for dry cultivation.

**ம.** புலம்; **க.** பொல; **தெ.** பொலமு; **து.**புல (புல்வெளி); **பட.** கொல; **பர்.** பொலுப்; **கட.** பொலுப், பொல்லுப்; **கொலா.**பொலம்.

*[புல் → புலம். புல்லுதல் = பொருந்துதல். அடர்ந்த மரஞ்செடி கொடிகளால் இரண்டு கிடவாது வெட்டவெளியான நிலமெல்லாம் கண்ணிற்குப் புலனானதினால் புலம் எனப்பட்டது (தமி.வ.31)]*

**புலம்²** *pulam,* பெ. (n.) **1.** பொறி; sense, faculty of any organ of sense. *'புலம்பல கலங்க'* (ஞானா.27,6.) **2.** புலனுணர்வு; sensation; consciousness; perception by the sense. *'அடல்வேண்டுமைந்தன் புலத்தை'* (குறள்,343.) **3.** அறிவு; knowldege, learning, wisdom, *'நுண்மா னுழைபுலம்'* (குறள்,407.) **4.** கூர்மதி (வின்.); intellectual sharpness, wit. **5.** துப்பு; clue. (C.G.) **6.** நூல்; treatise, work. *'புலந்தொகுத்தோனே'* (தொல்.பாயி.) **7.** மறை (வேதம்); the vedas. "புலம்புரி யந்தணர் (பரிபா. 6,45).

ம.புலம்; தெ.பொலமு

*[புல் → புலம் = பொருளொடுபொருந்தும் அறிவு, அறிவுறுப்பு, அறிவுநூல் (சு.வி.36)]*

**புலம்பல்¹** *pulambal,* பெ. (n.) **1.** ஒலி (பிங்.); sound. **2.** தனிமைகூறுகை; grieving over one's loneliness. *'பாசறைப் புலம்பலும்'* (தொல்.பொ. 41, உரை). **3.** பிதற்றுகை; raving **4.** அலப்புகை; chattering; babbling **5.** அழுகை; weeping, lamenting, mourning. 'கண்டோர் பாங்கினும் போகிய திறந்து நற்றாய் புலம்பலும் (தொல்.பொ.36). **6.** அழுகைப் பாட்டு; song of lamentation. 'தெய்வத்தேவகி புலம்பிய புலம்பல் (திவ்.பெருமாள்.7,11).

மறுவ. சிலம்பர், இயம்பல், சிலைத்தல், துவைத்தல், அலம்பல், கறங்கல், அழுங்கல், தழுங்கல், சிலும்பல், கலித்தல், தெவிட்டல், கனைத்தல், கலம்புதல்.

ம. புலம்பல்

*[புலம்பு → புலம்பல். 'அல்' தொ.பெ.ஈறு]*

**புலம்பல்²** *pulambal,* பெ. (n.) மனங்கலங்கல்; being agitated in mind.

*[புலம்பு → புலம்பல். 'அல்' தொ.பெ.ஈறு]*

**புலம்பன்¹** *pulamban,* பெ. (n.) நெய்தனிலத் தலைவன்; chief or lord of maritime tract. *'மெல்லம்புலம்பன் பிரிந்தெனெ'* (ஐங்குறு.133).

தெ.பொலமரி (வேளாளர்)

*[புலம் → புலம்பு = நிலம். மெல்லம் புலம்பு = நுண்மணலால் மெல்லிய நெய்தல் நிலம் (திருக்கோவை.379, உரை) மெல்லம் புலம்பன் = நெய்தல் நிலத் தலைவன் "மெல்லம் புலம்பன் பிரிந்தென" (குறுந்.5.) (வே.க.3.63.) 'அன்' ஆ.பா.ஈறு]*

**புலம்பன்²** *pulamban,* பெ. (n.) ஆதன் (ஆன்மா); soul. *"புலம்பனுக்கொன்றும் புணர்ந்திலை"* (திருமந்.2934).

*[புலம் = அறிவு. புலம் → புலம்பு → புலம்பன் = அறிவுடைய ஆதன் (வே.க.3.63) ]*

**புலம்பாவு** *pulam-pāvu,* பெ. (n.) தினைவிதைக்கை (இ.வ.); sowing Italian millet.

*[புல் → புலம் = நிலம், விளைநிலம். புலம் + பாவு]*

**புலம்பிடி–த்தல்** *pulam-piḍi-,* 4 செ.கு.வி. (v.i.) துப்புக் கண்டுபிடித்தல்; to obtain or find a clue.(C.G.). *'கள்வனை அறியப்புலம் பிடித்தார்கள்'*

*[புலம் + பிடி –,]*

**புலம்பிலவு** *pulampilavu,* பெ. (n.) இலவங்கப் பட்டை; cinnamon bark.

**புலம்பு¹–தல்** *pulambu-,* 7 செ.கு.வி (v.i.) **1.** ஒலித்தல்; to sound, *'கழலார் சிலம்பு புலம்ப'* (தேவா.607,7). **2.** பிதற்றுதல் (கொ.வ.); to

speak foolishly or incoherently. **3.** அழுதல்; to utter lamentations, to wail, cry out. '*தயரதன் தான் புலம்பியவப் புலம்பல்*' (திவ்.பெருமாள்.9,11). **4.** தனித்தல்; to be solitary, lonely. '*கொடுவாயிரும்பின் மடிதலை புலம்பப்*' (பெரும்பாண்.286). **5.** வருந்துதல்; to grieve. '*அகம்புலம்புகின்றேன்*' (கம்பரா. இந்திரசித். 61). **6.** வாடுதல்; to fade. '*இவணலம் புலம்ப*' (ஐங்குறு.57).

ம.புலம்புக; **க.** பலும்பு, கலுபு; **தெ.** பலுமு; **து.** பலம்புனி; **பா.** பொல்ல (ஒலி)

*[புல் = பொருந்தற்கருத்து வேர். (வே.க.3,62). புல் → புலு → பலுமு (தெ.) = முணுமுணுத்தல், பேசுதல். புல் → புல → புலம்பு. புலம்புதல் = ஒலித்தல், பிதற்றுதல், அழுதல்]*

**புலம்பு²–தல்** *pulambu-*, **6** செ.குன்றாவி. (v.t.) **1.** வெறுத்தல்; to despise, abhor. '*புலம்பலர் பொறுப்பரன்றே*' (சீவக.2088). **2.** அடிக்கடி கூறுதல்; to utter repeatedly. '*வீரட்டம் புலம்பேனாகிலேன்*' (தேவா.999,12).

*[புல் → புல → புலம்பு. 'புலம்பு–தல்' பார்க்க]*

**புலம்பு³** *pulambu*, பெ. (n.) **1.** ஒலி; sound '*புலம்பறு கடத்து*' (குறுந்.174.) **2.** பிதற்றல் மொழி; foolish, incoherent talk. '*வென்று மென்றாற் புலம்பன்றி புலமைத் தாமோ*' (கம்பரா.பாசப்.11). **3.** அழுகையொலி; lament. '*கடலெனப் புலம்பு கொண்டனர்*' (சூளா.முத்.33). **4.** தனிமை; loneliness; solitariness. '*புலம்பே தனிமை*' (தொல்.சொல்.331). **5.** பிரிவு; separation, as from husband. '*கிழவனை மகடூஉப் புலம்பு பெரிதாகலின்*' (தொல்.பொ.147). **6.** மனக்கலக்கம் (யாழ்.அக.); agitation. **7.** வருத்தம்; grief affliction. '*காலை யிசைக்கும் பொழுதொடுபுலம்புகொள*' (பதிற்றுப்.81,5). **8.** வெறுப்பு; dislike. '*பாவம் புலம்பொடு போக்கினானே*' (சீவக.820). **9.** அச்சம் (பிங்.); fear. **10.** குற்றம்; fault, defect. '*புலம்பற வளர்த்த வம்மென் பூம்புகை*' (சீவக.2092).

**ம.** பலம்பன்; **க.** புலக; **தெ.** பலவரிந்த, பலவரமு

*[புல் → புல→ புலம்பு. 'புலம்பு–தல்' பார்க்க]*

**புலம்புநீர்** *pulambu-nir*, பெ. (n.) கண்ணீர்; tear. '*புலம்புநீ ருருட்டி*' (மணிமே.3,9).

*[புலம்பு + நீர். புலம்பும்போது அதாவது அழும்போது வரும் நீர்]*

**புலம்புமுத்து** *pulambu-muttu*, பெ. (n.) அழுகைக் கண்ணீர்; tears of sorrow, as pearly, opp. to 'uvagai muttu'. '*நிமிர் நெடுங்கண் புலம்பு முத்துறைப்ப*' (சிலப்.4,71).

*[புலம்பு + முத்து. அழும்போது முத்துப் போன்று வரும் கண்ணீர்]*

**புலம்புவி–த்தல்** *pulambuvi-*, **8** செ.குன்றாவி. (v.t.) தன்னிலை இழக்கச் செய்தல்; to cause one to lose self control. '*புலம்புவித் தருளி னீங்கி*' (சீவக.2516).

*[புலம்பு → புலம்புவி. 'வி' பி.வி.ஈறு]*

**புலம்புள்** *pulambul*, பெ. (n.) புலம்பல் **5.** பார்க்க; see *pulambal 5.* '*புலம்பு ளேற்றிடாவடைந்தோரை*' (இரகு.திக்கு.62).

*[புலம்பல் → புலம்புள்]*

**புலம்பெயர்புதுவன்** *pulam-peyar-puduvan*, பெ. (n.) வேறொருநாட்டிலிருந்து வந்தவன், பிற நாட்டினன்; foreigner. புலம்பெயர் புதுவறி போக்குவனியானெனக் (சிலப்.16:129).

*[புலம்பெயர் + புதுவன். புலம் = இடம், வாழிடம், நாடு]*

**புலம்பெயர்மாக்கள்** *pulam peyar mākkaḷ,* பெ. (n.) **1.** அயல்நாட்டினர்; foreigners, immigrants. *'கலந்தரு திருவிற் புலம்பெயர் மாக்கள்'* **(சிலப்.5,11). 2.** கடலோடிகள்(சிலப்.5,11. அரும்); mariners.

*[புல் → புலம் = நிலம். புலம் + பெயர் + மாக்கள். பெய் → பெயர். பெயர்தல் = இடம் பெயர்தல் மக்கள் → மாக்கள் ஒ.நோ: மொழிபெயர் தேயம்]*

**புலம்விசாரி–த்தல்** *pulamvišāri-,* 4 செ.கு.வி. (v.i.) *புலமுசாவு–தல் (கொ.வ.)* பார்க்க; see *pulam ūšāvu-,*

*[புலம் + விசாரி–,]*

Skt. vicāra > த. விசாரம் → விசாரி–த்தல்

**புலம்வை–த்தல்** *pulamvai-,* 4 செ.கு.வி. (v.i.) உளவு எதிர்பார்த்தல்; to be on the lookout for a clue. (C.G.).

*[புலம் + வை–,]*

**புலமக்கள்** *pula-makkaḷ,* பெ. (n.) படித்தோர்; learned men. புலமக்களாலும் பொது மக்களாலும் பாராட்டப் பெற்றவர் பாவாணர் **(உ.வ).**

*[புலம் + மக்கள்]*

**புலமகள்** *pula-magaḷ,* பெ. (n.) கலைமகள்; Sarasvadhi. *'புலமகள் புகழ்'* **(சீவக.2566).**

*[புலம் + மகள். புலம் = ஐம்பொறிகள் பொருள்களோடு பொருந்த அறியும் அறிவு. புலம் → புலவன் = அறிஞன், அறிவுள்ள பாவலன். புலமகள் பெண்பால் அறிவுக்கடவுள். மக → மகள்]*



**புலமகன்** *pula-magaṉ,* பெ. (n.) புலமையுள்ளவன்; learned man, scholar. *'வேறொடு புலமகன் விரும்பி வாங்கினான்'* **(கம்பரா.எழுச்.3).**

*[புலம் + மகன். புல் → புலம் = அறிவு. முகு → மக → மகன்]*

**புலமங்கை** *pula-maṅgai,* பெ. (n.) நிலப்பெருமாட்டி (பூமிப்பிராட்டி) **(திவ்.பெரியதி. 3,2,5.)** goddess of earth.

*[புல் → புலம் = நிலம். புலம் + மங்கை]*

**புலமறி–தல்** *pulam-aṟi-,* 3 செ.குன்றாவி. (v.t.) துப்பறிதல் (சென்னை.); to spy out, detect.

*[புலம் + அறி–, புலம் → புலன் = துப்பு]*

**புலமாக்கு–தல்** *pūlam-ākku-,* 8 செ.குன்றாவி. (v.t.) **1.** *புலப்படுத்து–தல்* பார்க்க; see *pula-p-paḍuttu-* *'நெறியெலாம் புலமாக்கிய வெந்தையை'* **(திருவாச.5,32). 2.** வெளியாக்குதல் (கொ.வ.); to bring to light.

*[புலம் + ஆக்கு–, ஆகு–தல் (த.வி.) – ஆக்கு–தல் (பி.வி.)]*

**புலமினுக்கி** *pula-miṉukki,* பெ. (n.) துடைப்பம் (தைலவ.தைல.); broom, as cleansing a place.

மறுவ. வாரியல், பெருக்குமாறு, விளக்குமாறு.

*[புலம் + மினுக்கி. மினுக்கு → மினுக்கி]*

**புலமுசாவு–தல்** *pulam-ušāvu-,* 7 செ.கு.வி. (v.i.) உளவறிதல்; to seek a clue.

*[புலம் + உசாவு–,]*

**புலமை** *pulamai,* பெ. (n.) 1. கல்வி; knowldge, learning. தமிழில் புலமைமிக்கவர்களுள் பாவாணர் குறிப்பிடத்தக்கவர் (உ.வ). 2. மெய்யறிவு (ஞானம்); spiritual wisdom. *'புரையுந ரில்லாப் புலமையோய்'* (திருமுரு.280). 3. செய்யுளியற்றும் ஆற்றல்; poetic talent or ability.

*[புல் → புலம் → புலன் = பொருந்தியறியும் அறிவு. புலம் = அறிவு, அறிவுநூல், இலக்கணம். புலம் → புலமை (மு.தா.183)]*

**புலமைபாடு–தல்** *pulamai-pāḍu-,* 11 செ.கு.வி. (v.i.) பா(கவி)ப்பாடுதல்; to compose poetry. *'கைக்கூலி கொண்டு புலமை பாடினேனாகாதே யென்கிறார்'* (ஈடு).

*[புலம் → புலமை + பாடு–,]*

**புலமையர்** *pulamaiyar,* பெ. (n.) *புலமையோர் (வின்.)* பார்க்க; see *pulamaiyōr.*

*[புலம் → புலமை → புலமையர்]*

**புலமையோர்** *pulamaiyōr,* பெ. (n.) 1. பாவலர் (கவி.), அறிவன் (கமகன்), தருக்கி (வாதி), சொல்லி (வாக்கி) என்ற நால்வகைக்கல்வி வல்லோர் (பிங்.); learned persons, of four classes, viz, kavi, kamakaṉ, vāti, vākki. 2. கற்றோர்; scholars, professors, experts. *'புகரின் றென்மனார் புலமையோரே'* (தொல்.எழுத்.369).

மறுவ. கலைஞர், மேதையர், மூத்தோர், கற்றவர், கவிஞர், அறிஞர்.

*[புலம் → புலமை → புலமையோர்]*

**புலர்¹–தல்** *pular-,* 11 செ.கு.வி. (v.i.) 1. வாடுதல்; to fade, wither. 2. உலர்தல்; to grow dry; to become patched, as the tongue. *'புகையுஞ் சாந்தும் புலராது சிறந்து'* (சிலப். 5, 197.) 3. தளர்தல்; to faint; to become weak. *'இமையோர்களும் புலர்ந்தார்'* (கம்பரா. நிகும். 116.) 4. குறைதல்; to decrease. *'கதம் புலர்ந்த சிந்தை'* (கம்பரா. மூலபல. 79.) 5. விலகுதல்; to leave, depart. *'ஆயம் புலர்க'* (பு. வெ. 4, 22.) 6. முற்றுதல்; to mature, as grain. *'வரகினிருங்குரல் புலர'* (மதுரைக். 272.)

*[புல் → பொல் → பொலு. பொலு பொலுத்தல் = நன்றாகக் காய்தல். பொல் → (பொரு) → பொருக்கு = காய்ந்த சோற்றுப் பருக்கை. புல் → புலர் (மு.தா. 139) ]*

**புலர்²–தல்** *pular-,* 11 செ.கு.வி. (v.i.) 1. விடிதல்; to dawn, as the day. புலர் விடியல் (பு. வெ. 9, 47) 2. தெளிதல்; to clear up. நல்லா னெஞ்சமும் புலர்ந்ததன்றே (சீவக. 1397)

ம. புலருக; குட. பொல; மால. புல்புல்ரெ;

*[புல்லுதல் = பொருந்துதல். புல் → புலம் → புலன் = பொருந்தியறியும் அறிவு. புலனாதல் = அறியப்படுதல். புலம் → புலர். புலர்தல் = கண்ணுக்குத் தெரிதல், விடிதல். (மு.தா. 183) ]*

**புலர்³–த்தல்** *pular-,* 3 செ.குன்றாவி. (v.t.) பூசுதல்; to besmear.

*[ புல் → புலர் ]*

**புலர்⁴** *pular,* பெ. (n.) உலர்கை; being parched. *'புலர்வாடு நாவிற்கு'* (கலித். 6.)

*[ புல் → புலர் ]*

**புலர்காலை** *pular-kālai,* பெ. (n.) 1. *புலரி,* 1 பார்க்க; see *pulari* 1 2. அழிவுக் காலம்; the period of cosmic deluge. *'புலர்காலை மாயை மேவிப் பொருந்தும்'* (சிவப்பிர. 16.)

*[ புல் → புலம் → புலர். புலர் + காலை ]*

**புலர்ச்சி¹** *pularcci,* பெ. (n.) 1. வாடுகை; withering, fading. 2. உலருகை; drying.

*[ புல் → புலர் → புலர்ச்சி. 'சி' தொ.பெ.ஈறு. புலர்¹ பார்க்க ]*

**புலர்ச்சி²** *pularcci,* பெ. (n.) 1. விடிகை; dawning. *'இருளின் புலர்ச்சி யென் றென்று'* (வெங்கைக்கோ. 380.).

ம. புலர், புலர்ச்ச; து. புல்லெ, புல்ல்யெ, புல்ல்யகெல, புல்ல்யகொலெ; குட. பொலசெ.

*[ புலம் → புலர். புலர்தல் = தெளிதல், தெளிவாதல், விடிதல். புலர் → புலர்ச்சி (வே.க.3,63)]*

**புலர்த்து–தல்** *pularttu-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. உலர்த்துதல்; to deprive of moisture; to cause to dry. *'துகில்கொடு குஞ்சி யீரம் புலர்த்தி'* 2. வாட்டுதல்; to cause to fade or wither. 3. பூசுதல் (பிங்.); to besmear, daub.

*[ புல் → புலர் → புலர்த்து–, புலர்தல் (த.வி.) – புலர்த்துதல் (பி.வி.) ]*

**புலர்பு** *pularpu,* பெ. (n.) *புலரி* 1. பார்க்க; see *pulari.* 1 *'பனிப்புலர் பாடி'* (பரிபா. 11, 83.)

*[ புல் → புலம் → புலர். புலர்தல் = தெளிதல், தெளிவாதல், விடியல். புல் → புலம் → புலரி விடியல். புலர் → புலர்ப்பு. (வே.க.3,61–63) 'பு' தொ.பெ.ஈறு]*

**புலர்வு** *pularvu,* பெ. (n.) *புலர்ச்சி, 2. (சங்.அக.)* பார்க்க; see *pularcci 2*

*[ புல் → புலம் → புலரி = விடியல். புல் → புலர் → புலர்வு. 'வு' தொ.பெ.ஈறு*

*புலர்ப்பு → புலர்பு.]*

**புலரி** *pulari,* பெ. (n.) 1. இரவு நீங்கி காலையில் வெளிச்சம் தோன்றும் நேரம், விடியல் (திவா.); dawn. *'புலரி புலருதென்று'* (திருமந். 210.) 2. ஞாயிறு, கதிரவன்; sun. *'தாமரைப் பூநனி முகிழ்த்தன புலரிபோனபின்'* (கம்பரா. சித்திர. 42.)

ம., து. புலர்

*[ புல் → புலம் → புலர். புலர்தல் = கண்ணுக்குத் தெரிதல், விடிதல். புலர் → புலரி = விடியல் (மு.தா. 183.) விடியலில் தோன்றும் ஞாயிறு. 'இ' வினைமுதலீறு ]*

**புலரிக்காலை** *pulari-k-kālai,* பெ. (n.) *புலரி, 1 (திவா.)* பார்க்க; see *pulari 1*

*[ புலரி + காலை. புல் → புலர் → புலரி = விடியல். காலை, = விடியற்காலம் ]*

**புலரிகம்** *pularigam,* பெ. (n.) *புலரி, 1* பார்க்க; see *pulari* 1.

*[ புலரி → புலரிகம் ]*

**புலரிவைகறை** *pulari-vaigaṟai,* பெ. (n.) வைகறைக்கும் புலரிக்கும் இடைப்பட்ட காலம்; morning twilight, time between day break and sunrise. *'புலரி வைகறைப் பொய்கைத் தாமரை'* (சிலப். 14, 3.)

*[ புலரி + வைகறை ]*

**புலவஞ்சி** *pulavañji,* பெ. (n.) தஞ்சை மாவட்டத்திலுள்ள ஊர்; a village, in Tañjāvūr dt.

*[ புலம் + வஞ்சி ]*

**புலவநல்லூர்** *pulava - nallūr,* பெ. (n.) தஞ்சை மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Tañjāvūr dt.

*[ புலவன் + நல்லூர் ]*

**புலவர்**[1] *pulavar,* பெ. (n.) 1. புலமையோர் பார்க்க; see pulamaiyōr. *'நரம்பின் மறைய வென்மனார் புலவர்'* (தொல். எழுத். 33.) 2 அறிவர் (ஞானிகள்); wisemen, sages. *'புலவரைப் போற்றாது புத்தேளுலகு'* (குறள், 234.) 3. குறுநில மன்னர் (வின்.); petty chieftains. 4. கூத்தர் (பிங்.); dancers, actors. 5. கம்மியர் (பிங்.); artisans, mechanics. 6. ஓவியம் முதலிய கலைவல்லார் (பிங்.); artists. 7. வடுகர்(சாளுக்கியர்)(பிங்.); the Cāḷukyas. 8. கோயம்புத்தூர் மாவட்டத்தில் பழக்க வழக்கங்களில் கொங்குவேளாளரை யொத்தவராய் வேளாண்மை செய்யும் ஒரு சாதியார்; a caste of cultivators in Coimbatore district, who resemble Koṅku Vēḷāḷas, in their customs and manners. (E.T.vi, 235.) 9. பனிசவர் ஒச்சர், முதலிய சில சாதியாரின் பட்டப்பெயர்; caste title of the members of certain castes like the Paṉišavar and the ōccar. (E.T.vi. 57.) (E.T.v. 420.)

*[ புல்லுதல் = பொருந்துதல். புல் → புலம் → புலன் = பொருந்தியறியும் அறிவு. புலம் = அறிவு, அறிவு நூல், இலக்கணம். புலம் → புலமை. புலம் → புலவன் (மு.தா. 183) புலவன் → புலவர். 'ர்' ப.பா.ஈறு*

*பண்டைத் தமிழகத்தில் வேந்தரைப் புகழ்ந்து பாடிய புலவர்க்குச் சிறந்த பரிசும் முற்றூட்டும் (சர்வமானியமும்) அளிக்கப் பட்டன.*

*பாண்டியர் தலைசிறந்த புலவரையெல்லாங் கூட்டி, தமிழ்க் கழகம் நிறுவிப் போற்றினர்.*

*புலவரின் பாடல்களும் நூல்களும், பாண்டியர் தமிழ்க் கழகத்தில் குற்றமற்றவையென ஒப்புக் கொள்ளப்பட்டாலொழிய உலகில் வழங்கா. அங்ஙனம் ஒப்பம் பெறுதல் அரங்கேற்றம் எனப்பட்டது. (ப. தா.ந.ப. 121.) ]*

**புலவர்**[2] *pulavar,* பெ. (n.) தேவர் (திவா.); Gods.

**மறுவ.** பண்ணவர், புத்தேளிர், கடவுளர், அண்டர், உம்பர், இமையவர், வானோர், விண்ணோர், அமுதர், ஆதித்தர், மேலோர், ஐயர், உயர் நிலத்தவர்.

*[ புலவன் → புலவர். புலவர்[1] பார்க்க ]*

**புலவர்குழந்தை** *pulavar - kuḻandai,* பெ. (n.) 20 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்; a poet of twentieth century.

*[ புலவர் + குழந்தை ]*

இவர் (1906–1972) திருநணாச் சிலேடை வெண்பா என்னும் சிற்றிலக்கியம் இராவண காவியம் என்னும் பேரிலக்கியம் யாப்பதிகாரம் என்னும் இலக்கணம் முதலியவற்றை இயற்றியுள்ளார். திருக்குறளுக்கு இவர் எழுதியவுரை குழந்தையுரை எனப்படும்.

**புலவர்புராணம்** *pulvar-purāṇam,* பெ. (n.) முருகதாசர் பாடிய தமிழ்ப் புலவர் வரலாறு; a metrical biography of Tamil poets by Muruka-dāsar, 19th c.

*[ புலவர் + புராணம் ]*

**புலவராற்றுப்படை** *pulavarāṟṟu-p-paḍai,* பெ. (n.) 1. ஒரு புலவன் தனக்குப் பரிசளித்த அரசனையும் அவனது தலைநகரையும் வேறு புலவனிடம் சிறப்பித்து அவ் வரசனிடத்து அவனை ஆற்றுப் படுத்தலைக் கூறும் புறத்துறை (புறநா. 48.); (purap.) theme describing to a poet, the munificence of a royal patron and splendour of his city and directing the poet to his court. 2. ஒரு புலவனைக் கடவுளிடத்துப் பயன்கொள்ளும் படி ஆற்றுப்படுத்தலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 9, 42.); (purap.) theme of guiding a poet into the presence of a deity. 3. புலவராற்றுப் படை பற்றிய சிற்றிலக்கியம் (பிரபந்தம்); poem on the theme of pulavarāṟṟu-p-paḍai.

*[ புலவர் + ஆற்றுப்படை. ஆற்றுப்படு(த்து) → ஆற்றுப்படை ]*

**புலவராற்றுவழக்கம்** *pulavarāṟṟu - vaḻakkam,* பெ. (n.) புலநெறி வழக்கம் (தொல். பொ. 53, உரை.); literary usage.

*[ புலவராற்று + வழக்கம் ]*

**புலவரி** *pulavari,* பெ. (n.) பழைய வரிவகை; an ancient tax (S.I.I. vi 2)

*[ புலம் + வரி ]*

**புலவரிசி** *pulavariśi,* பெ. (n.) இறைச்சி சேர்த்துச் சமைத்தற் கேற்ற அரிசிவகை (இ.வ.); a kind of rice, fit to be cooked with meat.

*[ புலவு + அரிசி ]*

**புலவரை** *pula-varai,* பெ. (n.) 1. நிலவெல்லை; boundary, as of a country. *'புலவரைத் தோன்றல் யாவது'* (பதிற்றுப். 80.) 2. அறிவினெல்லை; the utmost bounds of knowledge. *'புலவரை யறியாப் புகழொடு பொலிந்து'* (பரிபா. 15, 1.)

*[ புலம் → புலவரை ]*

**புலவல்** *pulaval,* பெ. (n.) 1. வெறுப்பு; displeasure, dislike. *'புலவனீ கூறியென்'* (கலித். 89.) 2. *புலவு² 3* பார்க்க; see *pulavu² 3* *'கல்லெள் சேரிப் புலவற்புன்னை'* (நற். 63.)

*[ புலம் → புலவல் ]*

**புலவன்¹** *pulavaṉ,* பெ. (n.) 1. அறிஞன் (பு. வெ. சிறப்பு.); sage, philosopher. 2. பாவலர் (சூடா.); poet. 3. தேவன் (பிங்.); Dēvaṉ, celestial being. 4. அறிவன்(புதன்)(சூடா.); Mercury. 5. வேந்தன்(இந்திரன்) (பிங்.); Indra. 6. அருகன் (பிங்.); Arhat. *'பொருனன் புனிதன் புராணன் புலவன்'* (சிலப். 10, 179.) 7. புத்தன்; Buddha. *'புலவன் றீர்த்தன் புண்ணியன் புராணன்'* (மணி. 5, 98.)

**தெ.** பொலமரி (விடை தெரிந்தவன்)

*[ புல் → புலம் → அறிவு, பொறியுணர்வு. புலம் → புலவன் (வே.க. 3, 63) ]*

**புலவன்²** *pulavaṉ,* பெ. (n.) முருகன் (பிங்.); lord Murugaṉ.

**மறுவ.** பொன்னெயிற்கோன், விண்ணவன் அண்ணல், மதனை வென்றோன், அருட் கொடி வேந்தன், ஆசான், குறிஞ்சி வேந்தன், வேலினுக்கிறை, செவ்வேள், மேகவாகனன், வேள்விக்கு வேந்தன்,

விண்முழுதுமாள், கோபதி, வேந்தன், சிலம்பன், மஞ்சையூர்தி, குமரன், ஆறுமுகன்.

*[ புல் → புலம் → புலவன் ]*

**புலவா** *pulavā,* பெ. (n.) பூலா (சங்.அக.); a large often scandent shrub.

**புலவாகிதம்** *pulavāgidam,* பெ. (n.) *பூலா (சங்.அக.)* பார்க்க; see *pūlā.*

*[ புலவா → புலவாகிதம் ]*

**புலவி** *pulavi,* பெ. (n.) 1. ஊடல்; sulks, bouderie. *'புணர்வின் னினிய புலவிப் பொழுதும்'* (சீவக. 1378.). 2. வெறுப்பு; displeasure; dislike.

*[ புல → புலவி ]*

கணவன் தவற்றாலோ மனைவியின் பேதைமையாலோ சில சமையங்களில் அவரிடைப் பிணக்கு நேர்வதுண்டு. அன்று மனைவி ஊடிக் கணவனொடு பேசாதிருப்பாள். ஊடுதல் சடைவுகொள்ளுதல். அது கணவனால் எளிதாய்த் தீர்க்கப்படும். அது குழந்தையைக் கணவன் எடுத்துக் கொண்டு போய்க் கொடுப்பதனாலும், வீட்டிற்கு விருந்தினர் வந்திருப்பதாலும், உறவினரும் நண்பரும் தலையிடுவதாலும் தீர்க்கப்படும். புலவி முற்றிவிட்டால் துனி எனப்படும். அதை ஒருவராலும் தீர்க்க முடியாது. நீண்ட நாட் சென்று அது தானே தணியும். பழகப் பழகப்பாலும் புளிப்பது போல், கணவன் மனைவி யரிடைப்பட்ட காமவின்பம் சற்றுச் சுவை குறையும் போது அதை நிறைத்தற்குப் புலவியும் வேண்டுமென்றும், அது உணவிற்கு உப்பிடுவது போன்றதென்றும் ஊடல் உப்புக் குறைவதும் துனி உப்பு மிகுவதும் போன்றவை யென்றும் உப்பு மிகையாற் சுவை கெடுவது போல் துனியால் இன்பங் கெடுமாதலால் அந் நிலையை அடையாதவாறு புலவியைத் தடுத்துவிட வேண்டு மென்றும் திருவள்ளுவர் கூறுவர். *'உப்பமைந் தற்றாற் புலவி அது சிறிது மிக்கற்றால் நீள விடல்'* (குறள், 1302) (ப.தநா.ப. 62.)

**புலவிநீட்டம்** *pulavi-niṭṭam,* பெ. (n.) 1. ஊடல் மிகுதி; continued sulks. 2. கலவியிற் கூச்சம் (யாழ்ப்.); conjugal shyness.

*[ புலவி + நீட்டம் ]*

**புலவிநுணுக்கம்** *pulavi-nuṇukkam,* பெ. (n.) சிறு(அற்பக்)காரணத்தைக் கொண்டு தலைவி ஊடுகை (குறள், 132, அதி.); sulks of a wife on flimsy ground.

*[ புலவி + நுணுக்கம் ]*

**புலவில்லை** *pulavillai,* பெ. (n.) தொலைவி லுள்ள பொருளைப் பார்க்க உதவும் கண்ணாடி; field lens.

*[ புலம் + வில்லை ]*

**புலவு¹-தல்** *pulavu-,* 12 செ.கு.வி. (v.i.) புலானாற்ற மடித்தல்; to smell raw flesh. *'புலவுவாய் பாண'* (பெரும்பாண். 22.)

**புலவு²-தல்** *pulavu,* 12 செ.குன்றாவி. (v.t.) வெறுத்தல்; to dilike, abhor, புலவுதி மாதோ நீயே (புறநா. 219)

*[ புல → புலவு ]*

**புலவு³** *pulavu,* பெ. (n.) 1. வெறுப்பு; dislike, abhorrence *'புலவுவாய்ப் பாண'* (பெரும்பாண். 22). 2. புலால் (சூடா.); flesh, raw meat, fish. *'புலவுமணற் பூங்கானல்'* (பட்டினப். 94). 3. குருதி, அரத்தம்; blood. *'புடையவிழந்த கூந்தல் புலவுத்தோய'* (சீவக. 293.) 5. நிரயம் (நரகம்) (பிங்.); hell.

*[ புல → புலவு ]*

**புலவு**[4] *pulavu,* பெ. (n.) வயல் (வின்.); arable land.

க. பொல

*[ புல் → புலம் = நிலம். புலம் → புலவு ]*

**புலவு**[5] *pulavu,* பெ. (n.) ஊனோடு கலந்து பக்குவப்படுத்திய உணவு; a kind of dish prepared of cooked meat and boiled rice.

**மறுவ.** ஊன்சோறு.

*[ புல் → புல → புலவு ]*

'புலால்' பார்க்க

ஊன்சோறு அல்லது புலவு பண்டைக் காலத்தில் தமிழகத்திலேயே தோன்றிப் பின்பு வழக்கற்றது. முகம்மதியர் வந்தபின் அவரிட மிருந்து புதிதாய்க் கற்றுக் கொண்டதன்று.

மட்டுவாய் திறப்பவும் மைவிடை வீழ்ப்பவும்
அட்டான் றானாக் கொழுந்துவை யூன்சோறும்
பெட்டாங் கீயும் பெருவளம் பழுனி
என்றும் (113)

புலராப் பச்சிலை யிடையிடுபு தொடுத்த
மலரா மாலைப் பந்துகண் டன்ன
ஊன்சோற் றமலை பாண்கடும் பருத்தும்
செம்மற் றம்ம நின் வெம்முனை யிருக்கை
என்றும் (33) வரும் புறப்பாட்டடிகளைக் காண்க.

**புலவு**[6] *pulavu,* பெ. (n.) சிற்றிலை புலவு,; மரவகை; a tree.

**புலவேடர்** *pulavēḍar,* பெ. (n.) வேடரைப் போன்று முரட்டாக இயங்கும் ஐம்பொறி; the five senses considered as uncivilized like hunters.

*[ புலம் + வேடர் ]*

**புலவை** *pulavai,* பெ. (n.) *புலவை மருது* பார்க்க; see *pulavai marudau* (L.)

**புலவைமருது** *pulavai - marudu,* பெ. (n.) பூமருது; flowering muradh. (L.)

*[ புலவை + மருது ]*

**புலவோன்** *pulavōṉ,* பெ. (n.) *1 புலவன்[1-], 2* பார்க்க; see *pulavaṉ[1-], 2.* **2.** ஆதன் (ஆத்துமா); soul. *'புவிபுன லனல் கான் மதி புல வோனென முழுதுநிறைந்த முக்கட் பெருமான்'* (கல்லா. 10.)

*[ புல் → புல → புலவோன் ]*

**புலன்** *pulaṉ,* பெ. (n.) **1.** சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் புலன் உணர்வுகள்; sense of the body, of five kinds, viz., šuvai, oḷi, ūṟu, ōšai, nāṟṟam. *'கண்டு கேட்டுண்டுயிர்த்த துற்றறியும் ஐம்புலனும்'* (குறள், 1101) **2.** பொறி; organ of sense. *'புலனோடு புணரான்'* (ஞானா. 48, 9.) **3.** செயல்கருவி(கருமேந்திரியம்); the organ of motor action. *'இருபுலனும்...... இகழாரே'* (ஆசாரக். 33.) **4.** அறிவுடைமை; wisdom, intelligence. *'செல்வம் புலனே புணர்வு'* (தொல். பொ. 299.) **5.** பகுத்தறிவு (நாலடி. 12.); intellect; discernment. **6.** தெளிவு; that which is clear or obvious. *'பெரும்புணர்ப் பெங்கும் புலனே'* (திவ். திருவாய். 2, 8.) **7.** உறுப்பு; limb. *'ஒன்பது வாய்ப் புலனும்'* (நாலடி. 47.) **8.** வயல்; arable land. *'புலனந்த'* (பரிபா. 7, 9.) **9.** செவ்விதிற் கிளந்தோதல் வேண்டாது சேரிமொழியாற் குறித்தது தோன்றும் நூல் வனப்பு ளொன்று (தொல். பொ. 554.); (poet.) a merit in composition consisting in the use of local idioms of much suggestiveness. **10.** *புலம்–,* 2, 3, 4, 9, 10, 11. பார்க்க; see *pulam-*. 2, 3, 4, 9, 11.

*[ புல் → புலம் = பொருளொடு பொருந்தும் அறிவு, அறிவுறுப்பு, அறிவு நூல். புலம் → புலன் (சு.வி. 36.) பொருந்தியறியும் அறிவு (மு.தா. 183) பொருந்தியிருக்கும் நிலம் (வே.க. 3, 62) ]*

**புலன்செலுத்து–தல்** *pulaṉ-šeluttu-*, 12 செ.குன்றாவி. (v.t.) கூர்ந்து (பத்தரமாகக்) கவனித்தல் (வின்.); to attend carefully.

*[ புலன் + செலுத்து–, ]*

**புலன்வென்றோர்** *pulaṉ-veṉṟōr*, பெ. (n.) முனிவர் (ஐம்புலன்களை வென்றவர்) (யாழ்.அக.); ascetics as having conquered the senses.

*[ புலன் + வென்றோர் ]*

**புலனடக்கம்** *pulaṉaḍakkam*, பெ. (n.) 1. புலன்களை அடக்குகை; controlling of senses. 2. ஒகப் பயிற்சியின் எண்ணுறுப்புகளுள் ஒன்று (பிரத்தியாகாரம்); one of the eight organs of 'yōga'.

*[ புலம் + அடக்கம். அடங்கு (த.வி.) – அடக்கு (பி.வி.) – அடக்கம் (தொ.பெ.) ]*

ஒழுக்கம் (இயமம்), ஒழுங்கு (நியமம்), இருக்கை (ஆசனம்),வளிநிலை (பிராணாயாமம்), புலனடக்கம் (பிரத்தியாகாரம்), நிறை (தாரணை), ஊழ்கம் (தியானம்), ஒடுக்கம் (சமாதி)என்பன ஒகப்பயிற்சியின் எண்ணுறுப்புகள். இவற்றுள் இருக்கையும் வளிநிலையும் உடற்பயிற்சி; ஏனைய ஒகப்பயிற்சி (ப.த.நா.ப. 143)

**புலனறி–தல்** *pulaṉ-aṟi-*, 3 செ.குன்றாவி. (v.t.) துப்பறிதல் (சென்னை.); to spy out.

*[ புல் → புலம் = ஐம்பொறிகள் பொருள்களோடு பொருந்தி அறியும் அறிவு, கூர்மதி, துப்பு (வே.க. 3, 62). புலன் + அறி– ]*

**புலனறிசிறப்பு** *pulaṉ-aṟi-šiṟappu*, பெ. (n.) வேற்றுப் புலத்தினது நிலையை அறிவித்தார்க்குத் தாம் முன் கூறியதினும் பெருகக் கொடுத்தலை யுணர்த்தும் ஒரு புறத்துறை (பு.வெ. 1, 17.); (purap.) theme of a king specially rewarding spies on their giving useful information about the enemy's country.

*[ புலனறி + சிறப்பு ]*

**புலனாகு–தல்** *pulaṉāgu*, 7 செ.கு.வி.(v.i.) 1. பார்வையில் படுதல், தெரிதல்; to be visible 2. தெளிவாதல்; to become clear, be evident. கொடுமை இழைக்கப்பட்டது என்பது உசாவலில் (விசாரணையில்) புலனாகியது. (உ.வ.)

*[ புலன் + ஆகு–, ]*

**புலனாய்வு** *pulaṉāyvu*, பெ. (n.) ஒரு குற்றம் பற்றிய கரி(சாட்சி)களைத் தொகுக்கக் காவல்துறை அதிகாரி எடுக்கும் சட்டப்படியான நடவடிக்கை; investigation (of an offense) புலனாய்வு நடந்துவருகிறது. (உ.வ.) 2. காவல்துறையல்லாத பிறதுறைகளில் ஒரு நிகழ்வுக்கான கரணியம், சூழ்நிலை, அதன் விளைவுகள் ஆகியவற்றைக் கண்டறிய எடுக்கப்படும் நடவடிக்கை; (departmental) investigation (of causes, background etc.) வருவாய்த்துறைப் புலனாய்வு அதிகாரிகள். (உ.வ.)

*[ புலன் + ஆய்வு ]*

**புலனி** *pulaṉi*, பெ. (n.) நண்டு (சங்.அக.); crab.

**புலனிடம்** *pulaṉiḍam*, பெ. (n.) வாய் (பிங்.) mouth.

*[ புலம் → புலன் + இடம் ]*

**புலனுக்கடுத்த** *pulaṉukkaḍutta,* பெ.எ. (adj.) சிற்றின்பந் தொடர்பான; sexual.

**புலனுணர்வாற்றல்** *pulaṉuṇarvāṟṟal,* பெ. (n.) *புலன்* பார்க்க; see *pulaṉ.*

*[ புலன் + உணர்வு + ஆற்றல். புலம் → புலன் ]*

**புலனுணர்வு** *pulaṉuṇarvu,* பெ. (n.) *புலன்* பார்க்க; see *pulaṉ.*

*[ புலன் + உணர்வு. புலம்→ புலன் ]*

**புலனுணர்வுத்திறம்** *pulaṉuṇarvu-t-tiṟam,* பெ. (n.) *புலன்* பார்க்க; see *pulaṉ.*

*[ புலன் + உணர்வு + திறம். புலம் → புலன் ]*

**புலனுழுதுண்மார்** *pulaṉ-uḻuduṇmār,* பெ. (n.) கற்றோர்; learned men, as cultivating knowledge. *'புலனுழு துண்மார் புன்கணஞ்சி'* (புறநா. 46.)

*[ புலன் + உழுது + உண்மார் ]*

**புலனெறி–தல்** *pulaṉeṟi-,* 3 செ.குன்றாவி. (v.t.) ஐம்புலனை வெல்லுதல்; to subdue or overcome the senses. *'புலனெறிந்த மெய்ப்போத மாதவன்'* (பாகவத. 1, பரிட்சித்துச். 16.)

*[ புலன் + நெறி–, ]*

**புலனொடுக்கம்** *pulaṉ-oḍukkam,* பெ. (n.) ஐம்புலவாசையை யொடுக்குகை; suppression or subduing of the senses.

*[ புலன் + ஒடுக்கம். ஒடு → ஒடுங்கு → ஒடுக்கு → ஒடுக்கம். ]*

**புலா**[1] *pulā,* பெ. (n.) *புலவு*[2], பார்க்க; see *pulavu*[2]. *'புலா விட்டரற்ற'* (புறநா. 326.)

*[ புல → புலவு → புலா ]*

**புலாகம்**[1] *pulāgam,* பெ. (n.) சோற்றுப்பருக்கை சோற்றவிழ்; a grain of cooked rice. *'தாலிபுலாக நியாயம்'* (சிவசம. 24.).

*[ புல் → புலாகம் ]*

**புலாகம்**[2] *pulāgam,* பெ. (n.) மீன்; fish.

**புலாதி** *pulādi,* பெ. (n.) 1. கவலை (யாழ்ப்.); care, anxiety. 2. குழப்பம் (பிராந்தி) (யாழ்.அக.); confusion.

*[ புலம் + ஆதி ]*

**புலாநீர்** *pulānīr,* பெ. (n.) *புலானீர்* பார்க்க; see *pulāṉīr.*

**புலால்** *pulāl-,* பெ. (n.) 1. உடலின் ஊன் முழுத்தொகுதி, விலங்கின் எலும்பைச் சுற்றியுள்ள மென்தசைப்பொருள், இறைச்சி, ஊன்; flesh, raw meat, fish. 'புன்புலால் யாக்கை' (திருவாசக37–10.) உண்ணாமை வேண்டும் புலாஅல் (குறள், 257) 2. புலால் நாற்றம்; smell of raw meat, flesh or fish. கயற்புலால் புன்னை கடியும் (நாலடி, 97) 3. தசை நரம்பு (இங்.வைத்.); muscle

*[ புல் → புள் → பிள் → பிழம்பு = திரட்சி . புல் → புலல் → புலால் = திரண்டதசை, இறைச்சி, அதன் மணம். ]*

**புலால்கட்டி** *pulāl-kaṭṭi,* பெ. (n.) முத்துச் குளித்தலில் கொடிய கடல்மீன் முதலியவற்றை வாய்கட்டித் தடுப்போன் (சங்.அக.); one who binds by magic the mouths of sharks etc., at a pearl fishery.

*[ புலால் + கட்டி. புல் → புலம் → புலன் = பொறியறிவு, பொறி. புலன் → புலனிடம் = வாய். புலன் → புலால் = வாய் ]*

**புலால்கட்டு–தல்** *pulāl-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) முத்துக் குளித்தலில் கொடியமீன் முதலியவற்றின் வாயைக் கட்டுதல் (யாழ்ப்.); to bind by magic the mouths of sharks, etc., at a pearl-fishery.

*[ புலால் + கட்டு ]*

**புலால்நாற்றம்** *pulāl-nāṟṟam,* பெ. (n.) இறைச்சி மணம்; smell of flesh.

*[ புலால் + நாற்றம். நாறு → நாற்றம் ]*

**புலால்நாறி** *pulāl-nāṟi,* பெ. (n.) இறைச்சி நாற்ற மடிக்கும் பெண்; a woman who emits the smell of fish.

*[ புலால் + நாறி. நாறு → நாறி ]*

**புலால்மேகம்** *pulāl - mēgam,* பெ. (n.) சிறுநீர் மணம் பரப்பும் வெட்டை நோய் வகையு ளொன்று; a venereal disease where in the urine smells fishy.

*[ புலால் + மேகம் ]*

**புலால்வெறுப்பு** *pulālveṟuppu,* பெ. (n.) இறைச்சி உணவின் மேலுண்டான வெறுப்பு; abnormal aversion to flesh or meat as food.

*[ புலால் + வெறுப்பு. வெறு → வெறுப்பு ]*

**புலாலிடம்** *pulāliḍam,* பெ. (n.) தசை சேர்ந்திருக்குமிடம், உடம்பு; body, as made of flesh.

*[ புலால் + இடம் ]*

**புலாலுணவு** *pulāluṇavu,* பெ. (n.) **புலவு**[5] பார்க்க; see *pulavu*[5].

*[ புலால் + உணவு ]*

**புலாவு**[1] *pulāvu,* பெ. (n.) *புலவு*[1] பார்க்க; see *pulavu*[1].

*[ புலவு → புலாவு ]*

**புலாவு**[2]**–தல்** *pulāvu-,* 6 செ.கு.வி. (v.i.) *புலவு* பார்க்க; see *pulavu.* *'உரவுக் களிற்றுப் புலா அம் பாசறை'* (பதிற்றுப் 61, 15.).

*[ புல → புலா → புலாவு ]*

**புலாவு**[3]**–தல்** *pulāvu-,* 6 செ.கு.வி. (v.i.) விடிதல்; to dawn. (திவ். இயற். திருவிருத். 75. வ்யா.)

*[ புல்லுதல் = பொருந்துதல். புல் → புலம் → புலன். புலனாதல் = அறியப்படுதல். புலப்படுதல் = புலலொடு பொருந்துதல். புல் → புலர் → புலர். புலர்தல் = கண்ணுக்குத் தெரிதல், விடிதல் (மு.தா. 183.) புல் → புல → புலாவு ]*

**புலாழி** *pulāḻi,* பெ. (n.) புலால் நாற்றம் பொருந்திய சக்கரப்படை; discus smelling of slain bodies. *'புலாழித் தலைக் கொண்ட புண்'.* (பு.வெ. 4, 22.)

*[ புல + ஆழி ]*

**புலாற்றானம்** *pulāṟṟāṉam,* பெ. (n.) *புலாலிடம்* பார்க்க; see *pulāliḍam.* *'புலாற்றான நீக்கலாமே'* (தேவா. 1224.)

*[ புலால் + தானம் ]*

Skt. stāna > த. தானம்

**புலாற்றுருத்தி** *pullāṟṟurutti,* பெ. (n.) புலாலிடம் பார்க்க; see pulāliḍam. *'பொல்லாப் புலாற் றுருத்தி போக்கலாமே'* (தேவா. 1224, 1.)

*[ புலால் + துருத்தி ]*

**புலான்மறுத்தல்** *pulāṉ-maṟuttal,* பெ. (n.) புலாலுணவு விலக்குகை (குறள், 26. அதி.); abstinence from animal food.

*[ புலான் + மறுத்தல் ]*

தமிழகத்தில், முதலில்துறவியரே புலா லுணவை நீக்கி வந்தனர். திருவள்ளுவர், அருளுடைமை, புலான் மறுத்தல், கொல்லாமை என்னும் மூவதிகாரங் களையும் துறவறவியலில் வைத்திருப்பதும் கண்ணப்ப நாயனார் படையலும் இங்குக் கவனிக்கத்தக்கன. சமணம் தமிழ் நாட்டிற்கு வந்த பின்னரே இல்லறத்தாரும், சிறப்பாகச் சிவநெறியர், புலாலுணவை நீக்கத் தலைப் பட்டனர். அதனால், மரக்கறியுணவு 'சைவம்' எனப்பட்டது. (ப.த.நா.ப. 39)

**புலானாற்றம்** *pulāṉāṟṟam,* பெ. (n.) புலால் வீச்சம்; smell of fish or flesh.

*[ புலால் + நாற்றம். நாறு → நாற்றம் ]*

**புலானீர்** *pulāṉīr,* பெ. (n.) அரத்தம் (சூடா.); blood.

*[ புலால் + நீர் ]*

**புலி¹** *puli,* பெ. (n.) பூனை இனத்தைச் சார்ந்ததும் வரிக் கோடுகளை யுடையதும் பெரிய தோற்ற முடையதுமான நாற்கால் விலங்கு; large Asian striped feline quadruped, tiger, panther, *'புலி தாக்குறின்'* (குறள், 599) பாம்பை முட்டையிலே, புலியைக் குட்டியிலே கொல்ல வேண்டும் (பழ.)

**மறுவ.** உழுவை, வேங்கை.

**ம., க.,** புலி; **தெ.** புலி, பெத்தபுலி, பெப்புலி; **து.** பிலி; **கோத.** புச்; **துட.** பூசி, ஊலி; **பட.** ஹுலி; **கொலா., நா.** புல்; **கட.** பெர்புல்;

**கோண்.** புல்லீ, புலியால்.

*[ புள் → புல். புல்லுதல் = பொருந்துதல், தழுவுதல். புல்லி → புலி = முன்கால்களால் தழுவும் விலங்கு (சு.வி. 36.) ]*



**புலி²** *puli,* 1. *புலிக்கால்முனி* பார்க்க; see *pulikkāl muṉi. 'தில்லைச் சிவனேயிவ் வாட்டை விட்டுப் போமோ சொல்லாயப் புலி'* (தனிப்பா. ii, 40, 79.); 2. வேங்கை (தைலவ. தைல. 74.). East Indian lion. 3. அரிமா (சிங்கம்) (அக.நி.); lion. 4. மடங்கலோரை(சிங்கவிராசி)(பிங்.); leo of the zodiac. 5. நால்வகைச் சாந்துள் ஒன்று (பிங்.); a compound ointment one of nālvagai-c-cāndu. 6. மயிர்ச் சாந்து; a perfumed unguent for the hair. ஓர் புலிப் பூங்குழலாள் (தனிப்பா. ii, 5, 8.) 7. உண்ணாக்கு (யாழ்.அக.); uvula. 8. சூது கருவிகளி லொன்று; piece in the game of puli-k-kaṭṭam.

**மறுவ.** ஆடுபுலிஆட்டம்

*[ புல்லி → புலி ]*

**புலி³** *puli,* பெ. (n.) நாயுருவிச் செடி; a medicinal plant.

**புலிக்கட்டம்** *puli-k-kaṭṭam,* பெ. (n.) பதினைந்தாம்புலி; a kind of chess.

*[ புலி + கட்டம் ]*

**புலிக்கட்டாம்** *puli-k-kaṭṭām,* பெ. (n.) *புலிக் கட்டம்* பார்க்க; see *puli-k-kaṭṭam.*

*[ புலிக்கட்டம் → புலிக்கட்டாம் ]*

**புலிக்கட்டான்** *puli-k-kaṭṭāṉ,* பெ. (n.) *புலிக் கட்டம் (இ.வ.)* பார்க்க; see *puli-k-kaṭṭam.*

*[ புலிக்கட்டம் → புலிக்கட்டான் ]*

**புலிக்கட்டு** *puli-k-kaṭṭu,* பெ. (n.) புலி வாயைக் கட்டும் மந்திரம்; a spell for stopping or closing the tigers mouth by enchantment and rendering it harmless.

*[ புலி + கட்டு. கள் → கட்டு ]*

**புலிக்கண்** *puli-k-kaṇ,* பெ. (n.) **1.** செத்தை சருகுகள் புகாதபடி மதகின் உட்புறத்தின் நிறுத்தும் துளையிட்ட கல்; stone grid on the inner side of a sluice. **2.** *புலிக்கண்கல்* பார்க்க; see *puli-k-kaṇ-kal.*

*[ புலி → கண் ]*

**புலிக்கண்கல்** *puli-k-kaṇ-kal,* பெ. (n.) தொண்மணிகளுள் ஒன்று(கோமேதகம்) (யாழ்.அக.); sardonyx, a precious stone.

*[ புலிக்கண் + கல் ]*

**புலிக்காலி** *pulikkāli,* பெ. (n.) புலியின் காலடியைப் போன்ற வடிவுள்ள மூலிகை; a herb which resembles the claws of a tiger.

*[ புலி + காலி. கால் → காலி ]*

**புலிக்கான்முனி** *puli-kāṉ-muṉi,* பெ. (n.) ஒரு முனிவர் (வியாக்கிர பாதர்) (கோயிற்பு. பதஞ்சலி. 77.); a ṟṣi, sage, saint.

*[ புலிக்கால் + முனி ]*

**புலிக்குட்டி** *puli-k-kuṭṭi,* பெ. (n.) *புலிக்குருளை* பார்க்க; see *puli-k-kuruḷai.*

**க.** புலிமறி.

*[ புலி + குட்டி ]*

**புலிக்குடத்தி** *puli-k-kuḍatti,* பெ. (n.) கழுதைப்புலி (வின்.); hyaena.

*[ புலி + குடத்தி ]*

**புலிக்குருளை** *puli-k-kuruḷai,* பெ. (n.) இளையபுலி; a younger tiger.

**க.** புலிமறி

*[ புலி + குருளை. குரு → குருள் → குருளை = நாய், பன்றி, புலி, முயல், நரி முதலியவற்றின் குட்டி "நாயே பன்றி புலிமுயல் நான்கும் ஆயுங் காலை குருளை யென்ப." "நரியும் அற்றே நாடினர் கொளினே" (தொல். மரபியல், 8,9)]*

**புலிக்குமிழ்** *puli-k-kumiḻ,* பெ. (n.) பெருங் குமிழ்; coomb teak. (Nels.)

**புலிக்குளமாடு** *pulikkuḷa-māḍu,* பெ. (n.) மதுரை மாவட்டத்தின் புலிக்குளம் என்னும் ஊரிலுள்ள மாட்டுவகை; bullock of a special breed from Pulikkuḷam in Madurai district.

*[ புலிக்குளம் + மாடு ]*

**புலிக்கொடி**[1] *puli-k-koḍi,* பெ. (n.) சோழர்க்குரிய அடையாளக்கொடி; the flag bears the image of tiger. Colar king's flag.

*[ புலி + கொடி ]*

**புலிக்கொடி**[2] *puli-k-koḍi,* பெ. (n.) மருந்துச் செடி வகை; a kind of medicinal plant.

**மறுவ.** வல்லியம்.

*[ புலி + கொடி ]*

**புலிக்கொடியோன்** *puli-k-koḍiyōṉ,* பெ. (n.) சோழன் (பிங்.); Cōla king as having a tiger-flag.

*[ புலி + கொடி + ஒன் ]*

**புலிகடிமால்** *puli-kaḍi-māl,* பெ. (n.) புலியைக் கொன்று முனிவரை மீட்ட இருங்கோவே ளென்னும் சிற்றரசன் (புறநா. 201.); Iruṅkō vēḷ, an ancient chief who slew a tiger that threatened a sage.

*[ புலி + கடி – + மால் ]*

**புலிச்சங்கிலி** *puli-c-caṅgili,* பெ. (n.) *புலித் தொடர் (முல்லைப் 62, உரை.)* பார்க்க; see *puli-t-toḍar.*

*[ புலி + சங்கிலி ]*

**புலிச்சுவடி** *puli-c-cuvaḍi,* பெ. (n.) செடி வகை; tigers foot bindweed.

**ம.** புலிச்சுவடி

*[ புலி + சுவடி ]*

**புலிச்சுறா** *puliccuṟā,* பெ. (n.) 15 அடி வரையில் நீண்டிருப்பதும் மேலே வரிகள் பட்டைப் பட்டையாய்ப் பார்ப்பதற்கு அழகாக இருப்பதும் ஆகிய கடற்சுறா; a sea shark which is more than 15 feet long with stripes on the body.

*[ புலி + சுறா ]*



**புலிச்சோவடி** *puli-c-cōvaḍi,* பெ. (n.) *புலிச்சுவடி* பார்க்க; see *puli-c-uvaḍi.*

*[ புலிச்சுவடி → புலிச்சோவடி ]*

**புலித்தடம்** *pulittaḍam,* பெ. (n.) நஞ்சுக் கொடி; navel cord.

**புலித்தடுக்கி** *puli-t-taḍukki,* பெ. (n.) *புலிதடுக்கி 1 (சங்.அக.)* பார்க்க; see *puli-taḍu-kki.* 1

*[ புலி + தடுக்கி ]*

**புலித்தண்டை** *puli-t-taṇḍai,* பெ. (n.) 1. விருதுவகை; an insignia *'புலித்தண்டையும்.... கயற்றுவசமும் படைத்தோன்'* (சிவந்தெழுந்த பல்ல, பிள். 18.). 2. கோயில் மதிப்பு (மரியாதை) வகை; an honour conferred on a liberal donor to a temple.

*[ புலி + தண்டை ]*

**புலித்தொடக்கி** *puli-t-toḍakki,* பெ. (n.) ஈயத்தண்டு; a sensitive plant.

**புலித்தொடர்** *puli-t-toḍar,* பெ. (n.) தொடரி (சங்கிலி) வகை; a kind of chain. *'புலித்தொடர் விட்ட புனைமா ணல்லில்'* (முல்லைப். 62.).

*[ புலி + தொடர் ]*

**புலித்தோல்** *puli-t-tōl,* பெ. (n.) புலியின் உரி; tiger's skin.

**ம.** புலித்தோல்; **க.** புலிதொகலு; பட, குலிதோலு

*[ புலி + தோல். ]*

**புலித்தோலான்** *puli-t-tōlāṉ,* பெ. (n.) *புலித் தோலுடையோன்* பார்க்க; see *puli-t-tōluḍaiyōṉ.*

*[ புலி + தோல் + ஆன் ]*

**புலித்தோலுடையோன்** *puli-t-tōluḍaiyōṉ,* பெ. (n.) சிவபெருமான் (பிங்.); Šivaṉ, as robed in a tiger's skin.

*[ புலித்தோல் + உடையான் ]*

**புலிதடுக்கி** *puli-taḍukki,* பெ. (n.) **1.** கொடி வகை (பிங்.); Mysore thorn. **2.** கற்றாழை (மலை.); curacoa aloes. **3.** தொடரி (முட்செடி வகை) (மலை.); a straggling prickly shrub.

*[ புலி + தடுக்கி ]*

**புலிதுடக்கி** *puli-tuḍakki,* பெ. (n.) *புலிதடுக்கி, 1. (நாமதீப. 312.)* பார்க்க; see *puli taḍukki 1.*

*[ புலிதடுக்கி → புலிதுடக்கி ]*

**புலிதொடக்கி** *puli-toḍakki,* பெ. (n.) *புலிதடுக்கி 1.* பார்க்க; see *pulitaḍukki.* 1

*[ புலிதடுக்கி → புலிதொடக்கி ]*

**புலிநகக்குறி** *pulinagakkuṟi,* பெ. (n.) காமக்குறி; a sign of sexual possion.

*[ புலிநகம் + குறி ]*

Skt. nakha > த. நகம்

**புலிநகக்கொன்றை** *puli-naga-k-koṉṟai,* பெ. (n.) புலியுகிர் (நகம்) போன்ற பூக்களை யுடைய கொன்றை வகை (யாழ்.அக.); fetid cassia.

*[ புலி + நகம் + கொன்றை ]*

Skt. nakha > த. நகம்

**புலிநகப்பூடு** *pulinagappūḍu,* பெ. (n.) மஞ்சட் கொன்றைப் பூடு; fetid cassia.

**மறுவ.** புலிநகக்கொன்றை, புலிராகி

*[ புலிநகம் + பூடு. பூண்டு → பூடு. ]*

Skt. nakha > த. நகம்

**புலிநகம்** *puli-nagam,* பெ. (n.) *புலியுகிர்'* பார்க்க; see *puli-y-ugir'.*

**ம.** புலிநகம்; **தெ.** புலிகோரு

*[ புலி + நகம் ]*

Skt. nakha > த. நகம்.

**புலிநடலை** *pulinaḍalai,* பெ. (n.) ஆனைத் தடிப்பு என்னும் பூண்டு (சங்.அக.); a plant.

**புலிநெய்** *puli-ney,* பெ. (n.) மருந்தாக உதவும் புலிக்கொழுப்பு; tiger's fat, a medicament.

*[புலி + நெய். நுள் → நொள் → நெள் → நெய் = நீர்மப்பொருளாகிய உருக்கின வெண்ணெய், கொழுப்பு.]*

**புலிப்பளை** *pulippaḷai,* பெ. (n.) புலியிருக்குங் குகை (யாழ்ப்.); tiger's den.

*[புலி + அளை – புலியளை → புலிப்பளை. உள் → அள் → அளை = துளை, வளை, பொந்து, குகை ]*

**புலிப்பற்றாலி** *pulai-p-paṟṟāli,* பெ. (n.) புலியின் பற்களாலாகிய கழுத்தணி; a kind of necklace made of tigers teeth. *'புலிப்பற்றாலிப் புன்றலைச் சிறார்'* (புறநா. 374.)

ம. புலியன்மோதிரம்

*[புலி + பல் + தாலி ]*

**புலிப்பாகைமூர்த்தியார்** *pulippāgai - mūrttiyār,* பெ. (n.) பிற்காலப் புலவர்; a poet of later period.

இவர் வள்ளியம்மை புராணம் என்ற நூலை இயற்றியுள்ளார்.

**புலிப்பாணி** *pulippāṇi,* பெ. (n.) மருத்துவம் (வைத்தியம்), மாயக்கலை (சாலம்), முதலியன பற்றி நூல்களியற்றிய ஒருசித்தர் (சங்.அக.); a Siddha, author of works on medicine and magic.

**புலிப்புறா** *puli-p-puṟā,* பெ. (n.) புள்ளிப்புறா; spoted dove.

*[புள்ளிப்புறா → புலிப்புறா ]*

**புலிப்பூடு** *pulippūḍu,* பெ. (n.) கற்றாழை; aloe.



**புலிப்பொறி** *puli-p-poṟi,* பெ. (n.) மதிற்பொறிகளுளொன்று (சிலப்.15,216, உரை.); defensive machine of a fortress.

*[புலி + பெறி]*

**புலிப்போத்து** *puli-p-pōttu,* பெ. (n.) புலிக்குட்டி; tiger's cub. 'புலிப்போத்தன்ன புல்லணற்காளை' (பெரும்பாண்,138.).

*[புலி + போத்து. போது → போத்து. போது – அரும்பு, பிஞ்சு, இளம்பருவம்.]*

**புலிபம்** *pulipam,* பெ. (n.) பொன்னாவிரை, (மலை.); tanner's cassia.

**புலிபாசிதம்** *pulipāsidam,* பெ.(n.) செவ்வியம்; the stem of pepper climber.

**புலிபாவிரை** *pulipāvirai,* பெ. (n.) *புலிபம்* பார்க்க; see *pulipam.*

மறுவ. பொன்னாவிரை.

*[புலிபம் → புலபாவிரை]*

**புலிமரம்** *pulimaram,* பெ. (n.) வேங்கை மரம்; Indian kino.

மறுவ. கணி.

*[புலி + மரம்.ஒருபொருள்பன் மொழிகளாய் வரும் வேங்கை, புலி என்னும் இரண்டு சொற்களும் புலியைப் போல் காட்சி தரும் மரத்தைக் குறிப்பன வாயின. வேங்கைமரம் பூ பூத்த நிலையில் புலி போல் காட்சியளிப்பதை "உறுபுலி யுருவேய்ப்பப் பூத்த வேங்கை" (கலி.38,6) எனக் குறிப்பதைக் காண்க.]*

**புலிமிட்டீசன்** *pulimiṭṭišaṉ,* பெ.(n.) பூனைக்காவிக் கொடி; a climber-mucuna pruricus.

**புலிமிரட்டி** *pulimiraṭṭi,* பெ.(n.) மாயக்கலை (வித்தை)யில் மை செய்யப் பயன்படும் மூலிகை; a plant used in magic for preparing black paint.

*[புலி + மிரட்டி. மிரட்டு → மிரட்டி]*

**புலிமுகக்கடுக்கன்** *pul-muga-k-kaḍukkaṉ,* பெ.(n.) புலியின் முகத்தைப் போன்றதும் மகளிர் காதிற் பூண்பதுமான அணிவகை (வின்.); a kind of ear-ornament worn by women, resembling a tiger's face.

*[புலிமுகம் + கடுக்கன்]*

**புலிமுகச்சிலந்தி** *puli-muga-c-cilandi,* பெ. (n.) நச்சு வண்டுவகை (யாழ்.அக.); tarantula, as tiger-faced.

*[புலிமுகம் + சிலந்தி]*

**புலிமுகத்தண்டை** *puli-muga-t-taṇḍai,* பெ.(n.) புலித்தண்டை பார்க்க; see *puli-t-taṇḍai.*

*[புலிமுகம் + தண்டை. தள் → தண்டு → தண்டை = தாமரைக்கொடித் தண்டு போன்ற காலணி.]*

**புலிமுகப்பணி** *puli-muga-p-paṇi,* பெ.(n.) *புலிமுகக் கடுக்கன் (யாழ்.அக.)* பார்க்க; see *puli-muga-k-kaḍukkaṉ.*

*[புலி + முகம் + பணி]*

**புலிமுகப்பு** *puli-mugappu,* பெ. (n.) *புலிமுகமாடம் (சீவக. 1836, உரை)* பார்க்க; see *puli-muga-māḍam.*

*[புலி + முகப்பு. முகம் → முகப்பு]*

**புலிமுகப்பூச்சி** *puli-muga-p-pūcci,* பெ. (n.) *புலிமுகச் சிலந்தி (சங்.அக.)* பார்க்க; see *puli-muga-c-cilandi.*

*[புலி + முகம் + பூச்சி]*

**புலிமுகம்** *puli-mugam,* பெ.(n.) மாட நெற்றி வகை (திவ். பெரியதி. 3, 8, 2 வ்யா. பக். 607); a kind of facade.

ம. புலிமுகம்.

*[புலி + முகம். முகு → முகம் = முன்பக்கம், தலையின் முன்பக்கம்.]*

'புலிமுகமாடம்' பார்க்க.

**புலிமுகமாடம்** *puli-muga-māḍam,* பெ.(n.) புலியுருவத்தை முகப்பிற் செய்து வைத்துள்ள மாளிகை; edifice having the figure of a tiger in its facade. *'புலிமுகமாட மலிர வேறி'* (பெருங். இலாவாண. 9, 69.).

*[புலிமுகம் + மாடம்]*

**புலிமுகவாயில்** *puli-muga-vāyil,* பெ.(n.) புலிமுக வுருவமைந்த வாயில் (சீவக. 1836, குறிப்பு); the gate of an edifice, bearing the figure of a tiger in its facade.

*[ புலிமுகம் + வாயில் ]*

**புலிமுன்னாடு** *pulimunnāḍu,* பெ. (n.) மூலிகை முன் நோய்; as the goat can't stand before the tiger so also disease cannot stand before the medicine.

*[ புலி + முன் + ஆடு]*

**புலிமுனியோன்** *puli-muniyōn-,* பெ.(n.) *புலிக்கான்முனி* பார்க்க; see *puli-k-kānmuni.* *'தெரிவுற நீடும் புலிமுனி யோனும்'* (கோயிற்பு. நடராச. 35.)

*[ புலி + முனியோன். முனிதல் = சினத்தல், வெறுத்தல். முனி → முனிவன் = உலகப்பற்றைத் துறந்த அறிவன். முனி → முனியோன் ]*

**புலிமெய்ச்சிலந்தி** *puli-mey-c-cilandi,* பெ. (n.) *புலிமுகச் சிலந்தி (வின்.)* பார்க்க; see *puli-muga-c-cilandi.*

*[ புலி + மெய் + சிலந்தி ]*

**புலியன்திருக்கை** *puliyan - tirukkai,* பெ. (n.) மீன்வகையுளொன்று; a kind of fish.

**புலியிண்டு** *puli-y-iṇḍu,* பெ.(n.) கொடிவகை; white brasiletto climber(L.)

*[ புலி + இண்டு ]*

**புலியுகிர்**[1] *puli-y-ugir,* பெ.(n.) 1. புலியின் உகிர்; a tigers claw. 2. புலியின் உகிரை (நகத்தை)க் கோத்துக் குழந்தைகளுக்குக் காப்பாக அணியும் ஓரணி; a necklet with a pendant of tiger's claw, of ten used as a charm for a child. 3. உகிர் (நக)க் குறிவகை (கொக்கோ. 5, 53.); (erot.) nail-mark on the breasts of a woman. 4. மரவகை; a tree.

**க.** புலியுகுர்;; **தெ.** புலிகோரு; **பட.** ஹுலிஉகிலு.

*[ புலி + உகிர். உள் → உளி → உளியம் = உளிபோற் கூரிய உகிர்களையுடைய கரடி. உளி → உகி → உகிர் ]*

**புலியுகிர்**[2] *puli-y-ugir,* பெ.(n.) முப்பத்திரண்டு ஓமாலிகையுள் ஒன்று (சிலப். 6, 77, உரை); an aromatic substance, one of 32 ōmāligai, q.v.

*[ புலி + உகிர் ]*

**புலியுகிரி** *puliyugiri,* பெ.(n.) *புலிதடுக்கி, 1 (சங்.அக.)* பார்க்க; see *puli-taḍukki-1*

*[ புலி + உகிரி ]*

**புலியுகிலி** *puli-y-ugili,* பெ.(n.) *புலியுகிரி (மலை.)* பார்க்க; see *puli-y-ugiri.*

*[ புலியுகிரி → புலியுகிலி. 'ர—ல' போலி]*

**புலியுப்புக்கண்டம்** *puliyuppu-k-kaṇḍam,* பெ.(n.) காயவைத்துப் பக்குவப்படுத்திய புலியின் இறைச்சித் துண்டம்; dried and preserved tiger's flesh.

*[ புலி + உப்புக்கண்டம் ]*

**புலியும்ஆடும்** *puliyum - āḍum,* பெ.(n.) சிறுவர் விளையாட்டு; a kind of children game.

*[ புலி + உம் + ஆடு + உம் ]*

பல பிள்ளைகள் வட்டமாய்க் கைகோத்து நிற்க ஒரு பிள்ளை உள்ளும் மற்றொரு பிள்ளை வெளியும் நிற்பர். உள்நிற்கும் பிள்ளை ஆடாகவும் வெளிநிற்கும் பிள்ளை புலியாகவும் பாவிக்கப்பெறுவர். புலிக்கும் வட்டமாய் நிற்கும் பிள்ளைகட்கும் பின் வருமாறு உரையாட்டு நிகழும்.

புலி: சங்கிலி புங்கிலி கதவைத்திற. பிள்ளைகள்: நான்மாட்டேன் வேங்கைப்புலி.

புலி: வரலாமா? வரக்கூடாதா? பிள்ளைகள்: வரக்கூடாது.

பிள்ளைகள் வழிமறித்தபின் புலியாரேனும் இரு பிள்ளை கட்கிடையில் நுழையப் பார்க்கும். பிள்ளைகள் இடம்விடுவதில்லை. பலமுறை அங்குமிங்கும் சுற்றிப் பார்த்தபின், புலிதிடுமென்று ஒரிடத்தில் வலிந்து புகும். உடனே ஆடு வெளியே விடப்பெறும். புலி ஆட்டைப்பிடிக்க வெளி யேறும். ஆடு மீண்டும் உள்ளே விடப்பெறும். இங்ஙனம் மாறிமாறி இரண்டொருமுறை நிகழ்ந்தபின் இறுதியில் புலி ஆட்டைப் பிடித்துக் கொள்ளும்.

இவ்விளையாட்டின் தோற்றம் வெளிப்படை. வட்டமாய் நிற்கும் பிள்ளைகள் ஆட்டுத் தொழுவத்தை நிகர்ப்பர் (த.வி.130)

**புலியுயர்த்தோன்** *puli-y-uyarttōṉ,* பெ.(n.) சோழன் (புலிக் கொடியை உயர வெடுத்தவன் (சூடா.)); Cōla king, as flying a tiger-flag.

**மறுவ.** புலிக்கொடியோன்

*[ புலி + உயர்த்தோன் ]*

**புலியுறுமி** *puli-y-uṟumi,* பெ.(n.) **1.** புலிபோல் முழங்கும் பறை வகை; a kind of drum sounding like the growl of a tiger. **2.** கிறிச்சான்; watchman's rattle. **3.** புள்ளோட்டுங் கருவி; rattle to scare away birds.

*[ புலி + உறுமி ]*

**புலியுறை** *puli-y-uṟai,* பெ.(n.) புலித்தோலாற் செய்த கருவியின் மேலுறை; sheath of sword, javelin, etc., made of tiger's skin. ***'திண்பிணி யெஃகம் புல்யுறை கழிப்ப'*** (பதிற்றுப். 19, 4)

*[ புலி + உறை ]*

**புலியூர்**[1] *puliyūr,* பெ.(n.) தில்லை (சிதம்பரம்) (சூடா.); Tillai (Chidambaram)

*[ புலி + ஊர் ]*

புலிகள் மிகுதியாக இருந்த ஊர் என்னும் பொருளில் ஏற்பட்ட பெயர். புலியின் வீரத்தை வியந்து பாராட்டும் வகையில் அமைந்த ஊர் புலியூர் என்றும் அமையும். பாதிரிப்புலியூர், எருக்கத்தம் புலியூர் முதலிய ஊர்கள் பாடல்பெற்றுள்ளன. பெரும்புலியூர் பெரம்பலூர் என்றும் குறும்புலியூர் குறும்பலூர் என்றும் திரிபடைந்துள்ளன. மயிலாடுதுறைக்குத் தெற்கே அமைந்த ஊர் சிறுபுலியூர். ஆயின் புலிக்காலுடன் திகழ்ந்த முனிவன் (வியாக்கரபாதர்) வாழ்ந்த இடம் என்று தொல்கதை புனையப்பட்டது பிற்கால வழக்காகும்

**புலியூர்**[2] *puliyūr,* பெ. (n.) குட்டநாட்டு ஊர்; a village in Kuṭṭanāḍu. "செழுநீர் வயல் குட்டநாட்டுத் திருப்புலியூர்" (நாலா–2942). 'திகழ் மணி நெடு மாடம் நீடு திருப்புலியூர்' (நாலா–2944)

*[ புலி + ஊர் .]*

புலிகள் மிகுதியாக வாழ்ந்தமையால் இப்பெயர் பெற்றது.

**புலியூர்க்கோட்டம்** *puliyūr-k-kōṭṭam,* பெ.(n.) தொண்டை மண்டலத்துக் கோட்டங்களு ளொன்று (S.I.I. iv. 188); a kōṭṭam in Toṇḍaimaṇḍalam.

*[ புலியூர் + கோட்டம். கோடு → கோட்டம் ]*

**புலியூர்சிதம்பரரேவணசித்தர்** *puliyūr-šidambara - rēvaṇa - šittar,* பெ.(n.) பிற்காலப் புலவர்; a poet of later period.

இவர் அகராதி நிகண்டு, சிவஞான தீபம், பட்டீச்சுரப் புராணம் ஆகிய நூல்களை இயற்றியுள்ளார்.

**புலியூர்ப்பட்டு** *puli-y-ūr - paṭṭu,* பெ.(n.) பட்டுவகை; a kind of silk cloth. (S.I.I.viii. 85)

*[ புலியூர் + பட்டு ]*

**புலியூர்வெண்பா** *puli-y-ūr-veṇbā,* பெ.(n.) தில்லை (சிதம்பரத்து)ச் சிவபெருமான் மேல் பதினெட்டாம் நூற்றாண்டினரான மாரிமுத்துப் புலவரியற்றிய ஒரு சிற்றிலக்கியம் (அபி.சிந்.); a poem on the Sivaṉ shrine in Chidambaram, by Māri-muttu-p-pulavar of 18th cent.

*[ புலியூர் + வெண்பா ]*

**புலியேறு** *puli-y-ēṟu,* பெ.(n.) ஆண் புலி; male tiger.

*[ புலி + ஏறு. ]*

**புலிராகி** *pulirāgi,* பெ.(n.) *புலிநகப்பூடு* பார்க்க; see *pulinagappūḍu.*

**புலிரிகம்** *pulirigam,* பெ.(n.) பாம்பு (யாழ்.அக.); snake.

**புலிவலம்** *pulivalam,* பெ.(n.) திருவாரூர் மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Tiruvārūr dt.

*[ புலி + வலம் ]*

**புலிவேடம்** *puli-vēḍam,* பெ.(n.) இசுலாமியத் (முகரம்) திருநாளில் கொள்ளும் புலிக்கோலம் முதலியமுகமூடி உருவம்(வேடம்); masquerade during Muharram especially the tiger-masquerade. (G.Sm.D.I.i, 160.)

*[ புலி + வேடம். ]*

Skt. vēṣa > த. வேடம்

**புலு** *pulu,* பெ.(n.) பத்தைக் குறிக்கும் குழூஉக்குறி (சங்.அக.); cant for ten.

**புலுட்டு–தல்** *puluṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) **1.** தோசை (ரொட்டி) முதலியன கருக்குதல்; to roast, parch, fry lightly. **2.** சுடுதல்; to burn, as one's finger; to scald.

*[ புல் → புலு → புலுண்டு → புலுட்டு–, ]*

**புலுட்டை** *puliṭṭai,* பெ. (n.) **1.** செழிப்பற்றது; that which is withered, thin, lean. *'புலுட்டைப் பயிர்'* **2.** மங்கின நிறம்; colour; tawny brown *'புலுட்டைப் பசு'* **3.** மங்கின அல்லது செழிப்பற்ற தன்மை; withering condition.

*[ புல் → புலு → புலுண்டு → புலுட்டு → புலுட்டை ]*

**புலுண்டல்** *puluṇḍal,* பெ.(n.) **1.** கருகலுணவு; food carelessly cooked, badly rusted or smoked. **2.** *புலுட்டை* பார்க்க; see *puluṭṭai.*

**மறுவ.** புல்காரொட்டி

*[ புலுண்டு → புலுண்டல். 'அல்' தொ.பெ.ஈறு ]*

**புலுண்டு–தல்** *puluṇḍu-,* 15 செ.கு.வி. (v.i.) கருகுதல்; to be roasted, fried or parched lightly; to be spoiled in boiling by absorption of water.

[ புல் → புள் → புழுங்கு. புழுங்குதல் = எரிதல், புகைதல் .
புல் → புலு → புலுண்டு–, ]

**புலை[1]** *pulai,* பெ.(n.) 1. இழிவு; baseness. *'புலையாம் பிறவி பிறந்து'* (அஷ்டப். திருவரங்க. 16) 2. தூய்மையற்றது; uncleanness *'புலை சூழ் வேள்வியில்'* (மணிமே. 13, 28) 3. தீட்டு; defilement *'பொன்னகர் மூடிப் புலைசெய் துடன்று'* (கல்லா. 25, 11) 4. தீயநெறி; vice, evil way *'புலைமேலுஞ் செலற்கொத்துப் போது கின்ற செல்வத்தின்'* (கம்பரா. இராவணன்வதை. 204) 5. பொய்; lie. *'கள்ளங் கொலை கட்புலை காமமென் றைந்து மற்றார்க்கு'* (அரிச்.பு.நாட்டுப். 6) 6. விலைத்தொழில்; adultery. *'புல்ல லோம்பன் மின் புலைமக னிவனென'* (மணிமே. 13, 91) 7. கீழ்மகன்; outcaste. *'எச்சிலார் நோக்கார் புலைதிங்கள்'* (ஆசாரக். 6) 8. தீ நாற்றம் (வின்); stench.

க. பொல், கொல்; து. பொலசு

[ புல்லுதல் = துளைத்தல். புல் = உட்டுளை யுள்ள நிலைத்திணை வகை. புல் → புன் → புன்மை = புல்லைப் போன்ற இழிந்த நிலை, இழிவு, சிறுமை, சிறு தன்மை. புல் → புல்லன் = இழிந்தோன். புல் → புலை]

**புலை[2]** *pulai,* பெ.(n.) ஊன்; animal food "புலையுள்ளி வாழ்தல்" (இன். நாற். 13).

[ புல்லுதல் = பொருந்துதல், ஒட்டுதல். புல் → புலை = உடற்கூட்டில் எலும்போடு ஒட்டியிருக்கும் தசை, ஊன் ]

**புலைக்குளி** *pulai-k-kuḷi,* பெ.(n.) பிணத்தைப் புதைத்து விட்டு, வீடுதிரும்பும் முன் குளித்து விட்டு வருவது; bath taken after burying the corpse, before returning to the house.

[ புலை + குளி. பிணம் புலையாக(தீட்டாக)க் கருதப்பட்டதால் அதை நீக்கும் பொருட்டுக் கொள்ளும் குளியல் புலைக்குளி எனப்பட்டது]

**புலைச்சி[1]** *pulaicci,* பெ.(n.) புலைப்பெண்; a woman of pulaiya caste. *'கண்ணில்லா ளொரு புலைச்சி'* (பிரமோத். 3, 3.)

ம. புலச்சி; க. பொலதி, கொலதி

[ புல் → புலை → புலைச்சி. 'சி' பெ.பா.ஈறு ]

**புலைச்சி[2]** *pulaicci,* பெ.(n.) எவட்சாரம் (சங்.அக.); nitrate of potash.

**புலைச்சேரி** *pulaiccēri,* பெ.(n.) புலை (சாதியோர்) வாழுமிடம்; quarters of the pulaiyās. *'அவ்வாறு செறிமனைகள் புலைச்சேரி சுடுகாடாகும்'* (சிவரக. பிசாசு. 22)

க. பொலெகேரி, பொலகேரி, கொலகேரி, கொலெகேரி

[ புலை + சேரி. சேர் → சேரி ]

**புலைசு** *pulaiśu,* பெ.(n.) புலால்; flesh, raw meat. *'புலைசு தேன்க ளொருவுதல்'* (யசோதர. 4, 17.)

மறுவ. இறைச்சி, ஊன், கறி, திற்றி, தூ, தூவு, புலவு, புலால், வள்ளூரம், விடுக்கு

தெ. பொலுசு

[ புலை → புலைசு ]

**புலைஞர்** *pulaiñar,* பெ.(n.) 1. இழிந்தோர்; (யாழ்.அக.) vile people. 2. கீழ்மக்கள் (பிங்.); out castes.

[ புலை → புலைஞர் ]

**புலைத்தனம்** *pulai-t-taṉam,* பெ.(n.) 1. இழிகுணம்; baseness, vileness. 2. கொலைக் குணம் (யாழ்.அக.); barbarity; cruelty to animals.

*[ புலை + தனம் ]*

**புலைத்தி** *pulaitti,* பெ.(n.) 1. இழிகுலத்துப் பெண்; a low caste woman. *'முருகு மெய்ப் பட்ட புலைத்தி போல'* (புறநா. 259) 2. வண்ணாத்தி; washerwoman. *'புலைத்தி கழீஇய தூவெள்ளறுவை'* (புறநா. 311.)

க. கொலத்தி, பொலதி; படை. கொலத்தி

*[ புலை → புலைத்தி. 'தி' பெ.பா.ஈறு ]*

**புலைத்தொழில்** *pulai-t-toḻil,* பெ.(n.) இழிசெயல்; evil habits, vile practice. *'பொல்லாத காமப் புலைத்தொழிலில்'* (தாயு. எந்நாட். தத்துவ. 13.)

க. பொலெகெலச (தீட்டுடன் தொடர்பு கொள்ளுதல்)

*[ புலை + தொழில் ]*

**புலைப்பாடி** *pulai-p-pāḍi,* பெ.(n.) புலைச்சேரி பார்க்க; see *pulai-c-cēri.* *'சிற்றில்பல நிறைந்துளதோர் புலைப்பாடி'* (பெரியபு. திருநாளைப். 6.)

*[ புலை + பாடி. படு → பாடு → பாடி = மிகத் தாழ்மட்டமான கூரை வீடுகள் சேர்ந்த முல்லை நிலத்தூர், சிற்றூர், ஊர் ]*

**புலைமகன்** *pulai-magaṉ,* பெ. (n.) 1. கீழ்க்குலத்தைச் சேர்ந்தவன்; low-caste man. 2. இறுதிச்சடங்கு செய்விப்போன் (புரோகிதன்); purohit, as officiating in funeral ceremonies. *'புலை மகனுக்குப்'* (சீவக. 2984) 3. மயிர் மழிப்போன் (நாவிதன்); barber, as officiating in funeral ceremonies (சீவக. 2984, உரை)

ம. புலயன்; க. பொலெய; படை. கொலய

*[ புலை + மகன். மழ → மக → மகன். ]*

**புலைமை** *pulaimai,* பெ.(n.) 1. இழிவு; vileness; baseness; *'நின் தலைமையில் வாழ்க்கை புலைமையென்றஞ்சி'* (மணி, 24, 80.) 2. இழிவான நடை (வின்.); vicious practice.

க. பொல், கொல்.

*[ புலை → புலைமை ]*

**புலையர்சுடுநீறு** *pulaiyar-šuḍu-nīṟu,* பெ.(n.) சுடுகாட்டுச் சாம்பல்; ash of the burning pure

*[ புலையர் + சுடு + நீறு ]*

**புலையவிர்ப்பட்டை** *pulai-y-avir-p-paṭṭai,* பெ.(n.) கருப்புநிற மூலிகை; honey shrub.

**புலையன்** *pulaiyaṉ,* பெ.(n.) 1. கீழ்மகன்; base or low caste person, outcaste; *'புலையனும் விரும்பாதவிப் புன்புலால் யாக்கை'* (அரிச். 4. மயான. 128.) 2. இறுதிச்சடங்குசெய்விப்போன் (புரோகிதன்); purohit *'புலைய னேவப் புன்மேல் அமர்ந்துண்டு'* (புறநா. 360) 3. ஒருசார் மலை வாழ்நர் (சாதி); an aboriginal caste on the Aṉaimalai's and other hills of South India. 4. இழிசினர், கீழோர் (சண்டாளன. அரு.நி.); outcaste. 5. பாணன்; a person belonging to Pāṇaṉ caste. *'பாண்டலை யிட்ட பலவல் புலையனை'* (கலித். 35)

ம. புலையன்; க. பொலெய, கொலெய;

குட. பொலெய; பட கொலெய

*[ புலை → புலையன் ]* புலை[1] பார்க்க

pulinda, a man of a barbarous tribe. Gt. (p. **528**) compares. D. poleya (pulaya) s. pole. cf. plava (No. 207) pulōma, name of a demon. For this term too Gt. (p. **528**) compares D. pole etc., pulkasa, the son of a Nishāda or of a Sūdra father as of a Kshatriyā mother. Gt. (p. **528**) refers also this term to D. pōle. etc., (KKED xxix)

**புலையாட்டம்** *pulai-y-āṭṭam,* பெ.(n.) நிலையின்மை (வின்.); transitoriness, illusiveness.

*[ புலை + ஆட்டம். ஆடு → ஆட்டு → ஆட்டம் ]*

**புலையாட்டு** *pulai-y-āṭṭu,* பெ.(n.) *புலையாட்டம் (வின்.)* பார்க்க; see *pulai-y-āṭṭam.*

*[ புலை + ஆட்டு. ஆடு → ஆட்டு ]*

**புலையாடி** *pulai-y-āḍi,* பெ.(n.) புலையன் எனப் பொருள்படும் வசை(நிந்தை)ச்சொல்; pulaiya man, a term of abuse.

*[ புலை + ஆடி. ஆடு → ஆடி. 'இ' வினைமுதலீறு ]*

**புலையாடு-தல்** *pulai-y-āḍu-,* 7 செ.கு.வி.(v.i.) இழிவாக நடத்தல் (வின்); to lead a vicious life.

*[ புலை + ஆடு-, 'ஆடு' து.வி.]*

**புலைவினையர்** *pulai-viṉaiyar,* பெ.(n.) இழிதொழிலாளர்; abominable, vile person; men of execrable deeds. *'கொலைவினைய ராகிய மாக்கள் புலை வினையர்'* (குறள், 329)

*[ புலை + வினையர் ]*

**புலௌ** *pulau,* பெ. (n.) *புலவு[4] (வின்.)* பார்க்க; see *pulavu[4].*

*[ புலவு → புலௌ ]*

**புவ்வத்தாமரை** *puvva-t-tāmarai,* பெ. (n.) திருமாலின் உந்தி (நாபி)யினின்று எழுந்த முளரி (கமலம்); lotus from the navel of Viṣṇu, as the most ancient. *'புவ்வத் தாமரை புரையுங் கண்ணன்'* (பரிபா.15,49.)

*[ பூ → பூவு → புவ்வு + தாமரை. தும் → தும்பு → துப்பு = சிவப்பு. தும்பு → தும் பரம் = சிவப்பு. தும் → துமர் → துவர் = சிவப்பு. துமர் → தமர் → தாமரம் = செம்பு. தாமரம் → தாமரை ]*

**புவ்வா** *puvvā,* பெ. (n.) உணவு; food.

க., தெ. புவ்வ

*[ புகுதல் = உட்செல்லுதல், வாய்க்குட் செல்லுதல். புகு → புகா = வாய்க்குட் செல்லும் உணவு. ஒ.நோ. உள் → உண். புகா → புகவு = உணவு. புகா → புவா → புவ்வா (கொ.வ.) (வ.வ.2,37) ]*

**புவ்வு** *puvvu,* பெ. (n.) பூ பார்க்க; see *pū.*

க.புவ்வு, பூவு, குவ்வு, கூவு; தெ. புவு, புவ்வு,

*[ பூ → பூவு → புவ்வு ]*

**புவத்துக்குடி** *puvuattu-k-kuḍi,* பெ. (n.) தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள புவத்துக் குடியிலிருந்து வந்த ஒருசார் செட்டி இனம் (சாதி); (E.T.ii.) a division of Chettis who wear a tuft of hair and who came originally from Puvattu-k-kuḍi, a village in Tañjāvūr district.

*[ புறத்துக்குடி → பூத்துக்குடி) → புவத்துக்குடி ]*

**புவர்** *puvar,* பெ. (n.) பகைவர்; enemies. (Tranquebar.)

**மறுவ.** எதிரி.

*[ பகைவர் → பொகவர் → புகவர் → புவர்]*

**புழக்கடை** *pul̤a-k-kaḍai,* பெ. (n.) *புழைக்கடை (கொ.வ.)* பார்க்க; see pul̤ai-k-kaḍai.

**மறுவ.** கொல்லைப்புறம், புறவாடை, பொற வடை.

*[ புழைக்கடை → புழக்கடை]*

**புழக்கடைநடை** *pul̤a-k-kaḍai - naḍai,* பெ. (n.) புழைக்கடைக்குப் போகும் வழி; gangway leading to the backyard of a house(C.G.).

**மறுவ.** நடை.

*[புழைக்கடை → புழக்கடை + நடை]*

**புழக்கம்** *pul̤akkam,* பெ. (n.) **1.** அறிமுகம்; familiarity. **2.** (காசு, சொல் முதலியவை) வழக்கில் இருக்கும் நிலை, பயன்பாடு; (of coins, word,etc,) circulation, currency. use. புதிய இருபத்தைந்து காசு புழக்கத்திற்கு வந்துள்ளது, இந்தச் சொல் இன்னும் புழக்கத்தில் இருக்கிறதா? (உ.வ.) **3.** தோற்றம் (யாழ்.அக.); appearance **4.** இடைவெளிவிட்ட தன்மை; sparseness. *'புழக்கமாய் நாற்று விட்டான்'* Cm.

*[பன் → (பய்) → பயில் → பயிற்று. பழ → பழகு → பழக்கு → பழக்கம் பழகு → பழங்கு, பழங்குதல் = ஒரு புதுப்பொருளைப் பலநாட் பயன் படுத்துதல் பழைமையாக்குதல், பயன் படுத்துதல். பழங்கு → புழங்கு → புழக்கம் = ஒரு பொருளைப் பலகாற் பயன் படுத்துதல், ஓரிடத்திற் பழகுதல், நடமாட்டம், பணப்புழக்கம், மக்கட்புழக்கம் என்பன வழக்கு (மு.தா.274,275)]*

**புழக்கை** *pul̤akkai,* பெ. (n.) அல்குல் வழி; way of vagina.

*[புழு → புழை = துளை. புழை → புழைக்கை = (துளையுடைய) தும்பிக்கை. புழைக்கை → புழக்கை]*

**புழகு** *pul̤agu,* பெ. (n.) **1.** மலையெருக்கு; mountain madar, *'புழகமல் சாரல்'* (மலைபடு.219.) **2.** புனமுருங்கை; palas tree. (குறிஞ்சிப்.96.உரை.) **3.** செந்நிறப்பூவுள்ள செடி (குறிஞ்சிப்.96,உரை.); a plant with red flowers.

**புழங்கு-தல்** *pul̤aṅgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) & செ.கு.வி. (v.t.) **1.** கையாளுதல் to practice, exercise, put to use. *'விதர்ப்ப தேயத்திற் புழங்கலுறும் பொருண் முழுதும் பொலிந்து'* (விநாயகபு.55,4.) **2.** பழகுதல் (இ.வ.); to be conversant or acquainted to abide or associate with.

*[பழ → பழகு → பழக்கு → பழக்கம். பழகு → பழங்கு → புழங்கு (மு.தா.274, 275)]*

**புழப்பு** *pul̤appu,* பெ. (n.) பொன்னாவிரை (சங்.அக.); tanner's cassia.

**புழல்** *pul̤al,* பெ. (n.) **1.** உட்டுளை; tube, anything hollow, *'பூழிபூத்த புழற்காளாம்பி'* (சிறுபாண்.134.) **2.** சாக்கடை(சலதாரை)(பிங்.); drain. **3.** பண்ணியாரம்; a kind of pastry.

'*தீம்புழல்வல்சி* (மதுரைக்.395.)4. மீன்வகை (பிங்.); fish.

*[புல்லுதல் = துளைத்தல். புல்→ புள்→ புழு = துளைத்தரிக்கும் சிற்றுயிரி. புழு → புழல் (வே.க.3,101–106)]*

**புழற்காய்** *pul̠aṟkāy,* பெ. (n.) நடுவில் துளைகொண்ட காய், கொன்றை; hollow fruit, as of konṟai '*புழற்காய்க் கொன்றைக் கோடணி கொடியினர்*' (நற்.296,4)

*[புழல் + காய்]*

**புழற்கால்** *pul̠aṟkāl,* பெ. (n.) துளையுள்ள நாளம்; hollow stalk as of a lotus. புழற்காலாம்பல் முதலியனவும் (தொல். பொ.642, உரை.)

*[புழல் + கால்]*

**புழற்கோட்டம்** *pul̠aṟ-kōṭṭam,* பெ.(n.) தொண்டைமண்டலத்துக் கோட்டங்களுளொன்று; a kōṭṭam in Toṇḍai-maṇḍalam. (S.I.I.iv,187);

*[புழல் + கோட்டம். கோடு → கோட்டம்]*

**புழற்கோடு** *pul̠aṟ-kōḍu,* பெ. (n.) உட்டுளையுள்ள கொம்பு; hollow horn. '*புழற்கோட்டாமான் புகல்வியும்*' (குறிஞ்சிப்.253.).

*[புழல் + கோடு. குல் → குள் → கொள் → கொடு → கோடு = வளைவு, வளைந்த விலங்குக்கொம்பு.]*

**புழாந்தை** *pul̠āndai,* பெ. (n.) புழானென்பவனுடையதந்தை (தொல். எழுத்.348,உரை,); father of Pul̠āṉ.

*[புழான் + தந்தை → புழான்தந்தை → புழாந்தை (மரூஉ)]*

**புழு**[1] *pul̠u,* பெ. (n.) 1. காலற்று நெளிந்து நகரும் நீள் உடலுயிரி, சிற்றுயிரி (கிருமி); Worm, maggot '*புழுவாய்ப் பிறக்கினும்*' (தேவா.1012,8.) 2. கரு (இ.வ.); embryo

ம.புழு; க.புழு, புழ; தெ.புருகு, புருவு, ப்ருவ்வு; துபுரி,புர, புரு; கோத.பு; துட. புவ்; பட. கூ; குட, புளு; கொலா, நா,பர்ரெ;

பர்.புருட்; கட.புடுத்; மா.பொம்ரு; கொண்.பிழி; கூய். ப்ரியு, ப்ரீயு; குவி. ப்ரீயுலி; குரு.பொச்கொ; பிரா.பு;

*[புல்லுதல் = துளைத்தல். புல் → பொய். பொல்லுதல் = துளைத்தல். பொல் = புதல். புல் → புள் → புழு = துளைத்தரிக்கும் சிற்றுயிரி. (வே.க.3,101–104)]*

pilu, a worm, an insect cf.D.pul̠u, etc., puṇḍara, a worm cf.D.pul̠a, etc., pulaka, anykind of insect or vermin infesting animals. cf.D.pul̠a, etc. (KKED.xxi)

**புழு²–த்தல்** *pul̠u-,* 11 செ.கு.வி. (v.i.) 1. புழுப்பிறத்தல்; to breed worms. '*அவரைக்காய் புழுத்துப் போயிற்று*' 2. சூலுருதல் (கருத்தரித்தல்); to become pregnant. அவள் வயிற்றில் ஒரு புழுவாவது புழுக்கவில்லையே 3. மிகுதல்; to be superabundant as, fruits. '*இந்த ஆண்டு (வருடம்) பலாக்காயாய்ப் புழுத்துப் போயிற்று*' (இ.வ.) 4. வெறுப்புடன் பேசுதல் (வின்.); to abuse 5. பயனற்றதாதல் (கொ.வ.); to be useless or worthless, as a worm eaten thing.

ம.புழுக்க; க.புழி; தெ.ப்ருச்சு; து.புர்குனி; புர்ங்குனி; குரு.பொச்னா; பட.கூத்து.

*[புல் → புள் → புழு–, (வே.க.3,104)]*

**புழுக்கச்செய்–தல்** *pulukkaccey-,* 1 செ.கு.வி. (v.i.) நச்சுப் புழுவை யுருவாக்கல்; to verminate

*[புழுக்க + செய்–,]*

**புழுக்கட்டி** *pulukkatti,* பெ. (n.) **1.** புழுக்களால் நேர்ந்த கட்டி; abscess formed on account of germs. **2.** புழுக்கள் நிறைந்த கட்டி; worm ridden abscess.

*[புழு + கட்டி. கள் → கட்டி]*

**புழுக்கடி**[1] *pulukkadi,* பெ. (n.) **1.** புழு அரித்தது (வின்.); anything worm eaten. **2.** முடியை உதிரச் செய்யும் நோய்வகை; a disease which makes the hair fall off.

**மறுவ.** புழுவெட்டு.

**ம.** புழுக்கடி

*[புழு + கடி]*

**புழுக்கடி**[2] *pulukkadi,* பெ. (n.) *புழுக்கம், 1. (இ.வ.)* பார்க்க; see *pulukkam.1*

*[புழுக்கம் → புழுக்கடி]*

**புழுக்கம்** *pulukkam,* பெ. (n.) **1.** காற்றில்லாத சரக்கறையில் வியர்க்கும் வெப்பம்; heat, sultriness. **2.** வேர்வை; sweat. **3.** துன்பம்; great distress *'நெஞ்சு புழுக்கமுறத் திண்டாடினன்'* (கம்பரா. அதிகாய.27.) **4.** பொறாமை (கொ.வ.); envy. **5.** வன்மம் (யாழ்.அக.); long cherished hatred.

*[புழுங்கு → புழுக்கம்.]*

**புழுக்கமா–தல்** *pulukkam-ā-,* **6** செ.கு.வி. (v.i.) வெப்பங்கொள்ளல்; to get heat from closeness of air.

*[புழுக்கம் + ஆ –,]*

**புழுக்கமானகாலம்** *pulukkamāna-kālam,* பெ.(n.) மிகுவெப்பமுள்ள பருவம்; sweltering weather.

*[புழுக்கமான + காலம்]*

**புழுக்கமுறல்** *pulukkamural,* பெ. (n.) கூடுதலாக வியர்த்தல்; sweat.

*[புழுக்கம் + உறல். உறு → உறல்]*

**புழுக்கல்** *pulukkal,* பெ. (n.) **1.** அவித்தது; anything slightly boiled *'உப்பிலிப்புழுக்கல்'* **(சீவக.2984.) 2.** சோறு; cooked rice. *'விரலென நிமிர்ந்த நிரலமை புழுக்கல்'* **(பொருந.1141) 3.** புழுங்கலரிசி; rice from paddy parboiled, dried and husked. *'புழுக்கலா னிமிர்ந்த சோறு'* **(திருவிளை.நாட்ப்டு.32.) 4.** முதிரைப்பண்டம்; pulse, pease *'புழுக்கலு நோலையும்'* **(சிலப்.5,68.)**

*[புழுக்கு →புழுக்கல். 'அல்' தொ.பெ.ஈறு]*

**புழுக்கழிச்சல்** *pulu-k-kaliccal,* பெ. (n.) கரப்பான் புழுவினால் குழந்தைகட்கு ஏற்படும் வயிற்றுளைச்சல் நோய்,; a children disease

**மறுவ.** வயிற்றுப்போக்கு

*[புழு + கழிச்சல்.கழி → கழிச்சல்.'சல்' தொ.பொ.ஈறு]*

**புழுக்களைத்தள்ளல்** *pulukkalai-t-tallal,* பெ. (n.) முட்டையிலிருந்த புழுக்களை நறுக்கிய தழை பரப்பப்பட்ட தட்டில் கோழி இறகால் தள்ளுதல்; pushing the worms from the eggs, to the plate scattered with leaf by the help of a feather

*[புழுக்களை + தள்ளல். தள்ளு → தள்ளல். 'அல்'. தொ.பெ.ஈறு]*

**புழுக்கறை** *pul̤ukkar̤ai,* பெ. (n.) புழுங்கச் செய்யும் அறை; hot air room for causing perspiration '*புழுக்கறைப் பட்டோர் போன்று*' (மணிமே.3,95.)

*[புழுக்கு + அறை. அறு → அறை]*

**புழுக்காதி** *pul̤ukkādi,* பெ. (n.) ஆடு தின்னாப்பாளை; a bitter ash coloured creeper.



**புழுக்காய்ச்சல்** *pul̤ukkāyccal,* பெ. (n.) குழந்தைகளின் வயிற்றில் வளரும் புழுக்களா லேற்படுங் காய்ச்சல்; a fever of young children due to worms in the abdomen.

*[புழு + காய்ச்சல். காய் → காய்ச்சல். 'சல்'. தொ.பெ.ஈறு]*

**புழுக்கு[1]–தல்** *pul̤ukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. அவிழ்த்தல்; to boil before husking as paddy. 2. தீய்த்தல் (வின்.); to scorch, as the sun.

*[புழுங்கு (த.வி.) - புழுக்கு. (பி.வி.)]*

**புழுக்கு[2]–தல்** *pul̤ukku-,* 6 செ.குன்றாவி. (v.t.) அரிசி பாதிவேகும்படி அவித்தல்; to boil partially, parboil.

ம. புழுக்குக.

*[புழு → புழுக்கு–,]*

**புழுக்கு[3]** *pul̤ukku,* பெ. (n.) 1. அவிக்கை; boiling grains. 2. புழுங்கவெந்த வுணவு; well-boiled food. '*கட்டிப்புழுக்கின்*' (பதிற்றுப். 90,25.). 3. குழையச் சமைத்த பருப்பு (பெரும்பாண்.195, உரை.); dholl well boiled and seasoned. 4.பருப்புச்சோறு (பெரும்பாண். 195,உரை.); dholl and rice boiled together 5. இறைச்சி; flesh, meat. '*யாமைப்புழுக்கின்*' (புறநா.212.)

*[புள் → புழுங்கு (த.வி.) - புழுக்கு (பி.வி.) → புழுக்கு (தொ.பெ.)]*

**புழுக்குடைச்சல்** *pul̤u-k-kuḍaiccal,* பெ. (n.) சொத்தைப்பல்; carious tooth. (M.L.)

*[புழு + குடைச்சல். குடை → குடைச்சல். 'சல்' தொ.பெ.ஈறு]*

**புழுக்குடோரி** *pul̤ukkuḍōri,* பெ. (n.) நிலவாகை; country senna-cassia anceolata.

**புழுக்குத்தட்டம்** *pul̤ukku-t-taṭṭam,* பெ. (n.) மீன்பிடிக்க கடலுக்குள் செல்லும் பரதவர் கொண்டு செல்லும் மண்பாண்டம்; a pot which used by fishermen at the time of fishing.

*[புழுங்கு → புழுக்கு. தட்டு → தட்டம்]*

**புழுக்குத்தி** *pul̤u-k-kutti,* பெ. (n.) புழுக்கொத்தி (வின்.) பார்க்க; see *pul̤u-k-kotti.*

*[புழுக்கொத்தி → புழுக்குத்தி]*

**புழுக்குத்து¹–தல்** *pul̤ukkuttu-,* 6 செ.குன்றாவி. (v.t.) புழு அரித்தல்; to be eaten away by worm.

ம. புழுக்குத்துக

*[புழு + குத்து–,]*

**புழுக்குத்து²** *pul̤ukkuttu,* பெ. (n.) புழுவால் ஏற்படும் அரிப்பு; the damage suffer from worms as of tree etc.

ம. புழுக்குத்து

*[புழு + குத்து–,]*

**புழுக்குரம்பை** *pul̤u-k-kurambai,* பெ. (n.) **1.** நத்தை முதலியவற்றின் கூடு; chrysalis the testaceous or mud shell of insects, cocoon. **2.** உடம்பு; body.

*[புழு + குரம்பை.]*

**புழுக்குவது** *pul̤ukkuvaḍu,* பெ. (n.) *புழுங்கல், 2,3, (பிங்.)* பார்க்க; see *pul̤ungal.* 2,3

*[புழுக்கு → புழுக்குவது]*

**புழுக்கூடு** *pul̤u-k-kūḍu,* பெ. (n.) 1. *புழுக்குரம்பை (திருவாச.5,55)* பார்க்க; see *pul̤u-k-kurambai* **2.** பூஞ்சு (இ.வ.); mould.

*[புழு + கூடு. குள் → கூள் → கூண்டு → கூடு]*

**புழுக்கை¹** *pul̤ukkai,* பெ. (n.) **1.** ஆடு, எலி முதலியவற்றின் மலம், பிழுக்கை (கொ.வ.); dung, as of sheep or rats. எலி புழுக்கை இறப்பில் இருந்து என்ன, வரப்பில் இருந்து என்ன (பழ.) **2.** அடிமை; slave. *'நான் புழுக்கை மாதிரி உழைக்கிறேன்'* தனக்கு என்றால் புழுக்கை கலம் கழுவி உண்ணாள் (பழ.) **3.** தொழுத்தை (கொ.வ.); menial servant.

**ம.** பிழுகு; **க.** பிள்கெ, பிக்கெ, கிக்கெ;

**தெ.** பிடக, பிடுக; பட கிக்கெ.

*[(புல்) → (பில்) → பேல். புள் → புழுக்கை (மு.தா.262)]*

**புழுக்கை²** *pul̤ukkai,* பெ. (n.) ஈச்சம்பழம்; date fruit.

*[புள் → புழுக்கை = புழுக்கை போன்ற கொட்டையையுடையது.]*

**புழுக்கைச்சி** *pul̤ukkaicci,* பெ. (n.) **1.** மிகவிழிந்தபெண்; low, base woman. புழுக்கை புழுங்கி மா இடித்தாலும், புழுக்கைச்சிக்கு ஒரு கொழுக்கட்டை. (பழ) **2.** அடிமையானவள்; female slave. (யாழ்.அக.)

*[புழுக்கையன் (ஆ.பா.) → புழுக்கைச்சி (பெ.பா.) 'சி' பெ.பா.ஈறு.]*

**புழுக்கைப்பட்டை** *pul̤ukkaippaṭṭai,* பெ. (n.) ஒருவகை மூலிகைச்செடி; medicinal herb.

*[புழுக்கை + பட்டை]*

**புழுக்கையன்** *pul̤ukkaiyaṉ,* பெ. (n.) **1.** மிகவிழிந்த மாந்தன்; low, base person. *'ஒழுக்கமற்ற புழுக்கையன்'* (தமிழ்நா.219.) **2.** அடிமையானவன்; male slave.

*[புள் → புழுக்கை → புழுக்கையன் = ஆடு, எலிபோன்றவற்றின் மலத்தைப் போன்றவன், இழிந்தவன்.]*

**புழுக்கொடியல்** *pulukkodiyal,* **பெ.** (n.) அவித்துக்காயவைத்த பனங்கிழங்கு (யாழ்ப்.); palmyra root parboiled and dried in the sun.

*[புழுக்கு + ஒடியல்]*

**புழுக்கொத்தி** *pulu-k-kotti,* **பெ.** (n.) பெருங்கொண்டலாத்தி; hoopoe, upupa epops as pecking worms.

**ம.** புழுக்கொத்தி

*[புழு + கொத்தி]*

**புழுக்கொல்லி**[1] *pulu-k-kolli,* **பெ.** (n.) **1.** ஆடுதின்னாப் பாளை (மலை.); worm killer. **2.** நாகமல்லி; ringworm-root.

**ம.** புழுகொல்லி.

*[புழு + கொல்லி]*

**புழுக்கொல்லி**[2] *pulukkolli,* **பெ.** (n.) வண்டு கொல்லிச் செடி; cassia alata.

*[புழு + கொல்லி]*

**புழுகறுப்பு** *pulu - karuppu,* **பெ.** (n.) இலையிலுள்ள மண்ணைத் தின்பதால் புழு கறுப்பாக மாறும் நோய்; disease of a worm changing black in colour due to the sand in the leaf.

*[புழு + கறுப்பு]*

**புழுகன்** *pulugan,* **பெ.** (n.) *புளுகன் (இ.வ.)* பார்க்க; see *pulugan.*

*[புளுகன் → புழுகன்]*

**புழுகு**[1] *pulugu,* **பெ.** (n.) அம்புத்தலை (பிங்.); arrowhead. *'கொல்வினைப் பொலிந்த கூர்ங் குறும்புழுகின்'* (அகநா.9.)

க.பிளுகு, பிள்கு.

*[புல்லுதல் = துளைத்தல். புல் → புர் → புரை = உட்டுளை. புல் → புழு = துளைத் தரிக்கும் சிற்றுயிரி (வே.க.3,101–104) புள் → புழு → புழுகு = குத்தும் கூர் முனையுள்ள அம்புத்தலை]*

**த.** புழுகு > Skt. puṅkhā

**புழுகு**[2] *pulugu,* **பெ.** (n.) நறுமணப்பண்டவகை (பிங்.); civet. (S.I.I.iii.**187.**) **2.** புழுகுப் பூனை பார்க்க; see pulugu-p-pūnai. **3.** பெரிய புனுகுப் பூனை; civet cat.

**ம.** புழுகு, புழு; **க.** புழ, புழு, புணுகு, புணகு, புனகு, புனுகு, புலி; **தெ.** புனுகு; **து.** புணுங்கு, புணுகு, புனுகு; **குட.** பு-பெக்கி

*[புள் → புழு → புழுக்கை. பிள் → பீள் → பீளை → பூனை. புள் → புழு → புழுகு = பூனையின் உடலினின்று வெளிப்படும் நறுமணப்பொருள்]*

**புழுகு**[3] *pulugu,* **பெ.** (n.) புளுகு பார்க்க; see *pulugu.*

*[புளுகு → புழுகு ]*

**புழுகுகடமை** *pulugu-kadamai,* **பெ.** (n.) பழைய வரிவகை. an ancient tax; (S.I.I.vii. **46**).

*[புழுகு + கடமை ]*

**புழுகுச்சட்டம்** *pulugu-c-cattam,* **பெ.**(n.) **1.** புழுகு உருவாகும் பூனையின் உறுப்பு; sac in which civet is generated. **2.** *புழுகு*[1], **1.** (பதார்த்த.1079) பார்க்க; see *pulugu*[1], **1**

*[புழுகு + சட்டம் ]*

**புழுகுசட்டந்தட்டு—தல்** *pulugu-cattan-tattu-,* 15 செ.கு.வி.(v.i.) சட்டந்தட்டுதல் (வின்.); to extract civet from its sac.

*[ புழுகுசட்டம் + தட்டு—, ]*

**புழுகுசட்டம்** *pulugu-cattam,* பெ.(n.) 1. *புழுகுச்சட்டம்* பார்க்க; see *pulugu-c-cattam* 2. *புழுகு[1] (பதார்த்த. 1079.)* பார்க்க; see *pulugu[1].*

*[ புழுகு + சட்டம் ]*

**புழுகுசம்பா** *pulugu-šambā,* பெ.(n.) நறுமணமுள்ள நெல்வகை (பதார்த்த. 802); a kind of fragrant paddy.

*[ புழுகு + சம்பா ]*

**புழுகுசாத்து—தல்** *pulugu-šāttu-,* 15 செ.கு.வி. (v.i.) தெய்வம் முதலியவற்றிகுப் புழுகுபூசுதல்; to besmear with civet, as an idol.

*[ புழுகு + சாத்து—, ]*

**புழுகுசாறல்** *pulugu-šāral,* பெ.(n.) புழுகுப் பூனையினிடத்தேனும் அதன் கூண்டுக் கம்பியிடத்தேனும் புழுகு உறைந்து கிடக்கை (வின்.); the collection of civet on the civet-cat or on the sticks of the cage.

மறுவ. புனுகு

*[ புழுகு + சாறல் ]*

**புழுகுணி** *puluguṇi,* பெ.(n.) *புளுகுணி* பார்க்க; see *puluguṇi.*

*[ புழுகுணி + புழுகுணி ]*

**புழுகுணிக்கறுப்பன்** *puluguṇi-k-karuppan,* பெ.(n.) வெறும்பொய்யன்; deliberate liar. *'பொல்லாப் புழுகுணிக்கறுப்பன்'*

*[ புளுகுணிக்கறுப்பன் → புழுகுணிக்கறுப்பன் ]*

**புழுகுநெய்** *pulugu-ney,* பெ.(n.) புழுகு சட்டத்திலிருந்து எடுக்கும் நறுமணப் பண்டம்; civet. *'புழுகு நெய்ச் சொக்கர்'* (மதுரைக். 53.)

*[ புழுகு + நெய். நெள் → நெய் ]*

**புழுகுப்பிள்ளை** *pulugu-p-pillai,* பெ.(n.) *புழுகுப் பூனை (நாமதீப. 226.)* பார்க்க; see *pulugu-p-pūnai.*

*[ புழுகு + பிள்ளை ]*

**புழுகுப்பூனை** *pulugu-p-pūnai,* பெ.(n.) ஒருவகை நறுமணப் பண்டந்தரும் பூனைவகை (பதார்த்த. 862.); civet-cat.

*[ புழுகு + பூனை ]*

**புழுகுவரி** *pulugu- vari,* பெ.(n.) பழைய வரிவகை. an ancient tax; (S.I.I. iv. 195)

*[ புழுகு + வரி ]*

**புழுங்கரிசி** *pulungariši,* பெ.(n.) *புழுங்கலரிசி* பார்க்க; see *pulungalariši.*

*[ புழுங்கு + அரிசி. அரி → அரிசி ]*

**புழுங்கல்[1]** *pulungal,* பெ.(n.) *புழுங்கலரிசி* பார்க்க; see *pulungalariši.*

க. புழ்கி, புக்கி (பருப்புடன் வேகவைத்த அரிசி); தெ. புலகமு (பச்சைபயிருடன் வேகவைத்த அரிசி); Skt. pulāka (a lump of boiled rice)

*[ புழுங்கலரிசி → புழுங்கல் ]*

**புழுங்கல்²** *pulungal,* பெ.(n.) **1.** அவிகை; parboiling. **2.** அவித்தது; that which in parboiled. *'புழுங்க னெல்லின் பொறி வீழ்த்தென்ன'* (ஐங்குறு. பக். 143, பாட்டு, 4.) **3.** புழுக்கின நெல்; paddy parboiled and dried before husking. **4.** சினம் (பிங்.); anger. **5.** புழுக்கம்; sultriness **6.** வேர்க்கை; persipiration, sweating. **7.** பண்படுத்திய புன்செய்; puṉ-šey land prepared for sowing.

*[ புழுங்கு → புழுங்கல். 'அல்' தொ.பெ.ஈறு ]*

**புழுங்கல்³** *pulungal,* பெ.(n.) காசுக் குற்றவகை (பணவிடு. 139); a defect in coins.

*[ புழுங்கு → புழுங்கல் ]*

**புழுங்கலரிசி** *pulungal-ariši,* பெ.(n.) புழுக்கிய நெல்லின் அரிசி (பதார்த்த. 822.); rice husked from pulungal, opp. to paccariši.

*[ புழுங்கல் + அரிசி. அரி → அரிசி ]*

பச்சரிசி, புழுங்கலரிசி என்னும் இரு வகையுள் தமிழர் விரும்பியது பின்னதே. அது சூட்டைத் தணிப்பதனால் வெப்ப நாட்டிற்கேற்றதாகும். குழம்பின் சுவையையும் மிகுத்துக் காட்டும். அதற்காகவே, அதற்குரிய தனி முயற்சியை மேற்கொண்டனர். அதனால் ஏற்படும் வலுக்குறைவிற்குக் கறி வகைகளாலும் நெய்யாலும் ஈடு செய்யப்பெறும்.

'இருங்கா முலக்கை யிரும்புமுகந் தேய்த்த அவைப்பு மாண் அரிசி இமலைபெண் சோறு' (சிறுபாண். 193-4) என்பது தூய வெள்ளையாய் அரிசி தீட்டப்பட்டதைத் தெரிவிக்கும் (ப.த.நா.ப. 37)

**புழுங்கு¹-தல்** *pulungu-,* 5 செ.கு.வி.(v.i.) **1.** ஆவியெழ வேகுதல்; to be steamed; to be slightly boiled or steamed; to be parboiled. **2.** சிறுக வேகுதல் (வின்.); to boil gently or stew, as rice after the water is poured off. **3.** வெப்பத்தாற் புழுக்கமாதல்; to be sultry, as the weather *'தொடுநீர்ப் பரவை முகம் புழுங்கத் தோன்றும் பரிதி'* (குமர. பிர. முத்துக். பிள். 22.) **4.** சினத்தால் (கோபத்தால்) வெம்புதல்; to be hot with anger. **5.** வேர்த்தல் (இ.வ.); to perspire. **6.** பொறாமைப் படுதல்; to be envious, to feel heart-burning. **7.** வாடுதல்; to wither, fade. *'புழுங்கு கோதை பொற்பின்றிறம்'* (சீவக. 2504) **8.** வருந்துதல்; to be troubled *'வெய்துயிர்க்கும் விழுங்கும் புழுங்குமால்'* (கம்பரா. நகர்நீங்கு. 11)

**ம.** புழுங்ஙுக, புழுக்குக; **க.** புழுகு; **து.** புர்குனி; **குட.** புக்கி

*[ புழு → புழுங்கு-, ]*

**புழுங்கு²-தல்** *pulungu-,* 11 செ.குன்றாவி.(v.t.) சினத்தல்; to be angry, indignant. "*முக்கணன் புதல்வனை வேறெனப் புழுங்கி*" (துணிகைப்பு. சீபரி. 260).

*[ புழு → புழுங்கு-, ]*

**புழுங்கைப்பட்டை** *pulungai-p-pattai,* பெ.(n.) ஒரு மருந்துச்செடி; *a medicinal plant.*

*[ புழுங்கை + பட்டை ]*

**புழுத்தபல்** *pulutta-pal,* பெ.(n.) சொத்தைப்பல் (கொ.வ.); carious tooth.

*[ புழு → புழுத்த + பல் ]*

**புழுத்தரிசி** *puluttariši,* பெ.(n.) புழுவுண்ணும் அரிசி; worm eaten rice.

*[ புழு → புழுத்த + அரிசி ]*

**புழுத்துநெளி-தல்** *puluttu-neli-,* 3 செ.கு.வி. (v.i.) புழுமேய்தல்; to be eaten by worms.

*[ புழுத்து + நெளி-, ]*

**புழுதி** *puludi,* பெ. (n.) **1.** மண்தூள்; dust, dried earth, pulverised or fine powder. *'வெண் புழுதி மேற்பெய்து கொண்டளைந்தது'* (திவ். பெரியாழ். 1, 7, 9) **2.** காய்ந்த நிலம்; dry earth. *'புழுதியினிறனுழு வளைவாய் நாஞ்சி லோனும்'* (பரிபா. 13, 33.) **3.** *புழுதிக்கால்* பார்க்க; see *puludi-k-kāl*

ம. புழுதி, பூழி; தெ. பூதித, பூதி; து. பொய்யெ (மணல்), பூதிங்த, பூது (சாம்பல் வண்ணம்), பூதி (சாம்பல்); துட. பூத்ய்; குட. புதி; பா். பொா்மில்; மால. பொா்சி;

*[ புள் → பூள் → (பூழ்) → பூழி = தூள், புழுதி. பூழ் → பூழ்தி = புழுதி. பூழ்தி → புழுதி (மு.தா. 127) ]*

puḻudi, also pūḻi, and pūḻdi dust; Can. puḻil, sand. Comp. Latin, pulvis (CGDFL.599)

**புழுதிக்கலப்பை** *puludi-k-kalappai,* பெ.(n.) புழுதியில் ஒட்டும் கலப்பை; plough-share use to plough in the dust land.

*[ புழுதி + கலப்பை ]*



**புழுதிக்காடு** *puludi-k-kāḍu,* பெ.(n.) புழுதியாகப் பண்படுத்திய புன்செய் (வின்.); dry-ploughed field.

*[ புழுதி + காடு. கடுத்தல் = மிகுதல். கடு → காடு = மிகுதி ]*

**புழுதிக்காப்பு** *puludi-k-kāppu,* பெ.(n.) காப்பாக நெற்றியிலிடும் மண்பொட்டு; mark of wet-mud placed on the fore head as a charm against evil. *'சீரார் செழும் புழுதிக் காப்பிட்டு'* (திவ். இயற். சிறிய. 6, 16.)

*[ புழுதி + காப்பு. கா → காப்பு ]*

**புழுதிக்கார்** *puludi-k-kār,* பெ.(n.) நெல்வகை. a kind of paddy; (G.Tj.D. 1, 95)

*[ புழுதி + கார் ]*

**புழுதிக்கால்நாற்று** *puludi-k-kāl-nāṟṟu,* பெ.(n.) *புழுதிநாற்று (இ.வ.)* பார்க்க; see *puludi-nāṟṟu*

*[ புழுதிக்கால் + நாற்று ]*

**புழுதிக்கால்விதைப்பு** *puludi-k-kāl -vidaippu,* பெ.(n.) காய்ந்த வயலை உழுது விதைக்கை; sowing paddy on dry land previously prepared

*[புழுதிக்கால் + விதைப்பு. விதை → விதைப்பு ]*

**புழுதிக்குடி** *puludi-k-kuḍi,* பெ.(n.) தஞ்சை மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Tañjāvūr dt.

*[ புழுதி + குடி ]*

**புழுதிகுடி—த்தல்** *puḻudi-kuḍi-,* 4 செ.கு.வி. (v.i.) தூசி, மூச்சுடன் உட்செல்லுதல் (வின்.); to inhale dust, as snakes; to take in dust involuntarily.

*[ புழுதி + குடி—, ]*

**புழுதிகுளி—த்தல்** *puḻudi-kuḷi-,* 4 செ.கு.வி.(v.i.) *புழுதியளை—தல்* **(வின்.)** பார்க்க; see *puḻudi-yaḷai-,*

*[ புழுதி + குளி—, ]*

**புழுதிநட்டு** *puḻudi-naṭṭu,* பெ.(n.) வறண்டநிலத்தில் முளைக்குஞ் செடி; plant growing on dry soil. (W.G.)

*[ புழுதி + நட்டு ]*

**புழுதிநாற்று** *puḻudi-nāṟṟu,* பெ.(n.) ஈரப்பற்றில்லாத காலத்தில் உழுது பண்படுத்திய நாற்றங்காலில் உண்டாம் நாற்று; paddy-seedling grown on dry seed-beds.

*[ புழுதி + நாற்று ]*

**புழுதிப்படலம்** *puḻudi-p-paḍalam,* பெ.(n.) புழுதியின் கூட்டம்; drift, cloud or mass of dust.

*[ புழுதி + படலம் ]*

**புழுதிப்பயிர்** *puḻudi-p-payir,* பெ.(n.) புழுதிக்காலில் முளைத்த பயிர்; crop raised on puludi-k-kāl.

*[ புழுதி + பயிர் ]*

**புழுதிபாடு** *puḻudi-pāḍu,* பெ.(n.) வெற்று (தரிசு) நிலம்; waste land. *'பாலாற்று நின்றும் தோண்டின பெரும்பிடுகு காலின் புழுதிபாடும்'* (S.I.I. 151)

*[ புழுதி + பாடு. படு → பாடு ]*

**புழுதிபுரட்டி** *puḻudi-puraṭṭi,* பெ.(n.) ஒருவகை நெல்; a kind of paddy போரிறங்கல் மீட்டான் புழுதிபுரட்டி யென்னும் (நெல்விடு. 189)

*[ புழுதி + புரட்டி. புரள் → புரட்டு → புரட்டி ]*

**புழுதிபோடு—தல்** *puḻudi-pōḍu-,* 19 செ.குன்றாவி. (v.t.) புழுதியில் உழுது விதைத்தல் (யாழ்ப்.); to plough and sow when a field is dry.

*[ புழுதி + போடு—, ]*

**புழுதிமழை** *puḻudi-maḻai,* பெ. (n.) மண்காற்று (யாழ்.அக.); dust storm.

*[ புழுதி + மழை ]*

**புழுதிமாயம்** *puḻudi-māyam,* பெ. (n.) 1. ஏமாற்று (வின்.); deceit, imposture, as throwing dust in one's eyes. 2. வீண்செலவு செய்கை (வின்.); squandering. காசை புழுதிமயம் இறைக்கிறான்

*[ புழுதி + மாயம் ]*

**புழுதியளை—தல்** *puḻudi-y-aḷai-,* 3 செ.கு.வி. (v.i.) 1. புழுதியிற் புரளுதல்; to lie or wallow in dust, as a child. 2. தூசிபடிதல்; to be enveloped in, or covered with, dust. *'புழுதி யளைந்த பொன்மேனி'* (திவ். பெரியாழ். 2, 4, 9.)

*[ புழுதி + அளை—, அள் → அளை ]*

**புழுதியாக்கு–தல்** *pul̤udi-y-ākku-,* 8 செ.குன்றாவி. (v.t.) **1.** காய்ந்த வயலை உழுது பண்படுத்துல்; to plough 'nañšey' lands while dry. **2.** பொடியாக்குதல், அழித்தல்; to reduce to powder; to demolish, ruin.

*[ புழுதி + ஆக்கு–, ]*

**புழுதியாடு–தல்** *pul̤udi-y-āḍu-,* 5 செ.கு.வி.(v.i.) *புழுதியளை–தல்* பார்க்க; see *pul̤udi-y-al̤ai-,* *'புழுதியாடிய மெய்யினர்'* (கம்பரா. நகர்நீங்கு. 218.)

*[ புழுதி + ஆடு–, ]*

**புழுதியுணக்கல்** *pul̤udi-y-uṇakkal,* பெ.(n.) கட்டியடிக்க ஏதுவாக உலரவிடுதல்; drying of clods. இரண்டு நாளில் புழுதி யுணக்கல் தீர்ந்துவிடும், பின்னர் கட்டியடித்து விடலாம். (உ.வ.)

*[ புழுதி + உணக்கல். உணங்கு (த.வி.) – உணக்கு (பி.வி.) – உணக்கல் (தொ.பெ.), அல்.தொ.பெ.ஈறு ]*

**புழுதியெடு–த்தல்** *pul̤udi-y-eḍu-,* 4 செ.குன்றாவி.(v.t.) மூன்றாமுறை கடைசியாக உழுதல் (வின்.); to plough a field for the third and last time.

**மறுவ.** மூன்றாம்சால்.

*[ புழுதி + எடு–, ]*

**புழுதிவிதை–த்தல்** *pul̤udi-vidai-,* 4 செ.குன்றாவி. (v.t.) *புழுதிபோடு–தல் (வின்.)* பார்க்க; see *pul̤udi-pōḍu-,*

*[ புழுதி + விதை–, ]*

**புழுதிவிதைப்பு** *pul̤udi-vidaippu,* பெ.(n.) *புழுதிக் கால் விதைப்பு* பார்க்க; see *pul̤udi-k-kāl vidaippu.*

*[ புழுதி + விதைப்பு. விதை → விதைப்பு ]*

**புழுதிவிரட்டி** *pul̤udi-viraṭṭi,* பெ.(n.) 100 நாளில் விளையும் ஒருவகை மட்டநெல்; a kind of inferior paddy maturing in 100 days (G.Tn.D.I. 143.)

*[ புழுதி + விரட்டி ]*

**புழுதிவிரை** *pul̤udi-virai,* பெ.(n.) *புழுதிக்கால் விதைப்பு* பார்க்க; see *pul̤udi-k-kāl - vidaippu* (C.G.)

*[ புழுதிவிதை → புழுதிவிரை ]*

**புழுதின்குடோரி** *pul̤udiṉ-kuḍōri,* பெ.(n.) ஆடாதோடை; Malabar winter cherry.

**புழுது** *pul̤udu,* பெ. (n.) அம்புக் குதை (சது.); knob or feathered part of an arrow.

*[ புழுகு → புழுது ]*

**புழுநாறுவிரணம்** *pul̤unāṟu-v-iraṇam,* பெ. (n.) முடைநாற்றமுள்ள சீழ்ப்புண்; foul ulcer.

*[ புழுநாறு + விரணம் ]*

Skt. vraṇa > த. விரணம்

**புழுநெளிபுண்** *pul̤u-nel̤i-puṇ,* பெ.(n.) அழிபுண்; ulcer with swarming worms.

*[ புழுநெளி + புண் ]*

**புழுநெளிவு** *pulu-nelivu,* பெ.(n.) புழுஅரிப்பு; vermiculation.

*[ புழு + நெளிவு ]*

**புழுப்பகம்** *puluppagam,* பெ. (n.) மூக்கிரட்டை (சங்.அக.); spreading hogweed.

**புழுப்பகை** *pulu-p-pagai,* பெ. (n.) வளி(வாயு) விளங்கம் (தைலவ. தைல. 66.); common wind bery, as worm-killer.

*[ புழு + பகை ]*

**புழுப்பல்** *pulu-p-pal,* பெ. (n.) சொத்தைப்பல்; carrious tooth. (M.L.)

**மறுவ.** பூச்சிப்பல்

**ம.** புழுப்பல்

*[ புழு + பல் ]*

**புழுப்பு** *puluppu,* பெ. (n.) புழுவுண்டாகை (யாழ்.அக.); breeding of worms.

*[ புழு → புழுப்பு ]*

**புழுப்புநக்கி** *puluppu - nakki,* பெ. (n.) நச்சுயிரி; poisonous insect.

**புழுப்பூனை** *pulu-p-pūnai,* பெ. (n.) *புழுகுப்பூனை* பார்க்க; see *pulugu-p-pūnai.* *'புழுப் பூனை பீசம்'* (விறலிவிடு. 632.)

*[புழுகுப்பூனை → புழுப்பூனை]*

**புழுப்போக்கி** *pulu-p-pōkki,* பெ. (n.) குடற்புழுக்கொல்லி; vermifuge.

*[ புழு + போக்கி. போக்கு → போக்கி ]*

**புழுபுழு-த்தல்** *pulu - pulu-,* 4 செ.கு.வி. (v.i.) அதிகமாய்ப் புழுத்தல்; to be eaten extremly by worms as in fruits, sores etc.

*[ புழு + புழு-, ]*

**புழுபுழுத்துச்சா-தல்** *pulu - puluttu-c-cā-,* 4 செ.கு.வி. (v.i.) புழுவரிக்கும் புண்களால் சாதல்; to die on account of ulcers which swarm with worms.

*[ புழு + புழுத்து + சா-, ]*

**புழுமலடு** *pulu-maladu,* பெ. (n.) *புழுவால்மலடு* பார்க்க; see *puluvālmaladu.*

*[ புழு + மலடு ]*

**புழுமேய்தல்** *pulu-mēydal,* பெ. (n.) **1.** புழுவரித்துச் சொறியுண்டாகை (யாழ்.அக.) gnawing of worms or germs causing irritation, **2.** புழுவரித்துப் போகை; being worm-eaten. **3.** மயிருதிர்ந்து வழுக்கையாகை; becoming bald from disease.

*[ புழு + மேய்தல். 'தல்' தொ.பெ.ஈறு ]*

**புழுவதை** *pulu-vadai,* பெ. (n.) தேனடை (யாழ்.அக.); honey comb.

*[ புழுவடை → புழுவதை ]*

**புழுவரளை** *puluvaralai,* பெ. (n.) சீழ்ப்பிடித்துப் புழுக்கள் விழும் நிலையிலுள்ள புண்; skin or ulcerous disease where in worms are found in plenty.

*[ புழு + வரளை ]*

**புழுவரித்தகண்பட்டை** *pul̤u-v-aritta - kaṇ-paṭṭai,* பெ. (n.) *புழுவெட்டல்* பார்க்க; see *pul̤uveṭṭal* (M.L.)

*[ புழு + அரித்த + கண்பட்டை ]*

**புழுவரித்தபல்** *pul̤u-varitta-pal,* பெ. (n.) *புழுப்பல்* பார்க்க; see *pul̤u-p-pal*

மறுவ. பூச்சிவிழுந்தபல்.

*[ புழு + அரித்த + பல் ]*

**புழுவரித்தல்** *pul̤u-v-arittal,* பெ. (n.) *புழுமேய்தல்* ***(சங்.அக.)*** பார்க்க; see *pul̤u-mēydal*

*[ புழு + அரித்தல். 'தல்' தொ.பெ.ஈறு ]*

**புழுவளிவிளக்கம்** *pul̤uval̤i-vil̤akkam,* பெ. (n.) ஒட்டுயிரியான குடற்புழுபற்றிய ஆய்வு நூல்; helminthology.

*[ புழுவளி + விளக்கம் ]*

**புழுவால்மலடு** *pul̤uvālmalaḍu,* பெ. (n.) கருப்பையில் உருவாகி, உயிர்ச்சத்தை உண்டு மலட்டுத் தன்மையுண்டாக்கும் புழு; sterility caused by some germs.

*[ புழுவால் + மலடு ]*

**புழுவுணவு** *pul̤u-v-uṇavu,* பெ. (n.) புழுக்களே உணவாகும் நிரய (நரக) வகை (சேதுபு. தனுக். 3); a hell where worms are eaten as food.

*[ புழு + உணவு ]*

**புழுவூன்பிண்டம்** *pul̤uvūṉ - piṇḍam,* பெ. (n.) புழுக்கள் மலிந்த உடல்; body *"வழுவொடு கிடந்த புழுவூன் பிண்டத்து"* (மணிமே. 6, 109)

*[ புழு + ஊன் + பிண்டம் ]*

**புழுவெட்டல்** *pul̤u-veṭṭal,* பெ. (n.) கண்ணிமை நோய்வகை; inflammation of the eyelid, blepharitis. (M.L.)

*[ புழு + வெட்டல். வெட்டு → வெட்டல். 'அல்' தொ.பெ.ஈறு ]*

**புழுவெட்டு** *pul̤u-veṭṭu,* பெ. (n.) **1.** புழுவரித்தது (யாழ்.அக.); that which is worm-eaten. **2.** மயிரை உதிரச் செய்யும் நோய்வகை (கடம்ப. 4. இலீலா. 113); a disease which makes the hair fall off; baldness, alopecia **3.** *புழுப்பல்* பார்க்க; see *pul̤uppal.* **4.** *புழுவெட்டல்* பார்க்க; see *pul̤veṭṭal.*

*[ புழு + வெட்டு ]*

**புழுவை-த்தல்** *pul̤u-vai-,* 4 செ.கு.வி. (v.i.) புழுத்தல்; to be wormy, as meat or sore; to fester.

*[ புழு + வை-, ]*

**புழை¹** *pul̤ai,* பெ. (n.) **1.** துளை; hole. *'தம்பத்தின் மேற் புழையே முளவாக்கி'* (திருநூற். 23) **2.** குழாய்; tube, pipe. **3.** வாயில்; entrance, gate. *'திருந்தெயிற் குடபாற் சிறுபுழைபோகி'* (மணி. 6, 22) **4.** சிறுவாயில்; secret way, sally-port. *'வாயிலொடு புழையமைத்து'* (பட்டினப். 287.) **5.** காட்டுவழி; forest-path. *'கவை முள்ளிற் புழையமைப்பவும்'* (புறநா. 98.) **6.** ஒடுக்க வழி; narrow path, by path. *'புழைதொறு மாட்டிய'* (மலைபடு. 194.) **7.** சாளரம்; window. *'சில் காற்றிசைக்கும் பல்புழை நல்லில்'* (மதுரைக். 358.) **8.** ஏவறை; archer's bastion. *'கவையும் கழுவும் புதையும் புழையும்'* (சிலப். 15, 212.)

9. நிரயம்; hell 'போகும் புழையுட் புகுந்து' (ஏலாதி, 11.)

ம. புழ; க. பொழெ (வழி); தெ. புந்த (கால் நடை செல்லும் வழி); கோத. புள்; துட. பீள்

[புல் → புர் → புரை = உட்டுளை, உள்துளைப்பொருள். புல் → புற்று = உட்டுளையுள்ள கறையான் மண்கூடு (வே.க. 3, 101, 107) புல் → புள் → புழு → புழை = பக்கவாட்டிலும், ஒரு பொருளிலுமுள்ள ஆழ்ந்த பள்ளம்]

puri, puṇḍra, a river cf. D. pura, pōnal, pōḻe (KKED. xxvii)

**புழை²–த்தல்** *puḻai-*, 4 செ.குன்றாவி. (v.t.) துளையிடுதல்; to bore, riddle. '*அனங்கன் வாளி புழைத்த தம் புணர்மென கொங்கை*' (கம்பரா. கைகேசி, 85)

[புல் → புள் → புழு → புழை–,]

**புழை³** *puḻai*, பெ. (n.) 1. புண்ணின் துளை; sinus. 2. ஊசி; pin.

[புழு → புழை]

**புழைக்கடை** *puḻai-k-kaḍai*, பெ. (n.) 1. வீட்டின் பின் வாயிற்புறம், கொல்லைப்புறம்; open space behind a house and attached to it; rear gangway. '*உங்கள் புழைக்கடைத் தோட்டத்து வாவியுள்*' (திவ். திருப்பா. 14.) 2. கடைமடை; last sluice of a tank. '*புழைக்கடைப் புனலைத் தொழுகும்*' (சீவக. 16, 14.) 3. நுழைவாயில் (இலக்.அக.); small gate.

மறுவ. புறக்கடை

[புழை → புழைக்கடை.]

**புழைக்கை** *puḻai-k-kai*, பெ. (n.) 1. தும்பிக்கை; elephant's trunk. 2. யானை (திவா.); elephant as having a trunk.

[புழு → புழை = துளை. புழைத்தல் = துளையிடுதல். புழை → புழைக்கை (வே.க.3,108) = துளையுள்ள கை, தும்பிக்கை, தும்பிக்கையை யுடைய யானை]



**புழைவழி** *puḻai-vaḻi*, பெ. (n.) ஊசித்துளை; pin like hole.

[புழை + வழி]

**புழைவாயில்** *puḻaivāyil*, பெ. (n.) பெரிய கதவுகள் சாத்தப்படும்போது உட்செல்வதற்கு அமைக்கப்படும் சிறிய நுழைவாயில்; wicket, small door or gate within the compass of a larger one. '*புழைவாயில் போகிடைகழி*' (பட்டினப்பா.)

மறுவ. திட்டி வாசல்

[புழை + வாயில். புல் → புர் → புரை = உட்டுளை. புள் → புழு → புழை = துளை, சிறுதிறப்பு. புழைவாயில் = பெரிய கதவில் துளைபோல் அமைந்திருக்கும் சிறுகதவு, சிறுவழி]

**புள்¹** *puḷ*, பெ. (n.) 1. பறவை; fowl. '*வேட்டுவன் புட்டிமிழ்த் தற்று*' (குறள், 274.) 2. கணந்துள்; a kind of bird. '*புள்ளும் புதாவும்*'

(சிலப். 10, 117.) 3. வண்டு (சூடா.); bee. *'புள்ளுண் பூந்தொடைக் குழலார்க்கு'* (உபதேசகா. சிவவிர. 11.) பறவை நிமித்தம்; augury. *'புள்ளோர்த்துப் படையமைத்து'* (அகநா. 207.) 5. பறவைநாள் (திவா.); the 23rd naksatra. *'பனைமுதற் புள் வரை பகர்ந்திடு கலிக்கும்'* (இலக். வி. 881.) 6. கைவளை; bracelet; *'புட்கை போகிய புன்றலை மகா ரொடு'* (மலைபடு. 253) 7. மது; drinking, drink *'புள்ளே, புனலே, புலவியிம் மூன்றினும்'* (பரிபா. 16, 39.) 8. கிட்டிப்புள்; trap, stick used in the game of tip-cat. 9. கிட்டி; an instrument of torture.

**ம.** புள்; **தெ.** புலுகு; **கோத.** புள், பிள்; **துட.** பீள்;

E. fowl; AS. fugel; Gk. vogel; Ice. juge;

*[புல் → புர் → புரம். புரம் = உயர்ந்த மனை, அஃதுள்ள நகர். புரம் → பரம் = மேல். புரம் → புரவி = மதில்தாண்டும் குதிரை. புர் → புரை = உயர்வு. புரையோர் = உயந்தோர். புல் → புள் = (மேலெழும்) பறவை]*

**புள்²** *pul,* பெ. (n.) நீர்வாழ் பறவை; birds of the gall genus.

**புள்சாட்டிக்கொம்பு** *pulcāṭṭi-k-kombu,* பெ. (n.) ஏற்றத்திற் பயன்படுத்தும் விலங்கின் நேர்க்கொம்பு; straight horn of beast, used as plough share.

*[புள்சாட்டி + கொம்பு]*

**புள்நூல்** *pul-nūl,* பெ. (n.) 1. பறவை இயக்கத்தைக் கொண்டு வரப்போகும் நன்மை தீமைகளைக் கணித்துக் கூறும் நூல்; augury, ornithoscopy. 2. பறவையியல் நூல்; ornithology.

*[புள் + நூல்]*

வல்லூறு, ஆந்தை, காகம், கரிக்குருவி, காடை முதலிய பறவைகளின் குரலையும் இயக்கத்தையும் கொண்டு, வரப்போகும் நன்மை தீமைகளைக் கணித்துக் கூறுவது புள்நூல்.

புள் = பறவை. புள்ளால் அறியப்படும் குறியைப் புள் என்பது ஆகுபெயர்.

வழிச்செல்வார் வாயினின்று தற்செயலாய் வரும் சொல்லைக் குறியாகக் கொள்வது, வாய்ப்புள் எனப்படும்.

உடம்பின் பலவுறுப்புகள் துடிப்பதைக் கூறும் துடிநாலும், கட்டு என்னும் நெற்குறியும், கழங்கு என்னும காய்க்குறியும், ஏதேனும் ஓர் ஏட்டைத்தொடும் தொடுகுறியும், எண்குறியும், பெயர்க்குறியும், நின்ற நிலைக்குறியும் கவடிக்குறியும் கண்ட காட்சிக் குறியும், நேர்ந்த நிகழ்ச்சிக் குறியும், சொன்னசொற்குறியும், கோடிழைத்தற் குறியும் மூச்சுவிடற்குறியும், தேவராளர்குறியும், விரிச்சிக்குறியும் (oracle) இரண்டிலொன்றன் குறியும், பல்வேறு நிகழ்ச்சிகளான நற்குறி தீக்குறிகளும் பிறவும் புள்நூலின் பாற்படுவனவே (ப.த.நா.ப. 147–148)

**புள்பாய்ச்சல்** *pul-pāyccal,* பெ. (n.) கடற்பரப்பி மேல் மீனைக் கொத்தித் தின்பதற்காகப் பாயும் பறவைகளின் பாய்ச்சல்; leaping of birds on the surface of the sea. for pecking fish.

*[புள் + பாய்ச்சல். பாய் → பாய்ச்சல். 'சல்' தொ.பெ.ஈறு]*

**புள்வருக்கநூல்** *pul-varukka-nūl,* பெ. (n.) பறப்பனவற்றைப் பற்றிக் கூறும் நூல்(இக்.வ.); ornithology.

*[புள் + வருக்கம் + நூல்]*

**புள்வாய்கீண்டோன்** *pul-vāy-kiṇḍōṉ,* பெ. (n.) கண்ணபெருமான் (பகாசுரன் வாயைப்

பிளந்தவன்) (சேதுபு. இலக்குமி. 5); Krishṇa, as having torn the mouth of Bakan, an Asura who had the form of a crane.

*[ புள் வாய் + கீண்டோன் ]*

**புள்ளடி[1]–த்தல்** *pu!-!-aḍi-*, 4 செ.கு.வி. (v.i.) கிட்டிப்புள் ஆடுதல்; to play the game of tip-cat.

*[ புள் + அடி –, ]*

**புள்ளடி[2]** *pu!-!-aḍi*, பெ. (n.) 1. பறவையின் பாதம்; bird's foot, 2. தொடர்ந்த கையெழுத்தில் விட்ட பகுதியை மேலே யெழுதி அதனிடத்தைக் காட்டக் கீழிடும் புட்கால்போன்ற குறி; cross mark; caret to indicate the insertion of someting omitted in writing, as like a birds foot. 3. நேரி(வாக்கு)ச் சீட்டில் போடும் பெருக்கல் குறி; the multiplication sign to placed on a ballot paper. நேரிச் சீட்டில் எமது சின்னத்திற்கு நேரே புள்ளடி இடுங்கள் 4. உரைகல் (வின்.); touchstone 5. செடிவகை; a species of tick-trefoil, 6. தாளஅளவு உறுப்புகளுள் ஒன்று; (mus.) an element of time measure. (பரத.தாள.35, உரை.) 7. ஏணி (யாழ்.அக.); ladder.

ம. புள்ளடி.

*[ புள் + அடி ]*

**புள்ளடி[3]** *pu!-!-aḍi*, பெ. (n.) மணிக் குற்றங்களுளொன்று; a defect in precious stones. "புள்ளடியுட் கீற்று பொருங்குற்ற மைந்துவகை" (பஞ்ச.திருமுக.477.).

*[ புள் + அடி ]*

**புள்ளடிக்கல்** *pu!!aḍi-k-kal*, பெ. (n.) அடையாளமிட்ட எல்லைக்கல்; demarcation stone. "ஆசறுதியில் நாட்டின் புள்ளடிக்கல்லே யுற்று" (S.I.I.v, 206).

*[ புள்ளடி + கல் ]*

**புள்ளடிபோடு[1]–தல்** *pu!-!-aḍi - pōḍu-*, 20 செ.கு.வி. (v.i.) கையெழுத்தில் புள்ளடிக் குறியிடுதல்; to insert a caret.

*[ புள்ளடி + போடு–, ]*

**புள்ளடிபோடு[2]–தல்** *pu!-!-aḍi-pōḍu-*, 20 செ.கு.வி. (v.i.) கீறல் போடுதல் (இ.வ.); to make a mark in the place of signature, as an illiterate person.

*[ புள்ளடி + போடு–,ஒ.நோ. கோழி கிறுக்கல் (கிறுக்கலான கையெழுத்து) ]*

**புள்ளம்[1]** *pu!!am*, பெ. (n.) 1. கொடுவாள் (பிங்.); bill hook *'வளைந்து கூர்த்த புள்ளமும்'* (அரிசமய. பத்திசா. 26) 2. அரிவாள் வகை (திவா.); a kind of sickle. *'புள்ளங்கள் சூற்சங்கிற் றீட்டுவார்'* (அரிச். 4, நாட். 45) 3. அரிவாண் மணை; a cutting instrument for dressing vegetables.

*[ புல் → புர் → புரள். புரள் → புரட்டு. புர் → புரி → புல் → புள் → புள்ளம் = வளைந்த கொடுவாள், அரிவாள் ]*



**புள்ளம்²** *pul̤l̤am*, பெ. (n.) புள் பார்க்க; see *pul̤*.

*[ புள் → புள்ளம் ]*

**புள்ளம்பூதங்குடி** *pul̤l̤am - pūdaṅguḍi*, பெ. (n.) திருமங்கையாழ்வார் பாடல் பெற்ற ஊர்; a shrine sanctified by hymns of Tirumaṅgai-y-āl̤vār.

*[ புள்ளம் + பூதங்குடி. புள் → புள்ளம் = அழகிய புட்கள் (பறவைகள்) நிறைந்த பகுதி. பூதனார் என்னும் புலவர் வாழ்ந்த ஊர் பூதங்குடி ]*

**புள்ளமங்கலம்** *pul̤l̤a maṅgalam*, பெ. (n.) தஞ்சை மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Tañjāvūr dt.

*[ புள்ள + மங்கலம். பிள்ளை → புள்ள ]*

**புள்ளமங்கை** *pul̤l̤a - maṅgai*, பெ. (n.) a village in Tañjāvūr dt. 'கறையார் மிடறுடையான் கமழ் கொன்றைச்சடைமுடி மேல்பொறையார் தரு கங்கைப் புனலுடையான் புள்ளமங்கை (சம்பந்தர்'16–3)

*[ புள் + மங்கை. புள் = பறவை. புள்ளமங்கை, புள் மிகுதியாக இருந்த இடம் ]*

**புள்ளரசு** *pul̤-l̤-arašu*, பெ. (n.) கருடன்; garuḍa, king of birds. *'புள்ளரசைக் கொன்றுயிர் பின் கொடுத்தார் போலும்'* (தேவா. 598, 8.)

*[ புள் + அரசு. பறவைகளுக்கு அரசன் போன்ற பெரும் பறவை ]*

**புள்ளரிச்சாவி** *pul̤l̤ari-c-cāvi*, பெ. (n.) *புல்லரிச்சாவி* (இ.வ.) பார்க்க; see *pullari-c-cāvi*

*[ புல்லரிச்சாவி → புள்ளரிச்சாவி ]*

**புள்ளரையன்** *pul̤-l̤-araiyaṉ*, பெ. (n.) *புள்ளரசு* பார்க்க; see *pul̤-l̤-arašu 'புள்ளரையன் புகழ்குழறும் புனலரங்கமே'* (திவ். பெரியாழ். 4, 9, 5.)

*[ புள் + அரையன். அரசன் → அரைசன் → அரையன் ]*

**புள்ளறுதல்** *pul̤-l̤-aṟudal*, பெ. (n.) காசுக் குற்றவகை (பணவிடு. 139); a defect in coins.

*[ புள் + அறுதல். 'தல்' தொ.பெ.ஈறு ]*

**புள்ளன்பிளாச்சை** *pul̤l̤aṉ-pil̤āccai*, பெ. (n.) மீன்வகையுளொன்று; a kind of fish.



**புள்ளாங்குச்சு** *pul̤l̤āṅ-guccu*, பெ. (n.) கீச்சுக் கீச்சுத் தாம்பாளம் என்ற குழந்தைகள் விளையாட்டு (நெல்லை.); children's game.

*[ புள்ளாம் + குச்சு ]*

**புள்ளி¹** *pul̤l̤i*, பெ. (n.) பொட்டுக்குறி; mark, dot, speck, point jot. *'புள்ளிக் கள்வன்'* (ஐங்குறு. 21.) 2. எழுத்தின் மேலிடுங்குத்து அல்லது சுழிக்குறி (தொல். எழுத். 15, 16); dot placed over a letter. 3. மெய்யெழுத்து; consonant. *'ஒன்றன் புள்ளி'* (நன்.189)

4. குற்றியலிகர உகரங்கள் (தொல். பொ. 666, உரை.); the shortened இ or உ. 5. வணிகர் சரக்கின் மேலிடும் விலைமதிப்புக் குறி (வின்.); code-mark made on goods by a trader to indicate their value. 6. கவற்றின் கட்டம்; mark on a piece of dice *'புள்ளியல் கவற்றில்'* (கல்லா. 92, 11.) 7. மதிப்பு; estimate. 8. ஆள்; individual. 9. பேரேடு (இ.வ.); ledger 10. பெருந்தொகை (வின்.); large sum. 11. இமயமலை (பிங்.); the Himalayas *'புள்ளிமால் வரை'* (கம்பரா. ஆற்று. 4.) 13. பல்லி (திவா.); lizard. 14. நண்டு(அக.நி.); crab.

ம. புள்ளி; **கோத.** புள்ய்.

*[ புள் = துளை, தோண்டு, வெட்டு, கொத்து, குத்து. புள் + இ – புள்ளி = குத்து (a point), சிறு வட்டக்குறி, புள்ளியால் குறிக்கப்படும் ஆள். (சு.வி. 37) ]*

**புள்ளி²** *pulli,* பெ. (n.) ஆய்தவெழுத்து (தொல். எழுத். 2.); the letter ஃ

*[ புள் + இ– புள். ]*

ஆய்தம் ஒருயிரோடுங் கூடாது தனித்து நிற்பதால் தனிநிலை என்றும், புள்ளிவடிவாயிருப்பதால் புள்ளி என்றும் முப்புள்ளி என்றும் தனக்குப்பின் வரும் வல்லினமெய்யை மெலிவிப்பதால் நலிபு என்றும் பெயர் பெறும் (த.வ.139).

*'குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்ற முப்பாற் புள்ளியும்'* (தொல்.2) என்று *'முப்பாற் புள்ளி'* என்பது மூவெழுத்தையும் பொதுப்படத் தழுவுமாறு உம்மைத் தொகையாய்ச் சேர்த்துக் கூறியிருத்தலின், பண்டைக் காலத்திற் புள்ளி பெற்றன எனப்படும் (இலக்.கட்.56).

**புள்ளி³** *pulli,* பெ. (n.) மஞ்சள் நிறத் தேமல்; yellow patches on the skin.

*[ புள் → புள்ளி ]*

**புள்ளி⁴** *pulli,* பெ. (n.) பறவை; bird.

*[ புள் → புள்ளி ]*

**புள்ளிக்கண்** *pulli-k-kan,* பெ. (n.) மாட்டின் கடைக்கண்ணில் விழும் வெள்ளை நிறப் புள்ளி (மாட்டுவா. 16.); white spots in the corner of the eyes of cattle.

*[ புள்ளி + கண் ]*

**புள்ளிக்கணக்கன்** *pulli-k-kaṇakkaṉ,* பெ. (n.) வணிகத்திற்குப் (காரியாம்சத்தில்) பயன்படும் கணக்கில் வல்லவன்; one versed in the tradesmen's accounts.

*[ புள்ளிக்கணக்கு → புள்ளிக்கணக்கன் ]*

**புள்ளிக்கணக்கு** *pulli-k-kaṇakku,* பெ. (n.) செயல் முறையில் (காரியாம்சத்தில்) பயன்படுங் கணக்கு; practical arithmetic opp. to palli-k-kaṇakku. 2. பயிர் விளைச்சல் மதிப்பு; valuation of a standing crop. 3. வரவுசெலவு மதிப்புத் திட்டம்; budget estimate 4. துணிவணிகர் துணியிலிடும் விலைக் குறியீடு (வின்.); method adopted by tradesmen in marking prices of cloth.

*[ புள்ளி + கணக்கு. புள் + இ– புள்ளி. புள்ளிக் கணக்கு = குறியிட்டுக் கணிக்கும் கணக்கு (சு.வி. 37.) ]*

**புள்ளிக்கரப்பன்** *pulli-k-karappaṉ,* பெ. (n.) தோல்நோய்; a kind of skin disease.

**மறுவ.** புள்ளிக்குட்டம்.

*[ புள்ளி + கரப்பன் ]*

**புள்ளிக்கல்** *pulli-k-kal,* பெ. (n.) கானற்கல்; a king of spotted stone.

*[ புள்ளி + கல் ]*

**புள்ளிக்கலவா** *pulli-k-kalavā,* பெ. (n.) புள்ளிக் கலவாய் பார்க்க; see pulli-k-kalavāy

*[ புள்ளிக்கலவாய் → புள்ளிக்கலவா ]*

**புள்ளிக்கலவாய்** *pulli-k-kalavāy,* பெ. (n.) 1. செந்நிறமும் பழுப்பு நிறமும் கலந்த கடல் மீன்வகை; spotted perch, reddish brown, 2. சாம்பல் நிறமுள்ள கடல்மீன் வகை; a seafish, deep grey.

*[ புள்ளி + கலவாய் ]*



**புள்ளிக்கவுடா** *pulli-k-kavuḍā,* பெ. (n.) சங்குவகை; a kind of conch

*[ புள்ளி + கவுடா ]*

**புள்ளிக்கழி** *pulli-k-kali,* பெ. (n.) தோணியின் குறுக்காக கட்டப்படும் கம்பு; cross-bar of fishing boat.

*[ புள்ளி + கழி ]*

**புள்ளிக்கற்றாழை** *pulli-k-karrālai,* பெ. (n.) *பிள்ளைக் கற்றாழை* பார்க்க; see *pillai-k-karrālai.*

*[ பிள்ளைக்கற்றாழை + புள்ளைக் கற்றாழை → புள்ளிக்கற்றாழை ]*

**புள்ளிக்காரன்** *pulli-k-kāraṉ,* பெ. (n.) 1. பணக்காரன்; rich man. 2. கணக்கன்; accountant. 3. பெயர் சொல்லாது குறிப்பிடப்பட்டவன்; particular person purposely not specified by name. 4. *புள்ளிபார்ப்பவன்* (இ.வ.) பார்க்க; see *pulli-p-pārppavaṉ*

*[ புள்ளி + காரன். புள் + இ = புள்ளி. புள்ளிக்காரன் = புள்ளி குத்தப்பட்ட குற்றவாளி cf. E. bull, a sealed edict of the pupe, L. bulla, a knob, anything rounded by art; later, a leaden seal; E. bill, an acount of money, a draft of a proposed law clit. a sealed paper from Low.L. billa-bulla, a deal (சு.வி. 37) ]*

*'புள்ளிக்காரன்'* முகத்தில் கரியைப் பூசுதல், கரிக் கோடிடுதல் முதலிய வழக்குகள் ஊர்க்கு மாறான குற்றவாளிகளை ஊரார் செம்புள்ளி கரும்புள்ளி குத்தி அவமானம் படுத்தியதை நினைவுறுத்தும். (சொ.க. 23)

**புள்ளிக்கால்** *pulli-k-kāl,* பெ. (n.) உகரத்தின் மேல் இடப்படும் 'ள' என்னும் நெடிற்குறி (வின்.); the character 'ள' subjoined to the letter 'உ' to lenghen it.

*[ புள்ளி + கால் ]*

**புள்ளிக்குட்டம்** *pulli-k-kuttam,* பெ. (n.) *புள்ளிக் கரப்பன்* பார்க்க; see *pulli-k-karappaṉ.*

*[ புள்ளி + குட்டம் ]*

**புள்ளிக்குயில்** *pulli-k-kuyil,* பெ. (n.) வரிக்குயில் (வின்.); striped koel

*[ புள்ளி + குயில் ]*



**புள்ளிக்குரவை** *pulli-k-kuravai,* பெ. (n.) மீன்வகையுளொன்று; a kind of fish.

**புள்ளிக்குளிகைவராகன்** *pulli-k-kuligai-varāgan,* பெ. (n.) பழைய காசு வகை; an ancient coin (M.E.R. 32 of 1923).

*[ புள்ளிக்குளிகை + வராகன் ]*

**புள்ளிக்கெடுத்தை** *pulli-k-keduttai,* பெ. (n.) நச்சு மீன் வகையுளொன்று; a kind of danger fish.

**புள்ளிக்கெண்டை** *pulli-k-kendai,* பெ. (n.) புள்ளியுள்ள மீன்; spotted fish.

*[ புள்ளி + கெண்டை ]*



**புள்ளிக்கோழி** *pulli-k-kōli,* பெ. (n.) கடல் மீன் வகை; a kind of sea-fish.

*[ புள்ளி + கோழி ]*

**புள்ளிகிச்சான்** *pulli-kiccān,* பெ. (n.) மீன்வகையுளொன்று; a kind of fish.

**புள்ளிகுத்து–தல்** *pulli-kuttu-,* 12 செ. குன்றாவி. (v.t.) 1. கணக்கெழுதுதல்; to write accounts. 2. ஏட்டெழுத்தில் அடிப்புக் குறியாக எழுத்தின் மேல் குத்திடுதல்; to delete by placing dot or dots over a letter or letters, in cadjan writing. ***'எழுத்து உருவழியாதே கிடந்தாலும் புள்ளி குத்தினால் அத்தைக் கழித்து மேலே போமா போலே'*** (ஈடு, 7, 3, 4.).

*[ புள்ளி + குத்து–, ]*

**புள்ளிச்சந்தம்** *pulli-c-candam,* பெ. (n.) திருவாரூர் மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Tiruvārūr dt.

*[ புள்ளி சந்தம் → புள்ளிச்சந்தம். புத்தப் பள்ளிக்குக் கொடுக்கப்பட்ட இறையிலி நிலமுடைய ஊர். ]*

**புள்ளிச்சில்லை** *pulli-c-cillai,* பெ. (n.) மார்பிலும் வயிற்றிலும் கருப்புக் கீற்றுகளைக் கொண்ட பறவை வகை; spotted munia.

*[ புள்ளி + இல்லை ]*

**புள்ளிச்சிலம்பன்** *pulli-c-cilamban,* பெ. (n.) மார்பு வயிறு ஆகிய இடங்களில் செம்பழுப்பு கோடுகளையுடைய பறவை வகை; spotted babbler.

*[ புள்ளி + சிலம்பன் ]*

**புள்ளிச்சுறா** *pulli-c-curā,* பெ. (n.) மீன்வகையுளொன்று; a kind of sharp fish.

*[ புள்ளி + சுறா. சுல் → சுர் → சுரு → சுறு → சுறுக்கு = கூர்மை. சுறு → சுறா = கத்திபோல் வெட்டும் செதிலுள்ள கடல் மீன். ]*

**புள்ளிச்சோறு** *pulli-c-cōru,* பெ. (n.) விளைவு மதிப்பிடும் அதிகாரிகள் பொருட்டு வாங்கும் பழைய வரி வகை; ancient tax for the maintenance of official estimators of the produce of fields.

*[ புள்ளி + சோறு ]*

**புள்ளித்திரட்டை** *pulli-t-tirattai,* பெ. (n.) மீன்வகையுளொன்று; a kind of fish.

*[ புள்ளி + திரட்டை ]*

**புள்ளித்திருக்கை** *pulli-t-tirukkai,* பெ. (n.) சோனகத்திருக்கை (வின்.); sting ray

**புள்ளித்தும்பி** *pulli-t-tumbi,* பெ.(n.) மீன் வகையுளொன்று; a kind of fish.

**புள்ளித்தேளி** *pulli-t-tēli,* பெ.(n.) மீன் வகையுளொன்று; a kind of fish.

**புள்ளிதறட்டை** *pulli-tarattai,* பெ.(n.) வெண்ணிறமுள்ளதும் 15 அங்குல நீளம் வளரக் கூடியதுமான கடல்மீன் வகை; a see fish, silvery, attaining 15 in. in length.

**புள்ளிநோய்** *pullinōy,* பெ. (n.) உடம்பு முழுவதும் புள்ளிகளை யேற்படுத்தும் தோல்நோய்; a venereal disease which causes spots all over the body.

*[ புள்ளி + நோய் ]*

**புள்ளிப்பட்டு** *pulli-p-pattu,* பெ. (n.) பூத்தொழிலமைந்த பட்டு வகை (வின்.); veriegated silk-stuff.

*[ புள்ளி + பட்டு ]*

**புள்ளிப்பன்னா** *pulli-p-pannā,* பெ. (n.) பில்லி பன்னா; a sea fish.

**புள்ளிப்பனையேறி** *pulli-p-panai-y-ēri,* பெ. (n.) மஞ்சணிறமுள்ள ஆற்றுமீன் வகை; yellow coloured fish with spots.

*[ புள்ளி + பனையேறி ]*

**புள்ளிப்பாரை** *pulli-p-pārai,* பெ. (n.) மீன்வகை; caranx assinis a kind of fish.

*[ புள்ளி + பாரை ]*



**புள்ளிப்பிலாச்சை** *pulli-p-pilāccai,* பெ. (n.) *பிலாச்சை மீன்* பார்க்க; see *pilāccai min.*

*[ புள்ளி + பிலாச்சை ]*

**புள்ளிப்புலி** *pulli-p-puli,* பெ. (n.) சிறுத்தை; a leopard. (சேரநா.)

ம. புள்ளிப்புலி, புள்ளிநரி,

*[ புள்ளி + புலி ]*

**புள்ளிப்பூனை** *pulli-p-pūṉai*, பெ. (n.) பழுப்பு நிறப்புள்ளிகள் உடைய பூனை வகை; rusty-spotted cat.

*[ புள்ளி + பூனை ]*

**புள்ளிபட்டினசுட்டான்** *pulli-paṭṭiṉa-šuṭṭāṉ*, பெ.(n.) மீன் வகையுளொன்று; a kind of fish.

**புள்ளிபார்–த்தல்** *pulli-pār-*, 4 செ.கு.வி. (v.i.) 1. அறுவடைக்குமுன் வயலின் விளைவை மதிப்பிடுதல்; to estimate the produce of a field before harvesting. 2. கணக்கை முடித்தல் (வின்.); to settle accounts.

*[ புள்ளி + பார்–, ]*

**புள்ளிபார்ப்பவன்** *pulli-pārppavaṉ*, பெ.(n.) அறுவடைக்குமுன் வயலின் விளைவை மதிப்பிடும் பணியாளன்; official estimator of the produce of fields before harvesting.

*[ புள்ளி + பார்ப்பவன் ]*

**புள்ளிபாலகெண்டை** *pulli-pāla-keṇḍai*, பெ. (n.) மீன்வகையுளொன்று; a kind of fish.



**புள்ளிபோடு–தல்** *pulli-pōḍu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. குறியிடுதல்; to make a mark. 2. குறிப்பெழுதுதல் (வின்.); to make a note. 3. *புள்ளிபார்–த்தல்* பார்க்க; see *pulli-p-pār*.

*[ புள்ளி + போடு–, ]*

**புள்ளிமட்டி** *pulli-maṭṭi*, பெ. (n.) கிளிஞ்சல் வகையுளொன்று; a kind of shell.

**புள்ளிமரங்கொத்தி** *pulli maraṅkōtti*, பெ. (n.) மஞ்சள் தோய்ந்த வெண்மை நிறமுடைய மார்பிலும் வயிற்றிலும் பெரிய கரும்புள்ளி களைக் கொண்ட மரங்கொத்தி வகை; speckled piculet.

*[ புள்ளி + மரங்கொத்தி]*

**புள்ளிமருது** *pulli-marudu*, பெ. (n.) பிள்ளை மருது மரம்; white winged myrobalam.

மருது. வெண்மருது.

*[ பிள்ளைமருது → புள்ளைமருது → புள்ளி மருது]*

**புள்ளிமான்** *pulli-māṉ*, பெ. (n.) 1. புள்ளிகளுடைய மான் வகை; spotted deer, '*புள்ளிமான் கலையை*' (புறநா. 152. உரை). 2. மான்வகை; hog-deer.

மறுவ. கலைமான்

ம. புள்ளிமான்

*[ புள்ளி + மான் ]*

**புள்ளிமிசுக்கு** *pulli-mišukku*, பெ. (n.) *புள்ளிக்கணக்கு* (இ.வ.) பார்க்க; see *pulli-k-kaṇakku*.

*[ புள்ளி + மிசுக்கு ]*

**புள்ளிமிருகம்** *pulli-mirugam-,* பெ. (n.) *புள்ளிமான்*(வின்.)பார்க்க; see *pulli-māṉ.*

*[ புள்ளி + மிருகம் ]*

Skt. mrga > த. மிருகம்.

**புள்ளிமூக்குவாத்து** *pulli-mūkku-vāttu,* பெ. (n.) வெளிர்ப்பழுப்பு நிறத்தில் ஆழ்ந்த பழுப்பு நிறக் கோடுகளையுடைய பறவை; spot. billed duck.

*[ புள்ளி + மூக்கு + வாத்து ]*

**புள்ளியட்டை** *pulli-y-aṭṭai,* பெ. (n.) புள்ளியுள்ள அட்டை வகை; specked leech.

*[ புள்ளி + அட்டை. ஒட்டு → அட்டு → அட்டை = ஊனுடம்புடன் ஒட்டிக் கொண்டு அரத்தத்தை உறிஞ்சும் ஓர் உயிரி. ]*

**புள்ளியந்திருக்கை** *pulliyan-tirukkai,* பெ. (n.) *புள்ளித்திருக்கை* பார்க்க; see *pulli-t-tirukkai.*

*[ புள்ளித்திருக்கை → புள்ளியந் திருக்கை ]*

**புள்ளியம்**[1] *pulliyam,* பெ. (n.) சிறுகுறிஞ்சா (மலை.); small Indian ipecacuanha.

**புள்ளியம்**[2] *pulliyam,* பெ. (n.) *புளிநறளை* பார்க்க; see *pulinaralai*

**புள்ளியற்கலிமா** *pul-l-iyar-kali-mā,* பெ. (n.) *புள்ளியன்மா* பார்க்க; see *pulliyaṉmā.* '*புள்ளியற் கலிமா வுடைமையான*' (தொல்.பொ.194).

*[ புள் + இயல் + கலி + மா ]*

**புள்ளியன்மா** *pul-l-iyaṉmā,* பெ. (n.) பறவையின் வேகமுடைய குதிரை; horse that flies like a bird. '*பொங்குளைப் புள்ளியன் மாவும்*' (பரிபா.10,14).

*[ புள்ளி + இயல் + மா ]*

**புள்ளியாந்தை** *pulli-y-āndai,* பெ. (n.) சாம்பல் பழுப்பு நிறவுடலில் வெள்ளைப் புள்ளிகளைக் கொண்ட ஆந்தை வகை; spotted owlet.

*[ புள்ளி + ஆந்தை]*

**புள்ளியிடு—தல்** *pulli-y-iḍu-,* 11 செ.குன்றாவி. (v.t.) **1.** கணக்கிற் குறித்துக் கொள்ளுதல்; to enter in an account. '*புள்ளியிட்ட கணக்கு மாற்றி*' (மதுரைப். பதிற்.47). **2.** பொருள் விளங்கும்படி சொற்றொடரியத்தில் (வாக்கிய ங்களிற்) குறியிடுதல்; to punctuate.

*[ புள்ளி + இடு–,]*

**புள்ளியியல்** *pulliyiyal,* பெ. (n.) (துகவலையோ, நிலவரத்தையோ) எண்களால் குறித்துத் தெரிவிக்கும் முறை; statistics '*மக்கள் தொகையைத் கட்டுப்படுத்தா விட்டால் சிக்கல் உருவாகும் என்று ஒரு புள்ளியியல் நிறுவனம் தெரிவித்தது*' (உ.வ).

*[ புள்ளி + இயல்]*

**புள்ளியிரலை** *pulli-y-iralai,* பெ. (n.) *புள்ளிமான்1* பார்க்க; see *pullimāṉ1.* '*கவலையமருப்பிற் புள்ளியிரலை*' (பதிற்றுப். 74,10).

*[ புள்ளி + இரலை ]*

**புள்ளியினம்** *pulli-y-iṉam,* பெ. (n.) *புள்ளியீடு(வின்.)* பார்க்க; see *pulli-y-īḍu.*

*[புள்ளி + இனம்]*



புள்ளி மரங்கொத்தி



புள்ளிச் சிலம்பன்



புள்ளிச் சில்லை



புள்ளி ஆந்தை



புள்ளிமூக்கு வாத்து



புதிர் வானம்பாடி

**புள்ளியீடு** *pulli-y-īḍu,* பெ. (n.) பொருள் விளங்கும்படி சொற்றொடர்களில் இடும் குறியீடு (இக்.); punctuation.

*[ புள்ளி + ஈடு. இடு → ஈடு ]*

**புள்ளியுளுவை** *pulli-y-uluvai,* பெ. (n.) மீன்வகையுளொன்று; a kind of fish.

*[ புள்ளி + உளுவை ]*



**புள்ளிரி** *pulliri,* பெ. (n.) செஞ்சந்தனம்; red sandal.

**புள்ளிருக்குவேளூர்** *pul-l-irukkuvēlūr,* பெ. (n.) வினைதீர்த்தான் (வைத்தீசுவரன்) கோயில் என்று அழைக்கப்படும் ஊரின் பழையபெயர்; ancient name of the village Vaittišuvaraṉ kōyil.

*[ புள் + இருக்கும் + வேளூர் . புள் மிகுதியாக இருந்த ஊர்.]*

**புள்ளிரோகம்** *pulli-rōgam,* பெ. (n.) நோய்வகை (வின்.); a disease.

*[புள்ளி + ரோகம்.]*

Skt.rōha > *த.* ரோகம்

**புள்ளிவண்டு** *pulli-vaṇḍu,* பெ. (n.) கழுதை வண்டு (வின்.); ground beetle.

*[புள்ளி + வண்டு]*

**புள்ளிவராகன்** *pulli-varāgaṉ,* பெ. (n.) மூன்றரை உருபாமதிப்புள்ள பொற்காசு வகை (வின்.); star pagoda=3 1/2. rupees

*[புள்ளி + வராகன்]*

Skt. varāha > **த.** வராகன்

**புள்ளிவரி** *pulli-vari,* பெ. (n.) பட்டியல் (வின்.); catalogue.

*[புள்ளி + வரி]*

**புள்ளிவரிக்கலை** *pulli-vari-k-kalai,* பெ. (n.) புள்ளியையும் வரியையுமுடைய கலைமான்; spotted deer. *'அள்ளல் ஆடிய புள்ளி வரிக்கலை'* (நற். 265,2).

*[புள்ளி + வரி + கலை]*

**புள்ளிவிவரம்** *pulli-vivaram,* பெ. (n.) *புள்ளிவிளக்கம்* பார்க்க; see *pulli vilakkam.* *'தொழில் வளர்ச்சிபற்றிப்புள்ளிவிவரங்களுடன் விளக்கினார்'* (உ.வ).

*[புள்ளி + விவரம்]*

Skt. vivara > **த.** விவரம்

**புள்ளிவிழல்** *pulli-vilal,* பெ. (n.) பெண்ணிய நோய்; a venereal disease.

*[புள்ளி + விழல். விழு → விழல்]*

**புள்ளிவிளக்கம்** *pulli-vilakkam,* பெ. (n.) எண்ணிக்கை அடிப்படையில் தரப்படும் விளக்கம்; statistical information.

**ம.** புள்ளிவிளக்கம்

*[புள்ளி + விளக்கம்]*

**புள்ளீடு¹** *pullīdu,* பெ. (n.) சிவகணங்களுள் ஒருவகைப் பேய்க்(பைசாச)கணம் (தக்கயாகப். 605, உரை.); a group of bird-like demon-attendants of Šivaṉ.

*[புள் → புள்ளீடு]*

**புள்ளீடு²** *pul-l-īdu,* பெ. (n.) பறவைக் குற்றத்தினால் வருவதாகக் கருதப்படும் பிள்ளை நோய்; a disease in children, attributed to the evil influence of birds. புள்ளீட்டுக்கும் பேயீட்டுக்கும் பிழைக்கப்பெற்ற தென்கிறார் (திவ்.பெரியாழ்.2,5,4,வ்யா.பக்.343.).

*[புள் + ஈடு. இடு → ஈடு]*

**புள்ளு¹** *pullu,* பெ. (n.) **1.** புள் (சிலப்.10,117, உரை.) பார்க்க; see pul **2.** சிறுபுள்ளடி (மூ.அ.); a species of tick-trefoil.

*[புள் → புள்ளு]*

**புள்ளு²** *pullu,* பெ. (n.) விதைக்கரும்பு; piece cut off, as sugarcane cut cross wise.

மறுவ . விதைகரணை

*[புள் → புள்ளு]*

**புள்ளுரை-த்தல்** *pullurai-,* 4 செ.கு.வி. (v.i.) புள்ளொலி கொண்டு நிமித்தங்கூறுதல்; to predict from omen-birds, '*முந்து புள்ளுரைத்த முதுமகன்*' (பெருங்.உஞ்சைக்.56,234.)

*[புள் + உரை-]*

**புள்ளுவம்** *pulluvam,* பெ. (n.) **1.** பறவையினோசை (சீவக.2039,உரை.); cry of birds. **2.** ஏய்ப்பு (வஞ்சகம்); deceit, guile, craft, falsehood. '*பொய்யொருநாள் பட்டதேயமையும் புள்ளுவம் பேசாதே போக நம்பீ*' (திவ்.பெருமாள்.6,7.)

*[புள் → புள்ளுவம்]*

**புள்ளுவன்** *pulluvaṉ,* பெ. (n.) **1.** ஏய்ப்பன் (வஞ்சகன்); deceitful person; '*புள்ளுவன் கார்வம் பொதியறை*' (திவ்.பெரியதி.10,7,4.). **2.** பாலைநில மகன் (சூடா.); dweller in a desert tract. **3.** கீழ்மகன் (பிங்.); base, vile person.

*[புள்ளுவம் → புள்ளுவன்]*

**புள்ளூர்கடவுள்** *pul-l-ūr-kaḍavul,* பெ. (n.) திருமால்(கருடன் மேலேறிச் செல்லும் தெய்வம்.); Tirumāl as riding on garuḍa. '*புள்ளூர் கடவுளைப் போற்றுதும் போற்றுதும்*' (சிலப்.17,ஆடுநாப் புகழ்தல்.)

*[புள் + ஊர் + கடவுள்]*

**புள்ளெனல்** *pul-l-eṉal,* பெ. (n.) புளித்தற் குறிப்பு; expr.of sourness of taste. "கூழ் புள்ளென்றது" (நேமிநா,66,உரை).

*[புள் + எனல்]*

**புள்ளொலி** *pul-l-oli,* பெ. (n.) பறவையினது ஓசை; *chirping sound of birds.* "புள்ளொலி சிறந்த தெள்ளரிச் சிலம்பாடி "(மணிமே. 5,111).

*[புள் + ஒலி]*

**புள்ளையார்சங்கு** *pullaiyār šaṅgu,* பெ. (n.) பிள்ளையார் போன்ற அமைப்பிற் காணப்படும் சங்கு; a conch, which in a shape of 'Piḷḷaiyār'.

*[பிள்ளையார் → புள்ளையார் + சங்கு]*



**புள்ளோச்சு-தல்** *pul-l -ōccu-,* 15 செ.கு.வி. (v.i.) *புள்ளோப்பு-தல்* பார்க்க; see *pul-l-ōppu-,*

*[புள் + ஒச்சு-,]*

**புள்ளோப்பு-தல்** *pul-l-ōppu-,* 6 செ.கு.வி. (v.i.) பறவையை ஒட்டுதல்; to drive away birds as from a corn field. '*கொழுமீ னுணங்கல் புள்ளோப்பும்*' (ஐந்.ஐம்.47)

மறுவ. கவறோட்டுதல்,

*[புள் + ஒப்பு-,]*

**புளகம்**[1] *pulagam,* பெ. (n.) 1. மிகுந்த அச்சம் பெருமகிழ்ச்சி ஆகியவற்றால் உடற்றோலின் மேலுள்ள மயிர்கள் நிமிர்ந்து நிற்கை, மயிர் சிலிர்க்கை; horripilation, erection of the hairs on the skin, as from excessive fear, delight etc. சிந்தை பயமெய்தி யுறுபுளகத் தோடும் (திருவாலவா. 30,45) 2. மகிழ்ச்சி (வின்); joy, delight, ecstacy

மறுவ. மயிர்ப்புடைப்பு, மயிர்க் கூச்செறிவு.

க.,து. புலக, புளக

*[புல் → புலகம் → புளகம்.]*

த. புளகம் > Skt. pulaka.

இச்சொல்லின் முதற்பொருளாக உண்ணக் கூடிய ஒருவகைச் செடி (a species of edible plant) என்று மா.வி.அக. குறித்திருப்பது இச்சொல் புல்லோடுதொடர்பு கொண்டிருந்ததைக் காட்டுகிறது. வடமொழியில் இதன் வினை வடிவம் இல்லை; பெருவழக்குமில்லை

**புளகம்**[2] *pulagam,* பெ. (n.) சோறு (பிங்.); boiled rice.

க. புலக, புலிக(சோற்றுருண்டை)

*[புல் → புள் → பிள் → பிழம்பு = திரட்சி. (வே.க.3.81) புல் → புள் → புளகம் = சோற்றுருண்டை, சோறு]*

**புளகம்**[3] *pulagam,* பெ. (n.) கண்ணாடி; mirror, looking-glass. செம்பொற் புளகத் தின ஞாயிறு செற்ற கோயில் (சீவக. 1867)

*[புல்லுதல் = துளைத்தல். புல் → புழு → புகு. புல் → புள் → புளகம் = உருவத்தின் நிழலை உட்புகவைத்துக் காட்டும் பொருள்]*

**புளகாங்கிதம்** *pulagāṅgidam,* பெ. (n.) புளகிதம் பார்க்க; see pulagidam.

*[புளகம் + அங்கிதம்]*

Skt. aṅkita > த. அங்கிதம்

**புளகி-த்தல்** *pulagi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. மயிர் சிலிர்த்தல்; to horripilate as from rapture. 2. மிக மகிழ்தல் (வின்.); to be in ecstacy.

*[புல் → புலகம் → புளகி-, புளகித்தல் = புல்லைப்போன்று உடல்மேலுள்ள மயிர்கள் நேராக நிற்றல்.]*

**புளகிதம்** *pujagidam,* பெ. (n.) 1. மயிர்ச்சிலிர்ப்பு; horripilation, goose-skin, as from rapture '*புளகிதத்தோடுங் கண்ணீர்மேவ மெய்கம்பித்து*' (திருவாலவா. 1,22.) 2. பெருமகிழ்ச்சி (வின்.); ecstacy, rapture

*[புல் → புலகம் → புளகித்தல். புளகி → புளகிதம்.]*
'புளகம்' பார்க்க.

த. புளகிதம் > Skt. pulakita.

**புளகினி** *pujakiṇi,* பெ. (n.) தாமரைமணி; lotus bead.

**புளகு** *pujagu,* பெ. (n.) *புளகம்*[1] பார்க்க; see *pujagam*[1] மெய்யும் புளகெழ (பாரத. கீசக. 59)

*[புல் → புலகம் → புளகம் → புளகு]*

த. புளகு > Skt. pulaka.

**புளங்கொள்(ளு)—தல்** *pujaṅgoḷ(ḷu)-,* 10 செ.குன்றாவி. (v.t.) *புலங்கொள்—தல்* பார்க்க; see *pulaṅ-koḷ-,* '*சுடலை நீறு புளங்கொளவிளங்கினை*' (தேவா.256,4.)

*[புலங்கொள் → புளங்கொள்]*

**புளப்பாகல்** *pujappāgal,* பெ. (n.) வாலுழுவை. (மலை.); climbing staff plant.

**புளம்** *pujam,* பெ. (n.) 1. அண்ணம்; the uvula. 2. மேல்வாய்; palate.

*[புள் → புளி = புளித்துப்பொங்குவது. புளி → புளிஞன் = மலையேறுபவள். புள் → புளம் = மேலே இருப்பது, அண்ணம்.]*

**புளரியசாத்தம்** *pujariyaśāttam,* பெ. (n.) திருநீறு; the sacred ashes.

**புளவை** *pujavai,* பெ. (n.) 1. பிளவை பார்க்க; see piḷavai. 2. பட்டு; silk

*[பிள் → பிள → பிளவை → புளவை ]*

**புளவைப்பருத்தி** *pujavai-p-parutti,* பெ. (n.) பட்டுப்பருத்தி; silk cotton.

*[புளவை + பருத்தி]*

**புளாகம்** *pujāgam,* பெ. (n.) கஞ்சி; gruel.

*[புல் → புள் → புளகம் = சோறு. புளகம் → புளாகம் = சோற்றைக் கரைத்தாற் போன்றுள்ள கஞ்சி]*

**புளி[1]** *puji,* பெ. (n.) 1. புளிப்புச்சுவை (மூ.அ.); acidity, tartness. 2. மரவகை (மூ.அ.); tamarind, tree 3. புளியம் பழத்தின் ஓட்டை நீக்கிப் பெறப்படும் புளிப்புச் சுவையுடைய சதைப் பகுதி; tamarind குழம்புவைக்கக் கொஞ்சமாகப் புளி எடுத்துக்கொள் (உ.வ.) 4. புளிங்கறி; curry cantaining tamarind. '*அயிலை துழந்த அம்புளிச் சொரிந்து*' (அகநா.60.) 5. தித்திப்பு (சிறுபாண்,. 175.உரை); sweetness. 6. பெண் சரக்குவகை (வின்.) substance, in general.

*ம.,* குட புளி; *க.*புளி, புள்ள, புளு, புல்ல, புளிசெ, புணசெ, புணிசெ, புணுசி, புணுசெ, புண்செ, புளும்செ, குணசி, குணசெ, குணிசெ, குணுசெ, குளிசெ. தெ. புலி; *து.* புளி, புலி; கோத புள்ய்; *துட,* பூள்ய்; *கொலா.*புல்லெ; கட. புல்லா; *கோண்.* புலா; குவி. புல்ல; *பட.*குய்.

*[புள்) → புளி = புளிப்புச்சுவை, புளிப்புப் பழம், புளிப்புப் பழந்தரும் மரம்]*

புளி வகைகள்

1. ஆனைப்புளி
2. ஈழப்புளி
3. காட்டுப்புளி
4. கொடிப்புளி
5. கொடுக்காய்ப்புளி
6. கொன்றைப்புளி
7. கோணப்புளி
8. சரக்கொன்றைப்புளி
9. சிவப்புப்புளி
10. சீனம் புளி
11. சூலப்புளி
12. செடிப்புளி
13. சோலைப்புளி
14. பப்ரப்புளி
15. பழம்புளி
16. பாப்பாரப்புளி
17. புனம் புளி
18. பொந்தம்புளி
19. மணிலாப்புளி
20. மாம்புளி
21. மூலப்புளி .



**புளி² –த்தல்** *puḷi-,* 11 செ.கு.வி. (v.i.) 1. புளிப்பேறுதல்; to turn sour; to ferment; to be leavened. *'அமுது புளித்தாங்கு'* (சீவக.2015.). 2. கன்றுதல்; to become sore. *'கன்னம் புளிக்க அறைந்தான்'* (உ.வ.) 3. தன்மை திரிதல்; to change in taste or quality. 4. வெறுத்துப்போதல்; to be disgusting, as from surfeit. 5. கைக்கெட்டாதென்ற காரணத்தால் விடப்படுதல்; to be given up as being beyond one's reach. 6. வேலைக்கு உதவுமாறு களிப்பாக இருத்தல்; to become soft and pasty, as lime. *'சுண்ணாம்பு புளித்திருக்கிறது'* 7. செறிதல் (அக.நி.); to be thick, close, crowded or dense.

*ம.* புளிக்க; *தெ.* புலியு; *து.*புலிபுலி, புலியுனி,

*[புள்) → புளி = புளித்துப் பொங்குவது, புளிப்புச் சுவை, புளிப்புப் பழம் . புளித்தல் = புளித்துப் பொங்குதல். புளிக்க வைத்த மா எழும்பியிருத்தலைக் கொண்டே அது புளித்துவிட்டதென்று அறிந்து கொள்ளுதல் காண்க. (மு.தா.63)]*

**புளி³** *puḷi,* பெ. (n.) 1. சீனம்; alum. 2. எலுமிச்சை; the skin or rind of lime fruit.

**புளிக்கடலை** *puḷi-k-kaḍalai,* பெ. (n.) 1. புளித்த கடலை; sour Bengal gram. 2. கடலைப் புளிப்பு; vinegar extracted from the plant of Bengal gram.

*[புளி + கடலை]*

**புளிக்கருணை** *puḷi-k-karuṇai,* பெ. (n.) கருணைவகை (தைலவ.தைல.135,20,உரை); a kind of tuberous rooted herb.

*[புளி + கருணை. கறணை → கருணை]*

**புளிக்கரை¹–த்தல்** *puḷi-k-karai-,* 4 செ.கு.வி.(v.i.) 1. கறிக்காகப் புளியை நீரிற் கரைத்தல் (வின்.); to dissolve tamarind for

curry preparations. 2. கவலைப்படுதல் (இ.வ.); to be anxious.

து. புளிபாடுனி

*[ புளி + கரை–, ]*

**புளிக்கரை²–த்தல்** *puli-k-karai-,* 4 செ. குன்றாவி. (v.t.) கலக்கப் படச்செய்தல் (இ.வ.); to make one anxious. தேர்வுக்குச் செல்லும் மாணவன் வயிற்றில் புளிக் கரைத்தாற் போல் காணப் படுகிறான் (உ.வ.).

*[ புளி + கரை–,]*

**புளிக்கவை–த்தல்** *pulikkavai-,* 4 செ.குன்றாவி. (v.t.) நுரைகொள்ள வைத்தல்; to ferment.

து. புளிபா, புலிபா,

*[ புளி → புளிக்க + வை–, ]*

**புளிக்கறி** *puli-k-kari,* பெ.(n.) *புளிங்கறி* பார்க்க; see *pulinkari.*

*[ புளி + கறி ]*

**புளிக்காப்பு** *puli-k-kāppu,* பெ.(n.) சிலைக்கு எண்ணெய்க் காப்பிடும் போது எண்ணெய் கழற்ற உதவும் அரைத்த புளி முதலியன (திவ். பெரியாழ். 2, 4, 1, வ்யா. பக். 311); past of tarmarind, soapnut, etc., used for removing oil smeared on the idols in a ceremonial bath.

தெ. புலிகாபு

*[ புளி + காப்பு. கா → காப்பு ]*

**புளிக்காய்ச்சல்** *puli-k-kāyccal,* பெ. (n.) புளியைக் கரைத்து மிளகாய், கடலைப் பருப்பு, பெருங்காயம் முதலிய பொருள்களைச் சேர்த்துக் காய்ச்சி உருவாக்கும் கெட்டியான குழம்பு; a thick spicy concentrate of tamarind obtained by boiling.

*[ புளி + காய்ச்சல். காய் → காய்ச்சல். 'சல்' தொ.பெ. ஈறு ]*

**புளிக்கீரை** *puli-k-kirai,* பெ.(n.) புளிச்சக்கீரை; Indian sorrel.

மறுவ. புளிச்சிறுகீரை. புளியாரை

*[ புளி + கீரை ]*

**புளிக்குடி–த்தல்** *puli-k-kudi-,* 4 செ.கு.வி.(v.i.) ஈன்றணிமையாயிருத்தல் (இ.வ.); to be in child-bed.

து. புளிநீர் (புளியிலையைக் கொண்டு காய்ச்சிய சாறு)

*[ புளி + குடி. உடல் வலியைப் போக்க புளியம் இலையை நீரில் போட்டுக் காய்ச்சிய சாற்றைக் குழந்தை பெற்ற பெண்ணுக்குக் கொடுக்கும் பழக்கம் அடிப்படையில் உருவானது புளிக்குடித்தல் என்னும் சொல்லாட்சி. பின்னர் அது ஈன்றணிமையாய் இருக்கும் நிலையைக் குறித்தது.]*

**புளிக்குடித்திரு–த்தல்** *pul-k-kudittiru-,* 3 செ.கு.வி. (v.i.) *புளிக்குடி–த்தல்* பார்க்க; see *puli-k-kudi-,*

*[ புளி + குடித்து + இரு–, ]*

**புளிக்குழம்பு** *puli-k-kulambu,* பெ.(n.) *புளிங்கறி* பார்க்க; see *pulinkari.* புளிக் குழம்பு எளிதில் கெடாது (உ.வ.).

மறுவ. புளியாணம், தீயல், காரக்குழம்பு

*[ புளி + குழம்பு ]*

**புளிக்குளி–த்தல்** *puḷi-k-kuḷi-,* 4 செ.கு.வி. (v.i.) *புளிக்குடி–த்தல்* பார்க்க; see *puḷi-k-kuḍi-,*

*[ புளிக்குடி → புளிக்குளி –,]*

**புளிக்கொச்சு** *puḷi-k-koccu,* பெ. (n.) *புளிக் கோசு* பார்க்க; see *puḷi-k-kōšu.*

*[ புளி + கொச்சு ]*

**புளிக்கொட்டை** *puḷi-k-koṭṭai,* பெ. (n.) புளியம் பழத்திற்குள் இருக்கும் விதை; tamarind.

**து.** புலிகொட்டி.

*[ புளி + கொட்டை ]*

**புளிக்கொடிமுந்திரி** *puḷikkoḍi-munḍiri,* பெ.(n.) புளிப்புத் திராட்சை; sour grape.

*[ புளி + கொடிமுந்திரி ]*

**புளிக்கொழுமிச்சை** *puḷi-k-koḻumiccai,* பெ. (n.) புளிப்புச்சுவையுள்ள கொழுமிச்சை; sour citrous.

*[ புளி + கொழுமிச்சை ]*

**புளிக்கோசு** *puḷi-k-kōšu,* பெ. (n.) புளியிட்டுச் சமைத்த கறிவகை; a preparation of tamarind, used as a relish.

**மறுவ.** புளிக் கொச்சு.

E.cosh › **த.** கோசு

*[ புளி + கோசு ]*

**புளிக்கோட்டை** *puḷi-k-kōṭṭai,* பெ. (n.) கொட்டை நீக்கித் திரட்டி வைக்கப்பட்ட புளித்திரளை (கொ.வ.); tamarind fruit, massed after removing the stones and rinds.

*[ புளி + கோட்டை ]*

**புளிகரை–த்தல்** *puḷi-karai-,* 4 செ.கு.வி. (v.i.) *புளிக்கரை–த்தல்* பார்க்க; see *puḷi-k-karai-,*

*[ புளி + கரை–, ]*

**புளிகுடி–த்தல்** *puḷi-kuḍi-,* 4 செ.கு.வி. (v.i.) *புளிக்குடி–த்தல்* பார்க்க; see *puḷi-k-kuḍi-,*

*[ புளி + குடி–, ]*

**புளிகை** *puḷigai,* பெ. (n.) *புளித்தல்* பார்க்க; see *puḷittal.*

*[ புளி → புளிகை ]*

**புளிகொடு–த்தல்** *puḷi-koḍu-,* 4 செ.கு.வி. (v.i.) முத்துக்குளியலில் முத்தை விழுங்கினவனிடமிருந்து அம்முத்தை மலமூலம் வெளியேற்றப் புளியை உட்கொள்ளச் செய்தல் (வின்.); to give tamarind pulp to a man who has swallowed pearls, causing him to void them.

*[ புளி + கொடு–, ]*

**புளிங்கருணை** *puḷiṅkaruṇai,* பெ.(n.) *புளிநறளை* பார்க்க; see *puḷinaṟaḷai.*

*[ புளி + கருணை. கரணை → கருணை. ]*

**புளிங்கறி** *puḷi-ṅ-kaṟi,* பெ.(n.) புளிச்சாறிட்டுச் சமைத்த கறி (S.I.I.ii, 127.); curry containing tamarind juice.

**து.** புளிகொத்தெல்

**மறுவ.** புளிக்கொச்சு

*[ புளி + கறி ]*

**புளிங்காடி** *pulingāḍi,* பெ.(n.) மிகப்புளிப்பேறிய காடி; vinegar.

*[ புளி + காடி ]*

**புளிங்கூழ்** *puli-ṅ-kūḷ,* பெ.(n.) புளியிட்டாக்கிய கூழ்வகை; porridge cooked in tamarind juice. *'அவரையம் புளிங்கூழ்'* (மலைபடு. 436).

*[ புளி + கூழ் ]*

**புளிச்சக்கண்** *pulicca-k-kaṇ,* பெ.(n.) *புளித்தகண்* பார்க்க; see *pulitta-kaṇ*

*[ புளி → புளித்த → புளிச்ச + கண் ]*

**புளிச்சக்காடி** *pulicca-k-kāḍi,* பெ.(n.) *புளிச்சற்காடி (வின்.)* பார்க்க; see *puliccaṟkāḍi.* 2. மிக்க புளிப்பு (கொ.வ.); extreme sourness, as of vinegar.

*[ புளி → புளிச்ச + காடி ]*

**புளிச்சக்காய்** *pulicca-k-kāy,* பெ. (n.) *புளிச்சக்காய்மரம்* பார்க்க; see *puliccakkāy maram.*

**புளிச்சக்காய்மரம்** *puliccakkāy-maram,* பெ.(n.) ஒருவகை மரம்; bilimbi tree. (L.)

*[புளிச்சக்காய் + மரம்]*

**புளிச்சக்கை** *puli-c-cakkai,* பெ. (n.) புளியைக் கரைத்த பின் எஞ்சிய சாரமற்ற கோது (வின்.); refuse of tamarind fruit.

**மறுவ.** புளிக்கோது.

*[ புளி + சக்கை ]*

**புளிச்சங்காடு** *puliccangāḍu,* பெ. (n.) தஞ்சை மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Tañjāvūr dt.

*[ புளியங்காடு → புளிச்சங்காடு ]*

**புளிச்சத்து** *puli-c-cattu,* பெ. (n.) புளிப்பிழிவு; the essence of tamarind.

*[ புளி + சத்து ]*

*Skt. sat >* **த.** *சத்து*

**புளிச்சதண்ணீர்** *pulicca-taṇṇīr,* பெ. (n.) புளிப்பேறிய பழஞ்சோற்று நீர் (கொ.வ.); water allowed to stand over cooked rice and get sour.

**மறுவ.** நீத்தத்தண்ணீர், நீராத்தண்ணீர், பழையதண்ணீர்

*[ புளிச்ச + தண்ணீர் ]*

**புளிச்சநா** *puliccanā,* பெ.(n.) *புளிச்சக்கீரை* பார்க்க; see *pulicca-k-kīrai.*

*[ புளி → புளிச்ச + நா ]*

**புளிச்சநார்** *pulicca-nār,* பெ. (n.) புளிச்சைச் செடியிலிருந்து எடுக்கப்படும் நார் (கொ.வ.); fibre of Indian brown hemp.

*[ புளிச்சை + நார் ]*

**புளிச்சரக்கு** *puli-c-carakku,* பெ. (n.) புளிப்பைச் சமமாக்கும் காரப்பொருள்; alkali.

*[ புளி + சரக்கு. சர் → சரகு → சரக்கு = காய்ந்த பண்டம், காய்ந்த வணிகப் பண்டம், பண்டம். ]*

**புளிச்சல்** *puliccal,* பெ.(n.) புளிப்பானது (வின்.); anything acid, sour of leavened.

*[ புளி → புளிச்சல் ]*

**புளிச்சலேப்பம்** *puliccal-ēppam,* பெ. (n.) புளிச்சேப்பம் (வின்.) பார்க்க; see pulicc ēppam

*[ புளிச்சல் + ஏப்பம் ]*

**புளிச்சற்கண்** *puliccar-kan,* பெ. (n.) *புளிச்சைக் கண்* (வின்.) பார்க்க; see *puliccai*-k-kaṇ.

*[ புளிச்சை + கண் ]*

**புளிச்சற்காடி** *puliccar-kādi,* பெ.(n.) **1.** புளித்த பனாட்டுத் தண்ணீர் (வின்.); sour water in which palmyra pulp has been washed.**2.** புளிச்சத் தண்ணீர் (இ.வ.) பார்க்க; see pulicca-t-tannir.

*[ புளிச்சல் + காடி ]*

**புளிச்சற்றண்ணீர்** *puliccarrannir,* பெ. (n.) *புளிச்சதண்ணீர் (வின்.)* பார்க்க; see *pulicca-tannir.*

*[ புளிச்சல் + தண்ணீர் ]*

**புளிச்சாங்கீரை** *puliccān-kīrai,* பெ. (n.) *புளிச்சை 1 (கொ.வ.)* பார்க்க; see *puliccai 1.*

*[ புளிச்சை + கீரை ]*

**புளிச்சாணை** *puli-c-cāṇai,* பெ. (n.) புளித்திரளை (இ.வ.); rounded mass of tamarind pulp.

*[ புளி + சாணை ]*

**புளிச்சாரம்** *puli-c-cāram,* பெ. (n.) புளிச்சாறு; the essence of tamarind.

*[ புளி + சாரம் ]*

**புளிச்சாறு** *puli-c-cāru,* பெ. (n.) வேகவைத்த காய்கறிகளுடன் வெந்தயத்தையும், புளிச்சாற்றையும் சேர்த்து செய்யும் ஒருவகைக் குழம்பு (வின்.); vegetable soup prepared with tamarind and fenugreek.

**மறுவ.** கழனிப்புளிச்சாறு

**ம.** புளிஞ்சாறு; **து.** புளிச்சாறு.

*[ புளி + சாறு ]*

**புளிச்சான்**[1] *puliccān,* பெ.(n.) கொடிவகை (இ.வ.); a large woody climber with shining leaves and scarlet fruits.

*[ புளி → புளிச்சான் ]*

**புளிச்சான்**[2] *puliccān,* பெ.(n.) சாதிக்காய்; a kind of nutmeg.

**புளிச்சி**[1] *pulicci,* பெ.(n.) பருத்திவகை; a kind of coarse cotton (G.Tn.D. **1, 163.**).

**புளிச்சி**[2] *pulicci,* பெ.(n.) புளியாரை; prostate plant, sour sorrel.

*[ புளி → புளிச்சி ]*

**புளிச்சிராய்** *pulicciray,* பெ.(n.) புளிச்சி[2] பார்க்க; see pulicci[2]

*[ புளி + சிராய் ]*

**புளிச்சிறுகீரை** *puḷi-c-ciṟukīrai,* பெ. (n.) உயிரணுக்களை உண்டாக்கி புணர்ச்சியில் விருப்பத்தினை யேற்படுத்தும் புளியாரைக் கீரை; a kind or greens which increases semen and desire for inter-course.

**மறுவ.** புளிக்கீரை, புளியாரை, காசினிக் கீரை.

*[ புளி + சிறுகீரை ]*

**புளிச்சுண்ணம்** *puḷi-c-cuṇṇam,* பெ. (n.) பழம்புளி, கருப்பூரம் போன்றவற்றைச் சிற்றாமணக் கெண்ணெயுடன் பிசைந்து எரியூட்டி யுருவாக்குஞ் சுண்ணம்; a calcium prepared by burning the paste prepared castor oil, camphor and old tamarind.

*[ புளி + சுண்ணம். சுள் → சுண் → சுண்ணம் ]*

**புளிச்சுரோணிதம்** *puḷi-c-curōṇidam,* பெ. (n.) படிகாரம், காடி போன்ற புளிப்புள்ள சரக்குகள் (வின்.); acid substance which combines with an alkali.

*[ புளி → புளிச்சு + ரோணிதம் ]*

**புளிச்சுவை** *puḷi-c-cuvai,* பெ. (n.) அறுசுவைகளுளொன்று; sour taste.

**து.** புளிச்வாது.

*[ புளி + சுவை ]*

**புளிச்செவ்வந்தி** *puḷi-c-cevvandi,* பெ. (n.) மரவகை; a species of wooly jacket.

*[ புளி +செவ்வந்தி ]*

**புளிச்சேப்பம்** *puḷiccēppam,* பெ. (n.) உண்டது செரியாமையால் வரும் ஏப்பம்; belching on account of indigestion.

**து.** புளிஆரிகெ

*[ புளிச்ச + ஏப்பம். ஏ → ஏப்பம் ]*

**புளிச்சை** *puḷiccai,* பெ. (n.) **1.** செடிவகை; Indian brown hemp. **2.** செம்புளிச்சை; roselle. **3.** கும்பாதிரி; lac tree. **4.** புளிச்செவ்வந்தி பார்க்க; see puḷi-c-cevvandi. **5.** பீளை; rheum, secretion from the eyes.

**க.** பிலிசி.

*[ புளி → புளிச்சை ]*

**புளிச்சைக்கண்** *puḷiccai-k-kaṇ,* பெ.(n.) பீளை நிரம்பிய கண்; blear eyes, rheumy eyes.

*[ புளிச்சை + கண் ]*

**புளிச்சைக்கீரை** *puḷiccai-k-kīrai,* பெ.(n.) *புளிச்சை 1 (மலை.)* பார்க்க; see *puḷiccai 1.*

*[ புளிச்சை + கீரை ]*

**புளிச்சைக்கொட்டை** *puḷiccai-k-koṭṭai,* பெ.(n.) **1.** புளிச்சைக் கீரைக்கொட்டை; seed of prostate sour plant. **2.** புளியங்கொட்டை; seed of tamarind fruit.

**மறுவ.** புளிக்கொட்டை

*[ புளி → புளிச்சை + கொட்டை ]*

**புளிச்சைப்பழம்** *puḷiccai-p-paḻam,* பெ. (n.) புளிப்புச் சுவையுள்ள பழம்; a sour fruit.

*[ புளி → புளிச்சை + பழம் ]*

**புளிச்சோபிதம்** *pul̤i-c-cōbidam,* பெ. (n.) புளிக் கொட்டை பார்க்க; see pul̤i-k-kottai.

*[ புளி + சோபிதம் ]*

**புளிச்சோறு** *pul̤i-c-cōṟu,* பெ. (n.) புளியிட்டு அட்ட சோறு; boiled rice dressed with tamarind sauce. *'புளிச்சோறுண்டுளே களித்தேன்'* (அருட்பா, vi. அவா வறுப்பு. 7.).

*[ புளி + சோறு ]*

**புளிஞ்சோறு** *pul̤i-ñ-cōṟu,* பெ. (n.) *புளிச்சோறு* பார்க்க; see *pul̤i-c-cōṟu.*

*[ புளி + சோறு ]*

**புளிஞன்** *pul̤iñaṉ,* பெ.(n.) வேடன் (சூடா.); hunter, mountaineer. *'சவரர் புளிஞர் வளைந்தது'* (பெருங். உஞ்சைக். 55, தலைப்பு).

ம. புளியன் (ஒரு இனத்தார்); க. புலிந்த; து. புளிந்தெ.

*[ புள் → (பள்) → (பண்) → பணை = பரண், உயரம். புர் → புரம் = உயர்ந்த மலை. புரம் → பரம் = மேல்(மு.தா. 67) புள் → புளி = புளித்து பொங்குவது (மு.தா.63), உயர்ந்து நிற்கும் மலை. புளி → புளிஞன் = மலையேறுபவன், வேடன் ]*

த. புளிஞன் > Skt. pulinda.

**புளித்தஆரை** *pul̤ittaārai,* பெ. (n.) புளியாரை பார்க்க; see pul̤iyārai.

*[ புளி → புளித்த + ஆரை ]*

**புளித்தகஞ்சி** *pul̤itta-kañji,* பெ. (n.) நுரைத்து மிகுவூட்டம் பொதிந்த சோற்று நீர்; yeast .

*[ புளி → புளித்த + கஞ்சி ]*

**புளித்தகண்** *pul̤itta-kaṇ,* பெ. (n.) கண்ணி லொழுக்கினை ஏற்படுத்தும் நோய்; an eye disease marked by purulent discharge, sore eye.

மறுவ. புளிச்சக்கண், பீளைக்கண்

*[ புளி → புளித்த + கண் ]*

**புளித்தகழுநீர்** *pul̤itta-kal̤unīr,* பெ. (n.) சத்து நிறைந்த சோற்றுக்காடி; rice vinegar.

*[ புளி → புளித்த+கழு + நீர் ]*

**புளித்தகள்** *pul̤itta-kal̤,* பெ.(n.) புளிப்பேறிய கள்; sour toddy.

து. புளிகளி

*[ புளி → புளித்த + கள் ]*

**புளித்தகளா** *pul̤itta-kal̤ā,* பெ. (n.) புளிப்புச்சுவைமிக்க களாக்காய்; fruits of carissa carandas.

*[ புளி → புளித்த + களா ]*

**புளித்தகாடி** *pul̤itta-kāḍi,* பெ.(n.) நுரைத்த ஊட்டம்மிக்க கழுநீர்; vinegar-any fermented liquid.

*[ புளி → புளித்த + காடி ]*

**புளித்தகாடிச்சோறு** *pul̤itta-kāḍi-c-cōṟu,* பெ. (n.) புளிப்பும், ஊட்டம் நிறைந்த சோற்று நீர்; rice at the bottom of fermented rice water.

*[ புளி → புளித்த + காடி + சோறு ]*

**புளித்தசிறுகீரை** *pulitta-śiru-kirai,* பெ. (n.) *புளிச்சிறுகீரை* பார்க்க; see *puli-c-ciru-kirai.*

*[ புளித்த + சிறுகீரை ]*

**புளித்தசோறு** *pulitta-šōru,* பெ.(n.) நன்கு புளித்து நுரைத்த சோற்று நீரில் ஊறவைத்துப் பக்குவப்படுத்திய சோறு; rice at the bottom of fermented rice water.

*[ புளித்த + சோறு ]*

**புளித்தண்ணீர்** *puli-t-tannīr,* பெ. (n.) *புளிக் காய்ச்சல் (இ.வ.)* பார்க்க; see *puli-k-kāyccal.*

*[ புளி + தண்ணீர் ]*

**புளித்ததயிர்** *pulitta-tayir,* பெ. (n.) வெப்பத்தைப் போக்கி, செரிமானத்தை யுண்டாக்கி நாவறட்சியைப் போக்கும் தன்மையுள்ள தயிர்; curd, which it improves digestion, quenches thrist and reduces heat.

*[ புளித்த + தயிர் ]*

**புளித்ததேன்** *pulitta-tēn,* பெ.(n.) நாள்பட்ட தேன்; old honey which turned sour.

*[ புளித்த + தேன் ]*

**புளித்தநாரத்தை** *pulitta-nārattai,* பெ. (n.) *புளிநாரத்தை* பார்க்க; see *puli-nārattai*

*[ புளி → புளித்த + நாரத்தை ]*

**புளித்தநாற்றம்** *pulitta-nārram,* பெ. (n.) நுரைத்துக் கெட்ட மணம்; sour smell.

*[ புளித்த + நாற்றம். நாறு → நாற்றம் ]*

**புளித்தநீர்** *pulitta-nīr,* பெ. (n.) குடலிலுள்ள காடிநீர்; acid liquid in the intestine.

*[ புளித்த + நீர் ]*

**புளித்தமா** *pulitta-mā,* பெ.(n.) புளிப்பேறிய தோசைமா (இ.வ.); fermented dough.

*[ புளி → புளித்த + மா ]*

**புளித்தமோர்** *pultta-mōr,* பெ. (n.) நுரைத்துக் காடிச்சுவை யேறிய மோர்; sour butter milk.

க. புளிமொசர், குளிமொசரு

...

*[ புளித்த + மோர் ]*

**புளித்தயேப்பம்** *pulitta-y-ēppam,* பெ. (n.) *புளியேப்பம்* பார்க்க; see *puli-y-ēppam.*

து. புளிஆரிகை.

*[ புளித்த + ஏப்பம். ஏ → ஏப்பம் ]*

**புளித்தல்** *pulittal,* பெ. (n.) சிறுமர வகை; a species of flowered nutmeg, (L.).

**புளித்துப்போ–தல்** *pulittu-p-pō-,* 8செ.கு.வி. (v.i.) 1. மா முதலியன புளிப்பேறுதல்; to turn sour; to ferment. தோசை மாவு புளித்துப்போய் விட்டது (உ.வ.) 2. எதிர்பார்த்தது கிட்டாமற் போதல் (இ.வ.); to be disappointed. 3. அருவருத்துப் போதல் (இ.வ.); to be disgusted, as from surfeit. கேட்டுக் கேட்டுப் புளித்துப்போன பாட்டைமீண்டும் போடாதே (உ.வ.), பழகப் பழகப் பாலும் புளிக்கும் (பழ.).

*[ புளி → புளித்து + போ–, ]*

**புளித்தமோர்** *puitta-mōr,* பெ. (n.) நுரைத்துக் காடிச்சுவை யேறிய மோர்; sour butter milk.

க. புளிமொசர், குளிமொசரு

...

*[ புளித்த + மோர் ]*

**புளித்தயேப்பம்** *puḷitta-y-ēppam,* பெ. (n.) *புளியேப்பம்* பார்க்க; see *puḷi-y-ēppam.*

து. புளிஆரிகை.

*[ புளித்த + ஏப்பம். ஏ → ஏப்பம் ]*

**புளித்தல்** *puḷittal,* பெ. (n.) சிறுமர வகை; a species of flowered nutmeg, (L.).

**புளித்துப்போ–தல்** *puḷittu-p-pō-,* 8செ.கு.வி. (v.i.) 1. மா முதலியன புளிப்பேறுதல்; to turn sour; to ferment. தோசை மாவு புளித்துப்போய் விட்டது (உ.வ.) 2. எதிர்பார்த்தது கிட்டாமற் போதல் (இ.வ.); to be disappointed. 3. அருவருத்துப் போதல் (இ.வ.); to be disgusted, as from surfeit. கேட்டுக் கேட்டுப் புளித்துப்போன பாட்டைமீண்டும் போடாதே (உ.வ.) பழகப் பழகப் பாலும் புளிக்கும் (பழ.)

*[ புளி → புளித்து + போ–, ]*

**புளித்தோடை** *puḷi-t-tōḍai,* பெ. (n.) மரவகை (வின்.); an acid lemon.

*[ புளி + தோடை ]*

**புளிதசம்** *puḷidaśam,* பெ. (n.) விலங்குகளின் செவ்வரத்தத்திலும் நிலைத்திணை (தாவர)களிலும் காணப்படும் நுண்ணிழைமைப் பொருள்; a peculiar substance found in fresh blood in animals and vegetable kingdom.

**புளிதம்** *puḷidam,* பெ. (n.) 1. புலால் (சூடா.); flesh. 2. ஒருவகையுணவு; a kind of food. *'ஈரற்புளிதமுமா'* (கலிங். 506.).

*[ புல் → புல்லு. புல்லுதல் = பொருந்துதல். புல் → புலி → புலிதம் → புளிதம் ]*

**புளிந்தசம்** *puḷindaśam,* பெ. (n.) *புலிதடுக்கி 1* பார்க்க; see *puḷitaḍukki 1.*

**புளிந்தயிர்** *puḷi-n-tayir,* பெ. (n.) புளிப்பேறிய தயிர் (வின்.); sour curds.

க. புளியமொ

*[ புளி + தயிர் ]*

**புளிந்தன்** *puḷindaṉ,* பெ. (n.) *புளிஞன்* பார்க்க; see *puḷiñaṉ* *'புளிந்தனருட் சிவகோசன்'* (சீகாளத். பு. விடசங். 88).

*[ புளி → புளிந்தன் ]*

த. புளிந்தன் > Skt. pulinda.

**புளிநடலை** *puḷi-naḍalai,* பெ. (n.) *புளிநறளை (மலை.)* பார்க்க; see *puḷinaṟaḷai.*

*[ புளிநறளை → புளிநடலை ]*

**புளிநவ்வல்** *puḷinvval,* பெ. (n.) புளிப்பு நாவல்பழம்; a kind of jamoon.

*[ புளி + நவ்வல். நாவல் → நவ்வல் ]*

**புளிநறளை¹** *puḷi-naṟaḷai,* பெ. (n.) கொடிவகை; bristly trifoliate vine, (L.).

*[ புளியரளை →புளிநறளை ]*

**புளிநறளை²** *puḷinaṟaḷai,* பெ. (n.) புளியரனை; vitis lanata.

*[ புளியரனை→புளிநரளை ]*

**புளிநறளைக்கிழங்கு** *puli-naralai-k-kilangu,* பெ. (n.) செம்பைப் பொன்னாக்குவதும், வெளிமூலத்தை வேரறுக்குந் தன்மை பெற்றதுமான புளியம் பிரண்டைக் கிழங்கு; root of vitis lanata; which purifies copper and is a remedy for piles.

*[ புளிநறளை + கிழங்கு ]*

**புளிநாரத்தை** *puli-nārattai,* பெ. (n.) புளிப்புச் சுவை பொருந்திய நாரத்தை; citron.

**மறுவ.** புளிப்புநாரத்தை

*[ புளி + நாரத்தை ]*

**புளிநாற்றவேர்வை** *pulinārra-vērvai,* பெ. (n.) புளிப்புமணமுள்ள வியர்வை; sour smelling perspiration.

*[ புளிநாற்றம் + வேர்வை. வியர்வை → வேர்வை ]*

**புளிப்பலா** *puli-p-palā,* பெ. (n.) **1.** முள்ளுச்சீத்தா; soursop. **2.** தாளிசபத்திரி; wild cinnamon.

*[ புளி + பலா ]*

**புளிப்பற்று-தல்** *puli-p-parru-,15* செ.குன்றாவி. (v.t.) புளிப்பேறுதல்; to become acidic or fermented.

*[ புளி + பற்று-, ]*

**புளிப்பன்** *pulippan,* பெ. (n.) *புளிப்பான்* பார்க்க; see *pulippān.*

*[ புளிப்பான் → புளிப்பன் ]*

**புளிப்பா(கு)-தல்** *pulippā(gu)-,* **6** செ.கு.வி. (v.i.) புளிப்புத் தன்மையாதல்; to sour.

*[ புளிப்பு + ஆ-, ]*

**புளிப்பாக்கு-தல்** *pulipp-ākku-,* **5** செ. குன்றாவி. (v.t.) புளிப்புச் சுவை தன்மையதாக்குதல்; to make sour.

*[ புளிப்பு + ஆக்கு-, ]*

**புளிப்பாகல்** *puli-p-pāgal,* பெ. (n.) சிறு வாலுளுவை; small variety of intellect tree.

*[ புளி + பாகல் ]*

**புளிப்பாகு** *puli-p-pāgu,* பெ. (n.) குழம்புணவு (குறுந். **167.**); liquid curry.

*[ புளி + பாகு ]*

**புளிப்பாறை** *puli-p-pārai,* பெ. (n.) *புளியாரை* பார்க்க; see *puliyārai.*

*[ புளி → புளிப்பு +ஆரை ]*

**புளிப்பான்** *puli-p-pān,* பெ. (n.) *புளியேப்பம்* பார்க்க; see *puli-y-ēppam.*

*[ புளி→ புளிப்பு → புளிப்பான் ]*

**புளிப்பி** *pulippi,* பெ. (n.) புளிக்க வைக்கை; leaven.

*[ புளி → புளிப்பி ]*

**புளிப்பிச்சான்** *pulippiccān,* பெ. (n.) *புளிச்சான்*[2] பார்க்க; see *puliccān*[2].

*[ புளிப்பு → புளிப்பிச்சான் ]*

**புளிப்பிரண்டை** *puḷi-p-piraṇḍai,* பெ. (n.) *புளிநறளை (பதார்த்த. 338.)* பார்க்க; see *puḷinaṟaḷai.*

*[ புளி + பிரண்டை. புரள் → புரண்டை → பிரண்டை = திருகலான கொடி ]*

**புளிப்பிராகியம்** *puḷi-p-pirāgiyam,* பெ. (n.) *புளியம்பூ* பார்க்க; see *puḷiyambū.*

**புளிப்பிராணி** *puḷi-p-pirāṇi,* பெ. (n.) புளியம் பட்டை; bark of tamarind tree.

*[ புளி + பிராணி. புறணி → பிரணி → பிராணி ]*

**புளிப்பிராதகி** *puḷi-p-pirādagi,* பெ. (n.) சேனைக்கிழங்கு; yam.

**புளிப்பிலந்தை** *puḷippilandai,* பெ. (n.) புளிப்புச்சுவையுள்ள இலந்தைப் பழம்; sour zizypus.

*[ புளிப்பு + இலந்தை ]*

**புளிப்பு** *puḷippu,* பெ. (n.) **1.** அறுசுவையு ளொன்று; sourness, acidity, one of aṟušuvai, q.v. **2.** புளிக்கை; fermenting, fermentation, souring. **3.** புளிப்புள்ள மருந்துச் சரக்கு; acid, vegetable or mineral.

**ம.** புளிப்பு, புளியன்; **து.** புளிப்பு.

*[ புளி → புளிப்பு ]*

முக்கனிகளுள் ஏதேனுமொன்று இனிப்பும், பாகற்காய் அல்லது சுண்டைவற்றல் கசப்பும், காரவடை உறைப்பும், புளிக்கறியும் தயிரும் ஊறுகாயும் புளிப்பும், மாதுளங்காய் அல்லது கச்சல் துவர்ப்பும், உப்பேறி உவர்ப்பும் ஆகும். இத்தகைய உண்டி, தமிழரின் சுவை முதிர்ச்சியையும் தலைசிறந்த நாகரிகத்தையும் மருந்துவ அறிவையும் உடல் நலவுணர்ச் சியையும் ஒருங்கே காட்டும். அறுசுவை யுள்ளும் தமிழர்க்குச் சிறந்தவை இனிப்பும் புளிப்பும் ஆகும். இது வெப்ப நாட்டியல்பு (ப.த.நா.ப. 38)

**புளிப்புக்காட்டு-தல்** *puḷippu-k-kāṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) அச்சமுறுத்துதல்; to frighten.

**மறுவ.** பூச்சிக்காட்டு

*[ புளிப்பு + காட்டு–, ]*

**புளிப்புக்கீரை** *puḷippu-k-kīrai,* பெ. (n.) சுவையற்ற தன்மை,வயிற்றுக் கடுப்பு, கரப்பான் போன்றவற்றைப் போக்கும் புளிச்சுவையுள்ள கீரை (பதார்த்த. 605.); Indian brown hemp.

**மறுவ.** புளிச்சை,காசினிக்கீரை, புளிச் சிறுகீரை.

*[ புளிப்பு + கீரை ]*

**புளிப்புக்குஞ்சிதம்** *puḷippu-k-kuñjidam,* பெ. (n.) புளியங்காடி; sour vinegar.

*[ புளிப்பு + குஞ்சிதம் ]*

**புளிப்புக்கொடிமுந்திரி** *puḷippu-k-koḍimundiri,* பெ. (n.) *புளிக்கொடி முந்திரி* பார்க்க; see *puḷi-k-koḍi mundiri.*

**மறுவ.** புளிமுந்திரிகை.

*[ புளிப்பு + கொடிமுந்திரி ]*

**புளிப்புக்கொழுஞ்சி** *puḷippu-k-koḻuñji,* பெ. (n.) செங்கொழுஞ்சி; sour orange.

**மறுவ.** கொழுமிச்சை

*[ புளிப்பு + கொழுஞ்சி ]*

**புளிப்புக்கொழுமிச்சை** *pulippu-k-kolumiccai,* பெ. (n.) *புளிப்புக்கொழுஞ்சி* பார்க்க; see *pulippu-k -koluñji.*

*[ புளிப்பு + கொழுமிச்சை ]*

**புளிப்புத்தட்டு—தல்** *pulippu-t-tattu-,* 15 செ.கு.வி. (v.i.) 1. சிறிது புளிப்புடையதாதல் (வின்.); to be slightly sour in taste. *தயிரைக் குளிர்ப் பதனப் பெட்டிக்குள் வை. இல்லை யென்றால் புளிப்புத்தட்டிவிடும்* (உ.வ.). 2. சுவையறுதல் (இ.வ.); to become tasteless 3. *புளித்துப் போ—தல்* பார்க்க; see *pulittu-p-pō-,*

*[ புளிப்பு + தட்டு—, ]*

**புளிப்புத்தமரத்தை** *pulippu-t-tamarattai,* பெ. (n.) மனக்குழப்பம் குரற்கம்மல், கண்ணோய், மனநல ஊட்டக் குறைவு போன்றவற்றைப் போக்குந் தமரத்தை; sour Chinese gooseberry which is used in eye disease sore throat loss of semen and confusion of mind.

*[ புளிப்பு + தமரத்தை ]*

**புளிப்புநாரத்தை** *pulippu-nārattai,* பெ. (n.) புளிப்புள்ள நாரத்தை வகை (வின்.); a kind of citron.

*[ புளிப்பு + நாரத்தை ]*

**புளிப்புமாங்காய்** *pulippu-māṅgāy,* பெ. (n.) புளிப்புச் சுவையுடைய(பிஞ்சு) மாங்காய்; (tender) sour mango.

*[ புளிப்பு + மாங்காய் ]*

**புளிப்புமாதுளை** *pulippu-mādulai,* பெ. (n.) புளிப்புள்ள மாதுளை வகை; double-flowered pomegranate.

*[ புளிப்பு + மாதுளை ]*

**புளிப்புவிடுதல்** *pulippu-vidudal,* பெ. (n.) பற்றுவிட்டுப் போகை (கொ.வ.); getting sick of a thing, losing zest or interest.

*[ புளிப்பு + விடுதல். விடு → விடுதல். 'தல்' தொ.பெ.ஈறு ]*

**புளிமஞ்சி** *puli-mañji,* பெ. (n.) *புளிச்சை 1.* பார்க்க; see *puliccai 1.*

*[ புளி + மஞ்சி ]*

**புளிமடலைக் கிழங்கு** *pulimadalai-k-kilangu,* பெ. (n.) *புளிநறளைக் கிழங்கு* பார்க்க; see *pulinarali-k-kilangu.*

*[ புளிமடலை + கிழங்கு ]*

**புளிமண்டி** *puli-mandi,* பெ. (n.) 1. கெட்டுப் போன பனம்பழம் (வின்.); spoiled palmyra fruit, as unpleasantly sour. 2. அழுக்கானது (வின்.); that which is dirty.

*[ புளி + மண்டி. மண்டு → மண்டி = மண்டி (மிகுந்து) கிடப்பது ]*

**புளிமதுரை** *puli-madurai,* பெ. (n.) 1. செடிவகை (வின்.); a kind of shrub. 2. *புளி நறளை(மலை.)* பார்க்க; see *pulinaralai.*

*[ புளி + மதுரை ]*

**புளிமரங்கா** *puli-maraṅgā,* பெ. (n.) குலவாழை, a species of gamboge.

**புளிமரிசை** *pulimarišai,* பெ. (n.) *புளிச்சை, 1* பார்க்க; see *puliccai* 1. (L.).

**புளிமா**[1] *puli-mā,* பெ. (n.) 1. புளிப்புக் கனியுண்டாக்கும் மாமரம் (திருமந். 202.); species of mango sour in taste. 2. புளிச்சக் காய் மரம்; bilimbi tree. 3. காட்டுமா; buchanan's mango. 4. நீண்ட மரவகை; Indian hog-plum.

க. குளீமாவு

*[ புளி + மா ]*

**புளிமா**[2] puli-mā, பெ. (n.) நிரைநேர் வாய்பாடு (காரிகை,உறுப்.7.); (pros.) a formula of metrical foot, nirai-nēr-nirai(uu-).

*[ புளி + மா ]*

எ–டு;

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்த்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே
*[ கந்தர்.அனு.]*

**புளிமாங்கனி** *pulimā-n-gani,* பெ. (n.) நிரை நேர் நிரை வாய்பாடு (காரிகை. உறுப். 7.); (pros.) a formula of metrical foot nirai-nēr-nirai.

*[ புளிமா + கனி ]*

எ–டு;

மலையஞ்சின மழையஞ்சின வளமஞ்சின பிறவும்
நிலையஞ்சின திசைவெங்கரி நிமிர்கின்றன கடலின்
அலையஞ்சின பிறிதென்சில தனியைங்கர கரியும்
கொலையஞ்சுதல் புரிகின்றது கரியின்படி கொளலால்
*[கம்பரா. அதி.வதைப்.பட.154]*

இப்பாடலில் ஒவ்வோரடியிலும் முதல் மூன்று, சீர்கள் புளிமாங்கனி என்னும் வாய்பாடு கொண்டுள்ளன.

**புளிமாங்காய்** *pulimān-gāy,* பெ. (n.) 1. நிரை நேர் நேர் வாய்பாடு (காரிகை, உறுப். 7.) a formula of metrical foot nirai-nēr-nēr (ധ--) 2. பெண்சரக்கு வகை; an acid substance.

*[ புளிமா + காய் ]*

'துறந்தார்க்கும்.......... இறந்தார்க்கும்

**புளிமாஞ்சை** *puli-māñjai,* பெ. (n.) *புளிச்சை 1.* பார்க்க; see *puliccai* 1.

*[ புளிமஞ்சி → புளிமாஞ்சி ]*

**புளிமாதளை** *puli-mādalai,* பெ. (n.) *புளிப்பு மாதுளை (வின்.)* பார்க்க; see *pulippu-mādulai*

*[ புளிப்புமாதுளை → புளிமாதளை ]*

**புளிமாந்தண்ணிழல்** *pulimā-n-tannilal,* பெ. (n.) நிரை நேர் நேர் நிரை வாய்பாடு (காரிகை. உறுப். 8); (pros.) a formula of metrical foot nirai-nēr-nirai. (ധ--ധ)

*[ புளிமா + தண்ணிழல் ]*

எ–டு:

தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன தனதான்

**புளிமாந்தண்பூ** *pulimā-n-tanpū,* பெ. (n.) நிரை நேர் நேர் நேர் வாய்பாடு (காரிகை, உறுப். 8); (pros.) a formula of metrical foot, nirai-nēr-nēr-nēr. (ധധ--- ).

*[புளிமா + தண்பூ]*

எ–டு:

தனத்தா தத்தத் தனதான

**புளிமாநறுநிழல்** *pulimā-naṟu-nilal,* பெ. (n.) நிரைநேர் நிரைநிரை வாய்பாடு (காரிகை. உறுப். 8.) ;(pros.) a formula of metrical foot **(ங-ஙங)**

*[ புளிமா + நறுநிழல் ]*

எ–டு:

தனன தனதன தனதன தனதன

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன

**புளிமாநறும்பூ** *pulima-naṟumbū,* பெ. (n.) நிரை நேர் நிரை நேர் வாய்பாடு (காரிகை. உறுப். 8.); (pros.) a formula of metrical foot nirai-nēr-nirai-nēr **(ங-ஙங)**

*[ புளிமா + நறும்பூ ]*

எ–டு:

தனந்த தனந்த தனந்த தனந்த
தனந்த தனந்த தனந்த தனதான்

**புளிமாறு** *puli-māṟu,* பெ. (n.) புளியம் வளார்; tamarind switch. *'அடித்த புளிமாறு'* (திருவாலவா. 30, 42)

*[ புளி + மாறு. வார்→வாரு →வாறு → மாறு]*

**புளிமிதவை** *puli-midavai,* பெ. (n.) *புளிங்கூழ்* பார்க்க; see *puliṅ-gūḷ. 'ஆய்மக ளட்ட வம்புளி மிதவை'* (புறநா. 215.)

*[ புளி + மிதவை ]*

**புளிமீன்** *puli-mīṉ,* பெ. (n.) புளியிட்ட மீன் கறி (வின்.); fish soured with tamarind juice and eaten as a relish.

*[ புளி + மீன் ]*

**புளிமூட்டை** *puli-mūṭṭai,* பெ. (n.) புளியை மொத்தமாக வைத்து ஓலைப் பாயால் சுற்றிய கட்டு; roll of tamarind packed in a basket.

*[ புளி + மூட்டை ]*

**புளியங்காய்** *puliyaṅ-kāy* , பெ. (n.) புளியமரத்துக்காய்; unripe tamarind fruit.

**ம.** புளிங்ங.

*[புளி + அம் + காய்]*

**புளியங்குடிஉய்யவந்தார்** *puliyaṅguḍi-uyya vandār,* பெ. (n.) ஒரு புலவர்; a poet.

*[ புளியங்குடி + உய்ய + வந்தார் ]*

இவர் நாற்கவிராச நம்பியின் தந்தை

**புளியங்குடிநாற்கவிராயநம்பி** *puliyaṅguḍi-nāṟkavirāya - nambi,* பெ. (n.) ஒரு புலவர்; a poet

*[ புளியங்குடி + நாற்கவிராய + நம்பி ]*

இவர் நம்பியகப் பொருள் என்ற பொருளிலக்கண நூலை இயற்றியவர்.

**புளியங்குடிப்புலவர்** *puliyaṅguḍi-p-pulavar,* பெ. (n.) பிற்காலப் புலவர்; a poet of later period.

*[ புளியங்குடி + புலவர் ]*

இவர் கோமதியம்மை பிள்ளைத்தமிழ் என்ற நூலை இயற்றியுள்ளார்.

**புளியங்குளம்அருணாசலக்கவிராயர்** *puḷiyaṅkuḷam - aruṇācala-k-kavirāyar,* பெ. (n.) பிற்காலப் புலவர்; a poet of later period.

*[ புளியங்குளம் + அருணாசலம் + கவிராயர் ]*

இவர் 'சக்ரவாளத்தகடு' என்ற சீட்டுக் கவி பாட்டைப் பாடியுள்ளார்.

**புளியங்கூழ்** *puḷiyaṅ-gūḻ,* பெ. (n.) *புளிங்கூழ் (மலைபடு. 436, உரை.)* பார்க்க; see *puḷiṅgūḻ.*

*[ புளி → புளியம் + கூழ் ]*

**புளியங்கொட்டை** *puḷiyaṅ-koṭṭai,* பெ. (n.) **1.** புளியவிதை; tamarind seed. **2.** ஒருவகைச் சீலை (இ.வ.); a kind of saree.

**மறுவ.** புளிச்சைக்கொட்டை.

**ம.** புளிங்கரு; **து.** புளிகொட்டை, புள்கொட்டை, புண்கடை,புலிங்கொடை, புள்கொடை. புளிங்கொட்டை.

*[ புளி → புளியம் + கொட்டை. கொள்→ கொட்டு = வட்டமான நெற்கூடு. கொட்டு → கொட்டில் = மாட்டுத்தொழு. கொட்டு → கொட்டை = திரண்ட விதை.]*

**புளியங்கொடி** *puḷiyaṅkoḍi,* பெ. (n.) கொடிபுன்கு (வின்.); hog creeper.

*[ புளி → புளியம் + கொடி. கொடு → கொடி = வளைந்து படரும் நிலைத் திணைவகை.]*

**புளியங்கொம்பு** *puḷiyaṅ - kombu,* பெ. (n.) மிக உறுதிப்பாட்டிற்குரியதாகக் கருதப்படும் புளியமரத்துக் கிளை; a tamarind branch,proverbial for toughness. பிடித்தாலும் புளியங்கொம்பைப் பார்த்துப் பிடித்தான்(உ.வ.).

**ம.** புளிங்கொம்பு

*[ புளி + கொம்பு → கொள் → கொண்பு (கொண்பு) → கொம்பு = வளைந்த விலங்கின் தலையுறுப்பு, கொம்பு போன்ற மரக்கிளை. ]*

**புளியச்சாதம்** *puḷiya-c-cādam,* பெ. (n.) *புளிச்சோறு* பார்க்க; see *puḷi-c-cōṟu.*

*[ புளியம் + சாதம்]*

**புளியந்தோப்பு** *puḷiya-n-tōppu,* பெ. (n.) தஞ்சை மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Tañjāvūr dt.

*[ புளி + தோப்பு ]*

**புளியம்பழம்** *puḷiyam-paḻam,* பெ.(n.) புளியமரத்துப் பழம்; a tamarind fruit.

**ம.**புளிங்ங; **க.**ஹுளிகண்ணு

*[ புளி + அம் + பழம் ]*

**புளியம்பாசி** *puḷiyam-pāši,* பெ. (n.) **1.** நீர்ப்பூடுவகை(வின்.); a water plant, chara zeylan. **2.** பாசிவகை; a kind of moss

*[ புளி → புளியம் + பாசி ]*

**புளியம்பாதி** *puḷiyam-pādi,* பெ. (n.) *புளியம்பாசி 1. (யாழ்.அக.)*பார்க்க; see *puḷiyam -pāši 1.*

*[ புளியம்பாசி → புளியம்பாதி ]*

**புளியம்பிஞ்சு** *puḷiyam - piñju* பெ. (n.) புளியமரத்து இளங்காய்; tender fruit of tamarind.

*[ புளி → புளியம் + பிஞ்சு ]*

**புளியம்பிராணி** *puḷiyam-pirāṇi,* பெ. (n.) புளியஞ் செதிள் (சங்.அக.); bark of tamarind.

*[ புளி → புளியம் + பிராணி. புறணி→ பிரணி → பிராணி ]*

**புளியம்பூ** *puḷiyam - pū* பெ.(n.) புளிய மரத்தின் பூ; flower of tamarind tree.

*[ புளி → புளியம் + பூ ]*

**புளியம்பொருக்கு** *puḷiyam - porokku* பெ. (n.) புளியமரத்தில் இருக்கும் உலர்ந்தபட்டை;bark of tamarind tree.

*[ புளி → புளியம் + பொருக்கு ]*

**புளியம்விதை** *puḷiyam - vidai* பெ. (n.) புளியங்கொட்டை;seeds of tamarind fruit.

*[புளி → புளியம்+விதை ]*

பாலியல் நோய் (சுக்கிலமேகம்), பித்தம் மிகுதியால் உண்டாகும் நோய் (பித்தாதிசாரம்), பெரும்புண் (அதிவிரணம்), நீர்க்கடுப்பு, முதலிய நோய்களை நீக்கும் மருத்துவப் பண்பு புளியம் விதைக்குண்டென்று சா.அக. குறிப்பிடுகின்றது

**புளியமடல்பிரண்டை** *puḷiya-maḍal-piraṇḍai,* பெ. (n.) *புளிநறளை (நாஞ்.)* பார்க்க; see *puḷinaṟaḷai*

*[ புளியமடல் + பிரண்டை. புரள் → புரண்டை → பிரண்டை ]*

**புளியமரம்** *puḷiya-maram,* பெ. (n.) மஞ்சள் நிறப் பூக்களையும் பருகங்களுக்கும் மருத்துக்கும் பயன்படும் கருஞ்சிவப்பு வண்ண புளிப்புச் சுவை மிகுந்த பழச்சதைப் பகுதியை உடைய நீண்ட பழுப்பு வண்ண விதை நெற்றுக்களையும் தரும் வெப்ப மண்டலத்தில் வளரும் பெரிய மரவகை; tamarind. புளியமரத்தில் ஏறினவன் பல் கூசினால் இறங்குவான் (பழ.).

க.குளிமர; து.புளித்தமர

*[ புளி → புளிய + மரம் ]*

**புளியரணைக்கிழங்கு** *puḷiyaraṇai-k-kiḻaṅgu,* பெ.(n.) *புளிநறளை* பார்க்க; see *puḷinaṟaḷai*

*[ புளியரணை + கிழங்கு ]*

**புளியரனை** *puḷiyaraṉai,* பெ. (n.) ஆனைத்தடிச்சல் (மூ.அ.); smooth leaved fish bone climber.

**புளியளை** *puḷi-y-aḷai,* பெ. (n.) புளித்தமோர்; sour buttermilk (கருநா.).

க.புளியளெ, புள்ளளெ,

*[ புளி + அளை ]*

**புளியறணை** *puḷiyaṟaṇai,* பெ (n.) *புளியரனை (வின்.)* பார்க்க; see *puḷiyaṟaṇai.*

*[ புளியரனை → புளியறணை ]*

**புளியன்னம்** *puḷi-y-aṉṉam,* பெ. (n.) *புளிச் சோறு* பார்க்க; see *puḷi-c-cōṟu.*

க. குளியன்ன

*[ புளி + அன்னம் ]*

Skt. anna > த. அன்னம்

**புளியாஞ்சிறுகீரை** *puḷiyāñ-ciṟu-kīrai,* பெ. (n.) *புளியாரை (நாஞ்.)* பார்க்க; see *puḷiyārai.*

*[ புளி → புளியாம் + சிறு + கீரை ]*

**புளியாத்தி** *puḷi-y-ātti,* பெ. (n.) மலையாத்தி; Malabar mountain-ebony. (L.).

*[ புளி + ஆத்தி]*

**புளியாம்பூ** *puḷiyāmpū,* பெ. (n.) *புளியம்பூ* பார்க்க; see *puḷiyam pū.*

*[ புளியம்பூ → புளியாம்பூ ]*

**புளியாம்பூதுவரைமாடு** *puḷiyāmbūduvarai-māḍu,* பெ. (n.) சிவப்பும், வெள்ளைப் புள்ளிகளும் வெண்மயிரும் கலந்ததும், மிகு விலையுடையதுமான மாடு; cow with red and white dots on its body.

*[ புளியாம்பூ + துவரை + மாடு. மா → மாடு]*

**புளியாமணக்கு** *puḷi-y-āmaṇakku,* பெ. (n.) ஏரிக்கரைக் காட்டாமணக்கு; glaucous-leaved physic-nut. (L.)

*[ புளி + ஆமணக்கு ]*



**புளியாரை** *puḷi-y-ārai,* பெ. (n.) பூடுவகை; (பதார்த்த. 595.); yellow wood-sorrel,

ம. புளியாரன்

*[ புளி + ஆரை ]*

**புளியிட்டகறி** *puḷiyiṭṭa-kaṟi,* பெ. (n.) *புளிங்கறி* பார்க்க; see *puḷiṅkaṟi.*

*[ புளி + இட்ட + கறி]*

**புளியிட்டங்கறி** *puḷi-y-iṭṭadaṅ-kaṟi,* பெ. (n.) *புளிங்கறி* பார்க்க; see *puḷiṅkaṟi.* (S.I.I.ii. 127)

*[ புளி + இட்ட + கறி]*

**புளியில்லாக்கறி** *puḷi-y-illā-k-kaṟi,* பெ. (n.) புளியின்றியாக்கிய குழம்புவகை; sauce prepared without tamarind.

*[ புளி + இல்லா + கறி]*

**புளியிலை** *puḷi-y-ilai,* பெ. (n.) புளியமரத்து இலை; tamarind leaf.

ம. புளியில.

*[ புளி + இலை]*

**புளியிலைக்கம்பி** *puḷiyilai-k-kambi,* பெ. (n.) ஆடையிற் புளியிலை போன்ற கரை வகை; striped border in cloth resembling tamarind leaf.

*[ புளியிலை + கம்பி]*

**புளியீண்டு** *puḷi-y-īṇḍu,* பெ. (n.) கொடிவகை; rosy-flushed white brasiletto, climber.

*[ புளி + ஈண்டு]*

**புளியுப்பு** *puḷiyuppu,* பெ. (n.) உப்புவகை; acid salt.

*[ புளி + உப்பு]*

**புளியெண்ணெய்** *puḷi-y-eṇṇey,* பெ. (n.) மருந்தெண்ணெய் வகை (வின்.); an acidified medicinal oil.

*[ புளி + எண்ணெய். எள் + நெய் – எண்ணெய்]*

**புளியேப்பம்** *puḷiyēppam,* பெ. (n.) *புளிச்சேப்பம்* பார்க்க; see *puḷiccēppam.*

**க.** குளி தேகு; **து.** புளிஆரிகை

*[ புளி + ஏப்பம். ஏ → ஏப்பம்]*

**புளியோகரம்** *puḷi-yō-garam,* பெ. (n.) *புளிச்சோறு (வின்.)* பார்க்க; see *puli-cōṟu.*

*[ புளி + ஓகரம்]*

Skt. ōdana > த.ஓதனம் → ஓகரம்.

**புளியோதரை** *puḷiyōdarai,* பெ. (n.) *புளிச்சோறு* பார்க்க; see *puḷi-c-cōṟu.*

*[ புளியோதனம் → புளியோதரை]*

**புளியோதனம்** *puḷi-y-ōdaṉam,* பெ. (n.) *புளிச்சோறு (பதார்த்த. 1405)* பார்க்க; see *puḷi-c-cōṟu.*

*[ புளி + ஓதனம்]*

Skt. ōdana > த.ஓதனம்

**புளியோரை** *puḷi-yōrai,* பெ. (n.) *புளிச்சோறு (இ.வ.)* பார்க்க; see *puḷi-c-cōṟu.*

**க.** புளியன்ன, குளியன்ன.

*[ புளி + ஓரை]*

**புளிரசம்** *puḷirasam,* பெ. (n.) *புளிச்சாறு* பார்க்க; see *puḷi-c-cāṟu.*

**ம.** புளிரசம்.

*[ புளி + ரசம்]*

Skt. rasa > த.ரசம்

**புளிராயிதம்** *puḷi-rāyidam,* பெ. (n.) புளிப்பச்சடி (இ.வ.); relish seasoned with tamarind.

**புளிவசளை** *puḷi-vasaḷai,* பெ. (n.) வல்லிகூரணை (சங்.அக.); a kind of greens.

**புளிவஞ்சி** *puḷi-vañji,* பெ. (n.) புளிப்புள்ள பழங்கள் காய்க்குங் கொடிவகை (நாநார்த்த. 556); a creeper with sour fruits.

*[ புளி + வஞ்சி]*

**புளிவாரிட்டமீன்** *puḷi-vāriṭṭa-mīṉ,* பெ. (n.) *புளிமீன்(வின்.)*பார்க்க; see *puḷimīṉ.*

*[ புளிவார்த்திட்டமீன் → புளிவாரிட்டமீன்]*

**புளினம்** *puḷiṉam,* பெ. (n.) **1.** ஆற்றிடைத்திட்டு (வின்.); land of alluvial formation in the bed of a river. **2.** மணற்குன்று (பிங்.); heap, hillock or mount of sand. '*மணிபடுபுளினம்*' (கம்பரா.நாட்டு. 47.).

*[ புளி → புளினம்]*

த.புளினம் > Skt. puḷina

**புளினன்** *puḷiṉaṉ,* பெ. (n.) *புளிஞன் (பிங்.)* பார்க்க; see *puḷiñaṉ.*

*[ புளிஞன் → புளினன்]*

**புளுக்கை** *pulukkai,* பெ. (n.) முறையாக மணம் செய்யாத வெளிநாட்டார்க்கும் பரதவர்க்கும் பிறந்தவர் (கொ.வ.); person born to an outsider and a Paradava couples.

**புளுகன்** *pulugaṉ,* பெ. (n.) பொய்யன்; liar.

**கோத.** புள்கன் (தன்னைத்தான் புகழ்பவன்)

*[ புளு → புளுகு → புளுகன் ]*

'புளுகு' பார்க்க

**புளுகு**[1] *pulugu,* பெ. (n.)**1** முழு(சுத்த)ப் பொய்; obvious lie, bare-faced falsehood. **2.** கற்பனை; concoction.

*[ புல்லுதல் = துளைத்தல். புல் → பொல். பொல்லுதல் = துளைத்தல், உளியாற் கொத்துதல். பொல் = உட்டுளையுள்ள பதர். புல் → புர் → புரை = உட்டுளை, உட்டுளைப் பொருள். புல் → புள் → புழு = துளைத்தரிக்கும் சிற்றுயிரி. → புள் → புளு → புளுகு = பொய் (வே.க. 3, 101–107) ]*

**புளுகு**[2]**–தல்** *pulugu-,* 5 செ.கு.வி. (v.i.) **1.** முழுப்பொய் சொல்லுதல்; to tell bare-faced lies,obvious lie, bare. faced falsehood. **2.** கற்பித்தல்; to concoct.

**கோத.** புள்க் (பெருமிதம்கொள்ளல்)

*[ புல் → (புல்லம்) → பொல்லம் = ஒட்டை, துளை. புல் → புரை = துளை, சிறுதுளை. புள் → புழை → பூழை = துளை, கண்வாய். புல் → பொள் → பொள்ளல் = துளை. பொள்ளை = துளை (மு.தா.227) புள் → புளு → புளுகு = உள்ளீடற்றது, பொய். ]*

**புளுகுணி** *puluguṇi,* பெ. (n.) பொய்யன்; liar.

*[ புளு → புளுகு → புளுகுணி = வழக்கமாய்ப் பொய் சொல்பவன். (வே.க.3,107) ]*

**புளை**[1]**–தல்** *pulai-,* 4 செ.கு.வி. (v.i.) அழகுபடுத்தப்படுதல்; to be equipped accoutred, adorned. '*புளைந்த பாய்பரி*' (கம்பரா. கரன்.76.).

*[ புனை → புளை ]*

**புளை**[2]**–த்தல்** *pulai-,* 4 செ.கு.வி. (v.i.) *புளை–தல்* பார்க்க; see *pulai-,* 'புளைத்தரத மாபுரவி' (பாதர. மணிமான்.41.).

*[ புனை → புளை– ]*

**புற்கசன்** *puṟkaśaṉ,* பெ. (n.) இழிந்தவன் (சண்டாளன்); low, vile, base man.

*[ புல்லுதல் = துளைத்தல் புல் = உட்டுளையுள்ள பொருள், சிறுமை, இழிவு. புல் → புல்லன் = இழிந்தோன். புல் → புல்கசன் → புற்கசன் ]*

**புற்கட்டி** *puṟ-kaṭṭi,* பெ. (n.) புல்லுடன் கூடிய மண்கட்டி (வின்.); piece of turf or sod.

**மறுவ:** புற்பத்தை, புறளி கரடு, தொம்பை

*[ புல் + கட்டி ]*

**புற்கட்டை** *puṟ-kaṭṭai,* பெ. (n.)**1.** அறுகம்புல்லின் அடிக்கட்டை (வின்.); stem of harialli grass. **2.** அறுத்த பயிர்த்தாள் (இ.வ.); stubble.

**மறுவ.** அரிகட்டு, அரிகெடை, அரிதாள்.

*[ புல் + கட்டை ]*

**புற்கம்** *purkam,* பெ. (n.) **1.** குறைவு; fault, **2.** புல்லறிவு; wrong knowledge; prejudice bias. **3.** மாயம் (வின்.); delusion illusion; worldiness.

*[ புல் → புன் → புன்மை. புல் → புன் → புன்கம் → புற்கம்]*

**புற்கரடு** *pur-karadu,* பெ. (n.) *புற்பற்றை* (இ.வ.) பார்க்க; see *purparrai.*

*[ புல் + கரடு]*

**புற்கலம்** *purkalam,* பெ. (n.) **1.** உடம்பு; body. "புற்கலம் புறவுருவாகும்' (மணிமே.27,197.). **2.** கல்முதலியஉயிரற்றபொருள்கள் (பிரபோத.33, 22.); matter, as the non-living part of the creation. **3.** உயிரற்ற பொருள் (அசீவம்.) (மேருமந்.41.); (jaina.) a category of fundamental entities.

*[ புல் = உட்டுளையுள்ள பொருள், உடம்பு. புல் + கலம்.]*

**புற்கலன்** *purkalan,* பெ. (n.) ஆதன் (ஆன்மா) (பிங்.); soul, life. "*மனனைப் புற்கலனிடத்திலொடுக்கி*' (காசிக. யோக.13.).

*[ புல் + கலன்]*

**புற்கவ்வு-தல்** *pur-kavvu-,* 15 செ.கு.வி. (v.i.) தோல்வியை யொத்துக்கொள்ளுதல்; to accept defeat. "*போக்யதைக்குத்தோற்றுப் புற்கவ்விச் சொல்லுகிறார்*" (ஈடு,5,8,1.).

*[ புல் + கவ்வு –, புற்கவ்வு = புல்லை உண்ணுதல். தோற்றபின் சிறிது புல்லைத் தின்னுதல் என்னும் பழக்கத்தின் அடிப்படையில் புல்லைக் கவ்வுதல் தோல்வியை ஒத்துக்கொள்ளுதலைக் குறித்தது.]*

**புற்கற்றை** *pur-karrai,* பெ. (n.) புற்றிரள்; bundle of grass. "*எழுந்த புற்கற்றை தீற்றி*" (சீவக.3105.).

*[ புல் + கற்றை]*

**புற்கு** *purku,* பெ. (n.) பழுப்புநிறம் (திவா.); tawny colour, dimness.

*[ புல் → புன் → புற்கு]*

**புற்குருவி** *pur-kuruvi,* பெ. (n.) காடை வகை (வின்.); a kind of quail

*[ புல் + குருவி]*



**புற்கெனல்** *purkenal,* பெ. (n.) **1.**ஒளிமழுங்கற் குறிப்பு; expr. signifying being dim. "*வாளற்றுப் புற்கென்றை கண்ணும்*" (குறள்,1261.). **2.** பயனில்லாமைக் குறிப்பு; expr; signifying being useless. '*புன்னிலத்திட்ட வித்திற் புற்கென விளைந்து*' (சீவக.2823.). **3.** புன்மைக் குறிப்பு; expr; signifying paling in comparison '*புகழ்வெல்லாம் பெரும்பாலும் பட்டுரையாய்ப் புற்கென்றே*' காட்டுமால்' (திவ்.திருவாய்.3,1,2.).

*[ புல் → புன் → புன்கு + எனல்]*

**புற்கை**[1] *purkai,* பெ. (n.) **1.** ஒருவகைக் கஞ்சி; a kind of porridge of rice or other grains.

'தெண்ணீர் அடுபுற்கையாயினும்' (குறள்,1065.)· 2. சோறு (பிங்.); boiled rice.

*[ புல் → புற்கை ]*

**புற்கை²** *pur-kai,* பெ. (n.) பற்று (புதுவை.); poultice.

*[ புல் → புற்கை ]*

**புற்கொடி** *pur-kodi,* பெ. (n.) 1. சுரை (மலை.); calabash, climber. 2. பேய்ச்சுரை (பிங்.); wild melon.

*[ புல் + கொடி ]*

**புற்கோரை** *pur-kōrai,* பெ. (n.) கோரைவகை; a coarse grass.

*[ புல் + கோரை ]*

**புற்சாமை** *pur-cāmai,* பெ. (n.) சாமைவகை; a specious of little millet.

*[ புல் + சாமை ]*

**புற்செதுக்கி** *pur-cedukki,* பெ. (n.) புல்லைச் செதுக்க வுதவுங்கருவி (இ.வ.); grass hoe.

மறுவ. புல்வெட்டி

*[ புல் → செதுக்கி. செதுக்கு → செதுக்கி ]*



**புற்பண்ணை** *pur-pannai,* பெ. (n.) கோழிக்கீரை (புதுவை.); a kind of greens.

*[ புல் + பண்ணை ]*

**புற்பதி** *pur-padi,* பெ. (n.) 1. பனை (பிங்.); palmyra. 2. வாழைக் கிழங்கு (தைலவ. தைல.); plantain-root.

*[ புல் + பதி ]*

**புற்பற்றை** *pur-parrai,* பெ. (n.) புல்லுடன் கூடிய மண்ணாங்கட்டி; turf, sod.

மறுவ. புற்காடு

*[ புல் + பற்றை ]*

**புற்பறி** *pur-pari,* பெ. (n.) ஒருவகைக் கூடை (வின்.); a kind of wicker-basket.

*[ புல் + பறி ]*

**புற்பாய்** *pur-pāy,* பெ. (n.) பாய்வகை (திவ.); grass-mat.

க. குல்லுசாபெ

*[ புல் + பாய் ]*

**புற்புல்லெனல்** *purpul-l-enal,* பெ. (n.) விடிதற்குறிப்பு (வின்.); expr. indicating break of day.

*[ புற்புல் + எனல் ]*

**புற்பொழி** *pur-poli,* பெ. (n.) 1. புற்பற்றை பார்க்க; see *purparrai.* 2. புல்லடர்ந்த வரப்பு; ridge.

*[ புல் + பொழி ]*

**புற்போதி** *pur̠-pōdi,* பெ. (n.) பூவரசு (மலை.); portia tree.

**புற்றஞ்சோறு** *pur̠r̠añ-cōr̠u,* பெ. (n.) புற்றாஞ்சோறு (திவா.)பார்க்க; see pur̠r̠āñcōr̠u.

*[ புற்றம் + சோறு. புல் → புற்று → புற்றம். சொல் → சொன்றி → சோறு ]*

**புற்றம்** *pur̠r̠am,* பெ. (n.) புற்று; ant-hill. *'நெடுஞ் செம்புற்ற மீயல் பகர'* (ஐங்குறு. 497.).

*[ புல் → புற்று = உட்டுளையுள்ள கறையான் மண்கூடு. புற்று → புற்றம் (வே.க. 3, 107) ]*

**புற்றளை** *pur̠r̠al̠ai,* பெ. (n.) புற்றின் துளை; hole in an ant-hill *'நாகம் கிடந்த .... புற்றளை'* (மணிமே. 20, 99.).

*[ புல் → புற்று + அளை. புற்றளை = புற்று வளை (வே.க. 3, 107)]*

**புற்றாஞ்சோறு** *pur̠r̠āñ-cōr̠u,* பெ. (n.) 1. புற்றிலுள்ள கறையான் திரள் (பிங்.); termites in an ant-hill. 2. பூஞ்சணம்(இ.வ.); mould.

*[ புல் → புற்று → புற்றாம் + சோறு. சொல் = நெல். சொல் → சொன்றி → சோறு = நெற்சோறு. புற்றாஞ்சோறு = நெற் சோறு போல் காணப்படும் கறையான் திரள். ]*

**புற்றாம்பழஞ்சோறு** *pur̠r̠ām - pal̠añ-cōr̠u,* பெ. (n.) *புற்றாஞ்சோறு* பார்க்க; see *pur̠r̠āñ--cōr̠u.* *'புற்றின்கட் கிடக்கும் புற்றாம் பழஞ் சோற்றை'* (பெரும்பாண். 276, உரை.).

*[ புற்றாம் + பழம் + சோறு ]*

**புற்றாம்பழம்** *pur̠r̠ām-pal̠am,* பெ. (n.) *புற்றாஞ்சோறு* (யாழ்.அக.)பார்க்க; see *pur̠r̠āñ-cōr̠u*

*[ புற்று → புற்றாம் + பழம் ]*

**புற்றாளி** *pur̠r̠āl̠i,* பெ. (n.) 1. பனை; palmyra. 2. பனைநாள்; the 17th naksatra.

*[ புல் + தாளி ]*

**புற்றானியபானம்** *pur̠r̠āṉiya-pāṉam,* பெ. (n.) சாராய வகை (கிறித்.); cervisia.

*[ புல் + தானியம் + பானம்]*

*Skt. dhānya›* த. தானியம்.

*Skt. pāna›* பானம்.

**புற்றீசல்** *pur̠r̠īśal,* பெ. (n.) (பெரும்பாலும் உவமையாக) புற்றிலிருந்து பெருமளவில் புறப்படும் ஈசல்; (often used as a simile) swarm of moths. *'திரைப்படங்கள் புற்றீசல் போல் வெளி வரத் தொடங்கி விட்டன'* (உ.வ.).

*[ புற்று + ஈசல் ]*

**புற்று¹** *pur̠r̠u,* பெ. (n.) 1. கறையான் கட்டிய மண் கூடு; ant-hill, mound thrown up by termites. *'புற்றிடை வெகுளி நாகம்'* (சீவக. 1285.). கறையான் புற்றிற் பாம்பு குடிகொண்டது போல (உ.வ.). 2. எறும்பு முதலியவற்றின் வளை; hole, as of ants. 3. புரை வைத்த புண்; anything scurvy, scrofulous or cancerous; rapilloma. *'புழுச்செறி .... புற்றுறு நோய்'* (கடம்ப. 4. இலீலா. 116.).

ம. புற்று; க. புத்து, புத்த, குத்த, குத்து, உத்த; தெ. கொலா; நா. புட்ட; து. புஞ்ச; குட. புத்தீ; கோண். புட்டி; கொண். புழ்கி; கூய். புசி; குவி. பூசி; குரு. புட்டா; மால. புதெ;

த. புற்று > Skt. puṭa, puttikā.

*[ புல் → புற்று = உட்டுளையுள்ள கறையான் மண்கூடு, உட்டுளையுள்ள எறும்புவளை, துளையுள்ள புண் ஒ.நோ. சுல் → சுற்று. (வே.க. 3, 107) ]*

**புற்று²** *puṟṟu*, பெ. (n.) **1.** தலை (அக.நி.); head. **2.** எழுத்து; letter.

*[ புல் → புற்று ]*

**புற்றுக்காளான்** *puṟṟu-k-kāḷāṉ*, பெ. (n.) காளான் வகை (வின்.); a kind of mushroom.

*[ புற்று + காளான் ]*



**புற்றுத்தேன்** *puṟṟu-t-tēṉ*, பெ. (n.) மதிலிடுக்கு முதலியவற்றில் ஈக்களால் வைக்கப்படுந்தேன் (பதார்த்த. 199.); honey secreted by bees in crevices of walls, etc.

*[ புற்று + தேன் ]*

**புற்றுநோய்** *puṟṟu-nōy*, பெ. (n.) இயல்புக்கு மாறான உயிரணுப் பெருக்கத்தால் உள்ளுறுப்புகள் அல்லது அரத்தம் கெட்டு (உடல் இளைத்து) இறப்பு நேரக் கூடிய நோய்; cancer. *'குமுகாயத்தைப் பிடித்திருக்கும் புற்று நோய் ஊழல்'* (உ.வ.).

*[ புற்று + நோய் ]*

**புற்றுமண்** *puṟṟu-maṇ*, பெ. (n.) கறையானால் வைக்கப்பட்டதும் குழைவுள்ளதும் மருந்து முதலியற்றில் பயன்படுத்தப் படுவதுமான மண்; soft earth thrown up by white ants, used as medicine.

*[ புற்று + மண் ]*

**புற்றுவெடிப்பு** *puṟṟu-veḍippu*, பெ. (n.) பித்தவெடிப்பு; fissure-foot.

*[ புற்று + வெடிப்பு. வெடி → வெடிப்பு ]*

**புற்றுவை—த்தல்** *puṟṟu-vai-*, 4 செ.கு.வி. (v.t.) **1.** கறையானால் புற்றுண்டாதல்; to form small mounds of earth, as by white ants. **2.** புண் புரை வைத்தல்; to become cancerous.

*[ புல் → புற்று + வை—, ]*

**புற** *puṟa*, பெ. (n.) புறா பார்க்க; see *puṟā*. *'புன்புறப்பேடை'* (ஐங்குறு. 425.).

*[ புறா → புற ]*

**புறக்கட்டு** *puṟa-k-kaṭṭu*, பெ. (n.) **1.** வீட்டின் வெளிக்கட்டடம்; out-house. **2.** கையை முதுகிலே வைத்துக் கட்டுகை (வின்.); fastening of the hands behind the back.

*[ புறம் + கட்டு ]*

**புறக்கடமை** *pura-k-kaḍamai,* பெ. (n.) பழைய வரிவகை; an ancient tax. புறக்கடமை மாத்தால் தரகுக்கும் ஒருபூ குடிப்பற்றுக்கும் ஒரு பணம் (S.I.I.viii, 139).

*[ புறம் + கடமை ]*

**புறக்கடல்** *pura-k-kaḍal,* பெ. (n.) பெரும்புறக்கடல்; outermost circumambient sea.

*[ புறம் + கடல் ]*

**புறக்கடன்** *pura-k-kaḍaṉ,* பெ. (n.) பின்னடமானம் (இ.வ.); subsequent mortgage of a property.

*[ புறம் + கடன் ]*

**புறக்கடி—த்தல்** *pura-k-kaḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) வெளியேற்றுதல்; to expel. பெண் டிழந்தான் கூட்டத்தில் ஒன்றாகப் புறக் கடித்தோம் (S.I.I.vii, 49).

*[ புறகு → புறக்கு → புறக்கடி—, ]*

**புறக்கடை** *pura-k-kaḍai,* பெ. (n.) வீட்டின் பின்புறம்; backyard, as of a house.

மறுவ. புழக்கடை, கொல்லைப்புறம்

*[ புறம் + கடை. கடு→ கடை=இடம் ]*

**புறக்கண்** *pura-k-kaṇ,* பெ. (n.) 1. கண்ணிமையின் வெளிப்புறம்; exterior of the eyelid. 2. புற(தூல)க்கண்; physical eye, opp. to aga-k-kaṇ.

*[ புறம் + கண் ]*

புறக்கண் காண முடியாதவற்றையும் நெடுந் தொலைவிலுள்ள வற்றையும் கண்டறியும் ஓர் அறிவுக்கண் போன்ற உறுப்பு குமரிநாட்டு மக்கள் நெற்றியிலிருந்ததென்றும் அதனாலேயே அவர்தம் இறைவனுக்கும் (சிவனுக்கும்) ஒரு நெற்றிக் கண்ணைப் படைத்துக் கூறினரென்றும் ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர் (ப.த.நா.ப. 83).

**புறக்கணி—த்தல்** *pura-k-kaṇi-,* 4 செ. குன்றாவி. (v.t.) 1. மதியாதிருத்தல் (பராமுகமாதல்); to disregard, slight, neglect. *'உருகா மனத்தார்களைப் புறக்கணித் திடும்'* (தேவா. 612, 2.). 2. ஏளனமாகக் கருதுதல் (அலட்சியம் செய்தல்); to disdain, treat with contempt. *'புறக் கணித்திடப் பட்டீர்க்கும்'* (சீவக. 2376.).

*[ புறம் + கணி—, ]*

**புறக்கணிப்பு** *pura-k-kaṇippu,* பெ. (n.) கலந்து கொள்ள மறுத்து ஒதுங்குவது; boycott. *'தேர்தல் புறக்கணிப்பு'* (உ.வ.).

*[ புறம் + கணிப்பு. கணி→ கணிப்பு.]*

**புறக்கந்து**[1] *pura-k-kandu,* பெ. (n.) வண்டியச்சின் முனை (யாழ்ப்.); extremity of an axle-tree.

*[ புறம் + கந்து ]*

**புறக்கந்து**[2] *pura-k-kandu,* பெ. (n.) களத்துத் தூற்றி விழுந்த பதர்க்குப்பை; heap of chaff formed in winnowing grain.

*[ புறம் + கந்து ]*

**புறக்கரணம்** *pura-k-karaṇam,* பெ. (n.) 1. கைகால் முதலிய உறுப்பு; limb of the body. 2. தொழிற்கு உதவியாகவுள்ள வெளிக்கருவி (பி.வி. 12); objective instruments.

*[ புறம் + கரணம் ]*

**புறக்கலனை** *pura-k-kalaṉai,* பெ. (n.) பழைய வரிவகை; an ancient tax (S.I.I.vii, 79.).

*[ புறம் + கலனை ]*

**புறக்கழனியார்** *pura-k-kalaṉiyār,* பெ. (n.) ஊருக்கு வெளியே வாழுங் குடிகள்; people who live outside the village (I.M.P.Cg.689).

*[ புறம் + கழனியார். கழனி → கழனியார் ]*

**புறக்கழுத்து** *pura-k-kaluttu,* பெ. (n.) பிடர்; nape of the neck. *'மயிலினது புறக்கழுத்தை யொத்த திருமேனியை யுடைய மாயவன்'* (சிலப். 17, பக். 458.).

*[ புறம் + கழுத்து ]*

**புறக்களம்** *pura-k-kaḷam,* பெ. (n.) களத்தில் விளைச்சலை அளந்த பின் சிதறிக்கிடப்பதும் தொழிலாளிகட்கு உரிமையானதுமான தவசப் பகுதி; scattered grain left after measuring the produce on the threshing-floor, treated as allowance to agricultural labourers.(C.G.)

*[ புறம் + களம். குல் → குள் → கள். கள்ளுதல் = கூடுதல், பொருந்துதல். கள் → களம் = கூட்டம், கூடுமிடம், நெற்களம் ]*

**புறக்காதுபடல்** *pura-kādu-paḍal,* பெ. (n.) குத்திய காதில் சோணைகோணி மடிந் திருக்கை (யாழ்ப்.); turning forward of the lobe of the ear, caused by bad treatment after perforation.

*[ புறம் + காது + படல் ]*

**புறக்காப்பு** *pura-k-kāppu,* பெ. (n.) புறத்தே யமைக்கப்படுங் காவல்; outer guard of sentry. *'பாடி காவலர் .... புறக்காப்பமைத்து'* (பெருங். மகத. 17, 215.).

*[ புறம் + காப்பு. கா → காப்பு ]*

**புறக்காவல்** *pura-k-kāval,* பெ. (n.) மெய்க் காவல் (வின்.); body-guard.

*[ புறம் + காவல். கா → காவல் ]*

**புறக்காழ்** *pura-k-kāḻ,* பெ. (n.) 1. பனை முதலியவற்றில் உள்ள வெளிவயிரம் (தொல். பொ. 640.); hard outer part of the stem of a tree, as of palmyra. 2. பெண்மரம் (திவா.); female tree, as palmyra.

*[ புறம் + காழ் ]*

**புறக்கிடு-தல்** *purakkiḍu-,* 20 செ.கு.வி. (v.i.) புறங்காட்டியோடுதல்; to flee, take to flight, showing one's back to enemy. *'வெருவொடு புறக்கிடுவது'* (பாரத. அணி.28.).

*[ பின் → பிற்கு. பிறம் → பிறவு → பிறகு = முதுகு. பிறகு → பிறக்கு = முதுகு. பிறகு → புறகு. பிறக்கு → புறக்கு. புறக்கு + இடு. புறக்கிடுதல் = புறங்காட்டுதல் (மு.தா. 294) ]*

**புறக்கு** *purakku,* பெ. (n.) வெளிப்புறம்; outer side of face of anything. *'வெண்புறக் குடைய திரிமருப் பிரலை'* (அகநா. 139.).

*[ புறம் → புறவு → புறகு = வெளிப்புறம், புறம்பானவன். புறகு → புறக்கு (மு.தா. 295) ]*

**புறக்குடி** *pura-k-kuḍi,* பெ. (n.) 1. நிலச்சொந்தக்காரர்க்குக் கட்டுப்படாத குடியானவன்; farmer or field-labourer, not being a regular tenant under a landlord (Tj.). 2. வெளியூரிற் சென்று வேளாண்மை செய்யும் குடியானவன்; ryot who farms in neighbouring villages , a class of farmers

in Salem district. (G. Sm. D. ii, 62.) 3. *புறஞ்சேரி* பார்க்க; see *purañcēri* '*புறக்குடி கடந்து*' (மணிமே, 28, 4.).

*[ புறம் + குடி. குல் → குள் → குட → குடி ]*

**புறக்குடிப்பாயகாரி** *purakkudi-p-pāya kāri,* பெ. (n.) சிற்றூரில் நிலவுரிமை பெறாத வந்தேறியான குடி; tenant without any occupancy right. (M.N.A.D.284.)

*[ புறக்குடி + பாயகாரி ]*

**புறக்குடை** *pura-k-kudai,* பெ. (n.) *புறக்கொடை* பார்க்க; see *pura-k-kodai.* '*புறக்குடை நீவி*' (பெருங். மகத. 14, 144.).

*[ புறக்கொடை → புறக்குடை ]*

**புறக்குழல்** *pura-k-kulal,* பெ. (n.) கால் நடைகளுக்கு வருங் கழலை; tumour, round tumour, as on the neck of a bull, goitre. (M.L.)

*[ புறம் + குழல் ]*

**புறக்கூத்து** *pura-k-kūttu,* பெ. (n.) கூத்துவகை (சிலப். 3, 16, உரை.); a kind of dance.

*[ புறம் + கூத்து ]*

குதித்தாடுவது கூத்து. அது வேத்தியல் பொதுவியல், அகக்கூத்து புறக்கூத்து என்றாற் போல் பல்வேறு வகையில் இவ்விருவகைப்படும். (ப.த.நா.ப. 128).

**புறக்கூரை** *pura-k-kūrai,* பெ. (n.) வீட்டின் பின்புறம் தாழும் கூரை (வின்.); part of the roof, sloping towards the back of a house.

*[ புறம் + கூரை. புறம் = முதுகு,பின் பக்கம் ]*



**புறக்கை** *pura-k-kai,* பெ. (n.) 1. வெளிப்புறம்; outside. 2. வலப்புறம்; right side in turning 3. *புறங்கை* பார்க்க; see *puarangai.*

*[ புறம் + கை – புறங்கை → புறக்கை. மூடின கையின் உட்புறமாயிருப்பது உள்ளங்கை அல்லது அகங்கை. அதன் வெளிப் புறமாயிருப்பது புறங்கை. பிறம் → புறம் = வெளி, வெளிப்பக்கம் அல்லது வெளிப்புறம் ]*

**புறக்கொடு¹–த்தல்** *pura-k-kodu-,* 4 செ.கு.வி. (v.i.) தோற்றோடுதல்; to turn back and flee after defeat. '*புறக்கொடுத்திறத்தி*' (புறநா. 8.).

*[ புறம் + கொடு – புறங்கொடு → புறக்கொடு. பிறம் → புறம் = முதுகு ]*

**புறக்கொடு²–த்தல்** *pur-k-kodu-,* 4 செ.கு.வி. (v.i.) போகவிடுதல்; to allow to depart, let lose. '*திருப்புறக் கொடுத்த செம் பொற்றாமரை*' (சீவக. 560).

*[ புறம் + கொடு – புறங்கொடு → புறக்கொடு. பிறம் → புறம் = முதுகு. போகவிடுதல் அதாவது திரும்பிப்போதல் முதுகைக் காட்டிச் செல்லும் தன்மையது இவ்வடிப்படையிலேயே புறக்கொடுத்தல் போகவிடுதலைக் குறித்தது ]*

**புறக்கொடை** *pura-k-kodai,* பெ. (n.) 1. போரில் முதுகு காட்டுகை; turning the back in battle-field. *'வினையை வென்று புறக்கொடை காணுமன்றே'* (சீவக. 1430.). 2. புறங்காப்பு பார்க்க; see puraṅ-kāppu. *'தம்பி புறக்கொடை காத்து நிற்ப'* (கம்பரா. மாயாசன. 23.). 3. கோயிலின் வெளிப்புறம்; outside of a temple. *'திருப்புறக் கொடையில் அருளாளதாசன் வன்னுந் திருநந்தவனம்'* (S.I.I.iii, 141.). 4. உடலின் பின்புறம்; back of the body. 5. பிரிந்த நிலை; separation, absence. "மற்றவர் புறக்கொடையே பழிதூற்றும் புல்லியார்" (கலித்.25).

*[ புறம் + கொடை. பிறம் → புறம் = முதுகு, வெளிப்பக்கம். கொடு → கொடை ]*

**புறக்கோட்டை** *pura-k-kōṭṭai,* பெ. (n.) முதன்மைக் கோட்டையைக் காக்கும் கட்டடம்; outer defence to a castle; barbican.

*[ புறம் + கோட்டை. புறம் = வெளி, வெளிப்பக்கம். குள் → கொள் → கோண் → கோடு. கோடுதல் = வளைதல். கோடு → கோட்டம் = வளைவு. கோட்டம் → கோட்டை ]*

**புறக்கோடி** *pura-k-kōḍi,* பெ. (n.) புறக்கடை பார்க்க; see *pura-k-kaḍai.*

*[ புறம் + கோடி. கோடு → கோடி ]*

**புறக்கோயில்** *pura-k-kōyil,* பெ. (n.) வெளியிலுள்ள கோயில்(S.I.I.v, 329.); the outer shrine .

*[ புறம் + கோயில். கோ + இல் → கோயில் ]*

**புறகடம்** *purakaḍam,* பெ. (n.) ஏய்ப்பு (வஞ்சனை) (இ.வ.);deceit.

**புறகிடு-தல்** *purakiḍu-,*20செ.கு.வி. (v.i.) *புறக்கிடு-தல்* பார்க்க; see *pura-k-kiḍu -,* *'ஆயினும் புறகிட'* (சிவதரு. சனன. 55).

*[ புறக்கிடு-தல் → புறகிடு-தல் ]*

**புறகு** *puragu,* வி.எ. (adv.) புறம்பான-வன்-வள்-து; excluded person or thing. *'சிவனடியார் தம்மைத் தொழுது வந்தணையா தொருவாறொ தூங்கும் வன்றொண்டன் புறகு'* (பெரியபு. விறன்மிண். 7.).

*[ பின் → பிற்கு. பிறம் → பிறவு → பிறகு = முதுகு. பிறகு → புறகு (மு.தா. 294.) ]*

**புறங்கடை**[1] *puraṅ-kaḍai,* பெ. (n.) 1. வீட்டின் வெளிப்புறம்; outside of a house. *'புறங்கடை வைத்தீவர் சோறும்'* (நாலடி, 293.). 2. வெளியிடம், பிறர்க்கு உரிமையான இடம் (பிரதேசம்); locality other than one's own. *'புறங்கடை நல்லிசையு நாட்டும்'* (நீதிநெறி. 2.).

*[ புறம் + கடை. புறம் = வெளி, வெளிப்புறம் ]*

**புறங்கடை**[2] *puraṅ-kaḍai,* பெ. (n.) பின்பிறந்தோன்; younger brother. *'முந்நீர் வண்ணன் புறங்கடை'* (பெரும்பாண். 30).

*[ பின் → பிற → பிறவு → பிறகு → பிறக்கு. பிறக்கிடுதல் = பின்னுக்குச் செல்லுதல். பிறக்கு → பிறங்கு → பிறங்கடை = பின்னால் வரும் உரிமையாளன் (வாரிசு) (மு.தா. 293) பிறங்கடை → புறங்கடை ]*

**புறங்கழித்தல்** *puraṅ-kalittal,* பெ. (n.) நாட்டுக் கோட்டைச் செட்டிகளின் திருமணத்திற்கு முன் பூசகன் (புரோகிதன்) மணமகளின் தலை, தோள், முழந்தாள்களில் வேப்பங்குழையால் தொட்டுப் பின் அதனை எறிந்துவிடுஞ்

சடங்கு; a ceremoney preliminary to a marriage among Nāṭṭukōttai-c-cheṭṭies wherein the purohit touches the bride's head, shoulders and knees with margosa twigs, and throws them away. (E.T.V. 266.);

*[ புறம் + கழித்தல். கழி → கழித்தல். 'தல்' தொ.பெ.ஈறு ]*

**புறங்கா—த்தல்** *puraṅkā-*, 4 செ.குன்றாவி. (v.t.) காத்தல்; to guard, protect, save. *'வழிபடு தெய்வ நிற்புறங் காப்ப'* (தொல்.பொ. 422.).

*[ புறம் + கா—, ]*

**புறங்காட்டு[1]—தல்** *puraṅ-kāṭṭu-*, 15 செ.கு.வி. (v.i.) 1. அவமதிப்புண்டாகப் பின்புறந் திரும்புதல்; to turn one's back in contempt. 2. தோற்றோடுதல்; to show one's back, in defeat. *'தாட்புறக்குப் போந்த கமடம் புறங்காட்ட'* (சிவப். பிர. வெங்கையு. 206). 3. வெளிக்குக் காட்டுதல்; to have the outward appearance of, to pretend. *'தாழ்ந்தவராய்ப் புறங்காட்டி யகத்திலே வஞ்சம் வைத்து'* (அருட்பா, VI, பிள்ளைப்பெரு. 106.)

ம. புறம்காட்டுக

*[ புறம் + காட்டு—,]*

**புறங்காட்டு[2]—தல்** *puraṅ-kāṭṭu-*, 15 செ.குன்றாவி. (v.t.) **புறங்காண்—தல்** பார்க்க; see *puraṅ-kāṇ-*.

*[புறம் + காட்டு—,* காண் (த.வி.) - காட்டு (பி.வி.) *]*

**புறங்காடு** *puraṅ-kāḍu*, பெ. (n.) பிணத்தை எரிக்கும் அல்லது புதைக்கும் இடம் (பிங்.); place of cremation or burial. *'புறங்காட்டுதிர்ந்துக்க பல்லெண்பு'* (நாலடி, 45.).

மறுவ. சுடுகாடு, காளவனம், பிணக்காடு இடுகாடு, ஈமம், படுகாடு, சுடுநிலம்.

*[புறம் + காடு]*

ஊருக்குப் புறம்பாக அதாவது வெளியே அமைந்த இடம்.

**புறங்காண்(ணு)—தல்** *puraṅ-kāṇ(ṇu)-* 16.செ.குன்றாவி. (v.t.) முறியடித்தல்; to defeat, put to flight. *'புரிநாண் புடையிற் புறங்காண்ட லல்லால்'* (கலித். 15.)

*[புறம் + காண்—,]*

**புறங்காப்பு** *puraṅ-kāppu*, பெ. (n.) புறத்தில் நின்று பாதுகாக்கை; acting as body guard. *'புறங்காப் பிளையர்'* (பெருங். உஞ்சைக். 33.99.).

*[புறம் + காப்பு. கா. → காப்பு ]*

**புறங்கால்** *puraṅgāl*, பெ. (n.) 1. பாதத்தின் மேற்புறம்; upper part of the foot, instep. *'புறங்காலிற் போக விறைப்பேன்'* (கலித். 144.). 2. குதிங்காலின் மேற்புறம் (இ.வ.); heel.

ம. புறங்கால், புறவடி

*[புறம் + கால். பாதத்தில் அடிப் புறமாயிருப்பது உள்ளங்கால் (உள் + அகம் + கால்). அதன் வெளிப்புறமா இருப்பது புறங்கால் (பாதத்தின் மேற்புறம்). முன்னங்காலுக்குப் பின்புறமாயிருப்பதும் புறங்கால் (குதிங்காலின் மேற்புறம்) புறம் = வெளி, வெளிப்பக்கம், பக்கம், மேற்பக்கம்]*

**புறங்காவல்** *puraṅ-kāval*, பெ. (n.) மெய்காப்பாளர்; body guard. "சுற்றி நின்றார் புறங்காவலமரர்" (தேவா. 271, 2)

*[புறம் + காவல். கா → காவல்]*

**புறங்காழ்** *puṟaṅ-kāḻ*, பெ. (n.) *புறக்காழ்*, 2. (வின்.) பார்க்க; see *puṟa-k-kāḻ*-2

*[புறம் + காழ் → புறங்காழ் → புறங்காழ்]*

**புறங்கான்** *puṟuṅ-kāṉ*, பெ. (n.) முல்லைநிலம்; jungle, pastoral tract. *'புறங்கானில் வாழ் கோபாலரோ'* (பாரத. இராச. 115.).

*[புறம் + கான்.பிறம் → பிறம் = மருத நிலத் திற்குப் புறம்பான முல்லை (மு.தா. 295) ]*

**புறங்குடி** *puṟaṅguḍi*, பெ. (n.) தஞ்சை மாவட்ட ஊர்; a village in Tañjāvūr dt.

*[புறம் + குடி ]*

**புறங்கூற்றாளன்** *puṟaṅ-kūṟṟāḷaṉ*, பெ. (n.) பிறரைக் காணாவிடத்துப் பழிப்போன்; backbiter, slanderer. *'பொய்க்கரியாளர் புறங்கூற்றாளர்'* (சிலப். 5, 131.).

மறுவ. புறணிபேசுபவன்

*[புறங்கூற்று + ஆளன் ]*

**புறங்கூற்று** *puṟaṅ-kūṟṟu*, பெ. (n.) காணாவிடத்துப் பிறர்மேல் பழிதூற்றுகை; slander, backbiting. *'தீய புறங்கூற்றின் மூகையாய்'* (நாலடி, 158.)

*[புறம் + கூற்று. கூறு → கூற்று]*

**புறங்கூறு—தல்** *puṟaṅ-kūṟu-*, 7 செ.கு.வி. (v.i.) 1. காணாவிடத்துப் பிறர்மேல் அலர்தூற்றுதல்; to backbite, slander. *'புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலின்'* (குறள், 183.). 2. மந்தணத்தை வெளிப்படுத்தல் (வின்.); to expose secrets.

மறுவ. கோள்சொல்லுதல்

*[புறம் + கூறு—, பின் → பின → பிறம் → பிறம்பு. பிறம் → புறம் = முதுகு, வெளி, வெளிப் பக்கம். புறங்கூறுதல் = பின்னால் பழித்தல் (மு.தா. 293, 294)]*

உண்மைக்குப் புறம்பானவற்றைக் கூறுதலே புறங்கூறுதல் ஆகும். எனினும் உரையாசிரியர்கள் 'யாவரையும் இகழ்ச்சி யானவற்றைப் புறத்துரையாமை' (மணக்.குறள், அதி.முன்.) என்றும்'ஒருவரையொருவர் அவர் புறத் துரையாமை' (இளம்.தொல்.பொருள்.74) என்றும் 'காணாதவழிப் பிறரை இகழ்ந்து உரையாமை (பரிமே. குறள், அதி.19) என்றும் காணாத விடத்துக் கூறுவதையே புறங்கூறுதல் என்று குறித்துள்ளனர். ஒருவரைக்காணாத விடத்தில் அவரைப்பற்றி உண்மைக்குப் புறம்பானவற்றைப் பேசுவதில் தயக்கம் ஏதும் இருக்காத நிலை பற்றியே காணாதவழிப் பேசுவது முதன்மை எய்தியது.

**புறங்கை** *puṟaṅgai*, பெ. (n.) கையின் பின்புறம்; back of palm. *'அகங்கை யொட்டியும் புறங்கையிற் புகுத்தியும்'* (பெருங். வத்தவ. 12, 83.).

*[புறம் + கை. மூடின கையின் உட் புறமாயிருப்பது உள்ளங்கை அல்லது அகங்கை. அதன் வெளிப் புறமாயிருப்பது புறங்கை. பிறம் → புறம் = வெளி, வெளிப் பக்கம் (மு.தா.294,295) செய் → கெய் → கை. அகப்பகையும் புறப்பகையும் போல் பிரிந்து நில்லாது அகங்கையும் புறங்கையும் ஒன்றி நிற்கும்]*



**புறங்கைநக்கு—தல்** *puṟaṅkai-nakku-*, 15 செ.கு.வி. (v.i.) (கையின் மேற்புறத்தை நக்குதல்) போகூழ் மிகுதல்; lit, to lick the back of one's hand. to be poor.

*[புறம் + கை – புறங்கை + நக்கு—]*

பொருளைக் கையாள்பவன் கொள்ளும் சிறுநுகர்ச்சி அப்பொருளின் சிறு கூற்றைக் குறைக்கும். இது பொருள் உடையானுக்கு இழப்பாவது நோக்கிப் புறங்கை நக்குதல் போகூழைக் குறித்தது.

**புறங்கைநாறி** *puṟaṅgai-nāṟi*, பெ. (n.) மரவகை; a tree.

**புறங்கொடு—த்தல்** *puṟaṅ-koḍu-*, 4 செ.கு.வி. (v.i.) 1. பின்புறங் காட்டுதல்; to turn one's back. *'நாணென்னு நல்லாள் புறங்கொடுக்கும்'* (குறள், 924.). 2. *புறங்காட்டு ²—தல்* பார்க்க; see *puṟaṅ-kāṭṭu ²-*,

*[புறம் + கொடு—,]*

**புறச்சபை** *puṟa-c-cabai*, பெ. (n.) நல்லருளைப் பொறாத (நற்கருணையனுபவியாத) கிறித்தவர் கூட்டம்; non-conformed Chiristian, catechumen (Chr.)

*[புறம் + சபை. அவை → சவை → சபை]*

**புறச்சபையான்** *puṟa-c-cabaiyāṉ*, பெ. (n.) நல்லருளைப் பெறாத (நற்கருணை யனுபவியாத) கிறித்தவன்; non-conformed Christian; catechumen.

*[புறச்சபை → புறச்சபையான்]*

**புறச்சமயம்** *puṟa-c-camayam*, பெ. (n.) மாறுபட்ட கொள்கையுள்ள சமயம் (சி.சி. 8, 11) (பிங்); heterodox religious system.

*[புறம் + சமயம்]*

'அகம்' தன் கொள்கையைச் சேர்ந்தது. 'புறம்' தன் கொள்கைக்குப் புறம்பானது.

**புறச்சாட்சி** *puṟā-c-cāṭci*, பெ. (n.) *புறச்சான்று* (வின்.)பார்க்க; see *pura-c-cāṉṟu*.

*[புறம் + சாட்சி]*

Skt. šāksin > த. சாட்சி

**புறச்சான்று** *puṟa-c-cāṉṟu*, பெ. (n.) 1. சூழ்நிலைகளை உன்னி (ஊகி)த்தறிய விடும் சான்று; external evidence.2. கையொப்பமிட்ட சான்றாளியல்லாத வேறு சான்றாளி; witness other than attesting witnesses. 3. முன் சொன்ன சான்றை உடன் பட்டு அல்லது மறுத்துக் கூறும் சான்றாளி; witness brought to support or disprove evidence previously let in.

*[புறம் + சான்று]*

**புறச்சுட்டு** *puṟa-c-cuṭṭu*, பெ. (n.) சொல் லிற்குப் புறத்துறுப்பால் வருஞ் சுட்டெழுத்து; (gram.) demonstrative prefix a, i, u, not forming an integral part of the word of which it is a component, opp. to aga-c-cuṭṭu.

*[புறம் + சுட்டு. ]*

எ–டு: அப் பையன், இப் பெண்.

**புறச்சுவர்தீற்று—தல்** *puṟa-c-cuvar-tiṟṟu*, 15 செ.கு.வி. (v.i.) 1. உறவினரை மதிக்காமல் (அலட்சியம்) செய்து பிறருக்கு மதிப்பு (உபசாரம்) செய்தல் (வின்.); to entertain strangers while neglecting one's own kinsmen. 2. அகத் தூய்மையின்றிப் புறத்தில் ஒழுங்கானவர்போல் நடத்தல் (வின்.); to be scrupulous in external conduct while being wicked at heart.

*[ புறம் + சுவர் + தீற்று—, ]*

**புறச்சுற்று** *pura-c-curru,* பெ. (n.) 1. சுற்றுப்புற இடம் (பிரதேசம்); outlying parts of a town or a village. 2. சுற்றுப்புறவமைதி; environment, surroundings.

க. கொரசுத்து

*[புறம் + சுற்று]*

**புறச்சேரி¹** *pura-c-cēri,* பெ. (n.) புறஞ்சேரி பார்க்க; see purañcēri. *'பலகோழி யுறைகிணற்றுப் புறச்சேரி'* (பட்டினப். 77.).

*[புறம் + சேரி – புறஞ்சேரி. புறஞ்சேரி → புறச்சேரி. சேர் → சேரி]*

**புறச்சேரி²** *pura-c-cēri,* பெ. (n.) பறைச் சேரி (எங்களூர், 132.); Pariah quarters.

*[புறம் + சேரி]*

**புறச்சொல்** *pura-c-col,* பெ. (n.) நாடகத்தில் தனக்குட் பேசிக் கொள்ளாமல் எல்லோரும் கேட்கும்படியாக உரைக்கும் சொல் (சிலப். 3, 13, உரை.); (dram.) what is spoken aloud.

*[புறம் + சொல் ]*

**புறஞ்சாய்–தல்** *purañ-cāy-,* 3 செ.கு.வி. (v.i.) தோற்றல்; to be defeated, routed. *'புறஞ்சாய்ந்து காண்டைப்பாய் நெஞ்சே'* (கலித். 89.)

*[புறம் + சாய்–]*

**புறஞ்சிறை** *purañ-cirai,* பெ. (n.) 1. மாளிகை முதலியவற்றிக்கு அருகிலுள்ள இடம்; premises in the neighbourhood of a palace or castle. *'தாரருந் தகைப்பிற புறஞ்சிறை'* (பதிற்றுப். 64, 8.). 2. வேலிக்குப் புறம்பானது; place outside the fence, as of a field. *'புறஞ்சிறை மாக்கட்கு.... புய்த்தெறி கரும்பின்'* (புறநா. 28.). 3. புறஞ்சேரி பார்க்க; see *purañcēri. 'புறஞ்சிறைப் பொழிலும்'* (சிலப்.14, 1.). 4. அருகிலுள்ள இடம்; neighbourhood, vicinity. *'யாமே புறஞ்சிறை யிருந்தும் பொன்னன்னம்மே'* (புறநா. 84.).

*[புறம் + சிறை]*

**புறஞ்சிறைப்பாடி** *purañcirai-p-pāḍi,* பெ. (n.) நகர்க்கு வெளியில் அமைந்துள்ள சேரி; hamlet adjoining a city. *'புறஞ்சிறைப் பாடியில் ஆநிரை காக்கும்'* (தொல். பொ. 57, உரை).

*[புறஞ்சிறை + பாடி. படு → பாடு → பாடி]*

**புறஞ்சுவர்கோலஞ்செய்–தல்** *purañ-cuvar-kōlañcey-,* 1 செ.கு.வி. (v.i.) (வெளிச்சுவரை அழகுபடுத்துதல்) உட் குற்றங்களையாது உடம்பை அழகு படுத்துதல்; lit, to decorate the outside of a wall.; to adorn the body without removing the inner defects. *'புறஞ்சுவர் கோலஞ் செய்து புட்கவ்வக் கிடக்கின்றீரே'* (திவ். திருமாலை, 6.)

*[புறஞ்சுவம் + கோலம் + செய்–]*

'புறச்சுவர்தீற்று–தல்' பார்க்க

**புறஞ்செய்¹–தல்** *purañcey-,* 1 செ.குன்றாவி. (v.t.) 1. உடம்பை அழகு செய்தல்; to adorn the body. *'புறஞ்செயச் சிதைதல்'* (தொல். பொ. 266.) 2. காப்பாற்றுதல்; to protect, cherish, maintain. *'வைகலுமில்புறஞ் செய்தலின்'* (திரிகடு. 64.).

*[புறம் + செய்–,]*

**புறஞ்செய்²–தல்** *purañ-cey-,* 1 செ.குன்றாவி. (v.t.) வெளியேற்றுதல்; to extern, to expel

"இந்நாட்டு மண்ணகத்தே வாழாது புறஞ்செய்தும்" (பாரதி. தேசீய. 47)

*[புறம் + செய்–,]*

**புறஞ்சேரி** *puṟañ-cēri,* பெ. (n.) நகர்க்குப் புறம்பே மக்கள் வாழும் இடம்; outskirts of a city; suburb. *'புறஞ்சேரி யிறுத்த காதை'* (சிலப். 13, தலைப்பு)

*[புறம் + சேரி. சேர் → சேரி]*

**புறஞ்சொல்¹(லு)–தல்** *puṟañ-col(lu)-,* 15 செ.கு.வி. (v.i.) கோட் சொல்லுதல்; to slander, backbite. *'புறஞ்சொல்லும் புன்மையாற் காணப்படும்'* (குறள், 185.)

*[புறம் + சொல். புறம் = முதுகு, வெளி, வெளிப் பக்கம். புறஞ்சொல்லுதல் = பின்னாற் பழித்தல்]*

**புறஞ்சொல்²** *puṟañ-cōl,* பெ. (n.) 1. வெளியிற் கூறும் அலர்மொழி; (akap.) gossip about the intrigues of lovers. *'புறஞ் சொலென்னும் பெருஞ்சிமி றூரப்ப'* (சீவக. 1665.) 2. பழிச்சொல்; slander. *'புறஞ்சொ றூற்றாது புகழுந் தன்மையள்'* (பெருங். வத்தவ. 10, 31.).

*[புறம் + சொல்]*

**புறடை** *puṟaḍai,* பெ. (n.) ஊரின் வெளிப் புறமமைந்த நன்செய் நிலம்; irrigated land situated away from a village.

*[புறம் → புறன் → புறனடை → புறடை. அடு → அடை = அடுத்துள்ளது]*

**புறண்டு–தல்** *puṟaṇḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) பிறாண்டு; to scratch.

*[பிறாண்டு → புறாண்டு → புறண்டு–,]*

**புறணி** *puṟaṇi,* பெ. (n.) 1. புறங்கூறுகை; slander, backbiting. *'காணாவிடந் தனிலே புறணி பலபேசி'* (குமரே. சத. 28.). 2. மரப்பட்டை (பிங்.); outer bark of a tree. 3. தோல் (பிங்.); skin, rind, peel, coat. 4. அகணிக்கு எதிர்; opposite of inside or interior. 'கடுக்காயில் அகணி நஞ்சு, சுக்கில் புறணி நஞ்சு' 5. புலால் (பிங்.); flesh, mutton. 6. புறம்பானது (சூடா.); anything that is outside. 7. குறிஞ்சி நிலம்; hilly tract. 8. முல்லை நிலம் (பிங்.); pastoral tract. *'பூக்குந் தாழை புறணியருகெலாம்'* (தேவா. 842, 6.). 9. உழும்போது பொடியாகாத மண்கட்டி (தஞ்சை.); sod of earth, turned in ploughing.

*[பின் → பிற்கு → பிறகு → பிறவு → பிறகு = முதுகு. பிறம் → புறம் = முதுகு. விலங்கு கட்டும் பறவைகட்கும் குப்புறப் படுத் திருக்கும் மாந்தனுக்கும் முதுகு மேற் புறமாயிருப்பதால், முதுகின் பெயர் மேற் புறத்தைக் குறித்தது. புறம்= மேற்பக்கம், பக்கம். புறம் → புறன் →(புறனி) → புறணி = மேற்புறம் (மு.தா. 294, 295) மரத்தின் மேற்புற மாயிருக்கும் பட்டை, தோல் ]*

**புறணிபேசு–தல்** *puṟaṇi - pēšu-,* 5 செ.கு.வி. *புறம்பேசு–தல்* பார்க்க; see *puṟam - pēšu-,*

*[புறணி + பேசு–,]*

**புறணிநாடு** *puṟaṇi - nāḍu,* பெ. (n.) 1. எல்லைப் புறமாயுள்ள நாடு; border land; bordering country. *'சோணாட்டுப் படும் புறணி நாடுகளிலும்'* (S.I.I.iii, 14.). 2. அயல்நாடு (இ.வ.); foreign country.

*[ புறணி + நாடு. புறம் → புறன் → (புறனி) → புறணி மேற் புறம், பக்கம் ]*

**புறணிபோடு-தல்** *purani - pōdu-*, 20 செ.கு.வி. (v.i.) படைச்சாலிற் புரண்ட மண்கட்டிகளை நிரவுதல் (இ.வ.); to level the sods of earth in a ploughed land.

*[புறணி + போடு-,]*

**புறத்தங்கம்** *purattaṅgam*, பெ. (n.) புறத்துறுப்பு பார்க்க; puratturuppu

*[புறம் → புறத்து + அங்கம்]*

*Skt. aṅga > த. அங்கம்.*

**புறத்தவன்** *purattavaṉ*, பெ. (n.) 1. அயல் நாட்டான் (அன்னியன்); foreigner, stranger. 2. *புறம்பணையாள்* (சூடா.) பார்க்க; see *purampaṇaiyāḷ*.

க. பொறபிக; தெ. பெற.

*[புறம் → புறத்து + அவன்]*

**புறத்தி**[1] *puratti*, பெ. (n.) புறம்பானது (வின்.); that which is outside, external, foreign or extrinsic.

ம. புறத்து.

*[புறம் → புறத்தி]*

**புறத்தி**[2] *puratti*, பெ. (n.) சாயல் (புதுவை.); looks, external appearance of a person.

*[புறம் → புறத்தி]*

**புறத்திக்கிடம்பண்ணு-தல்** *puratti-k-kiḍam-paṇṇu-*, 5 செ.கு.வி. (v.i.) தன்னைச் சேர்ந்தவனைப் பழிக்கு உள்ளாக்குதல் (வின்.); to expose a friend to reproach.

*[புறம் → புறத்திக்கு + இடம் + பண்ணு-,]*

**புறத்திடு-தல்** *purattiḍu-*, 18 செ.குன்றாவி. (v.t.) வெளிவிடுதல் (குறள், 590, உரை.); to divulge.

*[ புறம் → புறத்து + இடு-,]*

**புறத்திண்ணை** *pura-t-tiṇṇai*, பெ. (n.) வீட்டு வெளித்திண்ணை (இ.வ.); pial.

*[ புறம் + திண்ணை. துள் → (திள்) → திண் → திண்ணை = திரண்ட மேடு ]*

**புறத்திணை** *pura-t-tiṇai*, பெ. (n.) வெட்சி, வஞ்சி, காஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண் என ஏழுவகையாகவும் (தொல்.) இவற்றுடன் கரந்தையும் நொச்சியும் சேர ஒன்பது வகையாகவும் (பன்னிருபடலம்) இவ்வொன்பதுடன் பொதுவியல், கைக்கிளை பெருந்திணை மூன்றுஞ் சேரப் பன்னிரு வகையாகவும் (பு.வெ.) பிரித்துக் கூறப்படும் புறப்பொருள் பற்றிய ஒழுக்கங்கள்; theme describing, conduct as regards war, state-affairs etc., opp, to aga-t-tiṇai, of seven kinds, viz., vetci, vañci, kāñci, uḻiñai, tumbai, vāgai, pāḍāṇ according to Tolkāppiyam, or of nine kinds adding karandai and nocci to the above according to Paṉṉiru-paḍalam or of 12 kinds, including in addition poduvial kaikkiḷai, and peruntiṇai according to Puraporuḷ-veṇpā mālai.

*[ புறம் + திணை ]*

அகம் புறம் என்னும் இருவகைப் பாகுபாட்டுள் எல்லாப் பொருள்களும் அடக்கப்பட்டுவிட்டன. புறப்பொருள்பற்றிய எழுதிணைகளுள், முதலைந்தும் அரசனுக்குச் சிறப்புக் கொடுத்தற் பொருட்டு அவனுக்குரிய போர்த் தொழிலையே பற்றிக் கூறினும், வாகை பாடாண் என்னும் இறுதியிரண்டும், மற்றெல்லா மக்கள் தொழில்களையும்

சேர்த்துத் தழுவுவனவாகும். இதை யறியாதார் தழ்ப் பொருளிலக்கணம் குறைபாடுள்ள தெனக் குறை கூறுவர் (செ.சி.13)

**புறத்திணைநன்னாகனார்** *puṟa-t-tiṇai-naṉṉākaṉār,* பெ. (n.) கழக(சங்க)க் காலப்புலவர்; poet of saṅgam age.

*[ புறத்திணை + நன்னாகனார் ]*

ஒய்மான் நல்லியக் கோடன், ஒய்மான் நல்லியாதன், கரும்பனூர் கிழான் முதலியவரைப் பாடியவர். இவர்க்கு நன்னாகனார் எனவும் பெயர் (புறநா.)

**புறத்தியம்** *puṟattiyam,* பெ. (n.) *புறத்தி (வின்.)* பார்க்க; see *puṟatti.*

*[ புறத்தி → புறத்தியம் ]*

**புறத்தியான்** *puṟattiyāṉ,* பெ. (n.) *புறத்தவன்1.* பார்க்க; see *puṟattavaṉ.1.*

*[ புறம் → புறத்தி → புறத்தியான் ]*

**புறத்திரட்டு** *puṟa-t-tiraṭṭu,* பெ. (n.) புறப்பொருள் பற்றிய செய்யுட்களைப் பல நூல்களிலிருந்து திரட்டி அமைக்கப்பட்ட தொகை நூல்; an anthology on the themes of puṟam.

*[ புறம் + திரட்டு. திரள் → திரடு → திரட்டு ]*

**புறத்திரு-த்தல்** *puṟattiru-,* 3 செ.கு.வி. (v.i.) வெளியே காத்திருத்தல்; to wait outside. *'புறத்திரு போகென்னு மின்னாச் சொல்'* (நாலடி, 326.).

*[ புறம் → புறத்து + இரு-, ]*

**புறத்திறு-த்தல்** *puṟattiṟu-,* 3 செ.குன்றாவி. (v.t.) முற்றுகையிடுதல்; to besiege. *'போக்கற வளைஇப் புறத்திறுத்தன்று'* (பு.வெ.1,7.).

*[ புறம் → புறத்து + இறு-, ]*

**புறத்திறை** *puṟattiṟai,* பெ. (n.) வேற்றரசனுடைய மதிலை மேற்சென்ற வேந்தன் முற்றுகை செய்தலைக் கூறும் புறத்துறை (பு.வெ.6, 10.); (puṟap.) theme of an invading chief besieging his adversary's fort.

*[ புறத்திறு → புறத்திறை. இறு → இறை. ]*

**புறத்துடர்** *puṟattuḍar,* பெ. (n.) அணிவகை(S.I.I.ii, 16); a kind of jewel.

*[ புறம் + துடர். தொடர் → துடர் ]*

**புறத்துப்பக்கம்** *puṟattu-p-pakkam,* பெ. (n.) *புறப்பக்கம் (இ.வ.)* பார்க்க; see *puṟa-p-pakkam.*

*[ புறம் → புறத்து + பக்கம் ]*

**புறத்துழிஞை** *puṟattuḻiñai,* பெ. (n.) வேற்றரசனுடைய மதிலைச் சூழ்ந்த அகழின் கரையில் மேற்சென்ற வேந்தன் படை (சேனை)யுடன் தங்கி முற்றுகையிடுதலைக் கூறும் புறத்துறை (பு.வெ. 6, 16.); (purap.) theme of an invading chief camping on the banks of the moat and besieging the fort of his adversary.

*[ புறம் → புறத்து + உழிஞை ]*

**புறத்துறவு** *puṟa-t-tuṟavu,* பெ. (n.) அகப்பற்றுவிடாமல் துறவிபோல் புனைந்து (வேடங்)கொள்ளுகை; assuming an ascetics guise without real renunciation.

*[ புறம் + துறவு. துற → துறவு. புறத்தளவில் மட்டும் கொள்ளும் துறவு நிலை. ]*

**புறத்துறுப்பு** *puratturuppu,* பெ. (n.) 1. இடம், பொருள், ஏவல் முதலிய பக்கத்துணை; external resources, as position, property, authority, influence, opp. to agatturuppu. *'புறத்துறுப் பெல்லா மெவன் செய்யும்'* (குறள்,79.). 2. உடலின் புறத்துள்ள உறுப்பு (அங்கம்); limb, external member of the body.

*[ புறம் → புறத்து + உறுப்பு ]*

**புறத்துறை** *pura-t-turai,* பெ. (n.) புறத்திணையின் பகுதி; minor theme grouped under a purattiṇai. *'வீரரைப்பாடும் புறத்துறை யெல்லாம் முடித்து'* (சிலப். 27, 46, அரும்.)

*[ புறம் + துறை ]*

**புறத்தூய்மை** *pura-t-tūymai,* பெ. (n.) வெளிப்புறத் தூய்மை; external cleanliness. புறத்தூய்மையைக் காட்டிலும் அகத்தூய்மையே நாகரிகத்திற்குச் சிறந்ததாக எண்ணப்படும் (உ.வ.).

*[ புறம் + தூய்மை ]*

அறிவாலும் (ஞானத்தாலும்) ஒழுக்கத்தாலும் இல்லறத்தினும், பன்மாண் சிறந்த துறவறத்தில் புறத்தூய்மை ஒரு பொருளாகக் கொள்ளப்படுவதன்று. இலலறத்தினும் ஒருவன் எத்துணை எளியனா யிருப்பினும், தன்னையும் தன் பொருள்களையும் தூயவாய் வைத்துக் கொள்வதே புறத்தூய்மை (ப.க. 100)

**புறத்தொழுக்கம்** *purattolukkam,* பெ. (n.) பரத்தையவரோடு கூடியொழுகுகை; living with concubines. "*புறத்தொழுக்கத்திலே நெடு நாள் ஒழுகி...... மீண்டு தலைவியொடு கூடி*" (ஐங்குறு. 1. உரை).

*[ புறம் → புறத்து + ஒழுக்கம்*

*ஒழுகு → ஒழுக்கு → ஒழுக்கம்]*

**புறத்தோற்றம்** *pura-t-tōrram,* பெ. (n.) வெளிப்புறத்தோற்றம்; exterior. நகரமக்கள் புறத்தோற்றத்தில் தூய்மை கடைப் பிடிக்கின்றனர் (உ.வ.).

*[ புறம் + தோற்றம் ]*

**புறந்தள்ளு-தல்** *purantallu-,* 12 செ.குன்றாவி. (v.t.) விலக்குதல், நீக்குதல், சேர்த்துக் கொள்ளாமல் ஒதுக்கி வைத்தல்; to exclude

*[ புறம் + தள்ளு-, ]*

**புறந்தருநர்** *purantarunar,* பெ. (n.) பாதுகாப்பவர்; protector. "*பகடு புறந்தருநர்*" (புறநா.).

*[ புறந்தரு → புறந்தருநர் ]*

**புறந்தா[1]-தல் (புறந்தருதல்)** *purantā-,* 15 செ.குன்றாவி. (v.t.) 1. காத்தல்; to protect, take care of. "*குடி புறந்தருகுவை யாயின்*" (புறநா. 35). 2. கை விடுதல்; to forsake "*பிழைப்பிலா புறந் தந்தானும்*" (சீவக. 252). 3. போற்றுதல்; *to extol, praise.* "*அடி புறந்தருவர் நின்னடங்கா தோரே*" (புறநா. 35).

*[ புறம் → தா(தரு-)-, ]*

**புறந்தா[2]-தல்** (புறந்தருதல்) *purantā-,* 18 செ.கு.வி. (v.t.) 1. தோற்றுப் போதல்; to turn one's back in retreat, to be defeated. 2. நிறம் உண்டாதல்; to become shiny "*பொடியழற் புறந்தந்த..... கிண்கிணி*" (கலித். 85).

*[ புறம் + தா(தரு-)- ]*

**புறந்தாள்** *purantāl-,* பெ. (n.) *புறங்கால் (யாழ். அக.)* பார்க்க; see *purankāl*

*[ புறம் + தாள் ]*

**புறந்துர—த்தல்** *puran-tura,* 3 செ.குன்றாவி. (v.t.) எருதுகளை முதுகிலே யடித்து ஒட்டுதல்; to drive cattle by striking them on the back. *'மகவுடை மகடூஉப் பகடு புறந்துரப்ப'* (பெரும்பாண். 58.)

*[ புறம் + துர— ]*

**புறநகர்** *pura-nagar,* பெ. (n.) நகரின் புறப்பகுதி; outlying part of a city, suburb.

*[ புற(ம்) + நகர் ]*

**புறநடம்** *pura-nadam,* பெ. (n.) *புறநாடகம் (சிலப்.3,12, அரும்.)* பார்க்க; see *pura-nādagam.*

*[ புற(ம்) + நடம் ]*

**புறநடை** *pura-nadai,* பெ. (n.) *புறனடை நூற்பா (நன். 19, மயிலை. அரும்.)* பார்க்க; see *puranadai-nūrpā.*

*[ புற(ம்) + நடை ]*

**புறநாட்டுப் பெருங்கொற்றனார்** *puranāttu-p-perun-korranār,* பெ. (n.) கடைக்கழக (சங்கம்) மருவிய காலத்துப் புலவர்; poet of post-sangam age.

*[ புறநாடு + பெருங்கொற்றனார் ]*

இவர் இயற்பெயர் பெருங்கொற்றனார். இவர் நாடு புறநாடாயிருக்கலாம். 'ஆர்' உயர்வு பன்மை ஈறு.

**புறநாடகம்** *pura-nādagam,* பெ. (n.) இன்பம் (சிருங்காரந்)தவிர மற்றைச் சுவை பற்றி வரும் நாடகவகை (சிலப். 3, 13, உரை.); a drama where the prevailing sentiment is one other than cirunkāram or love.

*[ புற(ம்) + நாடகம் ]*

**புறநானூறு** *puranānūru,* பெ. (n.) எட்டுத் தொகையுள் ஒன்றானதும் புறப்பொருளைப் பற்றிய நானூறு பாடல்களைக் கொண்டதுமான தொகை நூல்; an ancient poetic anthology on the topics of pura-p-porul. containing 400 verses, one of ettu-t-togai

*[ புறம் + நானூறு ]*

புறநானூற்றில் ஒரு சில (2, 358, 362, 366) செய்யுள்களைத் தவிரப் பிறவற்றை யெல்லாம் பாடினாரும் அவராற் பாடப்பட்டாரும் கடைக்கழகக் காலத்தினராதலின் புறநானூற்றின் காலம் கடைக்கழகக் காலமாகும் (கி.பி. 2ஆம் நூற்றாண்டு)

புறநானூறு ஒருதொகை நூல் அல்லது தனிப்பாடற்றிரட்டே. புறப்பொருளைப் பற்றிய நானூறு செய்யுள்களைக் கொண்டது புறநானூறு. இன்னாநாற்பது, இனியவைநாற்பது முதலிய நாற்பது பாக்களைக் கொண்ட பனுவல்களையும், நற்றிணை நானூறு, பழமொழி நானூறு, குறுந்தொகை நானூறு, நாலடி நானூறு, முதலிய நானூறு பாக்களைக் கொண்ட பனுவல்களையும் நாலாயிரக் கோவை, நாலாயிரத்திவ்யப்பிரபந்தம் (தெய்வப்பனுவல்) முதலிய நாலாயிரம் பாக்களைக் கொண்ட பனுவல்களையும் நோக்குமிடத்து நாலென்னும் எண் ஏதோவொரு காரணம் பற்றி நூற்செய்யுட் தொகைக்குச் சிறந்ததாகக் கொள்ளப்பட்ட தென்பது தெரிகின்றது. அது நால்வகைப் பாவோ நால்வகைக் குலமோ பற்றியிருக்கலாம்.

புறநானூற்றுச் செய்யுள்களிற் சில சிதைந்துங் குறைந்துமிருப்பதால், இந்நூல் செய்யுள்களின் அடிச்சிறுமை பெருமையும் சொற்றொகையும் அறிவதற்கில்லை. ஆயினும், இதுபோதுள்ளபடி அடியுஞ்சொல்லும் எண்ணிப் பார்ப்பின் ஒரு செய்யுளின் சராசரி அடித்தொகை பதினெட்டென்பதும் ஓர் அடியின் சராசரிச் சொற்றொகை ஆறென்பதும் தெரியவரும். ஆகவே, ஒரு செய்யுளின் சராசரிச் சொற்றொகை ஏறத்தாழ நூறென்பது பெறப்படும்.

பண்டைத் தமிழ்நூல்களெல்லாம் தனித்தமிழ் என்னும் பொதுக்கொள்கைக்கேற்ப, புறநானூறும் தனித்தமிழே. ஆங்காங்கு

இரண்டொரு வடசொற்கள் அருகி வந்திருப்பதானால், புறநானூற்றின் தனித்தமிழ்த் தன்மை குன்றிவிடாது. இந்நூலில் வந்திருக்கும் வடசொற்களெல்லாம் இருபது அல்லது இருபத்தைந்தே. இவற்றுள்ளும் ஒருசில தென்சொல்லோ வடசொல்லோ என ஐயுறற்குரியன.

இரண்டொரு வடசொற்கள் இங்கு மங்குமாக அருகி வந்திருப்பது கொண்டு புறநானூறு முழுமையுங்கலப்புத் தமிழென்பராயின், பிறமொழிச்சொல் கலவாத மொழியே உலகத்திலில்லையென்னும், ஆரியத்திலும் சுட்டும் வினாவும் மூவிடப்பெயரும் போன்ற அடிப்படைச் சொற்களெல்லாம் வேர்நிலையில் தமிழா யிருத்தலின் தமிழ் தனித்து வழங்கினும் ஆரியம் தனித்து வழங்கல் கூடாமையென்னும் கூறிவிடுக்க. (ப.க. 2, 3)

**புறநிலை** *pura-nilai,* பெ. (n.) **1.** வெளிப்புறம்; outside. *'புறநிலைக் கோட்டம்'* (சிலப், 5, 180.) **2.** வேறுபட்டநிலை; changed condition or state. *'வழிநாட் பொய்யொடு நின்ற புறநிலை'* (புறநா. 211.). **3.** நீ வணங்குந் தெய்வம் நின்னைப் புறங்காப்ப நின் வழிவழி மிகுவதாக எனக் கூறுவதும் 96 வகைச் சிற்றிலக்கியங்களுள் ஒன்றாவதுமான நூல் வகை (சது.); poem invoking the tutelary deity of a chief to shower properity on his family and his decendants, one of 96 pirapandam. **4.** உதவிநோக்கிப் பிறர் புறங்கடையில் நிற்கும் நிலை (புறநா. 211, உரை.); standing in the back-yard of one's house, seeking one's favour. **5.** ஏவல் செய்து பின்னிற்கை (அக.நா. 32.); personal attendance, as of a pupil upon his guru. **6.** சாதிப் பெரும்பண் நான்கனுள் ஒன்று. (சிலப். 8, 41, உரை.); (mus.) a class of primary melody-types one of four cādi-p-perumpaṉ, q.v.

*[ புறம் + நிலை ]*

**புறநிலைக்கருவி** *pur-nilai-k-karuvi,* பெ. (n.) 5 நிலத்தின் (பிருதிவியின்) கூறு, 5 நீரின் (அப்புவின்) கூறு, 5 நெருப்பின் (தேயுவின்) கூறு, 5 காற்றின் (வாயுவின்) கூறு, 5 வானத்தின் (ஆகாயத்தின்) கூறு, பத்து (தச) காற்று (வாயு), பத்து (தச) நாடி, 5 சொல்நடை முதலியன (வசனாதி) 4 வாக்கு, முக்குணம், நானுணர்வு மூன்று (அகங்காரத்திரயம் அல்லது ஏடணாத்திரயம்) என்ற 11 வகையும், 60 விரியுமுள்ள மெய்ப்பொருட்கள் (தத்துவங்கள்) (சிலப். கட்; திருவால. தட்.) (saiva.) external categories, of 11 kinds 60 in number, viz., 5 pirutuviyiṉ kūṟu, 5 appuviṉ kūṟu, 5 tēyuviṉ kūṟu, 5 vāyuviṉ kūṟu, 5, ākāyattiṉ kūṟu, taša vāyu, 5, tasa-nāḍi 5 vacaṉādi, 4 vākku, mukkuṇam agaṅ-kāra-t-tirayam or ēḍaṇāttirayam.

*[ புறநிலை + கருவி ]*

**புறநிலைமருதம்** *pura-nilai-marudam,* பெ. (n.) பெரும்பண் வகை; (சிலப். 8, 39.); (mus.) a primary melody-type,

*[ புறநிலை + மருதம் ]*

**புறநிலைவாழ்த்து** *pura-nilai-vāḻttu,* பெ. (n.) **1.** வழிபடு தெய்வம் நின்னைப் புறங்காப்ப வழிவழி செல்வத்தொடு சிறந்து பொலிக என்று தலைவனொருவனைக் கூறும் வாழ்த்து; (தொல், பொ. 422.); benediction upon a chief, in which his tutelary deity is invoked to bless him and his descendents. **2.** *புறநிலை 3 (சங்.அக.)* பார்க்க; see *puranilai 3.*

*[ புறநிலை + வாழ்த்து. வாழ் → வாழ்த்து ]*

**புறநிறச்சார்பு** *pura-nira-c-cārbu*, பெ. (n.) மணிக் குற்றங்களுளொன்று; a defect in precious stones. "*போழ்ந்திடு தராசம் புறநிறச் சார்பு*" (பஞ்ச, திருமுக, 476.).

*[புறம் + நிறம் + சார்பு. சார் → சார்பு.]*

**புறநீங்கு—தல்** *pura-ningu-*, 3 செ.கு.வி. (v.i.) **1.** விடுதலையாய் விலகிப் போதல்; to be at liberty. **2.** விலக்கப்படுதல்; to be separated from others.

*[புறம் + நீங்கு—,]*

**புறநீர்மை** *pura-nirmai*, பெ. (n.) பண் வகை (பிங்.); a melody type.

*[புறம் + நீர்மை]*

**புறநோயாளி** *pura - nōyāli*, பெ (n.) மருத்துவ மனைக்கு வந்து மருத்துவம் (சிகிச்சை) பெற்றுச் செல்பவர்; out patient. '*புறநோயாளிகள் பகுதியில் நாள்தோறும் கூட்டம் இருக்கும்*' (உ.வ.).

*[புறம் + நோயாளி]*

**புறப்பக்கம்** *pura-p-pakkam*, பெ. (n.) உலக நடப்பை யொட்டிய கருதுகோள் (இலௌகிக விஷயங்களை யொட்டிய அனுமானம்) (வின்.); (log.) inference regarding non-relilgious or secular matters.

*[புறம் + பக்கம்]*

**புறப்பகுதி** *pura-p-pagudi*, பெ. (n.) வெளிப்பக்கம்; exterior.

*[புறம் + பகுதி]*

**புறப்பகை** *pura-p-pagai*, பெ. (n.) **1.** வெளிப் படையான பகை; open hostililty. **2.** பகைவன்; enemy. '*புறப் பகைகளை அடக்கும் ஆண்மை யுடையார்க்கும்*' (குறள், 148, உரை.).

*[புறம் + பகை. அகங்கையும் புறங்கையும் போல் ஒன்றி நிற்காமல் அகப்பகையும் புறப்பகையும் பிரிந்து நிற்கும்.]*

**புறப்பட்டுக்கொள்(ளு)—தல்** *pura-p-pattu-k-kol(lu)-*, 12 செ.கு.வி. (v.i.) வெளியேறுதல்; to go out, go out. '*நெருப்புப்பற்றிப் புறம்பே எரியாநின்றால் புறப்பட்டுக் கொள்கிடாய் என்று*' (ஈடு, 1, 2, 1.).

*[புறப்பட்டு + கொள்—,]*

**புறப்பட்டுப்போ—தல்** *pura-p-pattu-p-pō-*, 8 செ.கு.வி. (v.i.) *புறப்பட்டுக்கொள்(ளு)—தல்* பார்க்க; see *pura-p-pattu-k-kol(lu)-*, அவன் புறப்பட்டுப் போய்விட்டான் (உ.வ.).

*[புறப்பட்டு + போ—,]*

**புறப்படு—தல்** *pura-p-padu-*, 20 செ.கு.வி. (v.i.) **1.** செலவு மேற்கொள்ளுதல்; to set forth, proceed, start on a journey. '*பாயிரப் பதிக மோதிப் புறப்பட்டார்*' (திருவாலவா. 37, 11.). **2.** புறம்பே செல்லுதல்; to go out. '*புறப்படாத பருவத்தே போனாய்*' (அகநா. 7, உரை.). **3.** புறத்தில் தோன்றுதல்; to start or jut out, protrude, as a stone in a wall. **4.** புண் முதலியன உண்டாதல் (வின்.); to break out, as eruptions. **5.** பொசிதல் (வின்.); to ooze out, issue, exude.

ம. புறப்பெடுக; க. கொரவடு, கொரபடு

*[புறம் + படு—, புறம் = வெளி, வெளிப்பக்கம்]*

**புறப்படுத்து–தல்** *puṟa-p-paḍuttu-*, 3 செ.குன்றாவி. (v.t.) வெளிப்படுத்துதல்; to divulge, reveal, publish. *'புறப்படுத்தா ணாகு முறை'* (குறள், 590.).

*[ புறம் + படுத்து–, படு–தல் (த.வி.) – படுத்து–தல் (பி.வி.) ]*

**புறப்படைவீடு** *puṟa-p-paḍai-vīḍu*, பெ. (n.) *புறஞ்சேரி (சீவக. 85.)* பார்க்க; see *puṟañcēri.*

*[ புறப்படை + வீடு ]*

**புறப்பணை** *puṟa-p-paṇai*, பெ. (n.) முல்லைநிலம்(சங்.அக.); pastoral tract.

*[ புறம் = மருத நிலத்திற்குப் புறம்பான முல்லை. புறம் → புறவு = முல்லை. புறம் → புறம்பு → புறம்பணை = முல்லை (மு.தா. 295) ]*

**புறப்பத்தியம்** *puṟa-p-pattiyam*, பெ. (n.) மருந்துண்ணும் காலத்தில் உணவில் கடைப் பிடிக்க வேண்டிய கட்டுப்பாடு (மறுபத்தியம்) (வின்.); diet or regimen prescribed after a course of medicine.

*[ புறம் + பத்தியம் ]*

**புறப்பற்று** *puṟa-p-aṟṟu*, பெ. (n.) எனது என்னும் பற்று, நான் என்னும் அகப்பற்றுக்கு எதிரானது; external attachment, as attachment to property and family, opp. to 'aga-p-paṟṟu'. *'எனதென்னும் புறப்பற்று விடுதல் கூறப்பட்டது'* (குறள், 344, உரை.)

*[ புறம் + பற்று. நான் என்பது ஆதனுடன் (ஆத்மாவுடன்) இணைந்து செயல் படுவதால் அது அகத்ததாகக் கொள்ளப் பட்டது. எனது அவ்வாறில்லாமல் புறத்தே அமையும் பொருள்களாகவும் பிறவாகவும் இருப்பதால் புறத்தது எனப்பட்டது. பற்று அகம், புறம் இரண்டிடத்திற்கும் பொது ]*

**புறப்பாட்டு** *puṟa-p-pāṭṭu*, பெ. (n.) 1. புறப்பொருளைப் பற்றிய செய்யுள்; verses on a topic of puṟa-p-poruḷ 2. *புறநானூறு* பார்க்க; see *puṟa-nāṉūṟu.*

*[ புறம் + பாட்டு ]*

**புறப்பாட்டுவண்ணம்** *puṟa-p-pāṭṭu-vaṇṇam*, பெ. (n.) இறுதியடி முடியாதிருப்பவும் தான் முடிந்த அடிபோலக் காட்டும் சந்தம் (தொல். பொ. 537.); (pros.) a rhythm effected by making the penultimate line read like the last line of a stanza.

*[ புறப்பாட்டு + வண்ணம் ]*

**புறப்பாட்டுவீக்கம்** *puṟa-p-pāṭṭu-vīkkam*, பெ. (n.) புண் வீக்க வகை; inflammation of the cellular tissue, cellulitis.

*[ புறப்பாட்டு + வீக்கம் ]*

**புறப்பாடு** *puṟappāḍu*, பெ. (n.) 1. வெளி யேறுகை; 1 coming forth, sallying out. 2. புறந்தோன்றுகை; appearing outside protruding, jutting out. *'ஒரு பொருள் புறப்பாடின்றி'* (திவ். இயற். திருவாசிரியம், 7.). 3. செல்கை; setting out, departure, as of a traveller. *'புறப்பாடும் வழிச் செலவும்'* (சிலப். 8, 45, உரை.) 4. கோயில் சிலை (மூர்த்தி) வெளியில் எழுந்தருளுகை; procession of an idol. 5. புண்கட்டி வகை (நெல்லை.); eruption, boil, abscess, carbuncle.

ம. புறப்பாடு.

*[ புறப்படு → புறப்பாடு. 'படு' என்னும் துனணவினை முதனிலை திரிந்து பாடு என்றாயிற்று ஒ.நோ. கடப்படு → கடப்பாடு ]*

**புறப்புண்** *pura-p-puṇ,* பெ. (n.) முதுகில் பட்டபுண்; wound on the back of a person. *'முன்பு குறித்தெறிந்த புறப்புண் ணாணி'* (புறநா. 65.).

*[ புறம் + புண் ]*

**புறப்புறக்கருவி** *pura-p-pura-k-karuvi,* பெ. (n.) *புறப்புறமுழவு (சிலப். அரும்.)* பார்க்க; see *pura-p-pura-mulavu.*

*[ புறப்புறம் + கருவி ]*

**புறப்புறம்** *pura-p-puram,* பெ. (n.) முற்றும் வேறானது (அந்நியமானது); that which is outermost.

*[ புறம் + புறம். தமிழனுக்குத் தமிழ் அகம்; திராவிடம் அகப்புறம்; ஆரியம் புறம்; சேமி யம் புறப்புறம். இவ்வகைக் கூற்றினின்று அகம்புறம் என்னும் சொற்களின் பொருளை ஒருவாறுணரலாம் (தமி.வ.115) புறம் = வெளி, வெளிப் பக்கம். வெளியான (வேறான) தன்மையை வலியுறுத்த புறம் அடுக்கி வந்துள்ளது ]*

**புறப்புறமுழவு** *pura-p-pura-mulavu,* பெ. (n.) முழவுவகை (சிலப். 3, 27, உரை.); a kind of drum, as 'neytarparai', etc.

*[ புறப்புறம் + முழவு ]*

**புறப்பூசை** *pura-p-pūšai,* பெ. (n.) கோயில் முதலிய இடங்களில் சிவபெருமானுக்குச் செய்யும் வழிபாடு (ஞானபூசா.15 உரை); (šaiva.) worship offered to Šivan set up in temples, etc.

*[ புறம் + பூசை. பூசு → பூசை ]*

**புறப்பெண்டிர்** *pura-p-peṇḍir,* பெ. (n.) பரத்தையர் (இறை.43,பக்.174.); courtesans.

*[ புறம் + பெண்டிர். பெள் → பெண் → பெண்டு → பெண்டிர். புறப்பெண்டிர் புதல்வனைப்பெறுவதற்கு உரிமையுள்ள இல்வாழ்க்கைக்குப் புறம்பான பெண்டிர் ]*

**புறப்பொருள்** *pura-p-porul,* பெ. (n.) 1. *புறத்திணை (பு.வெ.சிறப்பு.1.)* பார்க்க; see *pur-a-t-tiṇai.* 2. வீரம் (சீவக.1090,உரை.); martial spirit, heroism. 3. வெளிப்படையான பொருள் (கம்பரா.இரணிய.32.); apparent meaning.

*[ புறம் + பொருள் ]*

**புறப்பொருள்வெண்பாமாலை** *pura-p-porul-veṇpā-mālai,* பெ. (n.) புறத்திணை வகைகளைப் பற்றி வெண்பாவினால் ஐயனாரிதனார் இயற்றிய ஓர் இலக்கண நூல்; a treatise on the topics of puram, in veṇpā metre, by Aiyaṉāridaṉār.

*[ புறப்பொருள் + வெண்பா + மாலை ]*

**புறம்[1]** *puram,* பெ. (n.) 1. வெளியிடம்; outside, exterior, opp. to agam. *'புறங்குன்றி கண்டனையரேனும்'* (குறள்,277.). 2. அயன்மை (அன்னியம்); that which is foreign, extraneous. 3. *புறத்திணை* பார்க்க; see *pura-t-tiṇai.* 4. *புறநானூறு* பார்க்க; see *puranāṉūru.* "*அகம்புறமென் றித்திறத்த*" (தனிப்பா.) 5. வீரம்(சூடா.); heroism, bravery, valour. '*தான்புறங் கட்டுப்பட்டு*' (சீவக.1090.) 6. பக்கம்; side, part, face, surface. *'புனலாடப் புறஞ்சூழ்ந்து'* (கலித்.76). 7. முதுகு; back. 'புறம்புல்லின் (கலித்.94). 8. *புறக்கொடை* பார்க்க; see *pura-k-koḍai.* *'துப்புறுவர் புறம் பெற்றிசினே'* (புறநா.11.) 9. பின்புறம் (வின்.) backside, behind, background, rear.

10. புறங்கூற்று; backbiting, as person, calumny. '*புறஞ்சொல்லும் புன்மையால்*' (குறள்,185.). 11. அலர்மொழி; gossip about intrigue between lovers. '*புறமாறப்பட்டவர்*' (கலித்.80.) 12. ஒருதலைப்பக்கம் (பட்சபாதம்) (வின்.); partiality, 13. இடம் (திவா.); place. '*கரிபுறவட்டில்*' (சிலப்.16,32.). 14. இறையிலி நிலம்; land free from assesment. '*ஐந்தூ ரதன்புற மாக்கினானே*' (சீவக.2574.). 15. ஏழனுருபுள் ஒன்று (நன்.302.); (gram.) a locative case suffix. 16. திசை (வின்.); region, point of compass quarter; tract or part of a country, district. 17. காலம்; time, season. '*யாம்பிறர் செய்புற நோக்கி யிருத்துமோ*' (கலித். 111.).

ம. புறம்; க.பொற, பொறகு, பொறகெ; து.பிட; கோத. பொரன்ச்

*[ பின் → பிற → பிறவு → பிறகு → பிறக்கு. பிறக்கிடுதல் = பின்னுக்குச்செல்லுதல். பிறக்கு → பிறங்கு → பிறங்கடை = பின்னால் வரும் உரிமையாளன் (வாரிசு). பின் → பினம் → பிறம் → பிறம்பு → பிறம்பத்தங்கால் = பின்னங்கால். பிள் → பின் → பிறம் → புறம் = வெளி, வெளிப்பக்கம், புறப்பொருள். 'உள்ளும் புறம்பும்' 'அகமும் புறமும்' என்னுந் தொடர்களால் புறம் என்னும் சொல் உட்பக்கத்திற்கு எதிரான வெளிப் பக்கத்தைக் குறிப்பது தெளிவாகும். மூடின கையின் உட்புறமாயிருப்பது உள்ளங்கை அல்லது அகங்கை என்றும் அதன் வெளிப்புறமாயிருப்பது புறங்கை என்றும் கூறப்படுதல் காண்க (மு.தா.293–295) ]*

புறமாவது நிரை கோடற்பகுதியும், பகை வயிற்சேறலும், எயில் வளைத்தலும் இருபெரு வேந்தரும் ஒரு களத்துப் பொருதலும், வென்றிவகையும், நிலையாமைவகையும் புகழ்ச்சிவகையும் என எழு வகைப்படும். (இளம், தொல். புறத்திணை. முன்.)

பொருளிலக்கணத்தில் பொருள் களெல்லாம் அகம், புறம் என இரண்டாகவும், அவற்றுள் அகம் கைக்கிளை ஐந்திணை பெருந்திணை என ஏழாகவும், புறம் வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என ஏழாகவும் வகுப்படும். (ஒ.மொ. 1,176) மக்களையெல்லாம் நடத்தும் குணம் இரண்டு அவை காதலும் மறமும். இவ்விரு குணங்களுள்ளும் அல்லது குண வாழ்க்கையுள்ளும் உள்ளத்திற்கு மிக நெருங்கியது காதலே. ஆதலால் அதை அகமென்றார். அகமல்லாதது புறமாதலின் மறத்தைப் புறம் என்றார். இங்ஙனம் இரண்டையும் வேறுபடுத்திக் கூறினும் அவை அகப்பகையும் புறப்பகையும் போலப் பிரிந்து நில்லாது அகங்கையும் புறங்கையும் போல ஒன்றியே நிற்கும் (தமி.வ.115).

puṟam, a side, especially the outside, the exterior, the back e.g., *appuṟam*, that side; *ippuṟam*, this side; adjectivally puṟattu, external; adverbially puṟambāga (puṟam-b-āga), externally; as a verbal theme puṟappaḍu (pura-(p)-paḍu), to set out; Can pora-ge, outside; pora-ḍu, to set forth. There is, doubtless, an ulterior connection between puṟa-m, the outside, externally, and piṟa, other, after; yet they are not to be regarded as one and the same word; and puṟam has affinities of its own, as well as meanings of its own. Comp.Greek para, beside, in which one of the meanings of the Dravidian word appears, whilst the meaning of 'side' is not conveyed by the relative Sanskrit para. Comp. especially the Latin *foris* abroad; *forum*, a public place; fori, the decks of a ship, with the Canarese *pora*, outside, This seems a more natural derivation of *foris* than the Greek *thura*, Sans, *dvāra*, a door, a word which I have compared with the Dravidian *tiṟa*, to open, In the

Dravidian languages f is unknown, and, p is always used instead. (CGDFL. 599,600)

**புறம்²** *puṟam,* பெ. (n.) **1.** உடம்பு; body. '*பைம்புறப் படுகிளி*' (ஐங்குறு.260.). **2.** மதில் (பிங்.); fortification. **3.** மருதநிலத்தூர் (சூடா.); village or town in agricultural tract.

*[ பின் → பிறம் → புறம் = மருத நிலத்திற்குப் புறம்பான முல்லை, முல்லையடுத்த குறிஞ்சி. (மு.தா.295)]* உயிர் உள்ளிருப்பது; உயிர் குடியிருக்கும் உடம்பு வெளியிருப்பது என்னும் பொருளைக் குறிக்கும் வகையிலேயே புறம் உடம்பைக் குறித்தது. பின் புறமாக அமைந்த கோட்டை, காப்புள்ள ஊர் என்னும் வகையில் மருத நிலத்தூரைக் குறித்தது.

**புறம்காட்டு–தல்** *puṟam-kāṭṭu-,* 15 செ.கு.வி (v.i.) *புறங்காட்டு¹–தல்* பார்க்க; see *puṟaṅkāṭṭu-,*

ம. புறம்காட்டுக.

*[ புறம் + காட்டு–, ]*

**புறம்படி** *puṟam-paḍi,* பெ. (n.) நகரின் புறப்பகுதி; outskirts of a town. 'தஞ்சாவூர்ப் புறம்படி' (S.I.I.ii.124).

**மறுவ.** ஊர் ஒதுக்குப்புறம்

*[ புறம் → புறம்படி ]*

**புறம்பணை¹** *puṟam-paṇai,* பெ. (n.) **1.**முல்லைநிலம்; pastoral tract. **2.** குறிஞ்சிநிலம்; hilly tract.

*[ பின் → பிறம் → புறம் = மருத நிலத்திற்குப் புறம்பான முல்லை, முல்லையடுத்த குறிஞ்சி. புறம் → புறம்பு → புறம்பணை = முல்லை, குறிஞ்சி. (மு.தா.295) ]*

**புறம்பணை²** *puṟam-paṇai,* பெ. (n.) நகர்ப்புறமாகிய மருத நிலம்; agricultural region outside a town. '*புறம்பணை யிம்பு மோசை*' (சீவக.85.).

*[ புறம் → புறம்பு → புறம்பணை (மு.தா.295)]*

**புறம்பணையான்** *puṟampaṇaiyāṉ,* பெ. (n.) ஊர்க்கு வெளியேயிருப்பவன், ஐயனார்; Aiyaṉār, as having His abode outside the village. 'புறம்பணையான் வாழ்கோட்டம்' (சிலப்.9, 12.).

**மறுவ.** காரி, புறத்தவன், கடல்வண்ணன், சாத்தா, பூரணைகேள்வன், புல்கலை மணாளன், மாசாத்தன், செண்டாயுதன், வெள்ளையானையூர்தி, அறத்தைக் காப்போன்

*[புறம்பணை+ ஆன்]*

**புறம்பர்** *puṟambar,* பெ. (n.) புறப்பக்கம்; outside. '*புறம்பரெய்தி*' (பாரத.திரௌபதிமா.65.)

*[புறம்பு + அர்]*

**புறம்பாக்கு–தல்** *puṟambākku-,* 12 செ.குன்றாவி. (v.t.) **1.** நீக்குதல்; to exclude. **2.** குலத்தி (சாதியி)னின்றும் நீக்குதல் (வின்.); to excommunicate.

**மறுவ.** தள்ளிவைத்தல்

*[ புறம் → புறம்பு + ஆக்கு–, ]*

**புறம்பு¹** *puṟambu,* பெ. (n.) **1.** வெளியிடம்; exterior, outside. '*பொங்கரில் வண்டு புறம்பலை சோலைகள்*' (பெரியபு.ஆனாய.7.). **2.** தனியானது (வின்.); that which is separate, detached, distrinct or exclusive. **3.** மற்றை; other **4.** முதுகு; back of a person. '*தன்னைப் புறம்பழித்து நீவ்*' (கலித்.51.).

க.ஹொரகு

*[ புறம் = வெளி, வெளிப்பக்கம், புறப் பொருள். புறம் → புறம்பு = வெளிப்புறம். (மு.தா.295) ]*

**புறம்பு²** *puṟambu,* பெ. (n.) பழைய வரிவகை; an ancient tax (S.I.I.iv,99).

**புறம்புக்குப்போ—தல்** *puṟambukku-p-pō-,* 8 செ.கு.வி. (v.i) மலங்கழித்தல் (வின்.); to go to stool.

மறுவ. வெளிக்குப்போதல்

*[ புறம்→புறம்பு = வெளிப்புறம். புறம்பு + போ—,]*

**புறம்புபண்ணு—தல்** *puṟambu-paṇṇu-,* 12 செ.குன்றாவி. (v.t.) **1.** தனியாக்குதல்; to set apart. **2.** *புறம்பாக்கு—தல்* பார்க்க; see *puṟambākku-,*

*[புறம் → புறம்பு + பண்ணு—,]*

**புறம்புல்கு—தல்** *puṟam-pulgu-,* 12 செ.குன்றாவி.(v.t.)பின்புறத்தைக் கட்டித்தழுவுதல்; to clasp or embrace a person from behind, as a child in play. '*என் குட்டன் வந்தென்னைப் புறம்புல்குவான்*' (திவ்.பெரியாழ்.1,9,1.).

*[ புறம் + புல்கு—, ]*

**புறம்பெறு—தல்** *puṟam-peṟu-,* 9 செ.குன்றாவி. (v.t.) (முதுகு காணுதல்) புறக்கொடையைப் பெறுதல்; lit, to see the back to gain victory over one's enemies. '*கொங்கு புறம்பெற்ற கொற்ற வேந்தே*' (புறநா.373.)

*[ புறம் + பெறு—, ]*

**புறம்பேசு—தல்** *puṟam-pēšu-,* 7 செ.கு.வி. (v.i.) (ஒருவர் இல்லாதபோது அவரைப்பற்றி) குற்றங்குறை சொல்லுதல், புறங்கூறுதல் (திவ்.பெரியாழ். 2,4,5, வ்யா. பக்.319); to back bite. அவர் என்னைப் பற்றிப் புறம் பேசித்திரிகிறார். (உ.வ.)

*[ புறம் + பேசு—,]*

**புறம்பொசி—தல்** *puṟam-poši-,* 3 செ.கு.வி. (v.i.) **1.** வெளியிற் கசிதல்; to ooze. **2.** வெளிப்படுதல்; to emerge. '*உட்கிடந்த வண்ணமே புறம்பொசிந்து காட்டிடே*' (குருபரம். தனிப்.)

*[ புறம் + பொசி—, ]*

**புறம்போ—தல்** *puṟam-pō-,* 9 செ.கு.வி. (v.i.) விட்டு நீங்குதல்; to quit, leave off. '*அறிவு புறம்போய*' (கல்லா.கண.துதி.)

*[ புறம் + போ—,]*

**புறம்போக்கு¹—தல்** *puṟam-pōkku-,* 8 செ.குன்றாவி. (v.t.) அகற்றுதல்; to remove, take away. '*பலகை புறம்போக்க*' (பெரியபு. ஏனாதி.37.)

*[ புறம் + போக்கு—, போகு— (த.வி.) போக்கு (பி.வி.) ]*

**புறம்போக்கு²** *puṟam-pōkku*, பெ. (n.) 1.குமுகாய(சமுதாய) நன்மை வேளாண்மைக்குத் தகுதியின்மை முதலிய காரணங்களினால் குடிகள்வசம் விடப் படாததும் தீர்வை வகுக்கப்படாததுமாகிய நிலம்; land exempt from assessment, either because it is set a side for communal purposes or because it is unclutivable (M.N.A.D.1,284.). 2. பொதுமகள்; public woman.(C.G.)

ம. புறம்போக்கு (வெளியூர் செல்லல், கூடுதல் செலவு)

*[ புறம் + போக்கு போ → போக்கு ]*

**புறம்போக்கு³** *puṟam-pōkku-*, பெ. (n.) தாய் தந்தை அற்றவர்; orphan. போடா புறம்போக்கு நாயே (உ.வ.).

*[ புறம் + போக்கு ]*

**புறம்போக்குநிலம்** *puṟam-pōkku-nilam*, பெ. (n.) பயிர்செய்யத் தகுதியற்றதும், தீர்வைக்குட்படுத்தப் பெறாததுமான அரசு நிலம்; not taxed barren land.

*[ புறம் + போக்கு + நிலம் ]*

**புறம்விடு—தல்** *puram-viḍu-*, 18 செ.குன்றாவி. (v.t.) விலக்கிவிடுதல்; to abandon. '*என்னைப் புறம்விடுத லென்னே பராபரமே*' (தாயு.பராபர.263.)

*[புறம் + விடு–,]*

**புறமட்டைநார்** *puṟa-maṭṭai-nār*, பெ. (n.) பனைமட்டையின் வெளிப்புறத்திலிருந்து எடுக்கும் மட்டமான நார்வகை; fibre on the outer side of the palmyra leaf stalk, considered inferior.

*[ புறமட்டை + நார் ]*

**புறமடை** *puṟa-maḍai*, பெ. (n.) 1. வெளி வாய்க்கால்; outside channel. 2. மதகின் வெளிப்புறம்; outlet of a channel. '*புறமடை யடைப்பதாற் பயனில்லை*' 3. வெளிமடை; the outside of a sluice. 4. கோயிற் புறத்துள்ள சிறு தெய்வங்கட்கு இடும் படைப்பு (வின்.); offering of flesh and spirits, made to ferocious deities, outside a temple opp.to uṇmaḍai.

*[ புறம் + மடை. மடு → மடை ]*

**புறமதில்** *puṟa-madil*, பெ. (n.) கோட்டையின் வெளிமதில் (பதிற்றுப்16,உறை); outer wall of a fortified town.

ம. புறமதில்

*[ புறம் + மதில் ]*

**புறமதிற்சேரி** *puṟa-madiṟ-cēri*, பெ. (n.) புறஞ்சேரி பார்க்க; see *puṟañcēri*. '*புறமதிற்சேரியுங் குறுகுதற் கரிதா*' (பெருங். உஞ்சைக்.47,72).

*[ புறம் + மதில் + சேரி. சேர் → சேரி]*

**புறமயிர்** *puṟa-mayir*, பெ. (n.) உடலின் மயிர் (வின்.); hair on the body.

*[ புறம் + மயிர்]*

**புறமலை** *puṟa-malai*, பெ. (n.) பக்கமலை; sistering hill. '*மாலிருஞ் சோலைப் புறமலைசார*' (திவ்.திருவாய், 2,10,5.)

ம. புறமல

*[ புறம் + மலை ]*

**புறமறி–தல்** *pur̤a-mar̤i-,* 2 செ. குன்றாவி. (v.t.) வெளியிலிருந்து உணர்தல்; to feel (a thing from being outside). '*மிக்கோய் இதனைப் புறமறிப் பாராய்*' (மணிமே.4,121.).

*[ புறம் + அறி–, ]*

**புறமறிப்பார்–த்தல்** *pur̤amar̤i-p-pār-,* 4 செ.குன்றாவி.(v.t.) (உட்பக்கத்தை வெளிப்புறமாகத் திருப்பிப் பார்த்தல்) நன்கு ஆராய்தல்; to examine closely, as by turning inside out. '*மக்கள் யாக்கையிதுவென வுணர்ந்து மிக்கோ யிதனைப் புறமறிப்பாராய்*' (மணிமே.4,121.).

*[ புறம் + மறி + பார்–, ]*

**புறமறிவு** *pur̤am-ar̤ivu,* பெ. (n.) பிறர்க்கு நன்மை நினைக்கை (வின்.); regard for the welfare of other, benevolence.

*[ புறம் + அறிவு. அறி → அறிவு ]*

**புறமறை–த்தல்** *pur̤a-mar̤ai-,* 4 செ.குன்றாவி. (v.t.) வெளித்தோன்றாமல் மறைத்தல்; to canceal, hide. '*கையாற் றொழுக்கங் கொண்டு புறமறைத்து*' (மணிமே.23,22.).

*[ புறம் + மறை–, ]*

**புறமனை** *pur̤a-manai,* பெ. (n.) மேலோர் வாழும் ஊர்க்குடியிருப்புக்கு வெளியிலுள்ள மனையிடம்; house-site outside the quarters of the higher castes, opp.to uṉmaṉai. (C.G.)

*[ புறம் + மனை ]*

**புறமாக** *pur̤amāga,* வி.எ. (adv.) 1. பக்கமாய்; in the direction of, towards. தாமதமாக வந்தவர்கள் ஒரு புறமாக நின்றனர். (உ.வ.) 2. வெளிப்படையாய்; clearly.

*[ புறம் → புறமாக ]*

**புறமாறு[1]–தல்** *pur̤a-mār̤u-,* 11 செ.கு.வி. (v.i.) 1. இடம்மாறுதல்; to migrate, change place. '*கொங்குண வண்டிற் பெயர்ந்து புறமாறி*' (ஐங்குறு.226.). 2. வலிமையிழத்தல்; to lose vigour or strength. '*இரப்பவ னெஞ்சம்போற் புல்லென்று புறமாறி,*' (கலித்.120,5.).

*[ புறம் + மாறு–, ]*

**புறமாறு[2]–தல்** *pur̤amār̤u-,* 11 செ.குன்றாவி. (v.t.) கைவிடுதல்; to abandon, desert. 'அருள் புறமாறிய' (கலித்.15).

*[ புறம் + மாறு–, ]*

**புறமானம்** *pur̤amāṉam,* பெ. (n.) மேலெல்லை; upper limit. இந்த அஸ்தைர்யத்திலும் உள்மானம் புறமான மொழிய நித்யராயிருப்ப ரொருவருமில்லை (திவ்.திருச்சந்.66,வ்யா.பக்.191).

*[ புறம் → புறமானம். மானம் = அளவு, எல்லை ]*

**புறமுதுகிடு–தல்** *pur̤amudugiḍu-,* 20 செ.கு.வி. (v.i.) *புறமுதுகுகாட்டு–தல்* பார்க்க; see *pur̤amudugu kāṭṭu-,*

*[ புறமுதுகு + இடு–,'இடு' து.வி. ]*

**புறமுதுகுகாட்டு–தல்** *pur̤amudugu-kāṭṭu-,* 15 செ.கு.வி. (v.i.) (போரில் எதிர்த்து நிற்காமல் கோழைத்தனமாக) திரும்பிச் செல்லுதல், பின்வாங்குதல்; to back track (from battle). போர்க்களத்தில் செத்துமடிவோம்; புற முதுகுகாட்ட மாட்டோம் என்பதுதான் மறவர்களின் சூளுரை (உ.வ.).

*[ புறமுதுகு + காட்டு–, ]*

**புறமுழவு** *pur̠a-mul̠avu,* பெ. (n.) அதமத் தோற்கருவி (சிலப்.3,27,உரை); a kind of inferior drum, as kaṇa-p-par̠ai, etc.

*[புறம் + முழவு. முள் → முழு → முழா = திரட்சி, மத்தளம். முழா → முழவு ]*

**புறமூலம்** *pur̠a-mūlam,* பெ. (n.) முளை வெளித்தோன்றும் மூலநோய் வகை; external piles (M.L.).

*[ புறம் + மூலம் ]*

**புறமேழி** *pur̠amēl̠i,* பெ. (n.) பொத்தாறு இல்லாமல் பயன்படுத்தும் மேழி; plough share without shaft.

*[ புறம் + மேழி ]*

**புறமொழி** *pur̠a-mol̠i,* பெ. (n.) புறங்கூற்று; backbiting, slander. '*நிம்பிரி கொடுமை வியப்பொடு புறமொழி*' (தொல்.பொ.274.).

*[ புறம் + மொழி]*

**புறவடி** *pur̠a-vaḍi,* பெ. (n.) பாதத்தின் மேற்புறம்; upper surface of the foot, instep. '*யாமயாழ் மழலை யாடன் புறவடிக் கிழுக்க மன்னோ*' (கம்பரா.நாடவி.34.).

**ம.** புறவடி

*[ புற(ம்) + அடி ]*

**புறவடை** *pur̠avaḍai,* பெ. (n.) 1. கிணற்றிறவையால் வேளாண்மை செய்யப்படும் நன்செய்த்தாக்கு; plot of wet land cultivated mainly by lift irrigation.(C.G.) 2. குடிவாரத்துக்கு அடைத்த நிலம்; field let to a tenant for cultivation. (R.T.)

**மறுவ.** ஈடுகாட்டி, அடைமானம்

*[ புறவு + அடை ]*

**புறவண்டை** *pur̠a-v-aṇḍai,* பெ. (n.) பின்புறம்; back, behind. '*புறவண்டை வந்து பிடித்தார்கள்*'

**மறுவ.** புறத்தாலே

*[ புற(ம்) + அண்டை ]*

**புறவணி** *pur̠avaṇi,* பெ. (n.) *புறவு[1], 3,4. (பிங்.)* பார்க்க; see *puravu[1],* 3,4

*[ புறவு + அணி. அண் → அணி]*

**புறவம்[1]** *pur̠avam,* பெ. (n.) 1. *புறவு–1,3,4. (பிங்.)* பார்க்க; see *pur̠avu- 1,3,4,* "*நறைவிரி புறவம்*" (கம்பரா.நாட்டுப்.48.). 2. சீர்காழி (தேவா.); Shiyali. 3. தோல் (அக.நி.); skin.

*[ புறம் → புறவு → புறவம் ]*

தமிழ்ச்சொற்கள் பல இன்னோசைபற்றி 'அம்'ஈறு பெறுதல் பெரும்பான்மை எ–டு. தூண்–தூணம்; கால்–காலம்; குன்று–குன்றம்; நெஞ்சு–நெஞ்சம்; கண்டு–கண்டம் (இலக்.கட்31).

**புறவம்[2]** *pur̠avam,* பெ. (n.) *புறா* பார்க்க; see *pur̠ā.* '*கானுறை புறவ மெல்லாம்*' (சீவக.1430.).

*[ புறம் → புறவு = முல்லை, குறிஞ்சி. புறம் → புற = முல்லை நிலப்பறவை வகை. புற → புறா → புறவு → புறவம் (மு.தா.295) ]*

**புறவயம்** *pur̠a-vayam,* பெ. (n.) வெளி உலகைச் சார்ந்து அமையும் தன்மை; external. '*புறவயமான தூண்டுதல்களும் அகவயமான தூண்டுதல்களும் ஒருங் கிணைந்து ஓர் எழுத்தாளனை எழுத வைக்கின்றன*' (உ.வ.).

*[ புறம் + வயம் ]*

**புறவயிரம்** *pur̠a-vayiram,* பெ. (n.) மரத்தின் வெளிவயிரம் (வின்.); the hard outer part of an exogenous tree.

*[ புறம் + வயிரம்]*

**புறவரி** *pur̠a-vari,* பெ. (n.) தலைவனுடன் அணையாது தலைவி புறத்தே நின்று நடிக்கும் நடிப்பு; dance of a woman coldly neglecting the company of her lover. "புறத்து நின்றாடிய புன்புற வரியும்" (சிலப்.8,93.).

*[ புறம் + வரி ]*

**புறவழி** *pur̠a-vaḻi,* பெ. (n.) பின்பக்கம்; backside. '*வீட்டின் புறவழிச் சுவர்*'.

**மறுவ.** புறவடை, புழக்கடை, கொல்லைப்புறம், பொறவடை

*[ புறம் + வழி ]*

**புறவழிச்சாலை** *pur̠avaḻi-c-cālai,* பெ. (n.) நகரம், ஊர் முதலியவற்றினுள் நுழையாமலே அவற்றைக் கடந்து செல்லும் வகையில் அவற்றின் வெளி எல்லையை ஒட்டி அமைக்கப்பட்டிருக்கும் நெடுஞ்சாலை; by pass road.

*[ புறவழி + சாலை ]*

**புறவளையம்** *pur̠a-vaḷaiyam,* பெ. (n.) கண்ணோவு முதலியவற்றுக்கு இடும் மருந்துவகை (வின்.); a medicinal unguent for sore eyes, etc.,

**க.** கொர வளெய (சுற்று, சூழல்,வட்ட வடிவமாதல்)

*[ புறம் + வளையம். வள் → வளை → வளையம் ]*

**புறவாய்** *pur̠avāy,* பெ. (n.) வெளிப்புறம்; that which is outside, exterior. "அருகு நின்றவர்களின் முகத்திலே அப்பூச்சியென்று கண்ணினிமையை அகவாய் புறவாயாகப் புரட்டி விழித்து" (திவ்.பெரியாழ்.2,4,6, வ்யா.பக்.320).

*[ புறம் → புற + வாய். வாய் = இடம். ]*

**புறவாயம்** *pur̠a-v-āyam,* பெ. (n.) பணமாகத் தண்டப்படும் செக்கிறை முதலாய சில்லறை வரிகள்; revenue from external sources, collected mainly in cash. '*வடகண்டத்திலும் கமுகடியிலும் வந்த புறவாயங்களால்*' (S.I.I.ii,121.)

*[ புற(ம்) + ஆயம் ]*

**புறவாயில்** *pur̠a-vāyil,* பெ. (n.) வெளிவாசல் (வின்.); outer door, gate or entrance.

**ம.** புறவாயி, புறாயி (தாழ்வாரம்); **து.** பொரப்படி

*[ புறம் + வாயில் ]*

**புறவாரி** *pur̠a-vāri,* பெ. (n.) தாய்ச்சுவரைக் கடந்து வெளியில் நீண்டுள்ள கூரை (கொ.வ.); eaves.

**மறுவ.** இறப்பு, இறவாரம், இறவாணம் சாக்கை.

*[ புறம் → புறவாரி]*

**புறவாலி** *pur̠avāli,* பெ. (n.) மலங்கழிக்குமிடம்; latrine, privy. (C.G.)

*[ புறம் → புறம்பாய் → புறவாய் → புறவாயி → புறவாலி. வெளிக்குச் செல்லுதல், வெளிக்குப் போதல், கொல்லைக்குப் போதல் போன்று அவையல் கிளவியாய் ஆளப்பட்டது புறவாலி. புறவிடை வீட்டுக் கொல்லையைக் குறிப்பது ஒப்பு நோக்கத்தக்கது]*

**புறவாழி** *pu<u>r</u>a-v-ā<u>l</u>i*, பெ. (n.) பெரும்புறக்கடல்; the outermost ocean surrounding the seventh annular continent, *'பின்னப் படுத்திப் புறவாழி வரல்போல்'* (இரகு.திக்கு.38.).

*[பிற(ம்) + ஆழி]*

**புறவிசிவுச்சன்னி** *pu<u>r</u>a-v-iśivu-c-can<u>n</u>i*, பெ. (n.) *புறவீச்சு*(வின்.)பார்க்க; see *puraviccu*.

*[புறம் + இசிவு + சன்னி]*

Skt. san-ni-pāta › த. சன்னி

**புறவிடுதி** *pu<u>r</u>a-vidudi*, பெ. (n.) *பிறவிடுதி* (யாழ்ப்.) பார்க்க; see *piravidudi*

*[பிறவிடுதி → புறவிடுதி]*

**புறவிடை**[1] *pu<u>r</u>a-vidai*, பெ. (n.) பிரிதற்குப் பெறும் விடை; permission to leave. *'கசிந்து தாழ்ந்தனன் புறவிடை கொண்டான்'* (காஞ்சிப்பு.பன்னிரு.142.).

*[புற(ம்) + விடை]*

**புறவிடை**[2] *pu<u>r</u>a-vidai*, பெ. (n.)வீட்டுக் கொல்லை; back-yārd of a house. Cm.

*[புற(ம்) + இடை]*

**புறவிதழ்** *pu<u>r</u>a-vida<u>l</u>*, பெ. (n.) பூவின் வெளிப்புறத்துள்ள இதழ்; sepal of a calyx, external petal.

மறுவ. புல்லி.

க. கொரசொப்பு
...

*[புற(ம்)+ இதழ்]*

**புறவிரல்** *pu<u>r</u>a-viral*, பெ. (n.) விரலின் வெளிப்பக்கம்; out side of a finger. *'வீக்கின நரம்பை அகவிரலாலும் புறவிரலாலும் கரணஞ் செய்து'* (சீவக.657,உரை.)

*[புறம் + விரல். விரி → விரல்]*

**புறவீச்சு** *pu<u>r</u>a-viccu*, பெ. (n.) *புறவீச்சுச் சன்னி* (வின்.) பார்க்க; see *pu<u>r</u>a-viccu-c-can<u>n</u>i*.

*[புறம் + வீச்சு]*

**புறவீச்சுச்சன்னி** *pu<u>r</u>a-viccu-c-can<u>n</u>i*, பெ. (n.) இசிவுநோய் வகை (வின்.); lockjaw, tetanus.

*[புறவீச்சு + சன்னி]*

Skt. san-ni-pāta › த. சன்னி

**புறவீடு** *pu<u>r</u>a-vidu*, பெ. (n.) 1. யாத்திரைக்குமுன் நன்முழுத்தத்தில் அரசுச் சின்னத்தைப் புறத்தே அனுப்புகை; sending the royal equipage in advance at an auspicious hour, before a king's journey. *'வாளைப் புறவீடு விட்டது'* (பு.வெ.3,4, கொளு, உரை.) 2. *பிறவிடுதி* பார்க்க; see *pi<u>r</u>avidudi* *'திருமாளிகையிலே புறவீடு விட்டிருக்கிற வளவிலே'* (திவ். பெரியாழ்,4,7.வ்யா.995.).

*[புறம் + வீடு. விடு → வீடு.]*

**புறவீதி** *pu<u>r</u>a-vidi*, பெ. (n.) 1. நகரின் வெளிவீதி; street outskirting a town. *'இவர் புற வீதிமகளிராய் முற்கூறிய கடைகழி மகளிர்'* (சிலப்.14,118, உரை). 2. கோயில் முதலியவற்றின் வெளிவீதி (வின்.); outer court of a temple, etc.

*[புறம் + வீதி]*

# புறா வகைகள்



பச்சைப் புறா



நீலமலைப் புறா



புள்ளிப் புறா



கள்ளிப் புறா



மத்திப் புறா



பஞ்சவர்ணப் புறா

**புறவு**[1] *puṟavu,* பெ. (n.) 1. காடு; forest. '*உதிர்த்த மலர்வீழ் புறவின்*' (பெரும்பாண்.496.) 2. சிறுகாடு; jungle. '*புறவே......மள்ளர் மேன*' (பதிற்றுப்.13,20.). 3. முல்லை நிலம்; forest tract. '*தன்புற வணிந்த*' (குறுந்.404.). 4. குறிஞ்சிநிலம் (சூடா.); hilly tract. 5. வேளாண்மை நிலம்; cultivable land '*கண்மாய்ப் புறவு*'. 6. முல்லைக் கொடி; eared jasmine. '*நின்னுத னாறு நறுந்தண் புறவின்*' (ஐங்குறு.413.).

ம. பிறாவு, ப்ராவு.

*[ புறம் = மருதநிலத்திற்குப் புறம்பான முல்லை, முல்லையடுத்த குறிஞ்சி. புறம் → புறவு = முல்லை, குறிஞ்சி (மு.தா.295) ]*

**புறவு**[2] *puṟavu,* பெ. (n.) புறா; dove, pigeon, '*புன்புறப் புறவின் கணநிரை*' (பதிற்றுப்.39,11.).

*[ புறம் = மருதநிலத்திற்குப் புறம்பான முல்லை. புறம் → புற = முல்லை நிலப்பறவை வகை. புற → புறா → புறவு(மு.தா.295) ]*

**புறவுரு** *puṟa-v-uru,* பெ. (n.) உடம்பினுறுப்பு; limb of the body, '*ஓரணு புற்கலம்புறவுரு வாகும்*' (மணிமே.27,197.).

*[ புறம் + உரு. புறம் = உடம்பு]*

**புறவுரை** *puṟa-v-urai,* பெ. (n.) பாயிரம் (நன்.பொது.2.); preface.

*[ புறம் + உரை. ]*

நூல்சொல்லிய பொருளில்லாதவற்றைச் சொல்வது புறவுரை.

**புறவெட்டி** *puṟa-veṭṭi,* பெ. (n.) பழைய வரிவகை; an ancient tax (S.I.I.viii,*139*)

*[ புறம் + வெட்டி. வெட்டு → வெட்டி]*

**புறவெட்டு** *puṟa-veṭṭu-,* பெ. (n.) 1. மரத்தில் வெட்டும் மேல்வெட்டு; cut on the surface of timber. 2. அறுத்த மரத்துண்டின் மேற்பற்றை (வின்.); outside plank or piece of a sawn timber. 3. எதிர்ப்பேச்சு (யாழ்ப்.); contemptuous opposition or contradicition.

*[ புற(ம்) + வெட்டு]*

**புறன்**[1] *puṟaṉ,* பெ. (n.) 1 *புறம்* பார்க்க; see *puṟam.* 2. பழிச்சொல்; slander. '*கேளாம் புறன்*' (சி.போ.அவையடக்.9.).

*[ பின் → பிற்கு. பிறம் → பிறவு → பிறகு = முதுகு. பிறகு → பிறக்கு = முதுகு. புறம் → புறம் → புறன் (மு.தா.294) = (பின்னால்) பழிக்கும் சொல் ]*

**புறன்**[2] *puṟaṉ,* வி.எ. (adv.) காணாத போது; behind one's back. 'புறனழீஇப் பொய்த்து நகை' (குறள்,182).

*[ பின் → பிற்கு. பிறம் → பிறவு → பிறகு = முதுகு. பிறகு → பிறக்கு = முதுகு. பிறம் → புறம் → புறன் (மு.தா.294) = முதுகுக்குப் பின்னால் ]*

**புறன்**[3] *puṟaṉ,* பெ. (n.) மறுதலையானது, எதிரானது; that which is opposite. வஞ்சிதானே முல்லையது புறனே (தொல். பொரு. 6).

*[ புறம் → புறன். வெட்சி – குறிஞ்சி, வஞ்சி – முல்லை, உழிஞை – மருதம், தும்பை – நெய்தல், வாகை – பாலை, காஞ்சி – பெருந்திணை, பாடாண் –கைக் கிளை என ஏழு அகத்திணைகளுக்கு ஏழு புறத்திணைகளைப் புறனாக (மறுதலைகளாக)க் கொள்வது மரபு. ]*

**புறனடை** *puṟaṉaḍai,* பெ. (n.) *புறனடை நூற்பா* (நன்.20.) பார்க்க,; see *puṟaṉaḍai nūṟpā.*

*[புறன் + அடை. புறத்து அடையாய் வருவது புறநடை. வேறு விதமாகிய நடக்கையெனினும் பொருந்தும் என்பார் ஆறுமுகநாவலர் (நன்.20.)]*

முன்பு கூறப்பட்ட நடைமுறைக்குப் புறனாகக் கூறுதல். நடைப்புறன் என்பதன் இலக்கணப் போலியே புறனடையாகும்.

**புறனடைச்சூத்திரம்** *puṟaṉaḍai-c-cūttiram,* பெ. (n.) *புறனடை நூற்பா* பார்க்க; see *puṟaṉaḍai- nūṟpā.*

*[புறனடை + சூத்திரம்]*

Skt. sūtra › **த.** சூத்திரம்.

**புறனடைநூற்பா** *purabaḍai-nūṟpā,* பெ. (n.) வகுத்தவற்றுள் அடங்காதனவற்றை அமைத்துக் காட்டும் பொது நூற்பா **(சீவக.39, உரை.)**; general permissive rule, sanctioning grammatical forms, not specifically dealt with.

*[புறனடை + நூற்பா. நூல் + பா–நூற்பா]*

**புறனண்டை** *puṟaṉaṇḍai,* பெ. (n.) பின்புறம்; hind part, rear, back.

*[பிறம் → புறம்→புறன்→புறனண்டை (மு.தா.294.)]*

**புறனழி–த்தல்** *puṟaṉ-aḻi-,* 4 செ.குன்றாவி. (v.t.) புறங்கூறுதல்; to defame, slander. '*புறனழீஇப் பொய்த்து நகை*' (குறள்,182).

*[புறன் + அழி–,]*

**புறனிலை** *puṟnilai,* பெ. (n.) பின்னிலை (அகநா.32.); hanging on a person in expectation of a favour.

*[புறன் + நிலை. பின் → பிற்கு. பிறம் → பிறவு → பிறகு. பிறம் → புறம் → புறன்]*

**புறனுரை** *puṟan-urai,* பெ. (n.) **1.** பழிச்சொல்; slander. '*பொல்லான் றிரைந்தானென்னும் புறனுரை*' **(திவ்.பெரியதி.6,4,7.) 2.** வெற்றுரை; meaningless utterence '*புறனுரையே யாயினும்.....திறனுரையே சிந்தித் திரு*' **(திவ்.இயற்.1,41.)**

*[புறன் + உரை]*

**புறனே** *puṟaṉē,* வி.அ. (adv.) பின்பு, பிந்தி, பிறகு; after, afterwards, subsequently.

*[பிறம் → புறம் → புறன்→ புறக்கடை = வீட்டின் பின்பக்கம். புறன் → புறனே (மு.தா.294)]*

**புறனோக்கு–தல்** *puṟaṉōkku-,* 5 செ.கு.வி. (v.i.) ஒருவன் நீங்கும் அற்றம் பார்த்தல்; to watch for one's absence. '*புறனோக்கிப் புன்சொலுரைப்பான் பொறை*' (குறள்,189.)

*[புறம் + நோக்கு–,]*

**புறா** *puṟā,* பெ. (n.) வீட்டுப்பறவையாக வளர்ப்பதற்கு ஏற்றதான பல வகைகளில் காணப்படும் காட்டுப் பறவைவகை; dove, pigeon. '*மாமணிப்புறா*' **(சீவக.70.)**

**ம.** பிறாவு, ப்ராவு; **க.**கொரசு (ஒருவகைப் புறா); **து.** புத; **கோண்.**புரா், புரா்; **கொண்.** பொர்ரொக; **குரு.** புர்ரா; **மால.**புரெ;

*[புறம் →புற = முல்லைநிலப் பறவை வகை. புற → புறா]*

புறாவகைகள்

1. ஐநிற(பஞ்சவா்ண)ப் புறா (emerald dove)
2. கள்ளிப் புறா (eurasian coloured dove)
3. சாம்பல் நெற்றிப்புறா (pompadour green pigeon)

4. சிறிய தவிட்டுப்புறா (little brown dove)
5. தவிட்டுப் புறா (red coloured dove)
6. நீலகிரி காட்டுப்புறா (Nilgiri wood pigeon)
7. பச்சைப்புறா (yellow legged green pigeon)
8. புள்ளிப்புறா (spotted dove)
9. பெரிய பச்சைப்புறா (green imperial pigeon)
10. மந்திப்புறா (mountain imperial pigeon)
11. மாடப்புறா (blue rock pigeon)



**புறாக்காலி** *puṟā-k-kāli,* பெ. (n.) பூடுவகை (வின்.); a kind of plant.

*[புறா + காலி. கால் → காலி]*

**புறாக்குஞ்சு** *puṟā-k-kuñju,* பெ. (n.) இளம்புறா; dove let.

*[ புறா + குஞ்சு. குள் → குய் → குய்ஞ்சு → குஞ்சு ]*

**புறாக்கூட்டுவண்டி** *puṟā-k-kūṭṭu-vaṇḍi,* பெ. (n.) ஒருவகைப் பெட்டி வண்டி (இ.வ.); box-bandy, bullock cart on spring as resembling a dovecote.

*[ புறா + கூட்டு + வண்டி ]*



**புறாக்கூட்டுவேலை** *puṟākūṭṭu-vēlai,* பெ. (n.) கட்டடவேலைவகை (இ.வ.); honeycomb work.

*[ புறா + கூட்டு + வேலை ]*

**புறாக்கூடு** *puṟā-k-kūḍu,* பெ. (n.) 1. புறாக்கள் வசிக்குமாறு கட்டப்பட்ட கூண்டுகள் dovecote, pigeon-house. 2. பேழை (அலமாரி) முதலியவற்றில் புறாக்கூடுபோற் செய்யப்பட்ட சிற்றறை (இக்.வ.); pigeon hole, as in a desk or bureau.

*[ புறா + கூடு. கூண்டு → கூடு.]*

**புறாண்டு—தல்** *puṟāṇḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) பிறாண்டு; to scratch.

*[ பிறண்டு → புறாண்டு ]*

**புறாத்தலை** *puṟā-t-talai,* பெ. (n.) சிறியதலை; small head, as of a dove. *'புறாத்தலைவேடன்'* (சீவக.450)

*[புறா + தலை]*

**புறாப்பொறுக்கி** *puṟā-p-poṟukki,* பெ. (n.) பூடுவகை (சித்.அக.); a plant.

**புறாமாடம்** *puṟā-māḍam,* பெ. (n.) *புறாக்கூடு* பார்க்க; see *puṟā-k-kūḍu.*

*[ புறா + மாடம் ]*

**புறாமுட்டி** *purāmutti,* பெ. (n.) செடிவகை; parakeet-bur, a widespread weed.

**புறாமுட்டைச்சங்கு** *purā-muttai-c-cangu,* பெ. (n.) சங்கு வகை; kind of conch, resembles the egg of a dove.

*[ புறாமுட்டை + சங்கு ]*

**புறாய்** *purāy,* பெ. (n.) வேளாண்மைக்குரிய நிலவகை (செந்.xiii, 172.); a kind of arable land.

**புறாவால்** *purā-vāl,* பெ. (n.) பலகை முதலியவற்றை இணைக்கும் இணைப்பு வகை (இ.வ.); dovetail joint, as of plank, etc.

*[ புறா + வால் ]*

**புன்கண்** *pun-kan,* பெ. (n.) **1.** துன்பம் (பிங்.); sorrow, distress, trouble, affliction, sadness. *'புள்ளூறு புன்கண் தீர்த்தோன்'* (சிலப்.20,52.). **2.** நோய் (பிங்.); disease. **3.** மெலிவு (திவா.); leannes, emaciation. **4.** வறுமை; poverty, adversity. *'இரவலர் புன்கணஞ்சும்'* (பதிற்றுப்.57,14.). **5.** பொலிவழிவு; loss of beauty or charm. *'புன்கண்கொண் டினையவும்'* (கலித்.2.). **6.** அச்சம்; fear *'பிரிவஞ்சம் புன்கணுடைத்தால்'* (குறள்,1152.). **7.** இழிவு; meaness. "பொய்க்கரி புகலும் புன்கணார்" (கம்பரா. கிங்கர. 58).

*[ புல் → புன் → புன்கண். ]*

**புன்கண்மை** *punkanmai,* பெ. (n.) புன்கண் பார்க்க; see *punkan.* *'பொருள்வேண்டும் புன்கண்மை'* (கலித்.61.).

*[ புன்கண் → புன்கண்மை ]*

**புன்கம்**[1] *pungam,* பெ. (n.) சோறு; (திவா.) boiled rice. *'பாற்பெய் புன்கந் தேனொடு மயக்கி'*(புறநா.34.).

*[ புழு → புகு → புகா = (உட்புகும்) உணவு. புகா → புகவு = உணவு (வே.க.3.104). புகா → புங்கா → புங்கம் → புன்கம் = உணவு, சோறு ]*

**புன்கம்**[2] *pungam,* பெ. (n.) புன்கு; Indian beech. *'புன்கம் பொரியணிந்தன'* (சீவக.1649.)

*[ புன்கு → புன்கம் ]*

**புன்கம்பிண்ணாக்கு** *pungam-pinākku,* பெ. (n.) புன்கவிதையில் எண்ணெய் எடுத்த பிறகு உள்ள பயனற்ற சக்கை; oil cake of pungu seeds, as entirely useless. *'புன்கம் புண்ணாக்குக்குச் செக்கடித்தான்'*

*[ புன்கம் + பிண்ணாக்கு. பிள் + நாக்கு – பிண்ணாக்கு. புன்கம் விதைகளை எண்ணெயாட்டிய பின் எஞ்சிய சக்கை பிளவுபட்ட நாக்குபோல் இருப்பதால் பிண்ணாக்கு எனப்பட்டது.]*

**புன்காலி** *pun-kāli,* பெ. (n.) (பிங்.) **1.** காயா; iron-wood tree.trumpet flower tree. **2.** பாதிரி; yellow-flowered fragrant trumpet-flower tree.

*[ பொல் → பொலிவு. பொல் → பொன் → புன் → புன்காலி.]*

**புன்கு** *pungu,* பெ. (n.) மரவகை Indian beech. *'பொங்கர் வெண்பொரி சிந்தின புன்கு'* (சிலப்.12,பக்.318.). **2.** காட்டுப் புன்னை; Malabar poon. **3.** புரசு(திவா.); palas-tree. **4.** காட்டுப்பச்சிலை; rosewood. **5.** மரவகை; a species of privet, (Kādar.)



சாம்பல் நெற்றிப் புறா



மாடப் புறா



பெரிய பச்சைப் புறா



தவிட்டுப் புறா

ம. புங்ஙு; க. கொங்கெ; து. புங்கு

*[பொல் → பொன் → புன் → புன்கு.]*
புன்னை பார்க்க

**புன்கூர்¹-தல்** *pun-kūr-,* 3 செ.கு.வி. (v.i.) வருந்துதல்; to be distresed. *'வேட்கை மிகுதியான் வெய்துண்டு புன்கூர்ந்தார் போலவும்'* (தொல்.பொ.102,உரை.).

*[புல் + கூர்-,]*

**புன்கூர்²** *punkūr,* பெ. (n.) தஞ்சைமாவட்டத்தில் உள்ள ஊர்; a village in Tañjāvūr dt. 'காரேறும் எயிற் புன்கூர்' (பெரிய திருநாளை.).

*[பொல் → பொன் → புன் → புன்கு + ஊர். புன்கு = புங்கமரம். திருப்புன்கூர் என்று அடைசேர்த்து வழங்குதலும் உண்டு]*

**புன்கெண்ணெய்** *pungenney,* பெ. (n.) புன்கம் விதைகளிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய்; oil extracted from Indian-beech seeds.

*[புன்கு + எண்ணெய். எள் + நெய் - எண்ணெய்]*

**புன்சிரிப்பு** *pun-śirippu,* பெ. (n.) இளமுறுவல்; gentle smile. *'செம்பவள வாய்க்குள்ளே புன்சிரிப்பின் மார்க்கமோ'* (பணவிடு. 315).

மறுவ. இளநகை, புன்னகை, மென்னகை

ம. புஞ்சிரி

*[புன் + சிரிப்பு. 'புன்' அழியாமையை உணர்த்தும் முன்னொட்டு (த.வ. 1, 91)]*

**புன்செய்** *pun-śey,* பெ. (n.) 1. புன்செய்ப் பயிர் செய்வதற்கு ஏற்றநிலம் (பு.வெ. 12, வென்றி. 4.); land fit for dry cultivation only. 2. புன்செய்ப் பயிர்; dry crop.

ம. புஞ்ச; தெ. புஞ்ச (மேட்டுநிலம்); து. புஞ்சகண்ட(வயல்)

*['புல்' தாழ்வுப் பொருள் முன்னொட்டு (த.வ. 1, 93) புல் → புன் + செய் - புன்செய்]*

மருதத்திலுள்ள விளைநிலங்கள் செய் எனப்பெயர் பெற்றன. செடி கொடி, புற்களைதல், கல்லெடுத்தல், உரமிடுதல், பன்முறையுழுதல், கட்டியடித்தல் பரம்படித்தல் (பல்லியாடுதல்), புழுதியாக்குதல், காயவிடுதல் என்றும் பல வகையில் திருத்தப்பட்ட நிலம் செய் எனப்பட்டது. செய்தல் திருத்துதல் பேரளவாகத் திருத்தப்பட்டது நன்செய் என்றும் சிற்றளவாகத் திருத்தப்பட்டது புன்செய் என்னும் சொல்லப்பட்டன. (தமி.வ.1,37).

புனமாயினும் புன் செயாயினும் பண்டைத் தமிழர் மேட்டு நிலத்திற் பயிர் செய்ய விரும்பவில்லை. மேடு சுவல் என்றும் பள்ளம் அவல் என்றும் பெயர் பெறும். "மேட்டுப் புன்செயை உழுதவனும் கெட்டான் மேனி மினுக்கியை மணந்தவனும் கெட்டான்" என்பது பழமொழி. (ப.த.நா.ப. 88).

புன்செய் வேளாண்மையாயின் புழுதியுணக்கற்குப் பின்னும் களையெடுத்தற்கு முன்னும் நாற்றுப்பாவல், பாத்தி பிடித்தல், நீர் பாய்ச்சி நடுதல் ஆகிய வினைகள் நிகழும். (ப.க.நா.ப.82)

**புன்செய்க்காடு** *punśey-k-kāḍu,* பெ. (n.) பயிரிடத்தக்க புன்செய்; cultivable dry land (P.T.I.).

*[புன்செய் + காடு]*

**புன்செய்கை** *punśeygai,* பெ. (n.) புன்செய்ப் பயிரிடுகை (வின்.); raising dry crop.

[புன் + செய் – புன்செய் → புன்செய்கை ]

**புன்செய்ச்சாகுபடி** *punšey-c-cāgupaḍi,* பெ. (n.) *புன்செய்விளைச்சல்* பார்க்க; see *puncey-viḷaiccal.*

*[புன்செய் + சாகுபடி ]*

**புன்செய்த்தரநன்செய்** *punšey-t-tara-nanšey,* பெ.(n.) புன்செய்யாகக் கணக்கில் பதியப்பட்டு நன்செய் வேளாண்மை செய்யும் நிலம்; land on which wet crops are raised, though classed as dry. (C.G.)

*[புன்செய் + தரம் + நன்செய் ]*

**புன்செய்த்தானியம்** *pun-šey-t-tāniyam,* பெ. (n.) மேட்டுநிலத்தில் விளையுந்தவசம்; grains cultivated in the up land.

*[புன்செய் + தானியம் ]*

Skt.dhanya > த. தானியம்

**புன்செய்த்தோட்டம்** *punšey-t-tōṭṭam,* பெ. (n.) நெல்லொழிந்த தவசங்கள் விளையுந் தோட்டம்; garden land in which cereals other that paddy are grown. (P.T.L)

*[ புன்செய் + தோட்டம் ]*

**புன்செய்ப்பயிர்** *punšey-p-payir,* பெ. (n.) நெல்லொழிந்த மற்றைப்பயிர்கள்; dry crops, cereals.

*[ புன்செய் + பயிர் ]*

**புன்செய்ப்பருந்து** *punšey-p-parundu,* பெ. (n.) கழுகுவகை; dwarf eagle (M.M, 218).

*[ புன்செய் + பருந்து]*

**புன்செய்ப்புறம்போக்கு** *punšey-p-puṟampōkku,* பெ. (n.) அரசிற்குரிய பயிரிடப்படாத பொதுநிலம்; uncultivated goverment land.

*[ புன்செய் + புறம்+ போக்கு ]*

**புன்செய்பாகாயாத்தீர்வை** *punšey-pāgāyāt-tīrvai,* பெ. (n.) புன்செய்யில் தோட்டப்பயிரிடும் போது ஏற்படும் தீர்வை; assesment charged on garden-cultivation in lands classed as dry. (R.T.)

*[ புன்செய் + பாகாயா + தீர்வை. தீர் → தீர்வை ]*

**புன்செய்மேல்நன்செய்** *punšey-mēl-nanšey,* பெ. (n.) *புன்செய்த்தர நன்செய்* பார்க்க; see *punšey-t-tara-nanšey* (C.G.)

*[ புன்செய் + மேல் + நன்செய் ]*

**புன்செய்வரவுநன்செய்** *punšey-varavu-nanšey,* பெ. (n.) முதலில் புன்செய்யாக விருந்து பின்பு நன்செய்யாகப் பதிவான நிலம் (இ.வ.); land originally classed as dry and later reclassed as wet.

*[புன்செய் + வரவு + நன்செய் ]*

**புன்செய்விளைச்சல்** *puncey-viḷaiccal,* பெ. (n.) நெல்லொழிந்த ஏனையப் பயிர் வேளாண்மை; cultivation of cereals, other than paddy.

*[புன்செய் + விளைச்சல். விளை → விளைச் சல். 'சல்' தொ.பெ.ஈறு ]*

**புன்செயல்** *punšeyal,* பெ. (n.) இழி செயல்; low work.

*[ புன் + செயல். புல் = சிறுமை ]*

**புன்சொல்** *punšol,* பெ. (n.) பழித்துரை; slander. *'புறனோக்கிப் புல்சொ லுரைப்பான் பொறை'* (குறள், 189).

*[ புன் + சொல். புல் → புன் ]*

**புன்பயிர்** *pun-payir,* பெ. (n.) 1. *புன்செய்ப் பயிர்* பார்க்க;(S.I.I. ii, 247) see *punšey-p-payir* 2. குறைந்த (அற்ப) விளைவு; poor crop *'ஆடுதேள் புன்பயிராம்'* (சினேந். 112.).

*[ புன் + பயிர் ]*

**புன்புலம்** *pun-pulam,* பெ. (n.) 1. வெற்று நிலம்; waste land *'புன்புலத் தமன்ற சிறியிலை நெருஞ்சி'* (குறுந். 202.). 2. புன்செய் நிலம்; dry land. *'கானவைப்பிற் புன்புலத்தானே'* (குறுந். 183). 3. புல்லிய இடம்; arid, barren place. *'புன்புலக் களத்திடை'* (கம்பரா. முதற். 119.) 4. புல்லிய அறிவு; mean understanding. *'புன்புலத் தரக்கன்'* (கம்பரா. மகுட. 28.).

*[புன் + புலம் ]*

**புன்மக்கள்** *pun-makkal,* பெ. (n.) இழிந்தவர்; low, vulgar persons. *'வேறாய புன்மக்கள் பக்கம் புகுவாய் நீ'* (நாலடி. 266.).

*[ புன் + மக்கள். மக + கள் – மக்கள் ]*

**புன்மரம்** *pun-maram,* பெ. (n.) 1. புறவயிரமுள்ள மரம் (பிங்.); exogenous tree. 2. தென்னை (தைலவ. தைல.);coconut tree.

*[ புல் + மரம் ]*

**புன்மாலை** *pun-mālai,* பெ. (n.) புற்கென்ற மாலைக் காலம்; dim evening twilight. *'சிறுபுன் மாலை தலைவரின்'* (பு.வெ. 11, பெண்பாற். 3.).

*[ புன் + மாலை. மால் → மாலை = இரவும் பகலுங் கலக்கும் அந்திவேளை ]*

**புன்மானம்** *punmānam,* பெ. (n.) **புன்வானம்** பார்க்க; see *punvānam.*

*[ புன் + வானம் – புன்வானம் → புன் மானம் ]*

**புன்முருக்கு** *pun-murukku,* பெ. (n.) பூடுவகை (வின்.); a plant.

**புன்முறுவல்** *pun-muṟuval,* பெ. (n.) *புன்சிரிப்பு* பார்க்க; see *pun-širippu. 'நின்முகங் காட்டிப் புன்முறுவல் செய்து'* (திவ். நாய்ச் 2, 9.).

*[ புன் + முறுவல் ]*

**புன்முறுவல் செய்–தல்** *pun-muṟuval-šey-* , 1செ.கு.வி. (v.i) நகைமுகங் காட்டுதல்; to-smile.

*[ புன்முறுவல் + செய் ]*

**புன்மூரல்** *pun-mūral,* பெ. (n.) *புன்சிரிப்பு* பார்க்க; see *pun-širippu. 'புன்மூரல் தோன்றினாள்'* (சிவந்தெழுந்த பல்லவ. உலா. 276.).

*[புன் + மூரல் ]*

**புன்மை** *punmai,* பெ. (n.) 1. இழிவு; meanness, lowness, vileness. *'பகைமிக்க நெஞ்சத்தேம் புன்மை பாராட்டுவாய்'* (கலித். 118.). 2. தூய்மையின்மை (அசுத்தம்); unclean-

ness. *'புன்மை நாளும் புனிதமாம்'* (திருவாலவா. 37, 10.). 3. சிறுமை (கோயிற்பு. நட. 29.); smallness. 4. துன்பம்; affliciton, suffering. சிறுபுன்மாலை (முல்லைப். 6) 5. வறுமை; poverty. *'மாலை யன்னதோர் புன்மையும்'* (பொருந. 96.). 6. குற்றம் (பிங்.); fault.*'புன்மையில் காட்சி யவர்'* (குறள், 174.). 7. புகர்நிறம்(உரி.நி.); murkiness, tawny colour. 8. பார்வை மழுக்கம்; dimness of vision. *'புன்மையின் மிக்கன புதுமைக் கண்களே'* (துணிகைப்பு. வள்ளி. 97.).9. மறதி (சூடா.); forgetfulness, oblivion.

*[புல்லுதல் = துளைத்தல். புல் = உட்டுளை யுள்ள நிலைத்திணைவகை, சிறுமை. புல் + மை – புன்மை = சிறுமை. சிறுதன்மை (வே.க. 3, 101.)]*

**புன்வானம்** *pun-vāṉam,* பெ. (n.) விடியற் காலம் (வின்.); the grey of the morning gleam of day-break.

மறுவ. புலர்பொழுது.

*[புன் + வானம். புல் → புன் → புன்மை = ஒளிமழுக்கம் ]*

**புன்றலை** *puṉṟalai,* பெ. (n.) 1. சிறியதலை (கோயிற்பு.நட.29.); small head. 2. இளந்தலை; tender head, as of a child. *'புன்றலை மந்தி* (ஐங்குறு. 273.). 3. சிவந்த மயிருள்ள தலை; ruddy-haired head. *'புன்றலை யிரும்பரதவர்'* (பட்டினப். 90.).

*[ புன் + தலை. புல் → புன் → புன்மை = சிறுமை ]*

**புன்றுமி** *puṉṟumi,* பெ. (n.) தூறல் (யாழ்.அக.); drizzle.

*[ புன் + துமி ]*

**புன்றொழில்** *puṉṟoḻil,* பெ. (n.) தீச்செயல்; vicious deed, base or evil action. *'புன்றொழிற் குரங்கொடு புணரு நட்பனோ'* (கம்பரா. வாலிவதை. 25)

*[புன் + தொழில் ]*

**புன்னகை** *puṉṉagai,* பெ. (n.) *புன்சிரிப்பு* பார்க்க; see *puṉširippu*

மறுவ. இளநகை, மென்னகை

ம. புஞ்சரி.

*[ புன் + நகை. புல் = சிறுமை. புன்னகை = சிறுநகை. சிறுமையைக் குறிக்கும் 'புல்' நகையுடன் சேர்ந்து புன்னகை உருவாவது போல் தெலுங்கில் சிறுமையைக் குறிக்கும் சிறு நவ்வு (நகை)வுடன் சேர்ந்து சிறுநவ்வு (புன்னகை) சொல்லாட்சி உருவாயிருப் பதைக் காண்க.]*

**புன்னகைக்காட்டு–தல்** *puṉṉagai-k-kāṭṭu-,* 5, செ.கு.வி.(v.i) புன்முறுவல் செய்தல், நகை முகம் காட்டுதல்; to smile.

*[ புன்னகை + காட்டு–, ]*

**புன்னம்புலரி** *puṉṉampulari,* பெ. (n.) வைகறை; early dawn. *'புன்னம்புலரியி னிலப்பட'* (பரிபா. 6, 58.).

*[ புன் → புன்னம் + புலரி ]*

**புன்னறவம்** *puṉṉaṟavam,* பெ. (n.) இஞ்சி (யாழ்.அக.); ginger.

**புன்னறுவம்** *puṉṉaṟuvam,* பெ. (n.) சாரணை (மலை.); purslane leaved trianthema.

**புன்னாகம்**[1] *puṉṉāgam,* பெ. (n.) **1.** *புன்னை* (பிங்.) (பரிபா. **11, 16.**) பார்க்க; see *puṉṉai* **2.** குரங்குமஞ்சணாறி; kamela (L.). **3.** கோழிக்கீரை (மலை.); common purslane.

*[பொல் → பொன்→புன்→புன்னை→ புன்னாகம்] 'புன்னை' பார்க்க.*

punnāga, the tree rotleria tinctoria, from the blossoms of which a yellowish dye is prepared. Gt. (p. 518) is right in deriving the word from D.pon etc., gold cf. D. punnike, ponne etc., (KKED.xxiv)

punnāga, a tree from the flowers of which a yellow dye is prepared. Drav.pon, gold. (CGDFL.577)

**புன்னாகம்**[2] *puṉṉāgam,* பெ. (n.) *பூநாகம்*[1] (இ.வ.) பார்க்க; see *pūnāgam*[1].

*[பூநாகம் → புன்னாகம்]*

**புன்னாகவராளி** *puṉṉāgavarāḷi,* பெ. (n.) பண் (இராக) வகை; (mus.) a musical mode.

**புன்னாதர்** *puṉṉādar,* பெ. (n.) இழிந்த அறிவினர்; mean, stupid person. *'அல்லனவே யறைகின்ற புன்னாதர்கள்'* (சீவக. **3096.**).

*[புன் + ஆதர்]*

**புன்னிடா** *puṉṉiḍā,* பெ. (n.) தகரை (மலை.); fetid cassia.

**புன்னிலம்** *puṉṉilam,* பெ. (n.) பயனற்ற நிலை; barren land. *'புன்னிலத்திட்ட வித்து'* (சீவக. **2823.**).

*[புல் → புன் + நிலம்]*

**புன்னீர்** *puṉṉīr,* பெ. (n.) **1.** கழிவு நீர்; drainage. *'புன்னீர் விட்டு பாய்ச்சிக் கொள்வதாகவும்'* (S.I.I. iii. **46**). **2.** குருதி; (சங்.அக.); blood.

*[புல் → புன் + நீர்]*

**புன்னெறி** *puṉṉeṟi,* பெ. (n.) **1.** தீயவழி; bad ways. *'புனனெறி யதனிற் செல்லும்'* (கந்தபு. வள்ளி. மண். **262.**). **2.** பொய்ச்சமயம்; false religion. *'புன்னெறித் துன்னயத் தன்பிலாரொடு'* (திருநூற். **22.**).

*[புல் → புன் + நெறி]*

**புன்னை** *puṉṉai,* பெ. (n.) மரவகை; mast-wood. *'புன்னை வாலிணர்ப் படுசினை'* (பதிற்றுப். **30, 3**).

**ம.** புன்ன; **க.** புன்னிகெ, பொன்னெ, ஹொன்னெ; **தெ.** பொன்ன; **து.** பொன்னெ;

த.புன்னை > Skt punnāga

*[*பொன் → பொலி → பொலிவு. பொல் பொற்பு. பொல்லுதல் = அழகாதல், பொலிதல். பொற்ற =அழகிய,சிறந்த பொன்னாலான. பொல்→பொன். (தமி .வ.37)பொன்→ புன்→ புன்னை = பொலிவான பூக்களைத் தருவது*]*

**புன்னைவகைகள்**

1. சிறுபுன்னை, 2. சுரபுன்னை, 3. சோரைப் புன்னை

**புன்னைக்காயெண்ணெய்** *puṉṉai-k-kāy-eṇṇey,* பெ. (n.) *புன்னை யெண்ணெய்* பார்க்க see *puṉṉai-y-eṇṇey.*

*[புன்னைக்காய் + எண்ணெய்]*

**புன்னைக்கொட்டையெண்ணெய்** *puṉṉai-k-koṭṭai-y-eṇṇey,* பெ. (n.) *புன்னை யெண்ணெய்* பார்க்க; see *puṉṉai-y-eṇṇey.*

*[புன்னைக்கொட்டை + எண்ணெய் ]*

**புன்னையெண்ணெய்** *puṉṉai-y-eṇṇey,* பெ.(n.) புன்னை விதைகளிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய் (வின்.); domba oil, as extracted from puṉṉai seeds

*[ புன்னை + எண்ணெய் ]*

**புன்னைவனச்சம்பா** *puṉṉai-vaṉa-c-cambā,* பெ.(n.)சம்பா நெல் வகை;a kind of camba paddy. புன்னைவனச் சம்பாப் புழுகு சம்பா (நெல்விடு.183)

*[ புன்னை + வனம் + சம்பா ]*

Skt vana › த. வனம்

**புன்னைவனம்** *puṉṉai-vaṉam,* பெ. (n.) சங்கரநயினார் கோயில்; Sankara nayiṉār kōvil,a shrine scared to Sivaṉ. தேமேவு புன்னைவனஞ் சென்று தொழ (சங்கரலிங்கவுலா,18)

*[ புன்னை + வனம் ]*

Skt. vana › த. வனம்

**புனக்கவுல்** *puṉa-k-kavul,* பெ. (n.) முக்கால் திட்டம் வரிசெலுத்தும் கட்டளையுள்ள குத்தகையுடன் படிக்கை; cowle granted on condition that three-fourths of the normal assessment should be paid (R.T.)

*[ புனம் + கவுல் ]*

**புனக்கஞ்சி** *puṉa-k-kañji,* பெ. (n.) *புனப்பாகம்* பார்க்க; see *punap*-pāgam.

*[ புனம் + கஞ்சி ]*

**புனக்காடு** *puṉa-k-kāḍu,* பெ. (n.) மலைசார்பிற் காட்டையழித்து இரண்டொரு ஆண்டு உழுது விதைத்துப் பின் செடி கொடிகளை முளைக்கவிட்டு மறுபடியும் முன்போற் செய்யும் சாகுபடி; shifting cultivation on the hill; cultivation on the wooded slopes, the jungle being cleared and burnt, and the process being repeated after allowing the land to lie fallow until a fresh growth has re-established itself, dist. fr. uṟavakāḍu

ம. புனக்கண்டம்

*[ புனம் + காடு ]*

**புனக்காவல்** *puṉa-k-kāval,* பெ. (n.) திணைப்புனங் காக்கை; watching crops in the hills.

*[புனம் + காவல் ]*

**புனக்குளம்** *puṉa-k-kuḷam,* பெ. (n.) மழை நீர் தேங்கிநிற்கும் குட்டை; pool. *'பெரிய குளமும் புனக் குளங்களும்'* (S.I.I.v, 137.)

*[ புனம் + குளம். குல் → குள் → குளம் ]*

**புனகம்** *puṉagam,* பெ. (n.) உணவு; food. *'திருமுடிகட் கன்பாற் புனகமிட்டு'* (அரிசமய. பரகால. 150.)

*[ புன்கம் → புனகம் ]*

**புனத்துளசி** *puṉa-t-tuḷaši,* பெ. (n.) காட்டுத் துளசி (பிங்.); wild basil.

*[ புனம் + துளசி. துளவு = துளசி. துளவு → (துளசு) → துளசி ]*



**புனப்பாகம்** *puna-p-pāgam*,பெ.(n.) இருமுறை சமைத்த நீர்த்தன்மையான கட்டுப் பாடான உணவு;liquid diet or food, boiled twice to facilitate digestion.

*[ புனல் + பாகம் ]*

**புனம்** *punam*, பெ. (n.) மலைச் சார்பான கொல்லை; upland fit for dry cultivation. *'கானவன் சூடுறு வியன்புனம்'* (அகநா. 358.).

ம. புனம், புனக்கண்டம்; து. புஞ்ச

*[ புல்லுதல் = துளைத்தல். புல் = உட்டுளையுள்ள பயிர்வகை, சிறுமை, இழிவு. புல் → புலம்= தோண்டப்பட்ட நிலம். புலம்→ புனம். ]*

குறிஞ்சியிலும் முல்லையுலுமுள்ள விளை நிலங்கள் கொல்லை அல்லது புனம் என்று பெயர் பெற்றன. (ப.த.நா.ப. 87.)

**புனமல்லி** *puna-malli*, பெ. (n.) காட்டு மல்லிகை (மூ.அக.); wild jasmine.

*[புனம் + மல்லி ]*

**புனமுருக்கு** *puna-murukku*, பெ. (n.) புரசு [2] (பிங்.) பார்க்க; see *purašu* [2]

ம. புநமிந்ந

*[ புனம் + முருக்கு ]*

**புனமுருங்கை** *puna-murungai*, பெ. (n.) புரசு [2] பார்க்க; see *purasu*.[2] (L.)

*[புனம் + முருங்கை ]*

**புனர்** *punar*, வி.எ. (adv.) மீண்டும், மறுபடியும், திரும்பவும்; further, again, back, in return.

*[ பின் + புன் → புனர் ]*

punar, further, again; back, in return; etc., Gt. (p.526) is inclined to connect this word with D.pin,etc. (KKEDxi)

**புனர்ச்சன்மம்** *punar-c-canmam*, பெ. (n.) *புனர் வாழ்வு* பார்க்க; see *punarvālvu*.

*[ புனர் + சன்மம் ]*

**புனர்ச்சனனம்** *punar-c-cananam*, பெ. (n.) *புனர்வாழ்வு* பார்க்க; see *punar-vālvu*.

*[ புணர் + சனனம் ]*

Skt. janana > த.சனனம்

**புனர்சுரம்** *punar-šuram*, பெ. (n.) இடைவிட்டு வரும் காய்ச்சல்; relapsing fever (M.L.)

*[ புனர் + சுரம் ]*

**புனர்வாழ்வு** *punar – vālvu*, பெ. (n.) 1. மறுபிறவி (வின்); transmigration of souls. 2. கடுநோய் முதலிய இடரினின்று தப்பிப்பிழைக்கை; recovery from serious illness or accident, considered as a rebirth. 3. மறுவாழ்வு, இழந்தவற்றை அளிக்கை; rehabilitation.

*[ புனர் + வாழ்வு ]*

**புனர்விசாரணை** *puṉarviśāraṇai,* பெ. (n.) வழக்கின் மறு உசாவல் (விசாரணை); (legal.) re-trial.

*[ புனர் + விசாரணை ]*

Skt. vicāraṇa > த.விசாரணை

**புனர்விவாகம்** *puṉar-vivāgam,* பெ. (n.) மறுமணம்; remarriage as of widows.

*[ புனர் + விவாகம் ]*

Skt. punar > த.விவாகம்

**புனரி** *puṉari,* பெ. (n.) *புனரித்தண்டு* பார்க்க; see *puṉari-t-taṇḍu.*

*[ புனலி → புனரி ]*

**புனரித்தண்டு** *puṉari-t-taṇḍu,* பெ. (n.) பூடுவகை (யாழ். அக.); a plant.

*[ புனரி + தண்டு. துள் → தள் → தண்டு ]*

**புனல்[1]** *puṉal,* பெ. (n.) **1.** நீர்; water. *'தண்புனல் பரந்த'* (புறநா. 7.). **2.** ஆறு; flood, torrent, stream, river. *'மழை கொளக் குறையாது புனல் புக மிகாது'* (மதுரைக். 424) (பிங்.). **3.** குளிர்ச்சி; cold. *'மண்புன விளவெயில்'* (பரிபா. 15.27). **4.** முற்குளம் (பூராடம்); the 20th naksatra. 'விட்டம் புனலுத்திராடம்' (விதான. குணா குண. 29.). **5.** வாலுளுவை (சங்.அக.); black-oil tree.

**மறுவ.** வாரி, ஆலம், தீலாலம், மழையலர், நீரம், புட்கரம், சிந்து, பாணி, கார், ஆறல், மாரி, அம்பு, உதம், அப்பு, வருணம், வனம், வார்.

**ம.** புனல், புணல்; **க.** பொனல்; பொனலு, கொனல், கொனலு; **து.** புணல் (மிதத்தல்); **பட.** கொனல்

*[ புல்லுதல்= துளைத்தல். புல் → புன் → புனல். ]*

**புனல்நாடு** *puṉal-nāḍu,* பெ. (n.) *புனநாடு* பார்க்க; see *puṉanāḍu.*

**க.**புணல்நாடு(ஆறுபாயும்நாடு)

*[ புனல் + நாடு ]*

**புனல்பண்ணை** *puṉal-paṇṇai,* பெ. (n.) கோழிக்கீரைவகை (புதுவை.); a kind of greens.

*[ புனல் + பண்ணை ]*

**புனல்பாய்-தல்** *puṉal-pāy-,* **2.** செ.கு.வி. (v.i.) நீரில் விளையாடுதல்; to play in the water. *'புனல்பாய் மகளிநாட'* (பதிற்றுப். 86, 10.).

*[ புனல் + பாய்–, ]*

**புனல்முருங்கை** *puṉal-muruṅgai,* பெ. (n.) செடிவகை (வின்.); three leaved indigo.

*[ புனல் + முருங்கை ]*

**புனல்யாற்றுப்பொருள்கோள்** *puṉalyāṟṟu-p-poruḷkōḷ,* பெ. (n.) அடிதோறும் பொருள் அற்று மீளாது சேறல் (யாப்.95); எண்வகைப் பொருள்களுள் ஒன்று; one of the eight modes of construing verses.

**மறுவ.** ஆற்றுநீர் பொருள்கோள்

*[புனல் + ஆற்று + பொருள்கோள்]*

*"மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன் ஆகுல நீர பிற"* (குறள்,34.)

இக்குறளின் பொருள் ஆற்றுநீர் இடைவிடாது செல்வது போல் அமைந்துள்ளமையைக் காண்க.

**புனல்வாயில்** *punal-vāyil,* பெ. (n.) மதகு; sluice of a channel. '*புனல்வாயிற் பூம் பொய்கை*' (பதிற்றுப். 13, 8.).

*[புனல் + வாயில்]*

**புனல்விளையாட்டு** *punal-vilaiyāttu,* பெ. (n.) நீர்விளையாட்டு; sporting in water.

**மறுவ.** நீர்விழா, நீராட்டு, நீராட்டணி.

*[புனல் + விளையாட்டு. விள் → விளை = விருப்பம். விளையாடுதல் = விரும்பி யாடுதல். விளையாடு → விளையாட்டு.]*

பண்டைக் காலத்தில், ஆற்றருகேயிருந்த நகர மாந்தரெல்லாரும் ஆண்டுதோறும் ஆற்றிற் புதுவெள்ளம் வந்தவுடன் ஒருங்கே சென்று, ஒரு பகலிற் பெரும்பகுதி அவ் வெள்ளத்தில் திளைத்தாடி இன்புற்ற விளையாட்டு விழா.

நீராடு வாரெல்லாம், ஆற்றிடுவதற்குப் பொன்னாலும் வெள்ளியாலும் செய்த மீன்முதலிய காணிக்கைக் கருவிகளையும், புணை, தெப்பம், பரிசில் முதலிய மிதவைக் கருவிகளையும், காதலர் மீது நறுமண நெய்யையும் வண்ணநீரையும் தெளித்தற்குத் துருத்தி கொம்பு சிவிறி முதலிய விளையாட்டுக் கருவிகளையும் நீராடிய பின் வேண்டும் ஊண் உடை அகில் முதலியவற்றையும் தத்தமக்கு இயன்றவாறு யானை, குதிரை, தேர் முதலியவற்றில் ஊர்ந்தும் கால்நடையாய் நடந்தும் கொண்டுசெல்வர். குடிவாரியாக ஆங்காங்கு அமைக்கப் பெற்ற குற்றில்களும் புதுக்கடைகளும் சேர்ந்து ஒரு விழவூர் போலக் காட்சியளிக்கும்.

நீந்தவல்லார் சற்று ஆழத்திலும் அல்லாதார் கரையையடுத்தும் நீராடுவதும், பூசுஞ் சுண்ணம் சாந்து, குழம்பு முதலிய வற்றின் ஏற்றத்தாழ்வுபற்றிப் பெண்டிர் இகலாடுவதும், தம் கணவன்மார் பிற பெண்டிரொடு கூடிப்புனலாடினாரென்று மனைக்கிழத்தியர் ஊடுவதும், பூசுசாந்தம் புனைந்தமாலை உழக்கும் நீராட்டு முதலிய வற்றாற் கலங்கல் வெள்ளம் புதுமணம் பெறுவதும், புனலாட்டு நிகழ்ச்சிகளாம்

நீராடியவர் மாலைக்காலத்தில் மகிழ்ந்தும் அயர்ந்தும் மனை திரும்புவர்.(கு.வி.139.)

**புனல்வேந்தன்** *punal-vēndan,* பெ. (n.) மழைக்கடவுள் (வருணன்) (சூடா.); Varuṇa, as lord of the waters.

*[புனல் + வேந்தன். வேய் → வேய்ந்தோன் → வேந்தன்.]*

**புனலவன்** *punalavan,* பெ. (n.) புனல்வேந்தன் பார்க்க; see *punal-vēndan.* '*புனலவன் புகழின் வீந்ததால்*' (கம்பரா. வருணனை, 39.).

*[புனல் → புனலவன்]*

**புனலன்** *punalan,* பெ. (n.) திருமால்; Tirumāl. புனலன் மேனி (தக்கயாகப். 710).

*[புனல் → புனலன் = புனல் (நீரின்) மேல் பள்ளி கொண்டவன்]*

**புனலாட்டு** *punalāttu,* பெ. (n.) *புனல் விளையாட்டு* பார்க்க; see *punal-,vilaiyāttu*

*[புனல் +ஆட்டு]*

**புனலாடையாள்** *punal-ādaiyāḷ,* பெ. (n.) (நீராடையுடுத்தவள்) நிலமகள்; earth, as robed in the waters of the ocean. '*பொங்கும் புனலாடையாளும்*' (பு.வெ.8,29.).

*[புனல் + ஆடையாள்]*

**புனலி** *punali,* பெ. (n.) 1. காட்டுமல்லிகை. (குறிஞ்சிப். 75, உரை.); wild jasmine. 2. *புனலிக் கொடி* பார்க்க; see *punali-k-kodi.*

*[புனல் → புனலி]*

**புனலிக்கொடி** *punali-k-kodi,* பெ. (n.) 1. கொடிவகை; bastard rose-wood-climber, 2. கொடிப்புன்கு; hog-creeper.

*[புனலி + கொடி]*

**புனலை** *punalai,* பெ. (n.) பூவந்தி (சங்.அக.); soap-nut.

மறுவ. பூந்திக்கொட்டை, புங்கங்காய்.

**புனவர்** *punavar,* பெ. (n.) குறிஞ்சிநிலமக்கள்; inhabitants of the hilly tracts. '*புனவன் சிறுபொறி மாட்டிய பெருங்கல்*' (நற். 119.) (திவா.).

*[புனம் → புனவர் = புனத்தில் (மலைச்சார்பானகொல்லையில்) வாழ்பவர்]*

**புனவாசல்** *punavāšal,* பெ. (n.) தஞ்சை மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Tañjāvūr dt.

*[புனல் + வாசல்]*

**புனவாயில்** *punavāyil,* பெ. (n.) இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள ஊர்; a village in Rāmanādapuram dt. '*கண்டலு ஞாழலும் நின்று பெருங்கடற் கானல்வாய்ப் புண்டரீகம் மலர்ப் பொய்கை சூழ்ந்த புனவாயில்*' (சம்பந்தர் – 269 – 2).

மறுவ. பழம்பதி

*[புன்னை + வாயில் – புன்னை வாயில் → புனவாயில். இனி புனல் வாயில் (கடற்கரைக்கு அருகில் அமைந்துள்ள ஊர் புனவாயில் என்றுமாம்.]*

**புனவெலுமிச்சை** *puna-v-elumiccai,* பெ. (n.) குருந்து (பிங்.); wild lime.

*[புனம் + எலுமிச்சை]*

**புனவேடு** *punavēdu,* பெ. (n.) வரிக்கூத்துவகை; (சிலப். 3, 13, உரை.); a masquerade dance.

*[புனம் + வேடு]*

**புனற்கடல்** *punarkadal,* பெ. (n.) நன்னீர்க்கடல் (திவா); ring-shaped ocean of fresh water.

*[புனம் + கடல்]*

**புனற்கரசன்** *punarkarašan,* பெ. (n.) *புனல்வேந்தன் (திவா.)* பார்க்க; see *punal vēndan.*

*[புனல் + கு + அரசன்]*

**புனற்செல்வன்** *punarcelvan,* பெ. (n.) *புனல் வேந்தன் (பிங்.)* பார்க்க; see *punal-vēndan.*

*[புனல் + செல்வன்]*

**புனற்படுநெருப்பு** *punar-padu-neruppu,* பெ. (n.) வடவைத்தீ; the submarine fire. '*புனற்படு நெருப்பிற் பொம்மென வுரறி*' (பெருந். உஞ்சைக். 47, 129.).

*[புனல் + படு + நெருப்பு]*

**புனற்பாகம்** *punar-pāgam,* பெ. (n.) *புனப்பாகம் (பதார்த்த. 1386)* பார்க்க; see *puna-p-pāgam*

*[புனம் + பாகம்]*

**புனற்றுளசி** *punarrulaśi,* பெ. (n.) *புனத்துளசி (பிங்.)* பார்க்க; see *puna-t-tulaśi.*

*[ புனம் + துளசி. துளவு→ (துளசு) →துளசி.]*

**புனறருபுணர்ச்சி** *punararu-punarcci,* பெ. (n.) வெள்ள நீரிடையே வீழ்ந்த தலைவியைத் தலைவன் காத்தவிடத்து அவ்விருவர்க்கும் உண்டான கூட்டம் (தொல். பொ. 114. உரை, பக். 548); (agap.) union of a lover with his beloved on the occasion of his rescuing her from being drowned in a flood.

*[ புனல் + தரு + புணர்ச்சி. புணர் → புணர்ச்சி]*

**புனனாடன்** *punanāḍan,* பெ. (n.) (நீர்நிறைந்த நாட்டையுடைவன்) சோழ அரசன் (பிங்.); Cōla king, as lord of Punanāḍu. *'புன்னாடன் றப்பியாரட்ட களத்து'* (களவழி.1)

*[ புனல் + நாடு → புனனாடு → புனநாடன்]*

**புனனாடு** *punanāḍu,* பெ. (n.) 1. சோழநாடு. (பிங்.); the Cōla country. *'பொன்னியெந்நாளும் பொய்யா தளிக்கும் புனனாட்டு'* (பெரியபு. சண்டேசு. 1). 2. கொடுந்தமிழ்நாடு பன்னிரண்டனுள் ஒன்று (நன். 273, உரை.); a region where koḍun-Tamil was spoken, one of 12 koḍum-Tamiḻ-nāḍu.

*[ புனல் + நாடு]*

**புனாதி** *punādi,* பெ. (n.) கடைக்கல்; foundation.

**புனிகம்** *punigam,* பெ. (n.) ஒருசெய்நஞ்சு (சங்கபாஷாணம்) (சங்.அக.); a mineral poison.

**புனிற்றா** *punirrā,* பெ. (n.) ஈன்றணிமையுள்ள மாடு அல்லது எருமை; cow or buffalo which has recently calved. *'புனிற்றாப் பாய்ந்த வயிற்றுப்புண்ணினன்'* (மணிமே. 5, 47.) 'எருமைச் செங்கட் புனிற்றா' (ஐங்குறு. 92.).

*[ புனிறு + ஆ]*

**புனிற்றுமதி** *punirru-madi,* பெ. (n.) இளமதி; crescent moon. *'புனிற்று மதிகண்டுருகிப் பொழிந்த நீரால்'* (பெரியபு. திருக்குறிப்பு. 92).

மறுவ. இளம்பிறை

*[ புனிறு + மதி]*

**புனிறு** *puniru,* பெ. (n.) 1. ஈன்றணிமை; recency of delivery, as of a woman. *'புதல்வற் பயந்த புனிறுசேர் பொழுதின்'* (தொல். பொ. 146.) 2. அணிமையில் ஈனப்பட்டது; that which is recently born. *'புனிற்றிளங்குழவி'* (மணிமே. 29, 5). *'புன்றலை நாய்ப்புனிற்றும்'* (பெரியபு. திருநாளைப். 8). 3. பிஞ்சுத்தன்மை; greenness, as of unripe fruit. *'புனிறுதீர் பெரும்பழம்'* (ஞானா. 41, 5). 4. மகப் பேற்றாலான தீட்டு (தைலவ. தைல); ceremonial impurity due to child-birth. 5. புதுமை (சூடா.);newness. 6. தோல் (சது.); skin.

*[ புல் → புன் → புன்மை= சிறுமை, தூய்மை யின்மை, குற்றம். புல் → புன் → புனிறு]*

**புனுகு** *punugu,* பெ. (n.) புழுகு; civet

க. புணுகு; தெ.புநுகு

*[ புழுகு → புனுகு]*

**புனுகுச்சட்டம்** *puṉugu-c-caṭṭam,* பெ. (n.) 1. புனுகு உண்டாகும் பூனையின் உறுப்பு; gland in the anal pouch of the civet-cat. 2. புனுகுப்பூனையின் சட்டத்தினின்றும் எடுத்துச் சேர்க்கப்படும் நறுமணப் பண்டம்; unctuous substance of the civet-cat.

தெ. புணுகுசெட்டமு.

*[ புனுகு + சட்டம் ]*

**புனுகுசட்டம்** *puṉugu-šaṭṭam,* பெ. (n.) *புனுகுச்சட்டம்* பார்க்க; see *puṉugu-c.caṭṭam.*

*[ புனுகுச்சட்டம் → புனுகுசட்டம் ]*

தெ. புணுகுசட்டமு.

**புனுகுப்பூனை** *puṉugu-p-pūṉai,* பெ. (n.) புனுகைத் தரும் பூனைவகை; civet-cat viverra-civetta.

க. புழுகுபிள்ள; தெ.புனுகுபில்லி

*[ புழுகு → புனுகு + பூனை ]*



**புனுகுபூனை** *puṉugu-pūṉai,* பெ. (n.) *புனுகுப்பூனை* பார்க்க; see *puṉugu-p-pūṉai*

*[ புனுகுப்பூனை → புனுகுபூனை ]*

**புனை¹-தல்** *puṉai-,* 3 செ.குன்றாவி. (v.t.) 1. சூடுதல்; to dress, put on, as clothes, garlands, jewels. *'பூமாலை புனைந்தேத்தி'* (தேவா.727,3.). 2. அழகுபடுத்துதல் (அலங்கரித்தல்); to adorn, decorate. *'புனை தேர்பண்ணவும்'* (புறநா.12.). 3. அணியமாக்குதல் (சித்தஞ்செய்தல்); to make ready. 4. ஓவியமெழுதுதல்; to paint. *'புனையா ஓவியங் கடுப்ப'* (நெடுநல்.147.). 5. முடைதல்; to plait, as an ōla basket; *'போழிற் புனைந்த வரிப்புட்டில்'* (கலித்.117.). 6. கட்டுதல்; to string, bird. *'ஆய்பூ வடும்பின்அலர் கொண்டு..... கோதை புனைந்த வழி'* (கலித்.144.). 7. சூடுதல்; to wear. *'அவன் கண்ணி நீ புனைந் தாயாயின்'* (கலித்.116.). 8. ஒழுங்காக அமைத்தல்; to put in order. *'படைபண்ணிப் புனையும்'* (கலித்.17.). 9. சிறப்பித்துக் கூறுதல்; to use laudatory language, praise. *'புனையினும் புல்லென்னு நட்பு'* (குறள்,790.). 10. கற்பித்தல்; to exaggerate. *'புனைந்துபேசி'* (தேவா.1224,3.) 11. செய்யுளமைத்தல்; to compose, a poetry. *'நாவிற் புனைந்த நன்கவிதை'* (பரிபா.6,8.) 12. செய்தல்; to make, form. *'வரிமணற் புனைபாவைக்கு'* (புறநா.11.).

ம. புனயுக

*[ புல் → (பூல்) → பூ = பொலிவு, அழகு,மலர். பூத்தல் = பொலிதல், அழகாதல், பூமலர்தல். புல் → பொல் → பொலி → பொலிவு (மு.தா.135) புல் → புன் → புனை ]*

**புனை²** *puṉai,* பெ. (n.) 1. அழகு (பிங்.); beauty, 2. பொலிவு (பிங்.); attractive. 3. அணி (அலங்காரம்)செய்தல் (பிங்.); decoration. 4. அணிகலன்; ornament, jewel. *'கைபுனை புனைந்தும்'* (கல்லா.84.3.). 5. தளைக்கும் விலங்கு; fetters, shakles. *'புனைபூணும்'* (குறள், 836.). 6. சீலை; cloth, vestment. 7. புதுமை; newness, recenty.

*[ புல் → புன் → புனை]*

**புனை³** *puṉai,* பெ. (n.) நீர்; water, flood. *'அழுதளாவிய புனைவரவுயிர்வரு முலவை'* (கம்பரா.அகத்.4.).

*[புல் → புன் → புனல் → புனை]*

**புனைகுழல்** *puṉai-kuḻal,* பெ. (n.) *புனைகோதை (வின்.)* பார்க்க; see *puṉai-kōdai.*

*[புனை + குழல்]*

**புனைகதை** *puṉai-kadai,* பெ. (n.) கற்பனைக் கதை; fiction.

*[புனை + கதை]*

**புனைகோதை** *puṉai-kōdai,* பெ. (n.) கூந்தலழகுள்ள பெண் (வின்.); lady, as having beautiful locks.

*[புனை + கோதை]*

**புனைசுருட்டு** *puṉai-šuruṭṭu,* பெ. (n.) ஏய்ப்பு (மோசம்); deceitful conduct, underhand dealing.

*[புனை + சுருட்டு. சுருள் (த.வி.) – சுருட்டு (பி.வி.)]*

**புனைந்துரை** *puṉaindurai,* பெ. (n.) 1. அழகுநலத்துடன் சொல்லும் சொல்; rhetorical language or poetic embellishment. (நம்பியகப்.2.) 2. பாயிரம் (நன்.2.); preface, introduction.

**மறுவ.** தந்துரை, முகவுரை, பதிகம், நூன்முகம், முன்னுரை

*[புனை → புனைந்து + உரை]*

சான்றுகள் ஏதும் இல்லாமல் தாமாகக் கருத்துகளை உருவாக்கிக் கூறும் புனைந்துரை பெரியதனைச் சுருக்கிச் சொல்லுதல், சிறியதனைப் பெருக்கிச் சொல்லுதல் என இருதிறத்தது.

**புனைந்தோர்** *puṉaindōr,* பெ. (n.) கம்மாளர் (சூடா.); artisans, mechanics.

*[புனை → புனைந்தோர்]*

**புனைபெயர்** *puṉai-peyar,* பெ. (n.) கற்பித்துக்கொண்ட பெயர்; pen-name, pseudonym. புனைபெயரில் கதை எழுதுவோர் மிகப்பலர், (உ.வ.)

*[புனை + பெயர்.]*

**புனைமொழி** *puṉai-moḻi,* பெ. (n.) அழகு சொல் (இ.வ.); hetorical expression.

*[புனை + மொழி]*

**புனையல்** *puṉaiyal,* பெ. (n.) மாலை; garland, necklace. *'உருத்திரமாமணிப் புனையல்'* (உபதேசகா. சிவநாம.173.).

*[புனை → புனையல். இனி பிணையல் → புணையல்' → புனையல் என்றுமாம்]*

**புனையிழை** *puṉai-y-iḻai,* பெ. (n.) சிறந்த பெண் (சூடா.); lady, as wearing beautiful ornaments. *'புனையிழை யிழந்தபின்'* (பு.வெ.10, சிறப்பிற்பொது 3, கொளு).

*[புனை + இழை]*

**புனையிறும்பு** *puṉai-y-iṟumbu,* பெ. (n.) செய்காடு; grove. *'புதைந்திருடீங்கும் புனையிறும்பு'* (திருக்கோ.148.).

*[புனை + இறும்பு]*

**புனைவன்** *punaivan*, பெ. (n.) கம்மியன் (திவா.); mechanic, artisan, architect. *'வானவர் புனைவற் கொண்டே....பாசறை புனைவித்து'* (கந்தபு.யுத்தகாண். வரவுகேள். 26.)

*[ புனை → புனைவன் = அழகுபடுத்துபவன், கலைஞன், தொழில் வல்லவன்.]*

**புனைவிலி** *punaivili*, பெ. (n.) உவமைக்குப் பயன்படுத்தும் பொருள்(உபமானப்பொருள்) (வின்.); the thing chosen for comparison.

*[ புனைவு → புனைவிலி]*

**புனைவிலிபுகழ்ச்சி** *punaivili-pugalcci*, பெ. (n.) பிறிது மொழிதல் (அணியி.27, பக்.17.); (rhet.) a figure of speech.

*[ புனைவிலி + புகழ்ச்சி ]*

**புனைவு** *punaivu*, பெ. (n.) 1. அழகு; beauty 2. அழகு (அலங்காரம்) படுத்துதல் ; ornament decoration. 3. செழிப்பு; fertility, fruitfulness. 4. செய்கை (அக.நி.); making, producing.

*[ புனை → புனைவு]*

**புனைவுப்பெயர்** *punaivu-p-peyar*, பெ. (n.) புனைபெயர் பார்க்க; see *punai peyar*.

*[ புனைபெயர் → புனைவுப்பெயர்]*

**புனைவுளி** *punaivuli*, பெ. (n.) உவமித்துக்கூற பயன்படுத்தும் பொருள் (வின்.); the object described by a simile.

*[ புனை → புனைவுளி]*

**பூ¹** *pū*, 'ப்' என்ற மெய்யெழுத்தும் 'ஊ' என்ற உயிரெழுத்தும் இணைந்த உயிர்மெய் (அசை) எழுத்து; the syllable formed by adding the long vowel 'ū' to the consonant 'p'.

*[ ப் + ஊ ]*

**பூ²-த்தல்** *pū-*, 4 செ.கு.வி. (v.i.) 1. மலர்தல்; to blossom, bloom. *'பூத்த மாஅத்து'* (ஐங்குறு.10). 2. பொலிவு பெறுதல்; to flourish, to be prosperous. *'மீன் பூத்தன்ன தோன்றலர்'* (திருமுரு.169). 3. மாதவிலக்காதல் (இருதுவாதல்); to menstruate. *'பூத்த காலைப் புனையிழை மனைவியை'* (நம்பியகப்.91) 4. நெடுநேரம் நோக்குதலாற் கண்ணொளி மழுங்குதல்; to become blurred in vision, as by long wistful look. 5. பூஞ்சாளம்பிடித்தல் (இ.வ.); to become mouldy. 6. பயனின்றிப் போதல்; to become useless. *'எதிர்பார்த்த கருமம் (காரியம்) பூத்துப் போயிற்று'* 7. நெருப்பு சாம்பலாகி நெருப்பை மறைத்தவாறு பூசியிருத்தல்; to coat or form layer, as of ash around fire.

**ம.** பூ, பூக்க; **க.** பூ, புவ்வு, கூ. குவ்வு; **தெ.** பூசு, பூய்; **துட.** பூவ்; **கோத.**, பர். பூப்; **கோண்.** புய்யின; **கொண்.** பூ; **கூய்.** பூப்; **குரு.** புய்த்ன, புய்த்னா; மால; புத்தெ; பட. கூ

*[ பொல் → புல் → பூல் → பூ = பொலிவு, அழகு, மலர். பூத்தல் = பொலிதல், அழகாதல், பூமலர்தல் (மு.தா.135) (வ.வ.2.39) ]*

**பூ³-த்தல்** *pū*, 4 செ.கு.வி. (v.i.) தோன்றுதல்; to appear. *'பூத்திழி மதமலை'* (கம்பரா. கும்பகா,315).

*[ புல் → புள் → புழு → புகு. புகுதல் = தோன்றுதல். புகு → பூ. பூத்தல் = தோன்றுதல்(வ.வ.39 ]*

**பூ⁴–த்தல்** *pū-*, 4 செ.குன்றாவி. (v.t.) **1.** மலர் முதலியவற்றைத் தோற்றுவித்தல்; to produce, as flower. '*செய்ய தாமரைகள் எல்லாந் தெரிவையர் முகங்கள் பூத்த*' (கம்பரா. நீர்விளை.3). **2.** படைத்தல்; to create. '*ஞாலமெல்லாம் பூத்தோனே*' (பாரத. கிருட்டிண.12). **3.** பெற்றெடுத்தல்; to give birth to. '*ஒரு திருவைப் பூத்தனள்*' (பிரமோத்.8,18.).

**ம.** பூக்குக

*[ புல் → புள் → புழு → புகு → புகுதல் = தோன்றுதல். புகு → பூ. பூத்தல் = தோன்றுதல், படைத்தல் (வ.வ.2,39) ]*

**பூ⁵** *pū*, பெ. (n.) **1.** ஒன்று அல்லது பல மலர்ச்சூலக (மலரின் பெண்மையுறுப்பு)த் தையும் மலரிழை (மலரின் ஆணுறுப்பு) யையும் கொண்ட மரஞ்செடிகொடிகளில் காணப்படும் இனப் பெருக்கவுறுப்பு (பிங்.); flower, blossom. **2.** தாமரைப் பூ; lotus flower. '*பூவெனப்படுவது பொறிவாழ்பூவே*' **3.** பூத்தொழில்; floral design. '*பூக்கனிந்து*' (பொருந.82). **4.** சேவலின் தலைச்சூடு; cocks comb. '*பூத்தலைச்சேவல்*' (சீவக.120). **5.** நிறம்; colour. '*பறவாப் பூவைப் பூவினோயே*' (பரிபா.3,73). **6.** நீலநிறம் (அக.நி); blue colour. **7.** அழகு; beauty, charm. **8.** பொலிவு (திவா.); richness, fertility, flourishing condition. '*பூமலர்ச் சோலையும்*' (மணிமே.20,29). **9.** மென்மை; tenderness. **10.** யானையின் நுதற்புகர்; spots on an elephants forhead. '*பூநுதலாடியல் யானை*' (புறநா.165) **11.** யானையின் நெற்றிப் பட்டம்; ornamental plate on the forehead. '*பூநுதல் யானையொரு*' (புறநா.12.). **12.** கண்ணின் கருவிழியில் விழும் வெண்பொட்டு (வின்.); web, film or cataract in the eye, opacity, abugo. **13.** விளைவுப் பருவம் (போகம்); crop of wet cultivation. நீர்வளம் மிகுந்த பாங்கரில் முப்பூ விளையும். **14.** கருவிப்பொருக்கு (வின்.); roughness on the wiry edge of a tool after grinding. **15.** தீப்பொறி; spark, as of fire. **16.** தேங்காய்த் துருவல்; flake, as of scraped coconut. **17.** நுண்பொடி; fine powder or dust. **18.** மீனின் மூச்சுக்கருவி (வின்.); gill of a fish. **19.** அரைக்கால்; the fraction 1/8. '*இணங்கற்பூ*' Cant. **20.** கும்பாதிரி; lac tree. **21.** கதிர்க்கற்றை படுதற்கு முன்னுள்ள பூநீற்றின் கதிர்' (தைலவ.தைல.3.); crude form of pū-niṟu, before it is acted upon by the sun's rays. **22.** முப்பூ (சங்.அக.); a set of three substances used in medicine. **23.** இந்துப்பு (யாழ்.அக.); rock-salt. **24.** இலை (யாழ்.அக.); leaf. **25.** வேள்வித்தீ (ஓமாக்கினி) (யாழ்.அக.); sacrificial fire. **26.** கூர்மை; sharpness, keenness, point. '*பூவாட்கோவலர்*' (புறநா.224). **27.** நிரயவகை (யாழ்.அக.); a hell. **28.** பூப்பு; menstruation, catamenia. '*பூவாளா வலர்தொடுப்பார்க்குத்*' (குஞ்சைவா.382).

**ம.** பூ, பூவு; **க., தெ.** பூ, பூவு, புவ்வு; **து., கோத., குட., கட.** பூ; **துட.** புவ்; **நா.** பூத; **கோண்.** புங்கார்; **கூய்.** பூசு; **குரு.** பூப், பூம்ப; **மால.**பூபு; **பட. கூ**

Skt.phulla; Pkt.puppha.

*[ புல் → பொல் → பொலி → பொலிவு. புல் → (பூல்) → பூ = பொலிவு, அழகு, மலர் (மு.தா.135) ]*

puṟpa, pushpa, flower, the mentrual flux. Gt. (p.527)thinks the word comes form D.pū to flower; Cl. (p.474) doubts it, and prefers to derive that verb from Sk. phull, to flower, comparing Mhr. phūla, a flower (i.e.s.phulla). But phull does not exactly explain the form of. puṟpa. Puṟpa appears to represent an original pulpa and to be somehow connected with D. pul, grass (probably that is coloured). This leads to D. pōle, that is coloured;

menstrual flux, the terms adduced under which sufficiently explain purpa. The D. words for 'flower' are puvvu (i.e.pulva?) etc. (KKED.xxiv).

பூ கொடிப்பூ, கோட்டுப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ (புதர்ப்பூ) என நால்வகை யுண்டு என பழந் தமிழ் இலக்கியங்கள் காட்டுகின்றன. (இவற்றுடன் செடிப்பூ என்பதொன்றும் சேர்த்துக் கொள்ளலாம். (ஒ.மொ.2,20) ) பூ நிலைகளை ஐவகையாகக் கண்டு தோன்றிய நிலையில் அரும்பு என்றும், மலரத்தொடங்கிய நிலையிற் போது என்றும், மலர்ந்த நிலையில் மலர் என்றும், உதிர்ந்து விழுந்த நிலையில் வீ யென்றும் வாடிச்சிவந்த நிலையில் செம்மல் என்றும் சொல்லினர் பழந்தமிழர். பூ என்பது பொதுப்பெயர். (செ.சி.10,11)

**பூ⁶** *pū,* பெ. (n.) **1.** நிலம் (பிங்.); earth. **2.** பிறப்பு; birth, production.

*[ புல் → புள் → புழு → புகு. புகுதல் = தோன்றுதல். புகு → பூ. பூத்தல் = தோன்றுதல், படைத்தல். பூ = தோன்றிய நிலம், படைக்கப்பட்ட பிறப்பு]*

**த.** பூ > Skt. bhū

**பூக்கஞ்சா** *pū-k-kañjā,* பெ. (n.) பூங்கஞ்சா (யாழ்.அக.); male plant of Indian hemp.

*[ பூ + கஞ்சா ]*

**பூக்கட்டு—தல்** *pū-k-kaṭṭu-,* **15** செ.கு.வி. (v.i.) மலர்மாலை தொடுத்தல்; to make garlands of flowers.

**க.** பூகட்டு, கூகட்டு, கூவுகட்டு;

**து.** பூகட்டுணி

*[ பூ + கட்டு–, கள் → கட்டு ]*

**பூக்கடுக்கன்** *pū-k-kaḍukkaṉ,* பெ. (n.) பரவர் காதணிவகை; a kind of ear-ring (Parava.).

**து.** பூஒலை

*[ பூ + கடுக்கன் ]*

**பூக்கண்டல்** *pū-k-kaṇḍal,* பெ. (n.) சிறுமரவகை (வின்.); dich otomous cymed mangrove.

*[ பூ + கண்டல் ]*

**பூக்கணை** *pū-k-kaṇai,* பெ. (n.) மலர் அம்பு; an arrow of flowers (especially of Kāma).

**க.** பூகணெ, பூசரல், பூசரலு, பூசரளு; **து.** பூகணெ, பூபகரி

*[ பூ + கணை ]*

**பூக்கந்தகம்** *pū-k-kandagam,* பெ. (n.) புடமிட்ட கந்தகம் (வின்.); flowers of sulphur.

*[ பூ + கந்தகம் ]*

**பூக்கம்¹** *pūkkam,* பெ. (n.) கமுகு (திவா.); areca-palm.

**மறுவ.** வார்.

**பூக்கம்²** *pūkkam,* பெ. (n.) **1.** ஊர்; town. **2.** மருத நிலத்தூர்; town in an agricultural tract.

*[ பாக்கம் → பூக்கம்]*

**பூக்கரப்பன்பட்டை** *pūkkarappaṉpaṭṭai,* பெ. (n.) பூக்கரப்பான் மரத்துப்பட்டை; bark of pūkkarappāṉ.

*[ பூக்கரப்பன் + பட்டை]*

# பூக்கள் வகைகள்





நிலப்பூ





நீர்ப்பூ





கொடிப்பூ





காட்டுப்பூ

**பூக்கரப்பான்** *pū-k-karappāṉ,* பெ. (n.) ஒரு மரம்; a kind of tree.

*[பூ + கரப்பான்]*

**பூக்கவர்ந்துண்ணி** *pū-k-kavarnduṇṇi,* பெ. (n.) குரங்கு; monkey. '*வாலியாம் பூக்கவர்ந்துண்ணி*' (கம்பரா. கும்ப. 180).

*[பூ + கவர்ந்துண்ணி]*

**பூக்கள்ளி** *pū-k-kaḷḷi,* பெ. (n.) ஒருவகைக் கள்ளி; a milky shrub or spurge.

*[பூ + கள்ளி. கள் = முள். கள் → கள்ளி]*



**பூக்காணம்** *pū-k-kāṇam,* பெ. (n.) நிலவுருண்டையின் (பூமியின்) சாய்கோடு (அட்சாம்சம்); latitude.

*[பூ + காணம்]*

**பூக்காமரம்** *pūkkā-maram,* பெ. (n.) பூவாத மரம்; a tree that never yields flower.

*[பூ → பூக்கா + மரம். 'ஆ' எ.ம. இடைநிலை]*

**பூக்காரன்** *pū-k-kāraṉ,* பெ. (n.) பூ விற்பவன்; flower dealer.

*[பூ + காரன். கடி → கரி → காரம் → காரன்]*

**பூக்காரி** *pū-k-kāri,* பெ. (n.) பூவிற்பவள்; female flower dealer.

து. பூத்தாளு

*[பூ + காரி. காரன் (ஆ.பா.) - காரி (பெ.பா.)]*

**பூக்காவி** *pū-k-kāvi,* பெ. (n.) *பூங்காவி* பார்க்க; see *pūṅgāvi.*

*[பூ + காவி]*

**பூக்கு-தல்** *pūkku-,* 15 செ.கு.வி. (v.i.) *பூ³-த்தல்* பார்க்க; see *pū ³-,*

*[பூ → பூக்கு-,]*

**பூக்குஞ்சு** *pū-k-kuñju,* பெ. (n.) இறகு தோன்றாத பறவைக் குஞ்சு (வின்.); மிகவும் இளம் பறவைக் குஞ்சு; unfledged young bird.

*[பூ + குஞ்சு]*

**பூக்குட்டான்** *pū-k-kuṭṭāṉ,* பெ. (n.) பூக்குடலை (யாழ்.அக.) பார்க்க; see *pū-k-kuḍalai.*

மறுவ. கொட்டான்

*[பூ + குட்டான். குள் → குட்டம் = சிறுமை, குறுமை. குள் → குட்டான் = சிறிய ஓலைப்பெட்டி, சிறுபடப்பு]*

**பூக்குடலை** *pū-k-kuḍalai,* பெ. (n.) நீளமாக முடைந்த பூக்கூடை வகை (கொ.வ.); cylindrical 'ōlai' basket for flowers.

*[பூ + குடலை. குள் → குழை = துளை. குழை → குடை → குடைவு. குழை → குழலை → குடலை]*

**பூக்குதல்** *pūkkutal,* பெ. (n.) **1.** நினைக்கை (அரு.நி.); remembering. **2.** தோன்றுகை; appearing.

*[புல் → புள் → புழு → புகு. புகுதல் = தோன்றுதல். புகு → பூ. பூத்தல் = தோன்றுதல். பூ → பூக்கு]*

**பூக்குதிரை** *pū-k-kudirai,* பெ. (n.) ஒரு பூவின் பெயரைச் சொல்லி ஒருவன் மேலொருவன் குதிரையேறி விளையாடும் விளையாட்டு; a children game by telling a flower's name and climbing on one's back.

*[பூ + குதிரை.]*

ஏதேனுமொரு தேர்ந்தெடுப்பு வகையில் தவறவிட்ட ஒருவன், அண்ணாவிபோல் நிற்கும் ஒருவனிடம் மறைவாக ஒரு பூப்பெயரைச் சொல்லிவிட்டுக் குனிந்து நிற்கவேண்டும். பிறகு ஒவ்வொருவனாய் அவன் மேற் குதிரையேறு முன் ஒவ்வொரு பூப்பெயரை அண்ணாவியிடம் வெளிப் படையாய்ச் சொல்ல வேண்டும். யாரேனும் ஒருவன் சொன்ன பூ குனிந்தவன் சொன்னதாயிருப்பின் பின்பு அவன் அண்ணாவியிடம் ஒரு பூப்பெயரை மறைவாகச் சொல்லிவிட்டுத் தான் குனிய வேண்டும். முன்பு குனிந்து நின்றவன், பின்பு பிறரொடு சேர்ந்து முன் சொன்னவாறு விளையாடுவான். குனிந்தவன் சொல்லாத வேறு பூப்பெயர் சொல்லிக் குதிரை யேறினவன் ஒரு நிமையத்திற்குள் இறங்கிவிடல் வேண்டும். குனிந்தவன் சொன்ன பூ வரும்வரையும் ஒவ்வொருவனாகவும் மாறிமாறியும் ஏறியிறங்கிக் கொண்டே யிருப்பர். (த.வி.62).

**பூக்கும்பருவம்** *pūkkum-paruvam,* பெ. (n.) **1.** மலர் மலரும் காலம்; flowering season. **2.** பருவம் அடையும் காலம்; aged enough to attain puberty.

*[பூ → பூக்கும் + பருவம்]*

**பூக்குழி** *pū-k-kuḻi,* பெ. (n.) தீக்குழி (இ.வ.); fire-pit in the ceremony of walking on live coals.

*[பூ + குழி. குள் → குளி → குழி. இறை நம்பிக்கையடிப்படையில் நெருப்புத் தணல் பூவாக இருக்கும் என்னும் நம்பிக்கையில் அழைக்கப்பட்டது. இனி தணல்மேல் சாம்பல் பூத்திருந்தது என்றும் அல்லது பூப்போன்ற தணல் என்றும் கொள்ளலாம்.]*

**பூக்குளம்** *pū-k-kuḷam,* பெ. (n.) பூங்குளம் பார்க்க; see pūṅkuḷam.

க. பூகொள, கூகொள

*[பூ + குளம்]*

**பூக்குறடு** *pū-k-kuṟaḍu,* பெ. (n.) பூமாலை தொடுப்பதற்கான மேடான இடம் (யாழ்.அக.); raised platform for garland makers.

*[பூ + குறடு. குல் → குரு → குற → குறடு]*

**பூக்குறிஞ்சி** *pūkkūriñji,* பெ. (n.) கரும்பூக் குறிஞ்சி.; a kind of medicinal plant.

ம. பூங்குறிஞ்சி (ஒரு வகைப் பூக்கும் மரம்)

*[பூ + குறிஞ்சி. குறி → குறிஞ்சி]*

**பூக்கூடம்** *pū-k-kūḍam,* பெ. (n.) பூக்குறடு (நெல்லை.) பார்க்க; see *pū-k-kuṟaḍu.*

*[பூ + கூடம். கூடு → கூடம். குள் → கூள். கூள்தல் = திரளுதல். கூள் → கூடு → கூடம் = திரண்ட இடம், மேடானபகுதி]*

**பூக்கூடை** *pū-k-kūḍai,* பெ. (n.) பூவைக்கும் கூடை; flower basket.

ம. பூக்கொட்ட

*[பூ + கூடை. கூடு → கூடை = வட்டமான மூங்கில்முடைவு]*

**பூக்கொடி** *pū-k-koḍi,* பெ. (n.) மலர்களை யுடைய கொடி; a branch which has flower. "*பூக்கொடி வல்லியுங் கரும்பும் நடுமின்*" (மணிமே. 1, 47).

*[பூ + கொடி. கொள் → கொடு → கொடி = வளைந்து படரும் நிலைத்திணை வகை.]*

**பூக்கொய்—தல்** *pū-k-koy-,* 1 செ.குவி. (v.i.) பூப்பறித்தல்; to gather flowers. '*தோகை பூக்கொய் மகளிரிற் றோன்றும்*' (ஐங்குறு. 297).

க. பூகொய், கூகொய், கூகொய்யு.

*[பூ + கொய்–, ]*

**பூக்கோசனி** *pūkkōšani,* பெ. (n.) வெட்பாலை; a tree, tellicherry bark.

**பூக்கோசு** *pū-k-kōšu,* பெ. (n.) பெரிய வெள்ளை நிற பூவையுடைய கோசு; a cabbage with a large white flower head, cauliflower.

*[பூ + கோசு]*

E. cosh › த.கோசு

**பூக்கோட்காஞ்சி** *pūkkōṭ-kāñji* பெ. (n.) *பூக்கோணிலை* (புறநா. 293. திணைக் குறிப்பு) பார்க்க; see *pūk-kōṇilai.*

*[பூக்கோள் + காஞ்சி ]*

**பூக்கோணிலை** *pūkkōṇilai,* பெ. (n.) போரை மேற்கொள்ளும் போது வெட்சி முதலிய மலர்களை அரசனிடமிருந்து வீரன் பெற்றுக் கொள்ளுதலைக் கூறும் புறத்துறை. (பு.வெ. 4, 10, தலைப்பு); (purap.) theme describing the acceptance by a warrior of 'veṭci' and other flowers of 'pura-t-tiṇai', from a king on the occasion of his undertaking an act of hostility.

*[பூ + கொள் - பூக்கொள் → பூக்கோள் + நிலை ]*

**பூக்கோள்** *pū-k-kōḷ,* பெ. (n.) பூக்கோணிலை பார்க்க; see pū-k-kōṇilai. '*பூக்கோளின் றென்றையும்*' (புறநா.289.9).

*[பூ+கொள் - பூக்கொள் → பூக்கோள் ]*

**பூகண்டகர்** *pū-kaṇḍagar,* பெ. (n.) அசுரர்; Asuras, as the enemies of the world. '*பூகண்டகர் கோவோ டாகண்டலன் மாய*' (தக்கயாகப். 693).

*[பூ + கண்டகர். பூ → பூது → பூதம் = தோன்றியது, ஐம்பூதங்களுள் ஒன்று. பூ = நிலம்]*

**பூகண்டம்** *pū-kaṇḍam,* பெ. (n.) 1. பூவலயம் (பிங்.); earth. 2. நிலப்பரப்பின் பெரும்பகுதி; continent.

*[பூ+ கண்டம். குள் → கள் → கண் → கண்டு → கண்டம் = ஒன்று திரண்டது]*

**பூகதம்[1]** *pū-kadam,* பெ. (n.) உலகை யடைந்தது; that which has reached the earth.

*[பூ+ கதம்]*

Skt. gata › த. கதம்.

**பூகதம்²** *pūkadam,* பெ. (n.) பூகம்¹ 1 பார்க்க; see pūgam¹-1. '*இரசதத்த பூகதம்*' (குற்றா. தல. திருமண.30).

**பூகதம்பம்** *pū-kadambam,* பெ. (n.) நிலக்கடம்பு (மலை.); a plant.

**பூகதர்** *pūgadar,* பெ. (n.) புகழ்வோர் (திவா.); panegyrists. '*பூகதரடைந்தார்*' (உபதேசகா. சிவத்துரோ.196).

**பூகதன்** *pū-gadaṉ,* பெ. (n.) நிலவுலகை யடைந்தவன்; one who has reached the earth, one who is born on the earth. '*பூகதனாகியவன்றே*' (பாரத.திரௌ.52).

*[பூ+ கதன் . கதம் → கதன்]*

**பூகநிழலினள்** *pūga-niḻaliṉaḷ,* பெ. (n.) பூகநிழலுற்ற வஞ்சி (பிங்.) பார்க்க; see pūga niḻaluṟṟa-vañji.

*[பூகம்+ நிழலினள்]*

**பூகநிழலுற்றவஞ்சி** *pūganiḻal-uṟṟa-vañji,* பெ. (n.) அறத்(தரும)தேவதை (சூடா.); goddess of virtue, as seated under an areca-palm.

*[பூகம் + நிழலுற்ற + வஞ்சி]*

**பூகபீடம்** *pūga-pīḍam,* பெ. (n.) காளாஞ்சி (யாழ்.அக.); spittoon.

**மறுவ.** எச்சிற்போணி

*[பூகம்+ பீடம்]*

**பூகம்¹** *pūgam,* பெ. (n.) 1. கமுகு (திவா.); areca-palm. "*வனமெலாம்*" நாகம்பூகம் (திரு வாலவா.27,37) 2. திப்பலிப்பனை (மலை.); jaggery-palm.

**ம.** பூகம்; **க.** பூகபல, பூகபள

*[புள் → (புளகம்) → பூகம்]*

**பூகம்²** *pūgam,* பெ. (n.) 1. திரட்சி (பிங்.); collection, multitude. 2. ஒருவகைக் குல (சாதி)க் கூட்டம் (சுக்கிரநீதி,288); a caste assembly.

**க.** பூக

*[புல் → புள்→ பிள்→ பிழம்பு, புள்→ (புளகம்) → பூகம்]*

**பூகம்³** *pūgam,* பெ. (n.) 1. கழுகு (யாழ்.அக.); eagle. 2. பலா; jack-tree.

**பூகம்பம்** *pūgambam,* பெ. (n.) 1. நிலவதிர்ச்சி; earthquake. "*பூகம்பம் பிறந்துடுவு மரும்பகலே விழுந்து*" (பாரத. சூதுபோர்.259). 2. ஞாயிறு நின்ற நாளுக்கு ஏழாம் நாள் (விதான. குணாகுண.34); (astrol.) the seventh nakṣatra from that occupied by the sun.

*[பூ+ கம்பம். கம் → கம்பம்]*

**பூகம்பனம்** *pūgambaṉam,* பெ. (n.) பூகம்பம், (யாழ்.அக.) பார்க்க; see pūgambam.

*[பூகம்பம் → பூகம்பனம். கம் → கம்பம் → கம்பனம்.]*

**பூகம்பு** *pūgambu,* பெ. (n.) குணநலம் (சுபாவம்) (யாழ்.அக.); nature.

**பூகரணம்** *pūkaraṇam,* பெ. (n.) பூகன்னம் பார்க்க; see *pūkaṉṉam.*

*[பூ + கரணம். கன்னம் → கர்ணம் → கரணம்]*

**பூகரபம்** *pū-karabam,* பெ. (n.) கையாந்தகரை (மலை.); a plant found in moist places.

**பூகரம்** *pū-karam,* பெ. (n.) பூகரபம் (யாழ்.அக.) பார்க்க; see pūkarabam.

**பூகளிந்தம்** *pūkaḷindam,* பெ. (n.) பூமிச் சருக்கரை (நாமதீப.345); necklace berried climbing caper.

**பூகன்னம்** *pūkaṉṉam,* பெ. (n.) **1.** உலக உருண்டையின் நடுவிட்டம் (வின்.); diameter of the earth. **2.** புற்று (இ.வ.); ant-hill.

*[பூ + கன்னம். குல் → கல் → கன் → கன்னம் = குழி, நடு, நடுப்பக்கத்துக் கோடு ]*

**பூகாமி** *pūgāmi,* பெ. (n.) நிலத்தில் விரைந்து செல்லுங் குதிரை (வின்.); horse that goes well on land, opp. to cala-kāmi.

*[பூ+ காமி.]*

**பூகேசம்** *pūkēšam,* பெ. (n.) **1.** ஆலமரம் (சங்.அக.); banyan tree. **2.** நீர்ப்பாசி (சங்.அக.); moss.

*[பூ+ கேசம்.]*

Skt. kēša > **த.** கேசம்.

**பூகோளசாத்திரம்** *pūgōḷa-šāttiram,* பெ. (n.) *பூகோள நூல்* பார்க்க; see *pūgōḷa-nūl.*

*[பூ+ கோளம் + சாத்திரம். குள் → குளிகை = உருண்டைமாத்திரை. குளி → குளியம் = உருண்டை. குள் → கொள் → கோள் → கோளம் = உருண்டை]*

Skt. šāstra > **த.** சாத்திரம்.

**பூகோளநூல்** *pūgōḷanūl,* பெ. (n.) மலை, ஆறு தட்பவெப்பம் முதலிய நிலவுலகின் இயல்புகளை விளக்கிக் கூறும் நூல்; geography.

*[பூ+ கோளம் + நூல்]*

**பூகோளம்** *pūgōḷam,* பெ. (n.) நிலவுலக வுருண்டை; the terrestrial globe.

*[பூ+ கோளம். குள் → கொள் → கோள் → கோளம்]*



**பூங்கஞ்சா** *pū-ṅ-kañjā,* பெ. (n.) செடிவகை; (யாழ்.அக.); ganja, male plant of Indian hemp.

*[பூ+ கஞ்சா]*

**பூங்கணுத்திரையார்** *pūṅkaṇu-t-tiraiyār,* பெ. (n.) ஒரு கழகப்புலவர்; poet of saṅgam age.

**பூங்கணை** *pūṅgaṇai,* பெ. (n.) அணிச்சை; pimpernel.

**பூங்கதலி** *pū-ṅ-kadali,* பெ. (n.) வாழை வகை(இ.வ.); a kind of plantain.

மறுவ. கதலிவாழை

*[பூ+ கதலி. குதலி → கதலி = சிறுகாய் வாழை]*

**பூங்கதிர்** *pū-ṅ-kadir,* பெ. (n.) 1. வெண்கதிர் (யாழ்.அக.); white ray. 2. ஒளி; light.

*[பூ+ கதிர்]*

**பூங்கரந்தை** *pūṅkarandai,* பெ. (n.) 1. ஒரு வகைக் கரந்தை; a tree. 2. பூச்சாங்கொட்டை; three lobed soup nut tree.

**பூங்கரும்பு** *pūṅgarumbu,* பெ. (n.) செங்கரும்பு வகை (மலை.); a species of tender; red sugar-cane.

*[பூ+ கரும்பு. கர் → கரு → கரும்பு]*

**பூங்கருவி** *pū-ṅ-karuvi,* பெ. (n.) ஒருவகைப் படைக்கலம் (பிங்.); a weapon.

*[பூ+ கருவி]*

**பூங்கல்காரம்** *pūṅgal kāram,* பெ. (n.) கல்நார்; asbestos.

**பூங்கரை** *pūṅgarai,* பெ. (n.) கடல்நுரை; sea foam.

*[பூ+ கரை]*

**பூங்கலன்** *pū-ṅ-galaṉ,* பெ. (n.) பூக்குடலை பார்க்க; see pūkkuḍalai *'குசைப் புல்லும் பொலிசமித்தும் பூங்கலனும்'* (கோயிற்பு. இரணியவன்ம.36).

*[பூ+ கலன்]*

**பூங்கவணி** *pū-ṅ-gavaṇi,* பெ. (n.) புடைவை வகை (யாழ்.அக.); a saree.

*[பூ+ கவணி]*

**பூங்கற்று** *pūṅgaṟṟu,* பெ. (n.) 1. பூதம் (அக.நி.); goblin. 2. அழகு; beauty.

**பூங்கா** *pū-ṅ-gā,* பெ. (n.) 1. பூஞ்சோலை; flower garden. *'அன்பரென மன்னுமொரு பூங்கா'* (திருவாத. 4. திருப்பெரு. 16). 2. இன்பந் துய்த்தற் பொருட்டுச் செல்வர் உண்டாக்கிய தோட்டம்; pleasure grove.

ம. பூங்கா

*[பூ+ கா]*

**பூங்காடு** *pūṅkāḍu,* பெ. (n.) இளங்காடு; young forest.

*[பூ + காடு. பூ = இளமை. புள் → பிள் → பீள் = இளங்கதிர், இளமை. புகு → பூ → போ → போத்து = இளங்கிளை. புகு → பூ. கடு → காடு ]*

**பூங்காம்பு** *pūṅ-kāmbu,* பெ. (n.) பூ செடியுடன் பொருந்தியிருக்கும் உறுப்பு; flower stalk.

க. பூதொடம்பெ

*[பூ + காம்பு]*

**பூங்காய்** *pūṅkāy,* பெ. (n.) பூம்பிஞ்சு பார்க்க; see *pūmpiñju.*

து. பூகாயி

*[பூ + காய்]*

**பூங்கார்** *pū-ṅ-kār,* பெ. (n.) நான்கு மாதத்தில் விளையும் நெல்வகை; (G.Tj.D.I.94.); a kind of paddy maturing in four months.

*[பூ + கார். கர் → கரு → கார் ]*

**பூங்காரம்**[1] *pū-ṅ-kāram,* பெ. (n.) பூ நீற்றுக் காரம்; impure carbonate of soda, nitre.

*[ பூ + காரம் ]*

**பூங்காரம்**[2] *pū-ṅ-kāram,* பெ. (n.) மந்தாரம் (யாழ்.அக.); shade, dimness, gloom cast by mist or passing clouds.

**பூங்காரம்**[3] *pūṅkāram,* பெ. (n.) மந்தாரம்; a kind of blue stone.

**பூங்காரை** *pū-ṅ-kārai,* பெ. (n.) **1.** மருக்காரை; common emetic nut. **2.** நெல்வகை; a kind of paddy. (Nels.**99.**)

*[ பூ + காரை. கர் → கரு → கார் → காரை]*

**பூங்காலா** *pū-ṅ-kālā,* பெ. (n.) கருமை வெண்மை நிறமுள்ள நல்ல தண்ணீர் மீன்வகை, பஞ்சலை; a fresh water fish, dark silvery.

*[ பூ + காலா ]*

**பூங்காலி** *pūṅgāli,* பெ. (n.) பாதிரி; yellow flowered fragrant trumpet-flower tree.

*[ பூ → பூம் + காலி]*



**பூங்காவனம்** *pūṅgāvaṉam,* பெ. (n.) பூங்கா பார்க்க; see pūṅgā. *'மலர்ப்பூங்காவனஞ் சூழொற்றிமா நகரீர்'* (அருட்பா,1. இங்கித92.).

*[ பூங்கா + வனம்]*

Skt. vana > த. வனம்

**பூங்காவி** *pū-ṅ-gāvi,* பெ. (n.) **1.** நீரில் தோய்ப்பதனால் துணியிற் படியும் காவிநிறம்; brown tinge in white cloth due to long use. **2.** காவிக்கல் வகை, செங்காவி; red ochre.

*[பூ + காவி]*

**பூங்கீரை** *pū-ṅ-gīrai,* பெ. (n.) **1.** கீரைவகை; cockscomb greens. **2.** செடிவகை; a plant.

*[பூ + கீரை]*

**பூங்கு** *pūṅgu,* பெ.அ. (adj.) (நாமதீப.772) பல; many.

*[ பொங்கு → புங்கு → பூங்கு ]*

**பூங்குஞ்சு** *pū-ṅ-guñju,* பெ. (n.) பூக்குஞ்சு (இ.வ.) பார்க்க; see *pū-k-kuñju.*

*[ பூ + குஞ்சு. குள் → குய் → குய்ஞ்சு→ குஞ்சு = பறவையின் இளமைப்பெயர். எ-டு: கோழிக்குஞ்சு, புறாக்குஞ்சு. ]*

**பூங்குடம்** *pū-ṅ-guḍam,* பெ. (n.) கரகம்; (இ.வ.); decorated waterpot.

*[ பூ + குடம். குல் → குள் → குளம் → குடம்]*



**பூங்குருவி** *pūṅkuruvi,* பெ. (n.) ஒரு வகைப் பறவை; thrush.

*[பூ + குருவி.]*

**பூங்குருவி வகைகள்**

1. கருப்புவெள்ளை பூங்குருவி
2. சீகாரப் பூங்குருவி
3. செந்தலைப் பூங்குருவி
4. நீலத்தலைப் பூங்குருவி
5. நீலப் பூங்குருவி
6. நீலமலைப் பூங்குருவி



**பூங்குலம்** *pūṅkulam,* பெ. (n.) நாகை மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Nāga paṭṭiṉam dt.

**பூங்குழல்** *pū-ṅ-guḻal,* பெ. (n.) பலவடி நீளம் வளர்வதும் நீலநிறமுடையதுமான கடல்மீன் வகை; a seafish bluish, attaining several feet in length.



**பூங்குளம்** *pūṅkuḷam* பெ. (n.) பூக்கள் நிறைந்த குளம்; tank where flower plants are grown.

க. பூகொள, கூகொள.

*[பூ + குளம். குல் → குள் → குளம் = நீரைத்துளைப்பது போல் முழுகிக் குளிக்கும் நீர்நிலை ]*

**பூங்குறுணல்** *pū-ṅ-kuṟuṇal,* பெ. (n.) பூங்குறு நொய் (யாழ்.அக.) பார்க்க; see *pūṅguṟunoy.*

*[பூங்குறுநெல் → பூங்குறுணல் ]*

**பூங்குறுநெல்** *pū-ṅ-kuṟu-nel,* பெ. (n.) பூங்குறு நொய் பார்க்க; see *pūṅguṟu-noy.*

*[பூங்குறு + நெல்]*

**பூங்குறுநொய்** *pūṅguṟu-noy,* பெ. (n.) நுண்ணிய குறுநொய்; very fine grit.

*[பூ + குறு + நொய் ]*

# பூங்குருவி வகைகள்



நீலத்தலை பூங்குருவி



நீலப்பூங்குருவி



சீகாரப்பூங்குருவி



செந்தலைப் பூங்குருவி



நீலமலைப் பூங்குருவி



வரிப் பூங்குருவி

**பூங்கொடி** *pū-ṅ-goḍi,* பெ. (n.) **1.** மலர் கொண்ட கொடி; flowering creeper. **2.** பெண்; woman. '*புந்திகொளப்பட்ட பூங்கொடியார்*' (திருவாச.36,9). **3.** அழகிய கொடி; beautiful flag. '*பொருந்து பூங்கொடிகளாடைகளாட*' (திருவாலவா.39,20).

*[பூ + கொடி. ஆடவன் பெண்டு ஆகிய இருபாலருள் பெண்டு மிக மெல்லியளாதலின் கொடி எனப்படுவார். இதனாலேயே குறிஞ்சி நிலப் பெண்டிற்குக் கொடிச்சி என்று பெயர். பெண்ணைக் கொடியென உவமையாகு பெயராற் குறிப்பது மட்டுமின்றி, பெண்கொடி என உருவக வாய்பாட்டிற் கூறுவதுமுண்டு. புல், பூண்டு, செடி, கொடி, மரம் என்னும் ஐவகை நிலைத்திணை (தாவர) உயிர்களுள் பெரும்பாலும் மெல்லியதும் விரைந்து வளர்வதும் ஒரு கொள்கொம்பைப் பற்றிப் படர்வதும் கொடியே. பெண்ணைக் கொடியென்று சொன்னவளவிலேயே அவள் ஆடவனிலும் மெல்லியள் என்றும் அவனிலும் விரைந்து வளர்பவளென்றும், ஒரு கொழுநனைத் துணைக் கொண்டே வாழ்பவளென்றும், மூன்று பெண்பாற் குணங்கள் குறிப்பறியக்கிடக்கின்றன. (சொ.க.4)]*

**பூங்கொத்து**[1] *pū-ṅ-gottu,* பெ. (n.) பூவின் தொகுதி; bunch of flowers, a cluster of flowers.

ம. பூதொங்கல்; க. பூகொஞ்சல்

*[பூ + கொத்து. குத்து(கைப்பிடியளவு, திரட்சி) → கொத்து = பூகாய் முதலியவற்றின் குலை]*

**பூங்கொத்து**[2] *pūṅkottu,* பெ. (n.) மஞ்சள்; turmeric plant.

*[பூ + கொத்து]*

**பூங்கொம்பு** *pū-ṅ-gombu,* பெ. (n.) மலர்களையுடைய கிளை; flowered branch "*அணிமலர்ப் பூங்கொம் பகமலி யுவகையில்*" (மணிமே.15,72).

*[பூ + கொம்பு. கொள் → கொண் → (கொண்பு) → கொம்பு]*

**பூங்கொல்லை** *pū-ṅ-gollai,* பெ. (n.) பூங்கா (யாழ்.அக.) பார்க்க; see *pūṅgā.*

*[பூ + கொல்லை]*

**பூங்கோயில்** *pū-ṅ-gōyil,* பெ. (n.) திருவாரூர்சிவாலயம்; the Sivaṉ shrine in Tiruvārūr. '*பொன்றயங்குமதிலாரூர்ப் பூங்கோயில்*' (பெரியபு.மனுநீதி.49) (தேவா.699.5)

*[பூ + கோயில். கோ+இல்–கோயில்]*

**பூங்கோரை** *pū-ṅ-gōrai,* பெ. (n.) **1.** கோரை வகை; edible sedge, **2.** கோரைவகை; sedge with cubins, triquctrous at the base. (A.)

*[பூ + கோரை]*

**பூங்கோலி** *pū-ṅ-kōli,* பெ. (n.) நெல்வகை; a kind of paddy.

*[பூ + கோலி]*

**பூச்சக்கரம்** *pū-c-cakkaram,* பெ. (n.) **1.** பூமண்டலம்; the earth. **2.** நிலநடுக்கோடு; equator. **3.** சக்கரவாணம்; a kind of whirling rocket.

*[பூ + சக்கரம். சருக்கரம் → சக்கரம்]*

**பூச்சக்கரவாளக்குடை** *pū-c-cakkara vāḷa-kkuḍai,* பெ. (n.) கோயில் திருவுருவங்களுக்குப் பிடிக்கும் பெரிய வெண்குடை;

huge, white temple umbrella. '*மதிகொண்ட பூச்சக்கரவாளக் குடையின்*' (திருப்போ சந்நிதி.அலங்கா.49).

*[பூ + சக்கரவாளம் + குடை ]*

**பூச்சக்கரவாளம்** *pū-c-cakkaravāḷam,* பெ. (n.) சக்கரவாளமலை (யாழ்.அக.); range of mountains, supposed to encircle the earth.

*[பூ + சக்கரவாளம்]*

**பூச்சக்கரன்** *pū-c-cakkaraṉ,* பெ. (n.) அரசன் (வின்.); king.

*[பூ + சக்கரன்]*

**பூச்சக்காய்** *pūccakkāy,* பெ. (n.) பூவந்தி (வின்.); see pūvandi.

**பூச்சக்கொட்டை** *pūccakkoṭṭai,* பெ. (n.) பூவந்திக்கொட்டை; three lobed soap nut tree, which produces froth, when agitated with water.

**மறுவ.** பூந்திக்கொட்டை, பூவந்தி, பூச்சக்காய்

**பூச்சட்டி** *pūccaṭṭi,* பெ. (n.) பூந்தொட்டி பார்க்க; see pūntoṭṭi.

**ம.** பூச்சட்டி

*[பூ+ சட்டி ]*

**பூச்சட்டை** *pū-c-caṭṭai,* பெ. (n.) **1.** தெய்வத்திற்குப் பூவினாற் செய்தணியும் அங்கி (இ.வ.); garment of flowers put on a deity. **2.** பூத்தொழில் அமைத்த துகிற்சட்டை; garment embroidered with floral designs. **3.** குடலைக்கதிர் (வின்.); ear of grains in blossom.

*[பூ+ சட்டை ]*

**பூச்சர்க்கரைக்கிழங்கு** *pū-c-carkkarai-k-kiḻaṅgu,* பெ.(n.)நிலப்பூசனி; panicled bindweed.

*[பூ + சர்க்கரை + கிழங்கு ]*



**பூச்சரக்கல்** *pūccara-k-kal,* பெ. (n.) சுக்கான் கல்; lime stone.

*[பூச்சரம் + கல் ]*

**பூச்சரம்** *pū-c-caram* பெ. (n.) மலர்மாலை; a garland or chaplet of flowers.

**க.** பூசர

*[பூ + சரம் ]*

**பூச்சருக்கரைக்கிழங்கு** *pūccarukkarai-kiḻaṅgu,* பெ. (n.) நிலப்பூசனி; panicled bind weed.

**பூச்சல்லா** *pū-c-callā,* பெ. (n.) பூத் தொழிலமைந்த மெல்லியது துகில் வகை (இ.வ); muslin embroidered with fine floral designs.

*[பூ + சல்லா ]*

**பூச்சாண்டி** *pūccāṇḍi,* பெ. (n.) குழந்தைகளுக்கு அச்சமுண்டாக்கும் உருவம்; an imaginary being, invoked to frighten children; bugbear, hobgoblin.

*[பூச்சி + ஆண்டி – பூச்சியாண்டி → பூச்சாண்டி]*

**பூச்சாண்டிகாட்டு–தல்** *pūccāṇḍi-kāṭṭu-,* 15 செ.குன்றாவி. (v.t.) அச்ச(பய)ங்காட்டுதல்; to frighten with a bugbear, as children.

*[பூச்சி + ஆண்டி – பூச்சியாண்டி → பூச்சாண்டி + காட்டு. காண் (த.வி.) - காட்டு (பி.வி.)]*

**பூச்சாத்து** *pū-c-cāttu,* பெ. (n.) திருவரங்கத்தில் ஆடவை(ஆனி)மாதம் நடக்கும் திருவிழா (இ.வ.); a festival in Tiruvarangam (Srirangam) temple in the month of āṇi.

*[பூ + சாத்து]*

**பூச்சாயை** *pū-c-cāyai,* பெ. (n.) நிலவுருண்டையின் நிழல்; shadow of the earth.

*[பூ + சாயை]*

**பூச்சாரம்¹** *pū-c-cāram,* பெ. (n.) நிலவளம்; fertility of the soil.

*[பூ + சாரம். சாறு → சாறம் → சாரம்]*

**பூச்சாரம்²** *pū-c-cāram,* பெ. (n.) **1.** பூவின் சாரம்; essence of flowers. **2.** பூநீறு; efflorescence grown on the soil of fuller's earth. **3.** பூவழலை; a mineral substance collected from the soil of washerman's earth.

*[பூ + சாரம்]*

**பூச்சாறு** *pū-c-cāṟu,* பெ. (n.) பூவின்சாறு; juice of flowers.

*[பூ + சாறு]*

**பூச்சி¹** *pūcci,* பெ. (n.) **1.** சிற்றுயிரி (செந்து); insect, beetle, worm or any small reptile. **2.** குடற்புழு; worms in the intestines.

ம. பூச்சி; க. பூசி, பூசி; பட. கூ

*[புல் → புர் → புரை = உட்டுளை, உட்டுளைப்பொருள். புல் → புள் → புழு = துளைத்தரிக்கும் சிற்றுயிரி (வே.க.3.101–104) புல் → பூள் → பூய் → பூய்ச்சி → பூச்சி]*

**பூச்சி²** *pūcci,* பெ. (n.) குழந்தைகளை அச்சுறுத்தற்கேனும் சிரிப்பிப்பதற்கேனும் சொல்லும் சொல் (கொ.வ.); word meaning hobgoblin, used either to frighten or make children laugh.

*[புள் → புய் → புய்ச்சி → புச்சி → பூச்சி = பெரியது]*

**பூச்சி³** *pūcci,* பெ. (n.) சிறுவர் விளையாட்டு; a children game.

*[புள் → புய் → புய்ச்சி → புச்சி → பூச்சி]*

பூச்சி என்பது ஆள்நிழல். நிலவொளியிற் பூச்சி தெரியும் போது ஒருவரைத் தொடும் விளையாட்டு பூச்சி அல்லது பூச்சிவிளையாட்டு. ஆடுவாருள் ஏதேனுமொரு வகையில் அகப்பட்டுக் கொண்ட ஒருவர், நிலவொளியிடத்தில் நிற்க, ஏனையரெல்லாம் அருகேயுள்ள ஓர் இருண்ட இடத்தில் நின்று கொள்வர்.

இருண்ட இடத்தில் நிற்பவர் ஒளியிடத்திற்குவரின், அவரைத் தொடலாம்; இல்லாவிடின் தொடல் கூடாது. ஒளியிடத்தில் தொடப்பட்டவர் பின்பு பிறரைத் தொடுதல் வேண்டும் (கு.வி.122)

**பூச்சிக்கடி** *pūcci-k-kaḍi,* பெ. (n.) 1. பூச்சியின் கடி; insect-bite, sting of an insect. 2. பூச்சியால் உடலிற் பரவும் பற்று; worms, parasites, 3. புண்கட்டிவகை (வின்.); an eruption of the skin, herpes.

*[பூச்சி + கடி ]*

**பூச்சிக்கள்ளி** *pūcci-k-kaḷḷi,* பெ. (n.) கள்ளிவகை; cochineal fig, a cactus.

**பூச்சிக்கூடு** *pūcci-k-kūḍu,* பெ. (n.) 1. பூச்சிகள் வாழும் கூடு; insect-nest. 2. பூச்சிகளை யடைத்து வைக்குங் கூடு; cage for insects.3. காதணி வகை (வின்.); golden cylindrical ear-ring worn in the lobe of the ear.

*[பூச்சி + கூடு. பண்டைநாளில் பாம்படம் (நாகபடம்), தண்டொட்டி, அரிசித்தழும்பு, பூச்சிக்கூடு, மேலீடு என்னும் ஐவகைக் காதணிகளை அணிந்து வந்தனர்.]*

**பூச்சிக்கொட்டை** *pūcci-k-koṭṭai,* பெ. (n.) நெய்க்கொட்டான்; soapnut.

*[பூச்சி + கொட்டை ]*

**பூச்சிகாட்டு-தல்** *pūcci-kāṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) அச்சங்காட்டுதல்; to frighten children by distortions of face or grimaces. *'பூச்சிகாட்டித் திரியும் புத்தி யென்ன'* (கொண்டல் விடு.66).

*[பூச்சி + காட்டு-, காண்(த.வி.) – காட்டு (பி.வி.) ]*

**பூச்சிகொல்லி** *pūcci-kolli,* பெ. (n.) (பூச்சியைக்கொல்வது) வசம்பு; sweet - flag, as insecticide.

மறுவ. பிள்ளைவளர்த்தி,பேர் சொல்லாதது

*[பூச்சி + கொல்லி. கொல் → கொல்லி. 'இ' வினைமுதலீறு ]*

**பூச்சிகொல்லிமருந்து** *pūcci-kolli - marundu,* பெ. (n.) *பூச்சிகொல்லி* பார்க்க; see *pūcci-kolli.*

*[பூச்சிகொல்லி + மருந்து]*

**பூச்சித்துளை** *pūcci-t-tuḷai,* பெ. (n.) பூச்சிகள் இருக்கும் துளை; worm hole.

*[பூச்சி + துளை. துல் → துள் → துளை ]*

**பூச்சிதம்** *pūccidam,* பெ. (n.) மதிப்பு; esteem. *'பூச்சிதந்தௌத்தியம்'* (விநாயகபு.69,60).

*[பூச்சியம் → பூச்சிதம் ]*

**பூச்சிநோய்** *pūcci-nōy,* பெ. (n.) வயிற்றில் புழுவுண்டாம் நோய்வகை; worms.

*[பூச்சி + நோய் ]*

**பூச்சிப்பல்** *pūcci-p-pal,* பெ. (n.) சொத்தைப்பல்; carious tooth.

*[பூச்சி + பல் ]*

**பூச்சிப்பொடி** *pūcci-p-poḍi,* பெ. (n.) பூச்சிக்கொல்லி மருந்து; worm powder, vermifuge.

*[பூச்சி + பொடி ]*

**பூச்சிபற–த்தல்** *pūcci-para-,* 3 செ.கு.வி (v.i.) பேரொளி, பெருஞ்சோர்வு முதலிய காரணங்களாற் கண்கூசுதல்; to be blurred as the eyes from glare weakness or defective sight. *'இக்கட்டடத்தைப் பார்க்கும் போது கண்பூச்சி பறக்கின்றது'.*

*[பூச்சி + பற–,]*

**பூச்சிபிடி[1]–த்தல்** *pūcci-pidi-,* 4 செ.கு.வி. (v.i.) பண்டம் புழுவுண்டாகிக் கெட்டுப் போதல்; to infested with worms to become wormy. அரிசி பூச்சிபிடித்துவிட்டது.

*[பூச்சி + பிடி–,]*

**பூச்சிபிடி[2]–த்தல்** *pūcci-pidi-,* 4 செ.குன்றாவி. (v.t.) பிறர் விருப்பப்படி (இச்சகமாக) நடத்தல்; to coax. 2. வேண்டாதவிடத்து மிகுந்த எச்சரிக்கையுடன் செயல் செய்தல்; to handle gingerly. என்ன பூச்சி பிடிக்கிறாய்?

*[பூச்சி + பிடி–,]*

**பூச்சிபூச்சியெனல்** *pūcci-pūcci-yenal,* பெ. (n.) 1. தேவையின்றி அச்சப்படற் குறிப்பு; onom, expr. of being unnecessarily afraid. 2. அச்சுறுத்துதற் குறிப்பு; onom. expr, of being frightening.

*[பூச்சி + பூச்சி + எனல்]*

**பூச்சிமருந்து** *pūcci-marundu,* பெ. (n.) பூச்சி கொல்லி பார்க்க; see pūcci -kolli.

*[பூச்சி + மருந்து. மரு → மருந்து]*

**பூச்சிமிரட்டு** *pūcci-miraṭṭu,* பெ. (n.) பொய்யாக அச்சங்காட்டுகை (கொ.வ.); false of feigned threat.

*[பூச்சி + மிரட்டு]*

**பூச்சியடி–த்தல்** *pūcci-y-adi-,* 4 செ.குன்றாவி. (v.t.) பயிருக்கு நோயுண்டாதல்; to infest with worms, as of plants etc.

*[பூச்சி + அடி–]*

**பூச்சியத்துவம்** *pūcciyattuvam,* பெ. (n.) மதிப்பு (கௌரவம்); honour, respect. *'கிருகத்தனுக்கு பூச்சியத்துவஞ் சொல்லும்'* (சிவசமவா. 65).

*[பூசு → பூச்சியம் → பூச்சியத்துவம்]*

Skt. tva > த. துவம்

**பூச்சியம்** *pūcciyam,* பெ. (n.) 1. மதிக்க (கௌரவிக்க)த் தக்கது; that which is venerable, worthy of worship. 2. நன்மதிப்பு; honour, reputation *'நிலை தவறாத் தானத்திற் பூச்சியமே சாரும்'* (தனிப்பா. ii. 279, 665). 3. பகட்டாரவாரம் (ஆடம்பரம்) (வின்.); ostentation, display.

*[பூசுதல் = கழுவுதல். பூசு → பூசை = தெய்வச் சிலையைக் கழுவிச்செய்யும் வழிபாடு. பூசு → பூசித்தல் = வழிபாடு செய்தல். பூசு → பூச்சு = தடவுகை, மெழுகுகை. பூசு → பூச்சு → பூச்சியம். 'இயம்' ஓர் ஈறு. ஒ.நோ: இலக்கியம்]*

**பூச்சியன்[1]** *pūcciyan,* பெ. (n.) வழிபாட்டிற் குரியவன், வணக்கத்திற்குரியவன்; one who is venerable.

*[பூச்சியம் → பூச்சியன்]*

**பூச்சியன்²** *pūcciyaṉ*, பெ. (n.) கறுப்பும், வெள்ளையுமான புள்ளிகளுடைய வண்டிமாடு (யாழ்ப்ப.); draught ox of grey and white spots.

*[பூச்சியம் → பூச்சியன். பூச்சி = (பூச்சிபோன்ற) புள்ளி]*

**பூச்சியாள்(ளு)-தல்** *pūcci-y-āḷ(ḷu)-*, 12 செ.கு.வி. (v.i.) இலை முதலியவற்றை யரிக்கும் பூச்சிகள் மிகுந்திருத்தல்; to be infested with insects as a garden. பூந்தோட்டம் பூச்சியாளவும் (S.I.I.iv, 150)

*[பூச்சி + ஆள்-,]*

**பூச்சிரோகம்** *pūcci-rōgam*, பெ. (n.) *பூச்சி நோய்* பார்க்க; see *pūcci-nōy* (M.L.)

*[பூச்சி + ரோகம்]*

Skt. roha > தரோகம்.

**பூச்சிலை** *pū-c-cilai*, பெ. (n.) கல்வகை (யாழ்.அக.); a kind of stone.

*[பூ + சிலை]*

**பூச்சிவிடு-தல்** *pūcci-viḍu-*, 20 செ.கு.வி. (v.i.) *பூச்சி காட்டு-தல்* (யாழ்.அக.) பார்க்க; see *pūcci-kāṭṭu-*.

*[பூச்சி + விடு-,]*

**பூச்சிவிளக்கநூல்** *pūcci-viḷakka-nūl*, பெ. (n.) பூச்சிகளைப் பற்றிய நூல் (புதுவை.); entomology.

*[பூச்சி + விளக்கம் + நூல்]*

**பூச்சிவிதை** *pūcci-vidai*, பெ. (n.) பூச்சியரித்த விதை; worm seed.

*[பூச்சி + விதை]*

**பூச்சிவெட்டு** *pūcci-veṭṭu*, பெ. (n.) 1. வழுக்கை; baldness, loss of hair, alopecia (M.L.) 2. குழிந்த கண்; bleared or sunken eyes, blepharitis (M.L.) 3. ஆடைகளில் பூச்சிகளால் ஏற்படும் துளை; damage to clothes, caused by insects.

*[பூச்சி + வெட்டு]*

**பூச்சீட்டு** *pū-c-cīṭṭu*, பெ. (n.) ஆறுமாதங்கட்கு ஒருமுறை பணஞ் செலுத்தும் சீட்டு; a chit fund at which subscriptions are payable halfyearly (G.Tn.D.I, 194).

*[பூ + சீட்டு. சுள் → (சுட்டு) → சிட்டு → சீட்டு]*

**பூச்சு** *pūccu*, பெ. (n.) 1. தடவுகை; daubing, smearing, anointing. *'தேசுற்றிடு பூச்சன்பொடு சேர்ப்பார்'* (சிவரக. நைமிச. 26). 2. மேற்பூசுகை; coating, gilding plating, tinning, plastering. *'பொன் பொருவ நொய்யர் புனை பூச்சுடைமை'* (பிரபோத. 11, 66). 3. கஞ்சிப்பசை (வின்); starch. 4. மருந்துப் பற்று; medicinal paste, plaster. 5. வெளிப்பகட்டு (வின்); external show, pretence. 6. குற்றம் முதலியன மறைக்கை (வின்); concealment of one's poverty or defects assuming appearance. 7. இதமான செயல் முதலியன; soothing act or word. *'மற்றோர் பூச்சிலை'* (தேவா. 351, 4).

ம. பூசல், பூச்சு; க. பூசு

*[பூசு → பூச்சு]*

**பூச்சுத்தயிலம்** *pūccu-t-tayilam,* பெ. (n.) பூச்செண்ணெய் பார்க்க; see pūccēṇṇey.

*[பூச்சு + தயிலம்]*

Skt. taila > த. தயிலம்

**பூச்சுப்புடைவை** *pūccu-p-puḍaivai,* பெ. (n.) கஞ்சிப்பசையிட்ட புடைவை (வின்.); cloth sized with starch.

*[பூச்சு + புடைவை]*

**பூச்சுமருந்து** *pūccu-marundu,* பெ. (n.) பூசுமருந்து பார்க்க; see pūšumarundu.

*[பூசு → பூச்சு + மருந்து]*

**பூச்சுவேலை** *pūccu-vēlai,* பெ. (n.) 1 சுவர்களிற் சுண்ணந் தீற்றும் வேலை; plastering. *'வீட்டிற் பூச்சுவேலை நடக்கிறது'* 2. முலாமிடும் வேலை; plating, gilding, tinning. *'இந்த நகை பூச்சு வேலையுள்ளது'* 3. வெளிப்பகட்டு (இ.வ.); showy work, anything superficial.

*[பூசு → பூச்சு + வேலை]*

**பூச்சூட்டு** *pū-c-cūṭṭu,* பெ. (n.) முதற் கருவுற்ற மகளிர்க்கு ஐந்து அல்லது ஏழாம் மாதத்திற் கூந்தலைப் பூவால் அழகுபடுத்தி (அலங்கரித்து) பிறந்தகத்தில் நிகழ்த்துஞ் சடங்கு; ceremony of adorning with flowers the head of a young woman in the fifth or seventh month of her first pregnancy performed in her father's house.

*[பூ + சூட்டு. சூடு → சூட்டு]*

**பூச்சூடு—தல்** *pū-c-cūḍu-,* 5 செ.கு.வி. (v.i.) பூவை அணிந்து கொள்ளுதல்; to adorn hair etc, with flower. காலையில் பூச்சூடுதல் மகளிர்க்கு மகிழ்ச்சி தரும். (உ.வ.)

*[பூ + சூடு-,]*

**பூச்செடி** *pū-c-ceḍi,* பெ. (n.) பூக்கும் செடி; flower plant.

க. பூகிடு, பூகிட

*[பூ + செடி]*

**பூச்செண்டு** *pū-c-ceṇḍu,* பெ. (n.) பூவினாலமைந்த செண்டு; bouquet of flowers.

க. பூசெண்டு, பூதுண்டு, கூ. செண்டு,

பூதொங்கல்; து. பூகொளிம்மை

*[பூ + செண்டு]*

**பூச்செண்ணெய்** *pūcceṇṇey,* பெ. (n.) மேலே பூசும் எண்ணெய்; liniment externally applied.

*[பூசு → பூச்சு + எண்ணெய்]*

**பூச்சேலை** *pū-c-cēlai,* பெ. (n.) பூவேலை யமைந்த புடைவை; saree decorated with floral designs.

*[பூ + சேலை]*

**பூச்சை** *pūccai,* பெ. (n.) பூனை (நாஞ்); cat.

ம. பூச்ச; து. பூசெ, பூச்செ; கோத. பீச்; குட. பூஞெ

E. felis; L.feles

*[பூசு → பூசை → பூச்சை]*

**பூச்சையநாய்க்கன்பணம்** *pūccaiya-nāykkaṉpaṇam,* பெ. (n.) பழைய நாணய வகை (பணவிடு, 140); a coin formerly current in South India.

**பூச்சொக்கா** *pū-c-cokkā,* பெ. (n.) *பூச்சொக்காய்* பார்க்க; see *pū-c-cokkāy.*

*[ பூ + சொக்கா ]*

**பூச்சொக்காய்** *pū-c-cokkāy,* பெ. (n.) பூவேலையுள்ள துணியிற்றைத்த சட்டை; long jacket embroidered with floral designs.

*[ பூ + சொக்காய் ]*

**பூசக்கரம்** *pū-šakkaram,* பெ. (n.) *பூச்சக்கரம்* (துக்கயாகப். 6, உரை) பார்க்க; see *pū-c-cakkaram.*

*[ பூச்சக்கரம் → பூசக்கரம் ]*

**பூசக்கரவாளம்** *pū-šakkaravāḷam,* பெ. (n.) பூச்சக்கரவாளம் (யாழ்.அக.) பார்க்க; see pū-c-cakkaravāḷam.

*[ பூச்சக்கரவாளம் → பூசக்கரவாளம்]*

**பூசக்கரன்** *pū-šakkaraṉ,* பெ. (n.) பூச்சக்கரன் (யாழ்.அக.) பார்க்க; see pū-c-cakkaraṉ.

*[ பூச்சக்கரன் → பூசக்கரன் ]*

**பூசகம்** *pūšagam,* பெ. (n.) பூமிசருக்கரைக் கிழங்கு; a kind of sweet root.

**பூசகன்** *pūšagaṉ,* பெ. (n.) கோயிற் பூசாரி (அருச்சகன்); one who performs worship, temple-priest.

*[ பூசு → பூசி → பூசை → பூசகன் = பூசை செய்பவன் ]*

**பூசணம்¹** *pūšaṇam,* பெ. (n.) 1. பூஞ்சணம் 2. பார்க்க; see pūñ-jaṇam. 2-2. அழுக்கு (யாழ்.அக.); dirt.

*[ பூஞ்சணம் → பூசணம் ]*

**பூசணம்²** *pūšaṇam,* பெ. (n.) நேர்த்திக் கடனாக முடித்து வைக்கும் காசு முதலியன; coin tied in a piece of cloth and set apart as a votive offering. *'ஒரு பணமெடுத்து பூசண முடிந்துவை'* (நாஞ்.).

*[ பூசை → பூசணம் = பூசைக்காக ஒதுக்குவது ]*

**பூசணி¹** *pūšaṇi,* பெ. (n.) 1. சமையலுக்குப் பயன்படும் முட்டை வடிவத்து அல்லது உருண்டை வடிவத்துப் பெரும் காயைத் தரும் செடி (நாமதீப.333); pumpkin plant. 2. சர்க்கரைப் பூசணி; squash gourd. 3. பூசணிவகை; true musk melon.

*[ பூ + சுணை – பூசுணை → பூசணி. சுள் → சுண் → சுணை = இலைகாய் முதலியவற்றிலுள்ள சிறுமுள் ]*



**பூசணி**[2] *pūsaṇi,* பெ. (n.) அடைக்கலங் குருவி; sparrow.



**பூசணிக்காய்** *pūšṇi-k-kāy,* பெ. (n.) பூசணிச் செடியின் காய்; pumpkin.

*[பூசணி + காய். 'பூசணி[1]' பார்க்க ]*

**பூசணிக்கொடி** *pūšaṇi-k-koḍi,* பெ. (n.) பூசணிச் செடியின் கொடி; pumpkin climber.

*[பூசணி + கொடி ]*

**பூசந்தி** *pū-šandi,* பெ. (n.) இரு பெருங்கடலைப் பிரிக்கும் ஒடுக்கமான நிலம் (இ.வ.); isthmus.

*[பூ + சந்தி. சந்து → சந்தி ]*

**பூசநீர்** *pūšanīr,* பெ. (n.) வழலையுப்பு; a salt, exteracted from Dhobys earth, fullers earth.

**பூசபத்திரி** *pūšapattiri,* பெ. (n.) ஒரு கடைச் சரக்கு; a bazaar drug.

**பூசம்** *pūšam,* பெ. (n.) **1.** உந்தி; naval. **2.** புடல்; gourd.

**பூசரக்கல்** *pūšara-k-kal,* பெ. (n.) சுக்கான் கல்; lime stone.

**பூசரி** *pūšari,* பெ. (n.) கண்கள் அசையாமல் மூக்கின் நுனியைப் பார்ப்பது; seeing the tip of the nose with the eyes.

**பூசரிமுத்திரை** *pūšari-muttirai,* பெ. (n.) தாமரை யிருக்கையிலிருந்து கொண்டு மூக்கு நுனியைப் பார்த்திருக்கும் ஒக நிலை; (yōga.) a posture in which a yōgi seated in padumāšanam, gazes at the tip of his nose.

*[பூ + சரி + முத்திரை ]*

**பூசருக்கரை** *pūšarukkarai,* பெ. (n.) **1.** உப்பு; common salt. **2.** சீந்திற் சருக்கரை; a bitter substance prepared from the stalk of the moon plant.

*[பூ + சருக்கரை ]*

**பூசல்**[1] *pūšal,* பெ. (n.) **1.** போர்; battle. *'ஆன பூசலறிந்திலம்'* **(கம்பரா. உலாவியல். 34). 2.** பேரொலி; clamour, loud uproar. *'அரற்றும் பூசலார்'* **(கம்பரா. இராவணன்வதை. 228). 3.** பலருமறிய வெளிப்படுத்துகை; making known, publishing. *'புன்கணீர் பூசறரும்'* (குறள், **71.) 4.** கூப்பீடு; wailing, lamentation, complaining, crying. *'மாய்ந்த மகனைச் சுற்றிய சுற்றம் ஆய்ந்த பூசன் மயக்கத்தானும்'* (தொல். பொ. **79) 5.** வருத்தம்; distress. *'கண்ணுறு பூசல் கைகளைந் தாங்கே'* **(கலித். 34.).**

**ம.** பூயல்; **க.** புய்யல்,

*[பூசு → பூசல் = போர், ஆராவாரம் (மு.தா. 171) ]*

**பூசல்**[2] *pūšal,* பெ. (n.) ஒப்பனை (சூடா.); decoration, adornment.

*[பூசு → பூசல் ]*

**பூசல்³** *pūšal,* பெ. (n.) பூசுதல்; smearing, daubing.

*[பூசு + அல் – பூசல். 'அல்' தொ.பெ.ஈறு]*

**பூசல்நாயனார்** *pūšal-nāyaṉār,* பெ. (n.) பூசலார் நாயனார் பார்க்க; see pūšalār nāyaṉār.

*[பூசல் + நாயனார்]*

**பூசல்நெற்றி** *pūšal-neṟṟi,* பெ. (n.) போர் முகம்; field of battle. *'பூசல் நெற்றியிலே அவனழியும் படியாக'* (திவ். பெரியதி. 4, 6, 4. வ்யா).

*[பூசல் + நெற்றி]*

**பூசலார்நாயனார்** *pūšalār-nāyaṉār,* பெ. (n.) நாயன்மார் அறுபத்து மூவருள் ஒருவர் (பெரியபு.); a cononized šaiva saint one of 63.

*[பூசலார் + நாயனார். நாயன் + நாயனார்]*

**பூசலிசை–த்தல்** *pūšal-išai-,* 4 செ.கு.வி. (v.i.) கலகச் சொல்லால் சண்டை மூட்டுதல்; (தொல். பொ. 313. உரை); to stir up a quarrel with angry words.

*[பூசல் + இசை–, இயை → இசை]*

**பூசலிடு–தல்** *pūšal-iḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. முறையிடுதல்; to complain loudly. *'காலந்தோறும் யானிருந்து கைதலை பூசலிட்டால்'* (திவ். திருவாய். 4, 7, 1). 2. பேரொலிபடக் கதறுதல்; to cry loudly. *'அன்பாற் புரண்டரும் பூசலிட்டாள்'* (கம்பரா. மாயாச. 32). 3. கூட்டுதல்; to join, unite. (ஈடு, 5, 1, 7.).

*[பூசல் + இடு–, ]*

**பூசலை** *pūšalai,* பெ. (n.) பூசலார் நாயனார் பார்க்க; see *pūšalār nāyaṉār. 'பூசலை சண்டேசன்'* (சேக்கிழார். பு. 38.).

*[பூசலார் (நாயனார்) → பூசலை மரூஉ]*

**பூசற்களம்** *pūšaṟkaḷam,* பெ. (n.) போர்க்களம் (அகநா. 89, உரை); battle-field.

*[பூசல் → களம். குல் → குள் → கள் களம்]*

**பூசற்களரி** *pūšaṟ-kaḷari,* பெ. (n.) பூசற்களம் (பு. வெ. 9, 19, உரை) பார்க்க; see pūšaṟ-kaḷam.

*[பூசல் + களரி. குல் → குள் → கள் → களம் = கூட்டம். கள் → களர் → களரி = அவை, போர்க்களம்]*

**பூசற்கோழை** *pūšaṟ-kōḻai,* பெ. (n.) போர்க்கு அச்சப்படுபவன்; coward in battle. *'இப்போதாகப் பூசற்கோழைகளாக வொண்ணாது'* (திவ். பொரியதி. 7, 5, 3).

*[பூசல் + கோழை]*

**பூசற்பறை** *pūšaṟ-paṟai,* பெ. (n.) பாலை நிலப்பறையுள் ஒன்று (இறை. 1, பக், 18); a drum of the desert tract.

*[பூசல் + பறை]*

**பூசற்பாக்கியம்** *pūšaṟpākkiyam,* பெ. (n.) வெற்றித்திரு (ஈடு.10,6,8); the goddess of victory.

*[பூசல் + பாக்கியம்]*

Skt. bhāgya > த. பாக்கியம்

**பூசற்றண்ணுமை** *pūšar̠ ran̠n̠umai*, பெ. (n.) பகைவருடன் போர் புரிவதற்காக வீரரை அழைத்தற்குக் கொட்டும்பறை(நன். 380); drum used for calling men to arms.

*[பூசல் + தண்ணுமை]*

**பூசற்றுடி** *pūšar̠r̠uḍi*, பெ. (n.) பூசற்பறை பார்க்க; see pūšar̠par̠ai. *'பூசற்றுடி பூசலறாப் புனவாயில்'* (தேவா. 889, 7).

*[பூசல் + துடி]*

**பூசறு—த்தல்** *pūšar̠u-*, 4 செ.குன்றாவி. (v.t.) வாய் முதலியன கழுவுந் தொழிலை முடித்தல்; to finish the work of washing or cleansing the mouth, etc., *'பொடியு நீருங்காட்டிடக் கொண்டு வாய்ப்பப் பூசறுத்து'* (சீவக.1302).

*[பூசு + அறு.பூசுதல் = கழுவுதல். அர் → அறு]*

**பூசன்மயக்கு** *pūšan̠-mayakku*, பெ. (n.) 1. குல முதற்பிள்ளை யிறக்கச் சுற்றத்தார் புலம்புதலைச் சொல்லும் புறத்துறை. (பு. வெ. 10, சிறப். 6); (purap.) theme describing the wailing of kinsfolk on the death of a young warrior. 2. வேந்தன் இறந்து பட்டானாக அவனது குடிகள் இரங்குதலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 10, சிறப். 7); (purap.) theme describing the wailing of the subjects on the death of their king.

*[பூசல் + மயக்கு]*

**பூசன்மாற்று** *pūšan̠-mār̠r̠u*, பெ. (n.) நிரை கவர்ந்த வெட்சியார் மீட்க வந்த கரந்தையாரைப் போரிலழித்தமை கூறும் புறத்துறை (பு. வெ. 1, 10); (pur̠ap.) theme describing the success of the invaders seizing the cows and defeating the forces that pursue to recover them.

*[பூசல் + மாற்று. மாறு → மாற்று]*

**பூசனம்**[1] *pūšan̠am*, பெ. (n.) பூசை, வழிபாடு (ஆராதனை); solemn ritual, worship, devotion. *'நரிப்பரியைப் பூசனஞ் செய்து'* (திருவிளை. நரிபரி. 120).

*[பூசை → பூசனம்]*

**பூசனம்**[2] *pūšan̠am*, பெ. (n.) பூஞ்சணம் (இ.வ.); mould.

*[பூஞ்சணம் → பூசணம் → பூசனம்]*

**பூசனி**[1] *pūšan̠i*, பெ. (n.) பூசணி[1] பார்க்க; see pūšaṇi.

*[பூ + சுணை → பூசுணை → பூசணி → பூசனி]*

**பூசனி**[2] *pūšan̠i*, பெ. (n.) பூஞ்சணம் (யாழ்.அக.) பார்க்க; see puñjaṇam.

*[பூஞ்சணம் → பூசணம் → பூசணி → பூசனி]*

**பூசனி**[3] *pūšan̠i*, பெ. (n.) அடைக்கலாங் குருவி (யாழ்.அக.); sparrow.

*[பூசணி → பூசனி ]*

**பூசனிக்காய்க்கொத்துமணி** *pūšan̠i-k-kāy-k-kottu-maṇi*, பெ. (n.) கழுத்தணிவகை; necklace having pumpkin shaped beads.

*[பூசனிக்காய் + கொத்துமணி]*



**பூசனை** *pūšaṉai,* பெ. (n.) 1. அன்றாட வழிபாடு; daily, ritual or worship *'சிறப்பொடு பூசனை செல்லாது'* (குறள், 18). 2. மதிப்பளிக்கை; honouring. *'பூசனை வரன்முறை யியற்ற'* (கம்பரா. படைக்கா. 30).

க. பூசன, பூசனெ

*[பூசை → பூசனை]*

**பூசனைபடை-த்தல்** *pūšaṉai-paḍai-,* 4 செ.கு.வி. (v.i.) வணக்கஞ் செய்தல்; to honour, perform worship. *'பார் படைத்தவன் படைக்கொரு பூசனை படைத்தீர்'* (கம்பரா. பிரமா. 184).

*[பூசனை + படை-]*

**பூசாக்கல்** *pūšā-k-kal,* பெ. (n.) சுக்கான்கல் (யாழ்.அக.); kunker, lime-stone.

**பூசாகாலம்** *pūšā-kālam,* பெ. (n.) பூசைக்காலம் பார்க்க; see pūšai-k kālam.

க. பூசாகாலம்

*[பூசை → பூசா + காலம்]*

**பூசாசாரி** *pūšāšāri,* பெ. (n.) பூசாரி (யாழ்.அக.) பார்க்க; see pūšāri.

*[பூசை + ஆசாரி → பூசையாசாரி → பூசாசாரி]*

**பூசாந்தப்படல்** *pūšāṅda-p-paḍal,* பெ. (n.) பூசாந்தப் படலம்(வின்.) பார்க்க; see *pūšānda-p-paḍalam.*

*[பூசை → பூசா → பூசாந்த + படல்]*

**பூசாந்தப்படலம்** *pūšānda-p-paḍalam,* பெ. (n.) சப்பரம் வைக்கும் இடம் (யாழ்ப்.); resting place for capparam.

*[பூசை → பூசா → பூசாந்த + படலம்]*

**பூசாந்தரம்** *pūšāndaram,* பெ. (n.) 1. சேலை வகை (இ.வ.); a saree. 2. நீர் வடியும் புண்கட்டிவகை; lachrymal abscess. (M.L.).

**பூசாந்திப்பட்டை** *pūšāndi-p-paṭṭai,* பெ. (n.) புவந்திப்பட்டை; bark of puvandi.

*[பூசாந்தி + பட்டை]*

**பூசாந்திரக்கடுக்கன்** *pūsāndira-k-kaḍukkaṉ,* பெ. (n.) ஒருவகைக் காதணி (பஞ்ச பூசாவந்தம்); a kind of ear ring.

*[பூசாந்திரம் + கடுக்கன்]*

**பூசாந்திரப்பட்டை** *pūšāndira-p-paṭṭai,* பெ. (n.) ஒரு மருந்துப்பட்டை (தைலவ. தைல. 59); a bark used for medicinal purposes.

*[பூசாந்திரம் + பட்டை]*

**பூசாந்திரம்[1]** *pūšāndiram,* பெ. (n.) ஒருவகைக் காதணி (பஞ்ச பூசாவந்தம்); a kind of ear ring.

**பூசாந்திரம்²** *pūšāndiram,* பெ. (n.) 1. அருமை பண்ணுகை (யாழ்.அக.); making much of. 2. மரவகை (தைலவ. தைல. 59); a tree.

**பூசாந்திரம்³** *pūšāndiram,* பெ. (n.) கடைக்கண்ணில் பீளை சார்ந்து வீக்கம் உண்டாக்குமோர் கண்ணோய்; ophthalmia with purulent discharge.

**பூசாபலம்** *pūšā-palam,* பெ. (n.) தெய்வ வழிபாட்டால் உண்டாம் பயன்; result of one's devotion to god. *'மனத்தாற்புரி பூசாபலம் போலும்'* (பிரமோத். 5, 37).

*[பூசை → பூசா + பலம்]*

Skt. phala > த. பலம்

**பூசாரம்பம்** *pūšārambam,* பெ. (n.) பூசனையின் தொடக்கம்; beginning of ceremonial worship.

*[பூசை → பூசா + ஆரம்பம்]*

Skt. ārambha > த. ஆரம்பம்

**பூசாரி** *pūšāri,* பெ. (n.) 1. சிறு தெய்வத்துக்குக் கோயிலிற் பூசை புரிவோன்; priest of a village deity. 2. பேயோட்டும் மந்திரவாதி; exorcit.

க., து., பட. பூசாரி.

*[பூசை → பூசையாரி → பூசாரி. தலையாரி என்னுஞ் சொல்லிற் போல் ஆரி என்பது ஓர் ஈறு (வ.வ. 2, 40)] 'பூசை²' பார்க்க*

பார்ப்பனர் தமிழரின் மொழி, நூல், மதம், பழக்கவழக்கம் முதலியவற்றையறிந்த பின், முருகன்(சேயோன்) திருமால் (மாயோன்) முதலிய பழந்தனித்தமிழ் தெய்வங்களை ஆரியத் தெய்வங்களாகக் காட்டிப் பழமைகள் (புராணங்கள்) வடமொழியில் வரைந்துகொண்டு மதத்திற் கதிகாரிகளாய்ப் பூசாரித் தொழில் மேற்கொண்டனர். இதுவே அவர்கள் குலத்திற்குத் தமிழ்நாட்டிற் பெருந்தலைமையும் நல்வாழ்வும் தந்தாகும் (ஒ.மொ.29).

**பூசாரிமுத்திரை** *pūšāri-muttirai,* பெ. (n.) தாமரை இருக்கை(பதுமாசனத்தி) யிலிருந்து கொண்டு மூக்குநுனியைப் பார்ப்பதாகிய ஓகவகை (யோகஞானா.34); a yogic posture of looking at the tip of the nose, sitting in padumāšaṉam.

*[பூசாரி + முத்திரை]*

**பூசாரியன்** *pūšāriyaṉ,* பெ. (n.) சடங்கு செய்விக்கும் குரு (புரோகிதன்); family priest.

*[பூசாரி → பூசாரியன்]*

**பூசாலி** *pūšāli,* பெ. (n.) *பூசாரி* (யாழ்.அக.) பார்க்க; see *pūšāri.*

*[பூசை → பூசையாரி → பூசாரி → பூசாலி]*

**பூசாவிதி** *pūšāvidi,* பெ. (n.) *பூசைவிதி* பார்க்க; see *pūšaividi.*

*[பூசை → பூசா + விதி]*

**பூசாவிருத்தி** *pūšāvirutti,* பெ. (n.) கோயிற் பூசைக்கு விட்ட இறையிலி நிலம்; inam land granted for performing worship in a temple. (I.M.P.N.A. 240).

*[பூசை → பூசா + விருத்தி]*

Skt. vṛuddhi > த. விருத்தி.

**பூசி-த்தல்** *pūši-,* 11 செ.குன்றாவி. (v.t.) 1. பூசை செய்தல்; to perform acts of ceremonial worship. *'பூசித்தும் போக்கினேன் போது'* (திவ். இயற். நான்மு. 63). 2. மதிப்பு

(மரியாதை) காட்டுதல்; to treat courteously, reverence. 3. கொண்டாடுதல்; to caress, fondle. *'புதல்வா வெம்மைப் பூசிப்பதே'* (திருக்கோ. 396).

*[பூசுதல் = கழுவுதல். பூசு → பூசி]*

**பூசிக்கொள்(ளு)–தல்** *pūši-k-koḷ(ḷu)-*, 10 செ.குன்றாவி. (v.t.) தடவிக்கொள்ளுதல்; to smear, to anoint. தலையில் எண்ணெய் பூசிக்கொள் (உ.வ).

க. பூசிகொள்

*[பூசி + கொள்–,'கொள்' து.வி]*

**பூசிதன்** *pūšidaṉ*, பெ. (n.) வணங்கப் படுவோன்; person much venerated or revered.

*[பூசி → பூசிதன்]*

**பூசிப்பு** *pūšippu*, பெ. (n.) வணக்கம்; worship, adoration.

*[பூசி → பூசிப்பு. 'பு' தொ.பெ.ஈறு]*

**பூசிப்புணர்த்து–தல்** *pūši-p-puṇarttu-*, 8 செ.குன்றாவி. (v.t.) சந்தனம் பூசி அணிகளையணிதல் (வின்.); to besmear with sandal and adorn with jewels.

*[பூசி + புணர்த்து]*

**பூசிமெழுகு–தல்** *pūši-meḻagu-*, 5 செ.குன்றாவி. (v.t.) குற்றம் நடந்ததாக ஒப்புக்கொள்ளாமல் வேறு ஏதேனும் கூறி மறைத்தல் (கொ.வ.); to slur over a fault, crime or defect, gloss over. உண்மையை நேரடியாகப் பேசு. பூசிமெழுகாதே (உ.வ).

*[பூசு → பூசி + மெழுகு–,]*

**பூசியஉலோகம்** *pūšiyaulōgam*, பெ. (n.) பூசிய மாழை பார்க்க; see pūšiya-māḻai.

*[பூசிய + உலோகம்]*

Skt. ulōha > த. உலோகம்

**பூசியமாழை** *pūšiyamāḻai*, பெ. (n.) மேற்பூசு பூசப்பட்ட மாழை (உலோகம்); coated metal.

*[பூசு → பூசிய + மாழை]*

**பூசினி** *pūsiṉi*, பெ. (n.) *பூசனி¹* பார்க்க; see *pūšaṉi*.

*[பூசனி → பூசினி]*

**பூசு¹–தல்** *pūšu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. தடவுதல்; to besmear, anoint, rub, daub, spread on, plaster. *'நீறுபூசி நிமிர்சடை மேற் பிறை'* (தேவா. 627). 2. மெழுகுதல்; to scrub the floor with cowdung dissolved in water. *'புனலொடு விரவியே பூசினல்லது'* (புரலிங். இட்டலிங். 37). 3. கழுவுதல்; to clean. *'பூசிக் கொளினு மிரும்பின்கண் மாசொட்டும்'* (நான் மணிக். 99). 4. நீரால் அலம்புதல்; to wash, as with water. நீருண்டார் *'நீரான்வாய் பூசுப'* (நான்மணிக் 35).

மறுவ. தரைமெழுகல்

ம. பூசுக; க. பூசு; கூசு; தெ. பூயு; து. புகனி; பட. கூசு.

Skt. pušta (working in clay, modelling) pusta-karman (plastering, painting.)

*[புல்→ பொல்→ பொரு → பொருந் → பொருந்து(மு.தா.166) புல் → புள் → புண் → புணர். புணர்தல் = பொருந்துதல் (வே.க. 3, 64) புல் → புள் → புய் → (புசு) → பூசு]*

**பூசு²–தல்** *pūšu-*, 10 செ.கு.வி. (v.i.) இயைதல்; to gather together. "*ஆயிரமுரு மொன்றாகப் பூசின்*" (கம்பரா. நிரும். 91).

*[புல் → புள் → புய் → (புசு) → பூசு–,]*

**பூசு³** *pūšu*, பெ. (n.) 1. பூசுகை; daubling, smearing. 2. தவசத்தின் உமி அல்லது தொலி; thin skin or pellicle enveloping grains. 3. ஒட்டடை(வின்); cobweb. 4. தூசு (வின்.); dirt.

க. பூசு

*[பூசு¹ → பூசு]*

**பூசு⁴–தல்** *pūšu-*, 12 செ.குன்றாவி. (v.t.) ஒப்பனை செய்தல் (அலங்கரித்தல்) (வின்.); to adorn, decorate.

*[புல் → புள் → புய் → (புசு) → பூசு]*

**பூசுகை** *pūšugai* பெ. (n.) தடவுகை; smearing.

க. பூசு, பூசல், பூசுவிகெ

*[பூசு → பூசுகை. 'கை' தொ.பெ.ஈறு]*

**பூசுசாந்தாற்றி** *pūšu-šāndāṟṟi*, பெ. (n.) சிற்றால வட்டம்; a kind of small, circular fan. '*பூசுசாந்தாற்றி.... நீத்தவரிடத்து நாற்றி*' (சீவக. 1906).

*[பூசு + சாந்தாற்றி]*

**பூசுணி** *pūšuṇi*, பெ. (n.) பூசணி¹ பார்க்க; see pūšaṇi¹ '*தண்டைக்காலம்மை சமைத்து வைத்த பூசணிக்காய்*' (குனிப்பா.).

மருவ. தடியங்காய், பரங்கிக்காய்

*[பூ + சுணை – பூசுணை → பூசணி பூசுணி]*

**பூசுத்தி** *pū-cutti*, பெ. (n.) இலைபோடுமுன் நிலத்தில் நீர் தெளித்துச் செய்யும் தூய்மை (வின்.); cleaning the floor by sprinkling water, as before laying the leaves for dinner.

*[பூ + சுத்தி]*

Skt.suddhi › த. சுத்தி

**பூசுதயிலம்** *pūšu-tayilam*, பெ. (n.) உடம்பின் மீது பூசுதற்குரிய நெய்மம் (யாழ்.அக.); liniment.

*[பூசு + தயிலம்.]*

Skt. taila › த. தயிலம்

**பூசுதன்** *pū-šudaṉ*, பெ. (n.) செவ்வாய் (யாழ்.அக.); mars, as son of the earth.

*[பூ + அதன்]*

Skt.suta › த. சுதன்

**பூசுமஞ்சள்** *pūšumañjaḷ*, பெ. (n.) உடம்பில் இழைத்துப் பூச உதவும் மஞ்சள் கிழங்கு; raw turmeric. பூசுமஞ்சள்தூள் அதிகமாக விற்பனையாகிறது (உ.வ.).

மருவ. கத்தூரிமஞ்சள்

*[பூசு + மஞ்சள். மங்கு → மங்கள் → மஞ்சல் = மங்கலான நிறம், அந்நிறக் கிழங்கு. (மஞ்சள்) மஞ்சல் → மஞ்சள்]*

**பூசுமருந்து** *pūsu-marundu*, பெ. (n.) மேற்பூச்சு மருந்து, உடம்பில் வலியுள்ள பாகத்தில் தேய்க்கும் மருந்து; an ointment or liniment used externally on the affected parts of the body, embrocation.

*[பூசு + மருந்து. மரு → மருந்து. மரு → மருந்து]*

**பூசுரன்** *pūšuraṉ*, பெ. (n.) பார்ப்பனன்; Brahman, considered as god on earth. 'பூசுரன் ஞானசம்பந்தன் சொன்ன' (தேவா.539,11).

*[பூ + சுரன்]*

**பூசுறு-தல்** *pūšuṟu-*, 4 செ.கு.வி. (v.i.) ஒப்பனைசெய்தல் (அலங்கரித்தல்); to adorn. 'பூசுறு பருதியிற் பொலிந்து தோன்றினான்' (சீவக.953).

*[பூசு → பூசுறு-,]*

**பூசை¹** *pūšai*, பெ. (n.) 1. வீட்டுப்பூனை; cat. '*செவ்வாய் வெருகினைப் பூசை யென்றலும்*' (தொல்.பொ.623). 2. காட்டுப் பூனை; wild cat.

ம. புச்ச; து. புச்செ; குட. பூனெ; கோத. பீச்; பிரா. பிழிழி

*[நிலத்திற் பூசிப்பூசி மெத்தென்று நடப்பதால் பூனை பூசை யெனப்பட்டது. பூசு → பூசை (தமிவ.1,28) பூசை என்பது வீட்டுப் பூனையின் பெயர் (தமி.வ,108)*

*நாய்க்கு ஆட்பற்றுப் போல் பூனைக்கு இடப் பற்று மிகுந்திருப்பதால், தொல்வர வுணர்ச்சி மிக்க ஆண்பூனை பருத்துக் கொழுத்த நிலையில் இன்றும் காட்டிற்குச் சென்று கண்டார் அஞ்சத்தக்க வெருவாகி விடுகின்றது.*

*'வெவ்வாய் வெருகினைப் பூசை என்றலும்' (தொல்.மர.19)*

*'வெருக்கு விடையன்ன வெருணோக்கு' (புறம்.324) 'பின்னை வெருகின் முள்ளெயிறு புரைய' (புறம்.117)*

*என்பவற்றால், தமிழகத்திற் காட்டுப் பூனை தொன்று தொட்டு இருந்து வருவதை அறியலாம்*

*இனி, மேலையாரியப் பூனைப் பெயர்கள் தமிழ்ச் சொல்லின் திரிபாயிருத்தலால், தமிழகத்தினின்றே பூனை ஐரோப்பாவிற்குச் சென்றதாகத் தெரிகின்றது.*

*பூசை*–E.puss-pussy; MLG. pus; Norw.puse; Du.poes; L.felis. *இதன் மூலம் தெரியவில்லையென்றும், ஒருகால் முதற் காலத்தில் இது ஒரு பூனை விளிச்சொல்லாயிருந்திருக்கலாமென்றும், எருதந்துறை* (oxford) *ஆங்கிலஅகா முதலி கூறுகின்றது. நெல்லை வட்டாரத்தில் இன்றும் பூனையைப் பூசுபூசு என்று அழைப்பதைக் காணலாம். (தமி.வ.1,28)]*

pūs-ei, a cat, especially in the South Tamil idiom; Mal.pūchcha, in the Cashgar dialect of the Afghan, pusha signifies a cat; comp. Irish pus, a cat; English puss (CGDFL. .600).

**பூசை²** *pūšai*, பெ. (n.) 1. வழிபாடு; worship; homage to superiors; adoration of the gods with proper ceremonies. '*ஈங்கு நீ பூசை செய்வதியாவனை*' (கூர்மபு.கண்ணன் சிவபூசை.1). 2. அடியார் அமுது செய்கை; taking meals, as of devotees 3. செம்மையான அடி(கொ.வ.); flogging, thrashing. நேரம் கழித்து வீட்டுக்குச் சென்றால் பூசை விழும் (உ.வ.).

க., து., பட. பூசெ

*[பூசுதல் = கழுவுதல், தெய்வப் படிமையை நீரால் துப்புரவாக்குதல். பூசு → பூசி. பூசித்தல் = பூச்சாத்தியும் தேங்காய் பழம் முதலியன படைத்தும் வழிபடுதல். உழவு*

*என்பது பயிர்த்தொழிலின் பின் வினைகளையும் குறித்தல்போல், பூசித்தல் என்பது வழிபாட்டின் பின் விளைவுகளையும் குறித்தது. பூசி → பூசை. ஒ.நோ: ஆசு (பற்று) → ஆசி (அவாவு) → ஆசை (அவா.) பூசை → பூசனை → பூசனம். ஐ,அனை,அனம் என்பன தமிழ் ஈறுகளே. பூசை → பூசாரி. ஆரி தலையாரி என்பதிற்போல் ஓர் ஈறு. பூசாச்சாரி (பூசை + ஆச்சாரி) என்னும் வழக்கு வடமொழியிலுமில்லை. பூசெய் என்பது பூசை என்றாயிற்றென்று கொள்வது பொருந்தாது.*

*பூசி* > Skt.pūj. *பூசை* > Skt. pūjā. *பூசனம்* > Skt. pūjana. *பூசனை* > Skt. pūjnā.

*வேத ஆரியர்க்கு வேள்விவேட்டலே யன்றிப் படிமைப்பூசையும் கோவில் வழிபாடும் இல்லை. பூஜ் என்னும் சொல்லும் வேதத்திலில்லை. பாரதம் முதலிய பிற்கால வடபனுவல்களிலேயே அது வழங்குகின்றது. (தி.த.ம.49)]*

pūjā, worship, adoration, etc. Gt. (p.528) thinks it probable that this word has come from. D. pūsu, originally meaning 'anointing with oil' Sk.verb pūj, to worship. etc, would then be the same as D. pūsu. (KKEDxii)

**பூசை³** *pūšai,* பெ. (n.) நெட்டி (பிங்.); pith.

**பூசை⁴** *pūšai,* பெ. (n.) புடலை; snake gourd.

*[புழை → புயை → புசை → பூசை ]*

**பூசைக்கண்** *pūšai-k-kaṇ,* பெ. (n.) பூனைக்கண்; cat-eye,blue-eye.

ம. புச்சகண்; பட. பூசெகண்ணு

*[பூசை + கண்]*

**பூசைக்காணிக்கை** *pūšai-k-kāṇikkai,* பெ. (n.) சிறு வரிவகை (நாஞ்.); a petty cess.

*[பூசை + காணிக்கை]*

**பூசைக்காப்பு** *pūšai-k-kāppu,* பெ. (n.) வேகமாக (பலமாக) அடிக்கை (நெல்லை.); sound beating, thrashing.

*[பூசை + காப்பு. கா → காப்பு]*

**பூசைக்காலம்** *pūšai-k-kālam,* பெ. (n.) பூசைக்குரிய வேளை; time of worship.

க. பூசாகால

*[பூசை + காலம். கால் → காலம்]*

**பூசைக்குறடு** *pūšai-k-kuṟaḍu,* பெ. (n.) *பூசை மேடை* பார்க்க; see *pušai-mēḍai.*

*[பூசை + குறடு]*

**பூசைகொடு—த்தல்** *pūšai-koḍu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. பார்ப்பனர் முதலியோர்க்கு உணவிடுதல்; to feed Brahmans. etc, 2. வலுவாக அடித்தல்; to flog.

*[பூசை + கொடு–,]*

**பூசைசெய்—தல்** *pūšai-šey-,* 1 செ.குன்றாவி. (v.t.) 1. வணக்கம் செலுத்துதல்; to reverence, honour. 2. பூசனை செய்தல்; to worship. திங்கள்தோறும் பூசைசெய்வது அவரது வழக்கம்.

க. பூசிசு; பட. பூசிய மாடு

*[பூசை + செய்–,]*

**பூசைத்தாயர்** *pūšai-t-tāyar,* பெ. (n.) ஒரு புலவர்; a poet.

*[பூசை + தாயர்]*

**பூசைநேரம்** *pūšai-nēram,* பெ. (n.) *பூசைக்காலம்* பார்க்க; see *pūšai-k-kālam.*

*[பூசை + நேரம்]*

**பூசைப்பரிசாரகன்** *pūšai-p-parišāragaṉ,* பெ. (n.) *பூசையாள்*[1] பார்க்க; see *pūšai-y-āḷ*[1]

*[பூசை + பரிசாரகன்]*

Skt. paricāraka > த. பரிசாரகன்

**பூசைப்பரிசாரன்** *pūšai-p-parišāraṉ,* பெ. (n.) *பூசையாள்*[2] பார்க்க; see *pūsai-y-āḷ*[2]

*[பூசை + பரிகாரகன்]*

Skt. paricāraka > த. பரிசாரகன்

**பூசைப்பாடிவெள்ளை** *pūšai-p-pāḍi-veḷḷai,* பெ. (n.) நெல்வகை; a kind of paddy. "*சிறை மீட்டான் வளர்பூசைப் பாடி வெள்ளை*" (நெல்விடு.186).

**பூசைப்பெட்டி** *pūšai-p-peṭṭi,* பெ. (n.) தனிவழிபாட்டு (ஆன்மார்த்த) இலிங்கம் வைக்கும் பெட்டி; case for the liṅgam used in private worship.

*[பூசை + பெட்டி. பிள் → (பெள்) → பெட்டி]*

**பூசைபண்ணு-தல்** *pūšai-paṇṇu-,* 15 செ.கு.வி. (v.i.) 1. வணங்குதல் (ஆராதனை செய்தல்); to perform worship. சிலர் காலையில் தவறாது பூசை பண்ணுவர் (உ.வ.) 2. உணவு உட்கொள்ளல்; to take food.

*[பூசை + பண்ணு–]*

**பூசைபுரி-தல்** *pūšai-puri-,* 2 செ.கு.வி. (v.i.) *பூசை செய்-தல்* பார்க்க; see *pūšaisey-,*

*[பூசை + புரி–,]*

**பூசைபோடு-தல்** *pūšai-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. காவு (பலி)கொடுத்தல்; to offer pali to village deities 2. *பூசைபண்ணு-தல்* 2, (வின்.) பார்க்க; see *pūšaipaṇṇu 2.* 3. வலுவாக அடித்தல்; to flog soundly.

*[பூசை + போடு–,]*

**பூசைமணி** *pūšai-maṇi,* பெ. (n.) வழிபாடு செய்யும்போது அடிக்கும் கைம்மணி; hand bell rung during the performance of pūja.

*[பூசை + மணி. முள் → (மள்) → (மண்) → மணி]*



**பூசைமிச்சம்** *pūšai-miccam,* பெ. (n.) கோயிலில் நாள்தொறும் செய்யும் கட்டளையில் செலவாகாத மிகுதி; unexpended balance in the daily allowances of a pagoda (W.G.).

*[பூசை + மிச்சம்]*

**பூசைமுகம்** *pūšai-mugam,* பெ. (n.) பூசை நடக்கும் இடம் (யாழ்.அக.); the place where divine worship is performed.

*[பூசை + முகம். முகம் = முன்பக்கம், பக்கம்]*

**பூசைமுறை** *pūšai-muṟai,* பெ. (n.) பூசைக்குரிய சடங்குகள் (நியமங்கள்); rules for the performance of worship.

*[பூசை + முறை]*

**பூசைமேடை** *pūsai-mēḍai,* பெ. (n.) பூசை செய்வதற்காக ஏற்பட்ட உயர்ந்த இடம்; plateform in which pūja is performed.

*[பூசை + மேடை. மேடு → மேடை]*

**பூசையறை** *pūšai-y-aṟai,* பெ. (n.) பூசை செய்வதற்காக ஒதுக்கப்பட்ட அறை; room set apart for divine worship.

*[பூசை + அறை. அறு → அறை]*

**பூசையாள்**[1] *pūšai-y-āḷ,* பெ. (n.) **1.** பூசைக்கு உதவியாக இருக்கும் வேலையாள்; servant attending during one's 'pūšai'. **2.** குருவுக்குப் பணிவிடை புரியும் வழிநிற்போன் (சீடன்); disciple attending a 'guru'.

*[பூசை + ஆள்]*

**பூசையாள்**[2] *pūšaiyāḷ,* பெ. (n.) திருச்சபையினரின் செயல்களைப் பார்ப்பவர் (புதுவை.); deacon.

*[பூசை + ஆள்]*

**பூசைவிதி** *pūšaividi,* பெ. (n.) *பூசைமுறை* பார்க்க; see *pūšaimuṟai.*

*[பூசை + விதி]*

Skt. vidhi> **த.** விதி

**பூசைவீடு** *pūšai-viḍu,* பெ. (n.) *பூசையறை* பார்க்க; see *pūšai-y-aṟai.*

*[பூசை + வீடு.]*

**பூசைவேளை** *pūšai-vēḷai,* பெ. (n.) **1.** *பூசைக்காலம்* பார்க்க; see *pūšai-k-kālam.* **2.** பார்ப்பனர் உண்ணுதற்குரிய வேளை; the time when Brahman's take their meals.

*[பூசை + வேளை]*

**பூஞ்சக்கல்**[1] *pūñja-k-kal,* பெ. (n.) ஒருவகை நீலக்கல் (யாழ்.அக.); a kind of blue stone.

*[பூஞ்சல் + கல் – பூஞ்சல்கல் → பூஞ்சக் கல்]*

**பூஞ்சக்கல்**[2] *pūñja-k-kal,* பெ. (n.) செம்பாறைக்கல்(சா.அக.); red stone.

*[பூஞ்சல் + கல். குல் → கல்]*

**பூஞ்சக்காளம்** *pūñja-k-kāḷam,* பெ. (n.) *பூஞ்சணம்*(இ.வ.) பார்க்க; see *pūñjaṇam.*

*[பூஞ்சல் + காளம்]*

**பூஞ்சக்காளன்** *pūñja-k-kāḷaṉ,* பெ. (n.) *பூஞ்சணம்* பார்க்க; see *pūñjaṇam.*

*[பூஞ்சை + காளான்– பூஞ்சைக்காளான் → பூஞ்சக்காளன்]*

**பூஞ்சணம்** *pūñjaṇam,* பெ. (n.) **1.** மரம் முதலியவற்றின் மேல் ஈர நைப்பினால்

உண்டாம் பாசி; mould,mildew, **2.** ஒட்டடை; cobweb, smut.

**மறுவ.** நூலாம்படை

*[பூஞ்சு → பூஞ்சணம்]*

**பூஞ்சணவன்** *pūñjaṇavaṉ,* பெ. (n.) *பூஞ்சணம்* (வின்.) பார்க்க; see *pūñjaṇam.*

*[பூஞ்சணம் → பூஞ்சணவன்]*

**பூஞ்சணற்பு** *pū-ñjaṇaṟpu,* பெ. (n.) கஞ்சாச் செடிவகை (வின்.); a luxuriant species of Indian hemp.

*[பூ + சணல் + பூ]*



**பூஞ்சல்** *pūñjal,* பெ. (n.) **1.** மங்கனிறம்; brownish colour. **2.** கண்ணொளி மங்கல் (வின்.); dimness of sight. **3.** வலுவற்றவன் (இ.வ.); unhealthy man.

*[பூ → பூஞ்சு → பூஞ்சல்]*

**பூஞ்சரம்** *pūñjaram,* பெ. (n.) *பூச்சரம்* பார்க்க; see *pūccaram.*

**க.** பூசர.

*[பூ + சரம்]*

**பூஞ்சலாடு-தல்** *pūñjalāḍu-,* 5 செ.கு.வி. (v.i.) கண்ணொளி மங்குதல் (யாழ்.அக.); to be dim in the eyes.

*[பூஞ்சல் + ஆடு-,]*

**பூஞ்சற்கண்** *pūñjaṟkaṉ,* பெ. (n.) **1.** பீளைக்கண்; bleared eyes. **2.** ஒளி மங்கிய கண்; dim eyes **3.** குழிந்த கண்; small, sunken eyes.

*[பூஞ்சல் + கண்]*

**பூஞ்சனிறம்** *pūñjaṉiṟam,* பெ. (n.) மங்கின நிறம்; dusky or dim colour.

*[பூஞ்சல் + நிறம்]*

**பூஞ்சாட்டி** *pū-ñ-jāṭṭi,* பெ. (n.) வேளாண்மையினால் எருவினுரம் இழந்த நிலம் (யாழ்.அக.); land that has lost the effect of manure by cultivation.

*[பூ + சாட்டி]*

**பூஞ்சாட்டித்தரிசு** *pūñjāṭṭi-t-tarišu,* பெ. (n.) பூஞ்சாட்டியாகி வேளாண்மை செய்யப்படாத நிலம் (யாழ்.ப்.); uncultivated land after it became pūñjāṭṭi.

*[பூஞ்சாட்டி + தரிசு]*

**பூஞ்சாட்டிநிலம்** *pūñjāṭṭinilam,* பெ. (n.) *பூஞ்சாட்டி* (யாழ்ப்) பார்க்க; see *pūñjāṭṭi.*

*[பூஞ்சாட்டி + நிலம்]*

**பூஞ்சாடுதல்** *pūñjāḍudal,* பெ. (n.) கண்ணின் முன் பூச்சியாடுவது போலிருக்கை (யாழ்.அக.); dancing of specks before the eyes.

*[பூஞ்சு + ஆடுதல். 'தல்' தொ.பெ.ஈறு]*

**பூஞ்சாந்து** *pūñcāndu,* பெ. (n.) பூசாந்தரப்பட்டை (தைலவ.தைல,59.) பார்க்க; see *pūšāndara-p-paṭṭai.*

*[பூ + சாந்து]*

**பூஞ்சாம்பல்** *pūñcāmbal,* பெ. (n.) பூவை எரித்து உண்டாக்கும் சாம்பல்; ash of flowers.

*[பூ + சாம்பல். சுள் → சுட்டி → சுப்பு. சுப்புதல் = விரைந்து நீர்வற்றுதல். சுப்பு → சும்பு → சம்பு → சாம்பு. சாம்புதல் = எரிதல்,வாடுதல். சாம்பு → சாம்பல்]*

**பூஞ்சாயம்** *pū-ñ-cāyam,* பெ. (n.) அழுத்தமான சிவப்பு நிறம் (வின்.); deep, ruddy colour.

*[பூ + சாயம்]*

**பூஞ்சாளம்** *pūñjāḷam,* பெ. (n.) பூஞ்சணம் பார்க்க; see *pūñjaṇam.*

தெ. புத்சு

*[பூஞ்சணம் → பூஞ்சாளம்]*

**பூஞ்சாற்றூர்** *pūñcāṟṟūr,* பெ. (n.) சோழமண்டலத்தில் உள்ளதோர் ஊர்; a village in Coḻa maṇḍalam.

**பூஞ்சான்** *pūñjāṉ,* பெ. (n.) புல்வகை (யாழ்.அக.); a kind of grass.

**பூஞ்சி** *pūñcji,* பெ. (n.) (யாழ்.அக.) 1. தூசி; dust. 2. மங்கல்; dimness.

*[பூஞ்சு → பூஞ்சி]*

**பூஞ்சிகை** *pūñ-cigai,* பெ. (n.) பூவையணிந்த மயிர்முடி; lock of hair adorned with flowers.

*'வண்டு மேய்ந்த வரிமுரல் பூஞ்சிகை'* (சீவக.2581.)

*[பூ+சிகை]*

Skt.šikhā > த. சிகை

**பூஞ்சிட்டி** *pūñciṭṭi,* பெ. (n.) மஞ்சிட்டி; a climber.

**பூஞ்சிட்டு¹** *pū-ñ-ciṭṭu,* பெ. (n.) குருவி வகை (வின்); a small bird.

*[பூ + சிட்டு. சுள் → (சுட்டு) → சிட்டு]*



**பூஞ்சிட்டு²** *pū-ñ-ciṭṭu,* பெ. (n.) 1. தூசி; dust. 2. மங்கல்; dimness.

*[பூஞ்சி → பூஞ்சிட்டு]*

**பூஞ்சிறகு** *pū-ñ-ciṟagu,* பெ. (n.) பறவைக்குஞ்சின் சிறகு; down of young birds.

*[பூ + சிறகு]*

**பூஞ்சீப்பு** *pū-ñ-cīppu,* பெ. (n.) வாழைக்குலையின் நுனிச்சீப்பு (வின்.); small plantains at the top of a fruit bearing stalk.

*[பூ + சீப்பு]*

**பூஞ்சு¹** *pūñju,* பெ. (n.) 1. **பூஞ்சணம்** (யாழ்.அக.) பார்க்க; see *puñjaṇam.* 2. **பூஞ்சல்,** 1. (வின்.) பார்க்க; see *puñjal.*1

ம. பூக்க, பூப்பு; க. பூசு, பூசெ, பூசி, பூசு, பூச்டெ; தெ. பூசு, பூது; து. பூசு, பூசு, பூசி, பூங்கெ.

*[பூ → பூஞ்சு]*

**பூஞ்சு²** *pūñju,* பெ. (n.) பலாச் சுளையின் மேலுள்ள நார்ப்பகுதி (நாஞ்.); layer of fibres enclosing the flesh of a jack-fruit.

*[புள் → (பிள்) → பீள் = இளங்கதிர், இளமை. (புகு) → பூ → போ → போது→ போத்து = இளங்கிளை. புகு → பூ = மென்மையானது. பூ → பூஞ்சு]*

**பூஞ்சுண்ணம்** *pūñ-cuṇṇam,* பெ. (n.) பூந்தாது (வின்); farina of flowers pollen.

*[பூ + சுண்ணம். சுள் → சுண் → சுண்ணம் = நறுமணப்பொடி, பொடி, பூந்தாது]*

**பூஞ்சுநெத்திலி** *pūñju - nettili,* பெ. (n.) ஒரு வகை மீன்; a kind of fish.



**பூஞ்சுமடு** *pūñjumaḍu,* பெ. (n.) பூவினாலாகிய சும்மாடு; loadpad of flowers. *'குழிசி பூஞ்சுமட்டிரீஇ'* (பெரும்பாண். 159).

*[பூ + சுமடு. சுமை + அடு – சுமையடு → சுமடு]*

**பூஞ்செடி** *pūñjeḍi,* பெ. (n.) **பூச்செடி** பார்க்க; see *pūcceḍi.*

க. பூகிட, பூகிடு

*[பூ + செடி]*

**பூஞ்செண்டு** *pū-ñ-ceṇḍu,* பெ. (n.) **பூச்செண்டு** பார்க்க; see *pū-c-ceṇḍu* .

க. பூசெண்டு, பூசண்டு, கூசெண்டு

*[பூ + செண்டு]*

**பூஞ்சை¹** *pūñjai,* பெ. (n.) 1. **பூஞ்சல்** பார்க்க; see *pū-ñ-jal.* 2. பாழ் (வின்.); barrenness, unfruitfulness. 3. ஒட்டடை (சங்.அக.); cob-web.

மறுவ. நூலாம்படை

*[பூஞ்சு → பூஞ்சை]*

**பூஞ்சை²** *pūñjai,* பெ. (n.) கண்மங்கல்; dimness of sight.

**பூஞ்சைநிலம்** *pūñjai nilam,* பெ. (n.) பாழ்நிலம் (யாழ்.அக.); uncultivated ground.

*[பூஞ்சை + நிலம்]*

**பூஞ்சோலை** *pūñjōlai,* பெ. (n.) பலவகையான அழகிய மலர்கள் பூக்கும் மரம் செடிகள் நிறைந்த இடம், மலர்ச்சோலை; flower garden. *'பூஞ்சோலை மயிலெழுந் தாலவும்'* (புறநா. 116).

மறுவ. பூங்கா

*[பூ + சோலை]*

**பூஞ்சோலைத்தலைவன்** *pūñjōlai-t-talaivaṉ* பெ. (n.) அரண்மனைப் பூந்தோட்டக்காரன்; gardener of palace.

*[பூ + சோலை +தலைவன்]*

**பூஞை** *pūñai,* பெ. (n.) 1. பூனை (பிங்.); cat. 2. பூஞையாதனம் பார்க்க; see *pūñai-y-ādaṉam.* *'சிலம்பி சிச்சிலி பூஞை கிருமி'* (குத்துவப். 109).

*[பூசு → பூசை = நிலத்திற் பூசினாற் போல மெத்தென்று நடப்பது . பூசை → பூனை → பூஞை (செ.சி.81)]*

**பூஞையாதனம்** *pūñai-yādaṉam,* பெ. (n.) பூனைபோல் முழங்காலை மடக்கிக் கைகளை ஊன்றி வானத்தை (ஆகாயத்தை)ப் பார்த்திருக்கும் இருக்கை (ஆசன) வகை (குத்துவப். 109, உரை); (yōga.) a kind of cat-like yogic posture.

*[பூஞை + ஆதனம்]*

Skt. āsana > த. ஆதனம்

**பூட்கை**[1] *pūṭkai,* பெ. (n.) 1. கொள்கை; belief, opinion, tenet. 2. ஒருவினையை முடித்தற்கு மேற்கொள்ளும் உறுதி; resolution, determination; purpose. *'பூட்கை யில்லோன் யாக்கைபோல'* (புறநா. 69). 3. வலிமை; strength. *'ஓடா பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி'* (திருமுரு. 247). 4. அரிமா (சிங்கம்) (சூடா.); lion.

*[புல் → புள் → புண் → பூண். பூணுதல் = நுகத்தில் கட்டப்படுதல், மணஞ்செய்தல், நெருங்கி இறுக்கமாதல், பூண் → பூட்கை (வே.க.3.62-66)]*

**பூட்கை**[2] *pūṭkai,* பெ. (n.) 1. யானை; elephant. *'வீழ்ந்த புரவிவெம் பூட்கை தேர்'* (கம்பரா. முதற்போ. 58). 2. யானை யாளி (பிங்.); a fabulous animal.

*[புழைத்தல் = துளையிடுதல். புழைக்கை = தும்பிக்கை, யானை. புழைக்கை → பூழ்க்கை → பூட்கை (வே.க. 3, 108)]*

**பூட்கை**[3] *pūṭkai,* பெ. (n.) தோல்; skin.

*[பூண் + கை – பூண்கை → பூட்கை]*

**பூட்சி** *pūṭci,* பெ. (n.) 1. பொருந்துகை, பூணுகை (சது.); wearing, putting on. 2. அணிகலன் (ஆபரணம்) (கல்லா. 91, 9, உரை); ornament. 3. உடல் (பிங்.); body. *'புல்லுயிர்க்கும் பூட்சி புணர்த்தாய்'* (தேவா. 1160, 6). 4. புணர்ப்பு; union. *'பூதப் பூட்சி யுள்ளெழும் போதகமும்'* (பிரபோத. 31, 36). 5. கொள்கை; belief, tenet. 6. மனவுறுதி determination *"உறுபொரு ளுணரும் பூட்சியோய்"* (கம்பரா. உயுத். மந்திர. 66) 7. வரிவகை; a tax (S.I.I.ii. 530 ft.n) 8. உரிமை (அக.நி.); right, propriety, title.

*[புல் → புள் → புண் → பூண் → பூட்சி (வே.க.3, 67)]*

**பூட்டக்கக்கள்ளி** *pūṭṭakka-k-kaḷḷi,* பெ. (n.) வஞ்சகி (கு.உருகூர்ப். 51); deceitful woman.

*[பூட்டக்கம் + கள்ளி]*

**பூட்டக்கம்** *pūṭṭakkam,* பெ. (n.) பூட்டகம் (இ.வ.) பார்க்க; see *pūṭṭagam.*

*[பூட்டகம் → பூட்டக்கம்]*

**பூட்டகக்காரன்** *pūṭṭaga-k-kāraṉ,* பெ. (n.) வீண்பெருமை பாராட்டுபவன் (வின்.); vain boaster.

மறுவ. பகட்டுக்காரன்

**தெ.** பூடகீடு, பூடகுடு (ஏய்ப்பன்)

*[பூட்டகம் + காரன்]*

**பூட்டகம்** *pūṭṭagam,* பெ. (n.) **1.** வீண்பெருமை (வின்); vain pretention, boasting. *'என்ன பூட்டகமோ'* (பெருந். தொ. 1275) **2.** பூட்டக வேலை (வின்.) பார்க்க; see pūṭṭagavēlai **3.** வஞ்சகம்; art, guile, trick. **4.** மருமம் (இரகசியம்); secrecy. *'அந்தச் சேதி பூட்டகமாயிருக்கிறது'*.

மறுவ. கமுக்கம்

**க.** பூட, பூடக, பூடகதன, பூடட; **தெ.** பூடகமு, பூடகீடு, பூடகூடு; **து.** பூடி, பூடு, பூடங்க, பூடகதனெ.

*[பூண் (கு.வி.) - பூட்டு (பி.வ.). பூட்டு → பூட்டகம் (வே.க. 3, 67)]*

**பூட்டகவேலை** *pūṭṭaga - vēlai,* பெ. (n.) போலி வேலை (வின்); flimsy, unsubstantiall work.

மறுவ. பகட்டுவேலை, மேனாமினுக்கு வேலை

**தெ.** பூடகமு (பொய்,ஏமாற்று), பூடகாலமாரி
*[பூட்டகம் + வேலை]*

**பூட்டகாரன்** *pūṭṭa-kāraṉ,* பெ. (n.) *பூட்டகக் காரன்* (யாழ்.அக.) பார்க்க; see *pūṭṭaga-k-kāraṉ.*

*[பூட்டகக்காரன் → பூட்டகாரன்]*

**பூட்டங்கம்** *pūṭṭaṅgam,* பெ. (n.) **1.** *பூட்டகம்* **3,** பார்க்க; see *pūṭṭagam* **3. 2.** அகப்படுத்துகை; entrapping, inveigling, ensnaring. **3.** வில்லங்கம் (யாழ்.அக.); trouble, encumbrance.

*[புண் → பூண். பூணுதல் = நுகத்தில் கட்டப்படுதல், விலங்கு மாட்டப்படுதல். பூண் → பூட்டு. பூட்டுதல் = விலங்கு மாட்டுதல், பூட்டுப்பூட்டுதல், இறுகக் கட்டுதல். பூட்டு → பூட்டங்கம்]*

**பூட்டங்கயிறு** *pūṭṭaṅ-kayiṟu,* பெ. (n.) *பூட்டாங்கயிறு* (வின்.) பார்க்க; see *pūṭṭāṅ-kayiṟu.*

மறுவ. பூட்டாந்தும்பு

*[பூட்டாங்கயிறு → பூட்டங்கயிறு]*

**பூட்டல்** *pūṭṭal,* தொ.பெ. (vbl.n.) பூட்டுகை; locking.

*[பூட்டு → பூட்டல். 'அல்'. தொபெ.ஈறு]*

**பூட்டழி-த்தல்** *pūṭṭaḻi-,* 4 செ.குன்றாவி. (v.t.) கட்டுக்குலைத்தல்; to scatter, disperse, as an army. *'பூலந்தை வான்புகப் பூட்டழிந்த... வேந்தன்'* (இறை. 17, உரை, பக். 100).

*[பூட்டு + அழி-. பூண் → பூட்டு. பூட்டுதல் = இறுகக்கட்டுதல்]*

**பூட்டறு-தல்** *pūṭṭaṟu-,* 4 செ.கு.வி. (v.i.) **1.** கட்டுக்குலைதல்; to get disjointed or loose - jointed, as the various parts of the body. **2.** நுகத்தினின்றும் விடுபடுதல்; to get unyoked.

*[பூண் → பூட்டு + அறு-,]*

**பூட்டன்** *pūṭṭaṉ,* பெ. (n.) பாட்டனுக்குத் தகப்பன்; great-grand father.

*[பூ = பிறப்பு. பூ + பாட்டன் – பூபாட்டன் → பூட்டன்]*

**பூட்டாங்கம்** *pūṭṭāṅgam,* பெ. (n.) பூட்டாங்கம், 2 (வின்.) பார்க்க; see *pūṭṭāṅgam,* 2.

*[பூட்டங்கம் → பூட்டாங்கம்]*

**பூட்டாங்கயிறு** *pūṭṭāṅ-kayiṟu,* பெ. (n.) எருத்தைப் பிணைக்கும் நுகக்கயிறு (ஏரெழு. 9, தலைப்பு); rope by which a bullock is fastened to the yoke.

*[பூட்டு → பூட்டாம் + கயிறு. பூண் → பூட்டு. பூட்டுதல் = காளைமுதலிய வற்றை நுகத்திற் பிணைத்தல்]*

**பூட்டி** *pūṭṭi,* பெ. (n.) பாட்டனைப் பெற்ற தாய்; great grand mother.

*[பூட்டன் (ஆ.பா.) – பூட்டி (பெ.பா.). 'இ' பெ. பா. ஈறு]*

**பூட்டு¹–தல்** *pūṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. மாட்டுதல்; to lock, fasten, hook, to fix, as an arrow in the bow. *'பொருசிலை மேற் சரம் பூட்டான்'* (ஏரெழு. 17). 2. இணைத்தல்; to unite. *'என்பாற் பூட்டு நண்பு பூண்டான்'* (பாரத. வாரணா. 37). 3. வைத்தல்; to place, put. *'ஒல்லையி லரி வாட் பூட்டி'* (பெரியபு. அரிவாட். 16). 4. எருது முதலியவற்றைப் பிணைத்தல்; to attach, as horses or bullocks to a carriage; to yoke, harness. *'களிறு பலபூட்டி'* (பதிற்றுப்44,16). 5. தொழுவிலடித்தல் (வின்.); to put in the stocks. 6. விலங்கு மாட்டுதல் (வின்.); to manacle, shackle, fetter. 7. பொறுப்பேற்றுதல்; to entrust, give incharge. *'தாதை பூட்டிய செல்வம்'* (கம்பரா. வாலிவ. 81). 8. அணிதல்; to put on, as rings, jewels. garlands *'பைந்தார் பூட்டி'* (பதிற்றுப். 42, 10.) 9. இறுகக் கட்டுதல்; to lock, grip, as ones arms or legs, in wrestling. *"பூட்டியகையன்"* (கம்பரா. குகப். 34). 10. பொருத்திக் கூறுதல் (வின்.); to bring into order or sequence, as different parts of a discourse. 11. அகப்படுத்துதல் (வின்.); to entrap, inveigle, secure in an engagement by artifice. 12. நாணேற்றுதல்; to fasten, as the sting to a bow. பூட்டுசிலை (சீவக. 1788) 13. இறுக்குதல் (வின்.); to tighten 14. வழக்குத் தொடுத்தல்; to start, as a case; to file, as a suit. 'கொடுமை சால் வழக்குப் பூட்டி வென்றவர்' (திருவிளை. மாமானா. 14).

ம. பூட்டுக; க. பூடு; தெ. புனு; பட. பூட்டு

*[புல் → புள் → புண் → புணர். புணர்தல் = பொருந்துதல், நட்பாடல், மேற்கொள்ளுதல். புண் → பூண். பூணுதல் = நுகத்திற் கட்டப்படுதல், விலங்கு மாட்டப்படுதல்,மேற்கொள்ளுதல். பூண் → பூட்டு (வே.க. 3, 64–67)]*

**பூட்டு²** *pūṭṭu,* பெ. (n.) 1. பிணிப்பு; locking, fastening, clasping, harnessing *'கடும்பரி நெடுந்தேர் பூட்டுவிட்டு'* (புறநா.141). 2. கதவு மூடி முதலியவற்றைத் தாழிட்டபின் அதற்குமேல் அவற்றைப் பொருந்தி இருக்குமாறும் செய்வதும் திறவு கோலாற் பூட்டித் திறக்கப் பயன்படுவதுமான கருவி (பிங்.); lock. 3. கொக்கி (பிங்.); clasp, hook, catch. 4. கயிறு கப்பி இணைப்பதற்காக விட்டத்தில் பொருத்தப்பட்டுள்ள இருப்புவளை கம்பி; clevis. 5. நாண்கயிறு (சூடா.); bowstring. 6. உடற்பொருத்து; joining, as of bones; articulation, joint. *'பூட்டற்றுத்*

*தேகமற்று'* (தாயு. பாரய. 295). **7.** மல்லுக்கட்டு; locking or entrangling antagoinsts arms or legs in wrestlings, so as to deprive him of power. **8.** இறுக்கம்; tautness, as of a bowstring. **9.** தளைக்கும் விலங்கு; shackles, mancles, fetters. **10.** இடர் (ஆபத்து); calamity. *'பிழைத்தாளப்பா இந்த பூட்டுக்கு'.* **11.** மகளிர் அளகத்திற் பூணும் அணிவகை; a head ornament, worn by women. *'அளகபந்தி பூட்டிய பூட்டும்'* (கம்பரா. கோலங். 5). **12.** அடுக்கு; pile, as of coins; specified quantity, as of leaves. *'ரூபாயைப் பூட்டுப் பூட்டாக எண்ணி வைத்தான்'.* **13.** முடைந்த நான்கு தென்னங்கீற்றுக் கொண்ட கட்டு; a bundle of four plaited coconut leaves. **14.** நெருங்கிய படைவீரர் வரிசை (சேனைக்கட்டு); serried rank of an army. *'வான்புகப் பூட்டழித்த..... வேந்தன்'* (இறை. 17, உரை, பக் 100).

**ம., பட.** பூட்டு

*[பூண் → பூட்டு(தல்) → பூட்டு]*



**பூட்டு³** puttu, **பெ.** (n.) மந்தணம் (இரகசியம்); secret.

*[பூள் → பூண் → பூட்டு]*

**பூட்டுக்கயிறு** *pūṭṭu-k-kayiṟu,* **பெ.** (n.) *பூட்டாங் கயிறு* (யாழ்.அக.) பார்க்க; see *pūṭṭāṅ-kayiṟu.*

*[பூட்டு + கயிறு]*

**பூட்டுக்கனி** *pūṭṭu-k-kaṉi,* **பெ.** (n.) கண்டங் கத்திரி; a thorny shrub.

*[பூட்டு + கனி]*



**பூட்டுக்குச்சி** *pūṭṭu-k-kucci,* **பெ.** (n.) திறவுகோல்; key.

*[பூட்டு + குச்சி. பூட்டைத்திறக்கவுதவும் குச்சி போன்ற கருவி]*

**பூட்டுக்கை** *pūṭṭu-k-kai,* **பெ.** (n.) *பூட்டுக்குச்சி* பார்க்க; see *pūṭṭu-k-kucci.*

*[பூட்டு + கை. பூட்டைத்திறக்கவுதவும் கை போன்ற கருவி]*

**பூட்டுசாவி** *pūṭṭu-cāvi,* **பெ.** (n.) *பூட்டுக் குச்சி* பார்க்க; see *pūṭṭu-k-kucci.*

*[பூட்டு + சாவி]*

port. chiavi > **த.** சாவி

**பூட்டுத்தலை** *pūṭṭuttalai,* **பெ.** (n.) நூலைப் பாவுசெய்யப் பயன்படுத்துங் கருவி; weaving instrument, which helps to make the yarn to warp.

*[பூட்டு + தலை]*

**பூட்டுத்தை–த்தல்** *pūṭṭu-t-tai-,* 4 செ.கு.வி. (v.i.) 1. கதவு முதலியவற்றில் பூட்டை இணைத்தல்; to fasten a padlock. 2. காரியம் ஏற்படுதல் (பலித்தல்) (இ.வ.); to the take effect, as a plot.

*[பூட்டு + தை–,]*

**பூட்டுநழுவு–தல்** *pūṭṭu-naḻuvu-,* 6 செ.கு.வி. (v.i.) *பூட்டுவிலகு–தல்* பார்க்க; see *pūṭṭu-vilagu.*

*[பூட்டு + நழுவு–,]*

**பூட்டுநோவு** *pūṭṭu-nōvu,* பெ. (n.) உடற் சந்துகளில் உண்டாம் வலி; inflammation of the joints arthritis (M.L.).

*[பூட்டு + நோவு. பூட்டு = உடற்பொருத்து, மூட்டு]*

**பூட்டுப்பங்குவாயு** *pūṭṭu-p-paṅguvāyu,* பெ. (n.) கீல்வாயு; arthritis.

*[பூட்டுப்பங்கு + வாயு]*

Skt. vāyu > த. வாயு

**பூட்டுப்பண்டம்** *pūṭṭu-p-paṇḍam,* பெ. (n.) கஞ்சா குடுக்கை; ganja smoking pipe.

*[பூட்டு + பண்டம்]*

**பூட்டுப்போடு–தல்** *pūṭṭu-p-pōḍu-,* 19 செ.குன்றாவி. (v.t.) 1. திறவு கோலாற் பூட்டிடுதல்; to lock. 2. பேசவொட்டாது செய்தல் (இ.வ.); to silence.

*[பூட்டு + போடு–,]*

**பூட்டுமறையாணி** *pūṭṭu - maṟai-y-āṇi,* பெ. (n.) சேர்க்கும் தாழ்ப்பாள்; assembling bolt.

*[பூட்டு + மறையாணி]*

**பூட்டுமுறை** *pūṭṭu - muṟai.* பெ. (n.) சேர்க்கை முறை; assembly method. அவன் வானொலியைப் பிரித்துப் பூட்டுமுறையை அறிந்தவன் (உ.வ.)

*[பூட்டு + முறை]*

**பூட்டுவாய்**[1] *pūṭṭu-vāy,* பெ. (n.) திறவுகோல் புகுந்துளை; key hole.

*[பூட்டு + வாய்]*



**பூட்டுவாய்**[2] *pūṭṭuvāy,* பெ. (n.) நெருக்கடியான நேரம்; critical juncture.

*[பூட்டு + வாய்]*

**பூட்டுவிடு–தல்** *pūṭṭu-viḍu-,* 20 செ.கு.வி. (v.i.) *பூட்டுவிலகு–தல்* பார்க்க; see *pūṭṭu-vilagu-,*

*[பூட்டு + விடு–,]*

**பூட்டுவில்** *pūṭṭu-vil,* பெ. (n.) *பூட்டுவிற்பொருள்கோள்* (நன். 415) பார்க்க; see *pūṭṭuviṟ poruḷkōl.*

*[பூட்டு + வில்]*

**பூட்டுவிலகு—தல்** *puttu-vilagu-,* 15 செ.கு.வி. (v.i.) உடற்பொருத்துவாய் விலகிப் போதல்; to be dislocated as joints.

*[பூட்டு + விலகு—,]*

**பூட்டுவிற்பொருள்கோள்** *puttu-vir-poruḷkōḷ,* பெ. (n.) பொருள்கோள் எட்டனுள் செய்யுளின் முதலினும் ஈற்றினும் உள்ள சொற்கள் தம்முள் இயையப் பொருள் கொள்ளும் முறை (நன். 415); a method of construing a verse by taking together the first and last words, one of eight poruḷ-kōḷ, q.v.

*[பூட்டு + வில் + பொருள் + கோள்]*

"*திறந்திடுமின் தீயவை பிற்காண்டும் மாதர் இறந்துபடின் பெரிதாம் ஏதம் உறந்தையர் கோன் தண்ணார மார்பன் தமிழர் பெருமானை கண்ணாரக் காணக் கதவு*" (முத்தொள்ளாயிரம்) '*கதவு*' என்ற இறுதிச் சொல்லை '*திறந்திடு மின்*' என்ற முதற் செல்லுக்கு முன்பாக வைத்து '*கதவு திறந்திடுமின்*' என்று வில்லின் இரு முனையையும் நாணால் இணைப்பது போன்று இணைத்துப் பொருள் கொள்வது இம்முறையாகும்.

**பூட்டூசி** *puttūsi,* பெ. (n.) பெண்கள் சட்டையில் குத்திக்கொள்ளப் பயன்படுத்தும் காப்பூசி (யாழ்ப்.); safety pin.

*[பூட்டு + ஊசி]*

**பூட்டை[1]** *puttai,* பெ. (n.) ஏற்றமரம் (வின்.); picottah. '*பிறப் பிறப்பாம் பூட்டைதனை*' (ஞானவா. உற்ப. 70). 2. இராட்டினச் சக்கரம்; wheel of the pulley. '*சத்தமிடாதபடி பூட்டைக்கு எண்ணெய் போடு*' (இ.வ.) 3. இறை கூடை; basket of baling water. 4. பூட்டைப் பொறி (திவா.) பார்க்க; see puttai-p-pori 5. செக்கு (அக.நி.); oil-press. 6. பூட்டாங்கயிறு (இ.வ.); cord for fastening a bullock to its yoke.

*[பூட்டு → பூட்டை]*

**பூட்டை[2]** *puttai,* பெ. (n.) சோளக்கதிர் (வின்.); sheaf of cōḷam.

*[புல் → (பிள்) → பீள் = இளங்கதிர், இளமை. புள் → (பூள்) → பூண் → பூட்டை = இளங்கதிர் (மு.தா. 39)]*

**பூட்டைக்கிணறு** *puttai-k-kiṇaṟu,* பெ. (n.) நீர் பாய்ச்சுதற்கு ஏற்றம் அமைந்த கிணறு; well fitted with, picottah, for irrigating fields. (S.I.I.iv. 194).

*[பூட்டை + கிணறு]*

**பூட்டைக்குண்டிகை** *puttai-k-kuṇḍigai,* பெ. (n.) ஏற்றச்சால்; basket for baling water. '*பூட்டைக் குண்டிகை போலே யேறுவ திழிவதாக*' (ரகஸ்ய. 1366).

*[பூட்டை + குண்டிகை]*

**பூட்டைதறி—த்தல்** *puttai-taṟi-,* 4 செ.கு.வி. (v.i.) எருதுகள் நுகக்கட்டவிழ்தல்; to be unfastened as the ropes that hold the oxen to a yoke. '*வண்டி பூட்டைதறித்தது எனக்குத் தெரியாது*'.

*[பூட்டு → பூட்டை + தறி—,]*

**பூட்டைப்பொறி** *puttai-p-poṟi,* பெ. (n.) நீரிறைக்கும் கருவி வகை (சிலப். 10, 110, உரை); water-lift.

*[பூட்டை + பொறி]*

**பூட்டைபறி—தல்** *pūṭṭai-paṟi-*, 4 செ.கு.வி. (v.i.) *பூட்டை வாங்கு—தல்* (வின்.) பார்க்க; see *pūṭṭai-vāṅgu-*,

*[பூட்டை + பறி]*

**பூட்டைவாங்கு—தல்** *pūṭṭai-vāṅgu-*, 5 செ.கு.வி. (v.i.) சோளப்பயிர் முதலியன கதிர்விடுதல் (வின்.); to shoot out, as ears of cōḷam.

*[பூட்டை + வாங்கு—,]*

*'பூட்டை²'* பார்க்க.

**பூட்பராசன்** *pūṭparāšaṉ*, பெ. (n.) கருஞ்சீரகம் (மலை); black cumin.

**பூடகம்** *pūḍagam*, பெ. (n.) வெளிப்படையாகத் தெரியாதது, உன்னித்து (ஊகித்து) அறியும் வகையில் மறைமுகமாக இருப்பது; enigma. *'அவனுக்கு இதுவரை பூடகமாக இருந்த ஒன்று இப்போது புரியத் தொடங்கிற்று', 'பிடிகொடுக்காத பூடகமான பேச்சு'.* (உ.வ.)

*[பூட்டகம் → பூடகம்]*

**பூடணம்** *pūḍaṇam*, பெ. (n.) அணிகலன் (பிங்.); ornament, jewel. *'பொன்னணி பூடணம்'* (திருமந்.2289).

*[பூண் → பூடு → பூடணம் = பூட்டுவது, அணிவது]*

**பூடம்¹** *pūḍam*, பெ. (n.) சிறுதேவதை வாழ்தற்குரியதாகக் கட்டிய மேட்டிடம் (நெல்லை.); a mound of earth or bricks where in a minor deity resides.

*[புள் → (புள்) → (பிண்டு) → பிண்டம் = திரட்சி. புள் → பூண்டு → பூடு → பூடம்]*

**பூடம்²** *pūḍam*, பெ. (n.) *புடம்* (வின்.) பார்க்க; see *puḍam*.

*[புடம் → பூடம்]*

**பூடா** *pūḍā*, பெ. (n.) பத்து நாடியுள் ஒன்று (சிலப்.3,26, உரை); a principal tubular vessel oxf the human body, one of tašanāḍi.

**பூடி** *pūḍi*, பெ. (n.) மகளிர் காதின்மேற்புறத்து அணியும் அணி வகை (இ.வ.); gold ear-ornament worn at the top of helix by women.

*[பூடு → பூடி]*

**பூடு¹—தல்** *pūḍu*, 5 செ.கு.வி. (v.i.) இணைதல் (கருநா.); to join.

க. பூடு, ஊடு, பூண், கூடு ...

*[பூண் → பூடு—,]*

**பூடு²** *pūḍu*, பெ. (n.) 1. சிறுசெடி; small plant,herb. *'புல்லாகிப் பூடாய்'* (திருவாச.1,26). 2. வெள்ளைப் பூண்டு; garlic.

*[புல் → பொல்லி = தடி. புள் → (பிள்) → பிண்டு → பிண்டம் = திரட்சி. புள் → பூண்டு → பூடு = வெங்காயம் வெள்ளைப் பூண்டு முதலியவற்றின் அடி (மு.தா.209,212)]*



**பூடுத்தைலம்** *pūḍuttailam*, பெ. (n.) வெள்ளைப் பூண்டு எண்ணெய் (தைலம்); oil extracted from garlic.

*[பூடு + தைலம்]*

Skt. taila > த. தைலம்

**பூடுதலை** *pūḍutalai*, பெ. (n.) சிறுசிறு பட்டைகளை வட்ட வடிவில் இணைத்துச் சுழலும்படி அமைத்த சிட்டநூல் சுற்றுவதற் கான கருவி (சாதனம்); swift (for hanks).

*[பூண் → பூடு + தலை]*

**பூண்¹(ணு)–தல்** *pūṇ-(ṇu)-*, 12 செ.குன்றாவி. (v.t.) 1. அணிதல்; to put on, wear *'பூண்பதுவும் பொங்கரவம்'* (திருவாச்12.1). 2. விலங்கு முதலியன அணிதல்; to be fettered with, shackled with, yoked with 'புனை பூணும், (குறள்,836). 3. சூழ்ந்து கொள்ளுதல்; to surround. *'யாருமச் செங்கணானைப் பூண்டனர்'* (கம்பரா. இராவணன்கள.19). 4. மேற்கொள்ளுதல்; to undertake, as a business, to assume duty. *'போர்த்தொழில் வேட்கை பூண்டு'* (கம்பரா. படைத்தலை.1). 5. உடைத்தாதல்; to become possessed of, as knowledge, love. *'அன்புபூண்டனை'* (கம்பரா.விபீட.ணடை.2).

ம. பூணுக; க. பூண், பூடு; தெ. பூனு, பூனுக, பூக; து. புணெபுனி, புணெபினி, புணெவுனி,

*[புல்லுதல் = பொருந்துதல். புல் → புர் → புரை. புரைதல் = பொருந்துதல். புல் → புள் → புண் → புணர். புணர்தல் = பொருந்துதல். புண் → புணி. புணித்தல் = சேர்த்துக் கட்டுதல். புண் → பூண் (வே.க.3,62–66)]*

**பூண்²(ணு)–தல்** *pūṇ(ṇ)-*, 10 செ.கு.வி. (v.i.) 1. சிக்கிக் கொள்ளுதல்; to become entangled as a lock of hair; to be caught as birds in a snare. 2. நுகத்திற் கட்டப்படுதல் (வின்.); to be yoked. *'பூண்டன புரவியோ'* (கம்பரா. இராவணன்.38). 3. நெருங்கி யிறுகுதல்; to come close together; to become inseparable. *'அவனுக்குப் பல்பூண்டு விட்டது'*.

*[புல் → புள் → புண் → பூண்]*

**பூண்³** *pūṇ*, பெ. (n.) 1. அணி; jewel. *'நுண்பூணாகம் வடுக்கொளமுயங்கி'* (மதுரைக்.569). 2. உலக்கை, தடி முதலியவற்றின் முனையிற் செறித்த வளையம்; ring, ferrule, cap. *'பூண்செறிந்த தலையையுடைய தண்டுகோலை'* (புறநா.243, உரை). ஒட்டை நாழிக்குப் பூண் கட்டினது போல (பழ.). 3. யானைக் கோட்டின் கிம்புரி; ornamental knob of an elephants tusk. 4. கவசம்; armour. *'பூணணிமார்ப போற்றி'* (சீவக.264).

ம.பூண்; தெ.பொன்னு

*[புள் → புண் → பூண்]*

**பூண்கட்டு¹–தல்** *pūṇ-kaṭṭu-*, 15 செ.கு.வி. (v.i.) 1. உலக்கை முதலியவற்றுக்குப் பூண்பிடித்தல்; to fasten a ferrule on. கொல்லன் எளிமை கண்டு குரங்கு காலுக்குப் பூண் கட்டச் சொன்னதாம் (பழ.). 2. வலுப்படுத்துதல்; to add strength to.

*[பூண் + கட்டு–, கள் → கட்டு–]*

**பூண்கட்டு²–தல்** *pūṇ-kaṭṭu-*, 12 செ.குன்றாவி. (v.t.) போற்றுதல்; to make much of. *'இந்த ருசியைப் பூண்கட்டிக் கொள்ளத் தேடுகிறவர்கள் கழிக்கச் சொன்னால் கழியார்களிறே'* (ஈடு,1,6,8).

*[பூண் + கட்டு–, கள் → கட்டு]*

**பூண்கடைப்புணர்வு** *pūṇ-kaḍai-p-puṇarvu,* பெ. (n.) அணிகலக்கொக்கி (பிங்.); hook of a jewel.

*[பூண் + கடை + புணர்வு. புணர் → புணர்வு]*

**பூண்சம்பா** *pūṇ-sambā,* பெ. (n.) சம்பா நெல்வகை; a kind of Sambā Paddu (G.Tp.D.i,132).

*[பூண் + சம்பா]*

**பூண்டகச்சைப்புயன்** *pūṇḍakaccai-p-puyaṉ,* பெ. (n.) காண்டா விலங்கு (மிருகம்); rhinoceres.

**பூண்டறு-த்தல்** *pūṇḍaṟu-,* 4 செ.குன்றாவி. (v.t.) அடியோடழித்தல்; to uproot; destroy utterly.

*[பூண்டு + அறு-, அர் → அறு]*

**பூண்டான்** *pūṇḍāṉ,* பெ. (n.) கணவன்; husband. '*பூண்டான் கழித்தற்கருமையால்*' (நாலடி.56).

*[புல் → புள் → புண் → பூண். பூணுதல் = மணஞ்செய்தல், நெருங்கியிறுக்கமாதல். பூண் → பூண்டான்]*

**பூண்டி** *pūṇḍi,* பெ. (n.) 1. ஊர் (பிங்.); town, village, district. 2. தோட்டம்; shrubbery, garden (M.M.) 3. திடர்ப்பட்ட கடற்பகுதி (யாழ்.அக.); shallow part of the sea.

*[புள் → (பூது) → பூதம் = பெரியது, பெரும்பேய். புள் → புண் → பூண் → பூண்டி = திரண்ட பகுதி, மேட்டுநிலம், மேட்டு நிலத்திலமைந்தவூர்]*

**பூண்டிஅரங்கநாதமுதலியார்** *pūṇḍi araṅganādamudaliyār,* பெ. (n.) கச்சிக் கலம்பகம் என்னும் நூல் இயற்றிய புலவர்; a poet, who authored kacci-k-kalambagam.

*[பூண்டி + அரங்கநாதன் + முதலியார்]*

**பூண்டின்கழிகை** *pūṇḍiṉkaḻigai,* பெ. (n.) புலித்தொடக்கி; a sensitive plant.

**பூண்டு** *pūṇḍu,* பெ. (n.) 1. *பூடு1.* (நன்.304,மயிலை) பார்க்க; see *pūḍu1* 2. உள்ளிப்பூடு; garlic 3. சிற்றடையாளம்; trace, vestige. '*ஆண்பூண்டு கண்டாலும் பேசாமற் கட்டிட்டாள்*' (விறலிவிடு.822).

*[புல் → புள் → புண் → புணர். புணர்தல் = பொருந்துதல். புண் → புணி. புணித்தல் = சேர்த்துக்கட்டுதல். புள் → புணை. புண் → பூண் = உலக்கைத் தடி. பூண் → பூண்டு = பற் போன்ற பருப்புகள் அல்லது சுளைகள் நெருங்கிப் பொருந்திய பூடு வகை. எ-டு: வெங்காயப் பூண்டு, வெள்ளைப் பூண்டு, சிற்றெச்சம் (vestige, trace) ஆரியப் பூண்டை வேரறுக்க வேண்டுமென்பது ஒருசிலர் கொள்கை (வே.க.3,62-67)]*

**பூண்டுத்திரி** *pūṇḍu-t-tiri,* பெ. (n.) *பூண்டுப் பல்* பார்க்க; see *pūṇḍu-p-pal.*

*[பூண்டு + திரி]*

**பூண்டுப்பல்** *pūṇḍu-p-pal,* பெ. (n.) பூண்டின் சுளை; a tooth of garlic. குழம்புக்கு இரண்டு பூண்டுப்பல் தட்டிப் போடு (உ.வ.)

*[பூண்டு + பல்]*

**பூண்டோடு** *pūṇḍōḍu,* வி.அ. (adv.) (எதுவும், யாரும்) விடுபடாமல்; அடியோடு; totally; to the root. '*ஓர் இனத்தைப் பூண்டோடு அழிக்க முயன்றவர்களும் உண்டு. 'சுற்றுப்புறச் சூழல் பாதிப்பினால் சில உயிரினங்கள் பூண்டோடு அழிய வாய்ப்பிருக்கிறது*' (உ.வ.).

*[பூண் → பூண்டு +ஒடு]*

**பூண்தேக்கு** *pūṇ-tēkku,* பெ. (n.) மரவகை (இ.வ.); a tree, klimnoria hospita.

*[பூண் + தேக்கு]*

**பூணல்** *pūṇal,* பெ. (n.) *பூணூல்* (கொ.வ.) பார்க்க; see *pūṇūl.*

*[பூணூல் → பூணல்]*

**பூணனூல்** *pūṇaṉūl,* பெ. (n.) *பூணூல்* 1, பார்க்க; see *pūṇūl,* 1. '*பொறிகிளர் பூணனூல் புரள்*' (தேவா. 224, 5).

*[பூண் → பூணல் + நூல்]*

**பூணாங்காரல்** *pūṇāṅ - kāral,* பெ. (n.) ஓர் காரல் மீன்; a fish of the equuala genus.

*[பூண் + ஆம் + காரல்]*

**பூணாங்கு** *pūṇāṅgu,* பெ. (n.) *பிண்ணாக்கு* (இ.வ.) பார்க்க; see *piṇṇākku.* '*இலுப்பைப் பூணாங்கு*'.

*[பிள் + நாக்கு → பிண்ணாக்கு → புண்ணாக்கு → பூணாங்கு]*

**பூணாரம்** *pūṇāram,* பெ. (n.) அணிகலன்; jewel, ornament. '*பூணார மார்பனை*' (திவ். பெரியதி. 11, 7, 1).

ம. பூ்ணாரம்.

*[பூண் + ஆரம்]*

**பூணாரம்பேசு–தல்** *pūṇāram-pēšu-,* 6 செ.கு.வி. (v.i.) பெருமை பேசுதல் (கொ.வ.); to talk high.

*[பூணாரம் + பேசு–,]*

**பூணாரவெலும்பு** *pūṇāra-velumbu,* பெ. (n.) 1. காரையெலும்பு; collar bone. 2. மணிக் கட்டெலும்பு (யாழ்.அக.); wrist-bone.

*[பூணாரம் + எலும்பு. எல் → எலும்பு]*

**பூணி¹** *pūṇi,* பெ. (n.) 1. எருது; bull, bullock. '*பூணிபூண்டுழப் புட்சிலம்பும்*' (தேவா. 647, 3). 2.கன்றுகாலி (ஆனினம்); cattle. '*பூணிமேய்க்கு மிளங்கோவலர்*' (திவ். பெரியாழ், 3, 6, 1). 3. விடையோரை (இடபராசி); taurus of the zodiac. 4. நீர்ப்பறவை வகை; a kind of water bird. 'பெரும்பூட் பூணியும் பேழ்வாய்க் கொக்கும்' (பெருங். உஞ்சைக். 51, 69.)

ம. பூணி(அம்புக்கூடு, அம்பறாத்துணி; க. பூணி(அம்பு)

*[புல் → புள் → புண் → பூண் → பூணி = நுகம் பூணும் எருது, கன்றுகாலி (வே.க 3, 66)]*

**பூணி²–த்தல்** *pūṇi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. தோற்றுவித்தல்; to cause to appear; to bring into existance. '*விசும்பிற் புத்தப் புது மதியம் பூணித்தான்*' (மாறனலங். 224, 531). 2. குறிப்பிடுதல் (வின்.); to allude to, refer to.

*[புண் → பூண் → பூணி–, (வே.க. 3, 66)]*

**பூணி³–த்தல்** *pūṇi-,* 5 செ.கு.வி. (v.i.) பூட்கை பண்ணுதல்; to make a vow. 'என்னோடே பூணித்து' (ஈடு. 10, 8, 5).

*[புண் → பூண் → பூணி (வே.க. 3, 66)]*

**பூணிப்பு** *pūṇippu,* பெ. (n.) 1. பூட்கை; vow. *'பஃறலை யூழியிற் புரட்டலென் பூணிப்பாம்'* (கம்பரா. பிணிவீ. 63). 2. தீர்மானம்; decision, resolve. *'பூணிப் பொன்றுடையனாக'* (கம்பரா. அதிகா. 180).

*[பூண் → பூணி → பூணிப்பு . 'பு' தொ. பெ. ஈறு]*

**பூணில்** *pūṇil,* பெ. (n.) குருவி வகை; the seven sisters.

*[பூண் → பூணி → பூணில்]*

**பூணில்லாவுலக்கை** *pūṇillā-v-ulakkai,* பெ. (n.) மருந்து வகைகளிடிக்கும் போது களிம்பேறா வண்ணம் பயன்படுத்தும் இரும்புப் பூண் போடாத உலக்கை; a long wooden instrument for pounding medicine or herbs in a mortar without iron band at the end.

*[பூண் + இல்லா + உலக்கை]*

**பூணுகை** *pūṇugai,* பெ. (n.) 1. பூணுதல்; putting on. 2. அணிதல்; wearing.

*[புள் → புண் → பூண். பூணுதல் = நுகத்திற் கட்டப்படுதல், மணஞ்செய்தல், விலங்கு மாட்டப்படுதல். பூண் → பூணுகை]*

**பூணுநூல்** *pūṇu-nūl,* பெ. (n.) பூணூல், 1. பார்க்க; see *pūṇūl1.* *'மைவந்த நிறக்கேச வடப்பூணுநூலும்'* (பெரியபு. மானக்கஞ்சா. 23).

ம. பூணூல்

*[பூணும் + நூல்]*

**பூணூல்** *pūṇūl,* பெ. (n.) 1. இருபிறப்பாளர் (துவிசர்) அணியும் முப்புரிநூல் (திவா.); sacred thread of three strands worn by 'tuvišar'. *'முத்தப்பூணூ லத்தகு புனை கலம்'* (சிலப். 23, 96). குடலைப் பிடுங்கிப் பூணூல் போட்டுக் கொள்ளுவேன் (பழ.). 2. *பூணூற் கலியாணம்* பார்க்க; see *pūṇūṟ kaliyāṇam.*

ம. பூணூல்

*[பூண் + நூல்]*



**பூணூற்கலியாணம்** *pūṇūṟ-kaliyāṇam,* பெ. (n.) முப்புரிநூல் அணியும் சடங்கு (உபநயனம்); investitute of the sacred thread.

*[பூணூல் + கலியாணம்]*

**பூணெலும்பு** *pūṇelumbu,* பெ. (n.) மார்பெலும்பு; chest bone.

*[பூண் + எலும்பு]*

**பூணை** *pūṇai,* பெ. (n.) முல்லை நிலம் (யாழ்.அக.); pastoral tract.

*[பூணி = கன்றுகாலி, ஆனினம். பூணி → பூணை = ஆனினத்திற்கு உகந்த இடம்]*

**பூத்தட்டு** *pū-t-taṭṭu,* பெ. (n.) *பூந்தட்டு* பார்க்க; see *pūntaṭṭu.*

ம. பூத்தட்டம்

*[பூ+ தட்டு]*

**பூத்தட்டுதல்** *pūt-taṭṭudal,* பெ. (n.) வெண்ணிறமாதற் பொருட்டு மெழுகை யுருக்கித் தண்ணீரிலூற்றித் தகடாக்குகை (யாழ்ப்.); reducing melted wax to flakes by pouring it into water in the process of whitening it.

*[பூ + தட்டுதல். 'தல்' தொ.பெ.ஈறு]*

**பூத்தநாள்** *pūtta- nāḷ,* பெ. (n.) மாதவிலக்குப் பொழுது; the period of menses.

*[பூத்த + நாள்]*

**பூத்தநீறு** *pūtta - nīṟu,* பெ. (n.) தாளித்த சுண்ணாம்பு; slacked lime.

*[பூத்த + நீறு]*

**பூத்தபூ** *pūtta - pū,* பெ. (n.) பூநீறு; efflorescence found on the soil of fullers earth.

*[பூத்த + பூ]*

**பூத்தமங்கை** *pūtta - maṅgai,* பெ. (n.) **1.** பூப்படைந்த பெண்; a girl who attained puberty. **2.** சூல்கொண்ட பெண்; pregnant woman.

மறுவ. முதிர்ந்தபெண், சமைந்தபெண்.

*[பூத்த + மங்கை]*

**பூத்தருபுணர்ச்சி** *pū-t-taru-puṇarcci,* பெ. (n.) தனக்கு எட்டாத மரத்தினின்றும் தான் விரும்பிய பூவைப் பறித்துதவிய தலைவனது நன்றி பாராட்டித் தலைவி அவனைக் கூடுங்கூட்டம் (தொல். பொ. 114, பக், 548); (akap.) union of a lover and beloved on the occasion of his getting flowers for her from a tree out of her reach.

*[பூ + தரு + புணர்ச்சி. புணர் → புணர்ச்சி]*

**பூத்தவள்** *pūttavaḷ,* பெ. (n.) மாதவிடாய்ப் பெண்; woman in her menses.

*[பூ → பூத்த → பூத்தவள்]*

**பூத்தாழம்பழம்** *pūttāḻam paḻam,* பெ. (n.) ஒருவகைத் தாழை(அன்னாசி)ப் பழம்; pine apple.

*[பூத்தாழம் + பழம்]*

**பூத்தாளி** *pūttāḷi,* பெ. (n.) **1.** மரவகை; white catamaran tree. **2.** செந்தணக்கு; false tragacanth. (L.)

*[பூ + தாளி]*

**பூத்தானம்¹** *pū-t-tāṉam,* பெ. (n.) அருமை பாராட்டுகை (வின்.); making much of, keeping too nicely, using very delicately.

*[பூ + தானம். தனம் → தானம்]*

**பூத்தானம்²** *pū-t-tāṉam,* பெ. (n.) புதுமை (இ.வ.); novelty.

*[பூ + தானம். பூத்தல் = தோன்றுதல், பூ = புதியது]*

Skt. sthāna > த. தானம்

**பூத்தானம்பிடி–த்தல்** *pūttāṉam - piḍi-*, 4 செ.கு.வி. (v.i.) அஞ்சுதல் (இ.வ.); to fear.

*[பூத்தானம் + பிடி –,]*

**பூத்திரம்** *pūttiram*, பெ. (n.) மலை (யாழ்.அக.); mountain.

*[பூத்தல் = தோன்றுதல். பூ → பூத்திரம்]*

**பூத்திரி** *pū-t-tiri*, பெ. (n.) பூப்போலத் தீப்பொறிகள் விழும் வாண வகை (வின்.); a kind of fire work or rocket that drops flower like sparks.

மருவ. புசுவாணம், பூவானம்

*[பூ + திரி]*

**பூத்திரு** *pūttiru*, பெ. (n.) **1.** வில்வமரம்; a kind of bael tree. **2.** நாய்வேளை; a plant.

**பூத்துப்பூத்தெனல்** *pūttu-p-pūtteṉal*, பெ. (n.) **1.** ஓடுதல் முதலியவற்றால் உண்டாம் மூச்சிழைத்தற்குறிப்பு; expr. of hard breathing, as from running **2.** உடல் வீக்கக் குறிப்பு; expr. of sudden swelling of the body.

*[பூத்து + பூத்து + எனல்]*

**பூத்துப்போ–தல்** *pūttu-p-pō-*, 8 செ.கு.வி. (v.i.) **1.** நெருப்பில் நீறுபடர்தல்; to gather ashes, as coals. **'பூத்துப்போன நெருப்பு'** **2.** கண்பார்வை மங்குதல்; to be lack-lustrous, as eye sight. ***'கண் பூத்துப் போயிற்று'***

**து.** பூபரப்புனி (கண்பொறை உருவாதல்)

*[பூ → பூத்து → போ–,]*

**பூத்துறட்டி** *pūtturaṭṭi*, பெ. (n.) பூப்பறிக்கும் துறட்டி; pole with an iron hook fixed at one end to pluck flower.

*[பூ + துறட்டி. துறடு → துறட்டி]*

**பூத்தொடு–த்தல்** *pū-t-toḍu-*, 4 செ.கு.வி. (v.i.) **1.** பூமாலை கட்டுதல்; to string flowers into a garland. **2.** பண்டங்களை நெருக்க மின்றி வைத்துப் பெரிதாகக் கட்டுதல்; to put up things very loosly so as to make an appearance of bulkiness. **3.** கதை கட்டுதல் (வின்.); to fabricate, make a false story.

*[பூ + தொடு–,]*

**பூத்தொழில்** *pū-t-toḻil*, பெ. (n.) பூவேலைப்பாடு; embroidery. பண்டைத் தமிழகத்தில் ஆடை பூத்தொழிலுடன் நுண்ணிதாய் நெய்யப் பட்டிருந்தது (உ.வ.).

*[பூ + தொழில்]*

**பூதக்கண்ணாடி** *pūda-k-kaṇṇāḍi*, பெ. (n.) சிறியதைப் பெரியதாகக் காட்டும் கண்ணாடி வகை; microscope, as a magnifier.

ம. பூதக்கண்ணாடி; **தெ.** பூதஅத்தமு.

*[பூதம் + கண்ணாடி. புது → பூத → பூதம் = பருத்தது, பெரியது]*



**பூதக்கலம்** *pūda-k-kalam,* பெ. (n.) மணப்பெண் மணமகனுக்கு முதன்முறை உணவு பரிமாறுகை (வின்.); serving of food by the bride to the bridegroom for the first time.

*[பூதம் + கலம். பூத்தல் = தோன்றுதல். பூ → பூதம் = புதியது]*

**பூதக்கலவி** *pūda-k-kalavi,* பெ. (n.) சில சாதியாருள் சில சிறப்பு நாள்களில் சீட்டு விழுந்த பெண்ணோடு கூடும் கூட்டம்; intercourse with a woman chosen by lot on a festive occasion. prevalent among certain castes, not now in vogue. பூதக்கலவியிலும் புளிச்சக்கண்ணியா?

*[பூதம் + கலவி]*

**பூதக்கால்** *pūda-k-kāl,* பெ. (n.) யானைக் கால்; elephantiasis.

*[பூதம் + கால். பூதம் = பெரியது]*



**பூதக்காவு** *pūda-k-kāvu,* பெ. (n.) 1. பூதங்களுக்குத் திருவிழாக்களில் கொடுக்கும் படையல்; offerings to evil spirits during festivals. 2. *பூத வேள்வி* பார்க்க; see *pūda vēḷvi.*

*[பூதம் + காவு]*

**பூதக்குயம்** *pūda-k-kuyam,* பெ. (n.) ஆலம்விழுது (தைலவ. தைல.); air-root of a banyan.

*[பூதம் + குயம்]*

**பூதக்கூட்டுவுடம்பு** *pūda-k-kūṭṭu-v-uḍambu,* பெ. (n.) ஐம்பூதங்களின் கூட்டத்தால் தோன்றிய வுடம்பு; physical body, formed by pūdapariṇāmam.

*[பூதம் + கூட்டு + உடம்பு]*

**பூதகணம்** *pūda-kaṇam,* பெ. (n.) பூதங்களின் கூட்டம்; host of goblins.

*[பூதம் + கணம். பூது → பூதம் → பருத்தது, பருத்த பேய். கல் → கள் → கண் → கணம் = கூட்டம்]*

**பூதகரப்பன்பட்டை** *pūda-karappaṉ paṭṭai,* பெ. (n.) பூதகரப்பான் பட்டை (யாழ்.அக.) பார்க்க; see *pūda karappāṉ paṭṭai.*

*[பூதகரப்பான் + பட்டை]*

**பூதகரப்பான்** *pūda-karappāṉ,* பெ. (n.) பீநாறி; fetid tree.

**பூதகரப்பான்பட்டை** *pūdakarappāṉ - paṭṭai,* பெ. (n.) பீநாறி மரப்பட்டை (மலை.); bark of the fetid tree.

*[பூதகரப்பான் + பட்டை]*

**பூதகலிக்கம்** *pūda-kalikkam,* பெ. (n.) பேய்களையோட்ட மந்திரவாதி இடும் அஞ்சன வகை (வின்.); a kind of collyrium used by magicians to exorcise evil spirits.

*[பூதம் + கலிக்கம்]*

**பூதகி** *pūdagi,* பெ. (n.) *பூதனை* பார்க்க; see *pūdaṉai.*

*[ஊது → பூது → பூதல் → பூதலி. பூதலித்தல் = பருத்தல், தடித்தல் (வ.வ. 2, 40) பூது → பூதகி = பெண்ணரக்கி]*

**பூதகேசரி** *pūda-kēšari,* பெ. (n.) வெட்பாலை (மலை.); conessi bark.

**பூதகேசனி** *pūda-kēšaṉi,* பெ. (n.) சடாமாஞ்சி (மலை.); spikenard herb.

**பூதகேசி** *pūda-kēši,* பெ. (n.) காஞ்சொறி (மலை.); climbing nettle.

**பூதங்கண்டகுளம்** *pūdaṅ-kaṇḍa-kuḷam,* பெ. (n.) திருப்பரங்குன்றத்திற்கு வடக் கேயுள்ள ஓர் ஏரி; a water tank of north to Tiruparaṅkuṉṟam.

*[பூதம் + கண்ட + குளம்]*

குண்டோதரன் என்னும் பூதத்தால் வெட்டப்பட்ட குளம் என்று திருவிளையாடல் (தொன்மம்) கூறுகிறது. இக்குளத்தின் கரை பூதங்கண்டகரையென இக்காலத்தும் வழங்கும்; இதற்கு அருகில் கூடைதட்டிப் பறம்பெனச் சிறிய மலை யொன்றுண்டு. வெட்டிய மண்ணை யெடுத்துக் கரையிற் கொட்டிய கூடையைக் குண்டோதரனாகிய பூதம் இதில் தட்டியதென்பர்.

**பூதங்கண்ணனார்** *pūdaṅ-kaṇṇaṉār,* பெ. (n.) கழக (சங்க)க் காலப்புலவர்; a poet of sangam age.

*[பூதம் + கண்ணனார்]*

**பூதங்காட்டு-தல்** *pūdaṅ-kāṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) கண்ணாடி முதலியன கோணலாக்கி (விகாரமாக்கி)ச் சாயை காட்டுதல்; to give a distorted reflection as a concave or defective miror.

*[பூதம் + காட்டு-, உருவம் இருக்கிறபடி காட்டுதல் இயல்பாகக் கொள்ளப்படும். பூதம் உருவு திரிந்து காணப்படும் எனும் கருத்தடிப்படையிலேயே திரித்துக் காட்டுவது பூதங்காட்டுதல் எனப் பட்டது]*

**பூதங்கொல்லி** *pūdaṅkolli,* பெ. (n.) 1. நீண்டபூமரவகை; panicled-flowered milled leaf tree. 2. மரவகை. few-flowered milled leaf tree.

**பூதசஞ்சாரம்** *pūda-šañjāram,* பெ. (n.) உலக வாழ்வு (யாழ்.அக.); worldly or secular life.

*[பூ → புது → பூதம்+ சம்சாரம்]*

Skt. samsāṟa > த. சம்சாரம்

**பூதசஞ்சாரி**[1] *pūda-šañjāri,* பெ. (n.) உலக வாழ்வை விடாதவன் (யாழ்.அக.); worldly man, one engaged in secular pursuits.

*[பூ → பூது → பூதம் + சஞ்சாரி]*

Skt. samsārin > த. சஞ்சாரி

**பூதசஞ்சாரி**[2] *pūda-šañjāri,* பெ. (n.) காட்டுத் தீ (யாழ்.அக.); wild fire.

**பூதசதுக்கம்** *pūda-šadukkam,* பெ. (n.) காவிரிப் பூம்பட்டினத்தில் பூதம் நின்று காவல் புரிந்து வந்த நாற்சந்தி; junction of four roads in Kāviri-p-pūmpaṭṭiṉam where the image of a goblin stood keeping watch. *'பூதம் புடைத்துணும் பூதசதுக்கமும்'* (சிலப். 5. 134).

*[பூதம் + சதுக்கம். ஊது → பூது → பூதம்]*

**பூதசரீரம்** *pūda-šarīram,* பெ. (n.) *பூதவுடல்* பார்க்க; see *pūda-v-uḍal.*

*[பூதம் + சரீரம்]*

Skt. šarīra > த. சரீரம்.

**பூதசாரசரீரம்** *pūda-šāra-šarīram,* பெ. (n.) இறையுடம்பு (யாழ்.அக.); ethereal body.

*[பூதசாரம் + சரீரம்]*

Skt. šarīra > த. சரீரம்.

**பூதசாரம்** *pūda-šāram,* பெ. (n.) ஐம்பூதச் சாரம் (வின்.); essence of the elements that which is formed of or belongs to the elements that which is elemental.

*[பூதம் + சாரம்]*

**பூதசாரவுடம்பு** *pūdašāra-v-uḍambu,* பெ. (n.) வானுலக இன்பத்தை நுகரும் (அனுபவிக்க) ஆதன் (ஆன்மா) எடுக்கும் தேவவுடல் (சி.சி. 2, 36, மறைஞா.); ethereal body assumed by the soul in order to enjoy the bliss of heaven.

*[பூதம் + சாரம்]*

**பூதசுத்தி** *pūda-šutti,* பெ. (n.) 1. அன்று செய்த கரிசு(பாவங்)களை நீக்குவதாகிய (ஆன்மசுத்தியின்) ஆதன் தூய்மையின் பங்கு (அங்கம்) (சைவச. பொது. 502, உரை); (saiva.) daily ceremonial by which the soul is purified from daily sins, part of āṉma-šutti.

*[பூதம் + சுத்தி]*

**பூதஞ்சி** *pūdañji,* பெ. (n.) 1. உண்கை முதலியவற்றிற் காட்டும் கூச்சம் (இ.வ.); delicacy. 2. புனைசுருட்டு; deceit.

**பூதஞ்சேந்தனார்** *pūdañ-cēndaṉār,* பெ. (n.) இனியவை நாற்பது இயற்றிய பழையபுலவர்; an ancient poet, son of Pūdaṉ, author of 'iniyavai-nāṟpadu'.

**பூதத்தார்** *pūdattār,* பெ. (n.) பூதத்தாழ்வார் பார்க்க; see pūda-t-tāḻvār. *'பொய்கையார் பூதத்தார் பேயார்'* (உபதேசரத். 4).

*[பூதத்தாழ்வார் → பூதத்தார்]*

**பூதத்தாழ்வார்** *pūda-t-tāḻvār,* பெ. (n.) ஆழ்வார் பதின்மரில் ஒருவர் (திவ்.); a Vaiṣṇava saint, one of ten āḻvār, q.v.

**பூதத்தான்** *pūdattāṉ,* பெ. (n.) ஒரு சிறு தெய்வம் (நாஞ்); a minor deity.

*[பூதம் → பூதத்தான்]*

**பூதத்தான்றி** *pūdattāṉṟi,* பெ. (n.) கும்பி; careys myrtle bloom (L.)

**பூதத்துணர்** *pūdattuṇar,* பெ. (n.) புனமுருங்கை (மலை.); palas tree.

**பூததயவு** *pūda-tayavu,* பெ. (n.) பூதவிரக்கம் பார்க்க; see pūda-v-irakkam. *'பூத தயவுடைய ராயினோ ரெவருக்கும்'* (குமரே. சத. 97).

*[பூதம் + தயவு]*

Skt. dayā > த. தயவு

**பூததயை** *pūda-tayai,* பெ. (n.) *பூதவிரக்கம்* பார்க்க; see *pūda-v-irakkam.*

*[பூதம் + தயை]*

Skt. dayā > த. தயை

**பூததவசம்** *pūdatavašam,* பெ. (n.) எள்; sesame.

*[பூதம் + தவசம்]*

**பூததாத்திரி** *pūda-dāttiri,* பெ. (n.) (உயிரிகளின் வளர்ப்புத்தாய்) நிலவுலகம்; earth as foster-mother of living beings.

*[பூதம் + தாத்திரி]*

**பூததாரன்** *pūda-dāraṉ,* பெ. (n.) (பூதங்களை அடக்கியாளும்) சிவபெருமான் (இலிங்க. 4); Šivaṉ as ruling the goblin hosts.

*[பூதம் + தாரன்]*

Skt. dhara > **த.** தரன் → தாரன்.

**பூததானியம்** *pūda-dāṉiyam,* பெ. (n.) *பூத தவசம்* (யாழ்.அக.) பார்க்க; see *pūda-tavašam.*

*[பூதம் + தானியம்]*

Skt. dhanya > **த.** தானியம்

**பூததீர்த்தம்** *pūda-tirttam,* பெ. (n.) *பூத நன்னீர்* (சைவச. பொது. 66) பார்க்க; see *pūdanaṉṉir.*

*[பூதம் + தீர்த்தம்]*

Skt. tirtha > **த.** தீர்த்தம்

**பூததேசி** *pūdadēši,* பெ. (n.) வெண்ணொச்சி (சங்.அக.); five-leaved chaste tree.

**பூதநடனம்** *pūda-naḍaṉam,* பெ. (n.) ஒருகாலை யுயர்த்தி மடக்கியாடுகை; dancing with one leg raised and bent.

*[பூதம் + நடனம்]*

**பூதநன்னீர்** *pūdanaṉṉir,* பெ. (n.) ஐம் பூதங்களின் பொருட்டு உள்ளங்கையினின்று விடப்படும் படையல் நீர்; (šaiva.) water poured from the palm of the hand to propitiate the five elements, one of pañca tirttam.

*[பூதம் + நன்னீர். நல் + நீர் – நன்னீர்]*

**பூதநாசனம்** *pūdanāšaṉam,* பெ. (n.) சேங்கொட்டை (மலை.); marking-nut tree.

**பூதநாசினி** *pūdanāšiṉi,* பெ. (n.) பெருங் காயம் (தைலவ. தைல. 16); asafoetida.

**பூதநாடி** *pūdanāḍi,* பெ. (n.) பேய் பிடித்தவரிடம் ஒழுங்கின்றித் துடிக்கும் நாடிவகை (கொ.வ.); irregular pulse of one possessed by an evil spirit.

*[பூதம் + நாடி]*

**பூதநாதன்** *pūda-nādaṉ,* பெ. (n.) பூதங்களுக்குத் தலைவன், சிவபெருமான்; Sivaṉ, as lord of the goblins. பூதநாதனைப் பூம்புகலூரனை (தேவா. 781. 6.) 2. *பூதநாயகன்* 2 பார்க்க; see *pūdanāyagaṉ,*2

*[பூதம் + நாதன்]*

Skt. nātha > **த.** நாதன்

**பூதநாயகன்** *pūda-nāyagaṉ,* பெ. (n.) 1. *பூதநாதன்,* 1 பார்க்க; see *pūdanādaṉ,* 1 பூதநாயகர் புற்றிடங் கொண்டவர் (பெரியபு. திருக்கூட். 1). 2. கடவுள்; god. பூதநாயகனீர் சூழ்ந்த புலிக்கு நாயகன் (கம்பரா. அங்கத. 21).

*[பூதம் + நாயகன். நயம் → நாயகம் → நாயகன் = தலைவன்]*

**பூதநாயகி** *pūda-nāyagi,* பெ. (n.) மலைமகள்; Pārvadi.

*[பூதநாயகன் (ஆ.பா.)– பூதநாயகி (பெ.பா.)]*

**பூதநிருத்தம்** *pūdaniruttam,* பெ. (n.) *பூத நடனம்* (சங்.அக.) பார்க்க; see *pūda - nadanam.*

*[பூதம் + நிருத்தம்]*

Skt. nṛtta > த. நிருத்தம்

**பூதநூல்** *pūdanūl,* பெ. (n.) இயற்பொருள் ஆற்றல் ஆகியவற்றின் இயல்புகளைப்பற்றி ஆயும் நூல்; physics.

மறுவ. இயற்பியல்

*[பூதம் + நூல்]*

**பூதநோய்** *pūda-nōy,* பெ. (n.) நோய் வகை (கடம்ப. பு. இலீலா. 143); a disease.

*[பூதம் + நோய்]*

**பூதப்பட்டை** *pūda-p-paṭṭai,* பெ. (n.) *பூதகரப்பான் பட்டை* (மூ.அ.) பார்க்க; see *pudā-karappān paṭṭai.*

*[பூதம் + பட்டை]*

**பூதப்படையோன்** *pūda-p-padaiyōn,* பெ. (n.) பூதப்படைகளை யுடையவன், சிவபெருமான் (நாமதீப். 15); Sivan, as having an army of goblins.

*[பூதம் + படையோன்]*

**பூதப்பற்றன்** *pūda-p-parran,* பெ. (n.) பொருளே முதன்மையானது எனக் கருதுபவன் (உலோகாயதன்); materialist.

*[பூதம் + பற்றன். பற்று → பற்றன்]*

**பூதப்பாண்டியன்** *pūda-p-pāndiyan,* பெ. (n.) கழக(சங்க)க்கால மன்னன்; a king of sangam age.

*[பூதம் + பாண்டியன்]*

புலவனும் வீரனுமாய் சிறந்து விளங்கியவன். அகநானூற்றிலும், புறநானூற்றிலும் பாடப் பெற்றவன். ஒல்லையூர் தந்த எனும் அடைச்சிறப்பான் இவனுடைய புலமையும் வீரமும் உணரத்தக்கன.

**பூதப்பாண்டியன்தேவியார்** *pūda-p-pāndiyan-dēviyār,* பெ. (n.) பூதப்பாண்டியனின் மனைவி; king Pūda pāndiyan's wife.

*[பூதப்பாண்டியன் + தேவியார்]*

கணவன் இறந்தவுடன் அந்நிலையில் இருந்து அன்புகாட்ட யாராலும் முடியாது என்று கூறி தீயில் பாய்ந்து உயிர்விட்ட அரசி.

**பூதபஞ்சம்** *pūda-pañjam,* பெ. (n.) *பூதமைந்து* பார்க்க; see *pūdamaindu.*

*[பூதம் + பஞ்சம்]*

**பூதபத்திரி** *pūda-pattiri,* பெ. (n.) துளசி (சங்.அக.); sacred basil.

*[பூதம் + பத்திரி]*

**பூதபதி** *pūdapadi,* பெ. (n.) *பூதவாளி* (பிங்.) பார்க்க; see *pūdavāli.*

*[பூதம் + பதி]*

**பூதபரிணாமதேகம்** *pūda- parināma-dēgam,* பெ. (n.) *பூதக்கூட்டு வுடம்பு* பார்க்க; see *pūda-k-kūṭṭu- v-udambu.*

*[பூதம் + பரிணாமம் + தேகம்]*

Skt. pari-ṇāma > **த.** பரிணாமம்; Skt. dēha > **த.** தேகம்

**பூதபலம்** *pūda-palam,* பெ. (n.) பலா (சங்.அக.); jack tree.

*[பூதம் + பலம். பழம் → பலம்]*

**பூதபலி** *pūda bali,* பெ. (n.) *பூதக்காவு* பார்க்க; see *pūda-k-kāvu.*

*[பூதம் + பலி]*

Skt. balī > **த.** பலி

**பூதம்**[1] *pūdam,* பெ. (n.) **1.** நிலம், நீர், நெருப்பு, காற்று, வெளி என்ற ஐம்பூதங்கள் (திவா.); the five elements of nature viz., earth, water, fire, wind, ether. **2.** ஐம்பூதங்களின் சிறப்புத் தெய்வங்கள்; the deities presiding over the five elements. 'ஐம்பூத மன்றே கெடும்' (ஆசாரக். 16). **3.** உடம்பு; body . 'தம்பூத மெண்ணா திகழ்வானேல்' (ஆசாரத். 16).

*[பூத்தல் = தோன்றுதல். பூ → பூது → பூதம் = தோன்றியது, ஐம்பூதங்களுள் ஒன்று. "வளியென வருஉம் பூதக் கிளவியும்" (தொல்.242)(வ.வ.240)]*

**பூதம்**[2] *pūdam,* பெ. (n.) **1.** இறந்தவரின் பேயுருவம்; ghost of a deceased person. **2.** பூதகணம்; demon, goblin, malignant spirit, described as dawarfish with huge pot-belly and very small legs. "*பூதங்காப்பப் பொலி களந்தழீஇ*" (புறநா.369,17). **3.** தாழி (பரணி) (பிங்.); the second naksatra. **4.** பருத்தது (கொ.வ.); anything big or monstrous. **5.** உயிரி (பிங்.); any living creature. அகில பூதங்காப்பானவனே யென்ன (கலிங். 198). **6.** *பூத வேள்வி* பார்க்க; see *pūdavēḷvi.* **7.** இறையுணர்வு உள்ளவன் (பக்தன்.); devotee. கடல் வண்ணன் பூதங்கள். (திவ். திருவாய். 5, 2, 1). **8.** இருப்பு; being used in compounds. "*ஆதார பூதமாக*" (திருப்பு. 326). **9.** உள்ளான்புள் (அக.நி.); common snipe. **10.** சடாமஞ்சி (தைலவ. தைல) spikenard. **11.** கமுகு (சங்.அக.); areca palm. **12.**கூந்தற்பனை; talipot palm. **13.** ஆலமரம்; banyan tree.

**மறுவ.** குறள், கூளி, பாரிடம்

**தெ.** பூதமு.

*[ஊதாங்குழலால் நெருப்பூவதைப் பூத்துப்பூத்தென ஊதுகிறான் என்பது வழக்கு.காற்றூதுவதால் துருத்தியும் ஊத்தாம்பையும் புடைக்கும். ஊதுதல் = வீங்குதல். பருத்தல். ஊது → பூது → பூதல் → பூதலி. பூதலித்தல் = பருத்தல், தடித்தல். பூது → பூதம் = பருத்தது, பருத்த பேய். பூதக்கால் = யானைக்கால். பூதக்கண்ணாடி = பெருக்கிக்காட்டும் கண்ணாடி. பொத்து → பொது → புது → பூது → பூதம் என்றுமாம். புதா பெருநாரை. பொத்து → பொத்தை = பருமிளகாய். புதல் → புதர் = அடர்செடி. புதை = அடர்காடு, அம்புக்கட்டு. புதை → பூதை = அம்புக் கட்டு. பூதி = பொது. பொது → பொதும்பு → பொதும்பர். மா.வி. அ.வும் செ.ப.க.வும் இருவேறு பூதச் சொல்லையும் ஒன்றாகக் கூறியிருப்பது தவறாம் (வ.வ.2. 40)]*

Skt.bhūta > **த.** *பூதம்*

பேய்கட்டும் பூதங்கட்டும் கள்ளும் இறைச்சியும் படைப்பதும் கடாவும் சேவலும் காவு கொடுப்பதும் கல்வியும் பண்பாடுங் குன்றிய பொது மக்கட்குக் களிப்பையும் ஊக்கத்தையும் ஊட்டுவனவாயிருந்தன.

சில சமையங்களிற் புதையலெடுக்கவும் கிணறு வெட்டவும் கட்டடங்கட்டவும் நரக்காவு கொடுக்க

வேண்டியதாயிற்று. 'புதையலைப் பூதங்காத்தாற்போல்' "கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டாற்போல்" என்னும் உவமைப் பழமொழிகள் கவனிக்கத் தக்கன.

பூதங்கள் குறும்பூதம் பெரும்பூதம் என இருவகை. பூதத்தாழ்வார் என்றுவரும் இறையடியார் பெயர் பூதத்தை அடுத்து வழங்கிய நிலையைக் காட்டுகிறது.

பேய்களையும் பூதங்களையும் கல்லிலும் சுதையிலும் சிறிதும் பெரிதுமாக அஞ்சத்தக்க முகத்துடன் மாந்தனைப் போன்ற படிவஞ் சமைத்தும், கற்றூணில் உருவஞ்செதுக்கியும் சுவரில் ஓவியம் வரைந்தும் உடல் வடிவின்றி மண்ணிலும் சுதையிலும் பட்டைக் கூம்பாக அமைத்தும் உருவ வணக்கம் செய்து வந்தனர் பண்டையர் (த.ம.11–16).

**பூதம்³** *pūdam,* பெ. (n.) *பூதவம் 1* (பிங்.) பார்க்க; see *pudavam 1.*

*[ஊது → பூது → பூதம்]*

**பூதம்⁴** *pūdam,* பெ. (n.) பூரான் (நெல்லை.); centiped.

*[பூரான் → பூரன் → பூரம் → பூதம்]*

**பூதம்⁵** *pūdam,* பெ. (n.) தெருவலம் வரும்போது தூக்கிச் செல்லும் மாந்தவடிவம் (இ.வ.); huge hollow figure of a man or woman carried in procession.

*[ஊது → பூது → பூதம்]*

**பூதம்புல்லன்** *pūdam-pullaṉ,* பெ. (n.) கடைக்கழக(சங்க)மருவிய காலத்துப் புலவர்; poet of post-sangam age.

**பூதமகீபாலன்** *pūdamakipālaṉ,* பெ. (n.) புள்ளலூர் வேளாளன், ஔவையார்க்கு விருந்திட்டுப் பாடல் பெற்றவன்; Pul̤l̤alūr Vēl̤āl̤aṉ, a patron to poetress Auvai.

**பூதமரம்** *pūda-maram,* பெ. (n.) **1.** பெருவாகை (பதார்த்த. 220); siris. **2.** ஆல்; banyan.

*[பூதம் +மரம்]*

**பூதமாறுபாடு** *pūda māṟupāḍu,* பெ. (n.) ஐம்பூதங்களின் மாறுபாடு; modifications or changes of the five elements.

*[பூதம் +மாறுபாடு]*

**பூதமிவர்ந்தோன்** *pūdam-ivarndōṉ,* பெ. (n.) பிள்ளையார் (நாமதீப. 27); Ganeṣa.

*[பூதம் + இவர்ந்தோன்]*

**பூதமுசுட்டை** *pūda-muśuṭṭai,* பெ. (n.) வட்டத்திருப்பி (சங்.அக); velvet leaf.

**பூதமுத்தன்** *pūda-mutfaṉ,* பெ. (n.) *பூதப் பற்றன்* (நாமதீப. 126.) பார்க்க; see *pūda-p-paṟṟaṉ.*

*[பூதம் + முத்தன். முத்து → முத்தன்]*

**பூதமைந்து** *pūdam-aindu,* பெ. (n.) ஐம்பூதம்; the five elements of nature.

*[பூதம் + ஐந்து]*

**பூதயஞ்ஞம்** *pūdayaññam,* பெ. (n.) *பூதவேள்வி* பார்க்க; see *pūda-vēl̤vi.*

*[பூதம் + யஞ்ஞம்]*

Skt. yajña > த. யஞ்ஞம்

**பூதயாகம்** *pūda-yāgam,* பெ. (n.) *பூதவேள்வி* (சூடா.) (குறள், 87, கீழ்க்குறிப்பு) பார்க்க; see *pūda-vēl̤vi.*

*[பூதம் + யாகம்]*

Skt. yāga > த. யாகம்

**பூதர்** *pūdar*, பெ. (n.) **1.** பதினெண் கணத்து ளொருசாரார் (பிங்.); a class of demingods, one of padinen-kanam. **2.** பூதம்; demons, devils. *'கல்லாதார் தேருங்காற் பூதரே'* (சிறுபஞ். 20). **3.** மாந்தர்; human beings. *"ஒருபூதரு மங்கறியாவதை"* (அஷ்டப். திருவரங்கத்துமா. 62).

*[ஊது → பூது → பூதம் = பருத்தது, பருத்த பேய் (வ.வ. 2, 40) பூதம் → பூதர்]*

**பூதரக்கள்ளி** *pūdara-k-kalli*, பெ. (n.) கோபுரக் கள்ளி; a kind of tall spurge.

**பூதரப்புடம்** *pūdara-p-pudam*, பெ. (n.) ஓர் வகைப்புடம்; calcination in sand bath.

*[பூதரம் + புடம்]*

**பூதரவி** *pūdaravi*, பெ. (n.) உடம்பின் கொழுப்பு; fat of the body.

**பூதரறளி** *pūdararali*, பெ. (n.) வெண்டாளி; white catamaran tree.

**பூதராயன்** *pūda-rāyan*, பெ. (n.) பேய் (யாழ்.அக.); devil, goblin.

*[பூதம் + ராயன். அரசன் → அரையன் → ராயன்]*

**பூதரூபத்தன்** *pūdarūpattan*, பெ. (n.) பிள்ளையார் (நாமதீப. 27.); Ganēsa.

*[பூதம் + ரூபத்தன். உருவம் → உருவத்தான் → ரூபத்தான்]*

**பூதலக்கிழத்தி** *pūdala-k-kilatti*, பெ. (n.) நிலமங்கை (திவ். திருச்சந். 72); goddess of earth.

*[பூ + தலம் + கிழத்தி]*

**பூதலம்** *pūdalam*, பெ. (n.) நிலவுலகம்; the earth. *'பாதம் பூதலத்தே போந்தருளி'* (திருவாச. 8, 1).

*[பூ + தலம்]*

**பூதலூர்** *pūdalūr*, பெ. (n.) தஞ்சை மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Tañjāvūr dt.

**பூதவக்குருக்கண்** *pūdava-k-kurukkan*, பெ. (n.) ஆலம் விழுது (தைலவ. தைல. 94); air-root of the banyan.

*[பூதவம் + குருக்கண்]*

**பூதவச்சம்** *pūdavaccam*, பெ. (n.) *பூதகரப்பான்* பார்க்க; see *pūda karappān*.

**பூதவம்** *pūdavam*, பெ. (n.) **1.** ஆல் (திவா.); banyan. **2.** *பூமருது* **1**, (சூடா.) பார்க்க; see *pūmarudu 1*.

*[புது → பூது → பூதம் → பூதவம் = மிகப் பெரியதாய்ப் படரும் அல்லது பூதம் குடியிருக்கும் ஆலமரம் (வே.க. 3, 76)]*

**பூதவனல்** *pūda-vanal*, பெ. (n.) சினநெருப்பு (கோபாக்கினி) (திவா.); the fire of anger.

*[பூதம் + அனல். உல் → அல் → அன் → அனல்]*

**பூதவாகம்** *pūdavāgam,* பெ. (n.) பூதவாசம் (சங்.அக.) பார்க்க; see *pūdavāšam.*

*[பூதவாசம் → பூதவாகம்]*

**பூதவாகனம்** *pūdavāganam,* பெ. (n.) சிவபெருமான் எழுந்தருளும் ஊர்தி வகை; goblin-vehicle of šivan.

*[பூதம் + வாகனம்]*

Skt. vāhana > த. வாகனம்

**பூதவாசகம்** *pūdavāšagam,* பெ. (n.) பெருந்தேக்கு (சங்.அக.); teak.

**பூதவாசம்** *pūdavāšam,* பெ. (n.) 1. தான்றி (மலை.); belleric myrobalan. 2. உடம்பு (யாழ்.அக.); body.

*[பூதம் + வாசம்]*

**பூதவாதம்** *pūda-vādam,* பெ. (n.) பூதங்களின் சேர்க்கையினால் ஞால(அண்ட)வுருவாக்கம் ஏற்பட்டது எனக் கூறும் கூற்று; (மணிமே. 27, 263, உரை); doctrine holding that the world is formed from the five elements without any divine agency.

*[பூதம் + வாதம்]*

Skt. vāda > த. வாதம்

**பூதவாதி** *pūdavādi,* பெ. (n.) பூதவாத மதத்தவன்; believer in the doctrine of pūda vādam. "*பூதவாதியைப் புகனீயென்ன*" (மணிமே. 27, 263).

*[பூதம் + வாதி. வாதம் → வாதி]*

Skt. vādin > த. வாதி

**பூதவாளி** *pūdavāḷi,* பெ. (n.) பூதங்களுக்கு நாயகன், சிவபெருமான்; Šivan, as lord of the goblins. "*பூதவாளிநின் பொன்னடி யடைந்தேன்*" (தேவா. 176, 3).

*[பூத(ம்) + ஆளி. ஆள் → ஆளி]*

**பூதவிகாரம்** *pūda-vigāram,* பெ. (n.) பூதமாறுபாடு பார்க்க; see *pūda māṟupāḍu.* '*பூதவிகாரப் புணர்ப் பென்போர்களும்*' (மணிமே. 21, 100).

*[பூதம் + விகாரம்]*

Skt. vi-kāra > த. விகாரம்

**பூதவிரக்கம்** *pūda-virakkam,* பெ. (n.) உயிர்களிடத்திற் காட்டும் அன்பு; kindness to creatures.

*[பூதம் + இரக்கம்]*

**பூதவிருக்கம்** *pūda-v-irukkam,* பெ. (n.) 1. பீநாறி (சங்.அக); fetid tree. 2. பெருவாகை; siris.

*[பூதம் + விருக்கம்]*

Skt. vṛiksha > த. விருக்கம். vṛiksha என்னும் சொல்லை வளரும் அல்லது உடன் என்னும் பொருளுடைய bṛih என்னும் சொல்லோடு பொருத்திப் பார்க்கிறது மா.வி. அகரமுதலி. ஆயின் bṛih என்பது தமிழ் பெருகு என்னும் அடியோடு தொடர்புடையது.

**பூதவிருள்** *pūda-v-iruḷ,* பெ. (n.) 1. ஞால(அண்ட) கோளத்தைச் சூழ்ந்திருக்கும் புறவிருள் (யாழ்.அக.); darkness surrounding the universe. 2. காரிருள் (அந்தகாரம்) (திருவருட். 2, 6, உரை); intense darkness.

*[பூதம் + இருள்]*

**பூதவீடு** *pūda-vīḍu,* பெ. (n.) ஐம்பூதங் களாலாகிய உடல் (சங்.அக); body, as constituted of the five-elements.

*[பூதம் + வீடு]*

**பூதவுடம்பு** *pūda-v-uḍambu,* பெ. (n.) *பூதவுடல்* பார்க்க; see *pūda-v-uḍal.*

*[பூதம் + உடம்பு]*

**பூதவுடல்** *pūda-v-uḍal,* பெ. (n.) **1.** (ஐந்து பூதங்களாலான) பருவுடம்பு (தூலவுடம்பு); the gross body, as composed of the five elements. (வீரநாரா. பாயி. 21). **2.** ஒருவர் இறந்ததும் அவருடைய உடலை மங்கல வழக்காகக் குறிப்பிடும் சொல்; euphemism for the dead body, mortal remains. அன்னாரின் பூதவுடல் இன்று மாலை அடக்கம் செய்யப்படும் (உ.வ).

*[பூத(ம்) + உடல்]*

**பூதவுப்பு** *pūda-v-uppu,* பெ. (n.) சந்தியுப்பு (சங்.அக.); a kind of salt.

*[பூதம் + உப்பு]*

**பூதவுரு** *pūda-uru,* பெ. (n.) நிலம், (பிருதுவி) நீர் (அப்பு), நெருப்பு (தேயு), காற்று (வாயு) ஆகிய நான்குங் கொண்ட உருவப் பகுதி (மணிமே. 30, 190, கீழ்க்குறிப்பு); (Buddh.) a variety of uruvam consisting of piruttivi, appu, tēyu, and vāyu.

*[பூதம் + உரு]*

**பூதவேசி** *pūdavēsi,* பெ. (n.) *பூததேசி* (மலை.) பார்க்க; see *pūdadēsi.*

*[பூததேசி → பூதவேசி]*

**பூதவேர்** *pūda-vēr,* பெ. (n.) உடம்பின் நரம்பு; nerves of the body.

*[பூத(ம்) + வேர்]*

**பூதவேள்வி** *pūda-vēḷvi,* பெ. (n.) ஐவகை வேள்விகளுள் நெறிப்படி உயிரிகட்குக் காவு (பலி) உணவு ஈகை (பிங்.); giving food to animals as enjoined in the sāstrās one of ai-vagai-vēḷvi.

*[பூதம் + வேள்வி]*

**பூதன்**[1] *pūdaṉ,* பெ. (n.) **1.** ஆதன் (ஆன்மா) (பிங்.); the soul. **2.** மகன் (யாழ்.அக.); son. **3.** பூதத்தாழ்வார் பார்க்க; see pūdattāḻvār. பொய்கை பூதன் பேயார் (அஷ்டப். நூற்றெட். காப்பு) **4.** ஒரு பண்டையியற் பெயர்; a person name of ancient time. **5.** பருத்தவுடம் பினன்; giants who are reputed to be of a great stature as physical strength but mostly of meagre mentality.

*[பூதம் → பூதன் (வே. க. 3. 77)]*

**பூதன்**[2] *pūdaṉ,* பெ. (n.) தூயன் (பரிசுத்தன்); purified soul. "*புமைபிலுமை யொடும் புணர்ந்த பூதனே*" (வேதாரணி. விநாயக. 43).

*[பூதம் → பூதன்]*

**பூதன்**[3] *pūdaṉ,* பெ. (n.) கடுக்காய்; gall-nut.

**பூதன்தேவனார்** *pūdaṉ-dēvaṉār,* பெ. (n.) கடைக்கழக (சங்க)ப் புலவர்; poet of sangam age.

*[பூதன் + தேவனார். இவர் ஈழநாட்டி லிருந்து மதுரை யடைந்தவரென்று சிலர் குறிப்பர்]*

**பூதனன்** *pūdaṉaṉ,* பெ. (n.) அரசன் (சங்.அக.); king.

*[பூ → பூதனன்]*

**பூதனாசரீரம்** *pūdaṉā-šarīram,* பெ. (n.) பூதவுடல் பார்க்க; see pūda-v-uḍal. "*பூதனா சரீரம் போனால்*" (சி.சி. 2, 36).

*[பூதம் → பூதன் + சரீரம்]*

Skt. šarira > **த.** சரீரம்.

**பூதனார்** *pūdaṉār,* பெ. (n.) கழக (சங்க)க் காலப் புலவர்; a poet of sangam age.

இவர் பாலைத்திணையைப் புனைந்து பாடியுள்ளார். மகட்போக்கிய தாய் பாலையை வருணிப்பதாக இவர் கூறியது மிக்க சுவையுடையதாகும்.

**பூதனை** *pūdaṉai,* பெ. (n.) 1. தன் நச்சுமுலைப் பாலூட்டிக் கண்ணனைக் கொல்லவந்த ஓரரக்கி; a demoness who assumed the form of a woman for killing Krishna by suckling him with poisoned milk. *நள்ளிருள் வந்தபூதனை மாள* (திவ்.பெரியதி.10,9,1). 2. நோய்வகை (சினேந்.230); a disease.

*[பூதன்(ஆ.பா.) - பூதனை(பெ.பா.)]*

**பூதாக்கலம்** *pūdā-k-kalam,* பெ. (n.) *பூதக் கலம்* பார்க்க; see *pūda-k-kalam.*

*[பூதக்கலம் → பூதாக்கலம்]*

**பூதாக்கலம்பணி–தல்** *pūdā-k-kalam-paṇi-,* 3 செ.கு.வி (v.i.) மணவாளனும் மணவாட்டியும் முதன்முறை ஒருகலத்தில் உண்ணுதல் (யாழ்.அக.); to eat in the same vessel for the first time, as a bride-groom and, his bride.

*[பூதக்கலம் → பூதாக்கலம் + பணி–,]*

**பூதாகாரம்** *pūdā-kāram,* பெ. (n.) மிகப்பருத்தது (கொ.வ.); that which is huge or monstrous.

*[ஊது → பூது → பூதம் → பூதாகாரம்]*

**பூதாங்குசம்** *pūdāṅgušam,* பெ. (n.) பேய்மருட்டி (மலை.); a soft woolly plant.

*[பூதம் + அங்குசம்]*

**பூதாச்சிறையன்** *pūdācciṟaiyaṉ,* பெ. (n.) சூட(பச்சைக்கர்ப்பூர) வகை (பதார்த்த. 1078); a kind of medicated camphor.

**பூதாஞ்சனம்** *pūdāñjaṉam,* பெ. (n.) பேய்க் கோளைக் கண்டுபிடிக்க உதவும் மை (வின்.); magical ointment for discovering whether a person is possessed or not, one of three añjaṉam.

*[பூதம் + அஞ்சனம்]*

Skt. añjana > **த.** அஞ்சனம்.

**பூதாண்டம்** *pūdāṇḍam,* பெ. (n.) புடவி (பேரண்டம்); universe, cosmos. *'ஏதமில் பூதாண்டத் தெல்லையினீறே'* (திருமந். 2748).

*[பூதம் + அண்டம்]*

Skt. aṇḍa > **த.** அண்டம்.

**பூதாத்துமன்** *pūdāttumaṉ,* பெ. (n.) துறவி (யாழ்.அக.); one who has entirely abandoned worldly desires, ascetic.

*[பூத + ஆத்துமன்]*

**பூதாத்துமா** *pūdāttumā,* பெ. (n.) 1. உயிரி; (சீவாத்துமா); any living being. 2. உடல் (யாழ்.அக.); body. 3. துணைக்காரணம் (யாழ்.அக.); instrumental cause. 4. சிவபெருமான் (யாழ்.அக.); Šivaṉ. 5. நான்முகன் (யாழ்.அக.); Brahma.

*[பூதம் + ஆத்துமா]*

Skt. ātmā > த. ஆத்துமா.

**பூதாதன்** *pūdādaṉ,* பெ. (n.) ஐம்பூதங்களோடு கூடியிருக்கும் புலம்பன் (ஆன்மா) நிலை; the state of soul, when it is associated with the five elements.

*[பூதன் + ஆதன்]*

**பூதான்மா** *pūdāṉmā,* பெ. (n.) பூதாதன் (சி. போ. பா. 6, 2, பக். 317) பார்க்க; see *pūdādaṉ.*

*[பூதன் + ஆன்மா]*

**பூதானம்¹** *pūdāṉam,* பெ. (n.) நிலக்கொடை; gift of land.

*[பூ + தானம். தா → தானம்]*

**பூதானம்²** *pūdāṉam,* பெ. (n.) சிறிய வலியையும் பொறுக்க முடியாத தன்மை (கொ.வ.); delicate nature which will not brook the least pain.

*[பூ³ + தனம் – பூதனம் → பூதானம்]*

**பூதி¹** *pūdi,* பெ. (n.) 1. முடை நாற்றம் (திவா.); stench, as of putrid flesh. 2. புனுகுச் சட்டம் (தைலவ.); secreting glands of civet-cat. 3. சேறு (பிங்.); mud, mire. 4. ஏழு நிரயத்துள் (நரகத்துள்) ஒன்று (பிங்.); a hell, one of ēḻunaragam.

*[புழுதி → பூதி]*

**பூதி²** *pūdi,* பெ. (n.) 1. செல்வம் (பிங்.); affluence, wealth, prosperity. '*பூதிதரு மிலிங்க பூசனை*' (காஞ்சிப்பு. கலிங்க. 21). 2. சாம்பல் (வின்.); ashes. 3. திருநீறு (பிங்.); sacred ashes. "*பூதியணி பொன்னிறத்தர்*" (தேவா. 592, 2). 4. புழுதி (சூடா.); dust, powder. 5. நிலம் (அக.நி.); earth. 6. ஊன் (வின்.); flesh, meat. 7. கொடுமை (பிங்.); atrocity, violence, cruelty. 8. நாய்வேளை (மலை.); a sticky plant.

*[புள் → பூள் → (பூழ்) → பூழி = தூள், புழுதி. பூழ் → பூழ்தி → புழுதி. (மு.தா. 127) புழுதி → பூதி]*

**பூதி³** *pūdi,* பெ. (n.) உடம்பு (யாழ்.அக.); body.

*[பூதம் → பூதி]*

த. பூதி > Skt. bhutin

**பூதி⁴** *pūdi,* பெ. (n.) 1. பொதுமை (இ.வ.); indefiniteness, general terms. பூதியாய்ச் சொல்லுகிறான். 2. அடிப்படையின்றுக் குற்றம் சுமத்துகை; baseless imputation.

*[பொது → பொதி → பூதி]*

**பூதிகம்¹** *pūdigam,* பெ. (n.) 1. உடம்பு (சூடா.); body. 2. நிலவுலகம்; world.

*[பூதம் → பூதி → பூதிகம்]*

**பூதிகம்²** *pūdigam,* பெ. (n.) 1. நிலவேம்பு (சங்.அக.); chiretta. 2. வாசனைப்புல் வகை

(சங்.அக.); a fragrant grass. **3.** சாதிக்காய் (சங்.அக.); true nutmeg. **4.** அகில் (சங்.அக.); eagle wood. **5.** ஆயில் (தைலவ.தைல.42); gong wood.

*[பூதி → பூதிகம்]*

**பூதிகம்³** *pūdigam,* பெ. (n.) புன்கு (நாமதீப. 293); Indian beech.

*[பூதி → பூதிகம்]*

**பூதிகாய்** *pūdi-kāy,* பெ. (n.) ஆலமரப்பட்டை (சங்.அக.); bark of banyan tree.

*[பூது → பூதம் → பூதி + காய்]*

**பூதிப்படியாய்** *pūdi-p-padiyāy,* வி. அ. (adv.) பொதுவாய் (இ.வ.); generally, commonly.

*[பூதி + படி + ஆய்]*

**பூதிப்பிடி** *pūdi-p-pidi,* பெ. (n.) **1.** காரணியமின்றி (அநியாயமாய்) தாக்குகை (வின்.); attacking a person unjustly. **2.** பிறர் செயற்பாட்டில் காரணமில்லாமல் நுழைகை (வின்.); intermeddling with other's concerns.

*[பூதி + பிடி]*

**பூதிமம்** *pūdimam,* பெ. (n.) தூதுவளை (சங்.அக.); climbing brinjal.

**பூதியம்** *pūdiyam,* பெ. (n.) **1.** நிலவுலகம் (பிங்.); world. **2.** உடம்பு (பிங்.); body. "*அப்பூதியந் துறந்த வாருயிரை*" (திருவாரூ. 78). **3.** ஐம்பூதம் (வின்.); the five elements.

*[பூதகம் → பூதியம்]*

**பூதுரந்தரர்** *pūdurandarar,* பெ. (n.) அரசன்; kings, as supporters of the earth. "*எதிர் பூதுரந்தரர் யாவரும்*" (பாரத. இராசசூ. 136).

*[பூ + துரந்தரர்]*

**பூதூர்** *pūdūr,* பெ. (n.) புதுவதாக ஏற்பட்ட ஊர்; new village. திருப்பெரும்பூதூர்.

*[புது + ஊர்–புதூர் → பூதூர்]*

**பூதேசன்** *pūdēšaṉ,* பெ. (n.) சிவபெருமான் (பிங்.); Šivaṉ, as lord of the goblins.

*[பூதம் + ஈசன் – பூதமீசன் → பூதேசன்]*

**பூதேவர்** *pūdēvar,* பெ. (n.) பார்ப்பனர்; Brahmans, considered as gods on earth. '*ஒருகோடி பூதேவரும்*' (பாரத. தற்சிறப் 2).

*[பூ + தேவர். தேய் → தேய்வு → தேவு → தேவர்]*

**பூதேவி** *pūdēvi,* பெ. (n.) மண்மகள்; the goddess of earth.

*[பூ + தேவி.தேய் → தேய்வு → தேவு → தேவன் (ஆ.பா.) – தேவி (பெ.பா.)]*

**பூதை** *pūdai,* பெ. (n.) அம்பு (சூடா.); arrow.

*[புதை → பூதை]*

**பூதோன்மாதரோகம்** *pūdōṉmādarōgam,* பேய்க் கோளாறு (பைஷஜ. 286); demoniac possession, hysteria.

*[பூதம் + உன்மாதம் + ரோகம்]*

Skt. rōha > **த.** ரோகம்; Skt. un-matta > **த.** உன்மத்தம் → உன்மாதம்

**பூந்தகரை** *pūndakarai,* பெ. (n.) தகரை; a plant.

*[பூ + தகரை]*



**பூந்தட்டம்** *pū-n-taṭṭam,* பெ. (n.) *பூந்தட்டு* பார்க்க; see *pūn-taṭṭu. 'ஆய்பூந்தட்டத்து'* (பெருங். வத்தவ. 7, 26).

ம. பூத்தட்டம்

*[பூ + தட்டம். தட்டு → தட்டம்]*

**பூந்தட்டு** *pū-n-taṭṭu,* பெ. (n.) பூவைத்தற்குரிய தட்டு (பிங்.); flower salver.

*[பூ + தட்டு]*

**பூந்தணர்** *pūndaṇar,* பெ. (n.) புனல் முருங்கை; a tree.

**பூந்தராய்** *pūndarāy,* பெ. (n.) சீர்காழி; Shiyāli *'பூந்தராய்ப் பந்தணாய்ந்த பாடலால்'* (தேவா. 180, 11).

**பூந்தவிசு** *pū-n-taviśu,* பெ. (n.) மலரிருக்கை; seat made of flowers. *'புதிதினிட்ட பூந்தவிசி னுச்சிமேல்'* (சீவக. 705.)

*[பூ + தவிசு]*

**பூந்தளிர்** *pūndaḷir,* பெ. (n.) *பூந்துளிர்* பார்க்க; see *pūnduḷir.*

க. பூதளிர்.

*[பூ + தளிர்]*

**பூந்தாதி** *pūndādi,* பெ. (n.) பிச்சிப்பூ; a kind of jasmine.

**பூந்தாது** *pū-n-dādu,* பெ. (n.) 1. மகரந்தப் பொடி (சூடா.); pollen, farina of flowers. 2. கோங்கு (மலை.); false tragacanth.

க. பூதூளி, பூதூளு; தெ. புவ்வுபொடி, புவ்பொடி.

*[பூ + தாது]*

**பூந்தாலிகம்** *pūndāligam,* பெ. (n.) பெருந்தும்மை; large lucas.

**பூந்தாழங்குடி** *pūndāḻaṅkuḍi,* பெ. (n.) தஞ்சை மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Tañjāvūr dt.

*[பூ + தாழை + குடி]*

**பூந்தாழம்** *pūndāḻam,* பெ. (n.) *பூத்தாழம் பழம்* பார்க்க; see *pūttāḻam paḻam.*

**பூந்தாழம்பழம்** *pūndāḻam-paḻam,* பெ. (n.) ஒருவகைத் தாழை (அன்னாசி)ப் பழம்; pine-apple.

*[பூந்தாழம் + பழம்]*

**பூந்தாழை** *pū-n-dāḻai,* பெ. (n.) ஒருவகைத் தாழை (அன்னாசி) (சங்.அக); pine-apple.

*[பூ + தாழை]*



**பூந்தி**[1] *pūndi,* பெ. (n.) *புன்கு 1* (மலை.) பார்க்க; see *puṉgu 1.*

**பூந்தி**[2] *pūndi,* பெ. (n.) *பூவந்தி* (வின்.) பார்க்க; see *pūvandi.*

*[பூவந்தி → பூந்தி]*

**பூந்திக்கொட்டை** *pūndi-k-koṭṭai,* பெ. (n.) *பூவந்தி* பார்க்க; see *pūvandi.*

*[பூவந்தி → பூந்தி + கொட்டை]*

**பூந்துகள்** *pū-n-dugaḷ,* பெ. (n.) மகரந்தப் பொடி, (யாழ்.அக.); pollen of flowers.

ம. பூம்பொடி; க. பூதுளி, பூதூளு

*[பூ + துகள்]*

**பூந்துகில்** *pū-n-dugil,* பெ. (n.) 1. பூவேலை செய்த ஆடை; garment embroidered with floral designs. *'பூந்துகிற்கொடுத்த தீந்தேனகிற் புகை'* (சீவக. 1855). 2. பொற்கரையுள்ள ஆடை; gold bordered silk cloth. *'ஞாயிற்றணி வனப்பமைந்த பூந்துகில்'* (பரிபா. 13, 2).

*[பூ + துகில்]*

**பூந்துணர்** *pūnduṇar,* பெ. (n.) 1. பூங்கொத்து; cluster of flowers. *'பூந்துணர் வாளி'* (கம்பரா. உலாவியா. 11). 2. புனமுருக்கு (மலை.); palas tree.

*[பூ + துணர்]*

**பூந்துளிர்** *pū-n-duḷir,* பெ. (n.) மெல்லிய தளிர் (யாழ்.அக.); tender sprout, a young shoot with flowers.

க. பூதளிர்

*[பூ + துளிர்]*

**பூந்துறை** *pūndurai,* பெ. (n.) மலர்கள் நிறைந்துள்ள நீர்நிலை; a pond in which flowers grown. *"தண்மணல் துருத்தியுந் தாழ்பூந்துறைகளும்"* (மணிமே. 1, 65).

*[பூ + துறை]*

**பூந்தூள்** *pū-n-dūḷ,* பெ. (n.) *பூந்துகள்* (யாழ்.அக.) பார்க்க; see *pūndugaḷ.*

க. பூதுளி, பூதூளு

*[பூ + தூள். துகள் → தூள்]*

**பூந்தேக்கு** *pū-n-dēkku,* பெ. (n.) மரவகை; a tree, kleinhovia hospita.

*[பூ + தேக்கு]*

**பூந்தேர்** *pū-n-dēr,* பெ. (n.) பூக்களால் புனையப்பட்ட தேர் (யாழ்.அக.); chariot adorned with flowers.

*[பூ + தேர்]*

**பூந்தேறல்** *pūndēṟal,* பெ. (n.) புதிய இனிய மது; fresh and sweet toddy. ***"விளைபூந் தேறலின் மெய்தவத் தீரே"*** **(மணிமே. 3, 99).**

*[பூ + தேறல். துல் → (தெல்) → தென் = (தெளிவு,கள்) இனிமை. தென் → தெறு → தேறு → தேறல் = தெளிந்த கள்.]*

**பூந்தேன்** *pūndēṉ,* பெ. (n.) பூவிலிருக்கும் மது; honey in the flowers, nector of flowers.

**ம.** பூந்தேன்

*[பூ + தேன். துல் → (தெல்) → தென் → தேன்.]*

**பூந்தேனினம்** *pūndēṉiṉam,* பெ. (n.) பூந்தாது; pollen.

*[பூ + தேனினம்]*

**பூந்தை** *pūndai,* பெ. (n.) பூதன் என்பவனது தந்தை **(தொல். எழுத்து. 348, உரை);** father of a person named Pūdaṉ.

*[பூதன் + தந்தை. பூந்தை மரூஉ]*

**பூந்தொங்கல்** *pūntoṅgal,* பெ. (n.) *பூங்கொத்து* பார்க்க; see *pūṅgottu.*

**க.** பூதொங்கல்

*[பூ + தொங்கல். தொங்கு → தொங்கல்]*

**பூந்தொட்டி** *pūndoṭṭi,* பெ. (n.) பூச்செடி வளர்க்கும் சிறு தொட்டி; flowerpot.

**ம.** பூச்சட்டி

*[பூ + தொட்டி]*

**பூந்தோட்டக்கறுப்பு** *pū-n-tōṭṭa-k-kaṟuppu,* பெ. (n.) தஞ்சை மாவட்டத்தில் பூந்தோட்ட மென்ற சிற்றூரில் நெய்யப்படும் கறுப்புச் சேலை வகை **(இ.வ.);** a saree of black colour, made at Pūntōṭṭam, a village in Tañjāvūr.

*[பூந்தோட்டம் + கறுப்பு]*

**பூந்தோட்டம்** *pū-n-tōṭṭam,* பெ. (n.) **1.** பூக்கள் நிறைந்த தோட்டம் (நந்தவனம்) **(சூடா.);** flower garden. **2.** சோலை **(சிந்தா. நி. 65.);** grove.

**ம.** பூந்தோட்டம்; **க.** பூதோட, பூம்பொல, **கூ.**தோட

*[பூ + தோட்டம்]*

**பூந்தோடு** *pū-n-tōḍu,* பெ. (n.) பூவின் இதழ் **(யாழ்.அக.);** flower petal.

*[பூ + தோடு]*

**பூந்தோள்** *pū-n-dōl,* பெ. (n.) பொலிவு பொருந்திய சுவல் (புயம்); grandness of appearance of shoulder. ***"பூந்தோள் யாப்பின் மிஞிலி காக்கும்"*** **(நற்றிணை, 365, 4).**

*[பூ + தோள்]*

**பூநாகம்[1]** *pū-nāgam,* பெ. (n.) பூவில் உள்ள சிறுபாம்பு வகை **(ஜீவரட். 344);** a kind of small snake found among flowers.

*[பூ + நாகம்]*

**பூநாகம்[2]** *pū-nāgam,* பெ. (n.) **1.** நாகப் பூச்சி; round-worm infecting the small intestines; ascaris lumbricoides. ***'பூநாகமுங் குழைத்தல் போனம்'*** **(திருவாரூர். அவை) 2.** நாங்கூழ்

(பிங்.); earth-worm. **3.** *பூநீறு* (யாழ்.அக.) பார்க்க; see *pūniṟu.*

**பூநாச்சிப்புல்** *pūnācci-p-pul,* பெ. (n.) குறத்திப் பாசி; job's tears.

*[பூநாச்சி + புல்]*

**பூநாமக்காரன்** *pū-nāmakkāraṉ,* பெ. (n.) நெல்வகைகளுள் ஒன்று; a kind of paddy. (A.).

**பூநாரை** *pū-nārai,* பெ. (n.) சிவப்பு நாரை வகை; flamingo.

*[பூ + நாரை]*



**பூநிம்பம்** *pū-nimbam,* பெ. (n.) நிலவேம்பு (மலை.); chiretta.

**பூநிறம்** *pū-niṟam,* பெ. (n.) மாந்தளிர்க்கல் (யாழ்.அக.); a kind of precious stone.

**பூநீர்[1]** *pū-nīr,* பெ. (n.) **1.** பனிநீர் (யாழ்.அக.); rose-water. **2.** அரக்குநீர்; water, coloured red. *'பூநீர் துடையாள்'* (பரிபா. 16, 21).

*[பூ + நீர்]*

**பூநீர்[2]** *pū-nīr,* பெ. (n.) உவர்மண்ணில் எடுக்கும் நீர் (சங்.அக.) water obtained form brackish soil.

ம. பூநீர்

*[பூ + நீர்]*

**பூநீலம்** *pū-nīlam,* பெ. (n.) **1.** அவுரிவகை (யாழ்.அக.); a kind of indigo. **2.** ஓர் கடைச்சரக்கு; a bazaar drug.

*[பூ + நீலம்]*

**பூநீற்றுச்சுண்ணம்** *pūniṟṟu-c-cuṇṇam,* பெ. (n.) முப்புச் சுண்ணம்; a medicinal powder prepared out of three salts.

*[பூநீறு + சுண்ணம்]*

**பூநீறு** *pūniṟu,* பெ. (n.) **1.** ஒருவகை வெள்ளை உவர்மண் (வின்.); light white-coloured earthy matter containing a great proportion of carbonate of soda. **2.** ஒருவகை மருந்துப் பொடி (யாழ்.அக.); a medicinal powder.

*[பூ + நீறு]*

**பூநீறுக்கல்** *pūniṟu-k-kal,* பெ. (n.) வெள்ளை பூக்கான்கல்; a white lime stone.

*[பூநீறு + கல்]*

**பூநீறுக்காரம்** *pūniṟu-k-kāram,* பெ. (n.) *பூநீறுப்பு* பார்க்க; see *pūniṟuppu.*

*[பூநீறு + காரம்]*

**பூநீறுப்பு** *pūnīṟuppu,* பெ. (n.) எரியுப்பு (வின்.); carbonate of soda.

*[பூநீறு + உப்பு]*

**பூநெட்டி** *pū-neṭṭi,* பெ. (n.) வெண்கிடை (இ.வ.); pith.

*[பூ + நெட்டி]*

**பூநொய்** *pūnoy,* பெ. (n.) சிறுநொய் (கொ.வ.); fine grits.

*[பூ + நொய்]*

**பூநொய்க்கஞ்சி** *pūnoy-k-kañji,* பெ. (n.) சிறுநொய் போட்டுக்காய்ச்சிய கஞ்சி; gruel prepared out of fine rice grits.

*[பூநொய் + கஞ்சி]*

இக்கஞ்சி வெப்பத்தையும் களைப்பையும் நீக்கி பசி உண்டாக்கும் என்று சா.அக. குறிக்கிறது.

**பூநோன்பு** *pū-nōṉbu,* பெ. (n.) கொங்கு நாட்டில் பொங்கலைக் கொண்டாடும் விழா; a festival observed by maidens on the third day of pongal, in Koṅgunāḍu. *'பூநோன்புக்குப் பூப்பறிக்கச் சென்று'* (எங்களூர், 159).

*[பூ + நோன்பு]*

**பூப்பகம்** *pūppagam,* பெ. (n.) பெண்குறி (பிங்.); pudendum muliebre.

*[பூப்பு + அகம்]*

**பூப்பகவாயில்** *pū-p-paga - vāyil,* பெ. (n.) பெண்குறி; vagina.

*[பூப்பகம் + வாயில்]*

**பூப்பட்டமாலைக்கண்** *pū-p-paṭṭa - mālai-k-kaṇ,* பெ. (n.) ஓர் கண்ணோய்; an eye disease.

*[பூ + பட்ட + மாலைக்கண்]*

**பூப்பட்டை** *pū-p-paṭṭai,* பெ. (n.) இலவங்கப் பட்டை (சங்.அக.); cinnamon bark.

**பூப்படர்–தல்** *pūpaḍar-,* 3 செ.கு.வி. (v.i.) கண்ணில் பூ படர்தல்; to spread as in cataract of the eye.

மறுவ. புரைவிழுதல்

*[பூ + படர்–,]*

**பூப்படலம்** *pū-p-paḍalam,* பெ. (n.) ஓர் வகைக் கண்ணோய்; an eye disease.

*[பூ + படலம்]*

**பூப்படை[1]–தல்** *pūppaḍi-,* 2 செ.கு.வி. (v.i.) பருவமெய்துதல்; to attain puberty.

*[பூப்பு + அடை–,]*

**பூப்படை[2]** *pū-p-paḍai,* பெ. (n.) *பூப்பலி,* 1, (நாஞ்.) பார்க்க; see *pūppali-,* 1

*[பூ[3] + படை]*

**பூப்படை[3]** *pū-p-paḍai,* பெ. (n.) கண்ணில் விழும் பூ; a speck or ulcer in the eye.

*[பூ + படை]*

**பூப்பதாரி** *pūppadāri,* பெ. (n.) வீட்டுவிலக்கான பெண் (யாழ்.அக.); a woman in her periods.

*[பூப்பு + தாரி]*

Skt. dhārin > த. தாரி

**பூப்பந்தர்** *pū-p-pandar,* பெ. (n.) *பூப்பந்தல்* பார்க்க; see *pū-p-pandal.*

*[பூ + பந்தல். பந்தல் → பந்தர். ல–ர கடைப்போலி]*

**பூப்பந்தல்** *pū-p-pandal,* பெ. (n.) பூவினால் அழகுறப் புனையப்பட்ட பந்தல்; pandal adorned with flowers.

ம. பூப்பந்தல்

*[பூ + பந்தல்]*

**பூப்பரிதி** *pū-p-paridi,* பெ. (n.) *பூபரிதி* (யாழ்.அக.) பார்க்க; see *pūparidi.*

*[பூ + பரிதி]*

**பூப்பருத்தி** *pū-p-parutti,* பெ. (n.) பூவரசு (மலை.); portia tree.

*[பூ + பருத்தி]*

**பூப்பல்லக்கு** *pū-p-pallakku,* பெ. (n.) பூவினால் அழகுறப் புனையப்பட்ட பல்லக்கு; palanquin decorated with flowers.

*[பூ + பல்லக்கு]*

**பூப்பலகை** *pū-p-palagai,* பெ. (n.) நன்னாரி (சங்.அக.); Indian sarsaparilla.

**பூப்பலா** *pū-p-palā,* பெ. (n.) மரவகை (சங்.அக.); a tree.

**பூப்பலாசு** *pū-p-palāšu,* பெ. (n.) பலாசு; palas tree.

**பூப்பார்வைநுழைவு** *pū-p-pārvai nulaivu,* பெ. (n.) 1. நிலவுலகுக்கு வந்திறங்குகை; descending on the earth. 2. ஆண்டுப் பிறப்பிற்குப் பின் நன்னாளில் முதன்முதலாகத் தனது பயனிலத்தைப் பார்வையிடுகை (வின்); visiting ones field for the first time in the new year on an auspicious day.

*[பூ + பார்வை+ நுழைவு]*

**பூப்பலி** *pū-p-pali,* பெ. (n.) 1. போற்றி வழிபடற்குரிய மலர்; flowers offered in worship. *'வண்டு சூழ் பூப்பலி சுமந்து'* (சீவக. 3052). 2. போற்றி வழிபாடு; ceremonial worship. *'பூப்பலி செய்து'* (சிலப். 28, 231). 3. மலரால் செய்யப்படும் பூசனை; worship by offering flowers. *'கடவுட் பீடிகைப் பூப்பலி கடைகொள்க'. (மணிமே.7,121)*

*[பூ + பலி]*

Skt. bali > த. பலி

**பூப்பாவாடை** *pū-p-pāvāḍai,* பெ. (n.) தேவிக்குப் பாவாடையைப் போலப் பூவாற் செய்து சாத்திய ஆடை; skirt of flowers put on the image of a goddess.

*[பூ + பாவாடை]*

**பூப்பிஞ்சு** *pū-p-piñju,* பெ. (n.) இளம்பிஞ்சு (கொ.வ.); tender, green fruit.

து. பூநினெ

*[பூ + பிஞ்சு]*

**பூப்பிரதட்சிணம்** *pū-p-piradaṭciṇam,* பெ. (n.) *பூவலம்* பார்க்க; see *pū-valam.*

*[பூ + பிரதட்சிணம்]*

Skt. pradakṣṇa > த. பிரதட்சனம்

**பூப்பிரவேசம்** *pū-p-piravēšam,* பெ. (n.) *பூப்பார்வை நுழைவு* பார்க்க; see *pū-p-ārvai nuḻaivu.*

Skt. pra-vēša > த. பிரவேசம்

**பூப்பிலி** *pūppili,* பெ. (n.) பருவம் எய்தாத பெண், திரளாத பெண்; immatured girl, one who has hot attained puberty.

*[பூப்பு + இலி]*

**பூப்பிள்ளை** *pū-p-piḷḷai,* பெ. (n.) சிவ பூசையின் போது உதவியாக இருப்பவன்; servant attending a worshipper during his šivapūja.

*[பூ + பிள்ளை. புள் → பிள் → பிள்ளை. பூசைக்குரிய பூக்களைப் பறித்துக் கொடுக்கும் பிள்ளை பூப்பிள்ளை]*

**பூப்பிள்ளையட்டவணை** *pūppiḷḷai-y-aṭṭavaṇai,* பெ. (n.) திருவாவடுதுறை அம்பலவாண தேசிகரியற்றிய சிவனியக் கொண்முடிபு நூல்; a primer on saivam in prose by, Ambalavāṇa-dēšigar of Tiruvāvaḍudurai.

*[பூப்பிள்ளை + அட்டவணை]*

**பூப்பு** *pūppu,* பெ. (n.) 1. பூக்கை; flowering, blooming. 2. மாதவிலக்கு; menstruation. *'பூப்பின் புறப்பாடு ஈராறு நாளும்'* (தொல். பொ. 187).

*[பூ → பூப்பு]*

**பூப்புடத்தைலம்** *pūpuḍa-t-tailam,* பெ. (n.) குழியெண்ணெய் (குழித்தைலம்); oil extracted by a variety of calcination.

*[பூப்புடம் + தைலம்]*

Skt. taila > த. தைலம்

**பூப்புடம்** *pū-p-puḍam,* பெ. (n.) 1. பூமிபுடம்; a method of calcination. 2. பூப்புடமிட்ட பொருள்; medicinal substance clacinated in pū-p-pudam.

*[பூ + புடம்]*

**பூப்புநீராட்டுவிழா** *pūppu - nīrāṭṭu - viḻā,* பூப்படைந்த பெண்ணுக்குச் செய்யும் சடங்கு; purificator ceremony for the girl who has attained puberty.

*[பூப்பு + நீராட்டு + விழா]*

**பூப்புல்** *pū-p-pul,* பெ. (n.) ஒருவகைப் புல்; little-millet grass.

*[பூ + புல்]*

**பூப்பூ-த்தல்** *pū-p-pū-,* 4 செ.கு.வி. (v.i.) மலர்தல்; to flower, bloom, blossom.

து. பூஅரலுனி, பூபூபினி, பூபூபுனி

*[பூ + பூ-,]*

**பூப்பேசு-தல்** *pū-p-pēšu-,* 5 செ.கு.வி. (v.i.) கணிகை(வேசி)யர்க்குரிய நாட்பரிசம் பேசி முடித்தல்; to fix the daily hire of harlot. *'பரத்தையரைப் பூப்பேசிக் கொள்கின்ற'* (கலித். 66, உரை).

*[பூ + பேசு-,]*

**பூப்பொங்கல்** *pū-p-poṅgal,* பெ. (n.) பூநோன்பு (எங்களூர், 90). பார்க்க; see *pūnōṉbu.*

*[பூ + பொங்கல். பொங்கு → பொங்கல்]*

**பூப்போடு-தல்** *pū-p-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) ஆடையிற் பூவேலை செய்தல்; to embroider with floral designs, as a cloth.

*[பூ + போடு-,]*

**பூப்போல** *pū-p-pōla,* வி.எ. (adv.) (பூவைப் போல) மெதுவாய்; lit, like a flower, gently. *'அவள் பூப்போல வந்தாள்'.*

*[பூ + போல]*

**பூபகம்** *pūpagam,* பெ. (n.) பெண் குறி; genital of a female.

*[பூப்பு + அகம்-பூப்பகம்→பூபகம்]*

**பூபடலம்** *pū-paḍalam,* பெ. (n.) ஓர் கண்ணோய்; an eye disease.

*[பூ + படலம்]*

**பூபதனப்பூப்புடம்** *pū-padaṉa-p-pū-p-puḍam,* பெ. (n.) முப்பூப்புடத்துளொன்று (இ.வ.); a method of calcining medicine, one of muppū-p-puḍam, q.v.

*[பூ + பதனம் + பூ + புடம்]*

**பூபதி**[1] *pūpadi,* பெ. (n.) 1. அரசன்; king, ruler, as lord of the earth. 'புரந்தரனா மெனப் பூபதியாகி' (அஷ்டப். அழகரந். 5). 2. பூபதி மாத்திரை (பதார்த்த. 1226) பார்க்க; see pūpadi māttirai. 3. ஆதிநாகம் (ஆதிசேடன்) (அரு. நி. 312); Adisēṣan.

*[பூ + பதி]*

**பூபதி**[2] *pupadi,* பெ. (n.) மல்லிகை (மலை.); jasmine.

**பூபதிமாத்திரை** *pūpadimāttirai,* பெ. (n.) ஒரு வகைக் குளிகை (பதார்த்த. 1226).; a kind of pill.

*[பூபதி + மாத்திரை]*

**பூபதிரசம்** *pūpadirašam,* பெ. (n.) இதளிய மருந்துவகை (பதார்த்த. 220); a preparation of mercury.

**பூபம்**[1] *pūbam,* பெ. (n.) *பூவன் வாழை* பார்க்க; see *pūvaṉvāḻai.*

*[பூவன் → பூபன் → பூபம்]*

**பூபம்**[2] *pubam,* பெ. (n.) அடை முதலிய சிற்றுண்டி; a kind of pan-cake prepared for break-fast.

**பூபரிசமா-தல்** *pū-parišamā-,* 6 செ.கு.வி. (v.i.) பிறத்தல்; to be born.

*[பூ + பரிச + மா-,]*

Skt. sparsa > த. பரிசம்

**பூபரிதி** *pū-paridi,* பெ. (n.) 1. நிலநடுக் கோட்டிற்குச் செங்குத்தான மட்டத்தளமுள்ள வான்கோண வட்டம் (அயன ரேகை); equinoctial line. 2. நிலவுலகின் சுற்றளவு; circumference of the earth.

*[பூ + பரிதி]*

**பூபரிப்பயறு** *pūpari-p-payaṟu,* பெ. (n.) பாசிப்பயறு; pillipesare.

*[பூபரி + பயறு]*

**பூபலா** *pū - palā,* பெ. (n.) நாவல் பழம்; jamoon fruit.

**பூபன்** *pūban,* பெ. (n.) அரசன்; sovereign, as protecting the earth. "*பொறையினாற் பெரியன் பூபன்*" (சூளா. தூது. 90).

*[பூ → பூபன்]*

**பூபனை** *pū - pānai,* பெ. (n.) நிலப்பனை; ground palm.

*[பூ + பனை]*



**பூபாகம்** *pūbāgam,* பெ. (n.) நிலப்பரப்பு (இக்.வ.); land.

*[பூ + பாகம்]*

**பூபாலன்**[1] *pūpālan,* பெ. (n.) **1.** அரசன் (திவா.); king, sovereign. **2.** வேளாளன் (பிங்.); Vēḷāḷan, agriculturist. **3.** மூக்கினடுவில் ஒன்று அல்லது மூன்று சுழிகள் கொண்ட உயர்வகைக் குதிரை (சுக்கிரநீதி, 314); horse with one or three marks at the centre of its nose, as the prince of horses.

*[பூ + பாலன்]*

Skt. pāla > **த.** பாலன்

**பூபாலன்**[2] *pūpālan,* பெ. (n.) *பூமகன்*[2] (அரு.நி.) பார்க்க; see *pūmagan*[2].

*[பூ + பாலன்]*

**பூபிலிகம்** *pūpiligam,* பெ. (n.) திரளாத தன்மை; inability to attain puberty.

*[பூப்பிலி → பூப்பிலகம் → பூபிலிகம்]*

**பூம்பட்டு** *pūm-pattu,* பெ. (n.) மெல்லியபட்டு; fine, soft silk.

*[பூ + பட்டு]*

**பூம்பட்டினம்** *pūmpattinam,* பெ. (n.) *'புகார்'* பார்க்க; see *pugār.*

*[புகும் → பூம்+பட்டினம். காவிரி புகும் பட்டினம்]*

**பூம்பந்தர்** *pū-m-pandar,* பெ. (n.) *பூப்பந்தல்* பார்க்க; see *pū-p-pandal. 'தருமணன் ஞெமிரிய தண்பூம்பந்தருள்'* (பெருங். வத்தவ 6, 12).

*[பூ + பந்தர். பந்தல் → பந்தர். ல் – ர போலி]*

**பூம்பந்தல்** *pū-m-pandal,* பெ. (n.) **1.** *பூப்பந்தல்* பார்க்க; see *pū-p-pandal.* **2.** ஊர்தி வகை (இ.வ.); a kind of vehicle (vāhanam).

*[பூ + பந்தல்]*

**பூம்பந்து** *pū-m-pandu,* பெ. (n.) பூவினால் அமைந்த பந்து (சீவக, 2547, உரை); ball of flowers.

**க.** பூந்தொங்கல்

*[பூ + பந்து]*

**பூம்பல்லக்கு** *pūm-pallakku,* பெ. (n.) *பூப்பல்லக்கு* (நெல்லை.) பார்க்க; see *pū-p-pallakku.*

*[பூ + பல்லக்கு]*

**பூம்பழம்** *pūm-paḻam,* பெ. (n.) சவர்க்கார எண்ணெயைப் போக்கும் ஒரு பழம்; a fruit capable of removing the oil from the fuller earth.

*[பூ + பழம்]*

**பூம்பறியல்** *pūmpaṟiyal,* பெ. (n.) உணவுக் குறைவு; scarcity of food.

**பூம்பனை** *pū-m-paṉai,* பெ. (n.) ஆண்பனை (யாழ்.அக.); male palmyra, as yielding only flowers.

*[பூ + பனை]*

**பூம்பாதிரி** *pū-m-pādiri,* பெ. (n.) **1.** பாதிரி; trumpet-flower. **2.** பாதிரிவகை; rose flowered fragrant trumpet tree. **3.** மரவகை; elliptic leaved trumpet tree.

*[பூ + பாதிரி]*

**பூம்பாளை[1]** *pū-m-pāḷai,* பெ. (n.) **1.** இளம் பாளை; tender spathe. *'கண்கமுகின் பூம்பாளை'* (தேவா. **623, 10**). **2.** மடங்கல் (ஆவணி) நளி (கார்த்திகை)யில் விதைக்கப் பட்டு நான்கு மாதங்களில் விளையும் சம்பா வகை (நாமதீப. **351**); a kind of sampā paddy sown in āvaṇi-kārttikai, maturing in four months.

*[பூ + பாளை]*

**பூம்பாளை[2]** *pūmpāḷai,* பெ. (n.) தென்னம் பாளை; cocoanut spadix.

*[பூ + பாளை]*

**பூம்பிஞ்சு** *pū-m-piñju,* பெ. (n.) **1.** இளம் பிஞ்சு (கொ.வ); tender, green fruit. **2.** பூவிதழ் விழாமல் இருக்கும் பிஞ்சு; a small fruit found which the flower still stands.

**க.** பூமிடி

*[பூ + பிஞ்சு]*

**பூம்பிடகை** *pū-m-piḍagai,* பெ. (n.) பூங்கூடை; flower-basket. *'கொம்பனார்கள் பூம்பிடகை கொண்டணைய'* (பெரியபு. திருக்குறிப். **99**).

*[பூ + பிடகை. பிள் → பிளா → பிழா → பிடா → பிடகு → பிடகை]*

**பூம்பிடா** *pū-m-piḍā,* பெ. (n.) *பூம்பிடகை* (யாழ்ப்.) பார்க்க; see *pūmpiḍagai.*

*[பூ + பிடா. பிள் → பிளா → பிழா → பிடா]*

**பூம்பிள்ளை** *pū-m-piḷḷai,* பெ. (n.) இளம் பிள்ளை; tender child. *'பசுங்கரும் பார்த்திடும் பூம்பிள்ளை'* (திருமந். **1068**).

*[பூ + பிள்ளை. புள் → பிள் → பிள்ளை]*

**பூம்புகார்** *pūmpugār* பெ. (n.) *புகார்* பார்க்க; see *pugār.*

*[பூ + புகார். புகு(ம்) → பூ= காவிரி கடலில் புகும் (கலக்கும்) இடம்]*

**பூம்புகை¹** *pū-m-pugai,* பெ. (n.) நறுமணப் புகை; smoke of fragrant substances: incense. *'பூம்புகை யோடளாய்'* (கம்பரா. நாட்டுப். 41).

*[பூ + புகை]*

**பூம்புகை²** *pūmpugai,* பெ. (n.) சுனைகள் செறிந்த ஒரு புதர்ச்செடி; a shrub.

**மறுவ.** பூம்புல்.

*[பூ + புகை]*

**பூம்பூம்மாடு** *pūmpūm māḍu,* பெ. (n.) கேட்கிற கேள்விகளுக்கு *'ஆமாம்'* என்றால் மேலும் கீழும் *'இல்லை'* என்றால் பக்க வாட்டிலும் தலையை ஆட்டப் பழக்கிவைத்து ஒப்பனை செய்து வீடுகளுக்குக் கூட்டி வரும் மாடு; a decorated bull trained to nod its head for 'yes' and shake it for 'no'. *'கேட்பதற் கெல்லாம் பூம்பூம் மாடு மாதிரி தலையை ஆட்டாதே'.*

*[பூம்பூம் = உருமி மேளத்தில் ஒலி. பூம்பூம் மாடு = மேளத்தின் ஒலிக்கேற்ப தலை யசைக்கும் மாடு. மா → மான் → மாடு]*



**பூம்பொதி** *pū-m-podi,* பெ. (n.) பூவினது கட்டு; bundle of flowers. *"பூம்பொதி சிதையக் கிழித்துப் பெடைகொண்டு"* (மணிமே. 5, 125).

*[பூ + பொதி]*

**பூம்பொய்கை** *pūm-poygai,* பெ. (n.) பூக்கள் பூத்திருக்கும் பொய்கை; a pond in which flowers i.e. lotuses grow.

**க.** பூகொள.

*[பூ + பொய்கை]*

**பூம்பொருக்கு** *pūm-porukku,* பெ. (n.) வாடற்பூ; faded flower. *'வெள்ளி லோத்திரத்தின் பூம்பொருக்கரைத்த சாந்தின்'* (சீவக. 622).

*[பூ → பூம் + பொருக்கு]*

**பூம்பொழில்** *pū-m-poḻil,* பெ. (n.) மலர்ச் சோலை; park. *"கள்ளவிழ் பூம்பொழில் இடையிடை சொரிய"* (மணிமே. 6, 8).

**மறுவ.** பூங்கா

*[பூ + பொழில்]*

**பூம்போர்வை** *pūm-pōrvai,* பெ. (n.) பூத்தொழிலையுடைய மேற்போர்வை; blanket embroidered with floral designs. *'எலிப் பூம்போர்வையொடு மயிர்ப்படம் விரித்து'* (பெருங். உஞ்சைத் 47, 179).

*[பூ → பூம் + போர்வை]*

**பூம்மாடு** *pūm-māḍu,* பெ. (n.) பெருமாள் மாடு; performing bull. (Tp.)

*[பூம்பூம்மாடு → பூம்மாடு]*

'பூம்பூம்மாடு' பார்க்க.

**பூமகண்மைந்தர்** *pūmagāṇ-maindar,* பெ. (n.) வேளாளர் (வின்.); Vēḷāḷas husband men, as sons of the mother earth.

*[பூமகள் + மைந்தர்]*

**பூமகள்[1]** *pū-magaḷ,* பெ. (n.) திருமகள் (இலக்குமி); Lakshmi as flower-born. *'பொய்தீர் பூமகள்'* (சீவக. 2566).

*ம.* பூமகள்

*[பூ + மகள். முகு → மக → மகள்]*

**பூமகள்[2]** *pū-magaḷ,* பெ. (n.) பூதேவி; Goddess of earth. *'பூமகட்கு மணிமுடியா மதுரை'* (திருவாலவா. 39, 1).

*[பூ + மகள்]*

**பூமகன்[1]** *pū-magaṉ,* பெ. (n.) நான்முகன் (பிரமன்); Brahmā. *'பூமகன் புகழ் வானவர் போற்றுதற்காமகன்'* (திவ். நாய்ச். 4,3).

*[பூ + மகன்]*

**பூமகன்[2]** *pū-magaṉ,* பெ. (n.) (பூமியின் புதல்வன்) செவ்வாய் (திவா.); mars, as son of the earth.

*[பூ + மகன். முகு → மக → மகன்]*

**பூமகா** *pūmagā,* பெ. (n.) கையாந்தகரை (சங்.அக.); a plant growing in wet places.

**பூமங்கை** *pū-maṅgai,* பெ. (n.) திருமகள் (இலக்குமி); Lakṣmi. *'பூமங்கை கேள்வன் பொலிவு'* (திவ். இயற். 3, 6).

*[பூ + மங்கை]*

**பூமடந்தை[1]** *pū-maḍandai,* பெ. (n.) பூமகள் பார்க்க; see pūmagaḷ. *'பூமடந்தை யனை யாளை'* (பாரத. அருச்சுனன்றீர். 40).

*[பூ + மடந்தை]*

**பூமடந்தை[2]** *pū-maḍandai,* பெ. (n.) *பூமகள்[2]* பார்க்க; see *pūmagaḷ[2]*. (கம்பரா. பிராட்டி களங். 6).

*[பூ + மடந்தை]*

**பூமடல்[1]** *pū-maḍal,* பெ. (n.) வாழை முதலியவற்றின் குலையிலுள்ள மடல்; sheath or spathe, as of the plantain.

*[பூ + மடல்]*

**பூமடல்[2]** *pūmaḍal,* பெ. (n.) பூதாழும்; fragrant screw pine.

**பூமடி[1]-தல்** *pū-maḍi-,* 2 செ.கு.வி. (v.i.) கத்திக் கூர் மழுங்குதல் (வின்.); to become wiry-edged, as a razor.

*[பூ + மடி–, பூ = மென்மையானது, மெல்லிய (கத்தியின்) கூர்]*

**பூமடி[2]** *pū-maḍi,* பெ. (n.) மெல்லிய மடி (யாழ்.அக.); soft udder of a cow.

*[பூ + மடி]*

**பூமடை** *pū-maḍai-,*பெ. (n.) மலர்படையல் (வின்.); offering of flowers.

*[பூ + மடை. மடு → மடை]*

**பூமண்டபம்** *pū-maṇḍabam,* பெ. (n.) பூமாலை தொடுக்கும் இடம் (கோயிலொ. 14); place where flowers are strung, as in a temple.

*[பூ + மண்டபம். மண்டு → மண்டகம் → மண்டபம்]*

**பூமண்டலம்** *pū-maṇḍalam,* பெ. (n.) நிலவுலகம்; earth, world.

*[பூ + மண்டலம். முள் → முண்டு → மண்டு → மண்டலம்]*

**பூமணம்** *pū-maṇam,* பெ. (n.) பூவினது நறுமணம்; the fragrance of flowers, the scent of flowers.

*ம.* பூமணம்; *க.* பூகம்மு

*[பூ + மணம்]*

**பூமத்தாப்பு** *pū-mattāppu,* பெ. (n.) பல நிறங்களில் பூப்போல ஒளியைச் சிதறும் மத்தாப்பு வகை; a kind of sparkler.

*[பூ + மத்தாப்பு]*

U.mahtab > *த.* மத்தாப்பு

**பூமத்தை** *pūmattai,* பெ. (n.) செடி வகை (யாழ்.அக.); a plant.

**பூமது** *pūmadu,* பெ. (n.) தேன் (*பூவினது மது*); honey.

*[பூ + மது]*

**பூமரம்** *pū-maram,* பெ. (n.) **1.** பூக்கும் மரம் (அக.நி.); a tree that bears flowers, flowering tree. **2.** கும்பாதிரி[1]; lac tree. **3.** அறிகுறி (அக.நி); sign, indication.

**க.** பூமர; **ம.** பூமரம்

*[பூ + மரம்]*

**பூமருதம்** *pūmarudam,* பெ. (n.) வெண்மருது; a tree.

**மறுவ.** பிள்ளை மருது.

**பூமருது** *pū-marudu,* பெ. (n.) **1.** மருதமர வகை; flowering mardah. *'கிளிவளர் பூமருதணிந்து'* **(சீவக. 64). 2.** மரவகை; Indian bloodwood.

*[பூ + மருது]*

**பூமலடு** *pūmaḍu,* பெ. (n.) தங்கம்; refined gold.

**பூமலர்** *pūmalar,* பெ. (n.) பாச்சாவுருண்டை (இரசகற்பூரம்); subchloride of mercury.

*[பூ + மலர். மீமிசைச்சொல்]*

**பூமலர்ச்சி** *pūmalarcci,* பெ. (n.) பூவிதழ்விரிவு, அரும்பவிழ்வு; anthesis.

*[பூ + மலர்ச்சி. மலர் → மலர்ச்சி]*

**பூமலி** *pūmali,* பெ. (n.) மூளை (சங்.அக.); brain.

**பூமலிகம்** *pūmaligam,* பெ. (n.) இடது மூக்குத் துளை வழியாகச் செல்லும் உயிர்க்காற்று (இரேசகம்); the vital air passing through the left nostril.

**பூமழை** *pū maḻai,* பெ. (n.) பூக்களின் மழை (புஷ்ப வர்ஷம்); shower of flowers. *'பூமழை முனைவனுக்கு'* **(சீவக. 1943).**

**மறுவ :** பூமாரி

**ம.** பூமழ; **க.** பூமழெ

*[பூ + மழை]*

**பூமன்**[1] *pū-man,* பெ. (n.) அரசன்; sovereign, as protecting the earth. *'சிதம்பர பூமா'* (தனிப்பா. i, 183, 6).

*[பூ → பூமன்]*

**பூமன்**[2] *pūman,* பெ. (n.) செவ்வாய் (சூடா.); mars.

*[பூ → பூமன்]*

**பூமனாந்தை** *pūman-āndai,* பெ. (n.) ஆந்தை வகை; brown fish owl.

*[பூமன்+ ஆந்தை. பூமன்= பூம்பூம் எனவும் பூமோபூம் எனவும் அச்சமூட்டும் வகையில் உரக்கக்குரலெடுத்துக் கத்துவது]*

**பூமா** *pūmā,* பெ. (n.) மிக்கது; abundant.

**பூமாஞ்சா** *pū-māñjā,* பெ. (n.) செடிவகை; clerodendron.

**பூமாதளை** *pūmādaḷai,* பெ. (n.) பூமாதுளை பார்க்க; see *pumāduḷai.*

*[பூ + மாதளை – பூமாதுளை→ பூமாதளை]*

**பூமாது**[1] *pū-mādu,* பெ. (n.) 1. திருமகள் (இலக்குமி) (சங்.அக.); Goddess of wealth. 2. கலைமகள்; Goddess of learning.

ம. பூமாது

*[பூ + மாது]*

**பூமாது**[2] *pū-mādu,* பெ. (n.) நிலமகள்; Goddess of earth. *'பூமாதி னிதயகமலத்து வைகும் பொலிவானும்'* (குமர, பிர. திருவாரூர். நான். 19).

*[பூ + மாது]*

**பூமாதுளை** *pū-māduḷai,* பெ. (n.) காய்க்காது பூமட்டும் விடும் ஓர் வகை மாதுளை; double flowered pomegranate, as bearing only flowers.

*[பூ + மாதுளை]*

**பூமாயி** *pū-māyi,* பெ. (n.) குழந்தைகளிடம் நோய் உருவாக்கும் எனக் கருதப்படும் ஒரு தேவதை; an evil spirit believed to cause disease among children.

**பூமாரி** *pū-māri,* பெ. (n.) 1. பூமழை பார்க்க; see pūmaḻai. *'பூமாரி சிந்தி'* (பு. வெ 10, 8.) 2. வேம்பு (சங்.அக.); neem, margosa. 3. மென்தூறல்; light drizzle.

ம. பூமழ; க. பூமழெ, பூசரி

*[பூ + மாரி. மால் = கருப்பு. மால் → மார் → மாரி= கரியமுகில், மழை.]*

**பூமாலை** *pū-mālai,* பெ. (n.) பூவினாற் செய்த மாலை; garland of flowers. *'பூமாலை சூடிக் கொடுத்தாளை'* (திவ். நாய்ச். தனி). குரங்கு கையில் பூமாலை அகப்பட்டது போல (பழ).

ம. பூமால; க. பூமாலிக, பூமாலெ; து. பூமாலை, பூமாலிகை; பட. கூமாலெ.

*[பூ + மாலை. மயில் → மால். மாலுதல் = மயங்குதல். மால் → மாலை = பல மலர்கள் கலக்குந் தொடை]*

**பூமாலைக்காரன்** *pū-mālai-k-kāraṉ*, பெ. (n.) பதினெண் குடிமக்களுள் பூமாலை தொடுப்போன்; garland-maker, one of 18 kuḍimakkaḷ, q.v.

*[பூமாலை + காரன்]*

**பூமாலைகொண்டுசொரிதல்** *pūmālai-koṇḍu-šoridal*, பெ. (n.) நேர்த்திக்கடன் வகை; a kind of votive offering to a temple (Nāñ.)

*[பூமாலை + கொண்டு + சொரிதல்]*

**பூமாறுதல்** *pū-mārudal*, பெ. (n.) பூப்பு நின்று போகை (இ.வ.); menopause.

*[பூ + மாறுதல். 'தல்' தொ.பெ.ஈறு]*

**பூமான்**[1] *pūmāṉ*, பெ. (n.) அரசன்; king.

*[பூ[2] + மான். மகன் → மான்]*

**பூமான்**[2] *pū-māṉ*, பெ. (n.) திருமகள் (இலக்குமி); Lakṣmi. (நாமதீப. 53).

*[பூ[1] + மான். மகள் → மாள் → மான்]*

**பூமிசை**[1] *pūmišai*, பெ. (n.) திருமகள், (இலக்குமி) (யாழ்.அக.); Lakṣmi.

*[பூ + மிசை]*

**பூமிசை**[2] *pūmišai*, பெ. (n.) சீதைப் பெருமாட்டி (யாழ்.அக.); Šītā.

*[பூ + மிசை]*

**பூமிசைநடந்தோன்**[1] *pūmišai naḍandōṉ*, பெ. (n.) தாமரைப் பூவில் நடந்தவன், அருகக் கடவுள் (பிங்.); Arhat, as one who walked on the lotus.

மறுவ. எண்குணன், அறவாழிவேந்தன். சின்னவரன், உறுவன், முனைவன், மாசேனன். தேவன், மூவுலகுணர்ந்த மூர்த்தி, வென்றோன், போதன், கலைகட்கெல்லாம் நாதன், முக்குற்ற மில்லோன், எண்ணில் கண்ணுடையோன்.

*[பூ + மிசை + நடந்தோன்]*

**பூமிசைநடந்தோன்**[2] *pūmišai-naḍandōṉ*, பெ. (n.) புத்தன் (திவா.); Buddha.

*[பூ + மிசை + நடந்தோன்]*

**பூமின்**[1] *pū-miṉ*, பெ. (n.) திருமகள் (இலக்குமி தேவி)(சூடா).; Lakṣmi. *'பூமின் கேள்வன்'* (கம்பரா. அகலிகை. 73)

*[பூ + மின்]*

மின் என்பது உவமையாதி பெயராய்ப் பெண்ணைக் குறித்தது.

**பூமின்**[2] *pūmiṉ*, பெ. (n.) ஒருவகை மீன்; a kind of fish.

*[பூ + மீன்]*

**பூமீன்கெண்டை** *pū-mīṉ-keṇḍai*, பெ. (n.) நன்னீரில் வாழும் பெருமீன் வகை; mahsir, silvery, weighing 100 to 150 lbs. the great, fresh water game - fish of India.

*[பூ + மீன்கெண்டை]*

**பூமுகம்** *pū-mugam*, பெ. (n.) 1. பொலிந்த முகம்; cheerful face. *'பூமுகமழுங்கக் கொன்று'* (ஞானா. 45). 2. வீட்டு முன்முகப்பு (நாஞ்.); porch.

*[பூ + முகம்]*

**பூமுடி–தல்** *pūmuḍi-*, 2 செ.கு.வி.(v.i.) பூச்சூடிக்கொள்ளுதல்; to wear flowers.

*து.* பூமுடிபுனி

*[பூ + முடி –,]*

**பூமுடிக்கம்பு** *pū-muḍi-k-kambu,* பெ. (n.) கம்புப் பயிர்வகை (இ.வ.); a kind of spiked millet, pennisetum.

**பூமுடிகட்டுக்கயிறு** *pūmuḍi kaṭṭu-k-kayiṟu,* பெ. (n.) கட்டு மரத்தைக்கட்ட பயன்படுத்தும் கயிறு; rope for tie catamaram.

*[பூமுடி + கட்டு + கயிறு]*

**பூமுலை** *pū-mulai,* பெ. (n.) மாட்டின் மெல்லிய மடி (இ.வ.); soft udder of a cow.

*[பூ + முலை]*

**பூமுறி–த்தல்** *pū-muṟi-,* 4 செ.கு.வி. (v.i.) வாழைக்காய் பருத்தற்காக அதன் பூவை யொடித்தல் (வின்.); to pluck the plantain blossom, so that the fruit may grow bigger.

*[பூ + முறி–,]*

**பூமுறை** *pū-muṟai,* பெ. (n.) மரஞ்செடிகளில் பூவுண்டாகுங் காலம் (வின்.); flowering season, as of a tree.

*[பூ + முறை]*

**பூமேல்வைத்துக்கொடு–த்தல்** *pū-mēl-vaittu-k-koḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) (பூவின் மேலாக ஒன்றை வைத்துக்கொடுத்தல்) ஒருவனிடமிருந்து வாங்கின பொருளை நன்றியறிதலோடு திரும்பக் கொடுத்தல்; lit. to give by placing on flowers to pay back with grateful thanks.

*[பூ + மேல் + வைத்து + கொடு–,]*

**பூமேனடந்தான்** *pū-mēṉaḍandāṉ,* பெ. (n.) அருகக் கடவுள் (குறள், 3, உரை); Arhat.

*[பூ + மேல் + நடந்தான்]*

**பூமேனி** *pūmēṉi,* பெ. (n.) பூவைப்போன்ற தோல் (உடல்); skin as soft as flower.

*ம.* பூமேனி

*[பூ + மேனி]*

**பூமொக்குள்** *pū-mokkuḷ,* பெ. (n.) பூசை ஏனம் (புதுவை.); chalice.

*[பூ + மொக்குள்]*

**பூமொட்டு** *pū-moṭṭu,* பெ. (n.) பூ அரும்பு; flower bud.

*து.* பூ பரெல்

*[பூ + மொட்டு]*

**பூய்–த்தல்** *pūy-,* 11 செ.குன்றாவி. (v.t.) *புய்²* (திவா.) பார்க்க; see *puy²*.

*[புய் → பூய்–]*

**பூயஞ்சம்பா** *pūyañ-cambā,* பெ. (n.) சம்பா நெல்வகை (விவசா. 2); a kind of šambā paddy.

**பூர்¹–த்தல்** *pūr-,* 3 செ.கு.வி (v.i.) *பூ–த்தல்* பார்க்க see *pū-*. மீன் பூர்த்து விட்டது.

*[பூ–, → பூர்–,]*

**பூர்²** *pūr,* பெ. (n.) வெள்ளம்; flood. 'பூரம்புராசி' (பாரத.இராச.116).

**பூர்³(ரு)–தல்** *pūr-,* 3 செ.கு.வி. (v.i.) புகுருதல்; to enter.

*[புகுரு → புகுர் → பூர். பூர்தல் = புகுதல் (வே.க., 3, 105)]*

**பூர்பூரெனல்** *pūrpūreṉal,* பெ. (n.) விரைவிற் பருத்தற் குறிப்பு; onom. expr. of swelling, enlarging suddenly or growing rapidly.

*[பூர் + பூர் + எனல்]*

**பூரகப்புல்** *pūraga-p-pul,* பெ. (n.) மந்தங் காய்ப்புல்; a kind of grass.

*[பூரகம் + புல்]*

**பூரகம்¹** *pūragam,* பெ. (n.) **1.** நிரப்புகை; filling, satisfying. **2.** உயிர்க் காற்று (பிராணாயா யாமம்)க்கு உறுப்பானதும் காற்றை உள்ளே யிழுப்பதுமான செயல்; (yoga), inhalation, filling the breath, a part of pirāṇāyāmam. பூரகரேசகத்துடன் பொருந்து கும்பகம் (பிரயோக.440 18).

*[புகுர் → பூர். பூர்தல் = புகுதல். பூர் → பூரகம்]*

**பூரகம்²** *pūragam,* பெ. (n.) மத்தங்காய்ப்புல் (மலை.); red species of little millet.

**பூரணம்** *pūraṇam,* பெ. (n.) பூஞ்சாணம் (இ.வ.); mould, mildew. இந்தப் பண்டம் பூரணம் பிடித்துவிட்டது.

*[பூஞ்சணம் → பூரணம்]*

**பூரதிகாரம்** *pūradikāram,* பெ. (n.) சீனக்காரம் (சங்.அக.); alum.

**பூரந்தொழுதல்** *pūran-toḻudal,* பெ. (n.) பெண் பூப்பெய்தும் (இருதுவான) போது கண்ணேறு (திருட்டி) கழிக்குஞ் சடங்கு (இ.வ.); ceremony of warding off evil eye from a pubescent girl, by waving coloured rice about her.

*[பூரம் + தொழுதல்]*

**பூரப்பரியாள்** *pūra-p-pariyāḷ,* பெ. (n.) *பூரவாகினி* (நாமதீப. 56) பார்க்க; see *pūravāgiṉi.*

*[பூரம் + பரியாள்.]*

**பூரப்பாளை** *pūra-p-pāḷai,* பெ. (n.) தலைக் கோலத்தில் ஒருறுப்பு (சிலப். 6, 106, உரை); a piece in a womens head-ornament.

*[பூரம் → பாளை.]*

**பூரபதி** *pūra-padi,* பெ. (n.) பச்சைக் கற்பூரம் (யாழ்.அக.); medicated camphor.

**பூரம்¹** *pūram,* பெ. (n.) **1.** வெள்ளம்; flood. *'பூரமாநதி'* (பாரத. சம்பவ. 39). **2.** நிறைவு fulness, completeness.

*[பூர் → பூரம்]*

**பூரம்²** *pūram,* பெ. (n.) ஒரு திருமணச் சடங்கு; nuptial ceremony, as completing a marriage (R.F).

*[புல் → புர் → பூரம்]*

**பூரம்³** *pūram,* பெ. (n.) **1.** தேள் (யாழ்.அக.); scorpian. **2.** பூரான்; centipede. **3.** பழம் (நாமதீப. 368); fruit. **4.** பொன் (அரு.நி.); gold.

*[புகுரு → புகுர் → பூர். பூர்தல் = புகுதல். பூர் → பூரான். பூர் → பூரம்]*

**பூரவாகினி** *pūra-vāgiṉi,* பெ. (n.) கலைமகள்; Šarasvadi, as riding on a centipede.

*[பூரம் + வாகினி]*

Skt. vahni > **த.** வாகினி

**பூரவுப்பு** *pūra-v-uppu,* பெ. (n.) சத்திச்சாரம் (மூ.அ.); a kind of acrid salt.

**பூராக்காசு** *pūrākkāšu,* பெ. (n.) செல்லல் என்னும் மீன்; a fresh water fish.

**பூராயம்** *pūrāyam,* பெ. (n.) 1. ஆராய்ச்சி; close investigation, attention. *'பூராயமாயுணர ஆகமது தந்ததும்'* (தாயு. பரிபூ. 8). 2. வியக்கத்தக்கது (வின்.); object of curiosity. *'பேரும் பூராயமாய்'* (தாயு. பரிபூ. 6). 3. குழந்தைகளின் கவனத்தைக் கவரும் பொருள் (வின்.); that which engages attention, as the first development of intellect in a child.

*[பூர் + ஆயம். புகு → புகுர் → பூர். பூர்தல் = புகுதல், நுழைதல். ஆய் → ஆயம். உட்புகுந்து அதாவது நுணுகி ஆராய்வது பூராயம்]*

**பூராயமிடு-தல்** *pūrāyam-iḍu-,* 20 செ.கு.வி. (v.i.) நுணுகியாராய்தல் (வின்.); to inquire closely.

*[பூராயம் + இடு-,]*

**பூரார்சக்கை** *pūrār-šakkai,* பெ. (n.) *பூரார் பலகை* (இ.வ.) பார்க்க; see *pūrār palagai.*

*[பூரார் + சக்கை]*

**பூரார்பலகை** *pūrār-palagai,* பெ. (n.) வீட்டு மேல் தளத்தின் அடியிற் பரப்பும் பலகை (வின்.); ceiling plank, sheathing board, veneer.

*[பூரார் + பலகை]*

**பூராறுதை-த்தல்** *pūrāṟudai,* 4 செ.கு.வி. (v.i.) முகட்டில் தளப்பலகை தைத்தல்; to join and fix ceiling planks. (C.E.M).

*[பூராறு + தை-,]*

**பூராறுபலகை** *pūrāṟu-palagai,* பெ. (n.) பூரார் பலகை (இ.வ.) பார்க்க; see pūrār palagai.

*[பூரார்பலகை → பூராறுபலகை]*

**பூரான்¹** *pūrāṉ,* பெ. (n.) பல கால்களையுடைய ஒரு நச்சு உயிரி; a venomous creature of the centepede or myriapod family.

*[புகுது → புகுரு. புகுருதல் = புகுதல். புகுரு → புகுர் → பூர். பூர்தல் = புகுதல். பூர் → பூரான் = மண்ணிற்குள் விரைந்து புகும் நச்சுப்பூச்சி (வே.க. 3, 105)]*

பூரான்வகை

1. கரும்பூரான்
2. காட்டுப்பூரான்
3. சடைப்பூரான்
4. சாணிப் பூரான்
5. சிறுபூரான்
6. செம்பூரான்
7. பெரும்பூரான்
8. மண்பூரான்
9. வெண்பூரான்.

**பூரான்²** *pūrāṉ,* பெ. (n.) 1. குதிரை வயிற்றின் கீழ் நீண்டுள்ள தீச்சுழி (அசுவசா. 22); a line mark in the belly of a horse considered inauspicious. 2. பனை முளை (யாழ்ப்.); edible matter in the palmyra stone or coconut formed when the root shoots forth.

**பூரான்கடி** *pūrāṉkaḍi*, பெ. (n.) பூரானின் கடி; bite of centipede.

*[பூரான் + கடி]*

**பூரான்கவ்வல்** *pūrāṉ-kavval*, பெ. (n.) மாட்டின் ஒரு காதின் கீழ் மட்டு (மாத்திர)முள்ள தீச்சுழி வகை (அபி. சிந். 787); an inauspicious hair-curl below one of the ears of a bull or cow.

*[பூரான் + கவ்வல்]*

**பூரான்காவிக்கல்** *pūrāṉ-kāvi-k-kal*, பெ. (n.) காவிக்கல் வகை (வின்.); reddish yellow ochre, as having the colour of a pūrāṉ.

*[பூரான் + காவிக்கல்]*

**பூரானட்டிகை** *pūrāṉ-aṭṭikai*, பெ. (n.) கழுத்தணிவகை; a kind of close fitting necklace.

*[பூரான் + அட்டிகை. ஒட்டு → அட்டு → அட்டி → அட்டிகை]*

**பூரி¹-த்தல்** *pūri-*, 4 செ.கு.வி. (v.i.) 1. நிறைதல்; to be full. *'பூரிப்பதுள்ளே சிவம்'* (ஔவை. கு. திருவருள். 4, 9). 2. குறைவற நிரம்புதல்; to become perfect. 3. களித்தல்; to rejoice; to be satisfied. *'பூரித்தென் னெஞ்சே புரி'* (திவ். இயற். 3, 44). 4. பருத்தல்; to be plump, or full formed; to swell. *'பூரித்த முலையிலே'* (தாயு. மலைவளர். 2). *'நெடும்புயம் பூரித்து'* (பாரத. காண்டவ. 28). 5. பொலிதல்; to thrive, as vegetation. 6. மிகுதல் (பிங்.); to abound. 7. பூரகஞ் செய்தல்; (yoga.) to take in air at a long breath. *'ரேசிப்பது போலப் பூரித்து நிற்கில்'* (ஔவை. கு.... வீட்டுநெறி. 5, 6).

*[புல் → பல் → பல. புல் → பல் → பன்மை. புல் → புது → புதல் = செறிந்த தூறு. புது → பூது → பூதம் = பருத்தது. (வே.க. 3, 72-76) புல் → புர் → பூர் → பூரி]*

**பூரி²-த்தல்** *pūri-*, 4 செ.குன்றாவி (v.t.) 1. நிறைத்தல்; to fill. *'வண்ணநீர் பூரித்த வட்டெறிய'* (பரிபா. 12, 68). 2. பொதிந்துள்ள கருத்தை வெளியிட உரிய சொற்களைச் சேர்த்தல்; to complete the sense by adding the words omitted. *'அக்கண்ணழகிலே ஈடுபடுகிறார் என்று பூரிப்பது'* (திருவிருத். 63, 342. அரும்). 3. படைத்தல்; to create *'பரமன் பூரிக்க'* (தக்கயாகப். 694).

*[புல் → புர் → பூர் → பூரி]*

**பூரி³** *pūri*, பெ.அ. (adj.) மிக்க; much, many; abundant; numerous great, important. *'நங்குடி கோத்திரப் பெயர் பூரிச்சிரேட்டம்'* (பிரபோத. 11, 91).

*[புல் → புர் → பூர் → பூரி]*

**பூரி⁴** *pūri*, பெ. (n.) 1. மிகுதி; abundance. *'பூரிகொள சுண்ணமும்'* (கந்தபு. சூரப. வதை. 35). 2. பூரிதட்சிணை பார்க்க; see pūritaṭciṇai. *'பூரி கோடியின் மேற்செல'* (உபதேசகா. சிவத்துரோ. 195). 3. பொன் (திவா.); gold. *'பசும்பூரி சேர்த்தி'* (கம்பரா. விடைகொடுத். 1). 4. மொத்தம்; (arith.) the total. *'ஆக ஒரு திருநாளைக்குப் பூரிநெல்லு கலனை தூணிப் பதக்காக'* (S.I.I. ii, 128). 5. ஒருபேரெண் (பிங்.); a quintillion.

*[புல் → புர் → பூர் → பூரி]*

**பூரி⁵** *pūri*, பெ. (n.) 1. ஊதுங் கருவி வகை; a wind instrument. 2. வில்லின் நாண் (சூடா.); bow string. 3. குற்றம் (வின்.); fault. 4. கலப்பு

நெல்(வி.ன்.); mixed paddy. 5. *பூரியரிசி* (இ.வ.) பார்க்க; see *pūri-y-ariši*. 6. பப்பரப்புளி; baobab.

ம. பூரிக; தெ. பூரா.

*[புல் → புள் → புழு. புழு = துளைக்கும் சிற்றுயிரி. புழு → புகு. புகுதல் = உட்செல்லுதல். புகு → புகுது. புகுதுதல் = உட்செல்லுதல். புகுது → புகுர் → பூர். பூர்தல் = புகுதல். புகுது → புகுரு. புகுருதல் = புகுதல். புகுரு → புகுர் → பூர். பூர்தல்: புகுதல்(வே.க.3, 104–105) பூர் → பூரி]*

**பூரி⁶** *pūri*, பெ. (n.) விரிந்த பாளையின் உள்ளிருக்கும் பூத்தொகுதி; flower-like contents of an open spathe.

*[பூ + விரி – பூவிரி → பூரி]*

**பூரி⁷** *pūri*, பெ. (n.) *பூரியரிசி* (நாஞ்.) பார்க்க; see *pūriyariši*.

**பூரி⁸** *pūri*, பெ. (n.) 1. புல்; grass 2. நரியிலந்தை; jackel jujuba.

**பூரிக்காய்** *pūri-k-kāy*, பெ. (n.) சவுரிக்காய்; a fruit, tricho.

**பூரிக்குத்தலரிசி** *pūri-k-kuttal-ariši*, பெ. (n.) நன்றாய்த் தீட்டிய அரிசி (S.I.I.vi, 11); polished rice.

*[பூரி + குத்தல் + அரிசி]*

**பூரிக்கெண்டை** *pūri-k-keṇḍai*, பெ. (n.) சல்லிக்கெண்டை; a river fish.

**பூரிக்கோ** *pūrikkō*, பெ. (n.) குறுந்தொகை தொகுத்த ஆசிரியன்; the compiler of kuru-n-togai.

**பூரிகம்** *pūrigam*, பெ. (n.) அப்பவருக்கம் (திவா.); pastry or cake full in appearance but hollow in side.

*[புல்லுதல் = துளைத்தல். புல் → புர் → புரை = உட்டுளை, உட்டுளைப் பொருள் (வே.க. 3, 101) புர் → பூர் → பூரி → பூரிகம்]*

**பூரிகா** *pūrikā*, பெ. (n.) அகில் (மலை.); eagle wood.

**பூரிகை¹** *pūrigai*, பெ. (n.) ஊதுகுழல்; trumpet. *'தாரை பூரிகைவளை துடி'* (திருப்பு. 890).

ம.பூரிக; தெ. புருக, பூரா

*[புகுரு → புகுர் → பூர். பூர்தல் = புகுதல். (வே. க. 3, 104–105) பூர் → பூரி → பூரிகை.]*

**பூரிகை²** *pūrigai*, பெ. (n.) *பூரிகம்* பார்க்க (பிங்.); see *pūrigam*.

**பூரிகை³** *pūrigai*, பெ. (n.) *பூரகம்¹* பார்க்க (அரு.நி); see *pūragam¹*.

*[பூர் → பூரகம் → பூரிகம்]*

**பூரிச்சேரல்** *pūri-c-cēral*, பெ. (n.) அரிசி வகை; a kind of rice. *'திருப்பதியமுதுக்குப் பூரிச்சேரல்'* (S.I.I.vii, 300).

*[பூரி + சேரல்]*

**பூரித்தநீர்ப்பை** *pūritta-nir-p-pai,* பெ. (n.) பருத்த சிறு நீர்ப்பை; distended bladder.

*[பூரித்த + நீர் + பை]*

**பூரித்தியம்** *pūrittiyam,* பெ. (n.) மூக்கிரட்டை a prostate plant.

**பூரிதட்சிணை** *pūritaṭciṇai,* பெ. (n.) சிறப்புக்காலங்களில் பார்ப்பனர்க்குக் கொடுக்கும் பரிசு; gift of money to Brahmans on festive occasions.

*[புரி + தட்சிணை]*

**பூரிதம்** *pūridam,* பெ. (n.) **1.** நிரப்பப்பட்டது; that which is filled. **2.** மிகுகளிப்பு (சங்.அக.); exultation, great joy. **3.** மிகுதி (சங்.அக.); plenty, abundance.

*[புல்லுதல் = பொருந்துதல். புல் → புர் → பூர் → பூரி → பூரிதம்]*

**பூரிதயம்** *pūridayam,* பெ. (n.) சிறுதக்காளி; small tomato.

**பூரிநெல்** *pūri-nel,* பெ. (n.) கலப்புநெல் (S.I.I.ii, 127.); mixed paddy.

*[பூரி + நெல்]*

**பூரிநெல்லி** *pūrinelli,* பெ. (n.) காட்டுக் கன்னி; a tree.

**பூரிப்பு** *pūrippu,* பெ. (n.) **1.** நிறைவு; filling. **2.** பருமன்; largeness, as of body; plumpness. **3.** மிகுதி (சூடா.); plenty, abundance. **4.** மிகுமகிழ்ச்சி; satisfaction: cheerfulness; exhilaration, great joy. *'பூரிப்பொரு வாட்டங்களுறாதே'* (திருப்போ. சந். குயிற்பத்து. 7). **5.** ஒளி; lustre. *'வைரத்தின் பூரிப்பு'* (இ.வ).

*[புல்லுதல் = பொருந்துதல். புல் → புர் → பூர் → பூரி → பூரிப்பு]*

**பூரிப்புளி** *pūripuli,* பெ. (n.) பப்பரப்புளி; a plant.

*[பூரி + புளி]*

**பூரிபத்திரம்** *pūri-p-pattiram,* பெ. (n.) முடிகலன்(மகுட)வுறுப்பு (இ.வ.); ornamental fillet of a crown.

*[பூரி + பத்திரம்]*

Skt. patra > த. பத்திரம்

**பூரிமம்** *pūrimam,* பெ. (n.) **1.** தெருவின் சிறகு; side of a street. *'உயர்பூரிம விழுத்தெருவில்'* (மதுரைக். 18). **2.** சாந்திட்டுக் கட்டிய தொட்டி (மதுரைக். 18, உரை); cistern.

**பூரிமரம்** *pūri-maram,* பெ. (n.) பப்பரப்புளி; baobab.

*[பூரி + மரம்]*

**பூரியது** *pūriyadu,* பெ. (n.) தாழ்வானது; that which is low. *'சீரியன் வுள்ளிப் பூரியன மறத்தல் வேண்டும்'* (குறள், 1206, மணக்).

*[பூரி → பூரியது. புள் → (புரா) → புரை = குற்றம் (மு.தா.278) புர் → பூர் → பூரி]*

**பூரியம்[1]** *pūriyam,* பெ. (n.) **1.** ஊர் (பிங்.); town, village. **2.** மருத நிலத்தூர் (பிங்.); agricultural town. **3.** அரசர் வீதி (பிங்.); royal street. **4.** அரசிருக்கை (சது.); royal residence.

*[புர் → புரம் = உயர்ந்த மனை, அஃதுள்ள நகர், குடிநகர். புர் → பூர் → பூரி → பூரியம்]*

**பூரியம்²** *pūriyam,* பெ. (n.) **1.** *பூரி⁶,* **6** (பிங்.) பார்க்க; see *purī⁶*, **6. 2.** *பூரி⁶,* **4** (நாமதீப. 377) பார்க்க; see *pūrī⁶*, **4.**

*[பூரி → பூரியம்]*

**பூரியமாக்கள்** *pūriya-mākkaḷ,* பெ. (n.) *பூரியார்* பார்க்க; see *pūriyār* *'பூரிய மாக்களுண்பது மண்டி'* (பரிபா.6,48).

*[பூரிய + மாக்கள்]*

**பூரியர்¹** *pūriyar,* பெ. (n.) **1.** இழிந்தவர்; mean minded people. *'பூரியர்களாழுமளறு'* (குறள்,919). *'பூரியரேயுந்தம்மைப் புகல் புகுந்தோர்க்கு'* (கம்பரா.வீபீடண.119). **2.** கொடியவர்; wicked persons.

*[புல் → புள் → பொள் → பள் → பள்ளம் (வேக.3,148) புள் → (புரா) → புரை = குற்றம் (மு.தா.278) புர் → பூர் → பூரி → பூரியர்]*

**பூரியர்²** *pūriyar,* பெ. (n.) நிலவேம்பு; a plant, ground neem.

**பூரியரிசி¹** *pūri-y-ariśi,* பெ. (n.) மட்டையரிசி (இ.வ.); bad grains of rice red in colour; unhusked paddy.

*[பூரி + அரிசி. அரி → அரிசி]*

**பூரியரிசி²** *pūri-y-ariśi,* பெ. (n.) ஆயுதப் பூசை (தசராப்) பண்டிகையில் கொடுக்கப்படும் கொடை(தான)அரிசி; doles of rice during the dusserah festival.

*[பூரி + அரிசி. அரி → அரிசி]*

**பூரியரிசி³** *pūri-y-ariśi,* பெ. (n.) வெள்ளையரிசி (நாஞ்.); white, polished rice.

**பூரியார்** *pūriyār,* பெ. (n.) **1.** கீழ்மக்கள்; base or low people. *'பொருட்செல்வம் பூரியார் கண்ணுமுள'* (குறள்,241). **2.** கொடியவர்; wicked persons.

*[பூரியர் → பூரியார்.]*

*'பூரியர்'* பார்க்க.

**பூரு¹–தல்** *pūru-,* 5 செ.குன்றாவி. (v.t.) துளைத்தல் (கொ.வ.); to pierce.

*[புகு → புகுது. புகுதுதல் = உட்செல்லுதல். புகுகு → புகுரு. புகுருதல் = புகுதல். புகுரு → புகுர் → பூர். பூர்தல் = புகுதல் (வே.க.3,105) பூர் →பூரு]*

**பூரு²** *pūru,* பெ. (n.) புருவம் (சூடா.); eyebrow. "துணைவிழி பூருவினிடையே செருகிட"(சிவரக.நைமிச.33).

*[புர் → புர் → புரி. புரிதல் = வளைதல் புர் → புரு → புருவு → புருவம் = கண்களின் மேலுள்ள மயிர்வளைவு (வே.க.3,94–98) புர் → புரு → பூரு]*

**பூருகம்** *pūrugam,* பெ. (n.) நிலத்தில் முளைப்பது, மரம் (சூடா.); tree, growing on the earth.

*[பூ → பூருகம்]*

**பூருண்டி** *pūruṇḍi,* பெ. (n.) **1.** மல்லிகை (சூடா.); jasmine. **2.** வேலிப்பருத்தி (மலை.); hedge twiner. **3.** தேட்கொடுக்கி (வின்.); Indian turnsole.

**பூருது** *pūrudu,* பெ. (n.) *பூநீறு* (தைலவ.தைல. 135,134) பார்க்க; see *pūnīṟu.*

*[பூ → பூருது]*

**பூரைப்படு–தல்** *pūrai-p-paḍu-,* 19 செ.குன்றாவி. (v.t.) மீன் பிடிக்கும் போது வலைகிழிதல்; to torn net in fishing.

*[புள் = ஒட்டை, துளை. புள் → புரை. புரை + படு– புரைப்படு → பூரைப்படு–,]*

**பூரைபூரையெனல்** *pūrai-pūrai-y-eṉal,* பெ. (n.) *போதும் போதுமெனல்;* expr. signifying enough, enough. '*பூரைபூரை யென்றிருகையாலமைத்த புத்தேளிர்*' (அரிச்.பு.மீட்சி.16).

*[பூரை + பூரை +எனல்]*

**பூதசரீரம்** *pūda-šarīram,* பெ. (n.) *பூதவுடல்* பார்க்க; see *pūda-v-uḍal.*

*[பூதம் + சரீரம்]*

Skt. šarīra > **த.** சரீரம்

**பூரையிடு–தல்** *pūrai-y-iḍu-,* 20 செ.கு.வி. (v.i.) **1.** முடிவடைதல்; to cease, end. '*பாரிவரு கூத்தினிப் பூரையிட வமையாதோ*' (திருப்பு.879). **2.** அலுப்புண்டாக்குதல் (வின்.); to become tedious, as a story.

*[பூரை + இடு–,]*

**பூல்** *pūl,* பெ. (n.) *பூலா* பார்க்க; see *pūlā* '*பூல்வேலென்றா*' (தொல்.எழுத்.375).

**பூலத்தி** *pūlatti,* பெ. (n.) பூமருது (மலை.); flowering murdah.

**பூலா** *pūlā,* பெ. (n.) **1.** செடிவகை; black berried feather foil. **2.** மரவகை; red. silk cotton tree.

*[பூல் → பூலா. இனி புலவா → பூலா என்றுமாம்]*

**பூலாங்கிழங்கு** *pūlāṅ-kiḻaṅgu,* பெ. (n.) **1.** செடிவகை; rong zedoary. **2.** கிழங்குவகை; root of long zedoary.

*[பூலா + கிழங்கு]*

**பூலாச்செண்டு** *pūlā-c-ceṇḍu,* பெ. (n.) **1.** பூச்செண்டு; ball of flowers. **2.** திருமணக்காலத்தில் நிகழும் நலுங்கில் மணமக்கள் நிகழ்த்தும் பூச்செண்டாட்டம்; play with balls of flower by the bride groom and bride during 'naluṅgu'.

**தெ.** பூலாசெண்டு

*[பூவாலாகிய → பூலா + செண்டு]*

**பூலாசம்** *pūlāšam,* பெ. (n.) *பூலா,***1.** (தைலவ.தைல.134) பார்க்க; see *pūlā,* **1**

*[பூலா → பூலாசம்]*

**பூலாஞ்சி** *pūlāñji,* பெ. (n.) *பூலா,* **1.** (தைலவ. தைல.) பார்க்க; see *pūlā-,***1**

*[பூலா → பூலாஞ்சி]*

**பூலாத்தி** *pūlātti,* பெ. (n.) பூடுவகை; a, shrub.

*[பூலா + அத்தி]*

**பூலான்** *pūlāṉ,* பெ. (n.) **1.** கருப்பு பூலான்; black honey shrub. **2.** முள்ளில்லாவெண்பூலான்; white honey shrub.

**பூலான்கொல்லை** *pūlāṅkollai,* பெ. (n.) தஞ்சை மாவட்டத்திலுள்ள ஊர்; a village of Tanjāvūr dt.

*[பூலான் + கொல்லை]*

**பூலி[1]-த்தல்** *pūli-,* 4 செ.கு.வி. (v.i.) உடம்பு பூரித்தல்; to swell. *'பூலித்தகங்குழைந்து பொன்னுசவாடாமோ'* (திருவாச.16,8).

*[பூரித்தல் → பூலித்தல்]*

**பூலி[2]** *pūli,* பெ. (n.) வெண்பூலி, வெள்ளை புல்லாந்தி; white honey shrub.

**பூலியாத்தி** *pūli-y-ātti,* பெ. (n.) ஒருவகை ஆத்தி; a shrub.

**பூலை[1]** *pūlai,* பெ. (n.) அணிற்பிள்ளை; squirrel.

**பூலை[2]** *pūlai,* பெ. (n.) கிச்சிலிக்கிழங்கு; long zedoary.

**பூலைப்பூ** *pūlai-p-pū,* பெ. (n.) பூலைச் செடியின் பூ; flower of sirupūlai.

*[பூலை + பூ]*

**பூலோகம்** *pū-lōgam,* பெ. (n.) மேலேழுலகத்துள் முதலாவது, (திவ.); the earth, first of mēl-ēḻ-ulagam, q.v.

*[பூ + உலகம். உலகம் > லோகம்]*

*'பூவுலகு' பார்க்க*

**பூலோகவைகுண்டம்** *pūlōga vaiguṇḍam,* பெ. (n.) திருவரங்கம் (இ.வ.); Srirangam, considered as vaikuntha on earth.

*[பூ + லோக + வைகுண்டம். உலகம் → லோகம்]*

Skt. vaikuṇṭha > த. வைகுண்டம்

**பூவசியர்** *pū-vaśiyar,* பெ. (n.) பூவைசியர் (யாழ்.அக.) பார்க்க; see *pūvaiśiyar.*

*[பூவைசியர் → பூவசியர்]*

Skt. vaiśya > த. வைசியர்

**பூவட்டம்** *pū-vaṭṭam,* பெ. (n.) 1. பூவைச் சூழ்ந்துள்ள தோடு; corolla. 2. பூவடிச்சிதல்; bract. 3. விரலணிகளுள் ஒன்று (பரவ.); a kind of ring.

*[பூ + வட்டம்]*

**பூவடிச்சிதலிலை** *pūvaḍi-c-cidalilai,* பெ. (n.) கவட்டில் பூத்தோற்றுவிக்கும் உருத்திரிந்த இலை; bract ole.

*[பூ + அடி + சிதல் + இலை]*

**பூவண்டம்** *pū-v-aṇḍam,* பெ. (n.) வெங்காயம் (சங்.அக.); onion.

*[பூ + அண்டம்]*

Skt. aṇḍa > த. அண்டம்

**பூவண்டமயிர்** *pūvaṇḍa-mayir,* பெ. (n.) பூவண்டம் (சங்.அக.) பார்க்க; see *pūvaṇḍam.*

*[பூவண்டம் + மயிர்]*

**பூவண்டர்** *pū-v-aṇḍar,* **பெ.** (n.) ஒருசார் இடையர் (நாஞ்.); a sub.sect of shepherd caste.

*[பூ + அண்டர்]*

**பூவணி** *pū-v-aṇi,* **பெ.** (n.) **1.** பூமாலை; garland. **2.** சதுக்கம்; junction of the roads.

*[பூ + அணி]*

**பூவணிகன்** *pū-vaṇigaṉ,* **பெ.** (n.) பூ விற்பவன்; a dealer in flowers, a florist.

**க.** பூவடிக, கூவ்வடிக, கூவடிக,

*[பூ + வணிகன்]*

**பூவணை** *pū-v-aṇai,* **பெ.** (n.) மலர்ப்பள்ளி; bed of flowers. '*வீதி மருங்கியன்றபூவணைப்பள்ளி*" (மணி.4,54).

*[பூ+ அணை. அள் → அண் → அணை]*

**பூவத்தி**[1] *pū-v-atti,* **பெ.** (n.) கும்பாதிரி; lac tree (L.)

**பூவத்தி**[2] *pū-v-atti,* **பெ.** (n.) வாணவகை (இ.வ.); a kind of firework.

*[பூ+ வத்தி]*

**பூவத்தூர்** *pūvattūr,* **பெ.** (n.) தஞ்சை மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Tanjāvūr dt.

**பூவந்தம்** *pū-v-andam,* **பெ.** (n.) நிலவாகை (பதார்த்த.1059); Tinnevelly senna.

**பூவந்தி** *pū-v-andi,* **பெ.** (n.) **1.** மரவகை (மலை.); trijugate - leaved soap-nut. **2.** மரவகை; four leaved soap-nut. **3.** புன்கு, (மலை.); Indian beech.

**ம.** பூவந்தி

*[பூ → பூவந்தி]*

**பூவம்** *pūvam,* **பெ.** (n.) **1.** கும்பாதிரி; lac tree (L.) **2.** காட்டுப் பூவம்; longam **3.** *பூவந்தி* (வின்.) பார்க்க; see *pūvandi*

**மறுவ.** பூ, பூவு, பூவந்தி

**ம.** பூவம்,பூவந்தி; **பர்.**புய்; **குரு.**புத்ரா; **மால.**புச்ரெ

**பூவம்பர்** *pū-v-ambar,* **பெ.** (n.) ஒருவகை நறுமணப் பண்டம்; a kind of amber. '*புழுகு பொன்னம்பர் பூவம்பர் பொங்கவே*' (திருக்காளத். பு.7,55).

*[பூ + அம்பர்]*

**பூவம்பழம்**[1] *pū-v-ampaḻam,* **பெ.** (n.) கொஞ்சிப் பழம்; fruit of pūvam.

*[பூவம் + பழம்]*

**பூவம்பழம்**[2] *pū-v-ampaḻam,* **பெ.** (n.) *பூவன் கதலி* பார்க்க; see *pūvaṉ kadali.*

*[பூவன்பழம் → பூவம்பழம்]*

**பூவம்பன்** *pū-v-ambaṉ,* **பெ.** (n.) மன்மதன் (அக.நி.); Kāma, as having arrows of flowers.

*[பூ + அம்பன். அம்பு → அம்பன் = அம்பினையுடையவன்]*

**பூவமளி** *pū-v-amaḷi,* பெ. (n.) எண்களிப்புள் (அட்டபோகத்துள்) ஒன்றான மலர்ப்படுக்கை; bed of flowers one of aṣṭa-pōgam,q.v.

*[பூ + அமளி]*

**பூவரசு** *pū-v-arašu,* பெ. (n.) 1. மரவகை; (பதார்த்த.379). portia tree. 2. மரவகை; rhododendron.

ம. பூவரசன்; க. ஊவரசு,

*[பூ + அரசு. அரசு போன்று இலையையு டைய மரம். ஆயின் அரசு போலன்றிப் பூக்கும் தன்மை நோக்கிப் பூவரசு எனப்பட்டது.]*

**பூவரசுப்பால்** *pū-v-arašu-p-pāl,* பெ. (n.) தழும்பு முதலிய தோல்நோய்களுக்குப் பயன்படுத்தும் பூவரசு மரத்தின் பால்; the yellow milk or juice of the fruit of portia tree, used for ring worm and other skin diseases.

*[பூவரசு + பால்]*

**பூவரன்** *pū-varaṉ,* பெ. (n.) அரசன் (வின்.); king.

*[பூ + வரன்]*

**பூவராகம்** *pū-varāgam,* பெ. (n.) திருமாலின் பன்றி தோற்றரவம் (அவதாரம்); boar incarnation of Tirumāl, as having the earth on its tusk.

*[பூ + வராகம்]*

**பூவராகன்** *pū-varāgaṉ,* பெ. (n.) பன்றி உருவம் கொண்ட காசுவகை; star pagoda, gold coin bearing the inpression of a boar.

*[பூ + வராகன்]*

**பூவரும்பு** *pū-v-arumbu,* பெ. (n.) பூமொக்கு; flower bud.

*[பூ + அரும்பு. உரு → அரு → அரும்பு]*

**பூவல்**[1] *pūval,* பெ. (n.) 1. சிவப்பு (சூடா.); red colour. 2. செம்மண்; red earth. 'இல்பூவலூட்டி' (கலித்.114).

ம. பூவல்

*[புள் → புழுங்கு. புழுங்குதல் = எரிதல், புகைத்தல் = எரிதல் (மு.தா.133) புள் → புழு → பூ → பூவல்]*

**பூவல்**[2] *pūval,* பெ. (n) துரவு (யாழ்.அக.); large well.

*[ புல் → புல் → புழு. புள் → புழு→ பூ→ பூவல்]*

**பூவல்**[3] *pūval,* பெ. (n.) பூத்திடுகை (அரு.நி.); flowering.

*[பொல் → புல் → பூல் → பூ= பொலிவு, அழகு, மலர். பூத்தல்= பொலிதல், அழகாதல்,பூ மலர்தல் (மு.தா.135) (வ.வ.2,39). பூ → பூவல். 'அல்' தொ. பெ.ஈறு]*

**பூவல்லிகொய்தல்** *pū-v-alli-koydal,* பெ. (n.) பூக்கொய்து ஆடும் மகளிர் விளையாட்டு வகை (திருவாச. 13. 1); gathering flowers, a pastime of girls.

*[பூ + அல்லி + கொய்,]*

**பூவலம்** *pū-valam,* பெ. (n.) நிலவுலகத்தை (பூமியை) வலஞ்சுற்றி வருகை; circumambu-

lation of the earth from left to right. *'பூவலஞ் செய்வதொன்று'* (திருவேங். சத. 6).

*[பூ + வலம்]*

**பூவலயம்** *pū-valayam,* பெ. (n.) மண்ணுலகம் (பிங்.); earth.

*[பூ + வலயம். வல்→ வல. வலத்தல்= வலைத்தல்,சூழ்தல். வல்→ வலயம்= வட்டம், நிலவுலகத்தின் வளைவான பகுதி]*

**பூவழலை** *pū-vaḻalai,* பெ. (n.) *பூநீறு* (யாழ்.அக.) பார்க்க; see *pūnīṟu.*

*[பூ + வழலை]*

**பூவழிச்சீட்டு** *pū-vaḻi-c-cīṭṭu,* பெ. (n.) *பூச்சீட்டு* (நாஞ்.) பார்க்க; see *pū-c-cīṭṭu.*

*[பூ → பூவழி + சீட்டு. சுள் → (சுட்டு) → சிட்டு = சிறியது. சிட்டு → சீட்டு = ஓலை நறுக்கு ]*

**பூவள்ளம்** *pū-vaḷḷam,* பெ. (n.) மட்கிண்ணம் (தைலவ. பாயி. 49); earthen cup.

*[பூ + வள்ளம்]*

**பூவளர்த்தி** *pū-vaḷartti,* பெ. (n.) கண்ணிமை நோய்; a disease of eye lid.

**பூவன்**[1] *pūvaṉ,* பெ. (n.) 1. நான்முகன் (அயன்); Brahmā. *'புலமும் பூவனு நாற்றுமு நீ'* (பரிபா. 1, 46). 2. செவ்வாழை; red banana. 3. *பூவன் கதலி* பார்க்க; see *pūvaṉ kadali*

ம. பூவன்

*[பூ → பூவன்]*

**பூவன்**[2] *pūvaṉ,* பெ. (n.) சேவல்(சேரநா.); cock.

ம. பூவன்; க. புஞ்ச. புஞ்சு; தெ. புஞ்சு; து. பூஞ்செ; கோத. பூஞ்ன்; படா. ஜூஞ்ச

*[பூ → பூவன் = தலையில் பூ(கொண்டை)யை யுடையது. 'அன்' உடைமை குறித்த ஈறு]*

**பூவன்கதலி** *pūvaṉ-kadali,* பெ. (n.) வாழை வகை (இ.வ.); a kind of plantain.

*[பூ → பூவன் + கதலி]*

**பூவன்பழம்**[1] *pūvaṉ-paḻam,* பெ. (n.) *பூவன் கதலி* பார்க்க; see *pūvaṉ - kadali.*

*[பூவன் + பழம்]*

**பூவன்பழம்**[2] *pūvaṉ - paḻam,* பெ. (n.) நெய்க் கொட்டான் பழம்; soapnut tree.

**பூவனூர்** *pūvaṉūr,* பெ (n.) தஞ்சை மாவட்டத்திலுள்ள ஊர்; a village Tañjāvūr dt.

**பூவா—தல்** *pūvā-,* 7 செ.கு.வி. (v.i.) மலர்தல்; to be produced (flowers), to blossom.

க. பூவாகு

*[பூ + ஆ –,]*

**பூவாசிப்பட்டம்** *pūvāśippaṭṭam,* பெ. (n.) கோடைக்காலத்திற் பயிரிடப்பெறும் புன்செய்ப் பயிர்; dry crop season starts from summer.

*[பூவாசி + பட்டம்]*

**பூவாடங்கேழ்வரகு** *pūvāḍaṅ kēḻvaragu,* பெ. (n.) ஒருவகை கேழ்வரகு; a kind of ragi.

*[பூவாடம் + கேழ்வரகு. கேழ் → கேழ் வரகு = செந்நிற வரகுவகை]*

**பூவாடம்கேழ்வரகு** *pūvādam - kēḻvaragu,* பெ. (n.) *பூவாடங்கேழ்வரகு* பார்க்க; see *pūvādaṅ kēḻvaragu.*

*[பூவாடம் + கேழ்வரகு]*

**பூவாடைக்காதி** *pū-v-ādaikkādi,* பெ. (n.) *பூவாடைக்காரி* (இ.வ.) பார்க்க; see *pūvādai-k-kāri.*

*[பூவாடைக்காரி → பூவாடைக்காதி]*

**பூவாடைக்காரி** *pū-v-ādaikkāri,* பெ. (n.) மாங்கலியத்துடன் இறந்து தெய்வமான மாது (பிரபஞ். பக். 540); a woman worshipped as a family goddess on her death during the life time of her husband.

*[பூவாடம் + காரி]*

**பூவாடைப்பானை** *pūvādai-p-pāṉai,* பெ. (n.) மங்கலப்பெண்டிர் வழிபாடன்று (சுமங்கலிப் பிரார்த்தனை யன்று) பூவாடைக் காரிக்குக் காணிக்கையாக்கும் சேலையை, அடுத்த மங்கலப்பெண்டிர் வழிபாடு (சுமங்கலிப் பிரார்த்தனை) வரை காத்து வைக்கும் பானை; a pot in which the cloth offered to Pūvādaikkāri at a sumaṅgali-p-pirārttaṉai is kept till the next sumaṅgali-p-pirārttaṉai.

*[பூவாடை + பானை]*

**பூவாடையம்மன்** *pū-v-ādai-y-ammaṉ,* பெ. (n.) *பூவாடைக்காரி* (பிரபஞ். பக். 541) பார்க்க; see *pū-v-ādai-k-kāri.*

*[பூவாடை + அம்மன்]*

**பூவாணம்** *pū-vāṇam,* பெ. (n.) வாணவகை (இ.வ.); a kind of rocket that throws out flower like sparks.

*[பூ + வாணம்]*

**பூவாத்தாள்** *pūvāttāḷ,* பெ. (n.) *பூநீறு* பார்க்க; see *pūniṟu.*

**பூவாதிகாரம்** *pūvādikāram,* பெ. (n.) சீனக்காரம் (சங்.அக.); alum.

**பூவாதுகாய்க்குமரம்** *pūvādu - kāy-k-ku maram,* பெ. (n.) *பூவாமற்காய்க்குமரம்* பார்க்க; see *pūvāmaṟ kāykku maram.*

*[பூவாது + காய்க்கும் + மரம்]*

**பூவாமரம்** *pūvāmaram,* பெ. (n.) கோளி; trees yielding without flowering.

*[பூ + ஆ + மரம்]*

**பூவாமற்காய்க்குமரம்** *pūvāmaṟ-kāykku maram,* பெ. (n.) பூவாதே காய்க்குமரம் (சூடா.); tree that bears internal flowers as apparently not flowering.

*[பூவாமல் + காய்க்கும் + மரம்]*

**பூவால்** *pū-vāl,* பெ. (n.) 1. குஞ்சமுள்ள வால்; tufted tail of cattle. 2. வால்நுனியில் வெள்ளை விழும் மாட்டுக் குற்ற வகை (மாட்டுவா. 18); a defect in cattle.

*[பூ + வால்]*

**பூவாழை** *pū-vāḻai,* பெ. (n.) 1. வாழைவகை; guindy plantain (G.SM.D.i.i, 215). 2. செடி வகை; Indian shot.

து. பூபாரெ

*[பூ + வாழை]*

**பூவாளி**[1] *pū-vāḷi,* பெ. (n.) **1.** காமன் (மன்மதன்) (பிங்.); Kāma as having arrows of flowers. **2.** காமனுடைய பூவம்பு; Kāmas arrow of flowers.

*[பூ + வாளி]*

**பூவாளி**[2] *pū-vāḷi,* பெ. (n.) செடிகளுக்குச் சிறிதுசிறிதாக நீர் ஊற்றப் பயன்படுத்தும் வாளி; water-can.

*[பூ + வாளி]*



**பூவாளை** *pū-vāḷai,* பெ. (n.) ஒருவகை மீன்; a kind of herring.

**பூவி–த்தல்** *pūvi-,* 11 செ.கு.வி. (v.i.) புகுவித்தல்; to cause to enter. *'போய்ப்போ ஒய் வெந்நரற் பூவியேல்'* (திவ். இயற். பெரிய திருவந். 40).

*[புகு → புகுவி → பூவி. 'வி' பி.வி.ஈறு]*

**பூவிடுவான்** *pū-viḍuvāṉ,* பெ. (n.) கோயிற்குப் பூத்தொண்டு செய்பவன்; one who supplies flowers for a temple. (T.A.S.i, **6.**)

*[பூ + விடுவான். விடுபவன் → விடுவான்]*

**பூவிதழ்** *pū-v-idaḻ,* பெ. (n.) மலரேடு (பிங்.); flower petal.

**மறுவ.** பூந்தோடு

**து.** பூதசெள்

*[பூ + இதழ்]*

**பூவிந்து** *pūvindu,* பெ. (n.) **1.** *பூவிந்து நாதம்* (சங்.அக.) பார்க்க; see *pūvindunādam.* **2.** வீரம் என்ற மருந்துச் சரக்கு; corrosive sublimate.

*[பூ + விந்து]*

**பூவிந்துநாதம்** *pūvindu-nādam,* பெ. (n.) காக்கைப்பொன் (அப்பிரகம்) (மூ.அ.); mica.

*[பூவிந்து + நாதம்]*

**பூவிரணம்** *pū-viraṇam,* பெ. (n.) ஆண்குறி மலரிலுள்ள புண் (சங்.அக.); sore on the glans penis.

*[பூ + விரணம்]*

Skt. vraṇa > த. விரணம்

**பூவிரி** *pū-viri,* பெ. (n.) தென்னம்பாளை (மாட்டுவா. 162); coconut spathe.

*[பூ + விரி]*

**பூவில்** *pū-vil,* பெ. (n.) காமனுடைய (மன்மதனது) மலர்வில் (பிங்.); flower-bow of Kāmā.

*[பூ + வில்]*

**பூவிலாப்பாலை** *pūvilā-p-pālai,* பெ. (n.) ஒரு விதப்பாலை; stinking swallow wort.

*[பூவிலா + பாலை]*

**பூவிலி** *pū-vili,* பெ. (n.) பிறப்பற்றவ–ன்–ள்; one who is birth less. *'பூவிலி பூவிதழ்'* (திருமந். 1409).

*[பூ + இலி. இல் → இலி]*

**பூவிலை** *pū-vilai,* பெ. (n.) விலை மாதர் பெறும் அற்றைப் பரிசம்; day's hire of a prostitute. *'பூவிலை யீத்தவன் பொன்றின னென்று'* (மணிமே.24, 19).

*[பூ + விலை]*

**பூவிழுதல்** *pū-viḻudal,* பெ. (n.) **1.** சொரசொரப்பு நீங்குகை (வின்.); removal of rough ness, as from the edge of a blade. **2.** கண்ணின் கருவிழியில் வெள்ளை விழுகை; formation of cataract in the eye. *'கண்ணிற் பூவிழுந்தது'.*

*[பூ + விழுதல்]*

**பூவிளம்** *pūviḷam,* பெ. (n.) ஒரு செய் நஞ்சு (கற்பாஷாணம்) (மூ.அ.); a mineral poison.

**பூவிளைகை** *pū-viḷaigai,* பெ. (n.) நன்மை (போகம்) விளைகை; fruitfulness, as of a crop; produce of a season.

*[பூ + விளைகை. விளை → விளைகை]*

**பூவிற்கண்ணி** *pūviṟkaṇṇi,* பெ. (n.) அத்தி; fig tree.

**பூவிற்கொம்பு** *pūviṟkombu,* பெ. (n.) *பூவின்கிழத்தி* பார்க்க; see *pūviṉkiḻatti.* பூவிற்கொம்பும் புகழும்படி (மேருந்.47).

*[பூ + இன் + கொம்பு]*

**பூவின்கிழத்தி** *pūviṉ - kiḻatti,* பெ. (n.) திருமகள் (இலக்குமி.) (பிங்.); Lakṣmi, as seated on a lotus. *'சேராளே பூவின் கிழத்தி புலந்து'* (நாலடி, 252).

*[பூவின் + கிழத்தி]*

**பூவின்சருக்கரை** *pūviṉ - šarukkarai,* பெ. (n.) மலரிலிருந்து எடுக்கும் சருக்கரை; sugar extracted from flowers.

*[பூ + இன் + சருக்கரை]*

**பூவினன்** *pūviṉaṉ,* பெ. (n.) நான்முகன் (பிரமன், அயன்); Brahma. *'பூவினன் குலையம் பொருட்கு மாலுற'* (கந்தபு. கடவுள்வா. 14).

*[பூ → பூவினன்]*

**பூவு** *pūvu,* பெ. (n.) **1.** *பூவம்¹* பார்க்க, **1;** see *pūvam¹*-,1 **2.** கதம்பம்; a species of roudeletia wort.

**பூவுக்கிடு–தல்** *pūvukkiḍu-,* 20 செ.கு.வி. (v.i.) காதலன் காதலிக்குப் பரிசங் கொடுத்தல்; to make a present to ones beloved. *'பூவுக் கிட்டோம் போலும்'* (ஈடு, 8, 2, 6.)

*[பூவுக்கு + இடு–,]*

**பூவுசிலை** *pūvušilai,* பெ. (n.) ஒரு வாகை; sirissa tree.

**பூவுடம்பு** *pūvuḍambu,* பெ. (n.) மென்மையான உடம்பு; soft body.

*[பூ + உடம்பு]*

**பூவுணா** *pūvuṇā,* பெ. (n.) காட்டிலுப்பை; forest bassia.

**பூவுதிர்–தல்** *pū-v-udiri-,* 4 செ.கு.வி. (v.i.) பூக்கழிதல்; to deflorate, to shed flower.

*[பூ + உதிர்–,]*

**பூவுதிர்வு** *pū-v-udirvu,* பெ. (n.) மலர்கள் உதிர்கை; defloration.

*[பூ + உதிர்வு]*

**பூவுமாமரம்** *pūvumāmaram,* பெ. (n.) *பூவந்தி மரம்* பார்க்க; see *pūvandimaram.*

**பூவுயிர்–த்தல்** *pū-v-uyir-,* 4 செ.கு.வி. (v.i.) மலர்தல்; to blossom. *'பூவுயிர்த்தன்ன... உண்கண்'* (கலித். 142).

*[பூ + உயிர்–,]*

**பூவுலகம்** *pū-v-ulagam,* பெ. (n.) *பூவுலகு* பார்க்க; see *pūvulagu.*

*[பூ + உலகம்]*

**பூவுலகு** *pū-v-ulagu,* பெ. (n.) நிலவுலகம்; the earth. *'படர் மேதினியானது பூவுல கெங்கணுமே'* (கம்பரா. அதிகா. 75).

*[பூ + உலகு. உலகம் → உலகு]*

**பூவுள்** *pūvuḷ,* பெ. (n.) பூவின் உட்பக்கம்; inside of a flower, corolla.

*[பூ + உள்]*

**பூவெடு–த்தல்** *pū-v-eḍu-,* 4 செ.கு.வி. (v.i.) **1.** கோயிற் பூசைக்கு மலரெடுத்தல்; to gather flowers for a temple. **2.** கண்ணில் விழுந்த பூவை நீக்குதல்; to remove cataract from the eye.

*[பூ + எடு–,]*

**பூவெடுத்தகண்** *pū-v-eḍutta kaṇ,* பெ. (n.) பூவுரித்தகண்; anomalous state of refraction caused by the absence of the crystalline,lens, as after an operation for cataract.

*[பூ + எடுத்த + கண்]*

**பூவெண்ணெய்** *pū-v-eṇṇey,* பெ. (n.) **1.** கொடிவகை; aduloil plant. **2.** மருந் தெண்ணெய் வகை (யாழ்.அக.); a kind of medicinal oil. **3.** நறும் எண்ணெய்வகை (வின்.); a scented oil.

*[பூ + எண்ணெய். எள் + நெய்–எண்ணெய்]*

**பூவெண்புள்ளி** *pū-veṇpuḷḷi,* பெ. (n.) ஒரு வகைக் கண்ணோய்; opacity of the lens, an eye disease.

*[பூ + வெண் + புள்ளி]*

**பூவெள்ளை** *pū-veḷḷai,* பெ. (n.) அரைக்கால் உரூபாவுக்கு வழங்கும் குழூஉக்குறி; mercantile term for 1/8 rupee.

**பூவெறி** *pūveṟi,* பெ. (n.) பூவின் நறுமணம்; fragrance of flower.

*[பூ + வெறி]*

**பூவேர்** *pū-vēr,* பெ. (n.) பூநாகம் (தைலவ. தைல. 73). பார்க்க; see *pūnāgam.*

*[பூ + வேர்]*

**பூவேலை** *pū-vēlai,* பெ. (n.) பூப்போன்ற சித்திர வேலை; floral design.

*[பூ + வேலை]*

**பூவேலைப்பாடு** *pūvēlai-p-pāḍu,* பெ. (n.) *பூத்தொழில்* பார்க்க; see *pūttoḻil.*

*[பூ + வேலைப்பாடு. படு → பாடு]*

**பூவேளைக்காரர்** *pū-vēḷai-k-kārar,* பெ. (n.) அரசர்க்குரிய காலங்களில் பூவிடாவிடில் தம்மைத் தாமே குத்திக் கொண்டு மடியும் வீரர் தொகுதியினர்; devoted servants who have taken a vow to stab themselves to death if their king is not supplied with flowers and garlands at the specified times. *'பூவேளைக் காரரைப் போலே முடிவா றொருவர் இறே'* (ஈடு. 5, 1.9).

*[பூ + வேளைக்காரர்]*

**பூவை**[1] *pūvai,* பெ. (n.) 1. காயா; oblong cordate - leaved bilberry. *'பூவைப் புதுமலரொக்கு நிறம்'* (நான்மணி. 1). 2. நாகணவாய்ப் புள்; bush myna *'புரிவொடு நாவினாற் பூவை புணர்த்து'* (பு. வெ. 12, வென்றிப். 12). 3. குயில் (அக.நி.); koel. 4. கிளி; parrot. 5. கீரிப்புழு; an intestinal worm, thread worm.

*[பூ → பூவை]*

**பூவை**[2] *pūvai,* பெ. (n.) பெண்; lady, woman. *'போதல் காரிய மென்றனள் பூவை'* (கம்பரா. சூளா. 26). மறுவ. காரிகை

*[பூ → பூவை. பூவைப்போன்ற பெண்]*

**பூவை**[3] *pūvai,* பெ. (n.) காயாச் செடிவகை; a variety of kāyā. *'பூவை யாவது காயாவின் அவாந்தரப் பேதமானாப் போலே'* (திவ். பெரியாழ். 3, 4, 9 வ்யா. பக். 620).

**பூவைசியர்** *pū-vaiśiyar,* பெ. (n.) வேளாளர் (பிங்.); Vēlalās as cultivators.

*[பூ + வைசியர்]*

Skt. vaiśya > **த.** வைசியர்

**பூவைநிலை** *pūvai-nilai,* பெ. (n.) 1. காயாம்பூவை மாயவன் நிறத்தோடு உவமித்துப் புகழும் புறத்துறை (பு.வெ.9,4); (purap.) theme in which the bilberry flower is praised as resembling the colour of Viṣṇu. 2. அரசனைத் தேவரோடு ஒப்பக்கூறும் புறத்துறை (புறநா.36) (தொல்.பொ.60); (purap.) theme in which a king is likened to a god.

*[பூவை + நிலை]*

**பூவைவண்ணன்** *pūvai-vaṇṇaṉ,* பெ. (n.) திருமால் (பிங்.) (திவ்.பெரியதி. 2,2,8); Tirumāl as having the colour of bilberry flower.

*[பூவை + வண்ணன்]*

**பூவொதுங்கு–தல்** *pū-v-oduṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) கருப்பையின் வாசல் ஒதுங்கிப் போதல்; to be displaced of cervix.

*[பூ + ஒதுங்கு–,]*

**பூவொல்லி** *pū-v-olli*, பெ. (n.) உள்ளீடற்ற தேங்காய் வகை (யாழ்.அக.); a spoilt coconut with the kernal empty.

*[பூ + ஒல்லி]*

**பூவோடு** *pūvōḍu*, பெ. (n.) தொட்டி செய்நஞ்சு (பாடாணம்) (யாழ்.அக.); a mineral poison.

**பூழ்**[1] *pūḻ*, பெ. (n.) 1. காடைவகை (பிங்.); quail *'அளித்து நீ பண்ணிய பூழெல்லாமின்னும் விளித்து'* (கலித்.95). 2. கானாங்கோழி; jungle fowl. *'கவுதாரி பூழ்........பறந்து'* (அரிச்.பு.வஞ்ச.39).

க. புர்லி, புரலி, புருலி; கெ. பூரேடு; கோத. மொணாம்பிரி.

**பூழ்**[2] *pūḻ*, பெ. (n.) புழை (இலக்.அக.); hole.

*[புழு → புழல் = உட்டுளை. புழு→புழை = துளை, குழாய். புழை → பூல் = துளை.புழை → பூழை = துளை (வே.க.3,106–108) பூழை → பூழ்]*

**பூழ்**[3] *pūḻ*, பெ. (n.) *பூழான்* பார்க்க; see *pūḻāṉ*.

**பூழ்க்கரம்** *pūḻkkaram*, பெ. (n.) வெண் கோட்டம். (மலை.); Arabian costum.

**பூழ்க்கை** *pūḻ-k-kai*, பெ. (n.) யானை; elephant, as having tubular trunk. *'பூழ்க்கை முகன் மனுவை நனியெண்ணின்'* (விநாயகபு.14,9).

மறுவ. ஆம்பல், உம்பல், உவா, எறும்பி, ஒங்கல், கரி, களவன், கறையடி, குஞ்சரம், கைம்மலை, கைம்மா, தூங்கல், தும்பி, தோல், நால்வாய், பகடு, புகர்முகம், பெருமா, பொங்கடி, மதமா,மறமலி, மாதிரம், மொய், யானை, வழுவை, வாரணம், வேழம் (குமி.வ.101)

*[புழு → புழை = துளை. புழை → புழைக்கை = தும்பிக்கை, யானை. புழைக்கை → பூழ்க்கை (வே.க.3,108)]*

**பூழ்தி**[1] *pūḻdi*, பெ. (n.) (பிங்.) 1. இறைச்சி; meat. 2. முடைநாற்றம்; stench of putrid flesh.

**பூழ்தி**[2] *pūḻdi*, பெ. (n.) 1. புழுதி; dust. *'கேழல் பூழ்தி கிளைக்க'* (தேவா.1152,5.) 2. கொடுமை (பிங்.); cruelty, oppression.

*[புள் → (பொள்) → பொடி. பொடித்தல் = தூளாக்குதல். புள் → பூள் → (பூழ்) → பூழி = தூள், புழுதி. பூழ் → பூழ்தி. (மு.தா.127)]*

**பூழளம்** *pūḻaḷam*, பெ. (n.) நெய்த்தோலி; anchovy. (M.M.710).

**பூழான்** *pūḻāṉ*, பெ. (n.) 1. கவுதாரி (திவா.); Indian partridge. 2. கானாங்கோழி (நாமதீப. 248); jungle-fowl. 3. சம்பங்கோழி; turkey.

*[பூழ் → பூழான்]*

**பூழி** *pūḻi*, பெ. (n.) 1. தூள்; powder. *'வானம்பூழிபடக்கருக்கி'* (கல்லா.25,28.) 2. புழுதி; dust *'பூழிபூத்த புழற்காளாம்பி'* (சிறுபாண்.134). 3. திருநீறு (விபூதி); sacred ashes. *'பூழி புனைந்தவர்'* (கந்தபு.யுத்.வரவு.13.) 4. *பூழிநாடு* (நன்.273). பார்க்க; see *pūḻināḍu*. 5. குழைசேறு; soft mire or mud. 6. சேற்றிற்குமிழி; bubble in muddy water.

ம. பூழி; க.புளில்; து.பொய்யை;

*[புள் →பொள் → பொடி. புள்→பூள் (பூழ்) → பூழி (மு.தா.127)]*

**பூழிநாடு** *pūḻi-nāḍu,* பெ. (n.) கொடுந்தமிழ்நாடு பன்னிரண்டனுள் ஒன்று; the region where a vulgar dialect of Tamil was spoken, one of 12 koḍun-tamilnāḍu, q.v.

*[பூழி + நாடு]*

**பூழியசணி** *pūḻiyaśaṇi,* பெ. (n.) பூவணி; a kind of gourd.

**பூழியபலம்** *pūḻiya-palam,* பெ. (n.) பூசணி (மலை.); pumpkin.

*[பூழி + பலம்]*

**பூழியன்** *pūḻiyaṉ,* பெ. (n.) **1.** (பூழிநாட்டுக்குத் தலைவன்) சேரன் (திவா.); Chēra king, as lord of pūḻi-nāḍu. **2.** பாண்டியன்; Paṇḍya king. '*பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன்*' (சேக்கி.பு.பாயி.6).

*[பூழி → பூழியன்]*

**பூழியான்** *pūḻiyāṉ,* பெ. (n.) **1.** சிவபெருமான்; Šivaṉ, as wearing sacred ashes. '*பூழியான் பூணே*' (தமிழ்நா.78). **2.**'*புழுதியினிடத்துள்ளவன்*' one who lies in the dust. *தலைமகன் பூழியால்*' (கம்பரா.முதற்.83).

*[புள் → பொள் → பொடி. புள்→ பூள் → (பூழ்). → பூழி (மு.தா.127) = பொடியாகவுள்ள புழுதி, தீறுநீறு. பூழி → பூழியான். புழுதி (திருநீறு) அணிந்தவன்]*

**பூழில்** *pūḻil,* பெ. (n.) **1.** அகில்; eaglewood. '*சாந்தம் பூழிலொடு பொங்குநுரை சுமந்து*' (பதிற்றுப்.87,2). **2.** நிலம் (சூடா.); earth.

*[புல் → பொல் → பொலி. பொலிதல் = பெருகுதல், மிகுதல், சிறத்தல். பொழ்→ பொழில் = உலகம், நாடு, நாட்டின் கூறு(வே.க. 3,79.80). பொழில்→ புழில் → பூழில்]*

**பூழை** *pūḻai,* பெ. (n.) **1.** சிறுவாயில்; small door with in a larger one, sally port, wicket gate. '*பூழைத்தலை நுழைந்து*' (தேவா.845,1). **2.** மலைக்கணவாய் (பிங்.); mountain pass. **3.** புழை; crevice, opening. '*புகையும் புகற்கரிய பூழை நுழைந்து*' (நாலடி, 282).

*[புழு → புழல் = உட்டுளை. புழு →புழை = துளை. புழை→பூழை (வே.க.3,106–108)]*

**பூள்** *pūḷ,* பெ. (n.) ஆண்குறி; membrum virile.

*[புல்லுதல் = பொருந்துதல். புல் = புணர்ச்சி. புல்→புள்→புண்→புணர்→புணர்ச்சி (வே.க.3,62–64) புல் → புள் →பூள். கலவியிற் பொருந்தும் உறுப்பு]*

**பூளபாம்பு** *pūḷa pāmbu,* பெ. (n.) ஒருவகைப் பாம்பு; a kind of snake.

*[பூளம்+பாம்பு]*

**பூளம்** *pūḷam,* பெ. (n.) பூவரசு (மலை.); poria tree.

**பூளை¹** *pūḷai,* பெ. (n.) **1.** இலவு; red silk cotton '*பூளை மெல்லணைமேல்*' (சீவக.1628). **2.** செடிவகை; wool plant. **3.** செடிவகை; javanese wool plant. '*பூளைப் பூவினன்ன....சொன்றி*' (பெரும்பாண்.192–3). **4.** வெற்றிப்பூ (பிங்.); flower worn as a symbol of victory.

ம. பூல

**பூளை²** *pūḷai,* பெ. (n.) பீளை பார்க்க; see piḷai '*கண்களில் வெண்பூளை சுரப்ப*' (தாயு.எந்நாட். மாதரைப்.5).

*[புல் → (பில்)→ பேல். புள்→புழுக்கை → பிழுக்கை. (புள்)→பிள்→(பிய்) → பீ. பிள் → பீள் → பீளை→ பூளை = கண்மலம் (மு.தா.262) ]*

**பூளைசூடி** *pūḷai-šūḍi,* பெ. (n.) பூளை யணிந்தவன், சிவபெருமான்; Šivaṉ as wearing pūḷai. '*பூளை சூடி தன்னகை யினிலெயில் பொடித்தனபோல்*' (கம்பரா. அகலிகை.39).

*[பூளை + சூடி. சூடு → சூடி. 'இ' வினை முதலீறு]*

**பூளைப்பஞ்சு** *pūḷai-p-pañju,* பெ. (n.) பஞ்சுவகை (வின்.); silk-cotton.

*[பூளை + பஞ்சு]*

**பூளைப்பூ** *pūḷai-p-pū,* பெ. (n.) பூளைப்பஞ்சு பார்க்க; see pūḷai-p-pañju '*பூளைப்பூவாம் பிறவி*' (பெரியபு.திருநாளைப் போ.22).

*[பூளை + பூ]*

**பூற்சாதம்** *pūṟcādam,* பெ. (n.) பொடுதலை (நாமதீப.323); a plant.

**பூறு** *pūṟu,* பெ. (n.) பிட்டம் (இ.வ.); anus.

ம. பூரம்; **தெ.** பூட; **து.** பூடி; குட. பூரீ (பெண் பிறப்புறுப்பு)

*[பீறு → பூறு]*

**பூன்சம்பா** *pūṉšambā,* பெ. (n.) நெல்வகை; a variety of paddy in Trichirappaḷḷi dt.

**பூனதம்** *pūṉadam,* பெ. (n.) பொன்; gold. '*குலிசக்குழுச்சுலவு பூனதக்கிம்புரி*' (திருப்போ.சந்.பிள்ளைத்.சப்பா.5).

**பூனை¹** *pūṉai,* பெ. (n.) புலால் உண்ணுவதும் நான்குகால்களையுடையதுமான சிறிய வீட்டு விலங்கு; small domesticated carnivorous quadruped, cat. இந்தப் பூனையும் பால் குடிக்குமா? (பழ.)

**மறுவ.** பூசை, கொத்தி, விடரகன்

*[பூசு→பூசை → பூனை(தமி.வ.1.28)]*

பூனை என்பது பூசை என்னும் சொல்லின் திரிபே. பூசுதல் = கழுவுதல், சிலைகழுவுதல். நெல்லை மாவட்டத்தின் ஒருபகுதியில், '*முகம்பூசுதல்*' என்பது இன்றும் உலக வழக்காயிருக்கின்றது. "*பூசிக்கொளினும் இரும்பின்கண் மாசொட்டும்*" (நான்மணி.99).

பூனை அடிக்கடி தன் எச்சிலை முன்னங்காலால் தொட்டு முகத்தைப் பூசிக்கொள்வதால், அது பூசையெனப் பெயர் பெற்றது. "*வெவ்வாய் வெருகினைப் பூசை யென்றலும்*" (தொல்.மரபு.69). வடமொழியிலுள்ள மார்ஜால என்னும் பூனைப் பெயரும் இக்காரணம் பற்றியதே. மெழுகு – வ.ம்ருஜ் (mrj) = பூசு, கழுவு.ம்ருஜ் – மார்ஜ் – மார்ஜாரா – மார்ஜால.

பூனையைப் பூசுபூசு என்றழைப்பது பெண்டிர் வழக்கம். பூசை→பூச்சை (நாஞ்சில்நாட்டு வழக்கு). பூச்சை→ம. பூச்ச. பூசை→பூனை. ச–ன, போலித்திரிபு. ஒநோ: பிசை–பினை.

பூனைக்கண் = பூனைக்கண்போன்ற நிறமுள்ளஒளிக்கல்(வைடூரியம்). ஆங்கிலத்திலும் இது cat's eye என்று பெயர் பெற்றிருத்தலை நோக்குக. வைடூரியம் என்னும் வடசொல்லும் இக்காரணம் பற்றியதே.

பூனை→பூஞை.ஒ.நோ:அன்னை → அஞ்ஞை. இனி, பூசை→பூஞை என்றலுமாம். ஒ.நோ: குடிசை→குடிஞை. "*சிலம்பி சிச்சிலி பூஞை கிருமி*" (தத்துவப்.19).

(The Oxford English Dictionary and Klein's Comp.Ety.Dy.of the E.Language).

E. puss, pus, pusse. (a word common to several Teutonic languages. usually as a call-name for the cat). Du. poes, LG. puus, puuskatte. puus-man, Sw. dial. pus, katte pus, Norw.puse, puus, Lith. puz.puiz, Ir. and Gael.fus, Alb.piso, Ruman pisica.

Puss in the corner.' a game of children; Pussy-wants-a-corner, an American name of the game.

E.pussy, a pet name for a cat. Y dim. suffix.

pussy-cat, a nursery word for a cat.

pussyfoot, to tread stealthily like a cat.

pussy-willow, the American glaucous willow, in reference to its silky catkins.

Puss-Etymology unknown என்பது O.E.D.; Imitative of the spitting of a cat என்பது K.C.E.D.E.L.,

பூசை அல்லது பூனை யென்பது வீட்டுப் பூனையையே. காட்டுப் பூனை வெருகு எனப்படும். வெருவத்தக்க தோற்றமும் வலிமையும் உடையது வெருகு. வெருவுதல்–அஞ்சுதல். வெருகு வீட்டில் வளர்க்கப்பட்ட பின் பூசையெனப் பெயர் பெற்றது. "*வெவ்வாய் வெருகினைப் பூசை யென்றலும்*" என்று தொல்காப்பியம் கூறுதல் காண்க. வீட்டுப்புனை இலத்தீனில் felis domestica எனப்படும்.

feline (adj.) = cat like. felid = one of the Felidoe or cat-tribe. (தலை.த.178–180)

**பூனை வகை**

1. காட்டுப்பூனை
2. சிவிங்கிப் பூனை
3. புலிப் பூனை
4. புனுகுப் பூனை
5. மீன் கொல்லிப்பூனை
6. வீட்டுப் பூனை

**பூனை[2]** *pūṉai,* பெ. (n.) **1.** இலவம்பிசின்; the gum of silk cotton tree. **2.** காஞ்சொறி; a kind of nettle. **3.** சிறுகாஞ்சொறி; tragia cannabina.

**பூனைக்கடி** *pūṉai-k-kaḍi,* பெ. (n.) பூனைக்கடியின் நஞ்சு (விஷம்); bite of a cat.

*[பூனை + கடி]*

**பூனைக்கண்** *pūṉai-k-kaṇ,* பெ. (n.) **1.** பூனையின் கண்போன்ற கண்; cat-like eye. **2.** *பூனைக்கண் வைடூரியம்* பார்க்க; see *pūṉai-k-kaṇ - vaiḍūriyam.* **3.** குங்கிலியம்; masticha.

*[பூனை + கண்]*

**பூனைக்கண்கல்** *pūṉai-k-kaṇ-kal,* பெ. (n.) *பூனைக்கண்* வைடூரியம் (இ.வ.) பார்க்க; see *pūṉai-k-kaṇvaiḍūriyam.*

*[பூனைக்கண் + கல்]*

**பூனைக்கண்குங்கிலியம்** *pūṉai-k-kaṇkuṅgiliyam,* பெ. (n.) செடிவகை (M.M.): mastric-, tree, evergreen shrub.

*[பூனைக்கண் +குங்கிலியம்]*

**பூனைக்கண்கெளிறு** *pūṉai-k-kaṇ-keḷiṟu,* பெ. (n.) மீன்வகை; a kind of fish. '*ஒடும் பூனைக்கண்கெளிறு*' (பறாளை.பள்ளு.16).

*[பூனைக்கண் + கெளிறு]*

**பூனைக்கண்ணன்** *pūṉai-k-kaṇṇaṉ,* பெ. (n.) பூனைக்கண் போன்ற கண்ணை யுடையவன்; person having cat-like eyes.

*[பூனைக்கண் → பூனைக்கண்ணன்]*

**பூனைக்கண்ணி** *pūṉai-k-kaṇṇi,* பெ. (n.) ஒரு வகை மீன்; a kind of fish.

*[பூனை+கண்ணி]*

**பூனைக்கண்புருடராகம்** *pūṉai-k-kaṇ-puruḍarāgam,* பெ. (n.) ***பூனைக்கண் வைடூரியம்*** (யாழ்.அக.) பார்க்க; see *pūṉai-k-kaṇ-vaiḍūriyam.*

*[பூனைக்கண் + புருடராகம்]*

Skt. puṣparāga > **த.** புருடராகம்

**பூனைக்கண்வைடூரியம்** *pūṉai-k-kaṇ-vaiḍūriyam,* பெ. (n.) ஒளிக்கல்(வைடூரிய) வகை; cat's eye.

*[பூனைக்கண் + வைடூரியம்]*

Skt. vaiḍūrya > **த.** வைடூரியம்

**பூனைக்கழற்சி** *pūṉai-k-kaḻaṟci,* பெ. (n.) கொடிவகை (யாழ்.அக.); prickly brasiletto.

*[பூனை+ கழற்சி]*

**பூனைக்காச்சி** *pūṉai-k-kācci,* பெ. (n.) ஒருகொடி; a twiner like lablab.

*[பூனை+ காச்சி]*

இக்காயின் மேல்தோல் பூனையின் மேல்தோல்போல் மயிருடையதாய் இருக்கும் கொடியிலைகள் அவரைக் கொடி போன் றிருக்கும். காய் சுணையுள்ளது. காயி னுள்ளிருக்கும் பருப்பு மாவு சத்துள்ளது. இம்மாவினை ஏழை எளிய மக்கள் பிட்டு முதலியசிற்றுணவாகச் செய்துண்பார்கள். இச் செடி கோடிக்கரைக் காட்டில் மிகுதியாயுள்ளது.

**பூனைக்காஞ்சி** *pūṉaikkāñji,* பெ. (n.) பூனைக்காஞ்சொறி (பச்.மூ.); small climbing nettle.

*[பூனைக்காஞ்சொறி → பூனைக்காஞ்சி]*

**பூனைக்காஞ்சொறி** *pūṉai-k-kāñcoṟi,* பெ. (n.) சிறுகாஞ்சொறி (மூ.அக.); small climbing nettle.

**மறுவ.**பூனைக்காலி

*[பூனை + காஞ்சொறி]*

**பூனைக்காட்டஞ்சிலந்தி** *pūṉai-k-kāṭṭañ-cilandi,* பெ. (n.) ஒரு வகைச் சிலந்தி; a insect.

*[பூனைக்காட்ட + சிலந்தி]*

**பூனைக்காய்ச்சி** *pūṉai-k-kāycci,* பெ. (n.)
**1.** தீய்ந்த பயிர்; empty or blasted ear or crop.
**2.** கொடிவகை (இ.வ.); climber.

*[பூனை + காய்ச்சி]*

**பூனைக்காய்ச்சிமணி** *pūṉai-k-kāyccimaṇi,* பெ. (n.) குறவர் அணியும் அணிவகை (இ.வ.); a bead used in ornaments by Kuṟavās.

*[பூனைக்காய்ச்சி → மணி. மண் → மண்ணி → மணி]*

**பூனைக்காய்ஞ்சொறி** *pūṉai-k-kāyñcoṟi,* பெ. (n.) பூனைக்காஞ்சொறி பார்க்க; see pūṉai-k-kañcoṟi.

*[பூனைக்காய் + சொறி]*

**பூனைக்காய்வேளை** *pūṉai-k-kāy-vēḷai,* பெ. (n.) ஒருவகைக் காய்வேளை செடிவகை(யாழ்.அக.); shaggy wild indigo.

*[பூனை + காய்வேளை]*

**பூனைக்காலி** *pūṉai-k-kāli,* பெ. (n.) **1.** கொடிவகை (பாதர்த்த.794); cow-hage **2.** சிமிக்கிப்பூ (சங்.அக.); mountain passion flower. **3.** *பூனைக்காய்வேளை* (மூ.அ.) பார்க்க; see *pūṉai-k-kāyvēḷai.*

*[பூனை + காலி]*

**பூனைக்கீரை** *pūṉai-k-kīrai,* பெ. (n.) **1.** புலிச்சுவடி (வின்.); tiger's foot bind weed. **2.** *பூனைக்காய் வேளை* (மூ.அ.) பார்க்க; see *pūṉai-k-kāyvēḷai.*

*[பூனை + கீரை]*

**பூனைக்குட்டி** *pūṉai-k-kuṭṭi,* பெ. (n.) பூனையின் குட்டி; kitten. பூனைக்குட்டியைக் கட்டிக்கொண்டு சகுனம் பார்க்கிறதுபோல (பழ.).

*[பூனை + குட்டி]*

**பூனைக்குடல்** *pūṉai-k-kuḍal,* பெ. (n.) **1.** பூனையின் குடல்; intestines of cat. **2.** ஒருவகை நரம்புக் கயிறு; cat jut.

*[பூனை + குடல். குழல்→குடல்]*

**பூனைக்குத்திக்காடு** *pūṉai-k-kutti-k-kāḍu,* பெ. (n.) தஞ்சை மாவட்டத்திலுள்ள ஊர்; village in Taṉjāvūr dt.

*[பூனை + குத்தி + காடு]*

**பூனைக்கெளித்தி** *pūṉai-k-keḷitti,* பெ. (n.) ஒரு மீன்வகை; a kind of fish.

*[பூனை + கெளித்தி]*

**பூனைக்கெளிறு** *pūṉai-k-keḷiṟu,* பெ. (n.) பதினான்கு விரல(அங்குல)நீளமும் வெண்ணிறமும் கொண்ட கடல் மீன்வகை; a sea-fish, silvery, attaining 14 in.in length.

*[பூனை + கெளிறு]*

**பூனைச்சம்பந்தம்** *pūṉai-c-cambandam,* பெ. (n.) *பூனைத்தொடர்பு* (வின்.) பார்க்க; see *pūṉai-t-toḍarbu.*

*[பூனை + சம்பந்தம்]*

Skt. sam-bandha > **த.** சம்பந்தம்

**பூனைச்செவி** *pūṉai-c-cevi,* பெ. (n.) குறைக்காது; deformed earlike of a cat.

*[பூனை + செவி]*

**பூனைத்திசை** *pūṉai-t-tišai ,* பெ. (n.) தென்கிழக்கு (வின்.); south east.

*[பூனை + திசை. திக்கு → திகை → திசை]*

**பூனைத்தேக்கு** *pūṉai-t-tēkku,* பெ. (n.) தேக்குமரவகை; a tree, betavian teak.

*[பூனை + தேக்கு]*

**பூனைத்தொடர்பு** *pūṉai-t-toḍarbu,* பெ. (n.) பூனை தன் குட்டியோடு கொண்டிருக்கும் தொடர்பு போன்றது (மாத்ச்சார சோர நியாயம்); (log.) illustration of the cat taking care of its kitten without any effort on their part.

*[பூனை + தொடர்பு]*

**பூனைதொழுஞ்சாறு** *pūṉaitoḻuñcāṟu,* பெ. (n.) குப்பை மேனிச்சாறு; juice of rubbish plant.

*[பூனைத்தொழு + சாறு]*

**பூனைப்பகை** *pūṉai-p-pagai,* பெ. (n.) குப்பைமேனி; rubbish plant.

**பூனைப்பகைவன்** *pūṉai-p-pagaivaṉ,* பெ. (n.) எலி; rat.

*[பூனை + பகைவன்]*

**பூனைப்பகைவன்முள்** *pūṉai-p-pagaivaṉmuḷ,* பெ. (n.) எலிமுள்; bone of rat.

*[பூனைப்பகைவன் + முள்]*

**பூனைப்பதித்தான்** *pūṉai-p-padittāṉ,* பெ. (n.) *பூனைக்காலி* பார்க்க; see *pūṉai-k-kāli.*

**பூனைப்பருந்து** *pūṉai-p-parundu,* பெ. (n.) பறவை வகை; pale harrier.

*[பூனை + பருந்து]*

**பூனைப்பிடி** *puṉai-p-piḍi,* பெ. (n.) *பூனைத்தொடர்பு* பார்க்க (இ.வ.); see *pūṉai-t-toḍarbu.*

*[பூனை + பிடி]*

**பூனைப்பிடுக்கவரை** *pūṉai-p-piḍukkavarai,* பெ. (n.) *பூனைக்காலி,1,* பார்க்க; see *pūṉai-k.-kāli-,*1 (A).

*[பூனைப்பிடுக்கு + அவரை]*

**பூனைப்பிடுக்கன்** *pūṉai-p-piḍukkaṉ,* பெ. (n.) 1. *பூனைக்காலி,1* (வின்.) பார்க்க; see *pūṉai-k-kāli-,*1. 2. காட்டுக்கடலி; round leaved Indian linden (L.).

*[பூனைப்பிடுக்கு → பூனைப்பிடுக்கன்]*

**பூனைப்பிடுக்கு** *pūṉai-p-piḍukku,* பெ. (n.) *பூனைக்காலி* 1. பார்க்க; see *pūṉai-k-kāli.-1*

*[பூனை + பிடுக்கு]*

**பூனைப்பிள்ளை** *pūṉai-p.piḷḷai,* பெ. (n.) *பூனை* பார்க்க; see *pūṉai.*

*[பூனை + பிள்ளை]*

பிள்ளையில்லாதவர்கள், சில உயிரினங்களிற் சிலவற்றைப் பிள்ளைபோல் வீட்டில் வைத்து வளர்ப்பது பண்டை வழக்கம். அதனால், *"இருக்கும் பிள்ளை மூன்று, ஓடும் பிள்ளை மூன்று"* என்று ஒரு பழமொழி யெழுந்தது. ஓடும் பிள்ளை மூன்றனுள், அணிற்பிள்ளை கீரிப்பிள்ளை என்பன இரண்டு. மூன்றாம் பிள்ளை பூனைப்பிள்ளையாயிருக்கலாம்.

*"பிள்ளை குழவி கன்றே போத்தெனக்*
*கொள்ளவும் அமையும் ஓரறி வுயிர்க்கே"*
(தொல். மரபு.24)

*"நாயே பன்றி புலிமுயல் நான்கும்*
*ஆயுங் காலைக் குருளை யென்ப"* (ஷை ஷை 8)

*"நரியும் அற்றே நாடினர் கொளினே"* (ஷை ஷை 9)

*"பிள்ளைப் பெயரும் பிழைப்பாண் டில்லை*
*கொள்ளுங் காலை நாயலங் கடையே"* (ஷை ஷை11)

*"கோடுவாழ்குரங்கும் குட்டி கூறுப"* (ஷை ஷை 13)

*"மகவும் பிள்ளையும் பறழும் பார்ப்பும்*
*அவையும் அன்ன அப்பாலான."* (ஷை ஷை 14)

*"பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை"* (ஷை ஷை 4)

என்று தொல்காப்பியங் கூறுவதால், பல்வேறு உயிரினங்களிலும் சிற்சில உயிரிகள் பிள்ளையென்னும் இளமைப் பெயர் பெற்றிருந்தமை அறியப்படும்.

வீட்டுப்பூனைக்குட்டிபாலூட்டி வளர்க்கப்படுவது பெரும்பான்மை. ஆதலால், பூனைப்பிள்ளை யென்பது, பெருவழக்குப் பற்றி, பிள்ளையென்னும் பொதுப் பெயராலேயே குறிக்கப்பட்டிருப்பது இயல்பு. பிள்ளைபோல் வளர்க்கப்படுவது, பெரிதான பின்பும் அப்பெயர் பெறும். அணிற்பிள்ளை கீரிப்பிள்ளை முதலிய பெயர்களை நோக்குக. (குட்டி என்பது ஆட்டுக்குட்டியையும். கன்றுக்குட்டி என்பது மாட்டுக்கன்றையும், சிறப்பாகக் குறித்தலையும் நோக்குக.)

பிள்ளையென்னுஞ்சொல் தெலுங்கிற் பில்லியென்று திரியும். ஒ.நோ: தள்ளை (தாய்)– தல்லி. பில்லி–இந். பில்லீ (billi). பில்லியென்பது இலத்தீனில் felis அல்லது feles என்று வழங்கும். உயர்திணையில் இருபாற்கும் பொதுவான பிள்ளை யென்னும் இளமைப்பெயர், இலத்தீனில் filius என்று மகனையும், filia என்று மகளையும் குறித்து வழங்குதல் காண்க. பிள்ளை என்பது, வடார்க்காட்டு ஆம்பூரில் வட்டத்தில்ஆண்பிள்ளையையும், பாண்டிநாட்டுப் பகுதியிற் பெண்பிள்ளையையும், சிறப்பாகக் குறிப்பது, வழக்கு வேறுபாடு பற்றியதே. (தலை.த.180)

**பூனைப்பீசன்** *pūṉai-p-pīšaṉ,* பெ. (n.) *பூனையண்டம்* பார்க்க; see *pūṉai-y-aṇḍam.*

*[பூனை + பீசன்.]*

**பூனைப்புடல்** *pūṉai-p-puḍal,* பெ. (n.) பாகல்; balsam-pear, climber.

*[பூனை + புடல். புழு → புழல் → புடல்]*

**பூனைப்புரண்டி** *pūṉai-p-puraṇḍi,* பெ. (n.) பூனையின் உறுமலொலி; cat's purr.

*[பூனை + புரண்டி]*

**பூனைப்புல்** *pūṉai-p-pul,* பெ. (n.) ஒருவகைப் புல்; a kind of grass.

*[பூனை + புல்]*

**பூனைப்புலி** *pūṉai-p-puli,* பெ. (n.) சுக்கு நாறி; a tree.

**பூனைப்பூண்டு** *pūṉai-p-pūṇḍu,* பெ. (n.) ஒரு நச்சுப் பூண்டு; a poisonous drug.

**பூனைமடி** *pūṉai-maḍi,* பெ. (n.) *பூனைக்காலி,*1 (வின்.) பார்க்க; see *pūṉai-k-kāli*1-.

*[பூனை + மடி]*

**பூனைமயிர்** *pūṉai-mayir,* பெ. (n.) 1. பூனையின் (உரோமம்) மயிர் போன்று உள்ள மயிர் (கொ.வ); light coloured hair, like that of a cat. 2. *பூனைக் கழற்சி* பார்க்க; see *pūṉai-k-kaḻarci.*

*[பூனை + மயிர்.]*

**பூனைமூலி** *pūṉai-mūli,* பெ. (n.) குப்பை மேனி (மூ.அ.); Indial acalypha.

*[பூனை + மூலி]*

**பூனையடிச்சிலந்தி** *pūṉai-y-aḍi-c-cilandi,* பெ. (n.) ஒருவகைப் புற்றுநோய்; a kind of cancer.

**பூனையண்டம்** *pūṉai-y-aṇḍam,* பெ. (n.) 1. பூனைவிதை; scrotum of cat. 2. ஒருகொடி; a creeper.

*[பூனை + அண்டம்]*

Skt. aṇḍa > த. அண்டம்

**பூனையவரை** *pūṉai-y-avarai,* பெ. (n.) *பூனைக்காலி, 1* (இ.வ.) பார்க்க; see *pūṉai-k-kāli.*1

*[பூனை + அவரை]*

**பூனையாதாரம்** *pūṉai-y-ādāram,* பெ. (n.) *பூனைப்புல்* பார்க்க; see *pūṉai-p-pul.*

*[பூனை + ஆதாரம்]*

Skt. ā-dhāra > **த.** ஆதாரம்

**பூனைவணங்கி** *pūṉai-vaṇaṅgi,* பெ. (n.)
1. குப்பைமேனி (நாமதீப.321); Indian acalypha
2. நாயுருவி (சங்.அக.); a plant.

*[பூனை + வணங்கி]*

**பூனைவாற்புல்** *pūṉaivāṟ-pul,* பெ. (n.) ஒருவகைப் புல்; cat's tail grass, Timothy grass.

*[பூனைவால் + புல்]*

**பூனைவித்து** *pūṉai-vittu,* பெ. (n.) *பூனைக்காலிவித்து* பார்க்க; seed of the climber-mucana pruricus.

*[பூனை + வித்து]*

**பூனைவிரந்தி** *pūṉaivirandi,* பெ. (n.) ஒருவகைக் கொடி; a climbing creeper.

**பூனைவிருடணம்** *pūṉaiviruḍaṇam,* பெ. (n.) கொடிவகை; hoary-branched obvate-leaved climbing caper.